கணபதி துணை.

எட்டுத்தொகையுள் எட்டாவதாகிய

# புறநானூறு மூலமும் உரையும்.



இவை

உத்தமதானபுரம்

மஹாமஹோபாத்தியாய

**வே. சாமிநாதையரால்**

பலபிரதிருபங்களைக்கொண்டு பரிசோதித்து

நூதனமாக எழுதிய பலவகை ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன்

சென்னை

கமர்ஷியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றன.

இரண்டாம் பதிப்பு.

துந்துபிஹு பங்குனிமீ

1923.

 [விலை ரூ.
5—10—0.



உ

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

பக்கம்.


| | | |
|---|---|---|
| க. | இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி | V |
| உ. | இரண்டாம் பதிப்பின் முகவுரை | VII |
| ௩. | முதற்பதிப்பின் முகவுரை | 1 - 13 |
| ச. | பாடினோர் வரலாறு | 14 - 56 |
| ரு. | பாடப்பட்டோர் வரலாறு | 57 - 77 |
| சா. | விசேடக் குறிப்பு | 78 - 87 |
| எ. | சிறந்த பாடல்களும், பாடற்பகுதிகளும் | 88 |

| | | |
|---|---|---|
| ௮. | புறநானூறு மூலமும் உரையும் | ௧ - ௫௩௭ |
| ௯. | பாட்டு முதற்குறிப்பகராதி | ௫௩௮ - ௫௪௩ |
| ௧௦. | திணைகளும் துறைகளும் | ௫௪௪ |
| ௧௧. | அரும்பதமுதலியவற்றின் அகராதி | ௫௪௫ - ௬௧௮ |
| ௧௨. | பிழையும் திருத்தமும் | ௬௧௯ - ௬௨௦ |






உ

## இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய * நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி.

அகநா - அகநானூறு.
அடியார் - அடியார்க்குநல்லார் ; அடியார்க்கு நல்லாருரை.
அணி - அணியிலக்கணம்.
அம்பிகாபதி - அம்பிகாபதி கோவை.
அரும்பத - அரும்பதவுரை ; அரும்பதவுரையாசிரியர்.
அறநெறி - அறநெறிச்சாரம்.
ஆசார - ஆசாரக்கோவை.
ஆனைக்கா - திருவானைக்காப்புராணம்.
இ. வி - இலக்கணவிளக்கம்.
இலிங்க - இலிங்கபுராணம்.
இளம் - இளம்பூரணம் ; இளம்பூரணர்.
இறை - இறையனாரகப்பொருள்.
இன்னா - இன்னாநாற்பது.
இனியது - இனியதுநாற்பது.
ஐங்குறு - ஐங்குறுநூறு.
ஐந். எழு - ஐந்திணை யெழுபது.
கடவுள் - கடவுள்வாழ்த்து.
கந்த - கந்தபுராணம்.
கம்ப - கம்பராமாயணம்.
கல்-கல்லாடம் ; கல்லாடர் ; கல்லாடருரை.
கல்லா - கல்லாடம்.
க. துறை - கலித்துறை.
கலி - கலித்தொகை.
கலிங்க - கலிங்கத்துப்பரணி.
களவழி - களவழிநாற்பது.
காஞ்சிப் - காஞ்சிப்புராணம்.
கார் - கார்நாற்பது.
குண்டல - குண்டலகேசி.
குறள் - திருக்குறள்.
குறிஞ்சி - குறிஞ்சிப்பாட்டு.
குறுந் - குறுந்தொகை.
கூர்ம - கூர்மபுராணம்.
கூவப் - திருக்கூவப்புராணம்.
சிதம்பரமும்மணி - சிதம்பரமும்மணிக்கோவை.
சிலப் - சிலப்பதிகாரம்.
சிறுபஞ்ச - சிறுபஞ்சமூலம்.
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை.
சீகாளத்தி, சீகாளத்திப் - சீகாளத்திப்புராணம்.
சீவக - சீவகசிந்தாமணி.
சுந்தர - சுந்தரமூர்த்தி நாயனார்.
சூ - சூத்திரம்.
சூடா, சூடாமணி - சூடாமணிநிகண்டு.
சூளா - சூளாமணி.
சே, சேனா - சேனாவரையம் ; சேனாவரையர்.
தக்க - தக்கயாகப்பரணி.
தகடூர் - தகடூர் யாத்திரை.
தண்டி - தண்டியலங்காரம்.
தணிகை - திருத்தணிகைப் புராணம்.
தணிகையாறு- திருத்தணிகையாற்றுப்படை.
தஞ்சை - தஞ்சைவாணன் கோவை.
திணைமாலை-திணைமாலை நூற்றைம்பது.
தியாக - தியாகராசலீலை.
திரி - திரிகடுகம்.
திருச்சிற் - திருச்சிற்றம்பலக் கோவையார்.
திருநா - திருநாவுக்கரசுநாயனார்.
திருவள் - திருவள்ளுவமாலை.
திருவா - திருவாசகம்.

* நூலுறுப்புக்களின் முதற்குறிப்புக்கள் விரிவஞ்சி விடுக்கப்பட்டன.



# நூல்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி

திருவால - திருவாலவாயுடையார்திருவிளையாடற்புராணம்.
திருவானைக்கா - திருவானைக்காப்புராணம்.
திருவிளை - திருவிளையாடல்.
திவ் - திவ்யப்பிரபந்தம்.
தே - தேவாரம்.
தொல் - தொல்காப்பியம். [ருரை.
ந-நச்சினார்க்கினியர்; நச்சினார்க்கினிய
நம்பி-நாற்கவிராசநம்பியகப் பொருள்.
நள - நளவெண்பா.
நற் - நற்றிணை.
நன் - நன்னூல்.
நாலடி - நாலடியார்.
நான்மணி - நான்மணிக்கடிகை.
நீதிநெறி - நீதிநெறி விளக்கம்.
நெடுநல - நெடுநலவாடை.
நைடத - நைடதம்.
ப, பக் - பக்கம்.
பட்டின, பட்டினப் - பட்டினப்பாலை.
பதிற் - பதிற்றுப்பத்து.
பரி - பரிபாடல்.
பரிமேல் - பரிமேலழகர்; பரிமேலழக

பிரயோக - பிரயோக விவேகம்;
யோக விவேகநூலுடையார்.
புறநா, புறம் - புறநானூறு.
பு. வெ-புறப்பொருள் வெண்பா
பெரிய - பெரியபுராணம்.
பெருங் - பெருங்கதை. [ட
பெரும்பாண் - பெரும்பாண
பேர்-பேராசிரியர்; பேராசிரியரு
பொருந - பொருநராற்றுப்படை
மணி - மணிமேகலை.
மதுரை - மதுரைக்காஞ்சி.
மயிலை - மயிலைநாதருரை.
மலைபடு - மலைபடுகடாம்.
மாறன் - மாறனலங்காரம்.
மு - முற்றும்.
முத் - முத்தொள்ளாயிரம்.
முதுமொழிக் - முதுமொழிக்கா
முருகு - திருமுருகாற்றுப்படை
முல்லை - முல்லைப்பாட்டு.
மேருமந்தா - மேருமந்தரபுராண
மேற் - மேற்கோள்.
யா. கா - யாப்பருங்கலக்காரிகை
யா. வி - யாப்பருங்கல விருத்தி

[illegible]
ருரை.
பழ - பழமொழி.
பாக, பாகவத - பாவகதபுராணம்.
பிங்கலம் - பிங்கலநிகண்டு.
பி - ம் - பிரதிபேதம்.

[illegible]
வாயுசங் - வாயுசங்கிதை.
வி - விசேடவுரை; விருத்தியுரை
விநாயக - விநாயகபுராணம்.
வில்லி - வில்லிபுத்தூராழ்வார்.
வீர - வீரசோழியம்.

---



# இரண்டாம் பதிப்பின் முகவுரை.

திருச்சிற்றம்பலம்.

## தேவாரம்.

"ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே
யடக்குவித்தா லாரொருவ ரடங்கா தாரே
ஓட்டுவித்தா லாரொருவ ரோடா தாரே
யுருகுவித்தா லாரொருவ ருருகா தாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடா தாரே
பணிவித்தா லாரொருவர் பணியா தாரே
காட்டுவித்தா லாரொருவர் காணா தாரே

காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே."

இந்நூலின் இயல்பும், உரையின் இயல்பும் பின்னேயுள்ள

ரகவுரையால் ஒருவாறு விளங்கும். இதன்மூலமும் உரைமுதலிய 7வும் முதன்முறை பதிப்பிக்கப்பெற்று ஏறக்குறைய இப்போது -0 • வருஷங்களாகின்றன,

அதன்பின் எனக்குக்கிடைத்த

ரகயெழுத்துப்பிரதிகள் வருமாறு :

௧) கோயிற்பட்டிக்குப் பக்கத்துள்ள மந்தித்தோப்பு ஸ்ரீ சங்கரபா

ரதி சுவாமிகளின் ஆதீனகர்த்தர் மஹந்து ஸ்ரீமத் சங்கரசுப்

பிரமணிய தத்த சுவாமிகள் பிரதி-க

௨) திருநெல்வேலி ம-ா-ா-ஸ்ரீ கவிராஜ ஈசுவரமூர்த்திப்பிள்ளை

யவர்கள் பிரதி-க

௩) அரியூர் ஸ்ரீ எஸ். சாமிநாதைய ரவர்கள் பிரதி-க

௪) மதுரைத்தமிழ்ச்சங்கத்துப் பிரதி-க

(ரு) யாழ்ப்பாணத்து வண்ணைநகர் ம-ா-ா-ஸ்ரீ சுவாமிநாத பண்டித

ரவர்கள் பிரதி-க.

இவையெல்லாம் பழைய பிரதிகளே. இவற்றுள் முதன்மூன்று பிரதிகள் மூலமட்டுமுள்ளவை ; மற்றவை

உரையுமுள்ளவை. viii இரண்டாம் பதிப்பின்

முகவுரை.

இவற்றுள் ஒருபிரதியின் தொடக்கத்தில் 'அறநிலை' என்று வரையப் பெற்றிருந்தது. அப்படியே பொருள்நிலை, இன்பநிலை என்ற பகுதி கள் எந்த எந்தப்பாடலிலிருந்து தொடங்குமோவென்று தேடிப்பார்த் ததில் ஒரு பிரதியிலும் கிடைக்கவில்லை. ஆனாலும் இந்நூல் அறநிலை, பொருள்நிலை, இன்பநிலை என்னும் மூன்று பகுதிகளாகப் பகுக்கப் பெற்றிருக்க வேண்டுமென்பது இதனால் ஊகித்தறியப்படுகின்றது.

இந்தப்பிரதிகளாலும் அப்பால் செய்து வந்த பழைய இலக்கண

இலக்கிய ஆராய்ச்சிகளாலும் பழைய உரைகளிற் கண்ட மேற்கோட்

காட்சிகளாலும் புறத்திரட்டென்னுந் தொகைநூலாலும் இந்நூல்

மூலமும் உரைமுதலியனவும் அடைந்ததிருத்தங்கள் பல. ஆனாலும்,

உகூஎ, உகூஅ-ஆம் பாடல்களும், உசுகூ-ஆம் பாடல்முதலியவற்றிற்

குரிய உரையும் ஒருபிரதியிலுங் கிடைக்கவில்லை. உசுகூ-ஆம் பாட

லுக்கு மேற்பட்டவற்றுள், சில பாடல்களின் முதற்பாகங்களும் சில வற்றின் இறுதிகளும் இடையிடையே விடப்பட்டிருந்த தொடர் மொழிகள் பலவும், சொற்கள் பலவும் இப்போது தெரியவந்தன.

வேறு வேறிடங்களிற் கலந்திருந்த அடிகள் உரியவிடங்களிற்சேர்க்கப்

பெற்றும் குழறுபடையாக விருந்த பகுதிகளுட் சில செப்பஞ்செய்யப்

பெற்றும் முக்கியமான இடங்களில் அவை விளக்கப்பெற்றுமுள்

ளன. இப்படியே பாடினோர் பாடப்பட்டோர் பெயர்களுட்சிலவும்

திணை துறை முதலியவற்றின் பெயர்களுட்சிலவும் திருத்தமுற்றன.

இதன் மூலங்களோடு சொல்லாலும் பொருளாலும் ஒத்திருக்கும்

இந்நூற் பகுதிகளும் பிறநூற்பகுதிகளும், இந்நூற்செய்யுட்களின்

முழுப்பாக மேனும் ஒவ்வொரு பகுதியேனும் மேற்கோளாக வந் துள்ள இடங்களும், பழைய உரையால் விளங்காதவற்றிற்குக்

குறிப் புரையும், உரையில்லாதபாடல்களெல்லாம் பதவுரையெழுதுவதற் குரிய திருத்தமுறுமலிருந்தமையின் அவற்றின் அடிகளுட்சிலவற் றிற்கு மட்டும் அறிந்த அளவு குறிப்புரையும், மூலத்திலும் உரை யிலும் கண்ட பிரதிபேதங்களும் ஆராய்ச்சிசெய்வோர்களுக்கு மிக உபயோகமாக இருக்குமென்றெண்ணி மூலமுள்ள பக்கங்களில் அங் கங்கே அடிக்குறிப்பாகச் சேர்க்கப்பெற்றுள்ளன.

முதற்பதிப்பில் முன்னும்பின்னும் தனித்தனியே பதிப்பிக்கப் பெற்றிருந்த பலவகை அகராதிகளும், ராவ்பகதூர். வி. வெங்கைய ரவர்கள் முதலியோர் எழுதியனுப்பிய விசேடக்குறிப்புக்களும் ஒன்று பட்டு 'அரும்பதமுதலியவற்றின் அகராதி' என்னும் பெயருடன் இப்

## இரண்டாம் பதிப்பின் முகவுரை.



பதிப்பில்வெளிவந்துள்ளன ; அல்லாமல், சில அரும்பதங்கள், தொடர்மொழிகள், புலவர்பெயர்கள், தலைவர்பெயர்கள், அரியவிஷயங்கள்

முதலியனவும் நூதனமாக இவ்வகராதியிற் சேர்க்கப்பெற்றுள்ளன.

மூலத்திலும் உரையிலுங்கண்ட அளவைப்பெயர்கள் முதலியவற்

றுள் தெரிந்தவற்றைத் தொகுத்து வகைப்படுத்திய பகுதியொன்று விசேடக்குறிப்பு' என்ற பெயருடன் இதிற்காட்டப்பட்டுள்ளது.

இதிற்கொடுத்துள்ள பிரதிபேதங்களுள்ளே சிலசிலவற்றிற்கு மட்டும் பொருள்புலப்படும்; பலவற்றிற்குப்புலப்படா. அவைபிழைக ளாகவே இருத்தலும்கூடும் ; ஆனாலும், வேறுபிரதிகள் கிடைப்பின் அவற்றோடு ஒப்புநோக்கி உண்மையான உருவங்களை அறிந்துகொள்ளு வதற்கு அனுகூலமாக இருக்குமென்றெண்ணியே பிரதிகளிற்காணப் பட்டபலவகையான பிரதிபேதங்களும் உள்ளபடியே அங்கங்கே காட் டப்பட்டிருக்கின்றன. ஒற்றுப்புள்ளி முதலியவற்றை நீக்கி அவற் றைப் படித்தல் நலம்.

தாம்பாடிய செய்யுட்களிலுள்ள தொடர்மொழிச்சிறப்பாற் சில புலவர்களுக்குப் பெயர்வந்திருத்தல் கூடுமென்று தோற்றினும் இந் நூலிலாவது வேறுநூலிலாவது அப்பாடல்கள் அகப்படாமையின், துணிந்துகாரணம் எழுதக்கூடவில்லை.

சில சுவடிகளில் ஈகார ஐகார வுயிர்ற்றின்பின் யகரம் வரையப் பெற்றிருந்தமையின், அம்மொழிகள் அவ்வாறே உரிய இடங்களிற் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

இந்நூற்பகுதிகள் சில **சிவஞானபாடியத்தில்** மேற்கோள்களாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன ; அவை வருமாறு :

(க) " கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை " —கூ-ஆம் சூ. உ-ஆம் அதி.

(உஉ) "தூங்கு கையா னோங்கு நடைய"ரு-ஆம் சூ.க-ஆம் அதி.

(கஉச) "நாளன்று போகி" உ-ஆம் சூ. ச-ஆம் அதி.

(ருகூரு) "நீர்க்கோழி கூப்பெயர்க் குந்து" அ-ஆம் சூ. க - ஆம் அதி.

இந்நூல் சக, எஅ, கருக-ஆம் பாடல்களின் உரைகளில் மேற்கோளாக வந்துள்ள "ஏவ விளையர் தாய் வயிறு கரிப்ப" என்பதுவேறு பல உரைகளில் " புலைய னெறிந்த பூசற் றண்ணுமை" என்பதனோடு

B

X

## இரண்டாம் பதிப்பின் முகவுரை.

சேர்ந்துவழங்கக்காணப்படும், இன்னநூலில் இன்னபாடலிலுள்ள தென்று இதுகாறும் புலப்படாமலிருந்தது. ஆனாலும், சமீபத்திற் கிடைத்த ஒரு பழஞ்சுவடியில் சிறிது பாட பேதமுற்ற இவ்வடியை யுடைய பாடலொன்று பின்னுள்ளவாறு காணப்பட்டது:

"நிரையிர் செல்லு மோவென சேர்ந்து
புலைய னெறிந்த பூசற் றண்ணுமை
ஏவ லிளையர் தாய்வயி று கரிக்கு
மின்னு வருஞ்சுர மென்ப
வென்னோ தோழியவர் சென்ற வாறே"

இஃதெந்த நூலின் கண்ணதோ தெரியவில்லை.

ஏறக்குறைய ௪௨ வருஷங்களுக்கு முன்பு சீவகசிந்தாமணியை யான் ஆராய்ந்து வருகையில் திருவாவடுதுறையாதீனகர்த்தர்களாக வீற்றிருந்தவர்களும் என்னுடைய தமிழாசிரியருமான ஸ்ரீ. சுப்பிரமணியதேசிகரவர்கள் ஆதீனபுத்தகசாலையிலிருந்து அளித்த ஏட்டுப்பிரதிகளுள் மிகப்பழையனவும் பெயரெழுதப்படாதனவுமான

மூன்று சுவடிகள் இருந்தன; அவற்றில் முதலுமில்லை; இறுதியுமில்லை; பக்கங்கள் மிகச்சிதைந்தும் தேய்ந்துபோயுமிருந்தன. அந்தக்காலம் பத்துப்பாட்டு இன்னவை எட்டுத்தொகை இன்னவை என்று தெரியாதகாலம். சிலவருடங்களுக்குப்பின்பு **சீவகசிந்தாமணி** யைப் பதிப்பித்துவருகையில் விளங்காத மேற்கோள்களுக்குரிய இட த்தைத் தேடிவரும்பொழுது அந்தச் சுவடிகளுள் ஒன்றை ஒருநாள் பிரித்துப்பார்த்தேன். அப்போது, "கொற்றுறைக் குற்றில" என்

னுந் தொடர்மொழி காணப்பட்டது. சீவகசிந்தாமணி, கனகமாலையாரிலம்பகம் ௩௰௬-ஆம் செய்யுளின் உரையில் இத்தொடர்மொழியை **நச்சினார்க்கினியர்** மேற்கோளாகக் கொடுத்திருத்தலால், இஃது ஏதோ ஒருபழையநூலாக இருக்கவேண்டுமென்றுமட்டும் தெரிய வந்தது. பிறகு படித்துப்பார்க்கையிற் பாட்டுமுரையுங் காணப் பட்டன. அப்பால் அந்தப் பாடலின்எண்ணைக் கவனிக்கையில் கூரு என்று தெரிந்தது. **நற்றிணை** முதலியவற்றின் மூலமட்டும் அடங்கிய கையெழுத்துப் பிரதி வேறு இருந்தமையால் அவற்றுள் ஒவ்வொன் றையும் சோதித்துக்கொண்டு வரும்போது இது **புறநானூற்று உரை** யென்று தெரிந்தது. அப்போது உண்டானமகிழ்ச்சிக்கு எல்லையில்லை. மற்ற இரண்டு அபூர்த்தியான சுவடிகளுள் ஒன்று **பரிபாடலுரை** மற் றொன்று **பத்துப்பாட்டுரை** என்று பின்பு தெரியவந்தது. இந்த

# இரண்டாம் பதிப்பின் முகவுரை.



மூன்று நூல்களும் பதிப்பிக்கப்பெற்று நிறைவேறி வெளியானமை யால், ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்களுடைய ஹஸ்தவிசேஷமும் பேரன்புடைமையும் அடிக்கடி ஞாபகத்துக்கு வருகின்றன.

இந்நூல் முதற்பதிப்பு வெளியானகாலத்தின் நிலைமைக்கும் இப் போதைய நிலைமைக்கும் எத்தனையோமாறுபாடுகள் ஏற்பட்டிருக்கின் றன. அக்காலத்தில் எனக்கு ஊக்கமளித்துக்கொண்டு வந்த அன்பர்க ளும் அபிமானிகளும் பலர் ; அதனை நினைக்கும் போது,

"என்றினி மதுரை காண்பே மெப்பகல் சவுந்தரேசன்
றன் திருவடிகள் காண்பேந் தாயையெஞ் ஞான்று காண்பேம்
வென்றிவேற் றருமவேந்தர் வேந்தனை யெக்காட் காண்பே
மொன்றுயிர்த் துணையாஞ் சங்கத் துறவையெப்பொழுது காண்பேம்"

"இனித்தமி ழினிமையாவர்க் கெடுத்திசைத் திடுவேம்"

(சீகாளத்தி. நக்கீர. எஅ ; அo)

என்பவையும்,

"பனியார் சிலசொற் பகர்ந்தே மகிழ்விப்போய்
கனியா ரினிமை கலந்தே சுவைகள்

கனியார் தமிழி னயந்தெரிய வல்லா
ரினியா ருனைப்போ லினியா ரினியாரே''

என்பதும் அடிக்கடி ஞாபகத்துக்கு வருகின்றன.

இந்தக்காலத்தில் நூற்பரிசோதனை விஷயத்தில் எனக்குச் சிறிதும் பொருட்கவலை உண்டாகாதபடி பல வருடகளாக உபகரித்து வரும் ஸ்ரீ ஸேதுஸமஸ்தானத் தலைவர்களும், மதுரைத்தமிழ்ச் சங்கத்து அக்கிராசனாதிபதிகளும், சென்னைச்சட்டநிருபணசபை யங்கத்தினர்களுமாகிய இரணியகர்ப்பயாஜி ரவிகுலதிலக **முத்துவிஜயரகுநாதராஜராஜேசுவர ஸேதுபதி மஹாராஜா** அவர்களுடையபேருதவி தமிழுகத்தால் மிகப்பாராட்டற்பாலது.

இப்பதிப்புவிஷயத்தில் ஒப்புநோக்குதல், பரிசோதித்தல் முதலிய அரியஉதவிகளைச் செய்துவந்த சென்னை இராசதானிக்கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர், பிரஹ்மஸ்ரீ இ. வை. **அநந்தராமையரவர்களுக்**கும், மயிலாப்பூர்.பி. எஸ். ஹைஸ்கூல் முதல் தமிழ்ப்பண்டிதர்,
சிரஞ்

சிவி ம. வே. **துரைசாமி ஐயருக்கும்,** இராமகிருஷ்ண மிஷன் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர், சிரஞ்சீவி **கோ. சேஷாத்திரிஐயருக்கும்** எனது நன்றியைச் செலுத்துகிறேன்.

இப்பதிப்பிற் காணப்படும் பிழைகள் என்னுடைய மறதிமுதலியவற்றால் நேர்ந்தனவென்றெண்ணி விவேகிகள் பொறுத்துக் கொள்ளவேண்டுமென்பது எனது வேண்டுகோள்.

சொல்லினிமை பொருளினிமைகளில் மிகச்சிறந்ததும் **அடியார்க்குநல்லார்** முதலிய உரையாசிரியர்களால் நன்கு பாராட்டப்பெற்றதும் மிக்க வியப்பைத்தருவதும் **உதயண**னென்னும் தலைவனுடைய சரித்திரத்தை விரித்துக் கூறுவதுமான **பெருங்கதை**யென்னு நூலிற் கிடைத்தவரையில் மூலமும் நூதனமாக எழுதப்பெற்ற குறிப்புரையும் பதிப்பிக்கப்பெற்று ச௦ வருடங்களுக்கு மேலாகியும் சில இடையீடுகளால் அப்பதிப்புக்கு அங்கமான சிலபகுதிகளை எழுதுவதற்கு இதுவரை இயலவில்லை. இனி, எல்லாம்வல்ல இறைவனுடைய திருவருளை முன்னிட்டு அந்தப் பகுதிகளையெழுதி நிறைவேற்றி அந்நூலை வெளிப்படுத்த எண்ணியிருக்கிறேன்.



திருச்சிற்றம்பலம்.

## திருவாசகம்.

"கூறு நாவே முதலாகக் கூறுங் கரண மெல்லாநீ
தேறும் வகைநீ திகைப்புநீ தீமை நன்மை முழுதுநீ
வேறோர் பரிசிங் கொன்றில்லை மெய்ம்மை யுன்னை விரித்துரைக்கிற்
றேறும் வகையென் சிவலோகா திகைத்தாற் றேற்றவேண்டாவோ."

"தியாகராஜ விலாஸம்"
திருவேட்டீசுவரம்பேட்டை.
28—3—1923.

இங்ஙனம்,
வே. சாமிநாதையன்.

உ
கணபதி துணை.

# முதற்பதிப்பின் முகவுரை.

புறநானூறென்பது, அமிழ்திற் சிறந்த தமிழ்மொழியதனை

ஒன் பான் சுவைபுணர்த் தன்பால் வளர்த்தருள் நச்சும் பெருமை

* மூச் சங்கத்துள் கடைச்சங்கப் புலவர்கள் அருளிச்செய்த எட்டுத் தொகையுள் ஒன்று; † எட்டுத்தொகையாவன நற்றிணை, குறுந் தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன. இதனை அடியில்வரும் வெண் பாவாலுணர்க :—

" நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தார் சொல்லுங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை."

இவற்றுள் ஒவ்வொன்றும் பலராற்செய்யப்பட்டுத் தொழில் அளவு பாட்டு பொருளென்பனவற்றுள் ஒவ்வொன்றால் தொகுக்கப் பட்டமையின், இவை தொகையென்று பெயர்பெற்றனவென்பர்.

இவற்றுள்,

க. **நற்றிணை:**—இது, கடவுள்வாழ்த்துச்செய்யுள்முதலிய ௪௦௧ அகவற்பாக்களையுடையது; இப்பாக்களுள், முதற்செய்யுளாகிய கடவுள்வாழ்த்துப் **பாரதம்பாடிய பெருந்தேவனாராலும்**, மற்றை நானூறுபாக்களும் **கபிலர்முதல் ஆலங்குடிவங்கனாரிறுதியாகவுள்ள** புலவர் பலராலும் இயற்றப்பட்டன; பொருளின்பகுதியாகிய அகம் புறமென்னுமிரண்டனுள் அகத்தின்பகுதிகளையே பொருளாகவுடையது. மேற்கூறிய அகவற்பாக்கள், ஒன்பதடிச்சிறுமையும் பன்னிரண் டடிப்பெருமையுமுள்ளவைகள். இத்தொகை தொகுப்பித்தோன், **பன்னாடுதந்த பாண்டியன்மாறன்வழுதி**. இதற்கு உரை கிடைத்திலது.

உ. **குறுந்தொகை:**—இது கடவுள்வாழ்த்துச்செய்யுள்முதலிய ௪௦௨ அகவற்பாக்களையுடையது. இவற்றுள், முதற்பாவாகிய கடவுள்வாழ்த்துப் **பாரதம்பாடிய பெருந்தேவனாராலும்** மற்றை ௪௦௧

* முச்சங்கத்தின் வரலாறுகளை இறையனாரகப்பொருளுரையிலும் சிலப்பதிகாரவுரையிலும் காண்க.

† இவை எட்டும் அச்சிடப்பெற்றுள்ளன.

2

## முதற்பதிப்பின் முகவுரை.

பாக்கள் **திப்புத்தோளார்முதல் அம்மூவனாரிறுதியாகவுள்ள** புலவர் இருநூற்றைவராலும் இயற்றப்பட்டுள்ளன; அகத்தின்பகுதிகளையே பொருளாகவுடையது. மேற்கூறிய அகவற்பாக்கள் நாலடிச் சிற்றெல்லையும் எட்டடிப் பேரெல்லையும் உள்ளவைகள். இத்தொகை முடித்தான் **பூரிக்கோ.**

இஃது அளவால் தொகுக்கப்பட்டதென்பர். இத்தொகையின் பாக்களுள் இருபதுபாக்களொழிந்த மற்றைப் பாக்களுக்குப் **பேராசிரியர்** பொருளெழுதினரென்றும் அவரெழுதா தொழிந்த இருபதுபாக்களுக்கும் **நச்சினார்க்கினியர்** பொருளெழுதின ரென்றும் பின்னுள்ள பாடல்கள் உணர்த்துகின்றன :

> " பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியு
> மாரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்குஞ் - சாரத்
> திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
> விருத்திநச்சி னார்க்கினிய மே"

> " நல்லறி வுடைய தொல்பே ராசான்
> கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
> பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
> கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
> விதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்தும்."

(இவை **நச்சினார்க்கினியருரைச் சிறப்புப்பாயிரம்.**)

"**பேராசிரியரும்** 'யானே யீண்டை யோனே' என்னுங் **குறுந் தொகைச்** செய்யுளில் மீனெறிதூண்டிலென்பதனை ஏனையுவமமென் றார்" என்று **தொல்காப்பியம்**, அகத்திணையியல் சசுரு - ஆம் சூத்திர வுரையில் **நச்சினார்க்கினியர்** எழுதியிருத்தலாலும் இத்தொகைக்குப் **பேராசியர்** பொருளெழுதினரென்பது ஊகித்தறியப்படுகின்றது. அவ்வுரை கிடைத்திலது.

ரு. **ஐங்குறுநூறு:**—இஃது அகத்தின் பகுதியாகிய

மருதமுத லிய ஐந்திணைகளையும் நூறுநூறு அகவற்பாக்களால் விளக்குவது; சொற்சுவை பொருட்சுவைகளிற் சிறந்தது; பொருள்களின் இயற்

கையழகையும் தமிழ்ப்பாஷையின் இனிமையையும் நன்கு தெரிவிப்பது. சிவபெருமானுடைய துதியாகிய கடவுள்வாழ்த்துச் செய்யுள்முதலிய ருoக - அகவற்பாக்களையுடையது;

இப்பாக்களுள் கடவுள்வாழ்த்துப் பாரதம்பாடிய பெருந்தேவனாராலும், மருதத்

திணையைக்குறித்த முதல்நூறு ஓரம்போகியாராலும், நெய்தற்றிணையைக்குறித்த இரண்டாநூறு அம்மூவனாராலும், குறிஞ்சித்திணையைக்குறித்த மூன்றாநூறு கபிலராலும், பாலைத்திணையைக்குறித்த



நான்காநூறு ஓதலாந்தையாராலும், முல்லைத்திணையைக்குறித்த ஐந்தாநூறு பேயனாராலும் இயற்றப்பட்டுள்ளன. இதனை அடியில் வரும் வெண்பாவாலுணர்க :—

“மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்
கருதுங் குறிஞ்சி கபிலன் - கருதிய
பாலையோ தலாந்தை பனிமுல்லை பேயனே

நூலேயோ தைக்குறு நூறு."

இதிலுள்ள பாக்கள் ௩ - அடிச் சிற்றெல்லையையும் ௬ - அடிப் பேரெல்லையையும் உடையவை. இத்தொகை தொகுத்தார் **புலத்**
**துறைமுற்றிய** கூடலூர்கிழார் ; தொகுப்பித்தான்
**யானைக்கட்சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறை.**

ச. **பதிற்றுப்பத்து**:—முடியுடை வேந்தர்களாகிய சேரர் பதின் மர்கள்மீது சங்கப்புலவர் பதின்மர்கள் இயற்றியது. இத்தொகை யால் முற்காலத்திருந்த சேரர்பலருடைய வள்ளன்மையும் வீரமும் தமிழ்நாட்டின் பண்டைக்கால நிலைமையும் பின்னுமுள்ள வரலாறு கள் பலவும் நன்குபுலப்படும். இஃது, ஒவ்வொருபுலவர் பப்பத்தா கச்செய்த நூறுபாட்டுக்களையுடையது. இதனாலேயே இத்தொகை பத்துப்பகுதியாகப் பகுக்கப்பட்டுப் பதிற்றுப்பத்தென்னும் பெயர் பெற்றது. கடவுள்வாழ்த்தும் முதற்பத்தும் பத்தாம்பத்தும் அவற் றின் உரையும் இப்பொழுது பலவிடத்துப் பிரதிகளிலுங் காணப்பட

வில்லை. முதற்பத்தையோ பத்தாம்பத்தையோ சார்ந்த இந்நூற் பாடல் கள் சில **தொல்காப்பிய** உரைகளாலும் **புறத்திரட்டா**லும் தெரிய வந்தன. எஞ்சியவற்றுள்,

இரண்டாம்பத்து, **இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்**
**டூர்க்** கண்ணனார்பாடி உம்பற்காட்டு ஐஞ்ஞூறூர் பிரமதாயம்பெற்று

முப்பத்தெட்டியாண்டு தென்னாட்டுள்வருவதனிற் பாகமும்பெற்றது;

மூன்றாம்பத்து, இமயவரம்பன்றம்பி பல்யானைச்செல்கெழு குட்டுவனைப் பாலைக்கௌதமனார்பாடிச் சுவர்க்கம்பெற்றது;

நாலாம்பத்து, களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைக் காப்பி யாற்றுக் காப்பியனார்பாடி நாற்பதுநூறாயிரம்பொன் பரிசிலும் அவன் ஆள்வதிற் பாகமும் பெற்றது;

ஐந்தாம்பத்து, கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவனைப் பரணர் பாடி உம்பற்காட்டு வாரியையும் அவன்மகன் குட்டுவன்சேரலையும் பரிசில்பெற்றது;



ஆறாம்பத்து, ஆடுகோட்பாட்டுச்சேரலாதனைக் காக்கைபாடினி யார் நச்செள்ளையார்பாடி ஒன்பதுகாப்பொன்னும் நூறாயிரங்காண மும்பெற்று அவன்பக்கத்து இருத்தல்கொண்டது;

ஏழாம்பத்து, செல்வக்கடுங்கோவாழியாதனைக் கபிலர்பாடி நூறுயிரங்காணமும் அவன் ஒரு பெரியமலையேறிக் கண்டுகொடுத்த நாடும் பரிசில்பெற்றது ;

எட்டாம்பத்து, தகடூரெறிந்தபெருஞ்சேரலிரும்பொறையை அரிசில்கிழார்பாடி ஒன்பதுநூறாயிரங்காணம் பரிசில்பெற்றது ;

ஒன்பதாம்பத்து, குடக்கோ இளஞ்சேரலிரும்பொறையைப் பெருங்குன்றூர்கிழார்பாடி முப்பத்திராயிரம் காணமுதலியனபெற்றது.

இந்நூலிலுள்ள பாக்களினுடைய அடிகளின் சிறுமை பெருமை புலப்படவில்லை. இத்தொகையைத் தொகுத்தோரும் தொகுப்பித் தோரும் இன்னாரின்னாரென்றும் தெரியவில்லை. இதற்கு அரும்பதவுரை ஒன்றுண்டு.

ரு. பரிபாடல்:—மதுரை, வையை, திருமருதந்துறை, திருப் பரங்குன்றம், திருமாலிருஞ்சோலைமலையென்பவற்றின் பண்டைக் கால நிலைமைகளையும், அக்கால நாகரிக முறையையும், வைதிக ஒழுக்கங்களையும், தெய்வவழிபாட்டு முறையையும் பிறவழக்கங்களையும்,

தமிழ்நாட்டின் வரலாறுகள் சிலவற்றையும் செவ்வனே தெரிவிக்கும் ஒருதொகைநூல்; ஒருவகைப் பாவின்பெயராகிய பரிபாடலென்பது அப்பாவாலாகிய நூலுக்காயிற்று. இஃது, எழுபதுபாட்டுக்களை யுடையதென்றும், அவ்வெழுபதுள் அ - பாட்டுக்கள் திருமாலுக்கும் ௩௧ - குமரவேளுக்கும் ௧ - காடுகிழாளுக்கும் ௨௬ - வையையாற்றிற் கும் ச - மதுரைக்குமாகப் பகுக்கப்பட்டுள்ளனவென்றும் அடியில் வரும் வெண்பா விளக்குகின்றது:—

> "திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்
> தொருபாட்டுக் *காடுகாட் கொன்று - மருவினிய
> வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
> செய்யபரி பாடற் றிறம்."

அவ்வெழுபது பாடல்களுள் இப்பொழுது கிடைத்தவை இரு பத்துநான்கு முழுப்பாடல்களும், சில உறுப்புக்களுமே. மற்றவை பிரதிகளிற் காணப்படவில்லை. இயற்றிய ஆசிரியர்களின்பெயரும் இசைவகுத்தோர் பெயரும் அவ்வப்பாட்டுக்களின் பின்னர் எழுதப்

---

* 'கார்கோட்கு' என்றும் பிரதிபேதமுண்டு.

முதற்பதிப்பின் முகவுரை.

பட்டுள்ளன. இந்நூலிலுள்ள பாக்களினுடைய அடிகளின் சிற்றெல்லை உரு-அடியென்றும் பேரெல்லை ௪௦௦-அடியென்றும் தெரிகிறது. இந்நூலைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் இன்னாரின்னாரென்று புலப்படவில்லை. இத்தொகை பாட்டால் தொகுக்கப்பட்டது. இதற்குப் பரிமேலழகர் இயற்றிய உரையொன்றுள்ளது.

சு. **கலித்தொகை:**—இது கடவுள்வாழ்த்துச்செய்யுள்முதலிய நூற்றைம்பது கலிப்பாக்களையுடையது; அகத்தின்பகுதியாகிய பாலை குறிஞ்சி மருதம் முல்லை நெய்தலென்னும் ஐந்திணைக்குமுரிய முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள்களை இனிதுவிளக்கி அகப்பொருட்பகுதிகளை விரித்துக்கூறுவது. சொல்லினிமை பொருளினிமையில் மிகச்சிறந்தது. இதிலுள்ள பகுதிகளுள், முதலாவதாகிய பாலை **பெருங்கடுங்கோவினாலும்,** இரண்டாவதாகிய குறிஞ்சி **கபிலராலும்** மூன்றாவதாகிய மருதம் **மருதனிளநாகனாராலும்,** நான்காவதாகியமுல்லை **நல்லுருத்திரனாலும்,** ஐந்தாவதாகிய நெய்தல் மதுரையாசிரியர் **நல்லந்துவனாராலும்** இயற்றப்பட்டன; இவ்வைந்தினையும் தொகுத்தார் மேற்கூறிய நல்லந்துவனார். இந்நூலிலுள்ள பாக்களினுடைய அடிகளின் சிறுமைபெருமையும் விளங்கவில்லை. இதற்கு **நச்சினார்க்கினியர்** உரைசெய்திருக்கின்றனர். இது **குறுங்கலித்தொகை** யென்றும், **கலி**யென்றும் கூறப்படும். இத்தொகை பாட்டாற்றொகுக்கப்பட்டது.

எ. **அகநானூறு**:—இது கடவுள்வாழ்த்துச் செய்யுள்முதலிய ௪0௧- அகவற்பாக்களையுடையது; இவற்றுள், **பாரதம்பாடிய பெருந் தேவனா**ரால் முதற்செய்யுளாகிய கடவுள்வாழ்த்தும் **மாமூலனார்**முதல் **உலோச்சனா**ரிறுதியாகவுள்ள புலவர் பலரால் மற்றைநானூறும் இயற் றப்பட்டுள்ளன; அகத்தின்பகுதிகளையே பொருளாகவுடையது. மேற் கூறிய அகவற்பாக்கள் பதின்மூன்றடிச்சிறுமையும் முப்பத்தேழடிப் பெருமையுமுள்ளவைகள். இவற்றுள் கடவுள்வாழ்த்தொழிந்த நா னூறு பாக்களில் முதல் ௧௨0 - பாக்கள் **களிற்றியானைநிரை**யென வும் அவற்றின்பின்புள்ள ௧௮0 - பாக்கள் **மணிமிடைபவள**மெனவும் மற்றை நூறுபாக்கள் **நித்திலக்கோவை**யெனவும் கூறப்படும். இத் தொகை தொகுத்தான், **மதுரைஉப்பூரிகுடிகிழார்** மகனுவான் **உருத் திரசன்மன்**. தொகுப்பித்தான் **பாண்டியன் உக்கிரப்பெருவழுதி**. இத்தொகை அகமெனவும் **அகப்பாட்டெ**னவும் **நெடுந்தொகை**யென வும் கூறப்படும், இது பொருளாற்பெருக்கப்பட்டது.



புறநானூற்றின் வரலாற்றிற்கு அங்கமாக நற்றிணைமுதலிய

எழு தொகைகளின் வரலாறுகள் இதுவரையில் எழுதப்பட்டன.

அ. **புறநானூறு:**—இது கடவுள்வாழ்த்துச் செய்யுள்முதலிய ௪00-அகவற்பாக்களையுடையது. அப்பாக்களுள் முதற்செய்யுளாகிய கடவுள்வாழ்த்துப் **பாரதம்பாடிய பெருந்தேவனாராலும்** மற்றை ௩௯௯-பாக்களும் **முரஞ்சியூர் முடிநாகராயர்முதல் கோவூர்கிழாரிறுதி** யாகவுள்ள புலவர் பலராலும் இயற்றப்பட்டுள்ளன. இதனைத் தொகுத் தோரும் தொகுப்பித்தோரும் இன்னாரின்னாரென்று விளங்கவில்லை. இந்நூலிலுள்ள பாக்களினுடைய அடிகளின் சிறுமைபெருமையும் தெரியவில்லை. இது **புறப்பாட்**டெனவும் **புற**மெனவும் வழங்கும். இது பொருளாற்பெருக்கப்பட்டது. இங்கே பொருளென்றது, அகம் புறமென்னுமிரண்டனுள் புறத்தை.

**அகமாவது** ஒத்த அன்பினராகிய தலைவனும்தலைவியும் தம்முட் கூடுகின்றகாலத்துப்பிறந்து அக்கூட்டத்தின்பின்பு அவ்விருவராலும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப்புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப் படாததாய் எப்பொழுதும் உள்ளத்துணர்வாலேயே அனுபவிக்கப் படும் இன்பம் ; இன்பம்பற்றி அகத்தேநிகழும் ஒழுக்கத்தை அக மென்றது ஆகுபெயர் ; அகம்-உள்.

**புறமாவது** மேற்கூறிய ஒத்த அன்புடையாராலேயே யன்றி எல்லாராலும் அனுபவித்துணரப்பட்டு இஃது இவ்வாறிருந்ததெனப் பிறர்க்குக்கூறப்படும் பொருள் ; அஃது அறனும், பொருளும் ; அறனும் பொருளும்பற்றிப் புறத்தேநிகழு மொழுக்கத்தைப் புற மென்றது ஆகுபெயர்;

புறம் - வெளி.

இந்நூல், மேற்கூறிய புறத்தின் பகுதியாகிய வெட்சிமுதலிய திணைகளுக்குரிய துறைப்பொருளமைந்த ச00-பாக்களையுடைமை யின், புறநானூறென்று பெயர்பெற்றது. வெட்சி முதலிய திணைகளா வன:—வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி,நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை யென்பன.

திணை-ஒழுக்கம். துறை-மக்களும் விலங்குகள்முதலியனவும் சென்று நீருண்ணும் துறைபோலப் பலவகைப்பட்டபொருளும் ஒருவகைப்
பட்டு இயங்குதற்குரியவழி.

*　　*　　*　　*

இந்நூலால், பண்டைக்காலத்து இத்தமிழ்நாட்டிலிருந்த சேர சோழபாண்டியர்களாகிய முடியுடைவேந்தர், சிற்றரசர், அமைச்சர்,

## முதற்பதிப்பின் முகவுரை.

7

சேனைத்தலைவர், வீரர் முதலிய பலருடைய சரித்திரங்களும், கடை

யெழுவள்ளல்களின் சரித்திரங்களும், கடைச்சங்கப்புலவர் பலருடைய வரலாறுகளும், அக்காலத்துள்ளாருடைய நடைமுதலியனவும் இன்னும் பற்பலவும் நன்கு புலப்படும். இந்நூற்

செய்யுட்களாற்

பாடப்பட்டவர்கள் ஒருகாலத்தாரல்லர்; ஒரு குலத்தாரல்லர்; ஒரு சாதியாரல்லர்; ஓரிடத்தாருமல்லர். பாடியவர்களும் இத்தன்மையரே. இவர்களில் அந்தணர் சிலர்; அரசர் பலர்; வணிகர் பலர்;

வேளா ளர் பலர்; பெண்பாலாருமுளர்.

முன்னூ ளிடையே யிக்கா டாண்ட
காவலர் பல்லோர் பாவலர் பல்லோர்
மாசரி தத்தை யாசற விளக்கிச்
சொற்சுவை பொருட்சுவை துவன்றியெஞ் ஞான்று
மொப்புமை யில்லாத் திப்பிய நடையுடைத்
திறப்பா டமைந்தவிப் புறப்பாட் டுக்கள்
தெய்வ வணக்கஞ் செய்யுமி னென்பவும்
அறத்தின் பகுதியை உறத்தெரிப் பனவும்
பாவ வழியை நீவனன் றென்பவும்
இம்மைப் பயனொடு மறுமைப் பயனைச்
செம்மையின் வகுத்துத் தெரிவிப் பனவும்
அந்தண ரியல்பைத் தந்துரைப் பனவும்
அரச நீதியை யுரைசெய் வனவும்
வணிக ரியல்பைத் துணிவுறுப் பனவும்
வேளாண் மாக்களின் றாளாண் மையினை
யியம்பு வனவும் வயம்புரி போர்க்கு
முந்துறு மாசரைச் சந்துசெய் வனவும்

ஒற்றுமைப் பயனைச் சொற்றிடு வனவும்
வீரச் சிறப்பை யாரத் தெரிப்பவும்
இல்லற மாகிய நல்லற முரைப்பவுந்
துறவற மதனைத் திறவிதிற் றெரிப்பவு
மிடித்துன் பத்தை யெடுத்துரைப் பனவும்
வண்மையுந் தண்மையு முண்மையுந் திண்மையு
மென்று மிவற்றைப் பன்னு வனவும்
அளியையு மொளியையுந் தெளிவுறப் பனவுந்
தம்மைப் புரந்தோர் தாமாய்க் கிடவே
புலவர்கள் புலம்பி யலமர றெரிப்பவு
நட்பின் பயனை நன்கியம் புநவுங்
கல்விப் பயனைக் கட்டுரைப் பனவும்

## 8 முதற்பதிப்பின் முகவுரை.

நீர்நிலை பெருக்கென நிகழ்த்து வனவு
மானந் தன்னைத் தானன் குரைப்பவும்
இளமையும் யாக்கையும் வளமையு நிலையா
என்றே யிசைத்து நன்றேய்ப் பனவும்
அருளுடை மையினை மருளறத் தெரிப்பவுந்
தாமதிற் றொழுகென் றாறுற விதிப்பவும்
அவாவின் கேடே தவாவின் பென்பவும்
இனியவை கூற லினிதெ னென்பவும்
உழவின் பெருமையை யழகுற வுரைப்பவு
நன்றி யறிக வென்றிசைப் பனவுங்
கொடுங்கோன் மையினை விடுங்கோ ளென்பவுங்

தவத்தின் பெருமையைத் தவப்பகர் வனவு
மடியெனும் பிணியைக் கடிமி னென்பவுங்
கொலையெனும் பகையைத் தொலைமி னென்பவு
நல்லோர்ப் புணர்ந்து புல்லோர்த் தணந்து
தாழ்வொன் றின்றி வாழ்மி னென்பவுஞ்
சுற்றம் புரக்கு நற்றிற முரைப்பவுங்
கற்பின் றிறத்தைக் கற்பிப் பனவு
மக்கட் பேற்றின் மாண்புரைப் பனவுங்
கணவனை யிழந்த மணமலி கூந்தலார்
தீப்பாய் செய்தி தெரிவிப் பனவுங்
கைம்மை விரத வெம்மை விரிப்பவும்
இன்னும் பற்பல பன்னு வனவுமாய்ச்
செப்புந ரெவர்க்கு மெய்ப்பிடை வைப்பாய்
அரும்பெறன் மரபிற் பெரும்பயன் றருமே

என்று ஒருவாறு பொதுப்படத் தொகுத்துக் கூறுவதன்றி இன்ன பாடல் இத்தன்மையது இன்னபாடல் இத்தன்மையதென்று தனித் தனியே எடுத்துக்காட்டி இவற்றின் அருமை பெருமைகளைச் சீராட் டிப் பாராட்டுதற்கு ஒருசிறிதும் வல்லேனல்லேன்.

இவை நூலாசிரியர் பலருடைய உள்ளத்தையும் உரையாசிரி யர் பலருடைய உள்ளத்தையும் தம்வயமாக்கி அவற்றைத் தமக்கு முழுமணிப் பீடிகையாகக்கொண்டு வீற்றிருந்தனவென்பதை, அவ ரவரருளிச்செய்த நூல்களும் உரைகளும் இவற்றின் சொன்னடை பொருணடைகளை இடையிடையே பெரும்பாலுந் தழுவியிருத்தலே

நன்குபுலப்படுத்தும்.

இந்நூற்குக்கிடைத்தவுரை பதப்பொருளை இனிதுவிளக்கி உரிய இடங்களிற் சொற்களை முடித்துக்காட்டி

இலக்கணக்குறிப்பையும்

## முதற்பதிப்பின் முகவுரை.

9

இலைதுறைகளையும் ஆங்காங்குள்ள பழமொழிகளையும் அணியையும் சொன்னயம் பொருணயங்களையும் நன்குபுலப்படுத்துவது ; இதில் இக்காலத்து வழங்காதசொற்கள் பலவுள்ளன. அன்றியும், இதன்

இடையிடையே சிற்சிலவாக்கியங்கள் அவ்வவ்விடத்திற்குப் பொருத்தமில்லாதனவாகக் காணப்பட்டன. அவற்றைச் செவ்வைசெய்து கொள்வதற்கு இப்பொழுது தக்கசாதனம் கிடையாமையாலும் இனி நல்லபிரதிகள் கிடைப்பின் அவற்றைக்கொண்டு செவ்வைசெய்து கொள்ளலாமென்றும் அவற்றை மாற்றுமற் பிரதிகளிலிருந்தவாறே பதிப்பித்தேன். இவ்வுரை, இந்நூலின் முதல்இருநூற்றறுபத்தாறு பாடல்களுக்குமட்டுமே கிடைத்தது ; மேலுள்ளபாடல்களுக்கு ஒரு பிரதியிலும் கிடைத்திலது; உசஉ - ஆம் பாடலுக்கு மேற்பட்டுள்ள வற்றினுரை இடையிடையே சிதைந்து மாறியிருக்கிறது. இவ்வுரை

யாசிரியர் இன்னாரென்று தெரியவில்லை. இவர் சிலபாடல்களின் விசேடவுரையிலெழுதும் மறுப்புக்கள், இந்நூற்குப் பழையவுரை

ஒன்றுஉண்டென்பதைக் குறிப்பிக்கின்றன. அவ்வுரை இப்பொழுது கிடைக்கவில்லை.

உரையில்லாத மூலங்கள் எழுத்துஞ் சொல்லும் மிகுந்தும் குறைந் தும் பிறழ்ந்தும் திரிந்தும் பலவாறு வேறுபட்டிருந்ததன்றி, இவற் றுள் சிலபாடல்களின்பின் திணையெழுதப்படாமலும் சிலவற்றின்பின் துறையெழுதப்படாமலும் சிலவற்றின்பின் இரண்டுமெழுதப்படா மலும் சிலவற்றின்பின் பாடினோர்பெயர்சிதைந்தும் சிலவற்றின்பின் பாடப்பட்டோர்பெயர் சிதைந்தும் சிலவற்றின்பின் இருவர்பெயருமே சிதைந்தும் சிலபாடல்கள் இரண்டிடத்து எழுதப்பட்டு இரண் டெண்களையேற்றும் வேறுவேறிடத்தில் இருத்தற்குரிய இரண்டு பாடல்கள்ஒருங்கெழுதப்பட்டு ஓரெண்ணேயேற்றும் சில முதற்பாகங் குறைந்தும் சில இடைப்பாகங்குறைந்தும் சில கடைப்பாகங்குறைந் தும் சில முற்றுமின்றியும் ஒருபாடலின் அடிகளுள் ஒன்றும் பல வும் வேறுபாடல்களின் அடிகளோடுகலந்தும் ஓரடியே ஒரு பாட்டிற் சிலவிடத்து வரப்பெற்றும் பொருளுண்மைகாணுதவண் ணம் இன்னும் பலவகைப்பட மாறியும் கையெழுத்துப் பிரதிகளி லிருந்தன. இவற்றைப் பரிசோதித்து வருகையில், இந்நூலிலிருந்து வேறு நூல்களிலுடைய பழையவுரைகளின் இடையிடையேஉரை யாசிரியர்களால் பூர்த்தியாகவும் சிறிதுசிறிதாகவும் எடுத்துக்காட்டப் பட்டிருந்த உதாரணங்கள், சிற்சிலபாடல்களிலுள்ள வழுக்களை நீக்கிச் செவ்வைசெய்துகொண்டு பொருளுண்மைகாணுதற்கும், சிற்

சில பாடல்களிற் குறைந்தபாகங்களை நிரப்பிக்கொள்ளுதற்கும், பிறழ்ந்துகிடக்கும் சிலபாடல்களை ஒழுங்குபடுத்தி வரையறை செய்துகொள்ளுதற்கும் பெருந்துணையாகவிருந்தன.

* * * *

பாடல்களிலும், அவற்றின்பின்னர்த் திணைதுறைகளையும் பாடப் பட்டோர் பாடினோர்களையும் தனித்தனியே தெரிவிக்கும் வாக்கியங் களிலும், உரைகளிலும், பிரதிகளிற் சொற்கள் சிதைந்தவிடத்தைப் புலப்படுத்தற்கு(.........)இவ்வொற்றைப்புள்ளி நிரைகள் அமைக்கப் பட்டுள்ளன. பிரதிபேதங்களும் எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன.

உரைகிடையாதவிடத்து ஒருவகையாலும் பொருள்காணாத விதம்சிதைவுற்றிருந்தமூலங்கள் ஏட்டுப்பிரதியிலிருந்தபடியே புள்ளி யிடுதல் முதலியனவின்றிப் பதிப்பிக்கப்பட்டன.

இந்நூற்கு இலக்கணம் அகத்தியமும் தொல்காப்பியமுமேயென் பதும் இதில் ஒவ்வொருபாட்டின்பின்னும் எழுதப்பட்டுள்ள திணை யும் துறையும் அவ்வப்பாட்டிற்கு ஏற்றனவல்லவென்பதும் கச்சி

னர்க்கினியர் கருத்து; அவர்கருத்து அன்னதாதல், 'தத்தம் புது நூல்வழிகளால் புறநானூற்றிற்குத் துறைகூறினரேனும் அகத்திய மும் தொல்காப்பியமுமே தொகைகளுக்கு நூலாகலின் அவர் சூத் திரப்பொருளாகத் துறைகூறவேண்டுமென்றறிக' என்று தொல் காப்பியப் புறத்திணையியலில் "கொடுப்போ ரேத்தி" என்னும் சூத் திரவுரையில் அவரெழுதியிருத்தலாலும் மேற்கூறிய புறத்திணையிய லுரையில் இந்நூற்பாட்டுக்களுட் சிலவற்றை வேறு திணைதுறை களுக்கு உதாரணமாகக்காட்டி அவர் மறுத்தலாலும் துணியப்படும்.

பாடினோரும் பாடப்பட்டோருமாகிய இருவகையார் பெயர்

களுட் சிலபெயர், கையெழுத்துப் பிரதிகளிற் பலவகைப்பட்ட விசேடணத்தோடுகூடியும் கூடாமலும்வேறுவேறிடத்துவேறுவேறு விதமாக எழுதப்பட்டுமிருந்தன; அவை இன்னபெயரின் பரியா யங்களெனத்தெரிந்தும் அவற்றை ஒரேவிதமாகத் திருத்திவிடாமல் ஏனைத்தொகைகளிலும் மற்றைநூல்களிலும் உரைகளிலும் வழங் கும் பழையவழக்கத்தைத் தெரிவித்தற்கு அவை பிரதிகளில் இருந்த

வாறே பதிப்பிக்கப்பட்டன. அவற்றுள் ஒன்றற்கு உதாரணம்:—

க. மாந்தரஞ்சேரலிரும்பொறை

உ. சேரமான்மாந்தரஞ்சேரலிரும்பொறை

ங. யானைக்கட்சேய்மாந்தரஞ்சேரலிரும்பொறையார்

ச. சேரமான்யானைக்கட்சேய்மாந்தரஞ்சேரலிரும்பொறை

ரு. கோச்சேரமான் யானைக்கட்சேய்மாந்தரஞ் சேரலிரும் பொறை.

மேற்கூறிய இருவகையோருடைய பெயர்களிற் சிலபெயர்களுக்

குக் காரணம் புலப்படுகின்றது ; பலவற்றிற்குப் புலப்படவில்லை.

இத்தமிழ்நாட்டின் பழைய சரித்திரங்களைத்தெரிந்துகொள்ளு தலிலும் தெரிவித்தலிலுமே பெரும்பாலும் காலங்கழித்து உழைத்து வரும் உபகாரிகளாகிய விவேகிகள், இந்நூலை நன்கு ஆராய்ச்சிசெய் வார்களாயின், பலருடைய வரலாறுகள் முதலியன தெரிந்துகொள் ளுதல்கூடும்.

இந்நூலுரையாசிரியர் மேற்கோளாக எடுத்துக்காட்டிய நூல்கள்:—

இலக்கணம் ... ... ... ... தொல்காப்பியம்.

இலக்கியம் ... ... ... ...
- க. கலித்தொகை.
- உ. குறுந்தொகை.
- ங. சீவகசிந்தாமணி.
- ச. பெரும்பாணாற்றுப்படை.

* * * *

* * * *

இந்நூலை அச்சிட்டுவருகையில், சிலாசாதனமுதலியவற்றில் அறிதற்குரிய சிலவற்றைத் தெரிந்து கொள்ளுதற்பொருட்டு ம-ா-ா-ஸ்ரீ ராவ்பகதூர் வி. வெங்கையரவர்களையும், ம-ா-ா-ஸ்ரீ வி. கனகசபைப்பிள்ளையவர்களையும் எழுதிவினவினேன். அதற்கு அவர்கள் அன்புடன் * விடையனுப்பினார்கள்.

*   *   *   *   *

இதனைப் பதிப்பிக்குங்காலத்து ஒப்புநோக்குதலமுதலிய பேருதவிகளை மிகுந்த ஊக்கத்துடன் செய்துவந்த திருவல்லிக்கேணி ஸ்ரீமத். வை. மு. சடகோபராமானுஜாசாரியருடைய அன்புடைமை ஒருபொழுதும் மறக்கற்பாலதன்று.

இந்நூற் பரிசோதனைக்கும் எனக்கும் எத்தனையோ தூரமென்பதைச் சொல்லவேண்டுவதில்லை; ஆதலின், இப்பதிப்பிற்காணப்படும் பிழைகளையும் அவற்றின் திருத்தங்களையும் விவேகிகள் தயைசெய்து தெரிவிப்பார்களாயின், அன்புடன் சிரமேற்கொண்டு அந்நன்றியை எழுமையும் பாராட்டுவேன்.

* அவர்கள் அனுப்பிய விடைகள் இப்பதிப்பில் அரும்பதமுதலியவற்றின் அகராதியில் உரிய இடங்களில் அடிக்குறிப்பாகச் சேர்க்கப்பெற்றுள்ளன.



கிடைத்த கையெழுத்துப்பிரதிகள்:—

# புறநானூற்று மூலப்பிரதிகள்

| பிரதிக்குரியவர்கள். | பிரதியை உதவிசெய்தவர்கள். | [illegible] |
|---|---|---|
| திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிகரவர்கள் | பிரதிக்குரியவர்களே. | ௧-௪௦௦. |
| திருத்தணிகைச் சரவணப்பெருமாளையரவர்கள். | யாழ்ப்பாணம், ராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள். | ௧-௪௦௦. |
| யாழ்ப்பாணத்து நல்லூர், சதாசிவப்பிள்ளையவர்கள். திரு. த. கனகசுந்தரம்பிள்ளையவர்கள். | சென்னை, பா. வாசுதேவமுதலியாரவர்கள். | ௨௬௭-௩௬௬. |
| யாழ்ப்பாணம், வி. கனகசபைப்பிள்ளையவர்கள். | பிரதிக்குரியவர்களே. | ௧-௩௬௬. |
| திருமயிலை வித்துவான், சண்முகம்பிள்ளையவர்கள். | திருவனந்தபுரம், பி. சுந்தரம்பிள்ளையவர்கள். | ௩-௩௬௬. |

# புறநானூற்று உரைப்பிரதிகள்

| | | |
|---|---|---|
| திருவாவடுதுறையாதீனத்து ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிகரவர்கள். | பிரதிக்குரியவர்களே. | ௧-௨௬௦.. |
| ஷை ஆதீனத்து ஸ்ரீலஸ்ரீ அம்பலவாணதேசிகரவர்கள் | பிரதிக்குரியவர்களே. | ௧-௬௦௭. |
| ஆழ்வார்திருநகரி, தாயவலந்தீர்த்தகவிராயரவர்கள். | ஸ்ரீ வைகுண்டம், ஈ. சுப்பராயமுதலியாரவர்கள். | ௧-௨௬௧. |
| மிதிலைப்பட்டி, அழகிய சிற்றம்பலக்கவிராயரவர்கள். | பிரதிக்குரியவர்களது பரம்பரையோராகிய அழகிய சிற்றம்பலக்கவிராயரவர்கள். | ௧-௨௯௬. |
| | ,, | ௩-௯௭௧. |

| பிரதிக்குரியவர்கள். | பிரதியை உதவிசெய்தவர் கள். | பாடல் வரையறை. |
|---|---|---|
| திருநெல்வேலியைச்சார்ந்த வண்ணார்பேட்டை, திருப்பாற்கடனாதகவிராய ரவர்கள். | யாழ்ப்பாணம், ராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள். | க-உகூ0. |
| தென்காசி, சுப்பையாபிள்ளையவர் கள். | மேலகரம், திரிகூடராசப்பக்கவி ராயரவர்கள். | க-சஅ. |
| ,, [பதவுரை சிதிலம்] | ,, | க-ருஎ. |
| ,, ,, | ,, | எ-சஅ. |
| தாத்தகுடி, குமாரசாமிப்பிள்ளையவர் கள். | ஆறுமுகமங்கலம், ஏ. சுந்தரமூர்த்தியாபிள்ளை யவர்கள். | க-உகக. |
| ,, | ,, | க-தகக. |

ஆக மூலப்பிரதிகள் - ரு ; உரைப்பிரதிகள் - கக.

இந்நூலை எழுதுங்காலத்தும் ஒப்புநோக்கிப் பரிசோதிக்குங் காலத்தும் பதிப்பிக்குங்காலத்தும் உடனிருந்து அன்புடன் உதவி செய்தோர்:—

திருமானூர், ம-ா-ா-ஸ்ரீ அ. கிருஷ்ணையர் அவர்கள்,
மணலூர், ,, ம. வீ. இராமாநுஜாசாரியர் அவர்கள்,
ஸ்ரீலஸ்ரீ சொக்கலிங்கத்தம்பிரானவர்கள்,
திருப்பெருந்துறை, பொன்னுசாமிபிள்ளையவர்கள்.

———:o:———

இந்நூலை அச்சிற்பதிப்பித்தற்குப் பொருளுதவி செய்தோர்:—
ம-ா-ா-ஸ்ரீ கே. சுந்தரராமையரவர்கள்,
சிறுவயல் ஜமீன்தாரவர்களாகிய
,, முத்துராமலிங்கத்தேவரவர்கள்,
,, அ. இராமநாதசெட்டியார் அவர்கள்.

ஒன்றுக்கும்பற்றாத சிறியேனை இம்முயற்சியிற் புகுத்தி நடத்தி நிறைவேற்றியருளிய எல்லாம்வல்ல எம்பிரானது திருவருளை அனவரதமும் சிந்தித்து வந்திக்கின்றேன்.

இங்ஙனம்,
உ. வே. சாமிநாதையன்.

ஸெப்டம்பர் 1894.

உ

# பாடினோர் வரலாறு.

(* எண்கள் பாட்டினெண்களை.)

அடைநெடுங்கல்வியார் :—எளிதில் அடைந்த மிக்க
கல்வியையுடையாரென்
பது இப்பெயரின்பொருள் ; பாண்பாட்டு, மகட்பாற்காஞ்சியென்னுந் துறைகள் இவரால் அழகுபெறப் பாடப்பெற்றுள்ளன. இவராற் பாடப்
பட்டவர்கள்பெயரும், இவர்காலத்தவர் இன்னாரென்பதும் விளங்கவில்லை.

அண்டர்மகன் குறுவழுதி :—தொகை நூல்களில் குறுவழுதியாரென்று ஒரு
பெயர் காணப்படுகின்றது. இவ்விருபெயரினரும் ஒருவரோ வேறோ
தெரியவில்லை. அண்டர்மகன் குறுவழுதி இயற்றியனவாக; புறச்செய்
யுள் ஒன்றும், குறுந்தொகைச் செய்யுளொன்றும், குறுவழுதியென்பார்
இயற்றியனவாக அகநானூற்றுச் செய்யுள் இரண்டும் உள்ளன. இவராற்
பாடப்பட்டவர் பெயர்முதலியன விளங்கவில்லை. இவர் வாக்கில் வந்
துள்ள "கல்வியென்னும் வல்லாண் சிறாஅன்" (புறநா. ௩௪௬) என்பது
பாராட்டற்பாலது.

அரிசில்கிழார் :—கொள்ளிடத்தின் வடபால் அரியிலூர் அல்லது அரியில்

என்று வழங்கும் ஓரூரின் பெயர் அரிசில என்பதன் மரூஉவாகக் கருதப்
படுகின்றது ; சகர யகரங்கள் தம்முள் மயங்குதல் இயல்பு ; "அரிசிற்
கரை" என்று மைஸூர் ஸம்ஸ்தானத்திலும் ஓர் ஊர் உள்ளது. கிழார் -
உரியவர். கிழாரென்பது வேளாளர்க்கேயுரிய சிறப்புப்பெயராக இருந்த
தென்று தெரிதலின், இவர் வேளாண்மரபினராகக் கருதப்படுகிறார்.
இஃது, "ஊரும் பேரும்". (தொல். மரபு. எச) என்னும் சூத்திரத்தின்
உரையிற் காட்டிய பெயர்களாலும், திருத்தொண்டர்புராண வரலாற்
றின் ௨-ஆம் செய்யுளில் எடுத்துக்காட்டிய பெயர்களாலும் அறியலாகும்.
கடைஎழுவள்ளல்களுள் ஒருவனாகிய பேகனைப் பாடியிருத்தலின் இவர்
அவன் காலத்தினராக நினைக்கப்படுகின்றார் ; அவனால் துறக்கப்பட்ட
கண்ணகி யென்பவளை அவனோடு சேர்த்தல்வேண்டி அவனைப் பாடினர் ;
இந்தக் கண்ணகி சிலப்பதிகாரத்திற் கூறப்பட்ட கண்ணகியல்லள்.
அதியமான் தகடூர்பொருதுவீழ்ந்த எழினியின் பிரிவாற்றாதவருந்திப்

புலம்பினர் ; பதிற்றுப்பத்தில் எட்டாம்பத்தைப் பாடித் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையிடம் ஒன்பது நூறாயிரங்காணம் பரிசில்பெற்று அவன் பால் அமைச்சத்தொழில்பூண்டு விளங்கியவர். தகடூர்யாத்திரை

* பாடினோர் சம்பந்தமான புறநானூற்றுச் செய்யுளெண்கள் அரும்பத முதலியவற்றின் அகராதியில் உரிய இடங்களிற் கொடுக்கப்பட்டுள்ளன.



வென்னும் நூலில் இவராற்பாடப்பட்ட பாடல்களும் சில உள்ளனவென்பது, தொல்காப்பியப் புறத்திணையியலில் அ, கஉ - ஆம் சூத்திர முதலியவற்றிற்கு நச்சினார்க்கினியரெழுதிய உரையால்விளங்குகின்றது. திருவள்ளுவ மாலையிலுள்ள "பரந்தபொருளெல்லாம்" என்னும் க௯-ஆம் செய்யுள் இவரியற்றியதாகக் கூறப்பட்டிருத்தலின், திருவள்ளுவர் காலத்தினராகிய கடைச்சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மருள் ஒருவராக இவரைச் சொல்லுவதற்கிடமுண்டு. சிலபிரதிகளில் இவர்பெயர் அரியில்கிழாரென்றும் அழிசில்கிழாரென்றும் காணப்படுகின்றது. இந்நூலுள்

இவராற்பாடப்பெற்ற குதிரைமறம், தானைமறம், பேய்க்காஞ்சி, மகட்பாற்
காஞ்சி என்னுந்துறைகள் அறிந்து இன்புறற்பாலன. பதிற்றுப்பத்து,
அ - ஆம்பத்தின் இறுதியில் அமைந்திருக்கும் " பாடிப்பெற்றபரிசில்:
தானும் கோயிலாளும் புறம்போந்து நின்று கோயிலிலுள்ள வெல்லாம்
கொண்மினென்று காணம்ஒன்பது நூறாயிரத்தொடு அரசுகட்டிற் கொடு
ப்ப அவர் யான் இரப்ப இதனை ஆள்கவென்று அமைச்சுப்பூண்டார் "
என்னும் வாக்கியத்தால் இவருடைய குணவிசேடங்களும் மேம்பாடும்
விளங்கும் ; (கோயிலாள் - பட்டத்தேவி ; காணம் - ஒருவகைப் பொற்
காசு ; அரசுகட்டில் - சிங்காதனம் ; அமைச்சு - மந்திரி வேலை.) மேற்
கூறிய சேரவரசனும் உக்கிரப்பெருவழுதியும் பேகனென்னும் வள்ளலும்
அதியமான்நகரே பொருதுவீழ்ந்த எழினியும் இவர்காலத்தவர். இவருட
னிருந்த புலவர்: கபிலர், பரணர், பெருங்குன்றூர்கிழார், பொன்முடி
யார்முதலியோர்.

அள்ளூர் நன்முல்லையார் :—அள்ளூரென்பது பாண்டிநாட்டில் மருதநிலத்தின் கண்ண தோரூர் ; இது, "கொற்றச் செழியன், பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவென் னொண்டொடி" (அகநா. ௪௬) என்னும் இவர் பாடலால் விளங்குகின்றது ; "இன்னா, வளைவாய்க் கொண்ட வேப்ப வொண்பழம், புதுநா ணுழைப்பா னுதிமாண் வள்ளுகிர்ப், பொலங்கல வொருகா சேய்க்கும்" என்னுமுவமையும், "அரும்பனி யச்சிரந்தீர்க்கும், மருந்து பிறி தில்லையவர் மணந்த மார்பே", "அவர்நமக், கன்னையு மத்தனு மல்லரோ" (குறுந். ௬௭, ௬௮, ௯௩) என்பனவும் இவருடைய நுண்மாண்புலமை முதலியவற்றைத் தெரிவியாநிற்கும் ; இவர்பெயர் அள்ளூர் நன்முல்லை யெனவும் வழங்கும்.

ஆதுறை மாசாத்தனார் :—காவிரி நதியின் தென்பாலொன்றும் வடபா லொன்றும் வடவெள்ளாற்றங்கரையி லொன்றுமாக மூன்றூர்கள் ஆடு துறை யென்னும் பெயரினவாக உள்ளன ; இம்மூன்றனுள் முன்னுள்ள இரண்டும் தேவாரம் பெற்றனவும் பின்னது புராணவரலாறுள்ளது மான சிவஸ்தலங்கள் ; இவைமுறையே தென்குரங் காடுதுறை, வடகுரங் காடுதுறை யெனவழங்கும் ; ஆடுதுறை பின்னுள்ளது எழுதுறைகளு



ளொன்று. தெய்வப்பெயரை மக்கட்கிட்டு வழங்குதல் மரபாதலின் ஐயனாருடைய திருநாமமாகிய மாசாத்தனு ரென்பது இவருக்குப் பெய ராக அமைந்ததுபோலும் ; சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி

வளவனைப்பாடியவராதலால், இவர் சோழ நாட்டினரென்றே கொள்வது தக்கது. அவன் இறந்தபொழுது பிரிவாற்றாமல் வருந்திப் பாடியவராகத் தெரிதலால் அவன் இறந்தபின்பும் இவர் இருந்தாரென்பதும் அவனைப் பாடிய ஆலத்தூர்கிழார் முதலிய புலவர் ஒன்பதின்மரும் இவர்காலத்தினர் என்பதும் தெரிகின்றன; "பகைவர்களையும் அவர்கள் சேனைகளையும் கொன்று உன்பசியை எளிதில் ஒழிக்கும் இந்தவளவனைக் கைக்கொண்டாயே ! இனி உன் பசியைத் தீர்க்கும் ஆற்றலுடையார் யாவர் ? உனக்கே நீ தீங்கை விளைவித்துக்கொண்டமையின் நீ மிக்க பேதைமையையுடையாய்" (புறநா. ௨௨௭) என்று கூற்றத்தை நோக்கி இவர் கூறினமை மிகப்பாராட்டற்பாலது.

**ஆலங்குடிவங்கனார்:**—ஆலங்குடி யென்னும் பெயருள்ள ஊர்கள் பல இருத்தலின் இவர் ஊர் இன்னதென்று விளங்கவில்லை. தொகை நூல்களில் ஏழுபாடல்களும் திருவள்ளுவமாலையில் ஒன்றும் ஆக எட்டுச் செய்யுட்கள் இவர் செய்தனவாக இப்பொழுது காணப்படுகின்றன.

**ஆலத்தூர்கிழார்:**—நன்றியறிவும், அரசர்களை இடித்துக் கூறும் மனவலியும், குறிப்பறிந்தளிக்கும் உபகாரிகளின் இயல்பை வெளிப்படுத்தும் அன்புடைமையும், போர்செய்யும் முறைமையை விளக்கும்இயல்பும்,

பொருள்களின்
இயற்கையலைப் புலப்படுத்தும் நுண்ணறிவும் உடையவர். "நெடுங்காத்
கணர்த்து எாளறி வுறீஇ, யாறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்"
(குறுந். ௩௫௦) எனக் கணர்த்துட் பறவையின் தன்மையை இவர் தெரி
வித்திருத்தல் காண்க. இவர் செய்தனவாகத் தொகைநூல்களில் ௭-செய்
யுட்கள் காணப்படுகின்றன. இவராற் பாடப்பட்டோர் சோழன் குள
முற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனும், சோழன் நலங்கிள்ளியும்.

**ஆலியார்:**—ஆலி-ஓரூர். இது சோழநாட்டின் உள்நாடுகளுள் ஒன்றாகிய ஆலி நாடென்பதன் தலைநகர். திருமங்கையாழ்வார் அவதரித்த தலமென்பர். இவ்வூரினராதலால் இவர் இப்பெயர்பெற்றார் போலும் ; இவ்வூர்ப்பெயர் திருவாலியெனவழங்காநிற்கும். தன்னுடைய தலைவன் தனக்குச் சிறந்த உணவையளிக்கின்றானேயன்றி, போர்செய்தற்கு நீ முந்திச்செல்லென்று ஏவுகின்றானல்லனென்று ஒரு வீரன் சொல்லியதாக இவர் இயற்றிய பாடலின் பொருள் அறிந்து இன்புறற்பாலது. இதனால் இவர் வீரர் குடியிற்பிறந்தவராகவும் கருதப்படுகிறார் ; புறநா. ௨௯௮. இப்பெயர் சிலபிரதிகளில் ஆவியார் என்றும், ஆனியாரென்றும் காணப்படுகிறது.

**ஆலூர்கிழார்:**—ஆலூரென்னும் பெயருள்ள ஊர்கள் தமிழ் நாட்டிற் பலஇருத்தலின் இந்த ஆலூர் இன்ன இடத்திலுள்ளதென்று தெரிந்துகொள்ளக்

கூடவில்லை ; ஆயினும், மருதநிலத்தின்வளம் இவர்பாடலிற் கூறப்பெற்றிருத்தலின், இது சோழநாட்டிற் காவிரியின்தென்கரையிலுள்ள ஆரூராக இருக்கலாமென்று ஊகிக்கப்படுகின்றது. கள்ளியின் முள்ளிற்குக் காளையின், பதனழிந்த கொம்புகளை இவர் உவமை கூறியிருத்தல் முதலியன அறிந்து இன்புறற்பாலன ; இப்பெயர் ஆரூர்முடியாரென்றும் சில பிரதிகளிற் காணப்படுகின்றது.

ஆவூர்மூலங்கிழார் :—இப்பெயர் இவருக்கு நாண்மீனால் வந்தது போலும்; மூலம் - ஒரு நக்ஷத்திரம். இவருடையபாடல்களுள் அடியில் எடுத்துக்காட்டிய கருத்தமைந்த பகுதிகள் மிகச்சிறந்தவை:—

க. செங்கோலினனாகிய ஓரரசனதுநாடு சுவர்க்கத்தினும் சிறந்தது ;

உ. வேந்தே ! நீ இன்சொல்லையும் பிறர்வந்து காணுதற்கு எளியதாகிய சமயத்தையும் உடையையாவை;

ங. பலநாள் தேகம் உலரக் காத்திருந்து பெருஞ்செல்வரிடத்துப் பெற்ற யானைமுதலிய பெரும்பரிசில்களைக் காட்டினும் ஒருவன் அன்புடனளிக்கும் உணவைக் காலையிற் பனம்பட்டையில் உண்

ணல் மிகச் சிறந்தது;

௪. அரச ! கையிலுள்ளதைக் கொடுத்தலும் இல்லாததை இல்லை

யென்றலும் உலகியற்கை ; அங்ஙனமின்றிப் பரிசிலரை அலைக்

கழித்தல் உனக்கு நன்றன்று ; நான் செல்வேன்:

இவற்றால் இவருடைய குணவிசேடங்கள் புலனாகின்றன. இன்னும்

பரம்பரைத்தொழிலை வழுவின்றிச் செய்துபோதரும் ஓர்தணனு

டைய இயல்பையும், தன் வீரர்க்குமுன்னே போரில் முற்படும் ஓரரச

னது இயற்கையையும் யானையின்மேலன்றி ஏனையிடங்களில் தன் வேலை

யெறியாத ஒருவீரனியல்பையும் இவர் பாராட்டியிருத்தலும், ஒருபகாரி

இறந்தபின்பு அவன் வீட்டைநோக்கி, 'கணவனையிழந்தமழித்த தலையையு
டைய கழிகலமகடூஉவைப்போல்கின்றாய்நீ' என்று இரங்கிக்கூறியதும்
யாவருடைய உள்ளத்தையும் கனியச்செய்யாமலிரா. இவர் செய்தனவா

கத் தொகைநூல்களில் ௧௦ - செய்யுட்கள் காணப்படுகின்றன (அகநா. ௨; புறநா. ௮.) இவராற் பாடப்பெற்றோர்: சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன், சோழன்குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய

கன்மா

றன், பாண்டியன் நேஞ்சாத்தன், மல்லிகிழான்காரியாதி முதலியோர். இவர்காலத்திருந்த புலவர் : சோழன்குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் முதலிய தலைவர் நால்வரைப் பாடிய பதின்மூவராவர்.

இடைக்காடனூர் :—இடைக்காடென்னு மூரினுள்ளாராதலின், இவர் இப் பெயர்பெற்றார். இவர் கபிலருடைய தோழர் ; மற்றப்புலவர்களிடத்தும்

3.



அன்புடையவர் ; கவிசெய்யுமாற்றலில் மிக்கோர் ; இவை, "முன்ன மோர் காணன் மாட மதுரையின் முழுதுணர்ந்தோன், பின்னவில் கபிலன் றோழன் பெயரிடைக் காட னென்போ, லின்னியல் வாணர்க் கெல்லா மிதவியோன் கவியான் மிக்கோன்", "ஏனையந் தாதி சொன்ன வன் கபிலன் றோழன்" (திருவால. உ0:க, கக) என்பவற்றாலறியலாகும். "கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக், குறுகத் தறித்த குறள்" என்று திருக்குறளினியல்பைப் புலப்படுத்திப் பாடியிருத்தலால், இவர் பெரும்பொருளைச் சிறுகவியில் அடக்கும் இயல்பினரென்பதும் சுருங்கச் சொல்லலென்னுமழகில் மிக்கவிருப்பமுடையரென்பதும் புலனாகின்றன. "அரச ! மலையினின்றிழிந்து ஆறுகள் கடலை நோக்குவதுபோலப் புலவர்கள் நின்னையே நோக்கினர் ; நீ பகைவேந்தருடைய மண்களைநோக்கினை" (சஉ) எனஇந்நூலுள்ளும் வேறு வகையாக ஏனைத் தொகைநூல்

களிலும் இவர்கூறியிருக்குமுவமைவகைகள் மதிக்கற்பாலன. இவருடைய

செய்யுட்களை உற்று நோக்குமிடத்துப் பெரும்பான்மையாக முல்லைத்
' திணை, மழை, இடைச்சாதி என்பவற்றினியல்புகளும் சிறுபான்மையாக
மருதத்திணை வளமும் அமைந்திருப்பது விளங்கும். சிலபாடல்கள்
இடைக்காடநூசிமுறியென்று பழைய உரைகளிற் காணப்படுகின்றன
;
இதனால் ஊசிமுறியெனப் பெயரிய நூலொன்று இவராற் செய்யப்
பட்டிருந்ததென்று தெரிகின்றது ; ஊசி - எழுத்தாணி. இவர், ஒரு
பாண்டியன்மீது சிலபாடல்களைப் பாடிக்கொண்டு சென்று அவனைக்
கண்டு தெரிவித்தபொழுது அவன் அவற்றை மதியாதிருந்தமைகண்டு
மனம்நொந்து உடனே ஆலவாயடிகளையடைந்து குறையிரந்து நிகழ்ந்த
தனை விண்ணப்பித்து வடபாற்சென்று ஓரிடத்திருப்ப, அவரும் சங்கப்
புலவர்களும் இவர்பின்சென்று இவருடனிருந்தாரென்றும் இந்நிகழ்ச்சி
யையறிந்த பாண்டியன் மனங்கலங்கி இவரையடைந்து குறையிரந்து
இவர் மனவருத்தத்தைத் தீர்த்தானென்றும் இருவகைத் திருவிளையாடல்

களிலும் ஒரு சரித்திரம் வழங்குகின்றது; "திருந்திய செல்வ மதுரைச்
செழியன்முன் சென்றடியே, னருந்தமிழ் பாடினன் றள்ளின னே
யென் றவன்செல்லவே, கரும்பன சொல்லி யுடன்வட பாலிடைக்
காடனுக்காப், பரிந்துபின் போன சொக்கே பரதேசி பயகரனே" (திரு
விளையாடற்பயகரமாலை, உo), "கூறுமிடைக் காடனியற் கவிதை
பாடிக் கொடுகோண மன்னிகழ்ந்து தள்ள நொந்தே,வீறுயரா லயத்தனுகிப்
பொருணீ சொல்லுன் மெல்லியென மறைபுகலு மிகழ்ந்த துன்னை,மாறக
லுன் றேவியைமற் றிலையென் றேத்தி வரைந்தேக யானுமே குவலென்
றேகி, யேறியசங் கத்தொடிருந் தழைப்பப் போந்தா னிடத்தைவட திரு வால வாயென் றூர்கள்" (கடம்பவனபுராணம், இலீலாசங்கிரக அத்தி யாயம், உo) என்பவற்றாலும் இவ்வரலாறு அறியப்படும். இவரால்
பாடப்பட்டோன் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன்.

இடைக்குன்றூர்கிழார் :—இவர்க்கு இப்பெயர் ஊரான் வந்தது. நெடுஞ்செழியனென்பான் தன்னுடைய மிக்க இளமைப்பருவத்தில், சோணாட்டுள்ள தலையாலங்கானமென்னுமூரில் முடிமன்னர்களாகிய சேரசோழர் இருவரையும் ஐம்பெருவேளிரையும் பொருதுவென்ற பெருவிறலும் அவனுடைய அடக்கமும் பிறவிசேட குணங்களும் இந்நூலுள் இவர்வாக்கில் நன்கு அறியலாகும். இவரால் பாடப்பட்டோன், அப்பாண்டியன். இவர் காலத்துப் புலவர் அவனைப்பாடிய கல்லாடனார் முதலியோராவர்.

இரும்பிடர்த்தலையார்:—இவர் சோழன்கரிகாலனுடைய அம்மான் ; அவனுக்குப்பெருந்துணையாயிருந்தவர்; இதனை, "சுடப்பட்டு உயிருய்ந்த சோழன்மகனும், பிடர்த்தலைப் பேரானைப்பெற்றே - கடைக்கால், செயிரறு செங்கோல் செலீஇயினான்" என்னும் பழமொழி வெண்பாவாலும் அதன் பழைய உரையாலுமுணர்க. யானைப்பிடரை இரும்பிடர்த்தலை யென்று சிறப்பித்தமைபற்றி இவர் இப்பெயர்பெற்றார்போலும் (புறநா. ௩ : ௧௧.) இவருடைய இயற்பெயர் விளங்கவில்லை. தலைவன், இரவலருடைய குறிப்பறிந்து கொடுக்கும் வண்மைநலமுதலியன இவரால் பாராட்டப் பெற்றுள்ளன ; இவரால் பாடப்பட்டோன் பாண்டியன் கருங்கையொள்வாட்பெரும்பெயர்வழுதி.

உலோச்சனார் :—இவர்வாக்கில் எருமைமறமென்னுந்துறை விளக்கக் கூறப் பெற்றுள்ளது ; இவரால் பாடப்பட்டோன் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி.

உறையூர் இளம்பொன்வாணிகனார் :—இவர் வணிகர் ; ஒரு வீரனுடைய கொடைச்சிறப்பும் போரில் இறந்தபின்பு அவனுக்காகநட்ட வீரக்கல்லின் கோலமும் அவனை இழந்தமையாற் பாணர்கள் படுந்துன்பமும் இவர்

வாக்கில் நன்கு அறியலாகும்.

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்:—இவர் அந்தணர்; சேரமான் அந்துவஞ்சேரலிரும்பொறையால் ஆதரிக்கப் பெற்றவர்; இவை முறையே "ஊரும்பேரும்" (தொல். மரபு. எசு- பேர்) என்பதன் விசேடவுரையாலும், "சேரமான் அந்துவஞ்சேரலிரும்பொறையோடு வெண்மாடத்திலிருந்து" என்பதனாலும் பெறப்படுகின்றன; போர்க்களத்திற் பகைவர் சேனையைப் பிளந்துகொண்டு வாள்வீரர்க்கிடையே தன்றலைமை தோன்றச்செல்லும் சோழன்களிற்றிற்குக் கடலைக்கிழித்துச்செல்லும் நாவாயையும், விண்மீன்களுக்கு இடையே விளங்கும் திங்களையும் இவர் உவமை கூறியிருப்பது இவருடைய ஆற்றலைப் புலப்படுத்துகின்றது (புறநா. கந.) ஆய் என்னும் வள்ளலுடைய கொடைச்சிறப்பும் வீரச்சிறப்பு முதலியனவும் இவரால் பலபடியாகப் புனைந்து பாராட்டப் பெற்றுள்ளன; இதுபற்றியே, "திருந்துமொழி மோசி பாடிய ஆயும்" (கருஅ) எனப் பெருஞ்சித்திரனார் என்னும் புலவர் இவரைப்பாராட்டியுள்ளார்; இதிலுள்ள



[illegible]மொழி" என்னும் அடைமொழி இவருடைய சிறந்த புலமை [illegible]விளக்குகின்றது; இவரால் பாடப்பெற்றோர் சோழன் முடித் தலைக்கோப் பெருநற்கிள்ளியும், ஆயுமாவார்; ஆய் இறந்த பின்பும் இருந்தவர் இவர். இவர்பெயர் மோசி ஏணிச்சேரி முடமோசியாரென வும் வழங்கும்; இவர்வாக்கில், "ஆஅய் கோயில், சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில், பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி, உரைசா லோங்கு புகழொரீஇய, முரைசுகெழு செல்வர் நகர்போ லாதே", "ஆஅய் மழை கீழ்பொதியில், ஆடுமகள் குறுகி னல்லது, பீடுகெழு மன்னர் குறுகலோ வரிதே", "ஆஅய் நின்னுட், டிளம்பிடி யொருசூல் பத்தீ னும்மே", "அண்டிரன்குன்றம் பாடின கொல்லோ, களிறுமிக வுடையவிக் கவின் பெறுகாடே", "முன்னுள் ளுநோனைப் பின்னுள் ளினேனே, ஆழ்கவென் னுள்ளம் போழ்கென் னாவே, பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே", "வட திசை யதுவே வான்றோ யிமையம், தென்றிசை யாஅய் குடியின் றாயிற், பிறழ்வது மன்னோவிம் மலர்தலை யுலகே", "இம்மைச் செய்தது மறுமைக் காமெனும், அறவிலை வணிகன் ஆயலன்", "வந்தனெ னெந்தை......நின்னைக் காண்டல் வேண்டிய வளவை", "கழறொடி யாஅ யண்டிரன் போல, வண்மையு முடையையோ ஞாயிறு, கொன்வழங்குதியால் விசும்பி னானே", "பெருமழை கடற்பரந் தாஅங் கியானு, மொருவின் னுள்ளி வந்தனெ னதனாற், புலவர் புக்கி லாகி நிலவரை, நிலீஇய ரத்தை நீயே யொன்றே, நின்னின்று வறுவி தாகிய வுலகத்து, நிலவன் மாரோ புலவர் துன்னிப், பெரிய வோதினுஞ் சிறிய வுணராப், பீடின்று பெருகிய திருவிற், பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே" (புறநா. கஉஎ - அ, கங0 - ஙரு, ஙஎச - ரு) என்னும் பகுதிகள் அறிதற் கின்புறற் பாலன.

உறையூர்மருத்துவன்றாமோதரனார்.— இவர் மருத்துவன்றாமோதரனாரென வும் வழங்கப்பெறுவர்; மருத்துவர் - மருத்து நூலில் வல்லவர்; வைத்தியர். தாமோதரனாரென்பது தெய்வத்தால வந்த பெயர்; இத னால், இவர் குடும்பத்தினர் திருமாலின் அடியவராகக்கருதப்படுகின்றனர். இவர் மருத்துநூலில வல்லராதல், "செந்நீர்க் கண்டத் தெறிசக்குத் தேனளாய், மோர்தபின் யார்க்குந் தலைக்குத்தில் - காத்தி, மலைக்குத்து மால்பாயின வள்ளுவர்முப் பாலாந், தலைக்குத்துத், தீர்வுசாத் தற்கு" (திருவள். ௧௧) என்னும் வெண்பாவால் விளங்குகின்றது; இவர் செய் தனவாக ௬ - பாடல்கள் கிடைக்கின்றன (அகநா. ௨; திருவள். ௧; புறநா. ௩.) இவராற் பாடப்பட்டோர்: சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன், பிட்டங் கொற்றனென்பார். இவர் வாக்கிற் பால நிலத்தினியல்பும் ஏற்ற உவமை யணிகளும் காணப்படுகின்றன; "மூக்கீர் நீராட் டயிற்சுடர்போலச், செம்மீ னிமைக்கு மாகவிசும்பு", "கழியுப்பு முகந்து கன்னாடு மடுக்கு, மாரைச் சாத்து டாழ்ச்சி போக்கு, மூங்கிலை கொன்பட் டன்ன வெங்கோன்", "உலைக்கல் லன்ன வல்லா ளன்" என் பன இந்நூலுள் இவர் வாக்கிற் சிறந்த பகுதிகள்.

[illegible] செவிப்பிறந்தும் [illegible] என்பார் [illegible] பெயராகச் சிலசாசனமுதலியவற்றிற் காணப்படுகின்றது; [illegible] மகளிர்க்கு முதுக ணாமென" (பெருங். ௧. ௩௬ : ௧௨௰) [illegible] யுங்காண்க; இவர், உறையூர் அரசர்பால் அத்தொழிலை உடை [illegible] இருந்தார்போலும்; இவராற் பாடப்பட்டோன் சோழன் [illegible]கிள்ளி; இவர்காலத்துப்புலவர் அவனைப்பாடிய ஆலத்தூர் கிழாரும் கோவூர் கிழாரும்; "சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ், நூற்றித ழலரி னிரைகண் டன்ன, வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து, வீற்

திருந்தோர்" எனச் சிறந்த குடியிற் பிறந்தவருக்குத் தாமரைப் பூக்களையும், "தேய்த துணைமையும் பெருக லுண்மையும், மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும், அறியா தோரையு மறியக் காட்டித், திங்கட் புத்தே டிரிதரு முலகம்" என வளர்தல் முதலியவற்றையடைந்த பொருள் குறைதல் முதலியவற்றையடையுமென்பதற்குத் திங்களையும் உவமைகூறியிருத்தலும், அருளுங்கொடையும் வெற்றிக்கும் அவையின்மை தோல்விக்குங்காரணமென்பது புலப்பட, "அருள வல்லை யாகுமதி யருளிலர், கொடாமை வல்ல ராகுக, கெடாத துப்பினின் பகையெதிர்ந் தோரே" (உஎ) என விளக்கி யிருத்தலும் நன்கு மதிக்கற்பாலன; "அறனும் பொருளு மின்பமு மூன்றும், ஆற்றும் பெருமநின் செல்வம், ஆற்றாமை நிற் போற்றா மையே", "கொடியோர்த் தெறுதலுஞ் செவ்வியோர்க் களித்தலு, மொடியாமுறையின் மடிவிலையாகி, நல்லதனலனுந் தீயதன்றீமையு, மில்லை யென்போர்க் கினனாகிலியர்", "நகைப்புற னாகநின்சுற்றம்,இசைப் புற னாக நீ யோம்பிய பொருளே", "களிறுகவு ளடுத்த வெறிகற் போல வொளித்த துப்பினை" (உஅ - ௩௦) என்பவை இவருடைய பாடல்களிற் சிறந்த பகுதிகள். இவர் செய்தனவாக ௯ - செய்யுட்கள் உள்ளன (குறுந். ௧; புறநா. ௫.)

உறையூர்முதுகூத்தனார் :—இப்பெயர் முதுகூற்றனாரெனவும் சில பிரதிகளிற் காணப்படுகின்றது. "வென்றதி முரசின் விறற்போர்ச் சோழ, நின்கடுங்

கள்ளினுறந்தை'' என இவரே கூறியிருத்தலால் தம்முடைய ஊரில் இவர் அன்புடையரென்பதும் அவ்வூர் அரசராகிய சோழரால் நன்கு மதிக்கப் பெற்றவரென்பதும் வெளியாகின்றன; "உள்ளது, தவச்சிறிதாயினும் மிகப்பல ரென்னு,னீணெடும் பகத ருண்முறை யூட்டு,மிற்பொலி மகடூஉ'' (௩௬௧) எனக் கற்புடைமங்கையினியல்பையும, "தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள்வெண், பாவிற் சிறந்திடும்ப பாலபகாரர் - காவிற, குயலிலீ சொற்சுவை யோர்வில்லை மற்றுஞ், செயலில்லை யென்னுஞ் திரு'' எனத் திருக்குறளின் சிறப்பையும் பாராட்டியிருத்தல் மதிக்கற்பாலது; இவர் செய்யுள்களிற்பெரும்பாலுங் காணப்படுவது பாலைநிலத்தினியல்பு; இவர் செய்



தனவாக ௬-பாடல்கள் தெரிகின்றன (அகநா. ௩௯; குறுந். ௨; திருவள்.

௧; புறநா. ௧.)

ஊண்பொதி பசுங்குடையார் :—இவரால் பாடப்பட்டோர் சேரமான் பாமு

ளூரெறிந்த இளஞ்சேட்சென்னி, சோழன் செருப்பாழி யெறிந்த இளஞ் சேட்சென்னி, சோழன் நெய்தலங்கானலிளஞ் சேட்சென்னி யென்டார்; இவர் அரசர்களுக்குத் தருமங்களைக்கற்பிக்கும்முறை மிக அழகு வாய்ந்தது;

இராமர் இராவணனுயி ரோடிருக்கையில் தம்பால் அடைக்கலம்புகுந்த வீடணனுக்கு இலங்காராச்சிய மளித்ததை யுட்கொண்டு, "ஒன்னு,ராரெயி லவர்கட் டாகவு நுமதெனப்,பாண்கட னிறுக்கும் வள்ளியோய்'' (௨௦௩)

எனக்கூறியிருத்தலையும், மிக்கவறுமையுற்ற இளைப்பொருவனொருவன்

தன் உறவினரோடு சென்றகாலத்தில் ஒருபகாரி அவர்களுடைய நிலை

மைக்கு எத்தனையோ மடங்கு மேற்பட்டுள்ளனவாகிய அணிகலங்களைக்

கொணர்வித்து அவர்களிடையே சொரிவித்தபொழுது, அவர்கள் அணியு

முறையறியாமல் தடுமாற்றமுற்று விரைந்து சென்றுஅவற்றை அணித்து

கொண்டதற்கு இராவணன் வௌவிச்சென்ற சீதை தான் சென்றவழியை

இராமனறிந்துகொள்ளுதற்கு அடையாளமாகத் துகிலால் முடிந்து வீழ்த்

திய அணிகலங்களைக் கண்ட வானரங்கள் தனித்தனியே விரைந்தெடுத்து அவற்றை அணிந்துகொள்ளும் தடுமாற்றத்தையுவமித்து, " எமக்கென வகுத்த வல்ல மிகப்பல, மேம்படு சிறப்பி னருங்கல வெறுக்கை,தாங்காது

பொழிதந் தோனே யதுகண், டிலம்பா டுழந்தவெ னிரும்பே ராக்கல்,

விரற்செறி மரபின செவித்தொடக் குநருஞ், செவித்தொடர் மரபின

விரற்செறிக் குநரும், அரைக்கமை மரபின மிடற்றியாக் குநரும், மிடற்

றமை மரபின வரைக் கியாக் குநருங், கடுந்தே ரிராம னுடன்புணர் சீதை

யை, வலித்தகை யரக்கன் வெளவிய ஞான்றை, நிலஞ்சேர் மதரணி

கண்ட குரங்கின், செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாஅங், கறாஅ

வருநகை யினிதுபெற் றிகுமோ'' (கூஎஅ) எனப் பாடியிருத்தலையும் நோக்

குகையில், இராமசரித்திரம் இவருடைய ஞாபகத்திலிருந்து வந்ததென்ப

தும், வறுமையினியல்பை விளக்கக்கூறுதலில் இவர்வல்லுநரென்பதும்

விளங்குகின்றன.

எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்:—எருக்காட்டூரென்பது திருவாரூர்க்குத்

தென்மேற்கில் மூன்றுநாழிகைவழித் தூரத்திலுள்ளதென்பர்; கண்ண

னென்பது க்ருஷ்ணனென்னும் தெய்வப்பெயரின் சிதைவுபோலும்;

"கண்ணனென்பது கரியோனென்னும் பொருள தோர் பாகதச்சிதைவு"

(திருக்கோவையார். (ரு௩. பேர்.) என்பது ஈண்டறியற்பாலது; "செறு

விற் பூத்த சேயிதழ்த் தாமரை, யறுதொழி லந்தண ரறம்புரிந் தெடுத்த,

தீயொடு விளங்கு நாடன்"என அந்தணரின் வேள்வித்தீயைப் பாராட்

டிக்கூறியிருத்தலால் இவர் அந்தணராகக்கருதப்படுகிறார்; அக்காலத்
திருந்த அரசரால் இவருக்கு இவ்வூர் பிரமதாயமாகக் கிடைத்ததென்று



தெரிகிறது. தாயம் - உரிமை. இவராற்பாடப்பட்டோன் சோழன்குள
முற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன்; இவர்காலத்துப் புலவர்கள் அவனைப்
பாடிய ஆலத்தூர் கிழார்முதலியோர்; தாயங்கண்ணனாரென்று ஒருபுலவர்
பெயர் தொகைநூல்களிற் காணப்படுகின்றது;அவரும் இவரும் ஒருவரோ
வேறோ தெரியவில்லை. இந்நூலிலன்றி, இவர் செய்தனவாக அகநானூற்
றில் ௩- செய்யுட்கள் உண்டு.

எருமைவெளியனார்.—எருமைவெளியென்பது ஓரூர். இவராற்குதிரைமற
மென்னுந்துறை மிகச் செவ்விதாகப் பாடப்பெற்றுள்ளது. இவரியற்றிய
பாடல்கள் - ௩ (அகநா. க ; புறநா. உ.)

ஐயாதிச்சிறுவெண்டேரையார்.—யாக்கைநிலையாமையை அறிவித்தல் வாயி

லாக விரைந்து அறஞ்செய்கவென்று இவர் அறிவுறுத்துந்தன்மை அறி

தற்பாலது; சிறுவெண்டேரையாரென்று இந்நூலுள் ஒருவர்பெயர்

காணப்படுகின்றது. அவரும் இவரும் ஒருவரோ வேறோ விளங்கவில்லை. ஐயூர்முடவனார்.—இவருக்கு முடவனாரென்னும்பெயர் சினையால்வந்ததுபோ

லும்; இப்பெயர் ஐயூர்கிழாரெனவும், உறையூர் முடவனாரெனவும் சில

பிரதிகளிலுள்ளது. இவர் நடந்துசெல்லுதற்கு இயலாத முடவராதலின்,

தாமான் தோன்றிக்கோனையடைந்து வண்டியிழுத்தற்குப் பகடுவேண்டு

மென்றபாடி, அவன் பகடுகளும் பலபசுநிரைகளும் ஊர்தியுங் கொடுக்கப்

பெற்றுவாழ்ந்தவர் ; இறந்தோருடம்பைத் தாழியாற்கவித்தலுண்டென்

பதும் வீரச்சிறப்பும் கொடைச்சிறப்பும் இவர்பாடல்களிற்காணப்படுகின்

றன. இவராற்பாடப்பட்டோர்: ஆதனெழினி, தாமான் தோன்றிக்கோன்,

சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், பாண்டியன் கூடகாரத்

துத் துஞ்சிய மாறன்வழுதியென்பார். "அறவ ரறவன் மறவர் மறவன்,

மள்ளர் மள்ளன் றுெல்லோர் மருகன், இசையிற் கொண்டான்''
என்பது

இவர் தாமான் தோன்றிக்கோனைப்பாராட்டிய பகுதி. இவர்
செய்தன

வாக, ௪௦ - செய்யுட்கள் தொகைநூலகளிற்காணப்படுகின்றன
(அகநா.

௧ ; குறுந், ௯; நற். ௨; புறநா. ௪.)
ஐயூர்முலங்கிழார்.—இவருக்கு இப்பெயர் மூலமென்னும் நாண்மீனுல்
வந்தது

போலும்; இவர்பாடலில் வேங்கைமார்பனென்னுந் தலைவனுற்
பாதுகாக்

கப்பட்டுள்ள கானப்பேரென்னுமூரில் அமைந்திருந்த அரணின்
அமைதி

கூறப்பெற்றுள்ளது; இவராற்பாடப்பட்டோன்
கானப்பேரெயில்கடந்த

உக்கிரப்பெருவழுதி. இவர்காலத்துப்புலவர்
அவ்வழுதியைப்பாடியவர்க

ளும் அவன் காலத்திருந்தவர்களுமாவார்.

ஒக்கூர்மாசாத்தனர்.—இவர்செய்யுளிற் கணவனையிழந்தமகளிர் புல்லரிசிக்கூழை அகாலத்திலுண்டு கைம்மைநோன்பு நோற்றிருத்தல் கூறப்பெற்றுள்ளது. இப்பெயர் எக்கூர்மாசாத்தனரென்றும் சிலபிரதிகளிற் காணப்படுகின்றது.

பாடினோர் வரலாறு

ஒக்கூர்மாசாத்தியார்:—இவர்செய்யுளில் ஒருமறக்குடிமகளின் வீரச்செயல் சிறப்பித்துப் பாராட்டப்பெற்றுள்ளது. இவர் செய்தனவாகக் கிடைத்த பாடல்கள் - ௯ (அகநா. ௩; குறுந். ௫; புறநா. ௧)

ஒருசிறைப்பெரியனார்:—இவர் நாஞ்சில்மலையின்வளத்தையும் அதன் தலைவனது இயல்பையும் பாராட்டியிருத்தல் அறிந்து இன்புறற்பாலது. இவர் பெயர் 'ஒருசிறைப்பெயரினர்', 'ஒருசிறைப்பெயரியனர்' என்று சில பிரதிகளிற் காணப்படுகின்றது. இவராற் பாடப்பட்டோன் நாஞ்சில்வள்ளுவனென்பான். இவர் இயற்றிய பாடல்கள் - ௩ (குறுந். ௧; நற். ௧; புறநா. ௧.)

ஒருஉத்தனார் :—இவர்செய்யுளில், ஒருவீரன் பகைவர் சேனையைத் தனியே நின்று தடுக்கும் மறச்செயலாகிய எருமைமறம் விளக்கப்பெற்றுள்ளது.

ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன் :—தென்னாட்டிலுள்ள பூதப்பாண்டியென்றுமோரூர்பண்டைக்காலத்தில் இவன்பெயரால் அமைக்கப்பெற்றது போலும். போர்க்களத்தில் இவன் கூறிய வஞ்சினவகைகள் அறியற்பாலன ; போரில் வல்லவன்; செய்யுள் செய்தலினும் திறமையுடையோன் ; இதனை இவன்பாடிய பாடல் புலப்படுத்தும் ; இவன்பெயர் பூதபாண்டியனெனவும் வழங்கும் ; இவன் கட்டினர்: மையலென்னும்

ஊரிலுள்ள மாவன், எயிலென்னுமூரிலுள்ளானாகிய ஆந்தை, அந்துவஞ்
சாத்தன், ஆதனழிசி, இயக்கனென்னுமிவர்கள். இவன் மனைவி, இவன்
இறந்தவுடனே தீயிற்பாய்ந்து இறந்தாள். இவன் இயற்றிய பாடல்கள்-
ச (அகநா. க; புறநா. ஈ)

ஓரம்போகியார் :—இப்பெயர் ஓரம்போதியாரென்றும், ஓரேர்போகியாரென்
றும் சிலபிரதிகளிலுள்ளது. இவர் ஐங்குறுநூற்றில் மருதத்தைப் பொரு
ளாகவுடைய முதலாம் நூறு இயற்றியஆசிரியர் ; மருதத்திணையில்
மிகப்பயின்றவர் ; அதன் வளங்களை விளங்கப்பாடுதலில் மிக்க ஆற்ற
லுடையவர் ; தமிழ் நாட்டரசர் மூவராலும் பிற உபகாரிகளாலும் நன்கு
மதிக்கப்பெற்றவர்; இவைகள் இவரியற்றிய செய்யுட்களால் நன்கு புலனா
கின்றன. எட்டுத்தொகையில இவர் இயற்றியனவாக கoஅ - செய்யுட்
கள் தெரிகின்றன (ஐங்குறு. மருதம் - கoo ; நற். உ ; குறுந். ச ;
அகநா. க ; புறநா. க.) இவற்றுள், கoசு - செய்யுட்கள் மருதத்திணை
யின்வளத்தையே புலப்படுத்துவன. இவராற்பாடப்பட்டோர் சேரமான்

இவருடைய இயற்பெயர் தெரியவில்லை. தம்முடைய செய்யுளில் இல்லறத்தை வெறுத்துக் கூறுதலின், இவர் துறவறத்தில் விருப்புடையாரென்று சொல்ல இடமுண்டு.

ஔவையார் :—இவர் அதியமான் நெடுமானஞ்சியிடம் அமுதமயமாகிய நெல்லிக்கனிபெற்று அவனைப்புகழ்ந்தார். இவர் அக்கனியைப்பெற்றமை இந்நூல் கக - ஆம் பாட்டினாலும், "பூங்கமல வாவிசூழ் புள்வேளூர்ப் பூதனைப், மாங்குவரும் பாற்பெண்ணை யாற்றினையு - மீங்கே, மறப்பித் தாய் வாழதிகா வன்கூற்றி னவை,யறப்பித்தாயாமலகந் தந்து'' என்னும் வெண்பாவாலும், 600-ஆம் திருக்குறளுக்குப் பரிமேலழகர், 'இனிய கனிகளென்றது ஔவையுண்ட நெல்லிக்கனிபோல் அமிழ்தாவனவற்றை' என்று எழுதிய விசேடவுரையாலும் வெளியாகின்றது. இவராற்பாடப் பட்டோர்: அதியமான் நெடுமானஞ்சி, தொண்டைமான், அதியமான் மகன் பொகுட்டெழினி, நாஞ்சில்வள்ளுவன், சேரமான்மாவெண்கோ, பாண்டியன் கானப்பேரெயில்கடந்த உக்கிரப்பெருவழுதி, சோழன்

இராச
சூயம்வேட்ட பெருநற்கிள்ளியென்பார். புறநானூற்றிலன்றி
இவரியற்றிய
பாடல்கள் நற்றிணையிலும், குறுந்தொகையிலும்,அகநானூற்றிலும்,
தொல்
காப்பியவுரையிலும்,யாப்பருங்கலவிருத்தியுரை முதலியவற்றிலும் காணப்
படுகின்றன. ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை,நல்வழி,
அசதிக்
கோவை முதலியன இவரியற்றிய நூல்களென்பர். இவர்
அவ்வச்சமயத்
துச் செய்தனவாக வுள்ள தனிப்பாடல்கள் மிகப்பல. பழையவுரை
நோக்கிக்
கூறு வார்போல, அதியமானெடுமானஞ்சியின் குணங்களை
இவர்பாராட்
டிக் கூறியிருக்கும் பகுதிகளும் அவனால் தூதனுப்பப்பட்டுச்
சென்றபொ
முது தன் மேம்பாட்டைப் புலப்படுத்தற்பொருட்டுத் தொண்டைமான் தன்
படைக்கலக்கொட்டிலைக் காட்டக்கண்டு அப்படைக்கலங்களைப் புகழ்வார்
போல அதியமானது போர்த்திறத்தை வெளிப்படுத்தியிருக்கும் பகுதியும்
மிக்க விம்மிதத்தை விளைவிக்கும். அதியமான் கோவலூரெறிந்ததனைப்
பரணர் பாடியதையும் (புறநா. கக) மூவேந்தரும் சேனைகளுடன்
பாரி
யை வெல்லக்கருதி அவன் நகரைச்சூழ்ந்து புகல்போக்கின்றித்
தடுத்த
போது பறவைகளால் நெற்கதிரைப் புறத்திருந்து வருவித்து
உள்நகரத்

தாரைப் பசியால் வருத்தாதபடி பாதுகாத்தளித்த கபிலர் செய்தியையும் (அகநா. ௩௰௩) பிரிவாற்றாது வருந்திய வெள்ளிவீதியாரென்னும் புலமைவாய்ந்த பெண்பாலாருடைய தன்மையிகுதியையும்(அகநா. ௧௪௭) புலப்படுத்தியிருத்தல் இவர் புலவரிடத்துப் பேரன்புடையராயிருத்தலை



விளக்குகின்றது; பழையனூர்க்காரிக்காகச்சென்று ஆடொன்று கேட்ட

போது சேரன் இவருடைய மேம்பாட்டை நினைந்து, பொன்னால் ஓர் ஆடு

செய்வித்து அளிக்க, இவர் அதனைப் பெற்று மனமகிழ்ந்து, "சேரா !

உன்னாடு பொன்னாடு (உன் நாடு பொன் நாடு)" என்று கூறினரென்றும்

அதனால் மலைநாடு இதுகாறும் சிறப்புற்று விளங்குகின்றதென்றும் ஒரு

செய்தி வழங்குகிறது. தம்முடைய கூற்றுக்களன்றிப் பாடியிரத்தற்குரிய விறலிமுதலியவர்களின் கூற்றுக்களாகவும் இவர்பாடியபாடல்கள் இந்

நூலிலும் பிறநூல்களிலும் காணப்படும். ஆராய்வோர், அதனைக்கொண்டு

இவரை விறலிமுதலியவர்களாக நினைந்துவிரைந்து முடிவுசெய்து பதித்து

விடுதல் மரபன்று; அங்ஙனம் பாடுதல் கவிமதமெனக்கொள்ளுதல்முறை;

பிறபுலவர்கள் பாடல்களிலும் இம்முறை காணப்படும்; ஆராய்ந்து

தெளிக; தொகைநூல்களில் இவர் பெயர் ஔவை யெனவும் வழங்கும்.

**கடலுண்மாய்ந்த இளம்பெருவழுதி:**—இவர் பாண்டியர் குடியிற் பிறந்தவர்;

வழுதியாரென்றபெயரே இதனைப் புலப்படுத்தும். பரிபாடலில் திரு

மாலுக்குரிய 15 - ஆம் பாடலையியற்றிய இளம்பெருவழுதியாரென்

பவரும் இவரும் ஒருவராகவே கருதப்படுகின்றனர் ; பரோபகாரச் செய்தி

கூறல் முதலியகருத்துக்களில் இருவர்பாடல்களும் ஒத்திருத்தலும்

பெயரொற்றுமையும் பிறவும் இங்ஙனம் கருதுவதற்கு இடமாகின்றன.

இளம்பிராயத்திலேயே பேரறிவினராக இருந்ததுபற்றி இவர் இப்பெயரை

அடைந்தனர்போலும் ; ஒரு பெரியார்க்குச் சிறுப்பேரியார் என முற்

காலத்திற் பெயர் வழங்கப்பெற்றிருத்தலும் இக்கருத்தை வலியுறுத்தும்.

'கடலுண்மாய்ந்த' என்னுமடை, இறந்தபின்பு இவருடையபெயரின்

முன்னர் அமைக்கப்பெற்றதென்பது சொல்லாமலே விளங்கும்; 'தஞ்சிய'
என்பதுபோல, சோலைமலையிலுள்ள திருமாலைப் பாடியிருத்தல்பற்றிச்
சமயத்தால் இவர் வைணவராகக் கருதப்பெறுகின்றனர். இவர்பாடிய
"உண்டாலம்ம" என்னும் இந்நூற்பாடல் சொல்லானும் பொருளானும்
மிக இனிமை வாய்ந்தது. இவருடைய ஏனை வரலாறுகள் பரிபாடற்
பதிப்பிற் பாடினோர் வரலாற்றிற் காணலாகும்.

**கண்ணகனர்** :—இவர் காலத்தவர் கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையார்,
பொத்தியார் முதலியோர்; பரிபாடலில் செவ்வேள்மேலதாகிய உக-ஆம்
செய்யுளுக்கு இசைவகுத்தவர் இவரே. இதனல், இவரை முருகக்கடவு
ளின் அடியவராகக் கருதுவதற்கிடமுண்டு. "என்றுஞ் சான்றோர் சான்
றோர் பால ராப, சாலார் சாலார் பாலரா குபவே" என்பது இவர் வாக்கிற்
சிறந்த பகுதி.

**கணியன்பூங்குன்றன்**:—கணியன் - சோதிடம்வல்லோன்; "வினைவெல்லாங்
கண்ணி யுரைப்பான் கணி" (பு.வெ. அ: உ0); பூங்குன்றமென்பது சிறு
நாடொன்றின் தலைநகர் (நாலடி. கஉ௮, உகஉ.) இவருக்கு இப்பெயர்

தொழிலாலும் இடத்தாலும் வந்ததுபோலும். இப்பெயர் கணிபுன்குன்
றனு ரெனவும் வழங்கும். இவராற் பாடப்பெற்றதும் அரிய பொருள்க
ளமைந்ததுமான 'யாதுமூரே' (புறநா. கசஉ) என்னுஞ் செய்யுள் படிக்
குந்தோறும் நினைக்குந்தோறும் எவருக்கும் மிக்க இன்பத்தை விளைவிக்கும் இயல்புவாய்ந்தது. நற்றிணையிலும் இவரியற்றிய பாடலொன்று உண்டு.

நதையங்கண்ணனார் :—இவருடைய பாட்டில், மயானத்தினியல்பும் அதன்
தொன்மையும் விளங்கக் கூறப்பெற்றுள்ளன ; " நெஞ்சமர் காதல
ரழுத கண்ணீ, ரென்புபடு சுடலை வெண்ணீ றவிப்ப, வெல்லார் புறமுங்
தான்கண் டுலகத்து, மன்பதைக் கெல்லாந் தானாய்த், தன்புறம் காண்
போர்க் காண்பறி யாதே" (புறநா. ௩௫௬: ௫-௧) என்பதைப் பார்க்க ;
"முன்புறந் தான்காணு மிவ்வுலகை யிவ்வுலகிற், றன்புறங் கண்டறி
வார் தாமில்லை - அன்பின், அழுதார்க ணீர்விடுத்த வாறுடிக்

கூடைத்,

கழுதார்க் கிரவழங்குக் காடு" (பு. வெ. ௧௦: ௬) என்னும் காடு வாழ்த்து மேற்கூறிய பகுதியை ஒத்து விளங்குதல் காண்க.

கபிலர்:—கபிலரென்னும் பெயருள்ள முனிவர் சிலருண்டு ; அவருள், எந்த முனிவருடைய பெயர் இவருக்கு இடப்பட்டதோ அது விளங்கவில்லை.

இவர்பிறந்தவூர் பாண்டிநாட்டிலுள்ள திருவாதவூர் ; இது, "நீதி மா மதூகநீழ * னெட்டிலை யிருப்பை யென்றோர், காதல் கூர் பனுவல் பாடுங் கபிலனார் பிறந்த மூதூர், சோதிசேர் வகுள நீழற் சிலம்பொலி துலங்கக் காட்டும், வேதநா யகனார்வாழும் வியன்திரு வாத வூரால்" (திருவால. ௨௭: ௪) என்பதனால் வெளியாகின்றது.

இவர் அந்தணவருணத்தினர் ; "யானே, பரிசிலன் மன்னு மந்தணன்", "யானே, தந்தை தோழ னிவரென் மகளிர், அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே" (புறநா.௨௦௦,௨௦௧) எனத் தம்மைப்புலப்படுத்தற்காக இவர் கூறியசெய்யுட்களும், "புலனழுக் கற்ற வந்தணாளன்" (புறநா.

கஉகு) என மாறோக்கத்து நப்பசலையார் இவரைப்பாராட்டிக்கூறியசெய்யு

ளும் இதனைப்புலப்படுத்தும். வேள்பாரியினுடைய உயிர்நண்பரும் அவனு

டைய அவைக்களத்துப்புலவருமாக இவர் விளங்கினர். தன் மகளிரை

மணஞ்செய்துகோடற்குத் தாம்விரும்பியபடி அவன் கொடாததுபற்றிச்

சினந்து தமிழ்நாட்டு மூவேந்தரும் பெரும்போர்செய்ய நினைந்து நால்

வகைச்சேனைகளோடும் அவன்மலையைச்சூழ்ந்தகாலையில் அவர்களைச் சிறி

தும் மதியாது அவனுடையஅருமைக்குணங்களைப்புலப்படுத்திப் பாடினர்;

---

* "கெட்டிலை யிருப்பை வட்ட வொண்பூ, வாடா தாயிற் பீடேடப் பிடி, யின், கோடேய்க் கும்மே வாடிலோ டைந்தலைப், பாதர் மனைதொறு முன்னர் 5, செந்தலை யிறவின் சேரேய்க் கும்மே".—இச்செய்யுள் தமிழ் நாவலர் சரிதையிற்கண்டது.

[redacted]

[illegible]செய்யுட்கள் இ[illegible], இவர் [illegible] மாருமுகிப் பல[illegible]வரை [illegible]சென்று மனஞ்செய்[illegible], விச்சி [illegible]வர்களைவேண்டி மறுத்[illegible] பின்பு [illegible]மகளிரைப்பார்ப்பார்க்குவாழ்க்[illegible]யுடைய கட் [illegible]டைக்கழித்தனர். ஆரியவரசன்[illegible]தற்குக் குறிஞ்சிப்பாட்டை இயற்றினர். [illegible]பொரு ளாகவுடையமூன்றும்நூறுஇயற்றியவர்[illegible] எ-ஆம் பத்தைப் பாடிச் சேரமான் செல்வக்[illegible]நூறுயிரம் காணமும் அவன் ஒருமலைமீதேறி[illegible] பரிசிலாகப் பெற்றனர். பதினென் கீழ்க்கணக்[illegible]நாற்பதும் கலித்தொகையில் இரண்டாவதாகிய குறிஞ்சி[illegible]ட்டாக்களும் இவரியற்றியனவே. இவர் குறிஞ்சித்[illegible]வரென்றும் அதன் வளங்களை விளக்கப்பாடுதலில் மிக்க [illegible] ரென்றும் இவரியற்றிய செய்யுட்கள் புலப்படுத்தும்; இவருடையசெய்யுட்கள் மிக்க இனிமையையுடையன; பழையவுரைகளில் உதாரணமாகக்காட்டப் படும் 'கபிலரதுபாட்டு' என்னும் தொடர்மொழியே இதனை வலியுறுத் தும்; இவரருளிச்செய்தனவாக உஎஅ -பாடல்கள் இப்பொழுது கிடைக் கின்றன. (நற். உ0; குறுந். உக; கலி. உக; ஐங்குறு. க00; பதிற். க0; அகநா. கஅ; புறநா. ஙO; குறிஞ். க; "நெட்டிலையிருப்பை" என் பது-க; திருவள். க; இன்னா நாற்பது,சக.) பன்னிருபாட்டியலில் இவர் செய்தனவாகச் சில சூத்திரங்கள் காணப்படுதலின் பாட்டியலொன்று இவர் செய்திருப்பதாகவுந் தெரிகிறது. இவருடையவாக்கில் விநாயகக் கடவுள், முருகக்கடவுள், சிவபெருமான், பலதேவர், திருமால் இவர்க ளுடைய துதிகள் வந்திருக்கின்றன. இதனால், இவர் சமயக் கோட்பாட்டிற் பாரதம்பாடிய பெருந்தேவனாரைப்போன்றவராக எண்ணப்படுகிறார்.

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு என்னும் முத்தொகைநூல்களிலும் இவருடையபாடல்களும் நூல்களும் கலந்திருத்தல் இவரது பெருமையை விளக்குகின்றது. "அரசவைபணிய அறம்புரிந்து வயங்கிய, மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவின், உவலைகூராக் கவலையி னெஞ்சி, னனவிற் பாடிய நல்லிசைக், கபிலன்" (பதிற். ௮௫) எனப் பெருங்குன்றூர் கிழாரும், "வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்" (புறநா. ௫௩) எனப் பொருந்தி லிளங்கீரனாரும், "புலனழுக்கற்ற அந்தணாளன், இரந்துசென் மாக்கட் கினியிடனின்றிப், பரந்திசை நிற்கப் பாடினன்", "பொய்யா நாவிற் கபிலன்" (புறநா. ௧௨௬, ௧௭௪) என மா

றோக்கத்து நப்பசலையாரும் பாடியவற்றைப்பார்க்கையில் இவருடைய அறம் வாக்குச் செயல்களின் தூய்மையும் அறம்புரி கொள்கையும் பெரும் புலமையும் அன்புடைமையும் நட்பின் பெருமையும் நன்கு விளங்குகின்றன.

## பாடினோர் வரலாறு. 29

இவராற் பாடப்பட்டோர்: அகுதை, இருங்கோவேள், ஓரி, சேரமான் செல்வக் கடுங்கோவாழியாதன், சேரமான் மாந்தரஞ்சேரலிரும் பொறை, நள்ளி, மலையமான் திருமுடிக்காரி, மலையன், விச்சிக்கோன், வேள்பாரி, வையாவிக்கோப் பெரும்பேகனென்பவர்கள். கொல்லிமலை, பறம்புநாடு, பறம்பு மலை, முள்ளூர்மலை, முள்ளூர்க்கானமென்பவைகள் இவரால் பாராட்டப் பெற்றிருத்தலின், அவைகள் இவர்காலத்தில் விளக்கமுற்றிருந்தனவென்றும் இவர் பழகிய இடங்களென்றும் தெரிகின்றன. நட்பு, வண்மை, நன்றிமறவாமை யென்பவைகளை இவருடைய செய்யுட்களிற் பார்க்கலாகும். பழையவிலக்கண உரைகளில் வந்துள்ள 'கபிலபரணர்'

என்பதனுல், பரணரென்பவருக்கும் " பின்னயில் கபிலன் றேழன்
பெயரிடைக் காட னென்போன்" (திருவால. ௨௦ : க) என்னும் திரு
விருத்தத்தால், இடைக்காடருக்கும் சிறந்தநட்பினராக இவர் எண்ணப்
படுகிறார். இவர் வேறு ; தொகை நூல்களிற் காணப்படும் தொல்கபில
ரென்பவர் வேறு. வீரசோழியம், தொகைப்படலம், ௬ - ஆம் கட்டளைக்
கலித்துறையுரையால், பரணருடன் இவர் வாதுசெய்தனரென்பது வெளி
யாகின்றது. கக - ஆம் திருமுறையில் வந்துள்ள மூத்தநாயனுர் திரு
விரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவிரட்டைமணிமாலை, சிவ
பெருமான் திருவந்தாதி யென்னும் பிரபந்தங்கள் மூன்றையும் அருளிச்
செய்த கபிலதேவநாயனுரென்பவர் இவரேயென்றுபெரியோர் கூறுவர்.

மேற்கூறிய திருவிளையாடற்புராணத்தில், இடைக்காடன்பிணக்குத்தீர்த்த
திருவிளையாடல், கக-ஆம் திருவிருத்தத்தில், "எனையர்தாதி சொன்னவன்

கபிலன்'' எனச் சிவபெருமான் கட்டளையிட்டருளியதாக வந்திருத்தல்

காண்க. 'முதலிற் கூறுஞ்சினையறிகிளவி' என்னும் தொல்காப்பியச் சூத்

திரத்துக்கு இளம்பூரணரும் சேனாவரையரும் எழுதிய உரையால் கபிலராற் செய்யப்பெற்றுக் கபிலமென்னும் பெயரியதொரு நூலிருந்ததாகத் தெரிகிறது.

கயமனார்:—உப்பங்கழியில் மலர்ந்த கருநெய்தற்பூ நீர் பெருகுந்தோறும் கயத்தில் முழுகும் மகளிருடைய கண்களை யொத்துத்தோன்றுமென்று, "யாயாகியளே" (குறுந். ௯) என்னுஞ்செய்யுளில் இவர் மொழிந்திருத்தலின், இவர்க்கு இப்பெயர் அமைக்கப்பெற்றதுபோலும்; கயம் - நீர் நிறைந்த பள்ளம். இந்நூலுள் போரிலிறந்த மகனுடைய பிரிவாற்றாது வருந்தும் நற்றாயினியல்பைப் புலப்படுத்தி, "என்மகன், வளனுஞ்செம்மலு மெமக்கென நாளு, மானுது புகழு மன்னே, யாங்கா குவன்கொ லளிய டானே" (உ௫௪) எனக் கண்டோர் கூறியதாக இவர் பாடியிருக்கும் கயம் படிப்பவர் மனத்தைக் கனிவிக்கும்; வேறு தொகை நூல்களிலும் இவருடையபாடல்கள் பலகாணப்படுகின்றன (அகநா. குறுந். நற்.)

கருங்குழலாதனார்:—இவர் சோழன் கரிகாற்பெருவளத்தானிறந்த பின்பு அவன் பிரிவாற்றாது வருந்துதல் வாயிலாக அவனுடைய குணவிசேடங்



களையும் அரிய செயல்களையும் அவனுரிமைமகளிர் அருங்கலமுதலிய

வற்றைக் களைந்ததனையுங் கூறியிருக்கின்றனர்.

**கருவூர்க்கதப்பிள்ளை**:—இவருடையவூர் கருவூர். இவராற் பாடப்பட்டோன் பாண்டியனுடையவீரனும் கந்தனென்னும் பெயரினனுமாகிய நாஞ்சில்வள்ளுவனென்பான். இவர்பாடலால் அவனுடைய வண்மையும் வீரமும் நாஞ்சில்மலையின்வளனும் புலனாகின்றன; "தப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் செய்மைய, னட்பெதிர்ந் தோர்க்கே யங்கை நண்மையன்" என்பது இவர் அவனைப்பாராட்டியபகுதி. இவர்செய்த பாடல்கள் - ௩ (குறுந். உ; புறநா. க.) கருவூர்க் கந்தப்பிள்ளையெனவும் இப்பெயர் காணப்படுகின்றது; பண்டைக்காலத்தும் தெய்வப்பெயரை மனிதர்க்குஇட்டுவழங்குதல் மரபாகத்தெரிதலாலும், பிள்ளைக்கந்தன், பிள்ளைப்பெருங்கந்தனென்று வேறுதொகைநூல்களிற் புலவர்கள் பெயர்காணப்படுதலாலும் இப்பாடமும் பொருத்தமுடையதென்றே தோற்றுகிறது.

**கருவூர்க்கதப்பிள்ளைசாத்தனார்**:—இப்பெயர் கருவூர்க்கந்தப்பிள்ளைசாத்தனாரெனவும் காணப்படுகின்றது. இவருடையவூர் கருவூர். சாத்தனாரென்பது இவரது இயற்பெயர். 'கதப்பிள்ளை' என்பவர் இவருடைய தந்தை. சேரன் சேனாதிபதியும் குதிரைமலைத்தலைவனுமாகிய பிட்டங்கொற்றனைநோக்கி, "பாடுபவென்ப பரிசிலர் நாளும், ஈயா மன்னர் நாண, வீயாது

பரத்தனின்

வசையில் வான்புகழே'' (கசுஅ) என்று பாடியுள்ளார் ; இப்பாடலிற்

குதிரைமலையிலுள்ள குறவர்களின் இயல்பு நன்கு கூறப்பெற்றுள்ளது;

ஏனைத்தொகைநூல்களிலும் இவர் செய்யுட்கள்உள்ளன (அகநா. க ;

குறுந். க; நற். க.)

**கருவூர்ப்பெருஞ்சதுக்கத்துப்பூதநாதனார்**:--சதுக்கம்-நான்குதெருக்கள் கூடு

மிடம்; அங்கேயுள்ள தெய்வமாகிய ஒருபூதத்தின் பெயர் இவர்க்கு எய்தி

யதுபோலும்; கருவூரிற் சதுக்கப்பூதமொன்றிருந்தமை, ''சதுக்கப்பூதரை

வஞ்சியுட் டந்து, மதுக்கொள் வேள்வி வேட்டோ னாயினும்'' (சிலப்.

உஅ : கசஎ - அ) என்பதனால் அறியலாகும் ; வஞ்சி - கருவூர். முசு

குந்தனுக்குத் துணையாக இந்திரனால் அனுப்பப்பட்ட பூதமொன்று கா

விரிப்பூம்பட்டினத்திற் சதுக்கத்திலிருந்து அங்கரைப்பாதுகாத்து வந்த

தாகச் சிலப்பதிகாரமுதலியவற்றால் தெரியவருகின்றது. துறவுபூண்

டிருந்த கோப்பெருஞ் சோழனைநோக்கி மனமுருகிப்பாடியவர்களுள் இவ

ரொருவர்.

கல்லாடனுர் :—கல்லாடமென்றவூரிலுள்ளவராதலின் இவர் இப்பெயர்

பெற்றார்போலும்; "கல்லாடத்துக் கலந்தினிதருளி" (திருவா. கீர்த்தி.)

என்பதை நோக்குக. தொல்காப்பியத்திற்கு இவர் ஒருரை செய்தாரென்று

கூறுவர். "ஒல்காப் பெருமை தொல்காப்பியத்திற் குரையிடையிட்ட

விரகர்கல் லாடர்" என்னும் ஆன்றோர் வாக்காலுணர்க. இவருடைய பா



டல்களில் பகைவருடைய நீர்நிலையைக் கெடுத்தல் கடிமரந்தடிதல் அவர்

முரசைக் கைக்கொள்ளல் முதலிய தலைவர்களின் வீரச் செயல்களும்

பகைவிறந்தபின் அவருடைய மனைவிமார் கைம்மை நோன்பு நோற்றிருத்

தலும் கூறப்பெற்றுள்ளன. இவர் வினைப்பொருளைத் தம்மைக் காட்டி

அவன் செயல்களை முறையே சொல்லிச் செல்லும் மறக்களவழி ஏர்க்கள

வுருவகமென்னுந் துறைகளும் மிக்க நயப்பாடுடையன. பகைவரைக்

கொன்றவிடத்து அவருடைய பெண்டிர் தம் இளம்புதல்வரைப் பாது
காத்தற் பொருட்டுத் தாம் இறந்துபடாமல் இலைகளைத் தின்று உயிர்
வாழ்கின்றமையைப் புலப்படுத்தற்கு " அறமருப் பெழிற்கலை புலிப்பாற்
பட்டெனச், சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை, பூளைநீடிய வெரு
வரு பறந்தலை, வேளை வெண்பூக்கறிக்கும்" (உகூ) என இவர் கூறி
யிருத்தல் யாருடையமனத்தையுங் கனியச்செய்யும். கக-ஆம் திருமுறையி
லுள்ள திருகண்ணப்பதேவர் திருமறமென்னும் நூலொன்று இவர்
செய்ததாகக் கூறுவர். பன்னிரு பாட்டியலில் இவர் செய்தனவாகச் சில
சூத்திரங்கள் காணப்படுகின்றனவாதலால் இவராற் செய்யப்பட்டபாட்
டியலொன்றுள்ளதென்று தெரிகிறது. இலக்கணவுரைகளில் கல்லாட
மாமூலரென்று ஒரு தொடர்மொழி காணப்படுதலால் மாமூலரென்னும்
புலவரோடு இவர் நட்புடையவரென்று சொல்லலாம். இவரியற்றிய
பாடல்கள்-கசு (அகநா. எ; குறுந். உ; திருவள். க; திருக்கண்ணப்பர்.

க ; புறநா. ரு.) இவராற் பாடப்பெற்றோர் :
அம்பர்கிழானருவந்தை,

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்,
புல்லி,

பொறையாற்றுகிழானென்பார்.

கழாத்தலையார்:—கழாத்தலை - ஓரூர், இவர் , சேரமான்குடக்கோநெடுஞ்சேரலாதனும் சோழன் வேற் பஃறடைக்கைப் பெருநற்கிள்ளியும் போர்ப் புறத்துப்பொருது வீழ்ந்து இறந்தது கண்டு மனம்வருந்திப் பாடினர்; இருங்கோவேளின் முன்னோரில் ஒருவன் இவரை
இகழ்ந்தமையால்

அவனது நகரமாகிய அரையமென்பது அழிவுற்றதென்று கபிலர் பாடியிருத்தலின், இவர் மேம்பாடு விளங்குகின்றது (உ0உ); இதனால், இவர் கபிலருக்குக் காலத்தால் முற்பட்டவரென்று தெரிகிறது. இவர் கூறும் உவமைகள் மிக அழகுவாய்ந்தவை. இவராற்பாடப்பட்டோர் மேற்

கூறிய அரசரும் சேரமான்பெருஞ்சேரலாதனுமாவர்.

கழைதின்யானையார்:—இவர் மிக்கதைரியமும் கம்பீரமுமுடையவர். "ஈயென விரத்த லிழிந்தன் றதனெதிர், ஈயே னென்றலதனினு மிழிந்தன்று, கொள் ளெனக் கொடுத்த லுயர்ந்தன் றதனெதிர் கொள்ளே னென்ற லதனினு முயர்ந்தன்று" என்பது இவருடைய வாக்கிற் சிறந்த பகுதி. இவராற் பாடப்பட்டோன் வல்விலோரி.

கள்ளில்ஆத்திரையனார் :—கள்ளில் - ஓரூர்; இது தொண்டைநாட்டிலுள்ளதும் தேவாரம் பெற்றதுமான ஒரு சிவஸ்தலம். ஆத்திரையன் - அத்திரி

குடியிற் பிறந்தவன்; இவர்க்கு இப்பெயர் குடிப்பெயர்; இதனுல் இவர் அந்தணராகக் கருதப்படுகிருர்; குறுந்தொகையில் இவர் பாட்டில் வந்துள்ள 'கள்ளில்' என்பது இவர் பெயர்க்காரணமென்பதற்குப் பொருத்தமின்று. நன்றியறிவுமுதலிய உத்தமகுணத்தினர். இவரால் பாடப்பட்டோர்; வேங்கடமலைக்குரிய தலைவனுகிய ஆதனுங்கனும், ஆதியருமனும், முதியனுமாவர். இவர் செய்த பாடல்கள் - ௬ (குறுந். க; புறநா. உ.)

காக்கைபாடினியார் நச்செள்ளையார் :—இவர் பெண்பாலார். ஆடுகோட்பாட்டுச் சேரலாதனென்னும் அரசன்மீது பதிற்றுப்பத்துள் ஆரும்பத்தைப்பாடி, அணிகலனுக்கென்று ஒன்பதுதுலாம் பொன்னும், நூருயிரம் பொற்காசும் பரிசுபெற்றவர்; நச்செள்ளையாரென்பது இவரது இயற்பெயரென்றும் குறுந்தொகையில், "திண்டேர் நள்ளி கானத் தண்டர், பலலா பயந்த நெய்யிற்றொண்டி, முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோ றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி, பெருந்தோ ணெகிழ்த்த

செல்வற்கு,விருந்துவரக் கரைந்த
காக்கையதுபலியே'' என்னும் உ௰0-ஆம்

பாட்டில், காக்கை கரைந்தமையைப் பாராட்டிக்கூறிய
அருமைபற்றிக்

காக்கைபாடினியாரென்ற சிறப்புப்பெயரைப்
பிற்காலத்திலான்றோரால்

இவர்பெற்றனரென்றும் தெரிகின்றன; பாடினி-பாடுபவள்.சென்னையென்
பது பெண்பாலார்க்கு இயற்பெயராகப் பண்டைக்காலத்து வழங்கிவந்தது

போலும்; பதிற்.௬-ம்
பத்தின்பதிகத்தில்மையூர்கிழானுடையமனைவியின்

பெயர் அந்துவஞ்செள்ளையென்று வந்திருத்தல்காண்க. மறக்குடி
மக்கை

யின் இயல்பைவிளக்கி இவர்பாடிய "படுமகன் கிடக்கை காணூஉ,
யீன்ற

ஞான்றினும் பெரிதுவக் தனளே" என்னும் உஎ௮-ஆம்
புறப்பாட்டும்

அப்பாடல் ஒக்கூர்மாசாத்தியார்என்னும் பெண்பாலாருடைய
பாக்களின்

வரிசையிற் சேர்க்கப் பெற்றிருத்தலும் இவர் பெண்பாலாராதலை
வலி

யுறுத்தும் ; 'ந' என்பது சிறப்புப் பொருளைத்
தருவதோரிடைச்சொல்.

'கலனணிக' என்று அரசன் பொற்காசு முதலியன கொடுத்தானென்றது
ஈண்டு அறியற்பாலது. இப்பெயர் சில பிரதிகளில் காக்கைபாடினியார்
நச்சென்னை யாரெனவும் காணப்படுகின்றது.

காரிகிழார் :—இவர் வேளாளர் ; இவருக்கு இப்பெயர் ஊரால் வந்தது ;
காரியென்பது தொண்டை நாட்டிலுள்ளதோரூர்; இப்பொழுது இராமகிரி யென்று வழங்கப்படுகின்றது; "பணியிய ரத்தைநின் குடையே முனிவர், முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே" என்று அரசனை நோக்கிக் கூறியதனால், இவர் பரமசிவனை வழிபடுபவரென்று தெரிகின்றது; இவருடைய செவியறிவுறூஉவை உற்றுநோக்குங்கால் வைதிக வொழுக்கிற் சிறந்தவராகக் கருதப்படுகின்றனர் ; இவருடைய சிவநேயத்தையும் பெயரையும் பார்க்கும்பொழுது, பெரியபுராணத்துக் கூறப்படும் காரிநாயனார், திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணத்தில், இஃ'-



ஆம் திருவிளையாடலில் வந்துள்ள காரியாரென்பவர்களுடைய ஞாபகம் வருகின்றது. இவரால் பாடப்பட்டோன் பாண்டியன் பல்யாகசாலை

முதுகுடுமிப் பெருவழுதி.

ாவட்டனுர் :—இப்பெயர் கானட்டனுரெனவும் வழங்கும் ; இவர் பாடலில் வந்துள்ள 'வசைபுகிற்கு மிசைபுகிற்கும்' என்பது முதலிய அரிய வாக்கியங்கள் அறிந்து கொடற்பாலன; இவர் செய்த பாடல்கள் - உ (அகநா. க; புறநா. க,) இவரால் பாடப்பட்டோன் அந்துவன்கீரன்.

காவற்பெண்டு :— இவர் சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியின் செவிலித்தாயென்று தெரிகிறது. காவற்பெண்டு - செவிலித்தாய். இவர் பெயர் காதற்பெண்டு எனவுங்காணப்படுகின்றது; தம் மகன் போர்செய்தற்குச்சென்றுனென்னும்பகுதி இவர் வீரக்குடியிற் பிறந்தவரென்பதைப் புலப்படுத்துகின்றது.

காவிரிப்பூம்பட்டினத்துக்காரிக்கண்ணனுர் :—இப்பெயர் காரிக்கண்ணனு ரெனவும் வழங்கும்; இவர்க்கு இப்பெயர் உறுப்பான் வந்ததுபோலும் ; காரி-கரிக்குருவி; இவர் வணிகர்; இதனை "வரும்பெரும்" (தொல். மரபு. சூ. எசு - பேரா) என்பதன் விசேடவுரையாலுணர்க; இவர் வாக்கிற் காவிரி கடலொடு கலக்கும் சங்கமுகத்துறை கூறப்பெற்றுள்ளது

(அகநா. கஉங.) பாண்டியனுக்குத் திருமாலையும் அப் பாண்டியனும்

சோழனும் ஒருங்கிருந்தபொழுது அவர்க்குக் கண்ணன் பலதேவரிருவரை

யும் உவமை கூறியிருத்தலின், இவர் திருமாலடியவராகக் கருதப்படுகின் றனர். மேற்கூறிய அரசர்க்கு ஒற்றுமையுடன் வாழவேண்டுமென்று இவர் கூறும் பகுதியும் பிறவும் மிக்க இன்பத்தைத் தருவன. அயனே திருவள் ளுவராகவந்து திருக்குறளைத் தந்தானென்றதனால், அந்நூலின்பால் இவர்க்குள்ள நன்மதிப்பு வெளியாகும். இவரால் பாடப்பட்டோர் சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன், பாண்டியன் இல வந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, பிட்டங்கொற்றனென்பார். இவரியற்றிய பாடல் கள் - கூ (அகநா. உ ; குறுந். க ; திருவள். க ; புறநா. ரு.)

குட்டுவன்கீரனார்:—குட்டுவன் - குட்டநாட்டிலுள்ளவன்; கீரனென்பது இவ ரது இயற்பெயர். கீரனென்னும் பெயருள்ளபுலவர் சிலரிருத்தலின் இவர் பெயர்க்குத் தேயப்பெயரை அடைமொழியாக்கினர் போலும்; சிறந்தவுபகாரியாகிய ஆய்அண்டிரன் தன் உரிமை மகளிரோடு தேவலோ கத்தையடைந்தமையால் புலவர்கள் மிக்க பசியையுடையவர்களாய் அயல்நாடு செல்லுகின்றார்களென்று வருந்திக் கூறியிருத்தலின் இவர் அவனிறந்தபின்பும் இருந்தவரென்று தெரிகின்றது.

குடபுலவியனார் :—போர்க்களத்தின் இயல்பைப் பாடுதலில் இவர் மிக்க ஆற் றலையுடையவர் ; சினவாதபடி அரசனுக்கு இவர் தருமங்களைக் கூறு

[illegible] யாரும் கற்றக்கோடற்குரியதே. "[illegible]" என்பது இவர்வாக்கு. இவரால் பாடப்பட்டோர்: [illegible] நெடுஞ்செழியன் ; இவர்காலத்துப்புலவர்: அகம்பாடிய கல்லாடர் முதலியோர்.

**குடவாயிற் கீரத்தனர்:**—குடவாயிலென்பது சோழநாட்டிலுள்ளதும் சோழர்களின் தலைநகராகவிருந்ததும் தேவாரம்பெற்ற சிவஸ்தலமுமான ஓரூர்; "தண்குட வாயி லன்னேள்", "கொற்றச் சோழர் குடந்தை வைத்த, நாடுதரு நிதியினுஞ் செறிய, வருங்கடிப் படுக்குவன்" (அகநா. சச, ௬௦), "தேர்வண் சோழர் குடந்தை வாயில்" (நற். ௩௭௯) என்பவற்றால் அவ்வூரின் பெருமையை இவர் புலப்படுத்தியிருக்கின்றனர்; புலவர்கள் தம்மூர்ப்பெயர் முதலியவற்றை ஒருவகையாகத் தம்முடையபாடல்களில் தெரிவித்தல் மரபு; ஒல்லையூர்கிழான்மகன் பெருஞ்சாத்தனிறந்தபின்பு அவனுடையவண்மையைப் பாராட்டியும் இரவலர்வருந்துதலை ஒருவகையாகப் புலப்படுத்தியும் இவர்பாடிய செய்யுள் படிப்பவருள்ளத்தை உருகச்செய்யும்; இன்னும் சேரனுடைய தொண்டி, பாண்டியரின் கூடனகர், கொற்கைத்துறை, சோழரின் உறையூரென்பவை இவர் பாடலிற் பாராட்டப் பெற்றிருத்தலின், மேற்கூறிய பெருஞ்சாத்தனையன்றிச் சேரர்முதலிய முடிமன்னர் மூவராலும் நன்னனாலும் இவர் ஆதரிக்கப் பெற்றவரென்று தெரிகின்றது; பெரும்பாலும் இவர் பாடல்களில் வந்துள்ளது பாலைத்திணை; இவரியற்றியபாடல்கள் - ௧௮ (அகநா. ௧0; குறுந். ௩;

நற். ச; புறநா, ௧.)

**குன்றுகட்பாலியாதன்:**—குன்றுகண் - ஆழமானகண்; பாலி - ஓரூர்;

இவர்க்கு இப்பெயர் சினையாலும் இடத்தாலும் வந்தது; பகைவர் தருக்

தோள் நல்லும், பிறர்கை யறவு தாளு லுதலும், படைப்பழி தாரா மைந் தினலுதலும், வேந்தலை யவைத் தோங்குப நடத்தலும்,..........

என்றக்குத் தருமே'' என அச்செய்யுளில் இவர் விதந்திருக்கும் அவ னுடைய அருமைக்குணங்கள் அறிதற்பாலன.

குறுங்கோழியூர் கிழார்.—இவர் வேளாளர்; சேனைய
இவர்வருணித்தல்மிக
அழகிது; இவராற்பாடப்பட்டோன் யானைக்கட்சேய்
மாந்தரஞ்சேரலிரும்
பொறையென்னுஞ்சேரவரசன்;போரிற்
பாண்டியன் தலையாலங்கானத்துச்
செருவென்ற நெடுஞ்செழியனாற் பிணிபுண்டு அவன் அப்பால
அப்பிணிப்
பைத் தானே நீக்கிக்கொண்டுசென்று சிங்காதனத்திலேறிய
வரலாறும்,
அச்சோனுடையவீரமும், செங்கோன்முறைமையும் இவரால
கன்குகூறப்
பெற்றுள்ளன; இவர்பெயர் குறுங்கோளியூர்கிழாரெனவும்
வழங்கும் ;
இவர் பாடல்களுட் சிறந்தபகுதிகளின் கருத்துக்கள்வருமாறு:—
(க) அரச ! ஐம்பூதங்களை அளந்தறிந்தாலும் அறியலாகும்;
உன்னுடைய
அறிவுமுதலியன அளந்தறிதற்கரியன ;
(உ) சோற்றைஅக்குந்தீயாலும் வெயிலாலுமுண்டாகும்
வெம்மையை
யன்றி உன்குடைநிழலில வாழ்வோர்க்கு வேறு

வெம்மையில்லை;

(௩) இந்திரவில்லையன்றி வேறுகொலைவில்லையும் கலப்படையையன்றிவேறு

படைக்கலங்களையும் உன்நாட்டார் அறியார் ;

(௪) வயாவுற்ற மகளிர் விரும்பியுணபாரேயன்றிப பகைவர் நின்மண்ணை ஒருபொழுதும் நுகரார் ;

(௫) உன்னைப்பாடியநா வேறொருவரையும் பாடாதபடி வண்மையை உடையாய் நீ ;

கொடுக்கும்

(௬) எல்லாவகையாலும் உன்னாடு தேவருலகம் போல்வது.

குன்றூர்கிழார் மகனார்.—இவர் வேளாளர்; நீர் நிறைந்த வயல்களினிடையே யுள்ள ஓரூரின் மதிலுக்குக் கடலினிடையேயுள்ள புறமூலாக்கப்பலை உவமை கூறியிருக்கின்றனர். இவராற்பாடப்பட்டோன் போக்கையென்

னும் நகரின் தலைவனான நெடுவேளாதனென்பான்.

கூகைக்கோழியார்—மயானத்தின் இயல்பைக் கூறுகையிற் பழைய மரங்களின் பொந்திற் பிறர் திடுக்கிடும்படி சுட்டுக்குவியென்று ஒலித்துக் கொண்டிருக்கும் கூகை கோழிகள் நீங்காதது அஃதென்பதைப் புலப்படுத்தி, "முதுமரப் பொந்திற் கதுமென வியம்புங், கூகைக் கோழி யானாத், தாழிய பெருங்காடு" (௩௬௪) என்றமையின், இவர்க்கு இப் பெயர் இடப்பட்டதென்று தெரிகின்றது.

கூடலூர்கிழார் :—இவர் மலைநாட்டின்கண்ணதாகிய கூடலூரை இருப்பிடமாக உடையவர்; வேளாண்மரபினர்; இவருடைய பாடல்கள்மிக்க இன்சுவையைத் தருபவை; ஒரு விண்மீன் வீழ்ச்சியைக்கண்டு கோச்சேர

மான் யானைக்கட் சேய்மாந்தரஞ்சேரலிரும்பொறையென்னும் அரசன் இன்னநாளில் இறப்பானென்று முதலில் தெரிந்திருந்து அவ்வாறே அவன் இறந்ததுகண்டு ஒருவாற்றானும் பிரிவாற்றாது வருந்தினரென்று, "ஆடியலழற்குட்டத்து" (உ௨௯) என்னும் பாட்டானும் அதன்பின்னுள்ள வாக்கியங்களானும் தெரிதலால், இவர் கணிதத்திலும் வல்லவராகக்கருதப் படுகிறார்; இவர் மேற்கூறிய அரசனால் மிக ஆதரிக்கப்பெற்றவர்; அவன் வேண்டுகோளால் ஐங்குறுநூறு தொகுத்தவர் இவரே; 'புலத்துறைமுற்றிய கூடலூர்கிழார்' (ஐங்குறுநூற்றின் இறுதிவாக்கியத்துள்ளது) என ஆன்றோராற் சிறப்பித்துக் கூறப்பெற்றிருத்தலின், இவருடைய பெரும் புலமை நன்கு வெளியாகின்றது; இவர் காலத்துப்புலவர்கள் குறுங் கோழியூர் கிழார், பொருந்திலிளங்கீரனாரென்பவர்கள். * முதுமொழிக் காஞ்சியை இயற்றிய மதுரைக்கூடலூர் கிழாரென்பவர் வேறு; இவர் வேறு. இவரியற்றிய பாடல்கள் - ௪ (குறுந். ௩; புறநா. ௧.)

கோடைபாடிய பேரும்பூதனர்:—பெரும்பூதனாரென்பது இவரது இயற்

பெயர்; கோடைமலையையோ கோடைக்காலத்தையோ நன்கு பாடிய

இவருடைய ஆற்றலுடைமையைக் கண்டு 'கோடைபாடிய' என்னும் அடைமொழியை இவர்பெயர்க்கு முன்பு ஆன்றோர் அமைத்தார்போலும்; ''முருகு மெய்ப்பட்ட புலைத்தி போலத்,தாவுபு தெறிக்குமான்'' (உருக) என்பது இவர் பாடலிற் காணப்படுதலால், முருகக்கடவுளின் ஆவேசங் கொண்டு மகளிர் ஆடும் வழக்கம் பண்டைக்காலத்தில் உண்டென்று

தெரிகின்றது.

**கோதமனார்**:—இவர்பெயர் கௌதமனாரெனவும், பாலைக் கௌதமனாரெனவும் வழங்கும் ; இவர் அந்தணர். பதிற்றுப்பத்தில் ந - ஆம்பத்தைப் பாடி இவர் இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவனாற் சுவர்க்கம் பெற்றார் ; இதனை, ''பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார் பாடினார் பத்துப்பாட்டு...பாடிப்பெற்ற பரிசில் : 'நீர் வேண்டியது கொண்மின்' என, 'யானும் என்பார்ப்பனியும் சுவர்க்கம்புகவேண்டும்' என, பார்ப்பாரிற் பெரியோரைக் கேட்டுப் பெருவேள்வி வேட்பிக்கப் பத்

தாம்பெரு வேள்வியிற் பார்ப்பானையும் பாரப்பனியையுங்

காணாராயினார் ''

(பதிற்.ந-ஆம்பத்தின் இறுதிக்கட்டுரை)

என்பதனாலும்,''பாடாண்டிணை

யே'' (தொல். புறத்திணை. சூ. உரு-ந.) என்பதன்

விசேடவுரையாலும்,

''சேரன் குட்டுவன்புகழைச்செய்யுளாகத் தொடுத்த

கௌதமனென்னும்

பெரிய புலவன், 'யானும் என்சுற்றமும் துறக்கம்புகும்படி

பொருந்திய

அறங்களை முடித்துத் துறக்கத்தைத்தா' என்றற்கு,

அவன்சொற்குறை

தீர்ப்பான் பொருட்டு உலகது யாகங்களை நடத்தி, 'நீவேண்டிய துறக்கத்

தின் கண் நீவோழ்வாயாக' என்றான் ; ஆதலாற்புனைந்து இப்பெற்றியா

ரென்று புகழவேண்டுவதில்லை; இயற்கையாகக்கொடுக்கும் சீலத்தார் தம்

மனவினும் கொடுக்கவல்லதனைத் தாமே அறிந்துகொடுப்பார்" (பழ.நக்க-



பழையவுரை) என்பதனானுமுணர்க. " ஒருதா மாகிய பெருமையோருந், தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே ", "அறவோன் மகனே மறவோர் செம்மால்", "நின்னாற்றம் பிறரறியாது, பிறர்கூறிய மொழிதெரியா, ஞாயிற்றெல்லை யாள்வினைக்குதவி, யிரவி னெல்லை வருவது காடி ", "உழ வொழி பெரும்பக டழிதின் றாங்கு ", "அவிழ்வேண்டுகோர்க் கிடையருளி" என்பன்வை இவர்வாக்கிற் சிறந்தபகுதிகள்.

கோப்பெருஞ்சோழன்:—"செய்குவங்கொல்லோ நல்வினை யெனவே, யைய

மறுஅர் கசடீண்டு காட்சி, நீங்கா நெஞ்சத்துத் துணிவில் லோரே", "பிசி

ரோ னென்பவென் னுயிரோம் புநனே, செல்வக் காலை நிற்பினு, மல்லற்

காலை நில்லலன்" என்பவை இந்நூலுள் இவன் பாடல்களிற்

சிறந்த
பகுதிகள். இவரும் பாடப்பட்டோர் பிசிராந்தையார்.
இவரியற்றிய
பாடல்கள் - ௭ (குறுந். ௪; புறநா. உகசு - கூ.) இவருடைய
பிறவர
லாற்றைப் பாடப்பட்டோர் வரிசையிற் காண்க.

**கோவூர்கிழார்** :—இவர் வேளாண்மரபினர் ; சோழபரம்பரையோரால்
ஆத
ரிக்கப் பெற்றவர் ; நன்றியறிவுள்ளவர் ; பிறருடைய சிறப்பைத்
தனித்
தனிற் கண்ணுங்கருத்துமாக விருந்துவாழ்ந்தவர் ; யாரும் மன
வொற்றுமை
யுடன் இருக்க வேண்டுமென்பது இவரது கொள்கை. களநூல்,
சோ
திடநூல், இசைநூ லென்பவற்றில் வல்லுநர் ; உவமை கூறுதலிலும்
உப
காரிகளின் குணங்களைப் பாராட்டுதலிலும் வீரச்செயல்களை
விளக்குதலி
லும் மிக்க ஆற்றல் வாய்ந்தவர் ; அஞ்சாநெஞ்சினர். இவை
இவருடைய
பாடற்பகுதிகளால் நன்குவிளங்கும். சோழர்களுள், நலங்கிள்ளி
யென்

பவன் ஒருகாலத்தில் ஆவூரையும் ஒருகாலத்தில் உறையூரையு முற்றி யிருந்தபொழுது அவ்வக்காலத்தில் அடைத்துக்கொண்டு அக்நகரங்களுக் குள்ளே அஞ்சியிருந்த நெடுங்கிள்ளியைநோக்கி, வெளியேவந்து போர் செய்தல், ஒற்றுமையுடன் வாழ்தல் இந்த இரண்டனுள் ஒன்றைச்செய்து கொள்க வென்று இடித்துக்கூறிய பகுதியும் (௪௪ - ௫), நலங்கிள்ளி யிடத்திருந்து உறையூர்க்குவந்த இளந்தத்த னென்னும் புலவனை ஒற்று வந்தானென்று நெடுங்கிள்ளி கொல்லத் தொடங்கிய விடத்து அப்புலவனை உய்வித்தற் பொருட்டுப் பொதுவாகப் புலவர்களினியல்பை விதந்து கூறிய பகுதியும் (௪௭), மலையமான் மக்களைக் கிள்ளிவளவன் யானைக்கு இடத் துணிந்தபொழுது அவர்களை உய்விக்கவும் அவனுடைய மனத்தைக் கனி விக்கவுமெண்ணிச் சிறுவர்களினியல்பை எடுத்துக் கூறிய பகுதியும் (௪௬) இவருடைய ஆற்றலையும் அருமைக்குணங்களையும் புலப்படுத்தும். "சிறப் புடை மரபிற் பொருளு மின்பமு, மறத்து வழிப்படூஉந் தோற்றம் போல, விருகுடை பின்பட வோங்கிய வொருகுடை","போரெனிற் புகலும் புனை கழன் மறவர்", "ஊன்சோற் றமலை பாண்கடும் பருந்துஞ், செம்மற் றம்மநின் வெம்முனை யிருக்கை", " காலனுங் காலம் பார்க்கும் பாராது, வேலீண்டு தானை விழுமியோர் தொலைய, வேண்டிடத் தடூஉம் வெல்

போர் வேகதே'', ''மையல கொண்ட வேமபி லிருக்கையர், புதல்வர் பூக்கண் முத்தி மனேயோட், செல்வங் காக்கும் வைதன் மாக்களொடு, பெருங்கலக் குற்றன்ருற் ருனே காற்றே, டெரிதிகழ்த் தன்ன செல விற், சேருமிகு வளவிற் சினேஇயோர் நாடே'', ''உடும்பிரித் தன்ன வென்பெழு மருங்கிற, கடும்பின் கடும்பசி களையுநர்க் காணுது, சில் செவித் தாகிய கேளவி நொந்து நொந்து'', ''மென்மையின் மகளிர்க்கு வணங்கி வன்மையி, ஞடவர்ப் பிணிக்கும் பீடுகெழு நெடுந்தகை, புனிறுதீர் குழவிக் கிலிற்றுமுலை போலச், சுரந்தகாவிரி மரங்கொன் மலிநீர், மன்பதை புரக்கு நன்ருட்டுப் பொருநன்'', ''[illegible] நெடு நகர் வரைப்பிற் படுமுழா வோர்க்கு, முறக்கை [illegible] பிறன் கடை மறப்ப நல்குவன் செலினே'', ''தைஇத் திங்கட் [illegible] போலக் கொளக் கொளக் குறைபடாக் கூழுடை வியனகர், [illegible] அடுதீ யறியா, திருமருந்து விளக்கு நன்ருட்டுப் பொருநன் [illegible] வராப் போலும் வறன்'', ''வெய்துண்ட வியர்ப்பல்லது, [illegible] வியர்ப்பறியாமை யீத்தோ னெந்தை'' என்பவை இவருறுடைய பாடல் களுட் சிறந்த பகுதிகள், இவராற் பாடப்பட்டோரும் இவர் காலத்தவ ரும்: சோழன் நலங்கிள்ளி, சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவள வன், காரியாற்றுததுஞ்சிய நெடுங்கிள்ளி, சோழன்குராப்பள்ளித்துஞ்சிய

கிள்ளிவளவன், சிறுகுடிகிழான் பண்ணனென்போரும் அவர்களைப்பாடிய

புலவர்களுமாவர். இவரியற்றிய பாடல்கள்-கஅ (குறுந். க; திருவள். க;

நற். க; புறநா. கரு)

கோனுட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனுர்:—வஞ்சப் புகழ்சசி

யணி இவர்பாடல்களில் மிக நன்றாக அமைந்துள்ளது; திருவள்ளுவ மாலை

யில் இவர்செய்ததாக ஒருபாடல் காணப்படுகின்றது. இவராற் பாடப்பட்

டோர்: சேரமான்குட்டுவன்கோதை, சோழன் இலவந்திகைப்பள்ளித்துஞ்

சிய நலங்கிள்ளிசேட்சென்னி, ஏனாதிதிருக்கிள்ளி, ஈர்ந்தூர்கிழான்

தோயன் மாறன், சோழன்குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன்,

சோழிய ஏனாதிதிருக்குட்டுவனென்போர்.

சங்கவருணரென்னும் நாகரியர் :—இவர்பாடிய பெருஞ்காஞ்சித்துறை

இனிய பொருள்வாய்ந்தது. இவர்பாடல் யாக்கைநிலையாமைமுதலியவற்

றை வற்புறுத்திக்கூறும்; இவராற்பாடப்பட்டோன் நத்தமாறன்.

சாத்தந்தையார் :—இவர், பதினெண்கீழ்க்கணக்கினுளொன்றாகிய திணை

மொழியைம்பதென்னும் நூலாசிரியரான கண்ணஞ்சேந்தனுருடைய

தந்தையார். மற்போரியல்பு இவர் பாடலிற் காணப்படுகின்றது. இவராற் பாடப்பட்டோன் சோழன் போர்வைக்கோப்பெருநற்கிள்ளி.

சிறுவெண்டேரையார்.—ஐயாதிச் சிறுவெண்டேரையாரென்றும் இவர்பெயர் காணப்படுகின்றது..

**சேரமான் கணைக்காலிரும்பொறை**:—இவன் சோழன் செங்கணானொடு போர்செய்து பிடிக்கப்பட்டுக் குடவாயிற்கோட்டத்துச் சிறையிற்கிடந்து தண்ணீர்தாவென்று கேட்டு உடனே பெறாது பின்பு பெற்று அதனை மானத்தால் உண்ணாது கைக்கொண்டிருந்து, "குழவி யிறப்பினும்" என்னும் பாடலைப் பாடித் தன்கருத்தைப் புலப்படுத்தி அப்பால் துஞ்சினன். **சேரமான்கோட்டம்பலத்துத்துஞ்சியமாக்கோதை**:—இவன், தன் மனைவி இறந்தபொழுது பிரிவாற்றாது " யாங்குப் பெரிதாயினும்" என்னும் பாடலைப் பாடினன்.

**சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்**;—முகையலூர்ச் சிறுகருந் தும்பியாரென்றும் பிரதிபேதமுண்டு. திருவள்ளுவ மாலையில் கஎ-ஆம் செய்யுளாகிய "உள்ளுதலுள்ளி" என்னும் வெண்பா இவரால் இயற்றப் பெற்றது. இவராற் பாடப்பட்டோன் வல்லார் கிழான்பண்ணன்.

**சோழன் குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவன்** :—தன்னாட்டில் வேளாண்மைத் தொழிலிற் சிறந்துவிளங்கிய பண்ணனென்பவனுடைய அரிய குணங்களை இவன் பாராட்டிப்பாடினன். இவனது மற்ற வரலாற்றைப் பாடப்பட்டோர் பெயர் வரிசையிற் காண்க.

சோழன் நல்லுருத்திரன்:—இப்பெயர் சோழன் நல்லுத்தரனெனவும், நல்லுத்திரனெனவும், உருத்திரனெனவும் பிரதிகளில் வேறுபட்டுள்ளது. இவன் முயற்சியுடையோரிடத்து மிக்கவிருப்பும் முயற்சி யில்லாரிடத்து மிக்க வெறுப்புமுடையானென்று இவன்பாடியபாடல் தெரிவிக்கின்றது; கலித்தொகையில் முல்லைக்கலி இவன்பாடியது.

சோழன் நலங்கிள்ளி:—இவன் பகைவரை அஞ்சாது வெல்லும் ஆற்றலுடையவனென்றும் பொதுமகளிரைச் சிறிதும் விரும்பாதவனென்றும் இரப்போர்க்கு எவற்றையும் வரையாதுகொடுக்கும் வள்ளலென்றும் செங்கோலை உடையவனென்றும் இவன்பாடியபாடல்கள் தெரிவிக்கின்றன. இவனுடைய மற்ற வரலாற்றைப் பாடப்பட்டோர் பெயர்வரிசையிற் காண்க.

தண்காற் பூட்கொல்லனார்:—தண்கால் - பாண்டி நாட்டிலுள்ளதோரூர்; திருத்தண்காலென இக்காலத்துவழங்கும்; இது திருமாலின் நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. பூண் கொல்லனார் - ஆபரணஞ்செய்யுந் தட்டார்; இவர்க்கு இப்பெயர் ஊராலும் தொழிலாலும் வந்தது. இப்பெயர், தங்கால் தாட்கோலனாரெனவும், தங்கால் பூட்கோலனார் எனவும் காணப்படுகின்றது. இவர்பாடலில் இல்லறவொழுக்கம் நன்கு கூறப் பெற்றுள்ளது.

தாமப்பல் கண்ணனார்:—காஞ்சிபுரத்தின் பக்கத்தில் தாமலென்று ஒருஊ ருளது; இவர் அந்தணர்; அரசரோடு நெருங்கிப் பழக்கமுடையவர்;



தைரியமிக்கவர். இவரால்பாடப்பட்டோன் சோழன்

கலம்பின்னித்தம்பியா

வனத்தான்.

தாயங்கண்ணியார்:—கைம்மை நோன்பு இவர் பாடலிற் கூறப்பெற்றுள்ளது.

குறுந்தொகையிலும் நற்றிணையிலும் இவர் பாடல்கள் காணப்படும்.

திருத்தாமனார்:—இவராற்பாடப்பட்டோன் சேரமான்வஞ்சன்.

தும்பிசேர்கீரனார்:—தும்பி - ஒருவகைவண்டு; சொகினம் - நிமித்தம். தும்பியை நோக்கிச் செய்திகூறிய சிறப்பால் இவர் இப்பெயர்பெற்றார் போலும்; தும்பி சேர்கீரனாரென்றும் பிரதிபேதமுண்டு ; இவருடைய பாடல்கள் குறுந்தொகையிலும் நற்றிணையிலும் காணப்படுகின்றன.

துறையூர் ஓடைகிழார்:—இவர் வேளாளர்; இவர் வறுமையால் மிக்க துன்ப முற்றவரென்று தெரிகிறது. இப்பெயர் துறையூர் அரிசில் கிழாரெனவும் பிரதிகளிலுள்ளது. இவராற்பாடப்பட்டோன் ஆய் என்னும் வள்ளல்.

தொடித்தலைவிழுத்தண்டினார்:—தாம் கூறும் முதுமைப்பருவ வருணனையில், 'தொடித்தலை' என்னுமடையைத் தண்டிற்குக்கூறிய சிறப்பால், இவர் இப்பெயர்பெற்றார் ; தொடி - பூண். இவராற்பாடப்பட்டோன் ஒல்லையூர்கிழான்மகன் பெருஞ்சாத்தன். திருவள்ளுவமாலையில் இவர் பாடல் ஒன்றுள்ளது.

தொண்டைமான் இளந்திரையன்:—இவன் காஞ்சிநகரத்திருந்த ஓரரசன்; பாடுதலில்வல்லவன்; கடியலூர் உருத்திரங்கண்ணனார்பாடிய பெரும்பாணாற்றுப்படைத்தலைவன் இவனே; இவன்பெயர்க்காரணத்தைப் பெரும்பாணாற்றுப்படை ௩௭-ஆம் அடியின் விசேடவுரையாலுணர்க. இவன் காலத்துப் புலவர் மேற்கூறிய உருத்திரங்கண்ணனாரும் நக்கண்ணையாருமாவர்.

நரிவெரூஉத்தலையார்.—இவர், யாதுகாரணத்தாலோ தம்முடம்பு வேறுபட்டிருந்து சேரமான் கருவூரேறிய ஒள்வாட்கோப்பெருஞ்சேரலிரும்பொறையைக் கண்டநாளில் அவ்வேறுபாடு நீங்கித் தம்முடம்புபெற்றனர். இதனை, புறநானூற்றின் ௫-ஆம் பாட்டின் பின்புள்ள வாக்கியத்தாலும், "புதுமை பெருமை" (தொல். மெய். சூ. ௭ - பேர்) என்பதன் விசேடவுரையாலுமுணர்க. இவராற்பாடப்பட்டோன்: மேற்கூறிய சேரமான்கருவூரேறிய ஒள்வாட்கோப் பெருஞ் சேரலிரும் பொறை. இவரியற்றியபாடல்கள் குறுந்தொகையிலும் திருவள்ளுவமாலையிலுமுள்ளன.

நல்லிறையனார்:—இவர் வாக்கிற் காவிரி சிறப்பிக்கப்பெற்றுள்ளது. இவராற் பாடப்பட்டோன் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன்.

றையனுர் வேறு ; இவர்வேறு.

நன்னாகனர்:—ஆயுகளில் தருமவோட முண்டென்று இவர்பாடலால் தெரி கின்றது. இவராற்பாடப்பட்டோன் கரும்பனூர்கிழான். பரிபாடலில் இரண்டாம்பாட்டுக்கு இசைவகுத்தவர் இவரே.



நெட்டிமையார் :—இவர்க்கு இப்பெயர் உறுப்பால் வந்தது; நெடுமை இமை
யார். இவராற்பாடப்பட்டோன் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடு
மிப்பெருவழுதி. அப்பாண்டியன் பகைவருடைய மதிலையழித்து வரைப்
பாழ்படுத்தினமையும், குதிரைகளைச் செலுத்தி அவர்வயல்களை அழித்த மையும், யானைகளால் அவர் குளங்களைக் கலக்கினமையும், அவன்செய்த தருமயுத்தமும் இவர்பாடல்களிற் கூறப்பெற்றுள்ளன.

நெடுங்கழத்துப்பரணர் :— போர்க்குச்செல்வோர் வெள்ளுடை உடுத்திக்
கொண்டு செல்லவேண்டுமென்பது இவர் பாடலால் தெரிகின்றது. இவர்
க்கு இப்பெயர் உறுப்பால்வந்ததுபோலும்.

நெடும்பல்லியத்தனர் :—நெடிய பலவாத்தியங்களை உடைமையின், இவருக்கு
இப்பெயர்வந்தது; இவராற்பாடப்பட்டோன் பாண்டியன் பல்யாகசாலை

முதுகுடுமிப்பெருவழுதி.

நொச்சி நியமங்கிழார்:—நொச்சிநியமம் - ஓரூர்; இக்காலத்து நொச்சிய

மென்றுவழங்கப்படுகிறது. இவர் வேளாண்மரபினர் ; இவர்பாடல்கள்

அகநானூற்றிலும், நற்றிணையிலும் காணப்படுகின்றன. நொச்சி நியக்

கிழாரென்றுஇவர்பெயர் சிலபிரதிகளில் உள்ளது.

பக்குடுக்கை நன்கணியார்:—நன்கணியாரென்பது இவரது இயற்பெயர்;

கணி - சோதிடவல்லவன்; உலகத்தை வெறுத்த ஞானியாதலால், இவர்

பையையே உடையாகக் கொண்டிருந்தனரென்றும் அதுபற்றியே 'பக்கு

டுக்கை' என்றுமடை இவர் பெயர்க்குமுன் கொடுக்கப்பட்டதென்றுந்

தெரிகின்றன ; பக்கு - பை (ஐங்குறு. உஎக.) இவர் ஞானியென்பது

இவரது செய்யுளாலறியலாகும்.

பரணர்:—இவர் கபிலர்பால் மிக்க நேயமுடையவர். இது கபிலபரணரென்

னும் தொடரால் விளங்கும். இவர் பதிற்றுப்பத்தில் ஐந்தாம்பத்துப்

பாடிக் கடல்பிறக்கோட்டிய கோச்செங் குட்டுவனிடம் உம்பற்காட்டுவாரி

யையும், அவன்மகன் குட்டுவன் சேரலையும் பரிசிலாகப்பெற்றனர்;

இதனை மேற்கூறிய பகுதியின் இறுதிக்கட்டுரையாலுணர்க. இவராற் பாடப்பட்டோர்: சோழன் உருவப்பஃறேரிளஞ் சேட்சென்னி, சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், சோழன் வேற்பஃறடக்கைப் பெருநற் கிள்ளி, வையாவிக்கோப்பெரும்பேகன், சேரமான் கடலோட்டிய வேல் கெழுகுட்டுவனென்பார். "அமரர்ப்பேணியும்" என்னும் ஒளவையாருடைய பாட்டினால், அதியமான் நெடுமானஞ்சியை இவர் புகழ்ந்திருப்பதாகத் தெரிகின்றது. திருவள்ளுவமாலையிலுள்ள 'மாலுங்குறளாய்' என்னும் அரிய வெண்பா இவரியற்றியதாகத் தெரிதலின் உக்கிரப் பெருவழுதியாரும் மற்றப்புலவர்களும் இருந்தகாலத்தவரென்று இவர் எண்ணப்படுகிறார். இன்னும் இவரியற்றியபாடல்கள் நற்றிணையிலும், குறுந்தொகையிலுமுண்டு; கக - ஆம் திருமுறையில் உள்ளதான சிவபெரு





மான் திருவந்தாதியென்னும் பிரபந்தத்தின் ஆசிரியராகிய பரணதேவ நாயனாரென்பவர் இவரென்று சொல்லுவர்; இவர் வேறு; அப்பரணர் வேறு. இரண்டு திருவிளையாடற் புராணங்களிலும் இவர் புகழப்பட்டிருக்கிறார்.

பாண்டரங்கண்ணனார்:—இவராற்பாடப்பட்டோன் சோழன் இராசசூயம்

வேட்ட பெருநற்கிள்ளி.

பாண்டியன் அறிவுடைநம்பி:—இவர் அரசர்; புதல்வர்களாலுண்டாகு மின்

பமானது இம்மையின்பம் எல்லாவற்றிலும் சிறந்ததென்பதை இவர்,

"படைப்புப் பலபடைத்து" என்னும் பாடலால் நன்குவிளக்கியிருக்கின்

றனர்; இவர் காலத்துப் புலவர் பிசிராந்தையார்.

பாண்டியன் ஆரியப்படைகடந்த நெடுஞ்செழியன்:—இவன் கற்றோர்பால் மிக்க மதிப்புடையவனென்றும் கற்றலையே பெரும்பயனாக எண்ணியவ னென்றும் இவன்பாடியபாடல் விளக்கும்; சிலப்பதிகாரக் கதை

நாயகனாகிய கோவலனைக் கொல்வித்தவன் இவனே. இதனை அந்நூல் மது

ரைக்காண்டத்தின் இறுதிக்கட்டுரையாலுணர்க.

பாண்டியன் தலையாலங்கானத்துச்செருவென்றநெடுஞ்செழியன்:—இவன் பகைவரைவெல்லுதலிற் சிறந்தவனென்பதும் குடிகளைப்பாதுகாத்தலில்

வன்மையுடையோனென்பதும் புலவர்களால் மதிக்கப்படுதலில் மிக்க

நாட்டமுடையோனென்பதும் இரப்போர்க்கு வேண்டியவற்றைக் கொடுத்

தலையுடையோனென்பதும் இவன்பாடியபாட்டால் விளக்குகின்றன.

இவன் பாடப்பட்டவருள்ளு மொருவனுவன்; இவன் வரலாற்றை அவர்

வரிசையிற்காண்க.

பாரதம்பாடிய பெருந்தேவனார்:—இவர் தொண்டைநாட்டினர் ; தமிழில் பாரதகதையை உரையிடையிட்ட பாட்டுடைச்செய்யுளாக இயற்றிய ஆசிரியர் ; அந்நூற் செய்யுட்கள் தொல்காப்பியப் பொருளதிகாரம் நச்சினார்க்கினியத்திலும் யாப்பருங்கலவிருத்திமுதலியவற்றிலும் காணப்படும். நற்றிணை, ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு என்பவற்றிலுள்ள கடவுள்வாழ்த்துக்களும், திருவள்ளுவமாலையிலுள்ள, 'எப்பொருளும் யாரும்' என்னும் வெண்பாவும் இவராலேயே செய்யப்பட்டுள்ளன. இவருடைய மற்ற வரலாறுகளை ஐங்குறுநூற்றிற் பாடினோர் வரலாற்றிற்காண்க.

பாரிமகளிர்:—இவர்கள் பாரியென்னும் வள்ளலுடைய மகளிர் ; இவர்களுள் ஒருத்தி, மழையில்லாத வறட்காலத்தில் இரந்துவந்த ஒருபாணனையுண் பித்தற்குச் சோறுபெறுமையாற் பொன்னை உலையிற்பெய்து சோறாக்கிக் கொடுத்தாளென்று "மாரிபொன்றின்றி வறந்திருந்த காலத்தும், பாரி, மடமகள் பாண்மகற்கு - நீருலையுட், பொன்றந்து கொண்டு

புலவராக

நல்லிருளொன்று மூமுன்றிலே வில்'' (பழமொழி, சஎ)

என்றும்பெயர்



பாவால் விளங்குகின்றது. இவர்கள் தமது தந்தையிறந்தபின்பு அவர் பிரிவாற்றாது வருந்திப் புலம்பிப்பாடினர் ; அப்பாடல்கள் படிப்பவர் மனத்தைக்கலக்கச்செய்யுமென்பது எழுதாமலேவிளங்கும். பின்பு,

தமது

தந்தையின் தோழராகிய கபிலரால் பார்ப்பார்க்கு

மணஞ்செய்துகொடுக்

கப்பட்டார்கள்.

பாலைபாடியபெருங்கடுங்கோ:—இவர் சேரருள் ஒருவர் ;

பாடப்பட்டோ

ருள்ளும் ஒருவராவர்; இப்பெயர் சேரமான் பாலைபாடிய

பெருங்கடுங்கோ

வெனவும் வழங்கும். பெருங்கடுங்கோவென்பது இவரது

இயற்பெயர்.

பாலைத் திணையினியல்பை நன்றாக விளக்கிப்பாடுதலில் மிக்க

ஆற்றல்

வாய்த்தவராதலின், பாலைபாடியவென்னுமடைமொழி

இவரதுபெயர்க்கு

முன் சார்த்தப்பெற்றது ; இதனை ஏனைத்தொகைகளிற் காண்க

(அகநா.

குறுந். நற்.) "வருபடை தாங்கிய கிளர்தா ரகல,
மருங்கடனிறுமான்

வயவ ரேறிய, வுடம்புந் தோன்றா வுயிர்கெட்டன்றே,...சேண்
விளங்கு

நல்லிசை நிறீஇ, நாநவில் புலவர் வாயுளானே" என ஒரு வீரனது
ஆற்

றலை இவர் பாராட்டியிருத்தல் கருதத்தக்கது. இவருடைய
பிறவரலாறு

கள் பாடப்பட்டோர்பெயர் வரிசையில் அறியலாகும்.
பிசிராந்தையார்.—இவர் பாண்டிநாட்டிலுள்ள
பிசிரென்னுமூரினர்;

கோப்பெருஞ்சோழனுடைய உயிர்த்தோழர்; அவன் துறந்து
உயிர்நீத்தது

கேட்டுத் தாமும் உடன் உயிர்நீத்தார்;"பிசிரோ னென்பவென்
னுயிரோம்

புநனே" (உகரு) என்னும் அவன்வாய்மொழியாலும்,
"கோப்பெருஞ்

சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும்போல உணர்ச்சியொப்பின், அதுவே
உடனுயிர் நீக்குமுரிமைத் தாய நட்பினைப்பயக்கும்" (குறள். எஅரு •
பரிமேல்), "இதற்குக் கோப்பெருஞ்சோழன் துறக்துழிப் பிசிராந்தை
யாரும் பொத்தியாரும்போல்வார் துறந்தாரென்றுகூறும் புறச்செய்யுட்

கள் உதாரணம்" (தொல். கற்பு. சூ. ருஉ - ந) என்பவற்றாலும் இவை
அறியலாகும். இவருடைய பாடல் மிக்க இன்பம் பயக்கும். இவர் நரை
திரை மூப்புத்துன்பங்களின்றி வாழ்ந்தவர்; அதன்காரணத்தை,"யாண்டு
பலவாக" என்னுமிவர்பாடல் புலப்படுத்தும். இவர்பெயர் இரும்பிசி

ராத்தையாரெனவும் வழங்கும் ; இவராற்பாடப்பட்டோர்: கோப்பெருஞ்

சோழன், பாண்டியன் அறிவுடைநம்பி.

பிரமனார்:—நிலையாமையை இவர் நன்குஅறிந்தவர்; அதனை அறிவுறுத்தலிலும் வல்லவர் ; "பொதுமை சுட்டிய மூவருலகமும், பொதுமையின்றி யாண் டிசி னோர்க்கும், மாண்ட வன்றே யாண்டுகள்" என்பதனால் விளங்கும்.

புல்லாற்றூர் எயிற்றியனார்:—இவர், இம்மை மறுமைப்பயன்களை நன்கறிந் தவர். கோப்பெருஞ்சோழன் தன்மக்களோடு போர்செய்தற்கு எழுந்த பொழுது பாடித் தடுத்த அரியபாடலே இதனை விளக்கும் ; புல்லாற் றூர் எயிற்றியாரெனவும் பிரதிபேதமுண்டு ; இவராற்பாடப்பட்டோன் மெய்த்தூய கோப்பெருஞ்சோழன்.



புறத்திணைநன்னாகனார்:—புறத்திணைத்துறைகளை நன்கு பாடுதல்பற்றி இப் பெயர் இவருக்கு அமைந்ததுபோலும். பெருமாவிலங்கை, பாரிபறம்பிற் சுனையென்பவை இவர்வாக்கிற் பாராட்டப் பெற்றுள்ளன ; "இல்லோர் சொன்மலை", "நிரயத் தன்னவென் வறன்களைந் தன்றே, யிரவி னானே

யீத்தோ னெந்தை, யன்றை ஞான்றினொ டின்றி னூங்கு, மிரப்பச் சென்றி லேன்...நிறைக்குளப்புதவின் மகிழ்ந்தனென்","மன்னனைப் புகழ்வேட்டு நீர்சாலை செய்வழங்கிப், புரந்தோ னெந்தை...யாண்டு நிற்கவெள்ளி" என்

பவை இவர் உபகாரிகளைப் பாராட்டிய அருமைப்பகுதிகள். இவர்பெயர்

கன்னுகனுரெனவும், நன்னுதனுரெனவும் சிலபிரதிகளில் வழங்கும். இவ

ரால் பாடப்பட்டோர் ஓய்மான்நல்லியக்கோடன், ஓய்மான் நல்லியாதன்,

ஓய்மான் வில்லியாதன், கரும்பனூர்கிழானென்பார்.

பூங்கணுத்திரையார்:—"மீனுண் கொக்கின் றூவி யன்ன, வானரைக் கூந்

தன் முதியோள் சிறுவன், களிறெறிந்து பட்டன னென்னு முவகை,

யீன்ற ஞான்றினும் பெரிதே" என மறக்குடியிற் பிறந்த முதுமகளினி

யல்பை இவர் தெரிவித்திருத்தல் அறிதற்பாலது. குறுந்தொகையிலும்

இவர் செய்யுட்களுண்டு.

பூதபாண்டியன்தேவி பெருங்கோப்பெண்டு:—பெருங்கோப்பெண்டு - பட்

டத்துத் தேவியார். இவர் தம்கணவனுகிய பூதபாண்டியன் இறந்த

பொழுது அவன் பிரிவாற்ருது வருந்தி, மற்றைமகளிர்போல யான் இனி

உயிரோடிரேனென்று, "பல்சான் றீரே" என்னும் அரியபாடலைப் பாடித்

தீயிற்பாய்ந்தார். இவர் காலத்துப்புலவர் மதுரைப் பேராலவாயார். பூதப்

பாண்டி என்று ஓர் ஊர் பாண்டிநாட்டி லுள்ளது.

பெருந்குன்றூர்கிழார்:—இவர் வேளாண்மரபினர். இவர் பதிற்றுப்பத்தில்

௯ - ஆம் பத்தைப்பாடிச் சேரமான்
குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை
யிடம் முப்பத்திராயிரம் காணமுதலிய பரிசில்பெற்றனர். இதனை, அப்பத்
தின் பதிகத்தாலுணர்க. வையாவிக்கோப் பெரும்பேகனால் துரக்கப்பட்ட
கண்ணகியென்பவளை அவனுடன் சேர்த்தற்கு அவனைப்பாடி அதனையே
பரிசிலாகக்கூறினர். இவராற்பாடப்பட்டோர் வையாவிக்கோப் பெரும்பே
கன், சேரமான் குடக்கோச்சேரலிரும்பொறை, குடக்கோ இளஞ்சேரலி
ரும்பொறை, சோழன் உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னி யென்பார். இன்
னும் இவரியற்றிய செய்யுட்கள் அகநானூற்றிலும் குறுந்தொகையிலும்
நற்றிணையிலுமுண்டு. பன்னிரு பாட்டியலில் இவர் இயற்றியனவாகச்
சில சூத்திரங்கள் இருத்தலின் பாட்டியல்களியற்றிய புலவருள் இவரும்
ஒருவரென்று கருதப்படுகிறார். ஈண்டுக்கூறிய கண்ணகி சிலப்பதிகாரத்
திற்கூறப்பெற்ற கண்ணகியல்லள். இறையனாரகப் பொருளுரையிலும்
இவர்பெயர் வந்துள்ளது. இவர் காலத்துப்புலவர்கள் :—சிறுமேதாவி

யார், சேந்தம்பூதனார், அறிவுடையரனார், இளந்திருமாறனார், மதுரை



யாசிரியனல்லந்துவனார், மருதனிள நாகனார், கணக்காயனார்மகனார் நக்கீரனார், பரணர்முதலியோர்.

பெருங்கோழிநாய்கன்மகள் நக்கண்ணையார்:—இவரால் பாடப்பட்டோன்
சோழன் போர்வைக்கோப்பெருநற்கிள்ளி. அவனைத்தாளுகவிரும்பி அவன் வெற்றியைப் பாராட்டி இவர்பாடிய பாடல்கள் மதிக்கற்பாலன; 'பெருங்கோழிநாய்கன்மகள் ஒருவன் ஒத்த அன்பினுற் காமமுறாதவழியும் குணச்சிறப்பின்றித் தானே காமமுற்றக்கூறியது' (தொல். புறத்திணை. சூ. உ௮ - ந) என்பதும் இதனை வலியுறுத்தும்.

பெருஞ்சித்திரனார் :—அன்பில்லாதவர்கள் எவ்வளவு செல்வமுடையவர்
களாக இருப்பினும் அவர்களை இவர் மதிப்பவரல்லர் (௧௬உ, உ0எ - அ);
ஊக்கமுதலிய இயல்புவாய்ந்தவர் (௧௬௧); குமணனுடையவண்மையைப்
புலப்படுத்துதல் முகமாகக்கடைஎழுவள்ளல்களின் வரலாறுகள் சிறு

பாணாற்றுப்படையிற் போலச் சுருக்கமாகக் கூறப்பெற்றுள்ளன (கருஅ);
தம்முடைய தாய், குழந்தைகள், மனைவி, சுற்றத்தார் ஆகிய இவர்கள்
பசியால் வருந்துவதை இவர் குமணனுக்குக் கூறும்பகுதிகள் கன்னெஞ்
சையும் கரையச்செய்யும் (கருசு); பசியால்வருந்துங் குழந்தைகளுக்கு
அத்துன்பத்தைப் போக்கடித்தற் பொருட்டு, அவ்வப்பொழுது தம்
மனைவி செய்யுமுபாயங்களை இவர்கூறும் பகுதிகளும் (கசுO), குமண
னளித்த பரிசிலை அம்மனைவியிடங்கொடுத்து, "நீ இனிக் கவலை யின்றி
வாழ்'' என்று கூறுவனவும் (கசுகூ) அறிதற்பாலன ; செய்யுளிலுள்ள
பொருளமைதிகளை நோக்கியே இவர்க்குஇப்பெயரை இட்டனர் போலும்;
சித்திரம் - ஆச்சரியம். இவரால் பாடப்பட்டோன் குமணன் ; இகழப் பட்டோர்: அதியமானெடுமானஞ்சி, இளவெளிமா னென்பார். "உயர்த் தேர்துமருப்பிற் கொல்களிறு பெறினுந், தவிர்த்துவிடு பரிசில் கொள்ள லெனுவக்த நீ, யின்புற விடுதி யாயிற் சிறிது, குன்றியுங் கொள்வல் கூர்

வேற்குமண" (௧௫௯), "வண்மையிற் றொடுத்தவென் னயந்தனை கேண்மதி, வல்லினும் வல்லே னாயினும் வல்லே, யென்னளந் தறிந்தனை நோக்காது சிறந்த, நின்னளந்தறிமதி பெரும" (௧௬௧), "இரவலர் புரவலை நீயு மல்லை, புரவல ரிரவலர்க் கில்லையு மல்லர்" (௧௬௨), "அருகிற் கண்டு மறியார் போல, வகனகவாரா முகனழி பரிசி, லாளர் வேளா நல்லர்" (௨0௭), "காணு நீத்த விப்பொருட் கியானோர், வாணிகப் பரிசிலனல்லேன் பேணித், தினையனைத் தாயினு மினிதவர், துணையள வறிந்து நல்கினர் விடினே" (௨0௮), "புலிபார்த் தொற்றிய களிற்றிரை பிழைப்பி, னெலிபார்த்தொற்றா தாகும்" (௨௩௭) என்பவை இவருடைய பாடல்களிற்சிறந்த பகுதிகள்.

**பெருந்தலைச்சாத்தனார்**:—சாத்தனென்பது, தெய்வத்தான் வந்த இவரது இயற்பெயர்; குமணனது தலையை இவர் பாதுகாத்ததுபற்றியோ உறுப்

[illegible]

[illegible] இப்பெயர் முன் இவ்வடைமொழி சார்த்தப்பெற்றது போலும். [illegible] மூலங்கிழாரென்பவருடைய புதல்வரிவர் (அகநா. ௨௨௪); [illegible] [illegible] தம்பியாகிய இளங்கண்டீரக்கோவும் இளவிச்சிக்கோவும் சேர்ந்திருந்தபொழுது சென்று இளவிச்சிக்கோவை மதியாமல் இளங்கண்டீரக்கோவை மட்டுந்தழுவி, அதற்குக் காரணமுங் கூறினர் (௧௫௧); தம்பியால் காடு கொள்ளப்பட்டுக் காடு பற்றியிருந்த குமணனைக்கண்டு 'தம்முடைய வறுமைத் துன்பத்தைக்கூறித் (௧௬௪) தன் தலைதணித்தற்கு அவன்வாள் கொடுப்ப அதனைக்கொண்டு சென்று இளங்குமணனுக்குக் காட்டி அவன்

மனத்திலிருந்த மாறுபாட்டைப் போக்கினர் (கக௫); இவராற் பாடப் பட்டோரும் இவர்காலத்தவரும் இளங்கண்டீரக்கோ, இளவிச்சிக்கோ, குமணன், இளங்குமணன், கடியநெடுவேட்டுவன், மூவனென்பார் ;

"என்னிலை யறிந்தனை யாயி னிக்நிலைத், தொடுத்துங் கொள்ளாதமைய

லென்", "இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே" (கருச), "மன்னு

வுலகத்து மன்னுதல் குறித்தோர், தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே",

"பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென், நாடிழந் ததனினு நனி

யின் னாதென, வாடந் தனனே தலைகொடுக் கிய" (கரு௫), "முற்றிய திரு

வின் மூவ ராயினும், பெட்பின் றீதல் யாம்வேண் டலமே", "கடல்வயிற்

குழீஇய வண்ணலங் கொண்மூ, நீரின்று பெயரா வாங்குத் தேரொ, டொ

ளிறுமருப் போதிய செம்மற, களிறின்று பெயரல பரிசிலர் கடும்பே"

(உ0௫), "வறுவியேன் பெயர்கோ வாண்மேம் படுந" (உ0௬), "குமரிப்

படை தழுவிய கூற்றுவினை யாடவர், தமர்பிற ரறியா வமர்மயக் கழு

வம்" (உகச) என்பவை இவர்வாக்கிற் சிறந்த பகுதிகள். இன்னும்

இவர்பாடல்கள் அகநானூற்றிலும், நற்றிணையிலும், திருவள்ளுவமாலை யிலும், யாப்பருங் கலவிருத்தியிலும் காணப்படுகின்றன.

பெரும்பதுமனார்:—உயர்ந்த கருத்தமைந்த செய்யுள் செய்தலில் வல்லவர்;

"ஆலமரத்தின் பழங்களை நேற்று உண்டோமென்று நினையாமல மீட்டும்

அம்மரத்தின்பாற் செலவுதலைத் தவிரா, புள்ளினங்கள்; இரவலரும்

அத்தன்மையரே; தம்மை ஆதரிப்போர் செலவமே இவர் செல்வம்; அவர்

வறுமையே இவர் வறுமை" என்பது இவர் பாடலின் (கககு) பொருள்.

குறுந்தொகையிலும், நற்றிணையிலும் இவர் பாடலகள் உள்ளன.

பேய்மகள் இளவெயினி:—பேய்மகள் - தேவராட்டி; பூசாரிச்சி; பேயி னது ஆவேசமுற்றவள். இந்தவகையார் இக்காலத்தும் அங்கங்கே உள் ளார். இப்பாட்டின் விசேடவுரையால், பேயே ஒருமகள்வடிவங்கொண்டு

பாடியதாக இந்நூலின் பழைய உரையாசிரியர் கருதியதாகத்தெரிகிறது.

எயினி - எயினக்குலத்திற் பிறந்த மங்கை. வஞ்சிகோரின் வளமும் தலை

வன் கொடையும் இவர்பாடலிற்கூறப் பெற்றுள்ளன. இவரால் பாடப்

பெற்றோன் சேரமான் பாலைபாடிய பெருஞ்சேரலிரும்பொறை.

**பேரெயின் முறுவலார்:**—முறுவலாரென்பது இவரது இயற்பெயர்; பேரெயில் - சோழநாட்டிற் காவிரியின் தென்பாலுள்ளதோரூர்; அது தேவாரம் பெற்ற ஒரு சிவஸ்தலம்; இவர்க்கு இப்பெயர் ஊராலும் உறுப்பாலும் வந்த பெயர் போலும். அன்றிப்பெரிய மும்மதில்களைத் தமது முறுவலா லெரித்த பரமசிவனுடைய திருநாமம் இவர்க்கு இடப்பட்டதென்று கொள்ளினும் பொருந்தும்; முறுவல் - புன்னகை. நம்பி நெடுஞ்செழிய னென்பான், இம்மையில் தானடைதற்குரிய இன்பங்களையெல்லாமடைந் தானென்றும் செய்யவேண்டிய நற்காரியங்களையெல்லாம் வழுவின்றிச் செய்தானென்றும் இவர் அவனைப்பாராட்டியிருக்கும் பகுதிகள் அறியற் பாலன. இவர் செய்யுள் குறுந்தொகையிலுமுண்டு.

**போத்தியார்:**—இவர்கோப்பெருஞ்சோழனுடைய உயிர்த்தோழர்; இவருடைய ஊர் உறையூர்; அவன் வடக்கிருத்தற்குச் செல்லும்பொழுது உடன்

சென்று அங்கே பிசிராந்தையார் வரக்கண்டு வியந்து (உகஎ), "நீர் பிள்ளையைப்பெற்ற பின்பு ஈண்டுவாரும்" (உஉஉ) என்று அவன் சொல்லக் கேட்டு மீண்டுவந்து உறையூர் புகுந்து அவனுடைய பிரிவாற்றாமல் வருந்திச் (உஉ0) சிலநாளிருந்து, புதல்வன் பிறந்தபின் சென்று அவன் நடுகற்கண்டு வருந்தி 'எனக்கு இடர்தா' என்றுகேட்டு அவன் இடங் கொடுக்கப்பெற்று வியப்புற்று அவனைப்பாடித் (உஉ க - ௩) தாமும் வடக்கிருந்து உயிர் நீத்தனர். அவன் பிரிவாற்றாமையால் இவர் அடைந்த வருத்தங்களும் அவனுடைய அருமைக்குணங்களும் இவருடைய செய்யுட்களால் விளங்கும். "கோப்பெருஞ்சோழன் துறந்துழிப் பிசிராந்தையாரும் பொத்தியாரும் போல்வார் துறந்தாரென்றுகூறும் புறச்செய்யுட்கள் உதாரணம்" (தொல். கற்பு. சூ. ௫உ - ந) என்பது இச்சரிதத்தைத்தெரிவிக்கின்றது. இவராற்பாடப்பட்டோர்: கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையாரென்பார்.

பொய்கையார்:—இவருடைய ஊர் மலைநாட்டிலுள்ள தொண்டியென்பது (சஅ); இவராற் பாடப்பட்டோன் சேரமான் கோக்கோதைமார்பன்; சேரமான் கணைக்காலிரும்பொறையின் அவைக்களத்துப் புலவராகவினம்

இயவர்; இவர் மூவன் என்பவனை அச்சேரமான் வென்று அவனைப்பல்லைப் பிடுங்கித் தன்னுடைய தொண்டி நகரத்துக்கோட்டை வாயிற்கதவிலே அழுத்திவைத்த செய்தி இவர் பாடலில் வந்துள்ளது (நற். கஅ.) அச்சேரமானைப்போரில் சோழன்செங்கணான்வென்று சிறையில்வைத்திருந்த பொழுது சோழன்மீது களவழிநாற்பதென்னும் நூலைப்பாடி அச்சேரமானை மீட்டருளினார்; "களவழிக்கவிதை பொய்கையுரை செய்ய வுதியன் கால்வழித்தளையை வெட்டியரசிட்டவும்" (கலிங்க.), "இன்னருளின், மேதக்க பொய்கை கவிகொண்டு வில்லவனைப்பாதத்தளைவிட்ட பார்த்திவனும்" (விக்கிரமசோழனுலா), "பொறையனைப்பொய்கைக்கவிக்

## பிற்சேரர் வரலாறு.

ருக் கொடுத்துக் களவழிப்பாக்கொண்டோனும்" (குலோத்துங்க சோழ னுலா), "பொய்கை களவழி நாற்பதுக்கு, வில்லவன் காற்றளையை விட்டகோன்" (இராசராச சோழனுலா) என இச்செய்தி நூல்களிற் கூறப்பெற்றிருத்தல் காண்க. இவர்பாடியனவாக யாப்பருங்கல விருத்தி யிற் சிலவெண்பாக்களும், பன்னிருபாட்டியலிற் சிலசூத்திரங்களும் காணப் படுகின்றன. இவரே பொய்கையாழ்வாரென்பது சிலருடைய கொள்கை; ஆழ்வார்கள் மறந்தும் புறந்தொழாத பெரியாரென்பது ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தமாதலால் அவர் வேறு, இவர்வேறென்று கொள்வதே மரபு.

பொருந்திலிளங்கீரனர் :—"செறுத்த செய்யுள் செய்செந்நாவின், வெறுத்த வேள்வி விளங்குபுகழ்க் கபிலன்" எனக்கபிலருடைய கல்வி கேள்விகளை இவர் புகழ்ந்திருத்தலால் இவருடைய நற்குணம் வெளியாகின்றது (நிரு); இவராற் பாடப்பெற்றோன் சேரன்மாந்தரஞ் சேரலிரும்பொறை.

பொன்முடியார் :—இவர், சேரமான் தகடூரெறிந்த பெருஞ் சேரலிரும்பொறை

பின்காலத்தவர்; தகடூர்யாத்திரை யென்னும் நூலில் இவராற் செய்யப்

பட்ட சில செய்யுட்களுமுள்ளன (தொல். புறத்திணை. சூ. அ, கஉ - ரு.

பார்க்க.) இவருடனிருந்த புலவர் : அரிசில்கிழார். இவராற்பட்டோன்

அதியமான் நெடுமானஞ்சி. திருவள்ளுவமாலையிலும் இவர் செய்ததாக

அழகிய செய்யுளொன்று காணப்படுகின்றது. மறக்குடியிற் பிறந்த முதிய

வன் கூற்றாக இவர்கூறிய "ஈன்று புறந்தருத லென்றலைக் கடனே, சான்

றோ னாக்குத றந்தைக்குக் கடனே, வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்

குக் கடனே, நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே, யொளிறுவா ளருஞ்

சம முருக்கிக், களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே" (௩௧௨) என்

னும் பாடலால், ஒவ்வொருவருக்கு முரிய கடப்பாடுகள் இவையென்பது

விளங்கும் ; இவர் கூறுமுவமை மிக்க இனிமைவாய்ந்தது; "சிற்றரச

னுடையதும் உழுத்தஞ்சக்கையையுண்டதும் அலங்காரமில்லாததுமான

குதிரை, பகைவருடைய சேனையைக் கடலில் அலைகளைப்பிளந்து செல்லும்

தோணியைப்போல விரைந்து அஞ்சாமல செல்லாநின்றது. பெருஞ்செல்

வத்தையுடைய அரசரின் நெய்விரவிய கவளத்தையுண்டனவும் மிக்க

அலங்காரமுள்ளனவுமான குதிரைகள் முருகன் கோயிலில் கலந்தொடாத

மகளிரைப் போலப் போரில் சும்மாநிற்கின்றன" (௨௯௯) என்பதனால்

விளங்கும்.

மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார் :—அளக்கர் ஞாழலென்பது ஓரூர். பாண்டிய அரசரால் முதலில் இவர் பாதுகாக்கப் பெற்றவர்; சுக்கிரன் வானத்தில் தென்பாற்காணப்படின் மழை குறையுமென்று இவரறித்தவர் (நஅ: க - உ; கரு - சு.) இவராற்பாடப்பட்டோன் சிறுகுடிகிழான் பண்ணனென்பவன். ஏனைத்தொகைகளிலும் (அகநா. குறுந். நற்.) இவருடைய பாடல்கள் காணப்படுகின்றன. இப்பெயர் 'அளக்கர்



ஞாழார்' என்று பிரதிகளிற் காணப்படினும் அது பிழையென்று தோற்றுகின்றது.

மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் :—இவர் ஆடைவிற்கும் வணிகர்; அறுவை - ஆடை. "அரவுறை புற்றத் தற்றே நாளும், புரவலர் புன்கணோக்கா திரவலர்க், கருகா தீயும் வண்மை, உரைசா னெடுந்தகை யோம்பு மூரே" (நஉக) என்பது இவருடைய பாடற்பகுதி; ஏனைத்தொகைகளிலும் (அகநா. குறுந். நற்.) திருவள்ளுவமாலையிலும் இவர்பாடல்

கள் காணப்படுகின்றன.
மதுரை இளங்கண்ணிக் கௌசிகனார் :—கௌசிகனென்பது இவரது
இயற்பெயர்; ஒருமுனிவர் பெயர் இவர்க்கு இடப்பட்டது, பகை
வர் சேய்மையிலிருந்தே அஞ்சுதற்குரிய ஒளி தன்பால் அமையப்பெற்ற
நல்லவனுக்கு நல்லபாம்பு தங்கும் புற்றையும் கொல்லேறு திரிதலாவும்
மன்றத்தையும் இவர் உவமைகூறியிருத்தல் அறிதற்பாலது.
மதுரை ஓலைக்கடைக் கண்ணம்புகுந்தாராயத்தனார் :—ஓலை - ஓலையால்
இயற்றப்பட்டகுடை; தாழை முதலியவற்றின் ஓலையுமாம். இதனால்,
இவர் வியாபாரஞ்செய்பவரென்று தெரிகிறது; இவர்பாடிய மகட்பாற்
காஞ்சி இன்சுவையுடையது.
மதுரைக்கணக்காயனார் :—கணக்காயர் - ஓதுவிப்பார்; "கணக்காயரில்
லாத ஊரும்" (திரி. ௧௦.) இதனால, இவருடையதொழில் இன்னதென்று
விளங்கும்; இறைவருளாற் கிடைத்த சங்கப்பலகையில் முதலில் ஏறி வீற்
றிருந்தவரும் . நல்லிசைப் புலவர்களின் [illegible] விளங்கியவரு

மான நக்கீரனாருடைய அருமைத்தந்தையாரிவர். இதனாலேயே இவருடைய தலைப்பயனும் கல்விப்பெருமையும் நன்குவிளங்கும்; பகைவருடைய பெருஞ்சேனையைத் தனியேநின்று தடுக்கும் ஒரு வீரனை, "பெருங்கடற் காழி யனையன்", "தொன்மை சுட்டிய வண்மை யோன்" என்று இவர் பாராட்டினர்.

மதுரைக் கணக்காயனார்மகனார் நக்கீரனார்:—இவரூர் மதுரை; மதுரைக் கணக்காயனாரென்பது இவர்தந்தையார் பெயர். குலம் ஒருவகை வேதியர் குலமென்பது சிலர்கொள்கை. கடைச்சங்ககாலத்திற் சங்கப்பலகையில் முதலிடத்தை முதலில் ஏற்றவர் இவரே; கீரங்கொற்றனாருடையதந்தையார்; இந்நூலிற் பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனுக்குச் சிவபிரான், பலதேவர், மாயோன், முருகவேளென்பவர்களை உவமையாக்கி இவர்பாடிய பூவைநிலையும் (௫௬), பொருளாகப்பாடிய பொருண்மொழிக்காஞ்சியும் (௧௮௯)மிகஅழகுவாய்ந்தவை. திருமுருகாற்றுப்படையும், நெடுநல்வாடையும் இவரியற்றியநூல்கள். நக்கீர் நாலடிநாற்ப தென்னும் நூலொன்று இவரியற்றியதாக யாப்பருங்கலவிருத்தி முதலியவற்றால் தெரிகின்றது. இறையனாரகப்பொருளுக்கு முதலுரை கண்

டவரிவரே. இவர்செய்தனவாகச் சிலதனிப் பாடல்கள் வழங்குகின்றன. இவரியற்றியதாகத் திருக்காளத்தி ஞானப்பூங்கோதை ஸகஸ்ரநாமம் ஒன்று தஞ்சாவூர் அரண்மனைப் புத்தகசாலையிலுள்ளதென்பர். அதனால், இவர் வடமொழியிலும் மிக்கபயிற்சியுள்ளவரென்று தெரிகின்றது. இவருடைய மாணாக்கர் இவர் புதல்வரான கொற்றனாரென்பவரே. இன்னும், கக-ஆம் திருமுறையிற்காணப்படும் கைலைபாதி காளத்தி பாதியந்தாதிமுதலிய கo பிரபந்தங்களின் ஆசிரியரிவரேயென்பர். மதுரைப்பட்டிமண்டபம் (வித்தியாமண்டபம்) புகுந்து வடமொழியேசிறப்புடையதென்றும் தென்மொழி இழிந்ததென்றும் கூறிய குயக்கொண்டானென்பவனை இறக்கப்

பாடி, சிலர்வேண்ட அவனைப் பிழைக்கவும் பாடிய ஆற்றல்வாய்ந்தவர்.

இவருடையவரலாறு இவரியற்றிய பிரபந்தங்களாலும், தனிப்பாடல்களா

லும், திருப்புகழாலும், கல்லாடமுதலியவற்றாலும், தொல்காப்பியவுரை

களாலும், இறையனாரகப் பொருளுரையாலும், திருவாலவாயுடையார்

திருவிளையாடற்புராணம், திருவிளையாடல், திருப்பரங்கிரிப்புராணம், சீகா

ளத்திப்புராணம் முதலியவற்றாலும் நன்குவிளங்கும். இவருடைய திருவுருவம், திருப்பரங்குன்றத்தில் ஸ்ரீமுத்துக்குமாரக்கடவுளின் பக்கத்தே எழுந்தருளியிருக்கின்றது; திருவிழாக்காலத்தில் அதற்குப் புறப்பாடுண்டு.

மதுரை மேலைமாசிவீதியின் மேல் சிறகில் நக்கீரர் கோயிலென்று ஒரு

கோயில் பெரிதாகவுள்ளது; அது சங்கத்தார் கோயிலெனவும் வழங்கும்.

இவர் வரலாறு இன்னும் விரிப்பிற் பெருகும்.

மதுரைக் கள்ளிற்கடையத்தன் வெண்ணாகனார்

:—வெண்ணாகனென்பது

இவரதுஇயற்பெயர்; இவர்பாடிய வல்லாண்முல்லைத்துறை மிக்கபொருட்

சிறப்புடையது.' அகநானூற்றில் ஒருசெய்யுள் இவர்பாடியதாகவுள்ளது. மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்:—இவர் கூலவியாபாரி;

கூலம் - நெல் முதலியவை ; பாண்டியன் சித்திரமாடத்துத்துஞ்சிய

நன்மாறனை நோக்கி, "வல்லை மன்ற நீநயந் தளித்தல், தேற்றாய் பெரும

பொய்யே யென்றுங், காய்சினந் தவிராது கடலூர் பெழுதரு, ஞாயி

றனையைநின் பகைவர்க்குந், திங்க ளனையை யெம்ம னோர்க்கே" (௫௯)

என அவனுடைய இயல்புகளைச் சுருக்கிக் கூறியவர். பத்தினிக் கடவு

ளாகிய கண்ணகியின் வரலாற்றையும் அவள் மேம்பாட்டையும் சேரன்

செங்குட்டுவனுக்கு அறிவுறுத்தி அவளைக்கொண்டு அவளுக்குக் கோயில்

கட்டுவித்து நித்திய பூசைமுதலியன நடக்கும்படி செய்தவர். அவ்வா

சாத்தனுக்குக் கண்ணகியின் வரலாற்றைக் கூறியபொழுது அதனைக் கேட்டுக்
கொண்டிருந்தவரும் துறவுபூண்டவருமாகிய இளங்கோவடிகள் அவ
ருடைய சரித்திரத்தைப் பொருட்டொடர்நிலைச் செய்யுளாகச் செய்தற்கு
வேட்கையடையும் வண்ணம் செய்தவரும் இவர் ; இதனைச் சிலப்பதி
காரத்தின் பதிகத்தாலும், அந்நூற் காட்சிக் காதையாலுமுணர்க. மணி

## பாடினோர் வரலாறு.

51

மேகலை நூலாசிரியர் இவரே; "சீத்தலைச்சாத்தனார்செய்யப்பட்ட மணி
மேகலை" (தொல். செய். சூ. உசுக-பேர்.) என்றதொகை நூல்களிலும்
(தஞ். குறந். அகநா.) திருவள்ளுவமாலையிலும் இவராற்செய்யப்பட்
டுள்ள பாக்களுண்டு ; இவர்பெயர், மதுரைச் சீத்தலைச் சாத்தனாரென
வும், சீத்தலைச்சாத்தனாரெனவும், சாத்தனாரெனவும் வழங்கும்; "தண்ட
மிழ்ச்சாத்தன்" (பதிகம், க0) என்றும், " தண்டமி ழாசான் சாத்தன்"
(உ௫:கக)என்றும், "நன்னூற்புலவன்" (உ௫:க0க) என்றும

சிலப்பதிகாரத்து இவர் சிறப்பிக்கப்பட்டிருக்கின்றனர். சங்கத்தில் அரங்கேற்றுவித்தற்பொருட்டு வரும் நூல்களிற் பிழைகள் காணப்படுந் தோறும் ஆக்கியோர்களைக் குற்றங்கூறுதற்குத் துணியாராய், 'இந்தப் பிழைகளைக் கேட்கும்படி நேரிட்டதே' என்று இவர் மனம் வருந்தித் தமது தலையைக் குத்திக்கொள்வாரென்றும், அதனால் தலை புண்பட்டுச் சீயோடிருந்தமையின், சீத்தலைச் சாத்தனாரென்பது இவர்க்குப் பெயராயிற்றென்றுங்கூறி, "வள்ளுவர் முப்பாலாற், றலைக்குத்துத் தீர்வுசாத்தற்கு" என்று மருத்துவன் றாமோதரனார் திருக்குறளைச் சிறப்பித்துக்கூறிய செய்யுளை ஆதாரமாகக்காட்டுவர் ஒருசாரார் ; "சீத்தலைச் சாத்தன், கொடும்புறமருதியென்பன: சினைப்பெயரொடு தொடர்ந்துவரு முதற்பெயர்" (தொல். பெயர், சூ. ௨௦ - இளம்) என்பது இக்கருத்தை வலியுறுத்தும். சிலப்பதிகாரத்தை இவர் கேட்டனரெனச் சிலப்பதிகாரப் பதிகத்திறுதியிலும், மணி

மேகலையைச் சிலப்பதிகார நூலாசிரியர் கேட்டனரென அந்நூற்பதிகத்

திறுதியிலும் கூறியிருத்தலால், இளங்கோவடிகளும், இவரும் ஒரேகாலத் தினரென்பது அறியப்படுகின்றது. சீத்தலையென்னும் ஓர் ஊரிலுள்ள ஐயனார் பெயராகிய சீத்தலைச் சாத்தனாரென்பது இவரது இயற்பெய

ரென்பது ஒரு சாரார் கொள்கை; உண்மை விளங்கவில்லை.

மதுரைத் தமிழக்கூத்தனார்:—ஆரியக்கூத்து முதலியவற்றைப்போலத் தமிழ் மொழிக்கேயுரிய கூத்தாற் பெயர்பெற்றவரிவர். இவர்க்குக் கடுவன் மள்ளனார், நாகன்றேவனாரென இருபுதல்வருளர் (அகநா. எ0, கக௪, ௩௫௪.) இவர்பாட்டில் வந்துள்ள உவமையும் தலைவன் தலைவிகளுக் குரிய இல்லறமுறையும் அறிந்து இன்புறற்பாலன.

மதுரைநக்கீரர்:—நிலையாமையை இவர் எடுத்துக்காட்டியிருக்குமுறை மிக அழகிது (௩௩௫.) இவர், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனால் ஆதரிக்கப் பெற்றவர். கபிலர்க்கும் வேள் பாரிக் கும் காலத்தாற் பிற்பட்டவர் (அகநா. ௩௯, எஅ.)

மதுரைப் படைமங்கமன்னியார்:—எயினனென்னும் ஒருபகாரியும் அவனது ஊராகிய வாகையென்பதும் இவராற் பாராட்டப் பெற்றுள்ளன.

மதுரைப்பூதனின நாகனார்:—தன்னுடைய நறுகண்மையாற் பகைவருடைய சேனையை அஞ்சவித்து வேறுபடுத்தும் ஒருவீரனுக்குக் குடித்திலுள்ள

[illegible]

[illegible]

[illegible]

விருந்தினரவர்.

மதுரைப் பேராலவாயர்:—சொக்கநாதக் கடவுள், ஒருபுலவராக வந்து சங்கப்புலவருடைய வழக்கை விலக்கியபொழுது முதலில் அவர் பெயராக அமைந்திருந்த இப்பெயர் (திருவால. குறு: கஉ - ௯), பின்பு அவர் அருள் உருவாகிய இவர்க்கு இடப்பட்டு வழங்கலாயிற்று; ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் காலத்தினர் இவர். அவனிறந்தபின்பு தானுமிறத்தற்குத் தீயிற்பாயும் அவன் மனைவியின் நிலைமையைப் பார்த்து இவர் கூறியபாடல் யாருடைய மனத்தையும் நெகிழ்விக்கும் (உசஎ.) இன்னும் இவர் செய்த பாடல்கள் ஏனைத்தொகைகளிலுமுண்டு (அகநா. நற்.)

மதுரை மருதனிள நாகனார்:—இவரால் பாடப்பட்டோன், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன்; இவர் பாடலில், திரிபுரவிசயம், திருச்சேந்தூரில் முருகக்கடவுளெழுந்தருளிய துறைக்கணுள்ள மணற்குவியல்கள் பாராட்டப்பெற்றுள்ளன. இறையனாரகப்பொருளுக்கு நல்லுரையியற்றியவர்களுள் இவருமொருவர்;

"உருத்திரசன்மன்... எல்லா

ரும் முறையே உரைப்பக்கேட்டு வாளாவிருந்த மதுரை மருதனிளநாகனு

ரைத்த விடத்து நூரோவுழிக் கண்ணீர்வார்த்து மெய்ம்மயிர் நிறுத்தி...

இருந்தான்" (இறை. முதற் சூத்திரவுரை) என்பதனால், அவ்வுரையின்

பெருமை விளங்கும். இவர் பாடல்கள் ஏனைத்தொகைகளிலும் (அகநா.

குறுந். நற்.) காணப்படுகின்றன.

மதுரை வேளாசான்:—வேள் - யாகஞ்செய்யுந்தொழிலின் பெயராகிய வேட்

டலென்பதன் முதனிலை ; ஆசான் - ஆசிரியன். ஒரு வேந்தனிடமிருந்து

மற்றொரு வேந்தன்பால் அந்தணன் தூதுசெல்லுதற்குரியனென்பது

இவர் பாடலால் தெரியவருகின்றது.

மருதனிளநாகனார்:—இப்பெயர் மருதிளநாகனாரெனவும் பிரதிகளிற்காணப்

படுகின்றது. இவராற்பாடப்பட்டோர் பாண்டியன் கூடகாரத்துத்துஞ்சிய

மாறன் வழுதி, நாஞ்சில் வள்ளுவனென்பார். மருதக்கலியைப் பாடியவர்

இவரே ; "மருதனிள நாகன் மருதம்" என்பதனாலுணர்க. இவர்பாடல

கள் ஏனைத்தொகைகளிலும் காணப்படுகின்றன (அகநா. குறுந். நற்.)

பசலை—காதலர்ப்பிரிந்த மகளிருடைய நெற்றி முதலியவற்றில் உண்டாவதாகிய வேறுபாட்டுநிறம்; "மணியிடை பொன்னின் மாமைசாயவெ,னணிநலஞ் சிதைக்குமார்பசலை" (நற். ௩0௪) எனப்பசலையின் இயல்பை விளக்கக்கூறியிருத்தலின், இவர் இப்பெயர்பெற்றார். சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனுடைய போர்வென்றியையும் அவன்கொடை முதலியவற்றையும் சிறப்பித்துப் பாடியுள்ளார். அவன் இறந்தபொழுது இவர் பாடிய பாடல் படிப்பவர் மனத்தை உருக்கும். மலையமான் திருமுடிக்காரியும் அவன்மகன் சோழியவேனாதி திருக்கண்ணனும் கபிலரும் இவராற் பாராட்டப்பெற்றோராவர். இவர் பெண்பாலாரென்று தெரிகிறது.

௩எ, ௩௯, ௧௨௬, ௧எ௪, ௨௨௬, ௨௮0, ௩௮௩. இவரியற்றியதாக நற்றிணையில் ஒருசெய்யுள் காணப்படுகின்றது.

முரஞ்சியூர் முடிநாகராயர்:—இப்பெயரினரொருவர் தலைச்சங்கத்தி லிருந்தனரென்று இறையனாரகப்பொருளின் முதற் சூத்திரவுரையால் தெரிகின்றது. இவராற்பாடப்பட்டோன் சேரமான் பெருஞ்சோற்றுதியஞ்

சேரலாதன்.

மோசிகீரனார்:—இவராற்பாடப்பட்டோர்: சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை, கொண்கானங்கிழானென்பார். இவர் பெயர் மோசகீரனாரெனவும் வழங்கும்; "நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே, மன்னனுயிர்த்தே மலர்தலை யுலகம், மதனால், யானுயிரென்ப தறிகை, வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே" என்பது இவருடைய பாடல்களுளொன்று.

மோசிசாத்தனார்:—இவர்செய்யுளிற் களவேள்வி ஒருவகையாக விளக்கக் கூறப்பெற்றுள்ளது.

வடமநெடுத்தத்தனார்:—இவராற்பாடப்பட்டோன் நாலை கிழவனாகனென்பான். இவர்பெயர் வடநெடுத்தத்தனாரெனவும், வடமநெடுத்தச்சனாரெனவும் சில பிரதிகளிற் காணப்படுகின்றது.

வடமவண்ணக்கன் தாமோதரனார்:—வண்ணக்கன்-நாணயபரிசோதகன்; இப்பொருள் நீலகேசியுரையிற் கண்டது. கோட்டக்காரனென்றும்



பெயர் இப்பொருளில் இக்காலத்து வழங்கப்படுகின்றது. தாமோதரனென்பது கடவுள்பெயரால்வந்த இவரது இயற்பெயர். இவர்வடதிசையிலிருந்து வந்தவராக எண்ணப்படுகிறார். இவராற்பாடப்பட்டோன் பிட்-

டன்கொற்றனென்பான்.

வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தனர்:—இவரால் பாடப்பட்டோன் தேர்

வண்மலையன். அவனைநோக்கி, இவர் "உழுத நோன்பக டழிதின் றாங்கு,

நல்லமிழ் தாகநீ நயந்துண்ணு நறவே" என்கிறார்; அழி - வைக்கோல்.

இப்பெயர் வடவண்ணக்கன் பெருஞ்சாத்தனரெனவும் வழங்கும்.

வடமவண்ணக்கன் பேரிசாத்தனர்:—"தெண்கடன், முழுக்குநிரை முழ

வின் பாணியிற் பையயப், பழம்புன் னுழநரிற் பரவையி னுயும்" (நற்.

உஎஅ) எனக் கடலலையொலிக்கு முழவிஞெலியை உவமங்கூறிய

சிறப்பால் இவர் பெயர்க்குமுன் 'பேரி' என்னும் அடைகொடுக்கப்பட்

டது போலும். இவரால் பாடப்பட்டோன் பாண்டியன் இலவந்

திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனென்பான். அவனைநோக்கி, நீயும் நின்

புதல்வரும் அவர்பெறும்புதல்வரும் நீடுவாழ்கவென்று கூறும்பகுதி மிக்க

நயமுடையது: "நின்னே ரன்னநின் புதல்வ ரென்றும், மொன்னார் வாட

வருங்கலந் தந்துநம், பொன்னுடை நெடுநகர் நிறைய வைத்தநின், முன்

ஞேர் போல்வெர் பெருங்கள் ஞேட்டம், யாண்டு காளும் பெருகி யீண்டு

இரைப், பெருங்கட னிறு மக்கடன் மனலிறு, நீண்டுயர் வானத்

தலைறயிறு கன்று, மிவர்பெறும் புதல்வர்க் காண்டொறு நீயும், புகன்ற

செல்வமொடு புகழினிது விளங்கி, நீடு வாழிய நெடுந்தகை" என்பது.

இவர்பாடல்கள், ஏனைத்தொகைகளிலுங் காணப்படுகின்றன (அகநா. குறுந். நற்.)

வடமோதங்கிழார்:—இவருடைய பாடலிற் பகைவர் கைப்பற்றிச்சென்ற

நிரையை மீட்டுவந்த வீரனொருவன் தன் உயிர்விட்டசிறப்பும் அவனுக்காக

நடப்பட்ட வீரக்கல்லில் அவன் தெய்வமாக வாழ்த்தலும் கூறப்பெற்

றுள்ளன. இவர்பாடியதாக அகநானூற்றில் ஒரு செய்யுள் காணப்படு

கின்றது.

வன்பரணர்:—பரணர், நெடுங்கழுத்துப் பரணரென வேறு இருபுலவருளரா

தலின், இவர் பெயர்க்குமுன் வன்மையென்னும்அடைமொழி கொடுக்கப்

பட்டது. இவருடையசெய்யுளிலுள்ள பொருணயம் மிகச் சிறந்தது.

இவராற்பாடப்பட்டோர், கண்டீரக்கோப்பெருநள்ளி, வல்வில்ஓரி என்
பார். நள்ளியை நோக்கி நீ முற்ற அளித்தலால், இனி எம்முடையார்
ஏனை அரசரைத் துதித்தலையறியாரென்பர்: "பரிசின் முற்றளிப்பப், பிடின்,
மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச், செய்யா கூறிக் கிளத்த, லெய்யா தாகின்
றெஞ் சிறுசெந் நாவே" (கசஅ.) பெருஞ் செல்வத்தைப்பெற்றதனால்,
எம்மவர் ஆடல்பாடல்களை அடியோடே மறந்தனரென்பதைப் புலப்படு



த்தி, "மாலைமருதம் பண்ணிக்காலைக், கைவழி மருங்கிற் செவ்வழிபண்ணி,
வரவெமர் மறந்தன ரதுநீ, புரவுக்கடன் பூண்ட வண்மையானே" என
வும், "பசியா ராகன் மாறுகொல் விசிபிணிக்,கூடுகொ ளின்னியங் கறங்க,
வாடலொல்லார்தம் பாடலு மறந்தே" எனவுங்கூறுவர் (கசக,கருஉ);
நள்ளி தன்னை இன்னுனென்று புலப்படுத்தாமல் உணவு

முதலியவற்றை
அன்புட்னளித்துச்சென்ற அருமையைக் கூறிய கரு௦ - ஆம்
செய்புள்
அறிஞரும் கொடையாளிகளும் எப்பொழுதும் படித்து இன்
புறற்பாலது.
வல்விலோரியின் வில்வன்மையைப் புலப்படுத்தற்கு, "வேழம்
வீழ்த்த
விழுத்தொடைப் பகழி, பேழ்வா யுழுவையைப் பெரும்பிறி துறீஇப்,
புழற்
றலைப் புகர்க்கலை யுருட்டி யுரற்றலைக், கேழற் பன்றி வீழ
வயல,தாழற்
புற்றத் துடும்பிற் செற்றும், வல்வில் வேட்டம் வலம்படுத்
திருந்தோன்"
(கருஉ) என இவர்கூறிய அருமை நுணுகி அறிதற்பாலது.
இவர்செய்த
தாக நற்றிணையில் ஒருசெய்புள் காணப்படுகின்றது.
**வான்மீகியார்:—** ஒருமுனிவர் பெயராகிய இப்பெயர் மரபுபற்றி
இவர்க்கு
இடப்பட்டதுபோலும். இவர் கூறிய துறவறத்தின் பெருமை
அறிதற்பா
லது; "வையமுந் தவமுந் தூக்கிற் றவத்துக், கையவி
யனைத்துமாற்றா"
என்பதனலறிக. இவர்பெயர் வான்மீகையாரெனவும் வழங்கும்.
முதற்
சங்கத்திருந்த புலவருள் வான்மீகரென்று ஒருவருளர் ; அவர் வேறு
;

இவர்வேறு.

விரிச்சியூர் நன்னாகனார் :— தம்முடையதலைவன் போர்செய்தற்குத் தம்பி

னும் முந்திச்செல்லுதலை விளக்கிக் கூறியிருத்தலின், இவர் ஒருவீரராக

எண்ணப்படுகிறார் ; அன்றி ஒருவீரன் கூற்றைக் கொண்டுகூறியதுமாம்.

விரியூர் நக்கனார் :—சிவபிரானுடைய திருநாமமாகிய நக்கனாரென்பது இவருக்கு இடப்பட்டதுபோலும். இப்பெயர் விரியூநக்கனாரெனவும் விரியூரக்கனெனவும் பிரதிகளிற் காணப்படுகின்றது. இவர் தம்முடைய தலைவனது வேற்படையைப் பலபடப்பாராட்டிக் கூறியிருக்கின்றனர்.

வீரைவெளியனார்:—வீரைவெளியென்பது ஓரூர். இவர், "முன்றின் முஞ்ஞையொடு முசுண்டை பம்பிப், பந்தர் வேண்டாப் பலர்தூங்கு நீழல்" எனத் தம்முடைய தலைவனதுவீட்டு முன்றிலையும், "வேந்துதரு விழுக் கூழ் பரிசிலர்க் கென்று, மருகா தீயும் வண்மை, யுரைசா னெடுந்தகை" என அவன் கொடை விசேடத்தையும் கூறுவர்.

வெண்ணிக் குயத்தியார்:—வெண்ணியென்பது ஓரூர். குயத்தி - குயச் சாதியிற் பிறந்த மாது. இவராற் பாடப்பட்டோன் சோழன் கரிகாற் பெருவளவன். இப்பெயர் வெண்ணிற் குயத்தியாரெனவுங் காணப்படுகின்றது.

வெள்ளெருக்கிலையார்:—இவராற் பாடப்பட்டோன் வேள்எவ்வி. அவனிறந்த பின்பும் இவரிருந்து புலம்பினர். இறந்த அவனுக்கு அவன் மனைவி சிறிய இடத்திற் பிண்டம்வைத்தலைக்கண்டு கூறுதல் வாயிலாக, "பிடி

யடி யன்ன சிறுவழி மெழுகித், தன்னமர் காதலி புன்மேல் வைத்த, வின் சிறு பிண்டம் யாங்குண் டனன்கொ, லுலகுபுகத் திறந்த வாயிற், பலரோ டுண்டன் மரீஇ யோனே'' என்று அவன் பெருங்கொடையைப் புலப்படுத் தினர்.

வெள்ளைக்குடிநாகனார் :— வெள்ளைக்குடி யென்பது ஒரூர். இவர் தம்முடைய பழைய நிலங்களுக்குரிய வரிப்பணத்தைச் செலுத்துதற்கு ஆற்றாத வராகிச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனுக்குச் செவியறி வுறுத்திஅச்செய்யுளை *முற்றூட்டாகப்பெற்றனர். "முறைவேண்டு பொழு திற் பதனெளி யோரீண், மழைவேண்டு பொழுதிற் பெயல்பெற் றோரே," "நின் வின்பொரு வியன்குடை, வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய, குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ", "கொதுமை லாளர் பொதுமொழி கொள்ளாது, பகடுபுறந் தருநர் பார மோம்பிக், குடிபுறந் தருகுவை யாயினின், னடிபுறந் தருகுவ ரடங்கா தோரே'' என்பவை இவர் பாடலிலுள்ள சிறந்த பகுதிகள் (௩௫) ; இன்னும் இவர்வாக்காக நற்றிணையில் இரண்டு பாடல்கள் உள்ளன.

வெள்ளைமாளர்:—இவர் பாடிய ஏறாண்முல்லைத்துறை மிக்க பொருள்கய

முடையது.

வெறிபாடிய காமக்கண்ணியார்:—இவர் பெண்பாலார். காமக்கண்ணியென்பது காஞ்சிநகரத்திற் கோயில்கொண்டெழுந்தருளிய அம்பிகையின் திருநாமம் (காமாக்ஷி.) வெறியென்பது தெய்வமேறப்பெற்று ஒருத்தியாடுதல். இது வெறியாட்டமெனவும் வழங்கும்; இதனியல்பை நன்றாக விளக்கிப் பாடியிருத்தலால், 'வெறிபாடிய' என்னும் அடைமொழி இவர் பெயர்க்குமுன் சேர்க்கப்பெற்றது (அகநா. உஉ, கஉ; நற். உகஅ.) இவர் பெயர் வெறியாடிய காமக்கண்ணியாரெனவும் பிரதிகளிற் காணப்படுகின்றது. இவர் இந்நூலிற் பாடிய செருவிடைவீழ்தல், குதிரைமறமென்னுந் துறைப்பாடல்கள் அறிதற்பாலன.

வேம்பற்றூர்க் குமரனார்:—வேம்பற்றூரென்பது மதுரைக்குக் கிழக்கேயுள்ளதோரூர். வேம்பத்தூரென இக்காலத்துவழங்கும்; இன்னும் குலசேகர சதுர்வேதிமங்கலமென்றும் இதனுக்கு ஒருபெயருண்டென்று சிலாசாசனத்தாற்றெரிகிறது. கடைச்சங்கப் புலவர்காலந்தொடங்கி

இன்றுவரை அந்தணர்களே தமிழ்ப்புலவர்களாக இவ்வூரில் விளங்கியிருத்தல் கண்கூடாதலாலும், பெயராலும் இவர் அந்தணராகக் கருதப்படுகிறார்.

ஆசிரியர் பெயரில்லாத பாட்டுக்கள்:—௨௪௪, ௨௫௬ - ௭, ௨௬௩, ௨௬௭-௮, ௨௭௭, ௩௦௭, ௩௨௩, ௩௨௭ - ௮, ௩௩௩, ௩௩௯ - ௪௦, ௩௫௫, ௩௬௬.

---

* முற்றூட்டு - ஸர்வமானியம்.

# பாடப்பட்டோர் வரலாறு.

அஃதை:—இவன் பரிசிலர்க்கு யானைகொடுக்கும் கொடையாளிகளுள் ஒருவன்; போர்செய்தலில் வல்லவன்; இவன் ஊர் மதுரை; இவற்றை, "இன்கடுங் கள்ளி னஃதை களிற்றொடு, நன்கல னீயு நாண்மகி ழிருக்கை" (அகநா. எசு), "பாவடி யானை பரிசிலர்க் கருகாச், சீர்கெழு நோன்றா ளகுதை", "மணநாறு மார்பின் மறப்போ ரகுதை, குண்டுநீர் வரைப்பிற் கூடல்" (௨௩௩, ௩௪௭) என்பவற்றாலுணர்க. இவனைப் புகழ்ந்தபுலவர்:

வெள்ளெருக்கிலையார், கபிலர். அகுதை, அஃதையென்னுமிரண்டும்
பிரதிகளிலுள்ளன.
அதியமான் தகடூர் பொருதுவீழ்ந்த எழினி:—இவன் ஓரரசன்; போரில்
வல்லவன்; சிறந்த கொடையாளிகளுள் ஒருவன்; செங்கோலையுடைய
வன்; இவன் யுத்தத்தில் இறந்தபொழுது பிரிவாற்றாதவருக்கி யமனை
நோக்கி, "நோயுழந்து வைகிய வுலகிலு மிகஃனி, நீயிழந் தனையே யறனில்
கூற்றம், வாழ்தலின் வரூஉம் வயல்வள னறியான், வீழ்குடி யுழவன்
வித்துண் டாஅங், கொருவ னுருயி ருண்ணா யாயி, னோரார் பல்லுயிர்பருகி,
யார்குவை மன்னோவவ ணமரடு களத்தே" என்று அரிசில்கிழார் கூறிய
பாட்டே இவன் இத்தன்மையனாதலை நன்குபுலப்படுத்தும்; அதியமான்
தகடூரெதிர்துவீழ்ந்த எழினியென்றும் பிரதிபேதமுண்டு.
அதியமான் நெடுமானஞ்சி:—இவன் கடையெழுவள்ளல்களிலொருவன்; யுத்
தத்திற் பேர்பெற்றவீரன்; ஒருவகைவீரர்களாகிய மழவர்களுக்குத் தலை

வன்; ஒருகாலத்தில், உண்டோர்க்கு நெடுங்காலம் சீவித்திருத்தலைச் செய்யும் கருநெல்லிப் பழத்தைப்பெற்று அதனை ஔவைக்குக்கொடுத்துப் புகழ்பெற்றவன் ; காஞ்சிநகரத்திருந்த தொண்டைமானென்னுமரசனிடம்

ஔவையைத் தூதுவிடுத்தோன் ; சேரமானுடைய உறவினன் ; பனைமாலையையுடையவன்; வெட்சிப்பூவையும் வேங்கைப்பூவையுமணிவோன்;

சேரன், சோழன், திதியன், எருமையூரன், இருங்கோவேண்மான், பாண்டியன், பொருநன் என்னும் அரசரெழுவர்க்குரிய எழிலாஞ்சனையும் காடும் அரசவுரிமையுமுடையோன் ; மேற்கூறிய அரசர் எழுவரோடு பகைத்து

மேற்சென்று அவரைப் போரில்வென்றோன் ; பரணர்புகழ்ந்துபாடும்படி

கோவலூரையும் வென்றான். இவனுடைய ஊர் தகடூர் ; இவன்மலை

குதிரைமலை ; இவன்மகன் பொகுட்டெழினி; இவன் முன்னோர், தேவர்களைப்போற்றி வழிபட்டு விண்ணுலகிலிருந்து கரும்பை இவ்வுலகிற் கொணர்ந்தனர். அவர்களுக்கு வரங்கொடுக்கும்பொருட்டுத் தேவர்கள்வந்து தங்கியதொரு சோலை இவனூரிலிருந்தது. இவன்பெயர் அதிகமான் நெடுமானஞ்சி யெனவும், நெடுமானஞ்சியெனவும், அஞ்சியெனவும், எழினியெனவும்(கஙஅ) வழங்கும். இவன் சேரமான் பெருஞ்சேரலிரும்பொறை

8

யால் வெல்லப்பட்டானென்று பதிற்றுப்பத்துள் எட்டாம் பத்தினால் விளங்குகின்றது. 'ஒருவன்மேற்சென்றுழி ஒருவன் எதிர்செல்லாது தன்மதிற்புறத்துவருந்துணையும் இருப்பின் அஃது உழிஞையினடங்கும் ;
அது சேரமான் செல்வுழித் தகடூரிடை அதியமானிருந்ததாம்' (தொல்.
புறத்திணை. சூ. எ - ந.) என்றதனால் இவனுடைய வரலாற்றின் ஒரு
பகுதிஅறியப்படுகின்றது. இவனைப் பாடியவர்கள்: ஔவையார், பரணர்,
பெருஞ்சித்திரனார், பொன்முடியார்.

**அதியமான் நெடுமானஞ்சிமகன் பொகுட்டெழினி**:—இவன் கொடையும்
இன்பச்சிறப்பும் வென்றிச்சிறப்புமுடையோன் ; இவன்பெயர் அதிய
மான் மகன் பொகுட்டெழினியெனவும் வழங்கும் ; இவனைப்பாடியவர்
ஔவையார்.

**அந்துவஞ்சாத்தன்**:—இப்பெயர்க்கு அந்துவன்மகனாகிய சாத்தனெனப் பொ
ருள்கொள்க. இவன் ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியனுடைய நண்பருள்
ஒருவன் ; "உரைசா லந்துவஞ் சாத்தனும்" (எக.)

**அந்துவன்கீரன்**:—இதற்கு அந்துவன் மகனாகிய கீரனென்பதுபொருள். இவ

னுக்குக் கொடையைச் செவியறிவுறுத்திப் பாடியபுலவர் காவட்டனார்.
அம்பர்கிழான் அருவந்தை:—இவனைப்பாடியபுலவர்கல்லாடனார்;௩௮௫-ஆம் செய்யுளின் ௧-௧௦ஆம் அடிகளின் குறிப்பால் பிறவரலாறுகளை உணர்க. அவியன்:—ஒருபகாரி ; இவனைப்பாடியவர் மாறோக்கத்து நப்பசலையார்.
ஆதனழிசி:—ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியனுடைய நண்பருள் ஒருவன் ;
'ஆதனழிசியும்' (௭௧.)
ஆதனுங்கன் :—இவன் கொடையாளிகளுள் ஒருவன் ; வேங்கடமலையின் தலைவன் ; இவனைப்பாடியபுலவர் கள்ளில் ஆத்திரையனார். இவன் அருமைபெருமையை இப்புலவர்பாடிய பாடல்கள் நன்கு புலப்படுத்தும். ஆந்தை:—இவன் ஒல்லையூர்தந்தபூதப்பாண்டியனுடைய நண்பருள் ஒருவன் ;
இவனுடையவூர் எயிலென்பது ; 'மன்னெயி லாந்தையும்' (௭௧.)
ஆமூர் மல்லன்:—முக்காவனாட்டு ஆமூர்மல்லனென்னும் பெயரைப்பார்க்க.
ஆய்:—இவன், இருவகைவேளாளரில் உழுவித்துண்போர்வகையினன் ; அரச
ராற் கொடுக்கப்படும் வேளென்னும்உரிமையடைந்தோன்; கடையெழு வள்ளல்களில் ஒருவன் (௧௫௮); சிறந்தவீரன் (௧௨௯); பொதியின்மலைத் தலைவன்(௱௨௨); அதனருகேயுள்ள ஆய்குடி யென்பது இவனுடைய வூர்;
ஆய் அண்டிரனென்றும், அண்டிரனென்றும் இவன்பெயர் வழங்கும்;
பாணர்க்கும் இரவலர்க்கும் யானைகளையும் பிறவற்றையும் மிகுதியாகக்

கொடுத்தோன் (கரு); சுரபுன்னைப்பூமாலையை உடையவன்; சேர்ந்து
நாட்டாரோடு போர்செய்து அவர்களைப் புறங்காட்டிபோடச் செய்தோன்;
யாதொருபயனையுங்கருதாது இரவலர்க்குக்கொடுத்து
மகிழ்வித்தலையே
கடனாகவுடையோன் ; இவனுடைய நற்குண நற்செய்கைகள்யாவும்
மன



முருமிப் புலவர்கள் இவனைப் பாடியபாட்டுக்களால் (கஉஎ - கஙசு,
உசo-
சக, ஙஎச - ரு) நன்குபுலப்படும் ; இன்னும், பாம்பு
பெற்றுக்கொடுத்த
நீலவுடையினை ஆலின்கீழிருந்தருளிய தலைவனுக்கு
[பரமசிவனுக்கு]
இவன்கொடுத்தனன் ; இதனை, "நீல நாக நல்கிய கலிங்கம்,
மாலமர்
செல்வற் கமர்ந்தனன் கொடுத்த, சாவந் தாங்கிய
சாந்துபுலர் திணிதோ,
ளார்வ நன்மொழி யாயும்" (கூக -கூ) என்னும்
சிறுபாணாற்றுப்படையா
லுணர்க. இவனைப் பாடியபுலவர்கள்: உறையூர்
ஏணிச்சேரிமுட
மோசியார், துறையூர் ஓடைகிழார், குட்டுவன் கீரனார்.

இவர்களுள்

இவன்இறந்தபின்பும் இருந்தோர்: தறையூர் ஒடைகிழாரொழிந்த மற்றை

யோர்.

இயக்கன்:—இவன் ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியனுடைய நண்பருள் ஒரு

வன்; "வெஞ்சினவியக்கனும்" (எக.)

இருங்கோவேள்:—இவன் கொடையாளிகளுள் ஒருவன்; வடபக்கத்தில் ஒரு முனிவருடைய ஓமகுண்டத்திற்றோன்றித் துவராபதியை [துவாரசமுத்திரம்] ஆண்டு நாற்பத்தொன்பதுதலைமுறை தொன்றுபட்டுவந்த வேளிர்களுள் ஒருவன்; ஒருபெரியோர் தவஞ்செய்துகொண் டிருக்கையில் அவர்க்கு இடையூறுசெய்யவந்த புலியொன்றை அவர் கட்டளையின்படி கொன்றமையால் இவனுக்குப் புலிகடிமாலென்று ஒருபெயருண்டாயிற்றென்பர்; இவற்றை, "நீயே, வடபான் முனிவன் றடவினுட் டோன்றிச், செம்பு புனைந் தியற்றிய சேணெடும் புரிசை, யுவரா வீகைத் துவரை யாண்டு, நாற்பத் தொன்பது வழிமுறை வந்த, வேளிருள் வேளே", "ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்" என்பவற்றானுணர்க. வேள்பாரி இறந்த பின்பு அவன் புதல்வியரை அழைத்துவந்து மணஞ்செய்து கொள்ளும்படி கபிலர் புகழ்ந்துவேண்ட, அதற்கு உடம்படாது மறுத்தமையால், இவன்

அவரால் வெறுக்கப்பட்டான்.

இளங்கண்டீரக்கோ:—இவன் கண்டீரக்கோவின்தம்பி; இவனும் இளவிச்சிக்கோவும் ஒருங்கிருந்தபொழுது அங்குவந்த பெருந்தலைச்சாத்தனார் இவனை மட்டும் தழுவ, அவன் இவ்வாறுசெய்தது என்னையென, அவர் இவன் மேம்பாட்டைப் புகழ்ந்தும் அவனை அவமதித்தும் பாடினர்.

இளங்குமணன்:—இவன் குமணன்தம்பி ; இவன், தன்தமையனும் சிறந்த கொடையாளியுமாகிய குமணன்பாற் பகைமையுற்று அவன் நாட்டைக் கைக்கொண்டு, காட்டிற்புகுந்து ஒளித்திருந்த அவனைக் கொல்லநினைந்து பின்பு பெருந்தலைச்சாத்தனாரால் அப்பகைமை யொழிந்து வாழ்ந்தான்.

இளந்தத்தன்:—இவன் ஒருபுலவன்; சோழன் நலங்கிள்ளியிடத்திருந்து உறையூர் புகுந்தபொழுது, ஒற்றுவந்தானென்று காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளியால் எண்ணப்பட்டு, அவன் கொல்லப்புகுந்தவிடத்துக் கோவூர்கிழாராற் பாடி விடுவிக்கப்பட்டான்.



இளவிச்சிக்கோ:—இவன் விச்சிக்கோவின் தம்பி; இவனைப்பற்றியவரலாற்றை 'இளங்கண்டீரக்கோ' என்பதிற் காண்க. இவன்பெயர் இளவச்சிரக்கோ வெனவும் வழங்கும்; இவன் காலத்துப்புலவர் பெருந்தலைச்சாத்தனார்.

இளவெளிமான்:—இவன் வெளிமானுடைய தம்பி; உலோபகுணமுடையவன்; கல்விமான்கள்பால் அன்பில்லாதவன். அவனிறந்தபின்பு பெருஞ்சித்திரனார்வந்து, 'பரிசில்கொடு' என்றுகேட்பச், சிறிது கொடுத்தமையின் அவரால் அவமதித்துப் பாடப்பெற்றான் ; இவன்காலத்துப்புலவர்:

பெருஞ்

சித்திரனார்; கசுஉ, உ0எ, உ௯எ.

ஈர்ந்தூர்கிழான் தோயன்மாறன்:—இவன் சிறிது செல்வமுடையவனுயி

னும் பரிசிலர்க்கு இல்லையென்னாது கொடுப்போன்; தன் அரசனுக்குவந்த

துன்பங்களைத்தாங்கிப் பகைவரைவெல்லும் வீரமுடையோன்; இவனைப்

பாடியபுலவர்: கோனாட்டு எறிச்சிலூர் மாடலன்மதுரைக்குமரனார்; ஈரந்

தூர் கிழான்கோயமானெனவும் பிரதிபேதமுண்டு.

எயினன்:—ஒருபகாரி; இவனதூணர் வாகையென்பது; இவனைப் பாராட்டிய

புலவர்: மதுரைப் படைமங்கமன்னியார்.

எவ்வி:—வேளெவ்வியென்னும் பெயரைப்பார்க்க.

எழினி:—இவன் கடையெழுவள்ளல்களிலொருவன் ; கூவிளங்கண்ணியை

யுடையோன்; குதிரைமலை இவனுடையது; கருஅ.

ஏறைக்கோன் :—இவன் குறவர்கள்தலைவன் ; காந்தட்பூமாலையை அணி

வோன்; மலைநாட்டை ஆள்வோன்; நற்குணநற்செய்கையை உடையவன் ;

இவனைப் பாடியவர்: குறமகள்இளவெயினியென்பார்.

ஏறுதி திருக்கிள்ளி:—இவன் கொடையும் வீரமுமுடையோன் ; இவனைப்

பாடிய புலவர்: கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார்;

ஏனாதியென்பது அரசனாற் கொடுக்கப்படும் பட்டப்பெயர்; தோல்

காப்பியப் புறத்திணையியல் அ-ஆம் சூத்திர (ந) உரையிற்காண்க.

ஒல்லையூர்கிழான்மகன் பெருஞ்சாத்தன்:—இவன் வீரர்க்கும் பாணர்க்கும் விறலியர்க்கும் பேருதவிபுரிந்தோன்; வலியவீரன்; இவன் இறந்தபின்பு பிரிவாற்றாது பாடிய புலவர்: குடவாயிற்கீரத்தனார்; தொடித்தலைவிழுத்

தண்டினார். இவன்பெயர் சாத்தனெனவும் வழங்கும்.

ஓய்மான் நல்லியக்கோடன்:—இவன், ஓய்மானாட்டு நல்லியக்கோடனென வும் வழங்கப்படுவன். இவன் ஒருசிற்றரசன்; சிறுபாணாற்றுப்படைத் தலைவன்; இவன்காலத்தில் இவனைப்போன்ற பெருங்கொடையாளிகள்

யாரும் இலரென்று தெரிகிறது. பேகன்முதலிய ஏழுவள்ளல்களுக்கும்

இவன் காலத்தாற் பிந்தியவன்; இவை, அப்பாட்டிலுள்ள "வஞ்சியும்

வறிதே", "மதுரையும் வறிதே", "உறந்தையும் வறிதே" என்பவற்று

லும் அதன் அசு - ஆம் அடிமுதலியவற்றாலும் விளங்கும். இவன் பரம்

பரையில் ~~ஓய்மானல்லியாதன்~~ ஓய்மான்வில்லியாதனென்ற இரண்டு உப
காரிகள் இருந்து விளங்கினார்களென்று இந்நூலால் தெரிகின்றது.
இவனைப்பாடிய நல்லிசைப்புலவர்கள்: கல்லூர்கத்தத்தனாரும், புறத்
திணைநன்னாகனாரென்பவருமாவர். கிடங்கிலென்னுமூரும் திருத்திண்டீசு
வரமும் (திண்டிவனம்) ஓய்மானாட்டில் உள்ளனவென்று தென்னிந்திய
சிலாசாசனத்தின் ௩-ஆம் தொகுதி, உ-ஆம் பகுதி, உ௦௧-ஆம் பக்கத்தி
லுள்ள சாஸனத்தால் தெரிகின்றது; கிடங்கில் (சிறுபாண். ௧௬௦) என்
பது திண்டிவனத்தைச்சார்ந்த வூர்களுளொன்று; இக்காலத்துக் கிடங்கா
லௌவழங்கும் ; யாப்பருங்கலவிருத்தியின் மேற்கோளாகிய "கிடங்
கிற் கிடங்கில்" என்னும்வெண்பாவில் வந்துள்ள கிடங்கிலென்னுமூர்
இதுவே. இவ்வூரிற் சிதைந்த அகழியும் இடிந்தகோட்டையும் இன்றும்
காணப்படுகின்றன. இவனுடைய வூர்களுள் நன்றாகிய மாவிலங்கை

(களசு) புனநாட்டுக்கு வடக்குள்ள அருவாநாடு, அருவாவடதலை காடென்ற இரண்டும் சேர்ந்த இடமென்றுகூறுவர். அவ்வூர் சிறுபாணாற்றூலும் இவனதென்று தெரிகின்றது. இவனுடைய மற்றவூர்களுள் எயிற்பட்டினம், வேலூர், ஆமூரென்பவை தொண்டைநாட்டிலுள்ள இருபத்துநான்கு கோட்டங்களுள் மூன்று கோட்டங்களுக்குத் தலைநகரங்களாகவுள்ளவை, வேலூர் உப்புவேலூரென்று இக்காலத்து வழங்குகின்றதென்பர். "உறுபுலித் துப்பினோவியர் பெருமகன்" (சிறுபாண். கஉஉ) என்றதனால், இவன் ஓவியர்குடியிற்பிறந்தவனென்று எண்ணப்படுகிறான். ஓவியர்குடி நாகர்வகுப்பினுள் ஒரு பிரிவென்பர். இவன்பெயர் ஏறுமாநாட்டு நல்லியக்கோடனெனவும் வழங்கும்.

ஓய்மான்வில்லியாதன்:—இவன் இலங்கையென்னுமூர்க்குத்தலைவன்; இவ்விலங்கை மேற்கூறிய மாவிலங்கையென்னுமூரென்பதும், இவன் மேற்கூறிய ஓய்மான்நல்லியக்கோடன் பரம்பரையைச் சார்ந்தோனென்பதும் ஊகித்தறியப்படுகின்றன. இவனைப்பாடிய புலவர்: புறத்திணை நன்னாகனார்; நஎகூ.

கடியநெடுவேட்டுவன்:—இவன் கொடையாளிகளுளொருவன்; வேடர்கள்

தலைவன் ; தன்னைச்சார்ந்தவர்களுக்கு உதவிபுரிந்து பகைவர்களை அழிக்கும் வன்மையுடையவன் ; கோடையென்னும் மலைக்குத்தலைவன் ; இவனைப்பாடியவர் பெருந்தலைச்சாத்தனார்.

**கண்டீரக்கோப்பெருநள்ளி**:—இவன் கடையெழு வள்ளல்களிலொருவன் ; தோட்டியென்னும் மலைக்கும் அதனைச்சார்ந்த மலைநாட்டிற்கும் காட்டு காட்டிற்கும் தலைவன் ; "கரவாது, நட்டோ ருவப்ப நடைப்பரி காரம், முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத், துளிமழை பொழியும் வளி துஞ்சு நெடுங்கோட்டு, நளிமலை நாட னள்ளியும்" (௧0௩-௭) எனச் சிறு பாணாற்றுப்படையிலும் இவனைப் புகழ்ந்து கூறினர் ; இவன் பெயர் கண்டீரக்கோப்பெருநள்ளி யெனவும், நள்ளியெனவும், கண்டீரக்கோப்பெரு



நள்ளியெனவும் பிரதிகளிற் காணப்படும். இவனைப்பாடிய புலவர்: வன்பரணர், பெருந்தலைச்சாத்தனார்.

**கண்ணகி**:—இவள், வையாவிக்கோப் பெரும்பேகனுக்குரியவள்; ஒருகாலத்து அவனாற் றுறக்கப்பட்டுப் பிரிவாற்றாதவளாயிருக்கக், கபிலர், பரணர், அரிசில்

கிழார், பெருங்குன்றூர்கிழாரென்பவர்கள் . தன்னை அவரோடு சேர்த்து வைத்தற்கு அவனைப்பாடி வேண்டும்படி பெருமையுற்றவள் ; "கண்ணகி காரணமாக வையாவிக்கோப் பெரும்பேகனைப் பரணர்பாடிய கைக்கிளை வகைப் பாடாண்பாட்டு" (தொல். புறத்திணை. சூ. ௧௫ - ந) என்பதனுலும் இது விளங்குகின்றது. இவள், சிலப்பதிகாரத்துக் கூறப்பட்டுள்ள கண்ணகியல்லள்.

கந்தன்:—இது காஞ்சிப் பொருநனது இயற்பெயர்; ௧௮௦.

கபிலர்:—இவர்வரலாற்றைப் பாடினேர் பெயர் வரிசையிற் காண்க.

கரிகால்வளவன்:—இவன்வரலாற்றைச் சோழன் கரிகாற்பெருவளத்தானென்னும் பெயரிற் காண்க.

கரும்பனூர்கிழான்:—இவன் வேங்கடமலையைச்சார்ந்த நாட்டையுடையவன்; இவனைப்பாடியவர்: கன்னகனர், புறத்திணை நன்னகனர்.

காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளி:—இவன் சோழபரம்பரையைச் சார்ந்

தோன்; உறையூரிலிருந்தோன்; சோழன் நலங்கிள்ளிக்குப் பகைவன்;
இவன்பெயர் நெடுங்கிள்ளியெனவும் வழங்கும்; இவனைப்பாடியவர் கோ
வூர்கிழார். 'இளந்தத்தன்' என்னும் புலவர் இவன்காலத்தவரே. '
காரி
'யார்த்துத்துஞ்சிய ' என்பதற்குக் காரியாறென்னுமிடத்தில் இறந்த
வன்
பது பொருள்.

கானப்பேரெயில்கடந்த உக்கிரப்பெருவழுதி:—இவன், சோமான்
மாவெ
ண்கோ, சோழன் இராசசூயம்வேட்டபெருநற்கிள்ளி
யென்பவர்களுடைய
நண்பன்; கடைச்சங்கமிரீஇய பாண்டியர் நாற்பத்தொன்பதின்மருள்
ஒரு
வன்; இதனை இறையனாரகப்பொருளுரையாலும் சிலப்பதிகார
வுரை
யாலுமுணர்க. இவன் முன்னிலையில் திருக்குறள்
அரங்கேற்றப்பட்டது;

அக்குறளுக்கு இவன்கொடுத்த "நான்மறையின் மெய்ப்பொருளை" என்
னும் வெண்பாவே இதற்குத் தக்க சான்றாகும்; எட்டுத்தொகையுள்
அகநானூறு தொகுப்பித்தோன் இவனே. "புல்வரையிறந்த" என்னும்
புறப்பாட்டால், வேங்கைமார்பனென்னும் பகைவனுடைய [illegible]
அரண்மிலிருந்த பலசிறந்தபொருள்களுடைய 'கானப்பேரெயில்' [illegible]
பதென்று விளங்குகின்றது; இவன்பெயர் [illegible]
வழுதியெனவும், உக்கிரப்பெருவழுதி [illegible]
[illegible] உக்கிரப்பெருவழுதியெனவும் [illegible]
[illegible] ஐயூர்முடவனார், [illegible]

குமணன்:—இவன் பிக்ககொடையாளி; முதிரமென்னும் மலைக்குத்தலைவன் ;
இவன்காலம் கடையெழுவள்ளல்களின் பிற்காலம். தன்தம்பியால் காடு
கொள்ளப்பட்டுக் காடுபற்றியிருந்தபொழுது பெருந்தலைச்சாத்தனாரிரப்பத்
தனது தலை கொடுத்தற்கு வாளைக்கொடுத்தோன். இவன் கொடைவிசேட
முதலியவற்றை, இந்நூல், கருஅ - கசுரு-ஆம் பாடல்கள் நன்குபுலப்
படுத்தும். இவனைப் பாடியபுலவர்: பெருஞ்சித்திரனார், பெருந்தலைச்
சாத்தனார்.

கொண்கானங்கிழான்:—இவன் கொடை வெற்றி இரண்டு முடையோன்;
கொண்கானமென்னும் மலைக்குத்தலைவன் ; கொண்கானம் - கொங்
கணம். இவனைப் பாடியபுலவர்: மோசிகீரனார்.

கோச்சேரமான்

யானைக்கட்சேய்மாந்தரஞ்சேரலிரும்பொறை:—இவன் செங்கோலையுடையவன்; யானையினதுபார்வைபோலும் பார்வையையுடையவன்; கொல்லிமலைக்குத்தலைவன்; விளங்கிலென்னுமூரார்க்குப் பகைவரான்வந்த துன்பத்தைத்தீர்த்தோன்; கபிலருடைய நண்பன்; கடற்கரையி

லுள்ள தொண்டி யென்னுநகரத்தை ஆண்டோன்; ஒருகாலத்து, பாண்

டியன் தலையாலங்கானத்துச் செருவென்றநெடுஞ்செழியனாற்கட்டப்பட்

டுப் பின்பு அதனை நீக்கிக்கொண்டு புகழ்பெற்றோன்; சோழன் இராச

சூயம்வேட்ட பெருநற்கிள்ளியொடு போர்செய்தான்; இவன் பெயர் யானைக்கட்சேய்மாந்தரஞ்சேரலிரும் பொறையெனவும், சேரமான்யானைக் கட்சேய்மாந்தரஞ்சேரலிரும்பொறை யெனவும், சேரன் மாந்தரஞ்சேர

லிரும்பொறையெனவும் வழங்கும். எட்டுத் தொகையுள் ஒன்றாகிய ஐங்குறுநூறு தொகுப்பித்தோன் இவனே. இவனைப்பாடியபுலவர்: குறுங்கோழியூர்கிழார், பொருந்தில் இளங்கீரனார், கூடலூர்கிழார்; இவருள் இவன் இறந்த பின்பும் இருந்தவர்: கூடலூர்கிழார்.

கோப்பெருஞ்சோழன்:—இவனுடைய இராசதானி உறையூர்; பிசிராந்தையார்க்கும் பொத்தியார்க்கும் உயிர் நண்பன்; இவன் தன்பிள்ளைகளிருவரோடு பகைமைகொண்டு போர்செய்தற்கு எழுந்தபொழுது புல்லாற்றூர்

எயிற்றியனாரற்சமாதானம் செய்யப்பட்டான். செய்யுள் செய்தலில்வல் லவன்; இவன், பின்பு எல்லாவற்றையுந்துறந்து வடக்கிருந்து, உடன் உயிர் நீத்தற்குவந்த பொத்தியாரை 'மகன்பிறந்தபின்வருக' எனக்கூறித் தான்உயிர்நீத்துக் கல்லாகியும் அவ்வாறுவந்த அவர்க்கு இடங்கொடுத்துப் புகழ்பெற்றுவிளங்கினன்; இவன்வடக்கிருந்ததைக்கேட்டு வந்தபிசிராந்தை யாரும் உடன் உயிர்நீத்தனர்; இதனை, "புணர்ச்சி பழகுதல் வேண்டா" என்னுந் திருக்குறளுக்குப் பரிமேலழக ரெழுதிய விசேடவுரையாலும், "தோழிதாயே" (தொல். கற்பு. சூ. ௯௨ - ந) என்பதனுரையாலு முணர்க. இவன் இளஞ்சேரலிரும் பொறையால் வெல்லப்பட்டான் போலும் (பதிற். ௯ - ஆம் பத்தின் பதிகம்.) இவனைப் பாடியபுலவர்:



பிசிராந்தையார், புல்லாற்றூரெயிற்றியனார், பொத்தியார், கருவூர்ப்

பெருஞ்சதுக்கத்துப்பூதநாதனார் ; இவ்வரசனும் இப்புலவர்களும் அவ்

வச்சமயத்துக்கூறிய பாடல்கள் மிக அற்புதமானவை.

சிறுகுடிகிழான்பண்ணன்:—இவன் சோழன்குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி

வளவனுடைய நண்பருளொருவன்; சிறந்தகொடையாளி; "தனக்கென

வாழாப் பிறர்க்குரி யாளன், பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணி

லைப், புன்காழ் நெல்லிப் பைங்காய்" என அகநானூறு ௫௪ - ஆம் பாட்

டிஹும் இவன்பாராட்டப்பட்டிருத்தல்காண்க. இவன்பெயர் பன்ன

னெனவும் வழங்கும். இவனைப்பாடியவர்கள்: கோஹூர்கிழார், சோழன்குள

முற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், மதுரை அளக்கர் ஞாழார்மகனார்

மள்ளனார்.

சேரமான் அந்துவஞ் சேரலிரும்பொறை:—இவன்சோழன் முடித்தலைக்

கோப் பெருநற்கிள்ளியின் பகைவன் ; உறையூர் ஏணிச்சேரி முடமோசி

யாருடைய நண்பன் ; கரு.

சேரமான்கடலோட்டிய வேல்கெழுகுட்டுவன்:—இவன் போரில்வல்லவன் ;

இவனைப்பாடிய புலவர் பரணர். பதிற்றுப்பத்தில் ஐந்தாம்பத்தையேற்று

அதனைப்பாடிய பரணர்க்கு உம்பற்காட்டுவாரியையும் தன்மகன் குட்டுவன்

சேரலையும் பரிசில் கொடுத்தோனிவனே. இவன்கடலோட்டிய வரலாறு

"கோடுநரல் பௌவங் கலங்க வேலிட், டுடைதிரைப் பரப்பிற் படுகட லோட்

டிய, வெல்புகழ்க் குட்டுவன்" (பதிற். சசு), "மட்டவிழ் தெரியன் மறப்

போர்க்குட்டுவன், பொருமுரண் பெறாஅது விலங்குசினஞ் சிறந்து, செருச

செய் முன்பொடு முன்னீர் முற்றி, யோக்குதிரைப் பௌவநீங்க வோட்

டிய, நீர்மா ணெஃகம்" (அகநா. உகஉ), "கொடும்போர் கடந்து நெடுங்

கட லோட்டி" (சிலப். உஅ : ககக), "பொங்கிரும் பரப்பிற் கடல்

பிறக்கோட்டி" (ஷெ. ருப : கட்டுரை, கரு) என்பவற்றாலும் அறிய

லாகும். இவன் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனெனவும் வழங்கப்

படுவன்.

**சேரமான் கடுங்கோவாழியாதன்:**—இவன்சிறந்தவீரன்; பதிற்றுப்பத்தில், கபிலர்பாடிய ஏழாம்பத்தைக்கேட்டு அவர்க்கு நூறாயிரங்காணமும், ஒரு மலைமீதேறிக்கண்டநாடும் பரிசிலாகக் கொடுத்தனன். இதனைப் பதிற்றுப்

பத்தில் எ - ஆம் பத்தின் பதிகத்தாலுணர்க. இவனைப் பாடிய புலவர்:

கபிலர்.

**சேரமான் கருவூரேறிய ஒள்வாட்கோப்பெருஞ்சேரலிரும்பொறை :—**

இவனைக் கண்டபொழுது நரிவெரூஉத்தலையார்க்குப் பழைய நல்லுடம்பு

கிடைத்தது; இவனைப்பாடிய புலவர் அவரே.

**சேரமான்குட்டுவன் கோதை :—**இவன் இரவலர்க்கு வேண்டியவற்றைக்

கொடுப்பவன் ; வீரன் ; குட்டுவன் - குட்டநாட்டரசன்;

[குட்டநாடு - மலைநாட்டின் ஒருபகுதி.] இவனைப்பாடியபுலவர் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார்.

சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறை :—இவன்பெயர் குடக்கோ இளஞ்சேரலிரும் பொறையெனவும் வழங்கும்; பதிற்றுப்பத்தில், ஒன்பதாம்பத்திற்குத் தலைவன் இவனே ; இவனைப்பாடியவர் பெருங்குன்றூர்கிழார்.

சேரமான்குடக்கோ நெடுஞ்சேரலாதன் :—இவன் சோழன்வேற்பஃறடக் கைப் பெருநற்கிள்ளியோடுபோர்செய்து இறந்தான். அக்காலத்து அக் களத்தில் இவனைப் பாடியபுலவர்கள்: கழாத்தலையார், பரணர்.

சேரமான் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன்:—இவனைப்பாடிய புலவர் கோவூர்கிழார். இவன்பெயர் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவ னெனவும் காணப்படுகின்றது; சேரமானது குளமுற்றத்திலென்க.

சேரமான்கோக்கோதைமார்பன்:—இவன் சிறந்தகொடையாளி ; இவன் நகரம் தொண்டியென்பது ; இவனைப் பாடியபுலவர் பொய்கையார்; 'கோதை மார்ப னுவகையிற் பெரிதே' (அகநா. ௩௪௧) என நக்கீரனா

னும் இவன் பாராட்டப்பெற்றவன்.

சேரமான் சிக்கற்பள்ளித்துஞ்சிய செல்வக்கடுங்கோவாழியாதன் :— இவன் சிறந்தகொடையாளி; மிக்க வீரமுடையவன். இவனைப் பாடியபுலவர் குண்டுகட்பாலியாதனார்.

சேரமான்செல்வக்கடுங்கோ வாழியாதன் :—இவன் புலவர்பால் மிக்கவே

முடையோன். இவனைப்பாடியபுலவர் கபிலர்.

சேரமான்தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை:—இவன், தன் முரசு கட்டிலின்மேல் அறியாமல் ஏறித்துயின்ற மோசிகீரனாரைத் துன்பஞ் செய்யாமல் அவர் எழுமளவும் கவரிகொண்டு வீசியதனால் அவராற் புகழ்ந்து பாடப்பெற்றான். பதிற்றுப்பத்துள் எட்டாம்பத்திற்குத் தலைவன் இவனே. அதுபாடிய அரிசில்கிழார்க்கு ஒன்பதுனூறாயிரங்காணம் பரிசில் கொடுத்தான்; அதியமானுடைய தகடூரைவென்றான். தகடூர் யாத்திரையென்னுநூல் இவன்காலத்துச் செய்யப்பட்டது போலும்.

சேரமான்பாமுளூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி :— இவன், அரசர்களுக்கு இன்றியமையாத குணங்கள்பலவும் நிறைந்தவன்;

சோழபரம்பரையிற் பிறந்தவன். ஒருகாலத்துச் சேரமானுடைய பாமுளூரைவென்று கைக்கொண்டான். இதனாலேயே இவனுக்கு இப்பெயர் வந்தது; இரப்போரைப்பாதுகாத்தலையே விரதமாகவுடையவன்; இவன் பெயர் சோழன்நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னியெனவும் வழங்கும். சேரமான் பாமுளூரென்பதற்குச் சேரமானுடைய பாமுளூரென்று பொருள்கொள்க. இவனைப்பாடியபுலவர் ஊன்பொதிபசுங்குடையார்.

9

சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ :—இவன் கொடையும் வீரமும் உடையோன் ; பாலைநிலத்தைப்பாடுதலில் ஆற்றல் மிக்கவனாயிருந்தது பற்றி இவன் இப்பெயர்பெற்றான் ; இவன்பெயர் பாலைபாடிய பெருங் கடுங்கோவெனவும் காணப்படுகின்றது. இவனைப்பாடியவர் பேய்மகள் இளவெயினியென்பார்.

சேரமான் பெருஞ்சேரலாதன் :— இவன், சோழன் கரிகாற்பெருவளத்தானோடு போர்செய்து புறப்புண்ணாற்று நாணி வடக்கிருந்தான். இவனைப் பாடியவர்கள்: கழாத்தலையார், வெண்ணிக்குயத்தியார். இவன்பெயர் சேரமான் பெருந்தோளாதனெனவும் வழங்கும்.

சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன்:—இவன், பாரதப்போரிற் பாண்டவர் துரியோதனாதியரென்னும் இருவகையார் சேனைக்கும் உணவளித்தான். இவ்வரலாற்றை, "ஓரைவ ரீரைம் பதின்ம ருடன்றெழுந்த, போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த, சேரன் பொறையன் மலை

யன் திறம்பாடிக், கார்செய் குழலாட வாடாமோ வூசல், கடம்பெறிந்த

வாபாடி யாடாமோ வூசல்'' என்னும் சிலப்பதிகார வாழ்த்துக்காதைச்

செய்யுளும் நன்குபுலப்படுத்தும். இதனாலேயே இவன் இப்பெயர்பெற்

றான். இவனைப்பாடியபுலவர் முரஞ்சியூர் முடிநாகராயர்.

**சேரமான்மாந்தரஞ்** சேரலிரும்பொறை:—கோச்சேரமான் யானைக்கட்சேய்

மாந்தரஞ்சேரலிரும்பொறை யென்னும் பெயரைப்பார்க்க. மாந்தரன்-ஒரு

சேரன் (பதிற். கய) ; "இலமலை ரன்ன வஞ்செஞ் நாவிற், புலமீக் கூறும்

புரையோ ரேத்தப், பலர்மேச் தோன்றிய கவிகை வள்ள லிறையருக்

தானே வெலபோர் மாந்தரன், பொறையன்'' (அகநா. கசஉ) ; அம்மாந்

தரன் புதல்வனாதலின் இவனுக்கு இப்பெயர் வாய்த்தது. இவன் காலத்

துப் புலவர் வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தனர்.

**சேரமான் மாரிவெண்கோ**:--இவன் காலத்தரசரும் இவன்பால் அன்புடைய

ரும், பாண்டியன் கானப்பேரெயில்கடந்த உக்கிரப்பெருவழுதியும்

சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளியுமாவார். இவனைப்பாடிய
வர் ஒளவையார்.

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை :—[சேரச்
சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரஞ்சேரலிரும் பொறையென்னும்
பெயரைப் பார்க்க.] இதனை ஒட்டுப்பெயரென்பர் (இ - வி. சூ. ௬௮ -
உரை.) இவனைப்பாடிய புலவர் குறுங்கோழியூர்கிழார். இவனுடைய பிற
வரலாறுகள் ஐங்குறுநூற்றிற் காணலாகும்.

சேரமான்வஞ்சன்:—இவன் பரிசிலர்க்கு வேண்டியவற்றைக் கொடுப்போன்;
இவனைப்பாடியபுலவர் திருத்தாமனார்.



சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப்பார்ப்பான்கௌணியன் விண்ணந்தாயன்:—
பூஞ்சாற்றூரென்பது முடிகொண்டானாற்றங்கரையிலுள்ளது ; இவன்
அந்தணர்திலகன்; கௌண்டின்னிய கோத்திரத்திற் பிறந்தோன் ; ஓதல்
முதலிய அறுவகைத்தொழிலிலும் சிறந்த பார்ப்பனவாகை

பெற்றோன்;
மிக்க கொடையாளி; இவனைப்பாடியபுலவர் ஆவூர்மூலங்கிழார்.
பூஞ்சிற்
றூரென்று சில பிரதிகளிற் காணப்படுகின்றது.

**சோழநாட்டுப் பிடவூர்கிழார்மகன் பெருஞ்சாத்தன்:**—இவன் வேளாளரில்
உழுவித்துண்போன்; முடியுடைவேந்தர்க்கு மகட்கொடைநேர்தற்கு உரி
யோன் (தொல். அகத்திணை. சூ. ௩௦ - ந.) இவனைப்பாடிய புலவர்
மதுரை நக்கீரர்.

**சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளி:**—இவன் யுத்தத்தில் வல்ல
வன்; தேர்வண்மலையனென்பவனைத் துணையாகக்கொண்டு சேரமான்
மாந்தரஞ் சேரலிரும்பொறையோடுபொருது அவனைவென்றான்; சேர
மான் மாரிவெண்கோ, பாண்டியன் கானப்பேரெயில்கடந்த உக்கிரப்பெரு
வழுதியென்பவர்களின் நண்பன். இவனைப்பாடியவர்கள்: பாண்டரங்
கண்ணனார், ஔவையார், உலோச்சனார். இன்னும் இவன்காலத்துப்புலவர்

வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தனார்.

**சோழன் இலவந்திகைப்பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி:—** இவன் சிறந்தவீரன். இவனைப்பாடியபுலவர் சோணாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார். காலேகப்பள்ளியெனவும் பிரதிபேதமுண்டு.

**சோழன் உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னி:—** இவன் சோழன் கரிகாற் பெருவளத்தான் தந்தை; அழுந்தூர் வேளிடைமகட் கொண்டோன். இதனை, "மன்னர்பாங்கின்" (தொல். அகத்திணை. சூ. ௩௦ - ந) என்பதன் உரையாலுணர்க; "உருவப்பஃறே ரிளையோன்சிறுவன்" (கூo) என்றார் பொருநராற்றுப்படையிலும்; வீரத்திலும் கொடையிலும் சிறந்தோன். இவன்பெயர் இளையோனெனவும் வழங்கும். இவனைப் பாடிய புலவர்கள்: பரணர், பெருங்குன்றூர்கிழார்.

**சோழன்கரிகாற் பெருவளத்தான்:—** இவன் சோழன் உருவப்பஃறேரிளஞ் சேட்சென்னியின்புதல்வன் (பொருந. கூo); நாங்கூர் வேளிடைமகட் கொண்டோன் (தொல். அகத்திணை. சூ. ௩௦ - ந); தம்முள்மாறு பட்டுவந்து தன்னை இளையனென்றிகழ்ந்த முதியோர் பொருட்டுத் தான் முதியனாய் வந்து அவர்கள் வழக்கைத் தீர்த்தானென்றும், தான் கருவூரி லிருக்கையில், கழுமலமென்னு மூரிலிருந்த யானையாற் கொண்டுவரப்பட்டு அரசாட்சிக்குரியனாயினனென்றும், இளமையில்நெருப்பாற்சுடப்பட்டு உயிர் பிழைத்தானென்றும், இரும்பிடர்த்தலையாரை அம்மானாக உடையனென் றும் பழமொழி, உக, கஉ, கூ௫-ம் வெண்பாக்களாலும் அவற்றின்

உரைகளாலும் விளங்குகின்றன. பொருநராற்றுப்படைக்கும்பட்டினப் பாலைக்கும் தலைவன் இவனே. பட்டினப்பாலை கேட்டுக் கடியலூர் உருத் திரங்கண்ணனாருக்குப் பதினாறுநூறாயிரம் பொன் பரிசளித்தானென்று கலிங்கத்துப்பரணி, இராசபாரம்பரியம், உஉஆம்செய்யுளால் விளங்கு கின்றது. *வெண்ணியென்னும் ஊர்ப்புறத்தேயுள்ள போர்க்களத்திற் சேர மான் பெருஞ்சேரலாதனோடு போர்செய்து அவனையும் அவனோடு வந்த ஒருபாண்டியனையும்அக்களத்தில் இவன்வென்றான்; இஃது "இரும்பனம் போந்தைத் தோடும் கருஞ்சினை, யரவாய் வேம்பி னங்குழைத் தெரியலும், மோங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த, விருபெரு வேந்தரு மொருகளத்

தவிய, வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாட், கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்" (கசங-அ) என்னும் பொருநராற்றுப்படையால் விள ங்குகின்றது. மேற்கூறிய முடிமன்னரிருவரோடு பதினொரு வேளிரையும்

அக்களத்தே வென்றானென்று, "காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க்

கரிகா, லார்கலி நறவின் வெண்ணி வாயிற், சீர்கெழு மன்னர் மற லிய ஞாட்பி, னிமிழிசை முரசம் பொருகளத் தொழியப், பதினொரு வேளிரொடு வேந்தர்சாய, மொய்வலி யறுத்த ஞான்றைத், தொய்யா வழுந்தை யார்ப்பினும் பெரிதே" (அகநா. உசசு) என்பதனால் தெரி கின்றது. இவன் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து அரசாட்சி செய் தானென்பதும், ஒருகாலத்தில் இமயமலைவரையிற்சென்று இடை யிலுள்ள அரசர்களை வென்றானென்பதும் சிலப்பதிகாரம், கலிங்கத் துப்பரணி, பெரியபுராணம், காஞ்சிப்புராண முதலியவற்றால் தெரிந்தவரலாறுகள். இவன் வீரருட்சிறந்த வீரன். இவன்பெயர்

சோழன் கரிகால்வளவனெனவும், கரிகாலனெனவும், கரிகாலெனவும் (அகநா. கஉரு, உசசு) வழங்கும். இவனைப்பாடியவர்கள்: கருங்குழலாதனார், வெண்ணிக்குயத்தியார். இவர்களுள் இவன் இறந்தபின்பும் இருந்தவர் கருங்குழலாதனார்.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன்:—இவன், ஒரு சேரனோடு பகைமைகொண்டு அவனது கருவூரையழித்தான். இவனைப்பாடிய புலவர் கோவூர்கிழார்.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன்:—இவன் பாண்டியன் வெள்ளியம்பலத்துத்துஞ்சிய பெருவழுதியோடு நட்புடையவன்.

இவனைப்பாடியபுலவர்கள்: காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார், உறையூர் மருத்துவன்றாமோதரனார், கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார்.

---

* இவ்வூர், சோழநாட்டில் நீடாமங்கலத்திற்கு மேற்கேயுள்ளது; தேவாரம்பெற்ற ஸ்தலம்; கோவில்வெண்ணியென வழங்கப்படுகின்றது.



சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன்:—இவனது

இராசதானி
உறையூர் ; மிக்கொடையும் வீரமும் உடையோன்.
செய்யுள்செய்தலில்
வல்லவன். கருவூரை முற்றுகைசெய்து சேரனைவென்றவன்.
இவனைப்
பாடியபுலவர்கள்: • ஆலத்தூர்கிழார், மாறோக்கத்துநப்பசலையார்,
ஆவூர்
மூலங்கிழார், இடைக்காடனார், ஆடுதுறைமாசாத்தனார்,
ஐயூர்முடவனார்,
கோவூர்கிழார், நல்லிறையனார், எருக்காட்டூர்த்தாயங்கண்ணனார்,
வெள்
ளைக்குடிநாகனார் ; இவருள், இவன் இறந்தபின்பிரங்கி
பிரிவாற்றாது
வருந்தியவர்கள் : மாறோக்கத்துநப்பசலையார், ஐயூர்முடவனார்,
ஆடுதுறை
மாசாத்தனார்.

சோழன் செங்கணான்:—இவன் சேரமான்
கணைக்காலிரும்பொறையோடு
போர்செய்து அவனைப்பிடித்துக்கட்டிச் சிறைப்படுத்தினான்.
பொய்கை
யார்பாடிய 'களவழிநாற்பது' என்னும் நூலின் தலைவன்
இவனே.
இவன்காலத்துப்புலவர் பொய்கையார்; இப்புத்தகம் ௫௭ - ஆம்
பக்
கத்தின் அடிக்குறிப்பைப் பார்க்க.

**சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னி:**—இவன் மிக்க வீரமும் கொடையுமுடையோன்; இவனைப்பாடியபுலவர் ஊன்பொதிபசுங்குடையார்.

**சோழன் நல்லுருத்திரன் :**— இவன் நற்குண நற்செய்கையையுடையோன்; செய்யுள்செய்தலில் வல்லவன்; இவன்பாடியபாடலால், சிறந்த நட்புடையவர்பாற் பழகுதலில் இவன் மிக்கவிருப்பமுடையோனென்பது வெளியாகின்றது. கலித்தொகையில் முல்லைக்கலி இயற்றிய ஆசிரியன் இவனே. இவன்பெயர் சோழன் நல்லுத்தரனெனவும் வழங்கும்.

**சோழன் நலங்கிள்ளி:**—இவன் கவிசெய்தலில் வல்லவன்; பாண்டியநாட்டிலிருந்த எழரண்களை அழித்துக் கைக்கொண்டு அவற்றில் தனது புலிக்கொடியை நாட்டினன்; தன் தாயத்தாரோடுபகைத்து அவர்களிருந்த ஆவூரையும் உறையூரையும் முற்றுகைசெய்தான்; மாவளத்தானென்பவனுக்குத் தமையன்; இவனுக்குச் சேட்சென்னியென்றும் புட்பகையென்றும் தேர்வண்கிள்ளியென்றும் பெயருண்டு; நெடுங்கிள்ளியென்பவனோடு பகைமையுடையோன்; முன்னர், போர்செய்து வெற்றிகொள்ளுதலையே பொருளாகக்கொண்டிருந்த இவன் உறையூர்

மகள் நக்கண்ணையார்.

சோழன் முடித்தலைக்கோப்பெருநற்கிள்ளி:—இவன் சேரமான் அந்துவஞ்சேர

இரும்பொறையோடு பகைமையுடையன்; இவனைப்பாடியபுலவர் உறை

யூர் ஏணிச்சேரிமுடமோசியார்.

சோழன் வேற்பஃறடக்கைப்பெருநற்கிள்ளி:—இவன் சேரமான் குடக்கோ

நெடுஞ் சேரலாதனோடு போர்செய்திறந்தான். அக்காலத்து இவனைப்பாடிய

புலவர்: கழாத்தலையார், பரணர் ; இவன்பெயர் சோழன் வேற்பஃறடக்

கைப் பெருவிறற்கிள்ளியெனவும் வழங்கும்.

சோழியவேனாதி திருக்குட்டுவன்:—இவன் மிக்க கொடையாளி; இவனைப்

பாடியபுலவர் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமாரனார்.

தந்துமாறன் :—மிக்க ஒழுக்கமுடையவன் ; நிலையாமையை இவனுக்கு அறி

வுறுத்தியபுலவர் சங்கவருணரென்னும் நாகரியார்.

தருமபுத்திரன்:—இவன் ஓரரசன்; இவனைப்பாடியபுலவர் கோதமனார்.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்:—இவன் இளமைப்

பருவத்தில் தலையாலங்கானத்தில் கோச்சேரமான் யானைக்கட்சேய் மாக்

தரஞ்சேரலிரும்பொறையோடு போர்செய்து அவனைச்
சிறைப்படுத்திய
தன்றிச் சேரன் சோழன் திதியன் எழினி எருமையூரன்
இருங்கோவேண்
மான் பொருநன் என்பவரையும் வென்றான்; வேள் எவ்வியின்
மிழலைக்
கூற்றத்தையும் பழைய வேளிருடைய முத்தூற்றுக்கூற்றத்தையும்
கைக்
கொண்டான்; மறக்களவேள்வியும் அறக்களவேள்வியும் செய்தான்;
செய்
யுள் செய்தலில் வல்லவன்; புலவர்களிடத்து மிக்க அன்புள்ளவன் ;
உத்
தமகுணங்கள் பலவுமுடையோன். மாங்குடி மருதனாரியற்றிய
மதுரைக்
காஞ்சிக்குத் தலைவன் இவனே. "நகுதக்கனரே" (௭௨) என்னுஞ்
செய்
யுளை இயற்றியவனாதலால், இவன் நல்லிசைப்புலவர் வரிசையில்
விளங்
கியவனென்று தெரிகின்றது. "பல்யானை மன்னர் முருங்க" (யா.
வி.
மேற்) என்னும் பாடலும் இவன் வரலாற்றின் ஒருபகுதியைத்தெரிவிக்கும்.
இவன்பெயர் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்
செழியனெனவும், பாண்டியன் நெடுஞ்செழியனெனவும் வழங்கும். இவ
னைப்பாடியபுலவர்கள்: குறுங்கோழியூர்கிழார், குடபுலவியனார், கல்லாட

னார், மாங்குடிகிழார், இடைக்குன்றூர்கிழார்.

வெளிய குருகெல்லாம் பஞ்சவ, நுன்மாடக் கூடலிற் கல்லலித, சோழ னுறந்தைக் கரும்பினிது தொண்டைமான், கச்சியிற் காக்கை கரிது", "ஆழி யிழைப்பப் பகல்போ மிரவெல்லாந், தோழி துணையாத் துயர்தீரும்-வாழி, நறுமாலை தாராய் திரையவோ வென்னுஞ், செறுமாலை சென்றடைந்த போது" (யா - வி. மேற்) என்பவற்றால், இவன் பரம்பரையோருடைய பெருமைகள் நன்குபுலப்படும்.

நம்பிநெடுஞ்செழியன்:—இவன் அரசர்களுக்குரிய எல்லா இன்பங்களையும் அநுபவித்தவன்; பலவித நன்மைகளையுமுடையவன். இவனைப்பாடியபுலவர் பேரெயின்முறுவலார்.

நள்ளி:—இவன் கடையெழுவள்ளல்களில் ஒருவன்; இரப்போர்க்கு இழையணி நெடுந்தேர் களிறொடு ஈவோன் (அகநா. ௨௩௭.) நன்மரக் கோப்பெருநள்ளியென்னும் பெயரைப்பார்க்க. பாண்டிநாட்டில் நள்ளியென ஓரூருள்ளது.

நன்னன்:—இவன் விச்சிக்கோவின்பரம்பரையில் முன்னுள்ளோன்; பல்குன்றக்கோட்டமுடையவன். இவன்மகன் நன்னன்மீது (மலைபடு. ௬௪) இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் மலைபடுகடாம் பாடினர். "பெண்கொலை புரிந்த நன்னன்போல" (குறுந். ௨௯௨) என்றதனால் இவன் பெண்கொலை புரிந்தவனென்று தெரிகின்றது. ஆயினும் "சூழியானைச் சுடர்ப்பூண் நன்னன், பாழியன்ன", "நறவுமகிழ் இருக்கை நன்னன் வேண்மான், வயலைவேலி வியலூ ரன்ன" (அகநா. ௧௫, ௯௭) எனக் கூறியிருத்தலாற் புகழுடையவனென்றே இவன் நினைக்கப்படுகிறான். இவனைப்பாராட்டியபுலவர் பெருந்தலைச்சாத்தனார்.

நாஞ்சில்வள்ளுவன்:—இவன் நாஞ்சில்மலையையுடையவன்; சேரனிடத்தன்புற்று அவனுக்குப் படைத்துணைவனாய் நின்றோன்; பரிசிலர்க்குவேண்டியவற்றைக் கொடுப்போன்; இவனைப்பாடியவர்கள்: ஔவையார், ஒருசிறைப் பெரியனார், மருதனிளநாகனார், கருவூர்க்கதப்பிள்ளை.

நாலைகிழவன் நாகன்:—இவன் பாண்டியனுடையவீரன்; மிக்ககொடையையுடையவன்; இவனைப்பாடியபுலவர் வடமநெடுத்தனார். இவன் பெயர் நாலைகிழானாகனெனவும் வழங்கும்.

நெடுங்கிள்ளி:—இவன் சோழபரம்பரையைச்சார்ந்தோன்; ஆவூரும் உறையூரும் இவனுடையவை; சோழன்நலங்கிள்ளி இவற்றை முற்றியிருந்தபொழுது கோட்டைவாயிலை அடைத்துக்கொண்டு உள்ளேயிருந்த இவன் பின்பு கோவூர்கிழாரால் தேற்றப்பட்டான்; காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளியெனவும் இவனுக்குப்பெயருண்டு; இவனைப்பாடியபுலவர்: கோவூர் கிழார்.

## பாடப்பட்டோர் வரலாறு.

நெடுமானஞ்சி:—அதியமான் நெடுமானஞ்சியென்னும் பெயரைப்பார்க்க.
நெடுவேளாதன்:—இவனைப்பாடியவர் குன்றூர்கிழார்மகனார்.
பரதவர்:—தென்றிசைக்கட்குறுநிலமன்னர் ; "தென்பரதவர் மிடல்சாய" என இந்நூலிலும், "தென்பரதவர் போரேறே" (கசச) என மதுரைக் காஞ்சியிலும் கூறப்பட்டிருத்தல் காண்க.
பழையன்:— இவன் பாண்டிநாட்டிலுள்ள மோகூரிலிருந்த குறுநிலமன்னன் ; இதனை மதுரைக்காஞ்சியாலுணர்க. இவன் காவன்மரமாக ஒரு வேம்பினை வளர்த்துவந்தானென்று பதிற்றுப்பத்தால் தெரிகிறது (ரு-ஆம் பத்தின்பதிகம்.) சோழநாட்டுப் போரென்னுமூர்க்குத் தலைவனும் பழைய னொருவனிருந்தானென்றும் தெரிகிறது (அகநா. கஉசு.)
பாண்டியன் அறிவுடைநம்பி:—இவன் சிறந்த அறிவுடையோன் ; இவன் காலத்துப்புலவர் பிசிராந்தையார்.
பாண்டியன் இலவந்திகைப்பள்ளித்துஞ்சிய நன்மாறன்:—இவன் தமிழ் நாட்டரசர் மூவரினும் மேம்பட்டுவிளங்கினோன்.
இவனைப்பாடியவர்கள்:
மதுரை மருதனிளநாகனார், மதுரைக்கணக்காயனார்மகனார் நக்கீரனார், காவி

ரிப்பூம்பட்டினத்துக்காரிக்கண்ணனார், ஆவூர்மூலங்கிழார், இடைக்காடனார், வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்.

பாண்டியன் கருங்கையொள்வாட் பெரும்பெயர்வழுதி:—இவன் மிக்கவீரமும்கொடையுமுடையோன். இவனைப்பாடியபுலவர் இரும்பிடர்த்தலையார்.

பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப்பெருவழுதி:—இவனைப் பாடியவர் ஔவையார். கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி யென்னும் பெயரைப் பார்க்க.

பாண்டியன் கீரஞ்சாத்தன்:—இவன் வல்லோர்க்கு அன்புடன் உணவளிப்போன்; சிறந்தவீரன்; இவன்பெயர் பாண்டிக்குதிரைச்சாக்கையெனவும் பிரதிகளிற் காணப்படுகின்றது. இவனைப்பாடியவர் ஆவூர் மூலங்கிழார்.

பாண்டியன் கூடகாரத்துத்துஞ்சிய மாறன்வழுதி:—இவன் மிக்க வீரச் செல்வமுடையோன்; வடநாட்டரசரைவென்று அடிப்படுத்தினான். இவனைப்பாடியபுலவர்: ஐயூர்முடவனார், மருதனிளநாகனார்.

பாண்டியன் சித்திரமாடத்துத்துஞ்சியநன்மாறன்:—இவன் தன்னைச்சேர்ந்தோர்க்கு மிக்கநன்மையும் பகைவர்க்கு மிக்கதுன்பமும் புரிபவன்; இவனைப்பாடியவர் மதுரைக்கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்:—இவன் வரலாற்றைத் தலையாலங்கானத்துச்செருவென்ற நெடுஞ்செழிய னென்பதிற் காண்க.

பாண்டியன்நெடுஞ்செழியன்:—இவனைப்பாடியபுலவர் குடபுலவியனார்.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி:—இவன் அனேகயாகஞ் செய்தவன்; பல பகைவர்களையும் அறப்போரால்வென்று மறக்க





வேள்வி புரிந்தோன் ; பெரியவள்ளல் ; சிவபெருமானிடத்து மிக்க பக்தி யுடையோன் ; இவனைப் பாடியபுலவர்கள்: காரிகிழார், நெட்டிமையார், நெடும்பல்லியத்தனார் ; "பெருந்தோட் பல்யாகசாலை முதுகுடுமிப் பெரு வழுதி" (தொல். கிளவி. சூ. உக - சேனா. மேற்.)

பாண்டியன் வெள்ளியம்பலத்துத்துஞ்சிய பெருவழுதி:—இவன் சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருமாவளவனோடு நட்புடையன்; இவன் காலத் துப்புலவர் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்.

பாரி:—இவன், கடையெழுவள்ளல்களிலொருவன் ; முந்நூறு ஊரையுடைய பறம்பு நாட்டிற்கும் பறம்புமலைக்கும் தலைவன் ; முல்லைக்கொடிக் குத் தேர்கொடுத்தோன் ; இதனை, " சிறுவீ முல்லைக்குப் பெருந்

தேர் நல்கிய, பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற், பறம்பிற் கோமான்

பாரியும்" (அகூ-கக) என்னும் சிறுபாணாற்றுப்படையாலுணர்க. தன்னு

டைய முந்நூறு ஊரையும், மற்றைப்பொருள்கள் எல்லாவற்றையும்

பரிசிலர்க்குக்கொடுத்தோன்; மிக்கபராக்கிரமமுடையவன். இவனை வெல்லக்கருதிய தமிழ்நாட்டுவேந்தர் மூவரும் போரில் வெல்லவொண்ணாமையின் வஞ்சித்துக்கொன்றனர். இவன் இறந்தபின்பு இவன்நண்பராகிய கபிலர் சென்று இவன்மகளிரை மணஞ்செய்துகொள்ளும்படி விச்சிக்கோனையும், இருங்கோவேளையும் வேண்டி, அவர் மறுப்ப, அம்மகளிரைப் பார்ப்பார்க்கு மணம்புரிவித்தனர். இவனைப் பற்றி அவ்வச்சமயங்களிற் கபிலர் பாடியசெய்யுட்களை ஊன்றிப்படிப்பின் யாரும் மனமுருகாநிரார். சைவசமயாசாரியருள் ஒருவராகிய ஸ்ரீ சுந்தரமூர்த்திநாயனார் "கொடுக்கி லாதானைப் பாரியேயென்று கூறினுங் கொடுப்பாரிலை" என்று அருளிச்செய்திருத்தலின் இவன்காலம் அவர்காலத்துக்கு முந்தியதாகல்வேண்டும். இவன்மலைச்சுனை புலவர்பலராலும் புகழப்பட்டுள்ளது. "பலாஅம் பழுத்த" (பதிற். ௬௧) என்பதிலும் இவன் பாராட்டப்பெற்றுள்ளான். இவன்பெயர் வேள் பாரியெனவும் வழங்கும். இவனைப் பாடியவர்: கபிலர், இவன்மகளிர் முதலியோர். இவன்

இராசதானி. தமிழ்நாட்டரசர் மூவர்களுள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு சமயத்து யுத்தத்தில் உதவி புரிந்தவன்; புலவர்க்குப் பரமோபகாரி; முள்ளூர்மலையையுடையான்; அந்தணர்க்கு நிலங்கொடுத்தோன்; கடைஎழு வள்ளல்களிலொருவனென்று கூறப்படும் மலையமானிவனே. இவன் குதிரைக்குக் காரியென்றபெயர். மேற்கூறிய வள்ளல்களி லொருவனாகிய ஓரியென்பவனோடு போர்செய்தவன்; இதனை, "காரிக் குதிரைக்காரியொடு மலைந்த, வோரிக் குதிரை யோரியும்" (கக0 - கக) என்னும் சிறுபாணாற்றுப்படையாலுணர்க. இன்னும், "தஞ்சா முழவிற் கோவற் கோமான், நெடுந்தேர்க் காரி கொடுங்கா முன்றுறைப், பெண்ணையம் பேரியாற்று நுண்ணறல் கடுக்கு, நெறியிருங் கதுப்பினென் பேதைக்கு" (அகநா. ௩௫), "முரண் கொடுப்பிற் செவ்வேல் மலையன், முள்ளூர்க் கானம்" (குறுந். ௩௧௨), "ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப், பலருடன் கழித்த வொள்வாள் மலையனது, ஒருவேற் கோடி யாங்கு" (நற். ௧௭0) எனச் சான்றோர் இவனைப் பாராட்டியிருத்தல் காண்க. இவன்பெயர் மலையமானெனவும் காரியெனவும் மலயனெனவும் வழங்கும். இவனைப்பாடிய புலவர்கள்: கபி

முத்யன் :—ஆதனுகைனெபவன து இயறபெயா ; அபபெயரைப பாரக்க. மூவன் :—இவனொருசிறறரசன ; வரைநது பரிசிலகொடாமையால பெருநதலை சாததனாால இகழநது பாடபபடடான்.

மூவேந்தர் :—சேரசோழபாணடியா ; இவாகள வேள பாரியென்னும் வள்ளலை வஞ்சனையாற் கொன்றா.

யானைக்கட்சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறை :—கோசசேரமான் யானைக் கட்சேய்மாநதரஞ் சேரலிரும்பொறை யென்னும் பெயரைப பார்க்க.

வடிம்பலம்பநின்றபாண்டியன்.—இவன கடறதெயவததிறகுபபெரிய தொரு. விழவுசெயதான ; பஃறுளியாறறை உணடாககினன. இனனும் இவன் பெருமையை மதுரைக்காஞ்சியாலும், சிலப்பதிகாரத்தாலு முணாக.

வல்லார்க்கிழான்பண்ணன் :—இவன வலலாரெனனு மூரிலுளளவன் ; பணண னென்னுமியறபெயரையுடையான ; சிறறரசன. இவனைபபாடியபுல வா சோணாடடு முகையலூாசசிறுகருநதுமபியாா.

வல்வில்லோரி :—இவன் கடையெழு வளளலகளில ஒருவன் , கொலலிமலைக் கும் அதைசசாாநத காடடிறகும் தலைவன ; "காரிக குதிரைக காரியொடு

மலைந்த, நரிக குதிரை யோரியும்" எனச
சிறுபாணாற்றுப்படையிலும்

இவனைப்புகழ்ந்து கூறினர். இவன்பெயர் ஆதனோரியெனவும்
வழங்கும்.

இவனைப்பாடியபுலவர்கள்: வன்பரணர், கழைதின்யானையார்.

வாட்டாற்றெழினியாதன்:—இவன் சிறந்தகொடையாளி; வாட்டாறு என்னு
ஊரினுள்ளவன். இவனைப்பாடியபுலவர் மாங்குடிகிழார்.

விச்சிக்கோன்:—இவன் சிற்றரசருளொருவன். பாரிமகளிரை
மணஞ்செய்து

கொள்ளும்படி கபிலரால் வேண்டப்பெற்றோன். இவன்
சேரமான்



குடக்கோ விருஞ்சேரலிரும் பொறையால் வெல்லப்பட்டான் (பதிற். க-
ஆம் பத்தின் பதிகம்பார்க்க.)

வேளிமான்:—இவன் சிற்றரசன் ; மிக்ககொடையாளி ;
இவன்காலத்தவரும்

இவனிறந்தபின்பு பிரிவாற்றாதவருந்திப்பாடியவரும்
பெருஞ்சித்திரனர். வேங்கைமார்பன்:—இவன் கானப்பேரெயிலின்தலைவன்

; பாண்டியன் உக்கிரப்பெருவழுதியால் வெலப்பட்டான். இவன் காலத்துப்புலவர் ஐயூர் மூலங்கிழார்.

வேள்எவ்வி :—இவன், *வேளாளருள் உழுவித்துண்போர்வகையினன்; மிழலைக்கூற்றத்துத்தலைவன்; மிகுந்தகொடையாளி; தலையாலங்கானத்துச் செருவென்றபாண்டியன் நெடுஞ்செழியனால் வெல்லப்பட்டோன்; "நும்பார் வீகை மாவே ளெவ்வி", "எவ்வி தொல்குடி", "போரடு தானை எவ்வி", என இந்நூலிலும், "எவ்வி யிழந்த வறுமையாழ்ப் பாணர், பூவில் வறுந்தலை போல" (கக) எனக் குறுந்தொகையிலும் சான்றோர் இவனைப் புகழ்ந்து கூறியிருத்தல் காண்க. கடற்கரைக்கணுள்ள நீழலென்னுமூர் இவனுடையது (அகநா. ருகூசு.) இவனைப்பாடியவர்கள்: மாங்குடிகிழார், கபிலர், வெள்ளெருக்கிலையார். இவருள், இவன் இறந்தபின் வருந்திப் புலம்பியவர் வெள்ளெருக்கிலையார்.

வேள்பாரி:—இவன் கடையெழுவள்ளல்களிலொருவன் ; இவன் வரலாற்றைப் பாரி யென்னும் பெயரிற்காண்க.

வையாவிக்கோப்பெரும்பேகன் :—இவன், கடையெழுவள்ளல்களில்

வன் ; மலைநாட்டையுடையவன் ; மயிற்பறவைக்குப் போர்வை கொடுத்தோன். இவனது ஊர் நல்லூரென்பது ; ஆவியர்குடியிற்பிறந்தவன். இதனை இவன்பெயராலும், சிறுபாணாற்றுப்படையாலுமுணர்க. தனக்குரியவளாகிய கண்ணகியென்பவளைத் துறந்ததனால், 'இவளையங்கீகரித்துக்கொள்க' என்று கபிலர்முதலிய புலவர்களால் இரந்துபாடப்பெற்றான்; 'கண்ணகிகாரணமாக வையாவிக்கோப் பெரும்பேகனைப் பரணர்பாடிய கைக்கிளைவகைப் பாடாண்பாட்டு' (தொல். புறத்திணை. சூ. ௩௫ - ந.) "கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய, வருந்திற லணங்கி னாவியர் பெருமகன், பெருங்கல் நாடன் பேகனும்" (௮௫-எ) என்றார் சிறுபாணாற்றுப்படையிலும். இவன்பெயர் பேகனெனவும்வழங்கும். இவனைப் பாடியபுலவர்கள்: பரணர், கபிலர், வன்பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார்.

* "வேளாளர் உழுவித்துண்போரும், உழுதுண்போருமென இருவகையினர். அவருள், உழுவித்துண்போர் மண்டிலமாக்களும், தண்டத்தலைவருமாய்ச் சோழநாட்டுப் பிடவூரும், அழுந்தூரும், நாங்கூரும், நாலூரும், ஆலஞ்சேரியும், பெருஞ்சிக்கலும், வல்லமும், கிழாருமுதலியபதியிற்றோன்றி வேளெனவும், அரசெனவும் உரிமையெய்தினோரும், பாண்டிநாட்டுக் காவிதிப்பட்டமெய்தினோரும், குறுமுடிக் குடிப்பிறந்தோர முதலியோருமாய் முடியுடைவேந்தர்க்கு மகட்கொடைக்குரிய வேளாளராம்" தொல். அகத்திணை. சூ. ௩௦ - ந.

# விசேடக் குறிப்பு.

## மூலத்திலும் உரையிலும் கண்டவை.

அளவுகள்:—உழை, காழி, மா, வேலி.

ஆபரணவகை:— அருங்கலம், அருங்கலவெறுக்கை, ஐம்படைத்தாலி, கம்பியாகச்செய்தநூல், கிண்கிணி, குழவளை, தாலி, தொடி, நெற்றிப்பட்டம், புலிப்பற்றாலி, பொலங்கலம், பொலங்காசு, பொலந்தாமரை, பொற்கம்பி, பொற்றளிர், பொற்றும்பை, பொன்னுழிஞை, மங்கலியசூத்திரம், முத்தாரம், முத்துவடம், முன்கைக் கடகம், யானையின்நெற்றிப்பட்டம், வள்ளித்தொடி, வளை, வளைந்தகடகம், வீரக்கழல் (வீரகண்டை), வீரவளை.

ஆயுதவகை:—அடார், அம்பறாத்தூணி, அம்பு, அரம், அரிவாள், ஆயுதக் காம்பு, எஃகு, கண்ணுடைத்தகேடகம், கணிச்சிப்படை, கலப்பை, கழிப்பிணிப் பலகை, காழெஃகம், கிளிகடிகருவி (தட்டை), குந்தாலி, குறடு, கேடகம், கோடாலி, சக்கரம், சிறியிலையெஃகம், சேறுகுத்தி, தறிகை, துடுப்பு, நவியம், படைவாள், பூண்கட்டிய தண்டு, மழு, வாள்,

விலை, வேல், வேலுறை.

ஆறுகள்:—ஆன்பொருநை (பொருநை), கங்கை, காரியாறு, காவிரி, குமரி, பஃறுளி, பெண்ணை, வையை.

இடவகை :—அம்பலம், அரண்மனை, அரைமண்இஞ்சி, அரைமலை, அறச் சபை, ஆயுதக்கொட்டில, ஆலை, ஆற்றிடைக்குறை, ஆற்றின்கூடல, இடைகழி, இடை மதில், இளமரச்சோலை, இறைப்புரிசை, ஊர்ப்பொது, ஊருண் மரம், எயில், கட்டூர், கடைமடை, கடைமுகம், கரம்பை (பாழ்நிலம்), கருப் பம் பாத்தி, கருப்பாலை, கல்லணை, கல்வளை, கலிங்கு, கவர்த்தவழி, கழனி, கள்ளிற்கடை, காட்டுவழி, காட்டுவாயில், காலை ஓலக்கம், காவற்காடு, குகை, குடம்பை, குதிரைப்பந்தி, குறியஅரண், குறுநெறி, கூடாரம், கூற்றம், கொற்றுறைக்குற்றில, கோட்டம்பலம், கோடியரடுப்பு, சதுக் கம், சபை, சித்திரமாடம், சில்குடிச்சிறூர், சிற்றரண், சிற்றூர், சிறுமனை, சுடலை, செண்டுவெளி, சேக்கை, சேனைகளின் வரவைப் பார்த்துக் கொண்டு இருத்தற்குரிய இருப்பு, தாதெருமறுகு, திண்ணை, தெரு, நாளோ லக்கம், நெற்கதிர் வேய்ந்தவீடு, நெற்களம், பசுத்தொழு, படைக்கலக் கொட்டில், படைவீடு, பணிகளரி, பாணசேரி, பாத்தி, பாழூர், பீலிவேய்ந்த குடம்பை, புக்கில், புல்லாலவேய்ந்தசிறுமனை, புலிபொறித்தகோட்டை, புற்று, புறங்காடு, புன்செய், புனம், பூஞ்சோலை,
பெருங்குரம்பு, பொதியில்(அம்பலம்),

மணற்குன்று, மதில், மதிற்சூட்டு, மலைநாடு, மலைவழி, மாடம், முரம்புநிலம், முல்லைநிலம், முற்றம், முன்னூர்ப்பொதியில், யாகசாலை, யானைக்கூடம், வயல், வழி, வன்புலம், வாய்த்தலை, வாயில், வீட்டின்இறப்பு, விடுநிலம், வீடு, வீதி, வேண்மாடம், வேத்தவை, வேலி.

உடை வகை:—கலிங்கம், காழகவுடை, சிதார், சீரை, பூவடிவமைந்த ஆடை, தழைகளாலாகிய உடை, தழைகளாலும் பூக்களாலுமாகிய உடை, பழந்துணி, புதுக்காழ்ப்போர்வை, புதுமடி.

உணவுவகை:—அரிசி, அல்குபதம், அல்லியரிசி, அவல், அவிப்புழுக்கல், அவிழ், ஆட்டிறைச்சி, ஆமைப்புழுக்கு, ஆமையிறைச்சி, ஆமானின்குட்டிறைச்சி, இல்லடைகள், இலைக்கறி, இளநீர், உப்பிலாப்புழுக்கல், உலை, ஊன்சோறு, ஊன்றடி, ஊன்றுவை, கட்கலங்கல், கடுங்கள், கந்தாரம், கருனை, கள், களிகொள் சோறு, காடி, குய்யுடையடிசில், கூழ், சுட்டபனங்கிழங்கு, சுடுகிழங்கு, சோற்றுத்திரளை, துவை, நறுநெய், நனைக்கள், தினைப்புழுக்கு, தினையரிசி, நெய், நெய்ம்மிதிகவளம், நெற்கவளம், பழஞ்சோறு, பனைநுகும்பு, பனம்பிசிர், பாகு, பாசவல், பாலுலையில வெந்ததும் தேனொடுகலந்ததுமாய வரகரிசிச்சோறு, புல்லரிசி, புளிங்கறி, புளிங்கூழ், புளிமிதவை, புற்கை, பெருஞ்சோறு, பொரியல், மரையான்பாலுலையில் வெந்தசோறு, மான்வறைக்கருனை, மான்றசைப்புழுக் கல், மானிறைச்சி, முயலின் குட்டிறைச்சி, முயலினிணம், மோர், வரகின் சோறு, வராலிறைச்சி, வறை, விழுக்கு, விழுக்குநிணம், வீரபானம், வெய்தை, வேளையிலைவேவை, வேளைவெந்தை.

உலகவகை:—கீழுலகம், கோலோகம், சுவர்க்கம், நரகம், வீரசுவர்க்கம்.

உலோகவகை:—இரும்பு, செம்பு, பொன், வெள்ளி.

உவமைகள்:—அரசனுக்கு உயிர் உவமை, அருவிக்குத் துகில், அருளுக்கு நீர், அழகிய இடத்திற்கு ஓவம், அழித்தற்கு தீ, உபகாரியாகிய ஒருவனுக்கு அருஞ்சுரத்தின்மரம், உசாவின துஅகலத்திற்கு ஆகாயம், எருமைக்குக் குண்டுக்கல்,எருமைக்கொம்பிற்குப் பயற்றுநெற்று,கந்தைத்துணிக்குப்பாசி வேர், கள்மயக்கத்திற்குத் தேளின்கடுப்பு, கலிங்கவுடைக்குப் பாம்பின்தோல், கிணைப்பறைக்குக் களிற்றின்அடி, குடுமிக்கு மாறுவனை, குதிரைவேகத்திற்குக் காற்றின்வேகம், சாயலுக்கு நீர், செக்கெனுக்கு வேங்கைப்பூ, சேவற்கோழியின் கொற்றிச்சூட்டிற்கு முள்ளுமுருங்கைப்பூ, சேனைக்குக்கடல், தடாரிப்பறைக்குத் திங்களும் யானைக்காற்சுவடும், தமிழ்நாட்டரசர்மூவர்க்கு முத்தீ, தலைவனுக்குச் சூரியன், நண்பர்க்குக் கண், நரைக்கூந்தற்குக் கொக்கின் தூவி, நிணத்திற்குநெய்விழுதும் மெழுகடையும், நிமிர்ந்தஅவிழுக்குக் கொக்கின் நகம், நிரைக்கு விண்மீன், பகைவர்சேனையைத் தடுத்து நிற்கும் வீரனுக்குக் கடலைத்தடுத்து நிற்கும்கரை, பலவகைப் பூக்களாலாகியமாலைக்கு இந்திரவில், பன்றித்தலைக்கு உரல், பனையினடிக்கு முழா, பாசறைக்குக் கடல், புகழுக்குத்திங்கள், புகைக்கு இருளும் மஞ்சுதம், புதல்வர் தலைக்கு முனிவர்தலை, பொறுமைக்குநிலம், மகளிர் நடைக்கு மயில்நடை, மணிக்கு.

முழவு, மதப்பிழிந்தோதுக்கு யானையுண்ட கவளக்கோது, மதவிற்கு ஆனெய்,

முத்தாரத்திற்குப் பிறை, முயல்விழிக்கு நீர்க்கொப்புள், மேகத்தோற்றத்திற்கு [illegible], யானைச்செவிக்கு முறம், யானைத்தாளுக்குப் பனை, வண்மைக்கு மாரி,



வலிக்குக்காற்று, வறுமைக்கு அரா, வறுமைத்துன்பத்துக்கு நரகத்துன்பம், வீட்டிற்குக் கயம் (நீர்நிலை), வெள்ளைக்கூந்தலுக்கு விரித்தநூல், வேலுக்குக் கெண்டை, வெள்ளித்தீக்குத் தாமரை.

ஊர்கள்:—அம்பர், அரிசில் (அரியிலூர்), அலாயம், அழும்பில், அள்ளூர், ஆடுதுறை, ஆமூர், ஆய்குடி, ஆலங்கானம், ஆலங்குடி, ஆலத்தூர், ஆவூர்

இடைக்காடு, இடைக்குன்றூர், இலவந்திகைப்பள்ளி, ஈர்ந்தூர் (ஈரத்தூர்), உறையூர், உறையூர் ஏணிச்சேரி, ஊணூர், எக்கூர், எயில், எருக்காட்டூர், எருமைவெளி, எறிச்சிலூர் (எறிச்சி), ஐயூர், ஒக்கூர், ஒல்லையூர், கபிலகர், கரும்பனூர், கருவூர்,

கழனிவாயில், கள்ளில், காவிரிப்பூம்பட்டினம், கானப்பேர் (காளையார்கோயில்),

குடவாயில், குராப்பள்ளி, குளமுற்றம், குறுங்கோழியூர், குன்றூர், கூடலூர், கோட்டம்பலம், கோவலூர், கோழூர், சிக்கற்பள்ளி, சிற்றறையம், சிறுகுடி,

செக்இல், செருப்பாழி (கஎ௦), தகடூர், தங்கால், தலையாலங்கானம், தழும்பனூர், திருப்போர் (திருப்பூர், எச), துவராபதி, துறையூர்,
தொண்டி, நல்லூர், நாலை (நாலூர்), நெய்தலங்கானல் (நெய்தல் வாயில் அல்லது நெய்வாசலென்று காவிரிப்பூம்பட்டினத்துக் கருகே ஓரூருள்ளது),
நொச்சிநியமம், பாமுளூர், பிசிர், பிடவூர், புல்லாற்றூர், பூஞ்சாற்றூர், பெருங் குன்றூர், பேரரையம், பொருந்தில், பொறையாறு, போந்தை, மதுரை, மல்லி
(இப்பெயருள்ளஊர்கள்பல), மாங்குடி, மாவிலங்கை (இலங்கை, பெருமா விலங்கை), முகையலூர், முசுறி, முரஞ்சியூர், முள்ளூர், மையல், வஞ்சி,
வல்லார், வாகை, வாட்டாறு, விரிச்சியூர், விரியூர், விளங்கில், வீரை, வெண் குடை, வெண்ணி, வெள்ளைக்குடி, வேம்பற்றூர்.

ஊர்திவகை:—குதிரை, சகடம், தேர், யானை.

ஐதிஷ்யம்:—ஆலமரம்,சுடுகாடு, தூண், மலைஇவற்றில் தெய்வங்களுண் டென்றல்; மேல்கடல பழையதென்பது.

கட்டில்வகை:—அரசுகட்டில், ஆயுதக்கட்டில், கால்கழிகட்டில், முரசு கட்டில்.

கதைகள்:—மேற்கடல் சகரால் தோண்டப்பட்டது, சிபி

புறவிற்காகத்

தலையிலேறியது, சீதை ஆபரணங்களை முடிந்துவிழ்த்தியது, பரமசிவன் முப்

புரங்களை எரித்தது, பாண்டவர் நூற்றுவரோடு போர்புரிந்தது.

கூத்துவகை:—அல்லியக்கூத்து, குரவைக்கூத்து.

கூற்றங்கள்:—மிழலைக்கூற்றம், முத்தூற்றுக்கூற்றம் (முத்தூர்க்கூற்றம்).

கோயில்கள்:—இந்திரன்கோயில், சிவாலயம், முருகக்கடவுள் கோயில்.

சாதிகள்:—அந்தணர், அரசர், அளவர், இடையர், இயவர், உப்புவாணிகர், உமணர், உழவர், எயிற்றியர், கடம்பர், கடைசியர், கம்மியர், களமர், கிளைஞர், கிளைமகள், குயவர், குறத்தியர், குறவர், குறும்பர், கூத்தர், கொல்லர், கோசர், தச்சர், தேர்ப்பாகர், துடியர், துளையர், பரதவர், பிணையர், பாடினி,



பாணர், பாணிச்சி, புலையர், பூண்செய்கொல்லர், பூவிலைப்பெண்டு, பொதுவிலை மகளிர், பொருநர், மடையர், மழவர், மறத்தியர், மறவர், மோரியர், யவனர், யாழ்ப்புலவர், யானைப்பாகர், யானைவேட்டுவர், வடவடுகர், வண்ணாத்தி, வணிகர், வலைஞர், விலைப்பெண்டிர், வேடர்.

சிறுதெய்வங்கள்:—கள்ளி நீழற்கடவுள், கூளி, சதுக்கத்தெய்வம், பேய், பேய்ப்பெண்டிர், பேய்மகள், பேயாயம்.

தானியங்கள்:—அவரை, உழுந்து, எள், கடலை, குளநெல், கொள், செந்நெல், தினை, நெல், பயறு, மலைநெல், ராக்கில்நெல், வரகு, வெண்சிறுகடுகு, வெண்ணெல், வெள்ளெள், வெள்ளைவரகு.

துவசவகை:—இடபக்கொடி, கருடக்கொடி, தகிர்க்கொடி, காட்கொடி பனைக்கொடி, புலிக்கொடி, மயிர்கொடி, மீனக்கொடி, விசயக்கொடி (வெண் கொடி).

தெய்வவகை:—அருந்ததி, இந்திரன், இயக்கன், இராமன், உலகபாலர், கண்ணபிரான், காலன், சிவன், ஞாயிறு, திருமகள், திருமால், நாமக்கோன்,
பலராமர், பிதிரர், பிரமதேவர், முருகக்கடவுள், யமன், வியாசீஸ்கள்.

தொகைகள்:—அங்கம் - ௬ ; அக்கம் - ௪ ; அந்தணர் தொழில் - ௬ ;
அரசர்மூவர் ; இலாஞ்சனை - ௭ ; உறு - ௪ ; உலகம் - ௩ ; உழாமையாலுள
வாகும் பயன்-௪ ; ஊர் - ௩00 ; எச்சம் - ௮ ; எயில - ௰ ;
ஐம்படைத்தாலி;
கணம்-௧௮; கழல் - ௨ ; காட்டுப்பசு - ௭ ; குடிகள் - ௪ ; திசை - ௪ ; நிதி -
௯ ; தீ - ௩ ; துரியோதனாதியர் - ௧00 ; நாட்டுப்பசு - ௭ ; நீர் - ௩ ; பாடாண்
துறை - ௨௧; பாண்டவர் ஐவர் ; பூக்கள்-௪ ; பூதம் - ௫ ; பெருவேளிர் ஐவர் ;
பொறி - ௫ ; மருந்து - ௨ ; முரசு - ௩ ; மூர்த்திகள் - ௩ ; வருணம் - ௪ ;
வள்ளல்கள் - ௭ ; வேதம் - ௪ ; வேள்வி - ௨௧.

நாடுகள்:—காட்டுநாடு, கானநாடு, கொங்குநாடு, கோநாடு, சோநாடு, பரம்

புகாடு, பெண்ணைகாடு, மலைகாடு, மாசேரக்கம், முக்காவனுடு, வேங்கடகாடு.

நார்வகை:—ஆத்திநார், தாழைக்கொடிநார், மரல்நார்.

நீர்நிலைவகை:—அருவி, ஆறு, உவர்க்கூவல், ஊருண்கேணி, கயம், களா

நிலக்கிணறு, கற்கூவல், காட்டாறு, சிற்றாறு, சுனை, நிறைக்குளம், பொய்கை,

மடு, வல்லுவர்க்கூவல்.

நீர்மிதவை:—அம்பி (ஓடம்), அறத்துறையம்பி, கப்பல், கழித்தோணி,

தெப்பம், தோணி, நாவாய், மீன்படகு.

நீர்வாழ்வன:—அயிரைமீன், ஆமை, ஆரன்மீன், இறாமீன், கயல்,வேடி, கெடிற்றுமீன், கொழுமீன், கோட்டுமீன், சங்கு, சிப்பி, சிறுசினமீன், சுறாமீன், நத்தை, நந்திவோற்றை, நீர்க்கோழி, நீர்நாய், நுழைமீன், மலங்குமீன், முதலை, வரால், வாளை.

நூல்கள்:—அங்கங்கள், அருத்தநூல், தருமநூல், வேதங்கள்.

11



நோய்கள்:—விளைவாலுண்டாகும் நோய், பஞ்சிகளையாப்புண்,

புண் வழலை, மிடற்றுப் பசும்புண், வயாநோய்.

பண்கள்:—இரக்கற்பண், காஞ்சிப்பண், குறிஞ்சிப்பண், செவ்வழிப் பண், படுமலைப்பண், மருதப்பண், விளரிப்பண்.

பந்தர்:—கூவைவிலைப்பந்தர், தழைப்பந்தர், படுஞ்செய்பந்தர்.

பரிசில்:—ஊர்ப்பரிசில், ஓடைப்பரிசில், யானைப்பரிசில் முதலியன.

பலி:—குருதிப்பலி, நாட்பலி.

பழவகை:—ஆலம்பழம், களக்கனி, துடரிப்பழம், நெல்லிக்கனி, பலாக் கனி, பனம்பழம், மாங்கனி, விளாங்கனி.

பழமொழி:—கிளியீடுவாய்த்தாற் போல்வது, கொண்டைமேற் காற்

றக்கச்செல்லல்.

பறவைவகை:—அன்னப்பறவை, ஆந்தை, இதல, ஈசல் (செம்புற்றீயல்),

கழுகு (கழுகின்சேவல்), காக்கை, காட்டுக்கோழி, கானக்காக்கை, கிளி, குயில்,

குருவி, குறும்பூழ், கொக்கு, கோட்டான், செவ்வரிநாரை, தும்பி, தூக்கணங்

குருவி, தேனீ, நாரை, பருந்து, புதா, புறவு, பூழ், பேராந்தை, பொருவல்,

மயில், மனைக்கோழி, மிஞிறு, வானம்பாடி.

பாத்திரங்கள்:—உண்கலம், கட்குடம், கருங்கலன், கலிக்குந்தாழி,

கிண்ணி, குடம், குடை (உண்கலம்), குண்டிகை, கோய், சமைக்கும்பானை,

சாடி, சேறுபட்டதசும்பு, தாலம், தாழி. பனங்குடை, பாற்பானை, பானை,

பொற்கலம், மண்டை, மதுக்குடம், மிடா, முதுமக்கட்டாழி, வட்டி, வெண்
மண்டை, வெள்ளிக்கலம்.

பால்வகை :---கவரிமாவின் பால், பசுப்பால், மரையாவின்பால்.

பாவைவகை:—அல்லிப்பாவை, கண்மணிப்பாவை, கொல்லிப்பாவை,
தெற்றிப்பாவை, மணற்பாவை, வண்டற்பாவை.

பிறபெயர்கள்: —அடிக்குமணி, அதட்படுக்கை, அமிழ்தம், அரக்கன்,
அரில், அழற்பள்ளிப்பாயல், அரக்கற்பு, ஆகுதி, ஆணி, ஆயுத இலக்கம், ஆயு
தப்பிடி, ஆரக்கால், ஆரநெருப்பு, ஆலம்பொந்து, ஆலம்வீழ், இந்திரவில், இரா
யசூயம், இலக்கம்,ஈமவிளக்கு, உப்பு,உரல்,உருளி, உருளை,உலக்கை, உலைக்கல்,
உள்ளிடுபெருக்கை, எண்ணெய், எந்திரம், எரிகொள்ளி, எழுத்தாங்கியகதவு,
ஏணி, ஏத்தம், ஏர், ஒடுங்காழ்ப்படலை, ஒத்தல் (தாளம்), ஓலைக்கடை, ஓமகு
ண்டம், கச்சு, கச்சை, கடகப்பெட்டி, கடல்முத்து, கடற்றூரம், கடிவாளம்,
கடுந்தெற்றுமூடை, கடைக்கொள்ளி, கண்ணடி, கண்ணேணி, கணக்காயர்,
கணையமரம், கதவு, கருங்கல், கப்பற்பாய், கரும்பின்பூ, கரும்பெந்தி
ரம், கயசம், கவரி, கழிப்பிணிப்பலகை, கற்பகச்சோலை, காம்பு,

மரமுதலியன :—அதிரல், அல்லி, அலரி, அவரை, ஆசினிமரம், ஆத்தி, ஆம்பல், ஆம்பற்கிழங்கு, இரவமரம் (இரமரம்), இருப்பை, இருவாட்சி, இலுக்தை, இலைப்பாசி, ஈத்து, ஈரப்பலா, உடை, உழிஞைக்கொடி, உழுஞ்சில், உன்னம், ஊகம்புல், எருக்கு, எள், ஓடு, கடம்பு, கடலமுள்ளி, கலம்பு, காந்தை, கருநெய்தல், கரும்பு, கழற்கொடி, கழைக்கரும்பு, கள்ளி, களாச்செடி, காஞ்சி,



காந்தள், காயாச்செடி, காளாம்பி, காளான், கீரை, குச்சப்புல், குமிழ், குரலிக் கொடி, குருந்தமரம், குளநெல், குன்றி, கூதளம், கூவிளை, கூவை, கொற்றுழிஞை, கொன்றை, கோங்கு, சந்தனம், சிறுகடுகு, சுரபுன்னை, சுரைக்

கொடி, செங்கழுநீர், செருந்தி, தகரமரம், தருப்பைப்புல், தாமரை, தாழை, தா[illegible]ச்செடி, தில்லைமரம், தினை, துடரி, தும்பை, தெங்கு, தெறுழ்க்கொடி, நரந்தப்புல், நரந்தம், நறும்புல், நாவல், நெட்டி, நெருஞ்சி, நெல்லி, நொச்சி, பகன்றைக்கொடி, பருத்தி, பலா, பனை, பாகல், பாதிரி, பீர்க்கு, புளி, புளிமா, புன்னை, பூவாதுகாய்க்குமரம், மரல், மருதம், மலைமல்லிகை, மிளகுகொடி, முஞ்ஞை, முசுண்டை, முண்முருங்கை, முல்லைக்கொடி, முல்லைப்புதல், முன்னை மரம், மூங்கில், மூங்கிலமுளை, வடகுன்றத்துச்சாந்தம், வயலைக்கொடி, வள்ளிக் கிழங்கு, வள்ளிக்கொடி, வள்ளைக்கொடி, வாகை, வாழை, விளாமரம், வெட்சி, வெண்காந்தள், வெண்சிறுகடுகு, வெண்ணெட்டி, வெள்ளரி, வெள்ளெருக்கு, வேங்கை, வேம்பு, வேல், வேலை.

மலைகள் :—இமயம், கண்டீரம், குடகமலை, குதிரைமலை,

கொண் கானம், கொல்லி, கோடை, தோட்டிமலை,
தோன்றிமலை,காஞ்சின்மலை, பறம்பு, பாயல், பூங்குன்றம், பொதியின்மலை,
பொன்படுநெடுவரை, முதிரம், முள்ளூர் மலை, விச்சிமலை, வேங்கடம்.

மன்றவகை:—இரத்திமன்றம், டலாமன்றம், விளாமன்றம், வேப்பமன்றம்.

மாலைவகை—அடையாளமாலை, ஆத்திமாலை, ஒருகாழ்மாலை, கடன் முள்ளிப்பூமாலை, கண்ணி, காஞ்சிப்பூமாலை, காந்தட்பூமாலை, குடர்மாலை, கூவி எங்கண்ணி, சுரபுன்னைப்பூமாலை, செம்பூங்கண்ணி, தழைமாலை, தளிர்மாலை, தளிரும்உழிஞையும் கலந்தமாலை, தும்பை மாலை, நரந்தப்பூமாலை, நூலரிமாலை, பகைமாலை, பல்காழ்மாலை,பனங்தோடடில்வேங்கைப்பூக்களைவைத்துத்தொடுத்த மாலை, பனமாலை, பீலிக்கண்ணி, புறத்திணைமாலை, புன்னைமாலை, பூக்களுடன் இலைகளைவிரவிகோத்தமாலை, வஞ்சிமாலை, வளையமாலை, வேப்பமாலை.

முடிமன்னர் :—சேரர், சோழர், பாண்டியர்.

முள்வகை :—இடுமுள், உடைமுள், கயன்முள், கழன்முள், கள்ளிமுள், நெருஞ்சிமுள், வேலமுள்.

யுத்தவகை :—அறப்போர், கன்னிப்போர், குதிரைப்போர், தேர்ப்போர், நீர்ப்போர், மற் போர், யானைப்போர், வாடபோர், விழவு மேம்பட்ட போர்,விற் போர், வேற்போர்.

வழக்கங்கள் :—அரைத்தமண்ணல் மதிலமைத்தல், அவலை வாயிலடக் கிக்கொண்டு நீக்ததற்கு மடுவிற்பாய்தல்,ஆகுதிசெய்தல், ஆபரணங்களில் அருட் புத்தொழிலமைத்தல், ஆம்பலிலையால்மதுவையுண்ணல், ஆம்பற்கொடியை வளையாகஅணிதல், ஆயுதங்களுக்கு செய்பூசிப் பீலியணிந்து மாலைசூட்டல், ஆறலைத்தல், இசைகேட்போர் தலையசைத்தல், இறந்தவர்க்குப் பிண்டோதகக்

குக்கொடுத்தல், பன்னுடையார்கள்ளைவடிதல், பனங்குருத்தில் வேங்கைப் பூவைவைத்துத்தொடுத்தல, பாலில் உறையைதெறித்தல, பிணத்தைத்தாழி யாற்கவித்துப்புதைத்தல், புதிதுண்ணல, புறத்திணைக்குரியபூக்களை பொன்னாற் செய்யப்படல், புறத்திணைக்குரியபூக்களைக்காலத்திற்பறித்தல் அலைதுவாங்கிக் கோடல்,பெண்டிர் பருத்திநூற்றல, பொதுவிடத்துள்ளவேட்பக்தளிரைச்சூடல், போர்க்களத்தைத் தமதாக்கிக்கோடல, போரகுசசெலவோர் கயத்தில் மூழ்கிச் செலலல, மணியை ஒப்பமிடல், மருந்திற்காக மரககளிலிருகது பாலெடுத்தல, மழையின் பொருட்டுத் தெய்வத்திற்குப் பலிதூவுதல, மன்றத்தில பாணர் முதலியோர் முழுவைக்கட்டுதல், யானைக்குப்பூணணிதல, யானையின்மீது கொடி.

யெடுத்தல், யுத்தத்தில இமைத்தவர் முதலியோரோடு போர்செய்யாமை, வஞ்சிபாடல், வையாவும்மகளிர் மண்ணுண்ணல், வாழைபிலையிதுண்டல், வீர முரச நீராட்டம், வெறியாடல், வேட்டையாடல், வேலுக்குப் பீலியணிதல்.

வாணிகம்:—உடைவாணிகம், ஓலைவாணிகம், காவியாபாரம், கூல வாணிகம், பொன்வாணிகம்.

வாத்தியவகை:—அரிப்பறை, அனந்தப்பறை, ஆகுளிப்பறை, தும்பற குழல், உடுக்கை, ஏற்றுத்தோல்முரசம், ஒருகட்பறை, ஒருகண்மாக்கிணை, கண்

விடுதும்பு, கைலமுரசம், கிணை, சல்லிப்பறை, சாக்காட்டுப்பறை, சிறுகிணை, சிறுபறை, சீறியாழ், செருப்பறை, தடாரிப்பறை, தண்ணுமை, தெய்தற்பறை,

பதலை, பலிபெறுமுரசம், பெருவங்கியம், பேரியாழ், போர்ப்பறை, மணப்பறை, மத்தளம், முரசம், முழவு, யாழ், வேய்ங்குழல்.

வாழ்த்துவகை:—ஆற்றுமணலினும் நின் ஆயுள்சிறக்க, கழனியில்விளையும் நெல்லினும் நீவாழ்க, காவிரிமணலினும் நின்ஆயுள்சிறக்க, நின்தார்வாழ்க, நின்தாள்வாழ்க, நின்நாண்மீன் நிலைத்திடுக, நின்பகடுவாழ்க, நின்புரவிவாழ்க, பொருநைமணலினும் நீவாழ்க, மழைத்துளியினும் பலநாள் நீவாழ்க, வாழ்க நின் கண்ணி, விண்மீனினும் உன்னுடைய நாள் பொலிக.

விலங்குமுதலியன:—அணில், ஆடு, ஆமான், ஆமை, ஆவேறு, ஆளி, இரலைமான், ஈர், உடும்பு, எய்ம்மான், எருது, எருமைக்கடா, எலி, எறும்பு, ஐந்தலைநாகம், கடமானேறு, கடுவன், கலைமான், கவரிமா, கழுதை, கறையான், காட்டுப்பசு, காட்டுப்பூனை, குதிரை, குரங்கு, குரற்பசு, குறுநரி, கேழற்பன்றி, சிங்கம், சிலைப்பேன், செம்மறியாடு, செம்முகக்குரங்கு, தேள், நரி, நாய், பசு, பல்லி, பன்றி, பாம்பு, பார்வைப்பிணை, புலி, புள்ளிமான், பேன், மநதி (தய்த் தலைமந்தி), மரையா, முசுக்கலை, முயல், முள்ளம்பன்றி, யாளி, யானை, வீட் டெலி, வெண்ணரி, வெருக்குவிடை, வெள்ளாடு.

விழாவகை:—கடற்றெய்வவிழா, சிறுசோற்றுவிழா, புதுதவிழா, வதுவை விழா.

வேலிவகை:—இடுமுள்வேலி, கழைமுள்வேலி, நெல்லிவேலி, பருத்தி வேலி, மலைவேலி, முல்லைவேலி, முள்வேலி.

வேள்வி:—அரக்களவேள்வி, சோமயாகமுதலியன, மரக்களவேள்வி.

உரையில்மட்டும் கண்டவை.

அலங்காரங்கள்:—இரப்பஇழிந்தவுவமை, ஒட்டணி, தலைப்பெயலு

வமை, தற்குறிப்பேற்றம், நவலாநவற்சி, பழித்தது போலப் புகழதல்.

இடைச்சொற்கள்:—அத்தை, அம்ம, ஆங்க, ஆகு, ஆல, இசின்,

இயர், உம், என, ஏ, ஒன்றோ, ஓ, ஓர், ஓரும், கண, கொல், சின், தலை, தான்,

தில், தில்ல, பிற, மதி, மதியத்தை, மற்று, மன், மா, மாதோ, மார், மே,

மோ, வாழி.

இலக்கணக்குறிப்பு:—அவ்வழிச்சாரியை, அன்மொழித்தொகை, ஆகு

பெயர், ஆற்றலாற் சொலவருவித்தல், ஆனந்தப்பையுள், இகழ்ச்சிக்குறிப்பு,

இசின் தன்மைக்கண் வருதல், இடத்துநிகழ் பொருளின்றொழில் இடத்துமே

லேறி நிற்றல், இடவழுவமைதி, இயர் வியங்கோள் விகுதியென்பது, இரங்கற்

குறிப்புமொழி, இருபெயரொட்டுப் பண்புத்தொகை, உண்டென்பது பொது

வினை அன்றெனல், உம் உகரதாதல, எச்சவும்மை, ஒருசொனீர்மைப்பாடு,

ஒருமைச்சொல் பன்மைக்கேற்ப நிற்றல், ஒன்றோ எண்ணிடைச்சொல்லென்பது,

கடைக்குறை, கருவி கருத்தாவாய்நிற்றல், காரணக்குறி இடுகுறியாய் நிற்

றல், காரியவாசகம், காலமயக்கம், குறிப்புமொழி, கூட்டியுரைத்தல், சாரியை

தோற்றம் வேண்டாத் தொகுதிக்கண் வருதல், சிறப்புமை, சின்னென்னு மிடைச்சொல்லால் முன்னிலை வினைச்சொல் அசைக்கப்பட்டுநிற்றல், சினை வினை முதல் வினையொடுமுடிதல், செய்யுள்நோக்கி அகரம் விரிக்கப்படல், சொல்வருவித்தல், தம்மைப் பிறர்போற்கூறல, தன்வினை பிறவினைப்பொருளில் வருதல், திசைச்சொல், தில்லென்பது விழைவின்கண்வருதல், தில்லவென்பது விழைவின்கண் வருதல, படர்க்கைப்பெயர் முன்னிலைக் கல்வருதல், படர்க்கைப்பெயரும் முன்னிலைப்பெயரும் விரவி முன்னிலை வினையையேற்றல, பண்புத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகை, பன்மொட்டு, பன்மை யொருமை வழுவமைதி, பிறவினை தன்வினையாய் நிற்றல், பொ ருள்பன்மையாயினும் சொல்லின் ஒருமைநோக்கி ஒருமையால முடித்தல், மரியும் அத்தையும் விரவிமுன்னிலையில் வருதல், மார் வினையெச்சவிகுதியாய் வருதல, மாறிக்கூட்டு தல், மாறுஆறுவுருபின்பொருளில் வருதல், முதற்சேற அனை யடுத்தஆகுபெயர் முன்மொழிநிலையல், முன்னிலையசை, மேயும் மோவும் முன்னிலையசைகளாய் வருதல், வியங்கோட் பொருளில் நிற்குஞ்சொற்கள், [illegible] வினைக்குறிப்பு, வினைக்குறிப்பு ஆக்கம் பெற்றுவருதல், வினையெச்சக் குறிப்பு, வினையெசசத் திரிபு, வினையெச்சமுடிபு, வினையெச்சமுற்று, வினையெச்ச வினைக்குறிப்பு முற்று, வெளிப்படை, வேற்றுமையுருபு மயக்கம, வேறுவினைப்பொருள்களைப் பொதுவினையாற் பன்மைபற்றி ஒரு வினையால் முடிதல.

## இந்நூலிலுள்ள சிறந்த பாடல்களையும் சிறந்த பாடற்பகுதிகளையும் காட்டும் எண்கள் வருமாறு—

(௧)
(௨) ௧ - ௮; ௧௭ - ௨௦
(௩) ௧௪; ௨௪ - ௬
(௫) ௫ - ௮
(௬)
(௮) ௪ - ௧௦
(௯) ௧ - ௬
(௧௦)
(௧௨) ௩ - ௫
(௧௮) ௧௩ - ௩௦
(௨௦) ௭ - ௨௦

(௬௭) ௧௧ - ௪
(௬௮) ௧ - ௪; ௧௧-௩
(௬௯) ௫ - ௬
(௭௦) ௬ - ௭
(௭௧ - ௪)
(௮௪) ௧ - ௨
(௮௭)
(௮௯) ௫ - ௯
(௯௦ - ௧௫)
(௧௦௧)
(௧௦௬ - ௭)

(௧௮௦ - ௯௭)
(௧௯௯)
(௨௦௩ - ௭)
(௨௦௮) ௬ - ௯
(௨௧௪)
(௨௧௫) ௮ - ௯
(௨௧௮)
(௨௨௦ - ௨௨௭)
(௨௩௦) ௧௦ - ௧௪
(௨௩௪ - ௫)
(௨௩௭)

(௨௨) ௩௧ - ௬
(௨௬) ௧௨ - ௫
(௨௭)
(௨௮) ௧ - ௬; ௧௫ - ௭
(௨௯) ௧௧ - ௨; ௨௩ - ௬
(௩0) ௮ - ௧0
(௩௧) ௧ - ௪; ௯
(௩௪) ௧ - ௭; ௧௯ - ௨௪
(௩௫) ௧௫ - ௬; ௨௫ - ௯;
௩௧ - ௪
(௩௬) ௧ - ௨
(௩௮) ௫ - ௧௮
(௩௯)
(௪0) ௬ - ௧௧
(௪௧) ௧௨ - ௬
(௪௨ - ௩)
(௪௪) ௧0 - ௧௬
(௪௫ - ௫௬)
(௫௭) ௧0 - ௧௧
(௫௮)
(௫௯) ௩ - ௭
(௬0) ௭ - ௯
(௬௨) ௧௩ - ௫
(௬௪) ௬ - ௭
(௬௫) ௯ - ௧௨

(௧0௯ - ௧0)
௧௧௨)
(௧௧௯) ௫ - ௭
(௧௨௧ - ௪)
(௧௨௫) ௭ - ௮
(௧௨௭) ௭ - ௧0
(௧௨௮) ௫ - ௭
(௧௩0 - ௩௪)
(௧௩௬) ௨0 - ௨௨
(௧௩௯) ௫ - ௧௫
(௧௪0)
(௧௪௧) ௧0 - ௧௫
(௧௪௨)
(௧௪௮ - ௫0)
(௧௫௧) ௧0 - ௧௨
(௧௫௨) ௧ - ௩
(௧௫௩) ௭ - ௧௨
(௧௫௫) ௪ - ௯
(௧௫௬ - ௬௪)
(௧௬௫) ௧0 - ௧௨
(௧௬௭)
(௧௭0) ௧௪ - ௭
(௧௭௧ - ௩)
(௧௭௫)
(௧௭௭) ௧௫ - ௭

(௨௩௯)
(௨௪௨ - ௩)
(௨௫௧ - ௨)
(௨௬௧)
(௨௭௫ - ௬)
௨௭௮ - ௯)
௨௯௪) ௩ - ௪
௨௯௬)
(௩௧௨)
(௩௨0) ௧ - ௨
(௩௨௪) ௧௩ - ௪
(௩௨௯) ௫ - ௯
௩௩௭) ௬ - ௭
௩௫௬)
௩௬௭) ௪ - ௫
௩௭௫) ௧௭ - ௨௧
௩௭௬) ௧௫
௩௮௧) ௨௩ - ௭
௩௮௬) ௨0 - ௨௫
௩௮௭) ௧௯ - ௨௭
௩௯0) ௪ - ௬
௩௯௪)
௩௯௫) ௨௯ - ௩௧
௩௯௭) ௧௨ - ௮
(௪00) ௧௬ - ௭

---

கணபதி துணை.

# எட்டுத்தொகையுள்

ஒன்றாகிய

# புறநானூறு

## மூலமும் உரையும்.

---

(க.) கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பிற் றாருங் கொன்றை
ஊர்தி வால்வெள் ளேறே சிறந்த
சீர்கெழு கொடியு மவ்வே றென்ப
கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை

---

க. கண்ணி - ஆடவர் தலையிற் சூடுதற்குரிய மாலை; "பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்" (முருகு. ௨௦௧); கார்நறுங் கொன்றை: "காரியல் மலர்க்கொன்றை தாங்கு கடவுள்", "கார்க்கொன்றை மாலை கவர்ந்தாண்டோ" (தேவாரம்) ; கொன்றைமாலை சிவபெருமானது அடையாளமாலை யென்பர் ; சீவக. ௨0௮ - ந.

தன்னு ளடக்கிக் கரக்கினுங் கரக்கும்
பிறைநுதல் வண்ண மாகின் றப்பிறை
பதினெண் கணனு மேத்தவும் படுமே
எல்லா வுயிர்க்கு மேம மாகிய
நீரற வறியாக் கரகத்துத்

---

நீங்கு நீக்கார்" (மணி. ௫: ௧௧௧-௩ ; ௮: ௫௭) ; "முரிமுரிந்த வெண் பதின், 'அணியலு மணிந்தன்று' என்றாற்போலக்கொள்க" (சீவக. ௨௫௬௦ - ந) ; "கறைமிட றணியலு மணிந்தன்றென்புழிக் கறை மிடற்றை அழகு பெறுதலையுஞ் செய்ததென ... முழுதும் காரியவாசகமாயே நின்றவாறு காண்க" (தொல். வேற்றுமைமயங்கு. சூ. ௨௬ - ந) ; வேற்றுமைக் கண் நகரம் மிகாமைக்கு இவ்வடி மேற்கோள் ; (நன் - மயிலை. சூ. ௧௮௨; நன்-வி. சூ. ௧௮௫; இ-வி. சூ. ௬௦௨-உரை); "விடமும்வரு நீசன் கோல மிடற்றினி லிலவண்ண,வடிவுபெற் றணியதாகி வயங்கிற்றுப் பெரிதுமென்றால்,கொடியரும் பெருமையோரைக் கூடின்வெங் கோதநீங்கி, யொழிவறு நலம்பெற் றுய்த லுரைப்பதெ னுலகி னம்மா" (பாகவதம், ௮: கடல்கடைந்த. ௨௪); "அணியலு மணிந்தன்று, ஒருபொருட் பன்மொழி" (நன்-மயிலை. சூ. ௩௬௭); மறு மறுவெனப்படுதல்: "விண்ணினுர் புகழதற்கொத்த விழுமியோ னெற்றி போழ்ந்த,கண்ணினுன் கண்டத் தன்மேற் கறையையார் கறையன் றென்பார்" தண்டல.

௮. கவிலல் - கூறியடிப்படல; "காவிடை கன்னூ னன்கனை கவிற்றி" மணி. ௧௬: ௨௪.

௯. புறநா. ௫௫ : ௪ - ௫; "பிறைநெற்றி போழ்ந்த முக்கண்ணி னூர்", "பிறை தாங்கு நெற்றியர்", "பிறைசேர் நுதலிடைக் கண்ணமர்ந் தவனே" தே.

௰. பதினெண்கணன்: "ஒன்பதிற் றிரட்டி யுயர்நிலை பெறீஇயர்" முருகு. ௧௬௮.

க - கo. பிறை தொழுதேத்தப்படுதல்: "தொழுதுகாண் பிறையிற் றோன்றி" (குறுந். கஎஅ); "ஒள்ளிழை மகளி ருயர்பிறை தொழுஉம், புல் லென் மாலை" (அகநா. உஙக); "குழவித் திங்க ளிமையவ ரேத்த, வழகொடு முடித்த வருமைத்து" (சிலப். உ: கூஅ-க); "அப்பிறை, பதினெண் கணனு மேத்தவும் படுமே யென்றார் புறப்பாட்டினும்" ஷை. உ: கூஅ - க, அடியார்.

கஉ. "நாகம் நவிழ்த்த காவிரிப் பாவை" மணி. பதி. கஉ.

அகவல் உரு ஆசிரியப்பாவில் ஈற்றயலடி முச்சீர்த்தாய் வந்ததற்கு இவ் வடி மேற்கோள்; தொல். செய். சூ. கஅ - பேர்.

# புறநானூறு மூலமும் உரையும்.

க.

தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே.
கடவுள்வாழ்த்து.
பாரதம்பாடிய பெருந்தேவனார் பாடியது.

இதன்பொருள்.—திருமுடிமேற் சூடப்படுங்கண்ணி, கார்காலத்தமல ரும் நறிய கொன்றைப்பூ; அழகிய நிறத்தையுடைய திருமார்பின் மாலையும், அக்கொன்றைப்பூ; ஏறப்படுவது தூய வெளிய ஆனேறு; மிக்க பெருமை பொருந்திய கொடியும், அவ்வானேறு என்று சொல்லுவர்; நஞ்சினது கறுப்பு, திருமிடற்றை அழகு செய்தலும் செய்தது. அக்கறுப்பு, தான் மறவாயும்

வானோரை உய்யக்கொண்டமையின், வேதத்தைப் பயிலும் அந்தணாளர் புகழவும்படும்; பெண்வடிவு ஒருபக்கமாயிற்று; ஆய அவ்வடிவுதான், தன்னுள்ளேயொடுக்கி மறைக்கினும் மறைக்கப்படும்; பிறை, [1]திருநுதற்கு அழகாயது; அப்பிறைதான், பெரியோர் [illegible], பதினெண்கணங்களாலும் புகழவும்படும்; எவ்வகைப்பட்ட உயிர்களுக்கும் காவலாகிய, நீர் தொலைவில்லாத குண்டிகையாலும் தாழ்ந்த திருச்சடையாலும் சிறந்த செய்தற்கரிய தவத்தையுடையோனுக்கு.—என்றவாறு.

தன்னுள்ளடக்கிக் கரக்கினுங் கரக்குமென்பதற்கு அவ்வடிவுதானே எல்லாப் பொருளையும் தன்னுள்ளேயடக்கி அவ்விறைவன் கூற்றிலே மறையினும் மறையுமென்று உரைப்பினுமமையும்.

நீரறவறியாக்கரகம் - கமண்டலமென்பாருமுளர்.

அக்கறை, அவ்வுரு, அப்பிறை என்னின்ற எழுவாய்கட்கு நுவலவும்படும், கரக்கினுங்கரக்கும், ஏத்தவும்படும் என்னின்ற பயனிலைகளை நிரலேகொடுக்க. இவ்வெழுவாய்களையும், பிறவற்றையும் அருந்தவத்தோற்கென்னும் நான்காவதனோடு முடிக்க.

ஏமமாகிய அருந்தவத்தோனென்க; *ஏமமாகிய நீரெனினும் அமையும்.

அணியலுமணிந்தன்றென்பது, † "உண்ணலு முண்ணேன்" என்பது போல நின்றது.

பதினெண்கணங்களாவார்: தேவரும் அசுரரும் முனிவரும் கின்னரரும் கிம்புருடரும் கருடரும் இயக்கரும் இராக்கதரும் கந்தருவரும் சித்தரும் சாரணரும் வித்தியாதரரும் நாகரும் பூதமும் வேதாளமும் தாரகணமும் ஆகாசவாசிகளும் போகபூமியோருமெனவிவர்; ‡ பிறவாறுமுரைப்பர்.

இப்பெரியோனை மனமொழி மெய்களால் வணங்க அறமுதனான்கும் பயக்குமென்பது கருத்தாகக்கொள்க. (க)

கரு. அருந்தவத்தோனை: "நற்றவனைப் புற்றரவ நாணினானை", "நற்றவனை நான்மறைக ளாயினானை", "நற்றவா வுனை நான்மறக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே", "நற்றவன் காண்", "மாதோர் கூறுடை நற்றவனை" (தே); "அருந்தவனை திசையித்து" திருவால. சுக: சு.

* 'ஏமமாகிய நீர்' என்றது "நீரின்றமையா துலகு" (குறள், ௨0) என்பது கருதி.

† கலி. ௨௫. ‡ முருகு. கசுஅ - கூ; பிங்கலம். சுஉ.

(பிரதிபேதம்.)— 1 'திருமுதலது'



(௨.) மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீருமென்றாங்
கைம்பெரும் பூதத் தியற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலுஞ் சூழ்ச்சிய தகலமும்
வலியுந் தெறலு மளியு முடையோய்
நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்துநின்
வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பி னன்னாட்டுப் பொருந

வான வரம்பனை நீயோ பெரும
வலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ

---

க. "மண்கெழு ஞாலம்" (பதிற். சுசு: கஉ); "மண டிணிஞாலமாள் வோன்" (சிலப். உசு: சஉ); "மண டிணி ஞாலத்து வாழ்வோர்க்கு" மணி. கக: கரு.

க - ரு. "மண்டிணிந்த...வளியும் என்பது என்" தொல். எ - பேர். ந. இடை. க - ரு. "அல்லதூஉம் நேர்ந்தியற்சீர் இறுதிக்கண் நிற்றல் பெரும் பான்மையெனப்படும்; மண்டிணிந்த...நீரும்" (தொல். செய். ரு. உசு - பேர்); "மண்டிணிந்த...நீருமென நாற்றுககண் வருதல பெரும்பான்மை யாதலின் இறுதிநிலலாவெனப் பொருள் கூறலாகாமையுணர்க" (தொல். செய். ரு. உசு-ந); "மண்டிணிந்த...நீரும்: இவ்வஞ்சியடியிறுதி நேர்ந்தியற் சீர் சிறுபான்மை வந்தது" யா - வி. ரு. கரு - உரை.

உ-எ. "விசும்பி ... ... முசசி" தொல். உவம. ரு. சு-பேர். மேற்.

ச - ரு. "வளித்தலைஇய...நீருமென்று அங்கென நாற்சீரடிக்கு இரு சீரும் மூசசீரும் பொருகதி ஆசிரியம் வந்தது." தொல். செய். ரு. ககரு. ந.

ச - அ.
சு - அ.

"வளிமிகின் வலியுமில்லை" புறநா. ருக: ரு.
"வளியிடைத், தீயெழுந் தன்ன திறலினர்" பறந்து. கஎ0-எக.

௧0. "வெண்டலைப் புணரியின் மான்குளம் பலைப்ப" (புறநா. ௬௧: ௧௪); "வெண்டலைப் புணரியின் விளிம்பு நம் போத" சிலப். ௨௬: ௮௧.

௧௨. "கானக நாடனை நீயோ பெரும" (புறநா. ௫: ௬); "வானவரம்ப னெனப் பேரினிது விளக்கி" பதிற். ௬ - ஆம்பத்துப்பதிகம்.

௧௩. "ஐவர், குறிப்பினால் தொகைப்பொருள் அறியவந்தது" (நன் - மயிலை. சூ. ௨௬௮); "ஐவரென்றும் தொகைக்குறிப்புச்சொற் பாண்டவரைக் குறிப்பானுணர்த்திற்று" (நன். வி. சூ. ௨௬௯); "ஐவரென்னுந் தொகைச் சொல் அறமகன்முதலிய ஐவரையும் குறிப்பான் விளக்கியவாறு காண்க" (இ-வி. சூ. ௧௭0 - உரை); "அலங்குளை...சினை இயென்பது தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகதேவனென்பன கொண்டது" நன்-வி. சூ. ௬௬0.

# புறநானூறு மூலமும் உரையும்.

௫

நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
யீரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்
பாஅல்புளிப்பினும் பகலிருளினு
நாஅல்வேத நெறிதிரியினுந்
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
நடுக்கின்றி [1] நிலியரோ வத்தை யடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
யந்தி யந்தண ரருங்கட னிறுக்கு

௧௪. பொற்றும்பை: "பொலங்தோட்டுப் பைந்தும்பை",

நன் - மயிலே. ந. கூகூஎ ; இ - வி. ந. உகூக - உரை.

உஉ - கூ. "ஒன்றுபுரிந் தடங்கிய விருபிறப் பாளர், முத்தீப் புரைய" (புறநா. கூசுஎ: கஉ - கூ); "மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத், திருபிறப்பாளர்" முருகு. கஅக - உ.

உக - கூ. நெருப்பிற்கஞ்சிப் புலிவாராமையின், கலைபயின்று மார்கள் தூங்குமென்பர் ; "ஞெலிகழை முழங்கழல் வயமா வெரூஉம்" (ஐங்குறு. ௩0எ) ; "கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்த, மடமான் பெருநிரை வைகுதுயில" புறநா. உசஎ: உ - ௩.

(பி - ம்.)—1 'நிலையரோ'



முத்தீ விளக்கிற் றுஞ்சும்
பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே*.

திணை - பாடாண்டிணை; துறை - செவியறிவுறூஉ;
வாழ்த்தியலுமாம்.

† சேரமான்பெருஞ்சோற்றுதியஞ்சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகராயர் பாடியது.

இ - ள்.—அணுச்செறிந்தநிலனும், அந்நிலத்தின் ஓங்கிய ஆகாயமும், அவ்வாகாயத்தைத் தடவிவரும் காற்றும், அக்காற்றின்கண் தலைப்பட்ட தீயும், அத்தீயோடு மாறுபட்ட நீருமென ஐவகைப்பட்ட பெரிய பூதத்தினது தன்மைபோலப் பகைவர் பிழைசெய்தால அப்பிழையைப் பொறுத்தலும், அப்பிழை பொறுக்குமாவலலவாயின் அவரை அழித்தற்கு உசாவும் உசாவினது அகலமும், அவரை அழித்தற்கேற்ற மனவலியும் சதுரங்கவலியும், அவ்வாற்றல அவரை அழித்தலும், அவர் வழிபட்டால அவர்க்குச் செய்யும் அருளுமுடையோய்! நினது கடற்கட்டோன்றிய ஞாயிறு பின்னும் நினது வெளிய தலைபொருந்திய திரையையுடைய மேலகடற்கண்ணே மூழ்கும் புதுவருவாய் இடையறாத ஊர்களையுடைய கலல நாட்டிற்கு வேந்தே! வானவரம்ப! பெரும! நீ, அசைநத தலையாட்டமணிநத குதிரையையுடைய பாண்டவரைவருடனே சினநது நிலத்தைத் தம்மிடத்தேகொண்ட பொற்பூநதும்பையையுடைய துரியோதனன் முதலாகிய நூற்றுவரும் பொருது

உச. இமயம் பொற்கோட்டதெனபது : "பொன்படு நெடுங்கோட்டிமயம்" (புறநா. ௩௬ : ௧௬-௫ ; நற். ௩௬௬); "பொன்னுடை நெடுங்கோட்டிமயம்" (புறநா. ௩௬௬ : ௨௪); இலபிலலாத பொருளடையடுத்த மொழிக்கு இவ்வடி மேற்கோள் ; நன் - மயிலை. ரு. ௪௦௦ ; நன். வி. ரு௪௦௧; இ - வி.

ரு. ௧௭௨ - உரை.
உ௦ - உ௪. இமயம்

போலத் தளக்கமின்றி நெடுங்காலம் நிற்பாயாக

வெளநல மரபு; "மின்னுமிழ் வரைக் கோட்டு விளங்கொளி யிமய மென்னும், பொன்னெடுங் குன்றம் போலப் பூமிமே னிலவி வைய, நினடி நிழலின் வைக சேமியஞ் செல்வ ஞகி, மன்னுவாய் திருவொ டென்று வாழ்த்திநெய்

யேற்றி னுரே" சீவக. உசகஎ.

* இச்செய்யுள், 'பாலபு ரியபினும் பகலிருளினும்......நடுக்கின்றி நிலிய ரோ'என நதனுச் செவியறிவுறூஉவும், 'இமயம் போன்று...நடுக்கின்றி நிலிய ரோ' என்றதனுல வாழ்த்தியலுமாயிற்று; இது,"பகை நிலத்தரசர்க்குப் பய ந்தவாறு கூறிப் பின்னர்த் திரியாச சுற்றமொடு விளங்கி நடுக்கின்றி நிற்பா யென அச்சந்தோன்றக் கூறி ஓம்படுத்தலின்,

ஓம்படைவாழ்த்தாயிற்று"

என்பர்: தொல். புறத்திணை. சூ. ௩௬ - ந.

† இதன் கூ - ஆம் அடியால பாட்டுடைத்தலைவன் பெயர்க்காரணம் புலப்பட்டவாறு அறிதற்பாலது| "நாங்கண் ணகற்றிய வுதியஞ்சேரற்,பாடிச் சென்ற பரிசிலர் போல, வுவவினி வாழிய தோழி", "கொடைக்கட னேன்ற கோடா நெஞ்சி, னுதியஞ் சேரல போல, வொலி யெழுந்த", ~~"முதியர்ப் பேணிய வுதியஞ் சேரல், பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை~~ (அகநா. சுரு, கசஅ, உநந) என்பவற்றால் இத்தலைவன் குணங்கள் விளங்கும்.

# புறநானூறு மூலமும் உரையும்.

எ

போர்க்களத்தின்கட் படுத்தலையும் பெருஞ்சோறாகிய மிக்க உணவை இரு படைக்கும் வரையாது வழங்கினோய் ! பால் தன இனிமையொழிந்து புளிப்பினும்,ஞாயிறு தன் விளக்கமொழிந்து இருளினும்,நான்குவேதத்தினது ஒழுக்கம் வேறுபடினும், வேறுபாடில்லாத சூழ்ச்சியையுடைய * மந்திர சுற்றத்தோடு ஒழியாது நெடுங்காலம் விளங்கித் தளர்ச்சியின்றி நிற்பாயாக; அரைமலையின்கட் சிறிய தலையையுடைய மறிகளையுடையவாகிய பெரிய கண்ணையுடைய மான்பிணைகள் அந்திக்காலத்தே அந்தணர் செய்தற்கரிய கடனாகிய ஆவுதியைப்பண்ணும் முத்தீயாகிய விளக்கின் கணணே துயிலும் பொற்சிகரங்களையுடைய இமயமலையும் பொதியமலையு

வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி
[1] யருள வல்லை யாகுமதி யருளிலர்
கொடாமை வல்ல ராகுக
கெடாத துப்பினின் பகையெதிர்ந் தோரே.

திணை - பொதுவியல் ; துறை - முதுமொழிக்காஞ்சி.

*சோழன் நலங்கிள்ளியைஉறையூர்முதுகண்ணன்சாத்தனார்பாடியது.

இ - ள்.—சேற்றின்கணேவளரும் தாமரைபூத்த ஒள்ளிய நிறத்தையுடைத்தாகிய நாறுகிய இதழையுடைய மலரினது நிரையைக் கண்டாற்போன்ற ஏற்றத் தாழ்விலலாத, சிறந்த குடியின்கட்பிறந்து † வீற்றிருந்த வேந்தரை எண்ணுங்காலத்துப் புகழும் பாடும் உடையோர் சிலர் ; தாமரையினது இலையையொப்பப் பயனபடாது மாய்ந்தோர் பலர்; புலவராற் பாடப்படும் புகழையுடையோர் ஆகாயத்தின்கண் பாகனாற்செலுத்தப்படாத விமானத்தைப் பொருந்துவாரென்று சொல்லுவார் அறிவுடையோர், தாம் செய்யும் நல்வினையைமுடித்தென்று சொல்லக்கேட்டேன ; என்னுடைய இறைவ, சேட்சென்னி, நலங்கிள்ளி, வளர்ந்ததொன்று பின் குறைதலுண்டாதலும், குறைந்ததொன்று பின் வளர்தலுண்டாதலும், பிறந்ததொன்று

---

கக - ௪. புறநா. அ - ஆம செய்யுளின் அடிக்குறிப்பைப் பார்க்க.

கரு. புறநா. ௫௭.

கஎ - அ. அருளும் கொடையுமுடையோர் தம்பகையை வெல்வாரென்பதை, "திருமகற் பெற்றேனச செம்பொற் குன்றெனப், பெருநல நிதிதலை திறந்து பீடுடை, யிருநிலத் திரவலர்க் காத்தி யினனுஞ், செருநிலம் பயப் புறச் செலவன செலுமே" (சீவக. ௩௱ ௧) என்னுஞ்செய்யுளாலும், அதனுரையில, நச்சினார்க்கினியர் 'அருளிலா, கொடாமை வல்லராகுக' என மேற்கோளகாட்டியிருத்தலாலும் அறிக. இது ககரவீற்றுவியங்கோள பலர்பாலில் வருதற்கும் (நன் - மயிலை. ரு. ௩௧௭), வியங்கோள வாழ்த்துதற்பொருளில வருதற்கும் (இ - வி. ரு. ௨௩௧ - உரை) மேற்கோள்.

* இப்பாட்டின் ௧௦-ஆம் அடியில, தலைவன்பெயர் அமைந்திருத்தல்

காண்க.

† வீற்றிருத்தல - கவலேயின்றியிருத்தல; "வீற்றிருக் தவரும் கற்றூர்" (சீவக: கருஎரு); "தமிழப்புலவ, ராய்க்கேட்க வீற்றிருக்கலாம்" திருவள்ளுவ மாலே, கரு.

(பி - ம்.)—1 'அருளி'

# புறநானூறு மூலமும் உரையும்.

கஅஎ

பின் இறத்தலுண்டாதலும், இறந்தபின் பிறத்தலுண்டாதலும்; ¹ ,ல்விமுகத்தான் அறியாத மடவோரையும் அறியக்காட்டித் திங்களாகிய தெய்வம் இயங்குகின்ற தேயத்தின்கண் ஒன்றை மாட்டாராயினும் வல்லாராயினும் வறுமையான் வருத்தமுற்று வந்தோரது உண்ணாத மருங்கைப் பார்த்து அவர்கருளி வழங்க வல்லையாகுக; அருளிலராய்க் கொடாமையை வலலராகுக், கெடாத வலியையுடைய நினக்குப் பகையாய் மாறுபட்டோர்.—எ - று.

நூற்றிதழலரின நிரைகணடன்ன உரையும் பாட்டும் உடையோர் சில ரென இயையும்.

நிரைகண்டன்ன விழுத்திணைப் பிறந்து ரைப்பினுமமையும்.

அருளிலர் கொடாமைவலலராகுகவென்றதனற்பயன், அவையுடையோர் தத்தம் பகைவரை வெலவாராதலால, பகையெதிர்ந்தோர் அவையிலராக வெனபதாம்.

செய்வினைமுடித்து வானவூர்தி எய்துபவென இயையும். (உஎ)

(உஅ.) சிறப்பில சிதடு முறுப்பில் பிண்டமுங்
கூனுங் குறளு மூமுஞ் செவிடு
மாவு மருளு முளப்பட வாழ்நர்க்
கெண்பே ரெச்ச மென்றிவை யெல்லாம்
பேதைமை யல்ல தூதிய மில்லென
முன்னு மறிந்தோர் கூறின ரின்னு
மதன்றிற மத்தையா னுரைக்க வந்தது
வட்ட வரிய செம்பொறிச் சேவ
லேனல் காப்போ ருணர்த்திய கூஉங்
கானத் தோர்நின் றெவ்வர் நீயே
புறஞ்சிறை மாக்கட் கறங்குறித் தகத்தோர்
புயத்தெறி கரும்பின் விடுகழை தாமரைப்

---

உ. மு. சிலப். ரு : ககஅ; மணி. கஉ : கள.

க - ச. "கூனொடு வெதிரே பங்கு குருடுபே ருமை யானே, ரூனம் தடைந்த புன்மை யாக்கையோ டொழியு மம்மா" (கந்த. பானுகோபன் வதை. உச); "குறளொடு செவிடு மூங்கை கூனமருள குருடு மாவே, யுறுமுறுப் பிலவாப பிண்ட மோதிய வெண்மெய் யெச்சம்" சூடாமணி. கஉ : கச.

க0. "சூழிருஞ் சடைக டாங்கிச சுடாமுடி துறந்து கானபோய், வீழ்சரு கருந்தி நீவிர் மெய்த்தவம் புரிதல் வேண்டும்" நைடதம், போர்புரி. க.

கஉ. "கோடுபுய்க்க கல்லா துழக்கு காட்கேள" (கலி. கஅ); "கோட்டி னீர்க் குத்திக் குடர்புய்த் துறுதது" மணி. கூ : சள.

பூம்போது சிதைய வீழ்ந்தெனக் கூத்த
ராடுகளங் கடுக்கு மகநாட் டையே
கரு அதனால், அறனும் பொருளு மின்பமு மூன்று
மாற்றும் பெருமநின் செல்வ
மாற்ற மைங்கிற் போற்ற மையே.

திணை - பாடாண்டிணை. துறை - பொதுவியல்; முதுமொழிக் காஞ்சியுமாம்.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—மக்கட்பிறப்பிற் சிறப்பில்லாத குருடும், வடிவில்லாத தசைத் திரளும், கூனும், குறளும், ஊமும், செவிடும், மாவும், மருளுமுளப்பட உலகத்து உயிர் வாழ்வார்க்கு எட்டுவகைப்பட்ட பெரிய எச்சமென்று சொல லப்பட்ட இவையெல்லாம் பேதைத்தன்மையையுடைய பிறப்பாவதல்லது இவற்றாற் பயனில்லையென முற்காலத்தும் அறிந்தோர் சொன்னார்; இன்ன மும் அவ்வூதியத்தின் பாருபாட்டை யான் சொல்லவருவது, வட்டமாகிய வரியையுடைத்தாகிய செம்பொறியையுடைய காட்டுக்கோழிச்சேவல் தினைப் புனங்காப்போரைத் துயிலுணர்த்துவதாகக் கூவும் காட்டின்கண் உள்ளோர், நின்னுடைய பகைவர்; நீதான் வேலிப்புறத்துநின்று வேண்டிய மாக்கட்கு அறத்தைக்கருதி, அகத்துள்ளோர்தாம் பிடுங்கியெறியும் கரும்பாகியபோகடப் பட்ட கழை வாவியகத்துத் தாமரையினது பொலிந்த பூச் சிதற வீழ்வதாக, அது கூத்தர் ஆடுகளத்தையொக்கும் உள்ளூராகிய நாட்டையுடையை, ஆத லான்; அறனும் பொருளும் இன்பமுமென்னப்பட்ட மூன்றும் செய்வதற் குதவும் பெரும, நினதுசெல்வம் உதவாதொழிதல நின்னைப் பாதுகா

வாமை.—எ - று.

பிண்டமென்பது, மணிபோலப் பிறக்குமது. மாவென்பது, விலங்குவடிவாகப்பிறக்குமது. மருளென்பது, அறிவின்றியே மயங்கியிருக்குமது.

ஊதியமென்பது, அறம்பொருளின்பங்களை; அன்றி அறமென்பாருமுளர்.

'நிற்போற்றுமையென்றகருத்து, சிதடுமுதல் அறிவின்மை பிறப்பொடு கூடாதவாறுபோல நின்செல்வமும் அறமுதலியன செய்தற்கேற்றிருப்பச் செய்யாமையாகிய அறிவின்மை மக்கள் யாக்கையிற் பிறந்தும் பயனில் பிறப்பாகப்பண்ணுதலால் நினக்குவரும் பொல்லாங்கைப் போற்றுமையென்பதாம்.

சான்றோர் நின்பகைவரென்றவதனாற் பகையின்மை தோற்றிநின்றது.

மாவும் மருளுமுளப்படச் சிதடுமுதலாகப் பிறப்பொடு கூட்டப்படாத பெரிய எச்சமெனப்பட்ட எட்டுமெனக் கூட்டியுரைப்பினும் அமையும்.

---

கங. பூ என்பது பொலிவினையுணர்த்தலால 'பூம்போது' பண்புத் தொகையுளடங்குமென்பர்; நன் - மயிலை. சூ. ஙஉள.

கஉ - ச. "நீலத் தன்ன பைம்பயிர் மிசைதொறும், வெள்ளி யன்ன வொள்ளீ புதிர்நது, சுரிமுகிழ் முசுண்டையொடு முல்லை தாஅய், மணிமரு ணெய்த லுறழக் காமர், துணிநீர் மெல்லவற் றொய்யிலொடு மலர, வல் லோன் றைஇய வெறிக்களங் கடுப்ப" (மதுரை. உஎக - அச); "பல்லிதழ் தாஅய், வெறிக்களங் கடுக்கும் வியலறை" மலைபடு. கசக - ருo.

# புறநானூறு மூலமும் உரையும்.

கிரகூ

இஃது அறஞ்செய்யாதானை அறஞ்செய்கவெனக் கூறியவாறு.

அதன்திறமென்பதற்கு அப்பேதைமையையொருக்கி, அஃது உண்டானால வரும்பொல்லாங்கும், அதுபோனால வருநன்மையுமென்றுரைப்பாருமுளர். (உஅ)

---

(உகூ.) அழல் புரிந்த வடர்தாமரை
ஐதடர்ந்த நூற்பெய்து
புனைவினைப் பொலிந்த பொலன்நறுந் தெரியல்
பாறுமயி ரிருந்தலை பொலியச் சூடிப்
பாண்முற் றுகநின் னாண்மகி ழிருக்கை
பாண்முற் றொழிந்த பின்றை மகளிர்
தோண்முற் றுகநின் சாந்துபுல ரகலம், ஆங்க
முனிவின் முற்றத் தினிதுமுர சியம்பக்
கொடியோர்த் தெறுதலுஞ் செவ்வியோர்க் களித்தலு
மொடியா முறைமையின் மடிவிலை யாகி
நல்லத னலனுந் தீயதன் றீமையு
மில்லை யென்போர்க் கினனா கிலியர்
நெல்விளை கழனிப் படுபுள் ளோப்புந
ரொழிமடல் விறகிற் கழிமீன் சுட்டு
வெங்கட் டொலைச்சிய மமையார் தெங்கி
னிளநீ ருதிர்க்கும் வளமிகு நன்னாடு
பெற்றனை யுவக்குநின் படைகொண் மாக்கள்

க. புறநா. கக : கரு.

ரு. நாணமகிழிருக்கை - காலையில் யாவரும் தன்னைக்காணும்படி காட்சிக்கு எளியனாய் வீற்றிருக்கை; இது நாளவையெனவுங் கூறப்படும். புறநா : ருச : ர.

க - ரு. புறநா. நகக : கச - ரு; நகசு ' க - ந; "எரியகைந் தன்ன வேடி ழுமரை, சுரிமிரும் பிதைத பொலியச் சூட்டி, நூலின் வலவா நுணங்கரின் மாலை, வாலொளி முத்தமொடு பாடினி யணிய" பொருந. கருக-சுஉ.

கக - உ. இலலேயெல போர - நாலதிகர்; இவ்வடிகளே, "சிறியவினமா வது நலத்த னவனுக நீயதன் நீமையு மிலவென்போரும்...உளளிட்டகுழு" (குறள். சசு - ஆம் அதிகார அவதாரிகை) என உரைநடையாக அமைத்தனர் பரிமேலழகர்; "அறிவாவது: நலத்த னவனுக நீயதன் நீமைபுமுளளவா றுணர்தல்" தொல். பொருளியல, சூ. ருந - ந.

கரு. புறநா. உச : ரு.

# சசு புறநானூறு மூலமும் உரையும்.

கூவை துற்ற நாற்கால் பந்தர்ச்
உ0 சிறுமனை வாழ்க்கையி னொரீஇ வருநர்க்
குதவி யாற்று நண்பிற் பண்புடை
யூழிற் றாகலின் செய்கை விழவிற
கோடியர் நீர்மை போல முறைமுறை
யாடுநர் கழியுமிவ் வுலகத்துக் கூடிய
உரு நகைப்புற னாகலின் சுற்ற

மிசைப்புற ஞகரீ யோம்பிய பொருளே.

திணையும் துறையும் அவை.

அவனை அவா பாடியது.

இ • ள,—எரியாலாககப்படட தகடாகச்செய்த தாமரைப்பூவுடனே ஐதாகத் தட்டிக கம்பியாகசசெய்தநூலினகண்ணேயிட்டு அலங்கரிதத தொழிலாறபொலிநத பொனனுணியன்ற நலமாலையைப பாறிய மயிரையுடைய கரியதலை பொலிவுபெறச (சூடிப பாணசுற்றம் சூழவதாக, நினது நாட காலத்து மகிழ்ந்திருககும் ஓலககம் ; பாணசுற்றம் சூழலொழிநதபினனர் நினது உரிமைமகளிருடைய தோள சூழவதாக, நின சாநதுபுலர்நதமார்பம்;
எப்போதும் வெறுபபிலலாத அலஙகாரததையுடைய கோயின்முறறத்தின கண்ணே இனிதாக முரசுஒலிப்பத நீடோரைத்தணடஞ் செயதலும் நடுவு நிலைமையுடையோாககு அருள பணணுதலுமாகிய இடையறாத முறைமை யாற்சோம்புதலையுடையை யலலையாகி நலவினையினது நனமையும் தீவினையி
னது தீமையும் இலலையென்று சொலலுவோாககு இனமாகாதொழிவாயாக ; கொலவினைநத வபலிடததுளதாகிய புளளை ஓட்டுவோர் வீழநத பனங்கருக்காகிய ற விறகாற கழிககணமீனைசசுட்டு அதனுடனேவெய்ய மதுவை உணடுதொலைத்தும் அடையாாரயத தெங்கினது இளநீரையுதிர்க்கும் செலவமிக்க நலலநாட்டைடபெறறு மகிழும் நினனுடைய படைக்கலம் பிடித்தமாநதர் நின்னுடைய பகைவரைப்போல இரக்கத்தை முனனிட்டுக் கொணடு கூவையிலையால வேயபபட்ட நாலகுகாலையுடைய பநதராகியசிறிய இலலின்கணவாழும் வாழகசையினி ாது நீஙகி நினபாலவருவார்ககு உதவி

கக. கூவை-மஞசளைபபோலவதொருபூடு ; இதுதெனனுட்டுள்ளமலைப் புக்கங்களிற காணப்படுகின்றது; "நூறுரூடு குழ்இயின கூவை" (மலைபடு. கநள); "பொலிகூவை" மதுரை. கசஉ.

உந-ச. "கூத்தாட் டவைககுழாத தற்றே பெருஞ்செலவம், போக்கு மதுவிளிந தற்று" (குறள். நஙஉ) எனபது இவ்வடிகளுடன் ஒபபிடற்

பாலது.

உஉ-ச. விழாக்காலத்துக் கூத்தர்கள வருதலும், அது முடிநத பின்பு அவர்கள் வேறிடஞ் செலலுதலும் "அறுஅ யாண ரகனதலைப் பேரூர்ச,சாறு கழி வழிநாட் சோறுநசை யுறுது, வேறுபுல முன்னிய விரகறி (பொருந. க-ங) என்பதாலும் அறியப்படும்.

பொருந"

# புறநானூறு மூலமும் உரையும்.

எக

செய்யும் கட்போடு கூடிய குணத்தையுடைய முறைமை யுடைத்தாக, நினது

தொழில; விழவின்கண் ஆடும் கூத்தாது வேறுபட்ட கோலம்போல அடை வடைவே தோன்றி இயங்கி இறநதுபோகின்ற இவ்வுலகத்தின்கண் பொருநதிய மகிழ்ச்சியிடத்ததாக, நின்னுடையவெனை; புகழிடத்ததாக், நீபாது காத்தபொருள்.—எ-று.

நின் நாணமகிழிருக்கை பாணமுற்றுக; அதன்பின் அகலம்தோண்முற்றுக ; நீ மடிவில்லையாய் இளனுகாதொழிவாயாக ; நின்பற்றுமாக்களைப்போல முற்காலத்துச் சிறுமையை வாழும் வாழ்க்கையிலீங்கி இப்பொழுது நின்னுழைப் பெற்றுவக்கும் நின் படைகொண்மாக்கள் வருநர்க்கு உதவியாற்றும் நண்போடுகூடிய பண்புடைத்தாகிய முறைமையையுடைத்தாக நின் செய்கை; நகைப்புறனாக நின் சுற்றம்; இசைப்புறனாக நீ ஓம்பிய பொருளெனக்கூட்டுக.

ஓரீஇயென்பதனை ஒருவவெனத் திரிப்பினுமமையும்.

நறுமை-பொன்னிற்கு இன்றெனினும் தெரியற்கு அடையாய்நின்றது; நன்மையுமாம்.

ஆங்க, அசை.

நசைப்புறனாகவென்று உரைப்பாருமுளர்.

இதனாற்சொல்லியது: படைகொண்மாக்களும் முறைமுதலாயின தப்பாமற்செய்து இனபுற்றிருக்கும்படி சிறப்புச்செய்யவேண்டுமென்பதாயிற்று. (உ௯)

---

(௩0.) செஞ்ஞா யிற்றுச் செலவுமஞ் ஞாயிற்றுப்
பரிப்பும் பரிபபுச் சூழ்ந்தமண் டிலமும்
வளிதிரிதரு திசையும்
வறிது நிலைஇய காயமு மென்றிவை
சென்றளந் தறிந்தோர் போல வென்று
மினைத்தென் போரு முளரே யனைத்து
மறிவறி வாகாச் செறிவினை யாகிக்
களிறுகவு ளடுத்த வெறிகற் போல
வொளித்த துப்பினை யாதலில் வெளிப்பட

௪. ஆகாயமென்பது முதற்குறைந்தமைக்குமேற்கோள். நன்-மயிலை. சூ. உ௬அ.

௧ - ௬. புறநா. உ௦: ௧-௬; "நிலநீர் வளிவிசும் பென்ற நான்கி, னளப் பரி யையே" பதிற். ௧௪: ௧ - உ.

அ - ௯. "காய்கதெறி கடுங்கற் றன்னைக் கவுடகொண்ட களிறுபோல, வாய்த்தறி வுடைய ராகி யருளொடு வெகுளி மாற்றி, வேந்தர்தாம் விழைப வெல்லாம் வெளிப்படார் மறைத்தல் கண்டாய்" (சீவக. உ௧௧௦) என்பதும்,



௩௦ யாக்கனம் பாடுவர் புலவர் கூம்பொடு
[1] மீப்பாய் களையாது மிசைப்பாஅ் தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெருங்கலந் தகாஅ
ரிடைப்புலப் பெருவழிச் சொரியுங்
கடற்பஃ றாரத்த நாடுகிழ வோயே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—செஞ்ஞாயிற்றினது வீதியும், அஞ்ஞாயிற்றினது இயக்கமும், அவ்வியக்கத்தாற்சூழப்படும் பார்வட்டமும், காற்றியங்குந்திக்கும், ஓராதாரமுமின்றித் தானே நிற்கின்ற ஆகாயமும் என்று சொல்லப்பட்ட இவற்றை ஆண்டாண்டுப் போய் அளந்தறிந்தவர்களைப்போல நாளும் இத் தன்மையளவை உடையனவென்று சொல்லும்

கலவியையுடையோருமுளர் ;

அப்பெரியோர் அசசெலவுமுதலாயின அறியும் அறிவாலும் அறியாத அடக்

கத்தையுடையையாகி யானை தன்கதுப்பின்கண அடக்கிய எறியுங்கல்லைப்

போல மறைத்தவலியையுடையையாதலான், நின்னை விளங்க எப்பரிசுபாடு

வர் புலவர்? கூம்புடனே மேற்பூரிக்கப்பட்ட பாயைமாற்றாமல அதன் மேற்

பாரத்தையும் பறியாமல் ஆற்றுமுகத்துப்புகுந்த பெரிய மரக்கலத்தைப் பரதவரும் அளவருமுதலாகிய தகுதியில்லாதோர் தம்புலத்திற்கு இடை யாகிய பெருவழிக்கண்ணே சொரியும் கடலாலவரும் பலபண்டத்தையுடைய

காட்டையுடையோய்!—எ-று.

செலவென்றது, செலவுபடும்வீதியை.

பரிப்பென்றது, இத்துணை நாழிகைக்கு இத்துணையோசனை செல்லு மென்னும் இயக்கத்தை.

பாய்களை ாயாத பாரந்தோண்டாதென்பதனால,

துறைநன்மைகூறிய வாறும.

பெருங்கலத்தினின்றெனா ஐந்தாவதாக உரைப்பினுமமையும்.

துப்பினையாதலின் புலவர் யாங்ஙனம் பாடுவரென கூட்டுக.

(௩௦) "களிறுகவு ளடுத்த வெறிகறபோல, வொளித்த

துப்பினை என்றார் பிறரும்"

(ஷை ஷை - உரை) ௭௭ இவ்வடிகளை நச்சினார்க்கினியர் மேற்கோள் காட்டி யிருத்தலும், "வேற்றுவ னெறிந்த கலைக், காதியங் கந்தாகக் கவட் கொண்ட களிறுபோலச், சேர்ந்தவ ருரைத்த மாற்றஞ் சிந்தையு ளடக்கி வைத்து, நாந்தகக் கிழவர் கோமா னயந்தெரி மனத்த னானான்" (சீவக. சீய வதை. ௧௪) என்பதும் இங்கே அறியத்தக்கவை.

௧௧. மீமுன் வலிமிக்கதற்கு மேற்கோள் ; நன் - மயிலை. ரு. ௧௫௭. (பி - ம்.)—1 'மிசைப்பாய்'

---



(௩௧.) சிறப்புடை மரபிற் பொருளு மின்பமு
மறத்து வழிப்படூஉந் தோற்றம் போல
விருகுடை பின்பட வோங்கிய வொருகுடை
யுருகெழு மதியி னிவந்துசேண் விளங்க
நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை யல்லது நீயொல் லாயே
நுதிமுக மழுங்க மண்டி யொன்னார்
கடிமதில் பாயுநின் களிறடங் கலவே
போரெனிற் புகலும் புனைகழன் மறவர்

அகநா. 157

காடிடைக் கிடந்த நாடுநனி சேய

செல்வே மல்லே மென்னர் கல்லென்
விழவுடை யாங்கண் வேற்றுப்புலத் திறுத்துக்
குணகடல் பின்ன தாகக் குடகடல்
வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப
கடு வலமுறை வருதலு முண்டென் றலமந்து

---

க - உ. குறள். ச - ஆம் அதிகாரத்தின் அவதாரிகையில் இவ்வடிகள் மேற்கோளாகப் பரிமேலழகரால் காட்டப்பட்டுள்ளன.

க - ச. "குன்றுயர் திங்கள்போற் கொற்றக் குடையொன்று, நின்று யர் வாயிற் புறநிலைப்ப - வொன்றார், விளங்குருவப் பல்குடைகள் வெண் மீன்போற் றோன்றித், துளங்கினவே தோற்றந் தொலைந்து" பெரும்பொருள்விளக்கம்.

ரு. வேட்டம் - விரும்புதல்; புறநா . உகச: சு.

ரு - சு. "வென்றே புகழ்புனை வேலண்ண லேயிந்த வெற்பினுள்ள, தன்றே யெனினு மரிவையை யானடி வீழ்ந்திறைஞ்சி, யின்றே திருத்தி யிருத்தமை வாங்குவ னிற்றைக்குநீ, சென்றே வருக சிறுகான் முடியுமின் சிந்தனையே" அம்பிகாபதி. கசுஎ.

சு. வீரர்கள் போரின்கண் மிக்க விருப்பமுடையவரென்பது, புறநா. சுஅ: கக - கூ, அக : எ - கூ என்பவற்றாலும், "மணடமர் நசையொடு கன்படை பெறாஅது" (முல்லை. சுஎ), "உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன், செறினுஞ்சீர் குன்ற லிலர்" (குறள். எஎஅ) என்பவற்றாலும், "போர்பெறற் றரியாமையின், அது பெற்றால அரசன் றடுப்பினும் நில்லாரென்பதாம்; பிறரும், 'போரெனிற் புகலும் புனைகழன் மறவர்' என்றும்......கூறினார்" என்னும் பரிமேலழகருரையாலும் விளங்கும்.

கச. புறநா. உ: கo-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க,

10



1 நெஞ்சாமேல் கவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே.*

திணை - வாகை ; துறை - அரசவாகை; 'மழபுலவஞ்சியுமாம்.
அவனைக் கோவூர்கிழார் பாடியது.

இ - ள்.—சிறப்புடைமுறைமையாற் பொருளும் இன்பமும் அறத்தின் பின்னே தோன்றும் காட்சிபோலச் சேரபாண்டியருடைய இரண்டுகுடையும் பின்னாக ஓங்கிய நினது ஒன்றாகிய வெண்கொற்றக்குடை நிறம் பொருந்திய கலைநிறைந்த திங்கள்போல ஓங்கிச் செய்மைக்கண்ணே விளங்க நல்லபுகழ்வேட்கையைவிரும்பி வெளூம்போரினைச்செய்யும் பாடிவீட்டின் கண்ணேயிருத்தலல்லது நின்னகரின்கண் இருத்தலை உடம்படாய் நீ ; கோட்டினது நுனைமுகங்தேய மடுத்துப் பகைவரது காவலையுடைய மதிலைக் குத்தும் நின்னுடைய யானைகள் அடங்கா, பூசலென்று கேட்பின் விரும்பும் அணிந்த வீரக்கழலையுடைய மறவர், காடு கடுவேயிடங்த காடு மிகவும் தூரிய வாதலால, யாம் போவேமலலேமென்றுகருதார்; ஆதலான், ஓசை உண்டான விழாவினையுடைய அவ்விடத்துப் பகைபுலத்தின்கண்ணே தங்கி விட்டுக் கீழ்கடலபின்னதாக மேலகடலினது வெளிய தலையையுடைய திரை நினது குதிரையினது குளம்பையலைப்ப வலமாகமுறையே வருதலுமுண்டா மென்று சுழன்று நெஞ்சம்நடுக்கும் அவலம்பாயத் துயிலாத கண்ணை யுடையவாயின, வடநாட்டுள்ள அரசுகள்.—எ - று.

அவம்பாயவென்பதுஉமாம். (௩௧)

கஎ. உயர்திணை அஃறிணையாகக் கூறப்பெற்ற வழுவமைதிக்கு மேற்கோள்; நன் - வி. சூ. ௪௧௦.

கசு-எ. "செஞ்சுடலேன் கவலம்.. ...அரசே: இஃது அரசியற்றன்மையை புணர்த்தற்பாலது அத்தன்மையையுடைய மக்களைபுணர்த்தி உயர்திணையாய் நின்று அஃறிணையான் முடிதலின் வழுவாயிற்று; இவ்வாறு வருவனவும் பிறவும் அமைத்துக்கொள்க" நன் - மயிலை. சூ. ௪0௧.

* மூ. வஞ்சித்திணைக்குரிய இயங்குபடையரவமென்னும் துறைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. எ - இளம்; ௬௨ ௬௨ சூ. அ - ந.

(பி - ம்.)—1 'செஞ்சுடலேங்கியவலம்', 'சுடலேங்கவவலம்.'

---

(௩௨.) கடும்பி னடுகல நிறையாக நெடுங்கொடிப்
பூவா வஞ்சியுந் தருகுவ னொன்றோ
வண்ண நீவிய வணங்கிறைப் பணைத்தோ

---

௨. "பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி,வாய்வா ணெடேர்தகை மணிமுடிக் கணிந்து" (சிலப்.௨௬: ௫0 - ௫௧); "பூத்த வஞ்சி பூவா வஞ்சியிற், போர்த்தொழிற் றானை குஞ்சியிற் புனைய" மணி. ௨௬: எஅ - ௯.

௩. "வணங்கிறைப் பணைத்தோள்" குறுந். ௩௬௪.



னொண்ணுதல் விறலியர் பூவிலை பெறுகென
௫ மாட மதுரையுந் தருகுவ னெல்லாம்

பாடுகம் வம்மினோ பரிசின் மாக்க
டொன்னிலக் கிழமை சுட்டி னன்மதி
வேட்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த
பசுமட் குரூஉத்திரள் போலவன்
கொண்ட குடுமித்தித் தண்பணை நாடே.

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.

அவனை அவர்பாடியது.

இ - ள்.—நமது சுற்றத்தினது அடுகலத்தை 1 நிறைக்கும் பொருட்டு விலையாக நெடிய துகிற்கொடியினையுடைய பூவாதவஞ்சியையும் தருகுவன்; நிறமுடைய கலவை பூசப்பட்ட வளைந்த சந்தினையுடைய முன்கையினையும் வேய்போன்ற தோளினையும் ஒள்ளியநுதலினையுமுடைய விறலியர்பூவிற்கு விலையாகப் பெறுகவென்று மாடத்தையுடைய மதுரையையும் தருவன்; ஆதலால், யாமெல்லாம் அவனைப் பாடுவேமாக வாரீர் பரிசின்மாக்கள்; பழைய நிலவுரிமையைக் குறிப்பின், நல்ல அறிவையுடைய குயக்குலத்தினையோர் கலம் வனைதற்குத் திகிரிக்கணே வைத்த பச்சைமண்ணாகிய கனத்த திரள்போல அவன் கருத்திற்கொண்ட முடிபையுடைத்து, இக்குளிர்ந்த மருதநிலத்தையுடைய நாடு.—எ - று.

பூவாவஞ்சியென்றது, கருவூர்க்குவெளிப்படை.

---

௫. "மாடமலி மறுகிற் கூடல்" (முருகு. ௭௧); "மாடம் பிறங்கிய மலி

புகழ்க் கூடல்" (மதுரை. சஉக); "மாடக்கூடல" (பரி. உ0: கoசு); "மாட மதுரை", "மாடமதுரையும்" (சிலப். பதி. உ0; அ: க; க: எசு; கரு: ககஉ); "நான்மாடக் கூடல மகளிரு மைந்தரும்" (கலி. கஉ) என்பதும், "நான்கு மாடங் கூடலின் நான்மாடக்கூடலெனாயிற்று; அவை திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர்; இனி, கன்னி, கரிய மால், காளி, ஆலவாயென்றுமாம்" என்னும் அதன் விசேடவுரையும், "அம்புத நால்களா னீடு கூடல்" (திருநள்ளாறும் திருவாலவாயும்; தே) என்னுந் திருவாக்கும், "மதியலி புரிசை மாடக் கூடல்" (திருமுகப்பாசுரம்) என்பதும், "ஈசனூர் மகிழ்ந்த தானம்" (திருவால. நகர. கஉ) என்பது முதலிய திருவிருத்தங்கள் நான்கும், "கன்னிதிரு மால்காளி யீசன் காக்குங் கடிமதில்சூழ் மாமதுரை" (வெ. பயன்முதலியன. ரு) என்பதும் இங்கே கவ[ர]த்தக்கவை.

ரு - சு. "உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன், றீவார் மே னிற்கும் புகழ்" (குறள். உருஉ) என்பதனாலும் அதற்குப் பரிமேலழகர் எழுதிய உரையாலும் ஈவாரைப்புகழ்தலை விளங்க அறிக.

க. சீவக. எஅசு - ந. மேற்.

(பி - ம்.)— 1 'நிறைக்கும் பொருளாக'



* ஒன்றோவென்றது, எண்ணிடைச்சொல்.

தேர்க்காலென்றது, தேர்க்காலபோலும் திகிரியை.

அவன் கொண்ட குடுமித்து, இந்நாடு ; ஆதலால், வஞ்சியையுந்தருகுவன் ; மதுரையையுந்தருகுவன் ; ஆதலால், பரிசின்மாக்கள், நாமெல்லாம் அவனைப்பாடுகம் வம்மினோவெனக்கூட்டுக.

தொலைவிலைக்கிழமையென்று பாடமோதவாருமுளர்.
(கஉ)

* "பொய்படு மொன்றோ" (குறள். அகூக) என்புழிப்போல.

---

(௩௩.) கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்
மான்றசை சொரிந்த வட்டியு மாய்மக
டயிர்கொடு வந்த தசும்பு நிறைய
வேரின் வாழ்நர் பேரி லரிவையர்
௫ குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெ
முகந்தனர் கொடுப்ப வுகந்தனர் பெயருந்
தென்னவ பொருப்ப னன்னாட் டுள்ளூ
மேழெயிற் கதவ மெறிந்துகைக் கொண்டுநின்
பேழ்வா யுழுவை பொறிக்கு மாற்றலை

---

க - உ. வட்டி - கடகப்பெட்டி; ஆவது பனையகணியாற்செய்த பெரிய பெட்டி; "ஊனூர்வட்டியர்" (மலைபடு. கஙஉ.) ஆய் - இடைசாதி; சீவக. சஉகூ - ந.

கூ. பலர்பாற்படர்க்கைவினைமுற்று வினையெச்சமான தற்குமேற்கோள்; நன் - மயிலை. கு. கூ௦; நன் - வி. ரு. கஙக.

க - கூ. "முள்ளெயிற்றுப் பாண்மக ளின்கெடிறு சொரிந்த, வகன்

பெருவட்டி நிறைய மனையோள், அரிகாற் பெரும்பயறு நிறைக்கு மூர'', "வலைவல் பாண்மகன் சாலெயிற்று மடமகள், வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோள், யாண்டுகழி வெண்ணெ னிறைக்கு மூர'' ஐங்குறு. சஎ, சஅ.

எ. மு. புறநா. உகரு : கூ.

அ. ஏழெயிற்கதவம் - (பகைவருடைய) ஏழுமதிலின்கணுள்ள கதவுகள்; பாண்டிநாட்டில் ஏழுபொன்கோட்டையென்று ஒரூருளது; சிவகங்கையைச்சார்ந்தது; அஃது இங்கேகூறிய ஏழெயிலிருந்த இடமாக ஊகிக்கப்படுகின்றது; இந்தவூர், பல சிற்றரண்கள் வாய்ந்திருந்ததாக இந்நூல் உக - ஆவது செய்யுளிற் கூறப்பட்டுள்ள கானப்பேருக்குச் சமீபமாக இருத்தல் இக்கருத்தை ஒருவாறு வலியுறுத்தும்.

கூ. பகைவருடைய இடங்களைக் கைப்பற்றியவுடன் அவற்றில் அவர்களுடைய முத்திரைகளைச் சிதைத்துத் தம்முடைய பொறிகளை அமைப்பது மரபு.



பாடுநர் வஞ்சி பாடப் படையோர்
தாதெரு மறுகிற் பாசறை [1] பொலியப்
புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த
மலரா மாலைப் பந்துகண் டன்ன
வூன்சோற் றமலை பாண்கடும் பருத்துஞ்
செம்மற் றம்மநின் வெம்முனை யிருக்கை
வல்லோன் றைஇய வரிவனப் புற்ற
வல்லிப் பாவை யாடுவனப் பேய்ப்பக்

ஊரகத்து.

கஉ - ௩. புறநா. உ௩: ௩.

கச. புறநா. கஎஎ : கச - ரு ; "கொழுங்குறைக் கொழுவல்சி" (மதுரை. கசக); 'ஊனமலிசிறுகுடி' (கலி. ருO) என்பதற்கு 'ஊன் சோற் றமலை பாண்கடும் பருத்தும்' என்பது மேற்கோள்.

கசு. வரிவனப்பு : மணி. ௩ : அ.

உO. பள்ளி : மணி. உசு : எஉ.

உக. மைவிடைவீழ்த்தல் : புறநா. உசுஉ : க.

(பி - ம்.)— 1 'மலிய'

# புறநானூறு மூலமும் உரையும்.

...ர்கிய எருப்பொருகிய மறவிணையுடைய் பாசறைக்கண்ணே பொலிவு பெறப் புலராத பசியஇலையை இடையிட்டுத்தொடுக்கப்பட்ட மலராத முகை யினையுடைய மாலையினது பகைக்கண்டாற்போலற தசையோடுகூடிய பெருஞ்சோற்றுத்திரளையைப்பாணசுற்றத்தையூட்டும் தலைமையையுடைத்து, ...து வெய்யமுனையாகிய இருப்பிடம் ; கைவலலோனுற் புனைந்துசெய்யப் பட்ட எழுதிய அழகு பொருந்திய அலலிப்பாவை * அலலியமென்னும் கூத்தையாடும் அழகையொப்ப அன்பினையுடைய துணைவனும் துணைவியு மாகிய இருவரலலது இடையாமத்தின்கண் தனிமகன்வழங்காத குளிர்ந்த மலரையுடையகாவின்கண் இயங்குதற்கினிய செறிந்த மணலையுடைய புதிய பூவையுடைய சாலையினது வாயிலின்கண் மாடந்தோறும் செம்மறிக்கிடா யைப்படுக்க நீ அவ்விடத்து எடுத்துக்கொண்ட விழவினும் பல.—எ - று.

நன்றுட்டோளுமென்ற உம்மை, சிறப்பும்மை.

அல்லிப்பாவையாடுவனப்பெலாறது, ஆணகோலமும் பெண்கோலமு மாய அவ்விருவருமாடுங்கூத்தை. படையோர் பாசறை பொலியவென்பதற் குப் படையோரது பாசறைபொலிவுபெறவென்று உரைப்பினுமமையும்.

பாசிலைமலையவென்று பாடமோதுவாருமுளர்.

தனிமகன்வழங்காவென்றது, தனித்துவழங்கின் அபபொழில்வருத்து மென்பது.

களத்துக்கொள்வெண்ணெலென்பது, களகெகொள்வெண்ணெலெனத் தொக்கது.

மூகந்தனர்கொடுப்ப, உகந்தனர் பெயருமென்பன, வினையெச்சமுற்று.

உழுவைபொறிக்குமாறறலையாகலின், பாண்கடும்பருத்தும் நின்வெம் முனையிருக்கை நீ கொணட விழவினும் பல செம்மற்றெனக்கூட்டுக.

விழவென்பது, † சிறுசோற்றுவிழவினை ; வேளவியெ எறுரைப்பினு மமையும். (௩௩)

---

* அலலியக்கூத்து : சிலப். ௬: ௪௮ - அடியாாகுலலாருரையைப் பார்கக.

† சிறுசோற்றுவிழவு-சோறறைத தயிர்முதலியவற்றோடுகலநது உருண் டைகளாக்கி அவற்றை வருவோர் ஒவ்வொருவருக்கும் கொடுதது மகிழ்தல்.

---

(௩௪.) ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கு
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்

க. "குடிகொடா நிறைமகாளருய கோமகற்குக் கற்று, மடிகொன்று பால்கொளலு மாணபே" நீதிநெறி. உக.

௪ - ௫. இவ்வடிகளிற்கூறப்பட்டவற்றை, "பெரிய அறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலையறுத்தலும் மகளிர் கருவினைச் சிதைத்தலும் பார்ப்பார்த்தபுதலுமுதலிய பாதகங்களைச் செய்தல்" (குறள். கக0) என உரை [illegible]யிலமைத்தனர் பரிமேலழகர்.



வழுவாய் மருங்கிற் கழுவாயு 1 முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
2 வறம்பா டிற்றே யாயிழை கணவ
காலை யந்தியு மாலை யந்தியும்
புறவுக் கருவன்ன புன்புல வரகின்
பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கிக்
குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலொ
டிரத்தி நீடிய வகன்றலை மன்றத்துக்
கரப்பி லுள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி
யமலைக் கொழுஞ்சோ றார்ந்த பாணர்க்
ககலாச் செல்வ முழுவது செய்தோ
னெங்கோன் வளவன் வாழ்க வென்றுநின்
பீடுகெழு நோன்றாள் பாடே னாயிற்

[3] பம்பரி யலனே பலகதிர்ச் செல்வன்
யானோ தஞ்சம் பெருமவிவ் வுலகத்துச்

க - ச. "கொலைகளிற கொடுமை சான்ற பாவப்பனைக் கொலைவல்வீரக், கொலைகருக் கொலைதாய தந்தைக் கொலைக்கவைக் கோட்டுதலார், கொலை முதற் பிறவும் நீங்கும்" காஞ்சிப். சருவதீர்த்த. கச.

ரு. "நிலந்திறம் பெயருங் காலை யாயினும்" பதிற். சுரு : சு.

சு. உய்தி - பிழைத்தல்; "உய்திக் கால முரையீ ரோவென" (சிலப். கO - உசO); "சார்பறுத்துய்தியும்" மணி. உரு : ரு.

க-எ. "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" (குறள். ககO); "சிதைவகல காதற் றாயைத் தந்தையைக் குருவைத் தெய்வப், பதவியந் தணரை யாவைப் பாலரைப் பாவைமாரை, வதைபுரி குநர்க்கு முண்டா மாற்றலா மாற்றல் மாயா, உதவிகொன் றார்க் கென் றென்று மொழிக்கலா முபாய முண்டோ" (கம்ப. கிட்கிந்தை. சுஉ) என்பன இங்கே அறியத்தக்கவை.

ரு - எ. 'பாட்டு' என்னும் உரிச்சொல் சொல்லுதற்றொழிற்பண்பின் மேல் வருதற்கு மேற்கோள்; நன்-மயிலை. கூ. சருள; நன்-வி. கூ. சருஅ.

சு - எ. "நன்றி, செய்குநர்ப் பிழைத்தோர்க் குய்வில வென்னுங், குன்று வாய்மை" கல்லா. ச.

கஉ. "இறந்திற மன்றமும்" மணி. சு: அக.

கச. "பெருஞ்சோற மைலை" மணி. கஎ : உ.

கக. ஒருசொல் முன் ஒருசொல் வருங்கால் தொகைநிலைவகையா னும், எண்ணுநிலைவகையானும், பயனிலைவகையானும் வருதலேயன்றி எச்ச

(பி - ம்.)—1 'உளவே' / 'அறம்பாடினரே' 3 'பரபேரி'

௨0 சான்றோர் செய்த நன்றுண் டாயி
னிமயத் தீண்டி யின்குரல் பயிற்றிக்
கொண்டன் மாமழை பொழிந்த
நுண்பஃ றுளியினும் வாழிய பலவே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனை
ஆலத்தூர்கிழார்

பாடியது.

இ - ள்.—ஆனினது முலையாற்பெறும் பயனைக்கெடுத்த தீவினையா
ளர்க்கும் மாட்சிமைப்பட்ட ஆபரணத்தையுடைய பெண்டிரது கருப்பத்தை அழித்தோர்க்கும் பார்ப்பாரைப்பிழைத்த கொடுந்தொழிலையுடையோர்க்கும் அவர்செய்த பாதகத்தின் ஆராயுமிடத்து அவற்றைப்போக்கும் வழியுமுள வெனவும், நிலம் கீழ்மேலாம் காலமாயினும் ஒருவன்செய்த நன்றியைச்சிதைத் தோர்க்கு நரகம்நீங்குதலில்லையெனவும் அறநூல் கூறிற்று; தெரிந்த ஆபரணத்தையுடையாள் தலைவ, காலையாகிய அந்திப்பொழுதும் மாலையாகிய அந்திப்பொழுதும் புறவினது கருவாகிய முட்டைபோன்ற புல்லிய நிலத்து வரகினது அரிசியைப் பாலின்கட்பெய்து அடப்பட்ட சோற்றைத் தேனோடு கலந்து உண்டு குறிய முயலினது கொழுவிய குட்டிறைச்சியைத்தின்ற என்
சுற்றத்தோடுகூட இலங்கைமாமோங்கிய அகன்ற இடத்தையுடைய பொதியிற்கண் ஒன்றனையும் மறைத்தலில்லாத உள்ளத்துடனே வேண்டிய வார்த்தைகளைப் பலகாலுங்கூறிப் பெரிய கட்டியாகிய கொழுவியசோற்றை அருக்

திய பாணர்க்கு நீங்காதசெலவமெலலாவற்றையும் செய்தோன் எம்முடைய வேந்தனுகியவளவன் வாழ்வானுகவென்றுசொலலி நினது பெருமைபொருந்திய வலியதாளைப் பாடிற்றிலேனுயின், † வாழநாட்கு அலகாகிய பலகதிரையுடையசெல்வன் தோன்றுதலறியான்; யானே எளியேன்; பெரும, இந்தவுலகத்தின்கண் நற்குணங்களால அமைநதோர்செய்த நல்வினையுண்டாயின், இம்மமலையின்கண்ணே திரண்டு இனிய ஓசையைப்பயிற்றிக் கீழ்காற்றன் வரும் பெரிய முகிலசொரிநத நுணணிய பலதுளியினும் பலகாலம் வாழ் வாயாக.—எ - று.

---

வகை, அடுக்குவகை, பொருளகோள்வகை, ஆக்கவகை, இடைச்சொல்வகை, உரிச்சொலவகை என்றற்போலப் பிறவகையாலும் வருதலுண்டென்று கூறி இவ்வடியை இடைச்சொலவகையான் வந்ததற்கு மேற்கோள் காட்டினர்; தொல். கிளவி. சூ. ௧ - கல்.

௨௦ - ௨௩. புறநா. ௧௨௩ : ரு - ௬ ; ௩௦௨: ௧௧; ௩௮ரு: ௧௦ - ௧௨; "ளாநதலை யுலகஞ் செய்தநன் றுண்டெனின்......வாழிய பலவே" பதிற். ௬௩: ௧௮ - ௨௧.

* மு. 'வாழ்த்து' என்னுந் துறைக்கு மேற்கோள்; தொல்: புறத்திணை. சூ. ௨௯ - இளம்.

† 'வாழ்நாட்கலகாகிய' என்பது "வாழ்நாட் கலகாய் வயங்கொளி மண்டிலம்" (நாலடி. ௨௨) என்பதனைத் தழுவியது.

## புறநானூறு மூலமும் உரையும்.

நிலம்புடைபெயர்வதாயினுமென்பதற்கு * ஊழிபெயருங்காலத்தா யாவருஞ்செய்த இருவினையுநீங்குதலின, அக்காலத்தும் செய்திகொன்றோர்க்கு உய்தியிலலென்றும், நிலத்துள்ளார்யாவரும் இவர்கூற்றிலே நிற்பாராயினு மென்றும் உரைப்பாருமுளர்.

புன்கம் இவன்பாற் செல்வதற்குமுன்பு பெற்ற உணவாகவும், அமலைக் கொழுஞ்சோறு இவன்பாற்பெற்ற உணவாகவுங்கொள்க. அன்றிச் சென்ற இடந்தோறும்பெற்ற உணவாகவுரைப்பினுமமையும்.

மன்றத்துச சூடுகிழித்த ஒக்கலொடுகூட வேண்டுமொழிபயிற்றி ஆர்ந்த பாணர்க்கெனக் கூட்டுக.

பாணர்க்கெனத் தம்மைப் பிறர்போலக் கூறினர்."

ஆயிழை கணவ, செய்திகொன்றோர்க்கு உய்தியில்லென அறம்பா டிற்று; ஆதலால, பாணர்க்குச் செலவமுழுவதூஉஞ்செய்தோன், எங்கோன் வளவன் வாழகவென்று காலையாதியும் மாலையாதியும் நின்றுள் பாடேனாயின், பலகதிர்சசெலவன் படுபறியான் ; பெரும, யானோ தஞ்சம் ; சான்றோர் செய்த நன்றுண்டாயின், துணவேளியினும் பலகாலம் வாழ்வாயாகவெனக் கூட்டுக.

கோவதைமுதலாயின வாககாற்சொலலவும்படாமையின், ஆன்முலை யறுத்தவெனவும், மகளிர்கருசசிதைத்தவெனவும், பார்ப்பார்த்தப்பியவென வும் மறைததாக கூறப்பட்டன.

இது, பரிசிலபெறறுபபோகின்றானை நீ எம்மை நினைத்துவருவையோ வென்றாற்கு இவ்வாறுசெய்த நின்னை வளவன்வாழகவென்று பாடேனாயின், யானிருக்குமிடத்துப் பலகதிர்சசெலவன் படுதலறியான் ; அதனால் இம்மை யினபம்பெறேனெனவும், செய்ந்நன்றிகொன்றோர்க்கு உய்தியிலலையனவே மறுமையின்கண் நரகம்புகுவேனெனவும் கூறியதாகக்கொள்க. (௩௪)

* கம்ப. கடலகாண். ௨.

(௩௫.) களியிரு முந்நீ ரேணி யாக
வளியிடை வழங்கா வானஞ் சூடிய
மண்டிணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்
முரசுமுழங்கு தானை மூவ ருள்ளு

க. "ஏணியெ-எல்லையில; 'களியிரு முந்நீ ரேணி யாக' என்றார்" சிலப்.
உ௩ : க௬௫ - அரும்பத.

௩. புறநா. உ: முதலடியின் குறிப்பைப்பார்க்க.

உ - ௩. "வான் கவிந்த வையகம்" நாலடி. ௮0.

௪. மு. பொருந. ௫௪ ; பெரும்பாண். ௩௩ ; "முடியுடை வேந்தர் மூவ ருள்ளுந், தொடிவிளங்கு தடக்கைச் சோழர்" சிலப். ப. உ௬௭.

௩ - ௪. "முரசு முழங்குதானை......னைதேபெரும என்புழிமூவிருள்ளு மென 'முன்னிலையாகற்பாலது மூவருள்ளுமெனப் படர்க்கையாயவழி அமை





ளு மரசெனப் படுவது நினதே பெரும
வலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினு
மிலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினு
மந்தண் காவிரி வந்துகவர் பூட்டத்
தோடுகொள் வேலின் றோற்றம் போல
[1] வாடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கு

நாடெனப் படுவது நினதே யத்தை, ஆங்க
நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே
நினவ கூறுவ லெனவ கேண்மதி

---

தலும்", "முரசு முழங்குதானை...பெரும எள்புழி மூவரென்றதது என்னை யெனின் புலவன் கூறுகின்ற இவனை ஒழிந்த இருவகைக் குலத்தோரும் இவன் முன்னுள்ளோரும் படர்க்கையராதலின், அம்மூவகைக்குலத்துள்ளோரையுங் கூட்டி முரசுமுழங்குதானை மூவர் அரசுள்ளும் அரசென்று ஈண்டுச் சிறப்பித்துச் சொலலப்படுவது அச்சோழர்வழித்தோன்றிய நின்னரசே யென்றுணெனப்பொருள் கூறுக" (தொல். எச்ச. சூ. ௬௪ - சே, ந); அரசனது தன்மையெனப் பாவத்தன்மையையுணர்த்தும் உகரவீற்றுப் பாவதத்திதன் என்றுகூறி இப்பகுதியை மேற்கோள்காட்டினார்; பிரயோக. ௫௪.]

௬ - அ. இவ்வடிகளின் கருத்து, புறநா. ௧௧௭: ௨, ௩௮௮: ௧-௨, "கல் காயுங் கடுவேனிலொடு இருவானம் பெயலொளிப்பினும், வரும்வைகன் மீன் பிறழினும், வெள்ளமாறாது" (மதுரை. ௧௦௮ - ௬), "வசையில்புகழ் வயங்கு வெண்மீன், திசைதிரிந்து தெற்கேகினுந், தற்பாடிய தளியுணவிற், புட் டேம்பப் புயன்மாறி, வான்பொய்ப்பினுந் தாம்பொய்யா, மலைத்தலைய கடற்காவிரி" (பட்டின. ௧ - ௬), "கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும், விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்...காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை" (சிலப். ௧௦: ௧௦௨- அ), "காவிரி யென்னத் தப்பாக் கருணையான்" (வில்லி - பாரதம், அருச்சுனன் றவநிலை. ௨௪) என்பவற்றிலமைத்திருத்தல் காண்க.

௯ - ௧௦. "கரும்பின், வேல்போல வெண்முகை பிரிய" (நற். ௩௬௬); "வேலீண்டு தொழுதி யிரிவுற்றென்ன" மலைபடு. ௧௧௬.

௧௧. "தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே, மண்ணு

வதுஞ் சோழ மண்டலமே" என்னுஞ் செய்யுள் இங்கே அறியத்தக்கது.

க - கக. "நளியிரு முந்நீ ரேணி யாக என்னும் புறப்பாட்டினுள், 'முரசு முழங்கு......பெரும' எ - ம் 'ஆடுகட்......அதனை' எ - ம் சிறப்புப்பற்றிப் புணர்த்தார் சான்றோர்" யா - வி. எழுத். க.

கங. "எவ்வ கேண்மதி" (அகநா. கூஎக: ரு); "வினவ கூறுவ லெனவ கேண்மதி என்றாற்போல ஆறாவதற்குரிய அகரவுருபின் முன்னரும் ஓர் அகரவெழுத்துப்பேறு நிலைமொழிக்கண் வருதலுளதாகக்கருதினர்" தொல். புணர். சூ. கங - ந.

(பி - ம்.)—1 'ஆடுகழைக்கரும்பு'

# புறநானூறு மூலமும் உரையும்.

௩ரு

யறம்புரிந் தன்ன செங்கோ னாட்டத்து
முறைவேண்டு பொழுதிற் பதனெளி யோரீண்
டுறைவேண்டு பொழுதிற் பெயல்பெற் றோரே
ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பி னடுவுநின் றாங்குக்
கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய
குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ
வெளிற்றுப்பனந் துணியின் வீற்றுவீற்றுக் கிடப்பக்

களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்

---

கரு - சு. "முறைவேண்டு நர்க்கு குறைவேண்டு நர்க்கும், வேண்டுப வேண்டுப வேண்டினர்க் கருளி" (பெரும்பாண். ௪௪௰ - ௪); "காட்சிக் கெளியன் கடுஞ் சொல்லன் அல்லனேல், மீக்கூறு மன்னன் நிலம்" (குறள். ௩௮௬) "முறைவேண்டினோர்க்கும் குறைவேண்டினோர்க்குங் காலைக்கு எளியனாய்" (௸ பரிமேல்) என்பவற்றில் இவ்வடிகளின் சொல்லும் பொருளும் அமைந்திருக்கின்றன; "முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி, யொல்லாது வானம் பெயல்" (குறள். ௫௫௯), "அவுஞ்சின வேந்தன் முறைநெறியிற் சேர்தலும்.........திங்கண்மும் மாரிகுவித்து" (திரி. ௬௮) என்பவை இங்கே அறியற்பாலன.

கஅ. மாகவிசும்பு : பரி. கடவுள். ௪௰; அகநா. ௨௫௰: ௨௪ ; மதுரை. ௪௫௪.

௬௯ - ௭௧. புறநா. ௬௦: ௧௧ - ௨; "உலகுடன் னிழற்றிய தொலையா வெண்குடை" (அகநா. ௨௦௪); "திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும், கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ், வங்க ணுலகளித்த லான்" (சிலப். க: க - ௩); "ஏமவெண்குடை", "வெயிலழல் கவியாது வியலக வரைப்பி, னுயிரழல் கவிக்கு முயர்ச்சித் தாகிப், பூந்தா ரணிந்த வேந்தன் வெண்குடை" (பெருங். க. ௩௬: ௧௦௪; ௸ ௪௨: ௪௪ - ௫); "திருநீர்மதுரை" (சிலப்.கரு:௬-௧௦) என்பதன் விசேடவுரையில் அடியார்க்கு நல்லாரால் இப்பகுதி மேற்கோள் காட்டப்பெற்றுள்ளது. இங்ஙனம் குடையை உயர்த்துக் கூறுதல், 'மடைமிகுத்தேத்திய குடைநிழல் மரபு' என்னுந் துறையின் பாற்படுமென்றும், இங்ஙனம் புகழ்தல் குடியைப் புறங்காத்தற்கு அறிகுறியாக இக்குடையை யான் கொண்டேனென்று அரசனைக் குறிக்கப்படுதலின் என்றுங் கூறுவர் (தொல். புறத்திணை. ரூ. ௩௬) நச்சினார்க்கினியர்.

உஉ. வெளிற்றுப்பனை: உயிர்த்தொடர்க்குற்றியலுகரத்தின்முன் அல்வழியில் வல்லின றகரம் இரட்டினமைக்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. கஅஉ.



பொருபடை தருஉங் கொற்றமு முழுபடை
யூன்றுசால் மருங்கி னீன்றதன் பயனே
மாரி பொய்ப்பினும் வாரி குன்றினு
[1] மியற்கை யல்லன செயற்கையிற் றோன்றினுங்
காவலர்ப் பழிக்குமிக் கண்ணகன் ஞால
மதுநற் கறிந்தனை யாயி னீயு
நொதும லாளர் [2] பொதுமொழி கொள்ளாது
பகடுபுறந் தருநர் பார மோம்பிக்
குடிபுறந் தருகுவை யாயினின்
னடிபுறந் தருகுவ ரடங்கா தோரே. *

உரு - சு. வீரர்கள் அரசனுக்கு வெற்றிதருதற்குக் காரணம் உழுவோன் படை, "பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப, ரலகுடை நீழ லவர்" (குறள். ௧௦௩௪), "குடைநீழலென்பதூஉம் ஆகுபெயர்; 'ஊன்றுசால் மருங்கி னீன்றதன் பயனே' என்றதனால் தம்மரசனுக்குக் கொற்றம் பெருக்கி மண்முழுதும் அவனதாகக்கண்டிருப்பரென்பதாம்" (ஷை பரிமேல்), "இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமு, முழவிடை விளைப்போர்" (சிலப். ௧௦: ௧௪௯ - ௫௦) என்பவற்றாலுமுணர்க.

௩0. மு. புறநா. ௨௨௧; ௫.

௩௧. "தீயனெனும் பாம்பு செவியிலொரு வறகவ்வ, மாயுமே மற்றை யவன்" (அணி. மேற்) என்னுஞ் செய்யுள் இங்கே அறிதற்பாலது.

௩௨. பகடுபுறந்தருதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. ௫. ௧௫ - இளம்.

௩௩. "சாலக், குடியோம்பல வல்லா னரசன்" (திரி. ௧௧); "கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி, புண்ணியத்தின் பாலதே யாயினும் - தண்ணளியான், மன்பதை யோம்பாதார்க் கென்றும்" நீதிநெறி. ௨௮.

௩௨ - ௩. "குடிபுறந் தருநர் பார மோம்பி" (பதிற். ௧௩ : ௨௪);
"வீழ்குடி-காணியாளர்; 'பகடு..........தருகுவையாயின்' என்றார் பிறரும்" (சிலப். ௫ : ௪௩ - ௫. அடியார்) ; வேளாளர் உழுதுண்டற்கு மேற்கோள்: தொல். அகத்திணை. சூ. ௩0 - ந.

௩௨ - ௪. "உற்றதற் கெல்லா முரஞ்செய்தல் வேண்டுமோ, கற்றறிந் தார் தம்மை வெகுளாமை காப்பமையு, நெறசெயப் புற்றேய்ந்தாற போல கெடும்பகை, தறசெய்யத் தானே கெடும்" (பழ. ௮௩); "வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்,பகைவர்கட் பட்ட செருக்கு" குறள். ௮௭௮.

௩௩. "களியிரு முந்நீர்.....அடங்காதோரே: இஃது இஞ்ஞாலம் இயற் கை யல்லது தமது செயற்கையிற் றோன்றினுங் காலனைப் பழிக்கும்; இதனையு முணராதே நீ வேற்றரசர்க்குப் பெறுதற்கரிதாகிய சிறந்த காட்டினை நினதாகப் பெற்றுவைத்து அதனை யழிக்கின்றது நினக்கு அரசியலன்றென்று அவனுட்டை யழித்தமை கூறுதலில, தகளொடு புணரவும், குடிபுறந்தரின்

(பி - ம்.)—1 'இயற்கையல்லது' 2 'பொய்ம்மொழி'

திணை - அது ; துறை - செவியறிவுறூஉ.
அவனை வெள்ளைக்குடிநாகனார்பாடிப் பழஞ்செய்க்கடன் வீடுகொண்டது.

இ - ள்.—நீர்செறிந்த பெரிய கடலை எல்லையாகக் காற்று ஊடுபோகாத வானத்தைச்சூடிய மண்செறிந்த உலகத்தின்கட் குளிர்ந்த தமிழ்நாட்டிற்கு உரியராகிய முரசொலிக்கும் படையினையுடைய மூவேந்தருள்ளும் அரசென்றற்குச் சிறப்புடையது, நின்னுடையவரசே; பெரும, விளங்கிய சுடரையுடைய ஞாயிறு நான்குதிக்கினுந் தோன்றினும் விளங்கிய கதிரையுடைய வெள்ளிமீன் தென்றிசைக்கட் செல்லினும், அழகிய குளிர்ந்த காவிரி வந்து பலகாலாயோடிப்பூட்டத் தொகுதிகொண்ட வேலினது காட்சியையொப்ப அசைந்த கண்ணினையுடைய கரும்பினது வெளிய பூ அசையும் நாடென்றுசொல்லப்படுவது, நின்னுடையநாடே ; அந்நாடு பொருந்திய செல்வத்தையுடைய பெருமைபொருந்திய வேந்தே, நின்னுடைய சிலகாரியஞ் சொல்லுவேன் ; என்னுடைய சிலவார்த்தைகேட்பாயாக ; அறக்கடவுள் மேவி ஆராய்ந்தாற்போன்ற செங்கோலானாராயும் ஆராய்ச்சியையுடைய நீதியைக் கேட்கவேண்டுங்காலத்துச் செவ்வியெளியோரா இவ்விடத்துத் துளி வேண்டுங்காலத்து மழைபெற்றவரே ; ஞாயிறெறித்த தலைமேற்கொண்ட பக்கந்திரண்ட முகில மாகமாகிய உயர்ந்த வானத்தினது நடுவுநின்று அதன் வெயிலை மறைத்தாற்போலக் கண்ணொளியோடு மாறுபட்டு விளங்குகின்ற நினது வானைமுட்டிய பரந்த வெண்கொற்றக்குடை வெயிலைமறைத்தற்குக

கொண்டதோவெனின், அன்று ; வெருதகமுற்ற குடிமைய நிழற்செயதலகார ணத்தாற்கொள்ளப்பட்டது ; கூரிய வேலினையுடைய வளவ, இனிய பனை யினது துணடம்போல வேறுவேறுகிடப்பக் களிறபுதரினைப பொருத இடமகன்ற போர்க்களத்தினகண வருகின்ற படையை எதிர்நின்று பொ றுத்து அது சரிந்தமீளும் பரக்கொடைகண்டு ஆர்த்துககொண்டு நின் போர் செய்யும்படை தரும்வெற்றியும் உழுகின்ற கலப்பை நிலத்தின்கண் ணே ஊன்றுசாலிடத்து விளைந்த நெலலினதுபயன் ; மழை பெய்யுங்காலத் துப் பெய்யாதொழியினும், விளைவு குறையினும், இயல்பலலாதன மக்களது தொழிலிலே தோன்றினும் காவலரைப் பழித்துரைக்கும், இவ்விடமகன்ற உலகம் ; அதனை நன்றாக அறிந்தனையாயின, நீயும் குறளைகூறுவாரது உறுதி யிலலாத வார்த்தையை உட்கொள்ளாது ஏரைப பாதுகாப்பாருடைய குடி யைப் பாதுகாத்து அக்காவலாலே ஏனைக் குடிகளையும பாதுகாப்பாயாயின், நின் அடியைப் போற்றுவர், நின்பகைவர்.—எ - று.

வளியிடை வழங்கா மண்டிலம் கிடக்கையென இலையும் ; அன்றி, வாயு பதத்துக்கு மேலான வானமெனக் கிடந்தவாறே உரைப்பினுமமையும்.

அரசென்றது, அரசர்தன்மையை.

முறைவேண்டுபொழுதிற் பதனெளியோர் ஈண்டு உறைவேண்டுபொழு திற் பெயலபெற்றாரென்றகருத்து ; நீயும் பதனெளியைபாதல வேண்டும் ; அவ்வாறு பெயலபெறுதற்கென்றவாறும்; அன்றி, இதற்கு முறைவேண்டு

நினக்குச் செலவமுதலிய சிறந்தவிற பகைவர் நின்னை வணங்குவரெனப் பொருளொடு புணர்வும் வெளிப்படக் கூறலிற் செம்பொருட்செவியுறை யங்கமாயிற்று'' தொல். செய். சூ. ௧௨௮ - ந.



பொழுதிற் பதனெளியோர் ஈண்டு உறைவேண்டுபொழுதிற் பெயர் பெற் றோரோ டொப்பரென்று உரைப்பாருமுளர்.

அத்தையும், ஆங்கவும், மதியும் அசைநிலை. நிலவ எனவமென

ஏற்று நின்ற அகரங்கள், செய்யுள்நோக்கி விரிக்கப்பட்டன.

நாடுகெழுசெல்வத்துப் பீடுகெழுவேந்தே, நின்வகூறுவல் ;

எனவ

கேண்மதி ; குடை வருந்திய குடி மறைப்பதுவாகும் ;

கூர்வேல்வளவ,

பதனெளியோர் உறைவேண்டுபொழுதிற் பெயல்பெற்றோராவர்; ஆகையால், நீயும் அவ்வாறு காலம் எளிமையாய்க் கொற்றமும் ஈன்றதென்பயனென்று

கருதிக் காவலர்ப்பழிக்கும் இக்கண்ணகன்ஞாலமென்றுகொண்டு கொது மலாளர் பொதுமொழிகொள்ளாது பாரமோம்பிப் புறந்தருகுவையாயின்,

நின்னடி புறந்தருகுவர்,

வாயிற்று.

அடங்காதோரென் றமையால, செவியறிவுறூஉ

(௩௫)

---

(௩௬.) அடுநை யாயினும் விடுநை யாயினு
நீயளந் தறிதிநின் புரைமை வார்கோற்
செறியரிச் சிலம்பிற் குறுந்தொடி மகளிர்
பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடுந்
௫ தண்ணான் பொருநை வெண்மணல் சிதையக்
கருங்கைக் கொல்ல னரஞ்செ யவ்வாய்
நெடுங்கை நவியம் பாய்தலி னிலையழிந்து
வீகமழ் நெடுஞ்சினை புலம்பக் காவுதொறுங்
கடிமரந் தடியு மோசை தன்னூர்

கo நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப

க - உ. "ஓலவை யாயிறுய் கொல்லை யாயிறு, நீயளக தறிவையின் புரைமை" குறுந். உருஎ.

ந - ௪. மகளிர்,......முத்த வார்மணற் பொற்கழங் காடும்" பெரும் பாண். நஉஎ - நரு.

ரு. புறநா. கக : ரு - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

சா. "வலம்படு திகிரி வாய்நீ வுதியே" கலி. எ.

கூ. 'கடி' என்னும் உரிச்சொல காப்பு என்னும் பொருளில வநததற்கு மேற்கோள்; தொல். உரி. கு. அரு - ந.

சா - கூ. புறநா. உஙு: பு - கூ-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

அ - கூ. 'கடி' என்னும் உரிச்சொல காவலென்னும் பொருளில வநத தற்கு மேற்கோள்; இ - வி. ரு. உஅஉ - உரை.

கூ - கo. இயம்பலென்னும் உரிசசொல இசைப்பொருளுணர்த்தற்கு மேற்கோள; தொல். உரி. ரு. சாஉ - சே; மடி மடி கு. சாo - ந; இ - வி. ரு. உஅரு - உரை.

## புறநானூறு மூலமும் உரையும்.

அஎ.

வாங்கினி திருந்த வேந்தனோ டிங்குகின்
சிலைத்தார் முரசங் கறங்க

மலைத்தனை யென்பது காணுத்தக வுடைத்தே.

திணை - வஞ்சி; துறை - துணைவஞ்சி.

அவன் கருவூர் முற்றியிருந்தானை ஆலத்தூர்கிழார் பாடியது.

இ - ள்.—கொலவாயாயினும் கொல்லாது ஒழிவாயாயினும் அவற்றால நினக்கு வரும் உயர்ச்சி யாம் சொலலவேண்டா; நீயே எணணியறிவை; செறிந்த உள்ளிடு பருக்கையையுடைய சிலம்பினையும் நீண்ட கோத்தொழிலாற் செய்யப்பட்ட குறிய வளையினையுமுடைய மகளிர் பொன்னாற்செய்யப் பட்ட கழலான் வேதிகை போல உயர்ந்த எகர்க்கண்ணேயிருந்து விளையாடும் அணுமையையுடைய குளிர்ந்த ஆன்பொருந்தத்தினது வெளிய மணல் சிதைய வலிய கையையுடைய கொல்லன் அரத்தாற் கூர்மைசெய்யப் பட்ட அழகிய வாயினையுடைத்தாகிய நெடிய கையையுடைய கோடாலி வெட்டுதலான் நின்றநிலைகலங்கி வீழும் பூ காநின்ற நெடிய கொம்புகள் தனிப்பக் காக்கப்டோறும் காவன்மரங்களை வெட்டுமோசை தன்னுடைய ஊரின்கண் நெடியமதிலெல்லையில தனது காவலையுடைய கோயிர்கண்ணே சென்றொலிப்ப அவ்விடத்து மானமின்றி இனிதாகவிருந்த வேந்தனுடன் இவ்விடத்தினது இந்திரவிற்போலும் மாலையையுடைய முரசொலிப்பப் பொருதா யென்பது கேட்டார்க்கு காணும் தகுதியையுடைத்து; ஆதலால, அப் போரை ஒழியத்தகும்.—எ - று.

வார்கோற் குறுந்தொடியென மாறியுரைக்கப்பட்டது.

இனிதிருந்தவென்றது, குறிப்புமொழி.

கடிமரந்தடியுமோசை தன்மனையியம்ப இனிதிருந்த வேந்தனொடு மலைத் தனையெ்பது காணுத்தகவுடைத்து; அதனால அடுநையாயினும் விடுநை யாயினும் நின்புரைமை நீ அளந்தறிதியென மாறிக்கூட்டி வினைமுடிவு

செய்க.

மகளிர் தெற்றியாடும் பொருளையென்றகருத்து: இங்ஙனம் இளமகளிர் கழங்காடும் அணுமையதாயினும் புறப்பட்டுப் போர்செய்யாத அவன் வலியின்மை தோற்றிநின்றது.

தெற்றியாடும் தன்றாரென இயைப்பினுமமையும்.

---

கஉ. புறநா. கo: கo; "அகலிரு வானத்துக் குறைவில் லேய்ப்ப, வரக்கிதழ்க் குவளையொடு நீலநீடி, முரட்பூ மலிந்த முதுநீர்" (பெரும்பாண். உகஉ - ச.) 'சில' என்னும் உரிச்சொல் ஒலித்தற்றொழிற் பண்பில் வந்ததற்கு மேற்கோள்; நன் - மயிலை. ,, சஎ௬; நன் - வ. ,, சஎ௬.

கங. "காப்புடை பெயராது காணுத்தக வுடைத்தே" மணி. உரு: கங.

* 'உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்' என்னுந் துறைக்கு மேற்கோள்; (தொல். புறத்திணை. சூ. கo - இளம்); "அடுகையாயினும்...... காணுத்தகவுடைத்தே: இது புறத்தழிஞையோன்கட்டுதன் அவன் சிறப்பு எடுத்துரைத்தது" ஷை ஷை கஉ - ந.

## புறநானூறு மூலமும் உரையும்.

மேற்சென்றோனைச் சந்துசெய்து மீட்டலின், இது ...ற்று.

துணைவஞ்சியார்
(கக)

(நச.) நஞ்சுடை வாலெயிற் றைந்தலை சுமந்த
வேக வெந்திற னாகம் புக்கென
விசும்புதீப் பிறப்பத் திருகிப் பசுங்கொடிப்
பெருமலை விடரகத் துருமெறிந் தாங்குப்
புள்ளுறு புன்கண் டீர்த்த வெள்வேற்
சினங்கெழு தானைச் செம்பியன் மருக
கராஅங் கலித்த குண்டுகண் ணகழி
யிடங்கருங் குட்டத் துடன்றொக் கோடி
யாமங் கொள்பவர் சுடர்நிழற் கதூஉங்
கடிமுரண் முதலைய நெடுநீ ரிலஞ்சிச்

---

க - ச. "பாஅட், பாம்புடை விடர வோங்குமலை மிளிர,
வுருமுச்சிவந்
தெறியும் பொழுது" நற். ௧௦௪.

௫ - ம். 'புள் - புறா; அஃதுற்றபுன்கணைத் தீர்த்தோன்சிபி; புறநா. ௩௯, ௪௩, ௪௬; "எள்ளறு சிறப்பினிமையவர் வியப்பப், புள்ளுறு புன்கண் டீர்த்தோன்", "அறவாழி செங்கோன் மறநெறி நெடுவாட், புறவு நிறை புக்கோன்", "புறவுநிறை புக்குப் பொன்னுலக மேத்தக், குறைவி லுடம்பரிந்த கொற்றவனா" (சிலப். ௨௦: ௫௧ - ௨; ௨௩: ௫௮; ௨௯ "அம்மானைவரி"); "உடல்கலக்கற வரிந்துதசை யிட்டுமொருவ னொருதுலைப் புறவொ டொக்கநிறை புக்கபுகழும்" (கலிங்க. இராச. ௧௩); "புக்கான், மறு னிறைபொன்று சரணடைந்த வஞ்சப், புறநிறை புக்கபுகழோன்" (இராசராசசோழனுலா, ௫ - ௬); "கொலையே றடம்படையக் கொய் தாறு மெய்தாத், தலையேறி வீற்றிருந்த சோழன்" (குலோத்துங்க சோழனுலா, ௧௭); "உலகறியக், காக்குஞ் சிறுபுறவுக்காகக் களிகூர்ந்து, தூக்குந் துலைபுக்க தூயோனும்" (விக்கிரமசோழனுலா, ௧௦ - ௧௧); "புற வொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகை", "இவர்குலத்தோன்

மேற்பறவை', மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாறாக வழங்கினனால்", "புக்
கடைந்த புறவொன்றின் பொருட்டாகத் தலைபுக்க, மைக்கடங்கார் மத யானை வாள்வேந்தன்" (கம்ப. திருவவதார. கூறு ; குலமுறை. எ; கும்ப கருணன்வதை. ௩௫௫); "என்பும் உரியராதல், தன்னகம்புக்க
குறுநடைப் புறவின் றபுதியஞ்சிச் சீரைபுக்கோன்முதலாயினோர்கட் காண்க" குறள். எ௨ - பரிமேல்.

எ. "காராஅம் கலித்த கண்ணகன் பொய்கை" பட்டின. உச௨.

எ - கO. "முதலையும் இடங்கருங்காரமும் தம்மின் வேறெனப் படு மேல்வெனின், 'காராஅம் கலித்த......இலஞ்சி' என வேறெனக் கூறப் பட்டனவென்பது" தொல். மரபு. சூ. சக - ௩ - பேர்.

## புறநானூறு மூலமும் உரையும்.

அக

செம்புறம் புரிசைச் செம்மன் மூதூர்
வம்பணி யானை வேந்தகத் துண்மையி
னல்ல வென்னுது சிதைத்தல்
வல்லையா னெடுந்தகை செருவத் தானே.*

1 திணை - வாகை ; துறை - அரசவாகை; முதல்வஞ்சியுமாம்.

சோழன் குளமுற்றத் துத்துஞ்சியகிள்ளிவளவனை 2 தப்பசலையார் பாடியது.

இ • ள.—† கருசுடைத்தாகிய வெளிய பலகிளையுடைய

ஐகதுபடம்

பொருகதிய தலையைச்சுமகத சினம்பொருகதிய வெய்ய இதலையுடைய பாம்பு புக்கதாக வானம் தீபபிறக்கும்பரிசு முறுகிப் பசிய கொடியினையுடைய பெரிய மலைமுழையின்கண்ணே இடியேறெறிகதாற்போல, புறவுற்ற துயரத் தைக் கெடுத்த வெளவேலோடு சினம்பொருகதிய படையையுடைய செம்பி

யன்மரபிலுள்ளாய், கராம்செருக்கிய குழிகத இடத்தையுடைய

அகழியினை

யும், இடம் கரிதாகிய ஆழத்தின்கட் சேரத்திரணடோடி இடையாமத்து ஊர்காப்பாருடைய விளககுநிழலைக் கவரும் கடிய மாறுபாடுபொருந்திய முதலையையுடைய நீர்மிக்க மடுவினையும், செம்புபொருவும் மதிலையுமுடைய தலைமைபொருகதிய பழைய ஊரினுளளே கச்சணிகத யானையையுடைய

அரசுண்டாகலின், அவற்றை கலலவெளாறுபாராது

அழித்தலைவலலையாயிருக தாய் பெருகதகாய், போரின்கண்.—எ - று.

இலஞ்சியையுடைய அகழியெனமாறிக்கூட்டினுமமையும்; இப்பொருட் கும் கராம் கலித்தல அகழிக்கு அடையாககுக.

கராம் - முதலையுள் ஒருசாதி.

செம்பியன்மருக, கெடுத்தகாய், விடாகத்து காகம்புக்கென உருமெ றிகதாங்கு மூனாரகத்த வேகதுணமையின, செருவத்துச சிதைததல வலலை யென மாறிக்கூட்டுக.

புள்ளூறு புன்கண் தீர்த்த பொருளிலேன் மருகனும் செருவின்கண் இவற்றை நல்லவென்று பாராது அழித்தல வலலையாயிருந்தாயென அவன் மறம் வியந்து கூறியவாறு.

ஐந்தலையென்றதற்கு ஐந்துதலையெனினுமமையும்.

---

கக. புறநா. உ0க : கூ; "செம்பியன் றன்ன செஞ்சுவர்" (மதுரை. ௬அ௫); "செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்" (நெடுநல். ககஉ); "செம்புறழ் புரிசை" (அகநா. ௩௭௫); "செம்பைச்சேரிஞ்சி", "செம் படுத்த செழும்புரிசை", "செம்பு கொப்புளித்த மூன்றுமதில" (தே); "செம்புகொண் டன்ன விஞ்சித் திருநகர்" சீவக. ௬௩௩.

* மு.முரணியபுறத்தோனணங்கியபக்கமெனனுநதுறைக்குமேற்கோள்; தொல். புறத்திணை. ரு. க0 - இளம்.

† "விரிசிற காகம் விடருள தேனு, முருமின கடுஞ்சினஞ் சேணின்று முட்கும்" நாலடி. ககூ௬.

(பி - ம்.)— 1 'திணை-உழிஞை; துறை-குற்றுழிஞை' 2 'மாறேகத்து'



புறநானூறு மூலமும் உரையும்.

இடக்கருக்குட்ட மென்பதனுள், உம்மையை அசைநிலையாக்கி, இடக் கரையுடைய குட்டமென்றுரைப்பாருமுளர்.

இடங்கிட்டத்தென்று பாடமோதுவாருமுளர்.

(௩௮)

---

(௩௮.) வரைபுரையு மழகளிற்றின்மிசை
வான்றுடைக்கும் வகையபோல
விரவுருவின கொடிநுடங்கும்
வியன்றானை விறல்வேந்தே
நீ, உடன்றுநோக்கும்வா யெரிதவழ
நீ, நயந்துநோக்கும்வாய் பொன்பூப்பச்
செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும்
வெண்டிங்களுள் வெயில்வேண்டினும்
வேண்டியது விளைக்கு மாற்றலை யாகலி

---

௧. இவ்வடி முதற்கு முதலேவந்த உவமைக்கும் (தொல். உவம. சூ. ௬ பேர்), 'ஒப்பு' புறப்பொருட்கண்வந்ததற்கும் (தொல். பொருளியல், சூ ௫௨ - ந), 'மழ' என்னும் உரிச்சொல் இளமைப்பொருளில் வந்ததற்குப் (தொல். உரி. சூ. ௧௫-சே; ஷை டி. சூ. ௧௪-ந; இ - வி. சூ. உ௮௧-உரை மேற்கோள்.

௨. வியலென்னும் உரிச்சொல் வியனென்று திரிந்துநிற்றற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. ௬௬ - ந.

௫ - ௬. "மலைந்தோர் தேஎ மன்றம் பாழ்பட, நயந்தோர் தேஎ நல் பொன் பூப்ப" பெரும்பாண். ௪௨௫ - ௪.

எ - அ. புறநா. ௩௦ : க; "அகப்படு பொறியி னுரை யாக்குவா ரியார ரம்மா, மிகைப்படு பொறியி னுரை வெறியாச் செய்யலாமோ, ககைக்கதி மதியம் வெய்தாகடுக்கச்சுட்டிடுத லுண்டோ, பகைக்கதிர்ப் பருதி சந்துமாக யும் பயத்த லுண்டோ" (வளையாபதி); "இனப்பொருளைச் சுட்டுதலின்றி பண்படுத்த வழங்கப்படும் பெயர் வழக்குநெறியல்ல செய்யுணெறி யென் னாறு; உ - ம். 'செஞ்ஞாயிற்று......வெண்டிங்களும்' எனவரும்; பலபொரு குப் பொதுவாகிய சொல்லன்றே ஒரு பொருட்குச் சிறந்த பண்பான் விசே டிக்கப்படுவது; ஞாயிறு திங்களென்பன பொதுச்சொலன்மையிற் செஞ்ஞா றென்றும் வெண்டிங்களென்றும் விசேடிக்கப்படாவாயினும், செய்யுட்கண் அணியாய் நிற்றலின் அமைக்கவென்றார்", "செஞ்ஞாயிற்று நிலவு.....வெயி வேண்டினும்; என இவை கருஞாயிறும் கருந்திங்களுமாகிய இனமின்மையிச் விசேடிக்கப்படாவாயினும் செய்யுட்கு அணியாய் நிற்றலின் அமைத்தார் (தொல். கிளவி. சூ. ௧௮ - சே; ந); செம்மை வெண்மை, இங்கே இனமி ன்மைத்தவத்திற்கு அடையாக வந்தனவென்பர்; நன் - மயிலை. சூ. ௪௦௦; நன் ... சூ. ௪௦௬ ; இ-வி. சூ. ௬௧௭ - வுரை; பிரயோக. ௨௩.

## புறநானூறு மூலமும் உரையும்.

கக.

னனனிழற் பிறந்து நின்னிழல் வளர்ந்த
வெம்மள வெவனோ மற்றே யின்னிலைப்
பொலம்பூங் காவி னன்னாட் டோருஞ்
செய்வினை மருங்கி னெய்த லல்லதை
யுடையோ ரீதலு மில்லோ ரிரத்தலுங்
கடவ தன்மையிற் கையற வுடைத்தென
வாண்டுச்செய் நுகர்ச்சி யீண்டுங் கூடலி

னின்று பேள்ளுவர் பரிசில
ரோன்ஞர் தேஎத்து நின்றுடைத் தெனவே.'

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.

அவன் 'எம்முள்ளீர் எந்நாட்டீர்' என்றற்கு
ஆவூர்மூலங்கிழார்பாடியது.

இ - ள்.—மலையையொக்கும் இளங்களிற்றின்மேல
ஆகாயத்தைத்தட

வும் கூறுபாட்டையுடையனபோல விரவின பலநிறத்தையுடையனவாகிய கொடிகள் அசைந்து தோன்றும் பரந்த படையையுடைய விறல்வேந்தே, நீ முனிந்து பார்க்குமிடம் தீப்பரக்க, நீ அருளிப்பார்க்குமிடம் பொன்பொலியச் செஞ்ஞாயிற்றின் கண்ணே நிலவுண்டாகவேண்டினும், வெளிய திங்களின் கண்ணே வெயிலுண்டாக வேண்டினும் நீ வேண்டியபொருளை உண்டாக்கும் வலியையுடையையாகலின், நினது நிழற்கண்ணே பிறந்து நினது நிழற்கண்ணே வளர்ந்த எமது நிலைவெல்லாம் சொல்லவேண்டுமோ? வேண்டா வன்றே; இனியநிலையையுடைத்தாகிய பொற்பூப்பொருந்திய கற்பகக்காவை யுடைய நல்ல விண்ணுலகத்தவரும் தாஞ்செய்த நல்வினையாலுள்ள இன்பத்தின் பக்கத்தைப் பொருந்துவதல்லது, செல்வமுடையோர் வறியோர்க்கு வழங்குதலும் வறியோர் செல்வமுடையோர்பாற் சென்றிரத்தலும் ஆண்டுச் செய்யக்கடவதல்லாமையான், அது செயலறவுடைத்தெனக்கருதி, அவ்விடத்து நுகரும் நுகர்ச்சி இவ்விடத்தும் கூடுதலான், நின்னாட்டைநினைப்பர் பரிசிலர்; பகைவர்தேயத்திருந்தும், நின்னுடைத் தென நினைக்கருதி ஆதலால்.—எ - று.

மற்று, அசை.

௧௨ - ரு. ஈதல் ஏற்றல் முதலியன இல்லாமையால் தேவருலகம் அவமதிக்கப்படுதலை, "ஈண்டுச் செய்வினை யாண்டுநுகர்ந் திருத்தல், காண்டகு சிறப்பினுங் கடவுள ரல்ல, தறஞ்செய் மாக்கள் புறங்காத் தோம்புநர், நற்றவஞ் செய்வோர் பற்றற முயல்வோர், யாவரு மில்லாத் தேவர்நன் னாட்டுக், கிறைவ னாகிய பெருவிறல் வேந்தே" (மணி. ௧௪: ௫௮-௬௨); "ஈவாரு மேற்பாருமின்றி எல்லாரும் ஒரு தன்மையராதலின் (ஒப்புரவு) புத்தேளுலகத்து அரிதாயிற்று", "ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து, வாழ்வாரே வன்கணவர்" (குறள். ௨௧௩, ௧0௫௮ - பரிமேல்) என்பவற்றாலும் உணர்க.

* மூ. புகழ்ச்சிக்கண்வந்தசெந்துறைப்பாடாண்பாட்டிற்குமேற்கோள்; தொல். புறத்திணை. ௫. ௨௭ - ந.



வேந்தே, நீ வேண்டியது விளைக்கும் ஆற்றலையாகலின், விண்ணுலகத்து நுகர்ச்சி ஈண்டுங்கூடலின், ஒன்னார் தேயத்திருந்தும், பரிசிலர், நின்னொடு நின்னையுடைத்தெனு நினைவுடையுளுவர் ; ஆதலான், நின்னிழற் பிறந்து நின்னிழல் வளர்ந்த எம்மளவு எவனோவென மாறிக்கூட்டுக. (௩௮

---

(௩௯.) புறவி னல்லல் சொல்லிய கறையடி

யானை வான்மருப் பெறிந்த வெண்கடைக்
கோனிறை துலாஅம் புக்கோன் மருக
வீதனின் புகழு மன்றே சார்த
௫ லொன்னா ருட்குந் துன்னருங் கடிமதி
றூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர் நினைப்பி
னடுதனின் புகழு மன்றே கெடுவின்று

மறங்கெழு சோழ ருறந்தை யவையத்
தறநின்று நிலையிற் றாகலி னதனால்
முறைமைநின் புகழு மன்றே மறமிக்
கெழுசமங் கடந்த வெழுவுறழ் திணிதோட்
கண்ணார் கண்ணிக் கலிமான் வளவ

---

க. சொல்லிய - கிளைய; புறநா. ௬௦: எ; "துணைவனாகக் குறற துளபடு சொல்லிய தொடங்கினானோ" சீவக. ௧௧௪௬.

௧ - ௨. புறநா. ௩௭: ௫ - ௬ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

௫ - ௬. செம்பியன் பகைவருடைய தூங்கெயிலெறிந்தமை பின்வரு மவைவற்றாலும் விளங்கும்:—"ஒன்னாத், தெவ்வ ருயிர்க்குமிடந் தெவ்வருயிர்க்குமிடந்

சோறியுக, தூங்கெயி லெறிந்த தொடிவிளங்கு தடக்கை, நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்" (சிறுபாண். ௭௯-௮௨); "வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல்விசும்பில், தூங்கு மெயிலுந் தொலைத்தலால்" (பழ. ௪௯); "வெயில் விளங்கு மணிப்பூண் விண்ணவர் வியப்ப, வெயிலமூன் றெறிந்த விகலவேல் கொற்றமும்", "தூங்கெயின் மூன்றெறிந்த சோழன்கா ணம்மானை" (சிலப். ௨௭: ௧௬௪ - ௫; ௨௯: "வீங்குநீர்"); "தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்" (மணி. ௧: ௪); "திறல்விளங் கவுணர் தூங்கெயி லெறிந்த,விறல்மிகு முரசின் வெல்போர்ச் சோழன்" (தொல். களவு. சூ. ௧௧ - ந. "கள ணே"); "தேங்குதூங்கெயி லெறிந்தவவனும்" (கலிங்க. இராச. ௧௭) "வாங்குர திருக்கொற்ற வாளொளரின் வாய்வாயப்பத, தூங்கும் புரிசை துணித்தகோன்" (இராசராசசோழனுலா, ௧௬); "கூடார்தந், தூங் மெயி லெறிந்த சோழனும்" விக்கிரமசோழனுலா, ௮ - ௯.

௮ - ௯. புறநா. ௫௮: ௯; "மறங்கெழு சோழ ருறந்தை யவையத் தறங்கெட வறியா தாங்கு" (நற். ௪௦௦); "ஆரங்கண்ணி யடுபோர்ச் சோழ

ரந்தெழு கல்லவை யுறந்தை" அகநா. கூரு.

கஉ. "கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்" பொருந. கசஅ.

# புறநானூறு மூலமும் உரையும்.

கூக.

யாங்கன மொழிகோ யானே யோங்கிய
வரையளந் தறியாப் பொன்படு நெடுங்கோட்
டிமயஞ் சூட்டிய வேம விற்பொறி
மாண்வினை நெடுந்தேர் வானவன் றொலைய
வாடா வஞ்சி வாட்டுநின்
பீடுகெழு நோன்றாள் பாடுங் காலே.

திணையும் துறையும் அவை.

அவனை மாறோக்கத்துநப்பசலையார் பாடியது.

இ - ள்.— புறவினது வருத்தத்தைக் களையவேண்டிக் கறைபொருந்திய அடியினையுடைய யானையினது வெளிய கோட்டாற் கடைந்து செறிக்கப்பட்ட வெளிய கடையினையுடைய கோலாகிய நிறுக்கப்படும் துலாத்தின்கண்ணே தலைப்புக்க செம்பியனது மரபினுள்ளாயாதலான், இரந்தோர்க்குக் கொடுத்தல் நினக்கு இயல்பாவதல்லது புகழுமல்லவே ; அசுரர்க்குப் பகைவராகிய தேவர்கள் இட்டதற்கு வெருவும் அணுகுதற்கரிய மிக்க வலியை

யுடைய ஆகாயத்துத் தூங்கெயிலை அழித்த நின்னுடைய முன்னுளோரை நினைப்பின், ஈண்டுள்ள பகைவரைக் கொல்லுதல் நினது புகழுமல்லவே; கேடின்றி, மறம்பொருந்திய சோழரது உறையூர்க்கண் அவைக்களத்து அறம் நின்று நிலைபெற்றதாதலால், முறைமை செய்தல் நினக்குப் புகழுமல்லவே ;

அதனால், மறம் மிக்கெழுந்திருந்த போரைவென்ற கணையமரத்தோடு மாறுபடும் தசைசெறிந்த தோளினையும், கண்ணிற்கு ஆர்ந்த கண்ணியையும், மனஞ்
செருக்கிய குதிரையையுமுடைய வளவ, எவ்வாறு கூறுவேனோயான்? உயர்ந்த எல்லை அளந்தறியப்படாத பொன்படுகின்ற நெடிய சிகரங்களையுடைய இமய மலையின்கட் சூட்டப்பட்ட காவலாகிய விற்பொறியையும்,
மாட்சிமைப்பட்ட
தொழில் பொருந்திய நெடிய
வில்லாத கருவூரை அழிக்கும்
தேரையுமுடைய சேரனழிய அவனது அழி
வினது பெருமைபொருந்திய வலியதானைப்
பாடுங்காலத்து.—எ - று.

நின்னைப்பாடுங்காலென்பார், அவனது சிறப்புத்தோன்றத் தாள்பாடுங்
காலென்றார்; தாளை முயற்சி யெனினுமமையும்.

நிறைதுலாம்புக்கோன்மருக, நீ அவன்மருகனாதலால், ஈதல் நின்புகழு மன்று; தூங்கெயிலெறிந்த நின் ஊங்கணோர் நினைப்பின், அடுதல் நின்புகழு மன்று; உறந்தை அவையத்து அறம் நின்றுநிலையிற்றாதலின், முறைமை நின் புகழுமன்று; ஆதலால், கலிமான்வளவ, நின்தாள்பாடுங்கால், யான் யாங்கன மொழிகோவெனக் கூட்டுக.

அதனால், யாங்கனமொழிகோவென இயையும்.

மருகவென்புழி, ஆதலானென்பது, ஆற்றலாற்போந்த பொருளெனக் கொள்க.

கறையடியென்பதற்கு உரல்போலும் அடியென்பாருமுளர்.

(௩௯)

---

௧௫. "விடர்ச்சிலை பொறித்த வேந்தன்" (சிலப். ௨௩: ௮௨; மணி. ௨௮: ௧0௪); "விடர்ச்சிலை பொறித்த விறலோன்" சிலப். ௨௮. ௩௯.

௧௪ - ௫. புறநா. ௨: ௨௬ - ஆம் அடிக் குறிப்பைப் பார்க்க.



(௪0.) நீயே, பிற [1] ரோம்புறு மறமன்னெயி
லோம்பாது கடந்தட்டவர்
முடிபுனைந்த பசும்பொன்னி
னடிபொலியக் கழறைஇய
வல்லாளனை வயவேந்தே
யாமேநின், னிகழ்பாடுவோ [2] ரெருத்தடங்கப்
புகழ்பாடுவோர் பொலிவுதோன்ற
வின்று கண்டாங்குக் காண்குவ மென்று
மின்சொலெண் பதத்தை யாகுமதி பெரும
வொருபிடி படியுஞ் சீறிட
மெழுகளிறு புரக்கு நாடுகிழ வோயே.

திணை - அது; துறை - செவியறிவுறூஉ.

அவனை ஆவூர்மூலங்கிழார் பாடியது.

இ - ள்.— நீ, பகைவரது பாதுகாத்த மறம் நிலைபெற்ற அரண்களை பாதுகாவாது எதிர்நின்று அழித்து அவரைக்கொன்று அவர் மகுடமாக செய்யப்பட்ட பசும்பொன்னால் நினது அடிபொலிய வீரக்கழல்செய்த

புனைந்த வலிய ஆணைமையையுடையை; வயவேந்தே, யாங்கள, நின்னை இழி, தரைப்போர்கழுததிரைஞசப புகழந்துரைப்போர பொலிவுதோன்ற இன்று கண்டாற்போலக் காணபோம்; எந்நாளும் இனியமொழியோடு எளிய செவிலை யாகுக; பெரும, ஒருபிடிகிடக்கும் சிறியவிடம் எழுகளிற்றயானை யைப் பாதுகாக்கும் நாட்டையுடையோய.—எ . று.

நாடுகிழவோய், இன்சொல எனபதனை ஆகுமதி ; அதனல், நின் இகழ்பாடுவோர் எருத்தமடங்கப் புகழ்பாடுவோர் பொலிவுதோன்ற இன்றுகண்டாங்குக் காணகுவமெனக கூட்டுக. பா

வலலாளனை யென்பதனுள், ஐகாரம், முன்னிலைவிளக்கிநின்றது; அசை நிலையுமாம். மதி, முன்னிலையசைசொல.

'கழறைஇய வலலாளன்' என்றதனற் பகையின்மையும், 'ஒருபிடி படு புஞ் சிறிட மெழுகளிறுபுரக்கும் நாடுகிழவோய்' என்றதனற் பொருட்குறைவின்மையுங் கூறியவாறயிற்று. (சo

---

க - ந. "புலவர் பூணகட னுற்றிப பகைவர், கடிமதி லெறிந்து குடப கொள்ளும், வென்றி" பேரும்பாண். சரு௦ - ருஉ.

௬. "காட்சிக் கெளியன் கடுஞ்சொலல னலலனேல், மீக்கூறு மன்ன னிலம்" குறள். ௩அ௬.

அ - ௬. செவியறிவுறுத்தற்கு மேற்கோள்; தொல். செய். சூ. ககச-ந

(பி - ம்.)— 1 'ஓம்புத்தமன' 2 'எருத்தமடங்க'

(௪௧.) காலனுங் காலம் பார்க்கும் பாராது
வேலீண்டு தானை விழுமியோர் தொலைய
வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே
[1] திசையிரு நான்கு முற்க முற்கவும்
பெருமரத் திலையி னெடுங்கோடு வறற்பற்றவும்
வெங்கதிர்க் கனலி துற்றவும் பிறவு
மஞ்சுவரத் தகுந புள்ளுக்குர லியம்பவு
மெயிறுநிலத்து வீழவு மெண்ணெ யாடவுங்
களிறுமேல் கொள்ளவுங் காழக நீப்பவும்
வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவுங்
கனவி னரியன காணா நனவிற்
செருச்செய் முன்பநின் வருதிற நோக்கி
மையல் கொண்ட வேமமி லிருக்கையர்
புதல்வர் பூங்கண் முத்தி மனையோட்
கெவ்வங் கரக்கும் பைதன் மாக்களொடு
பெருங்கலக் குற்றன்றாற் றானே காற்றோ
டெரிநிகழ்ந் தன்ன செலவிற

௧ - ௫. "உண்ணூஉ நினைக்காக்குங் கூற்றம்" (பழ. ௮௯); "செயிரிற்

குறைகளாத் பிற செலாறு சாடி, யுயிருணனுங் கூற்றமும் போன்ம்" (கலி. ௧0௫); "ஞாலத் தின்னுயிர் வாழ்வோர் காப்பட், காலம் பார்க்குங் காலன் போல" (பெருங். ௧. ௫௭ : ௨0௨ - ௫); "சாற்று ளாளற் தெண்ணித் தருமம்பார்த், தேற்றும் விண்ணென்ப தன்றி யிவளைப்போ, ஞற்றங் கேட்ட லுக தின்ன மயப்பதோர், கூற்றுணடோ" (கம்ப. தாடகைவதை. ௬௪); 'அடலவேண் டிஞறறுபவர்கண' என்பதற்கு வேற்றுவேந்தரைக்கோறல் வேண்டியவழி அதனை அப்பொழுதே செய்யவல்ல வேந்தர்மாட்டு' எனப் பொருள்கூறி இப்பகுதியை மேற்கோள்காட்டினர்; குறள். ௬௯௩-பரிமேல்.

௯ - ௧0. களிறெறாறது பற்றியை புணர்த்திவருதற்கு இப்பகுதி மேற்கோள்; (சிலப். ௧௫ : ௯௫ - ௧0௯-அடியார்); "மிக்க வெயிற்றின கொம்பின பன்றி விறற்குரங்கு, தொககவ தம்மைக் கனவினிற் காணிற் சுடர்முடிச், சக்கர வர்த்திக ளாற்பய முண்டெனுந் தம்முயிர்க, ளுக்கன வாதல்செய் தாற்பொரு டேயும் பயமுடைத்தே" கனூல், ௧௫.

௧௪-௫. மனைவியர்க்குத் தமது வருத்தந் தோன்றாமல் கணவர் மறைத்தலை, "கருங்கய னெடுங்கட் காதலி தன்னை....வருபனி கரந்த கண்ணனாகி" (சிலப். ௧௯ : ௧௪ - ௭) என்பதனாலுமறிக.

௯ - ௧௯. "பிறவும்....தானே": தோற்றோர் தேய்விற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. ௫. ௭ - இளம்.

(பி - ம்.)—1 'திசையிருநான்குமுற்கவும்'

## ௯௯ புறநானூறு மூலமும் உரையும்.

செருமிகு வளவநிற் சினைஇயோர் நாடே.*

திணை - வஞ்சி; துறை - கொற்றவள்ளை.

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைக் கோவூர்கிழார்பாடியது.

இ - ள்.—கூற்றம் தன்னுல உயிர்கொள்ளலாங்காலம் வருந்துணையும் பார்க்கும் ; அவ்வாறு காலம்பாராது வேல்நெருங்கிய படையினையுடைய பெரியோர் மாளும்பரிசு நீ வேண்டியவிடத்தே கொலலும் வெல்லும்போரை யுடைய வேநதே, எட்டுத்திசையும் எரிகொள்ளி எரிந்துவீழவும், பெரியமரத் தின்கண்ணே இலையிலலாத நெடியகோடாகிய வற்றல பற்றவும், வெய்ய சுடரையுடையஞாயிறு பலவிடத்தும் செறிநதுதோன்றவும், மற்றும் அஞ்சத் தகுவனவாகிய புட்கள் குரலிசைப்படவும், பல்லு நிலத்தின்கண்ணே வீழவும், எண்ணெயை மயிரின்கணணே வார்க்கவும், பன்றியேற்றை ஏறவும், ஆடையைக்களையவும், வெளிதாகிய வலிய படைக்கலம் தானிருந்த கட்டிலுடனே மறியவும், இங்ஙனம் கனவினும், மெய்ம்மையினும் பொறுத்தற்கரியவற்றைக் கண்டு போர்செய்யும் வலியையுடையோய், நின் மேற்செலவின் கூறுபாட்டைக்கருதி, மயக்கம்பொருநதிய காவலில்லாத இருத்தலையுடையராய்த் தம்பிள்ளைகளுடைய பூப்போலுங்கண்ணை முத்தங்கொணடு தம்மனைவியர்க்குத் தமது வருத்தநதோன்றாமல் மறைக்கும் துன்பத்தையுடைய ஆடவரோடு மிக்க கலக்கமுற்றது ; காற்றுடன் எரிநிகழநதாற்போன்ற செலவை யுடைய போரிற்கண்ணே மிக்கவாள, நின்னைச் சினப்பித்தோருடைய காடு.—எ - று.

உற்கவெனறது, வீழ்தலை, உற்கமுதலியகாலகும் உற்பாதமாய் கனவிற் காணப்பட்டன ; எயிறுநிலத்து வீழ்தல முதலாயின கனவிற் காணப்பட்டன.

வருதிறன் - ஈண்டுச் செலுநதிறனெனா இடவழுவமைதியாய் நின்றது.

'மனையோட்கெட் வங் கரக்கும்' என்பது, "ஏவ லினையர் தாய்வயிறு கறிப்ப" என்றாற்போலப் பன்மைக்கேற்பநின்றது.

தான், ஈணடு அசைநிலை.

பெருமரத்துப பற்றவுமென இயையும்.

இலையிலெனடுங்கோடு வற்றலபற்றவு மென்பதற்கு நெடுங்கோட்டின் கண்ணே இலையில வற்றறதன்மைபற்றவுமென உரைப்பினுமமையும்.

வேகதே, மு ன்ப, வளவ, நீ இத்தன்மையயாதலால், நிற்கினை இ யோர்காடு, பைதன்மாகக்ளொடு பெருங்கலகுற்றதெனக் கூட்டுக.

காதறேடெரி நிகழுநதன்ை ர செலவிற் செருமிகு வளவவென மன்னவன்

, புகழும், நிறகினை இயோர்காடு பைதன்மாக்களொடு பெருங்கலக்குற்றன் றெனா ஒன்றுர்காட்டிபிரங்கியதும் கூறுதலால, இது கொற்றவள்ளை யாயிற்ற.

(சுக)

---

* மு. நிமித்தம்பற்றிவகததற்கும் (தொல். புறத்திணை. சூ. ௩௦ - இளம்), பாடாண்கொற்றவளளைக்கும் (ஷை ஷை சூ. ௩௪ - ந), ஓம்படை வாழ்த்திற்கும் (ஷை ஷை சூ. ௩௬ - ந) மேற்கோள்.

---



சுஉ.) ஆறு விசை யடுபோ ரண்ணனின்
யானையு மலையிற் றோன்றும் பெருமநின்
றானையுங் [1] கட்லென முழங்கும் கூர்நுனை
வேலு [2] மின்னின் விளங்கு முலகத்

தரைசுதலை பணிக்கு மாற்றலை யாதலிற்
புரைதீர்ந் தன்றது புதுவதோ வன்றே
தண்புனற் பூச லல்லது நொந்து
களைக வாழி வளவ வென்றுநின்
முனைதரு பூசல் கனவினு மறியாது
புலிபுறங் காக்குங் குருளை போல
மெலிவில் செங்கோ னீபுறங் காப்பப்
பெருவிறல் [2]யாணர்த் தாகி யரிநர்
கீழ்மடைக் கொண்ட வாளையு முழவர்
படைமிளிர்ந் திட்ட யாமையு மறைநர்
கரும்பிற் கொண்ட தேனும் பெருந்துறை
நீர்தரு மகளிர் குற்ற குவளையும்
வன்புலக் கேளிர்க்கு [3] வருவிருந் தயரு
மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந
மலையி னிழிந்து மாக்கட னோக்கி
நிலவரை யிழிதரும் பல்யாறு போலப்
புலவ ரெல்லா நின்னோக் கினரே

௨. புறநா. ௩௮: ௧.

௧௦. "குட்டியைத் தின்ன லாமோ கோட்புலி புறத்த தாக" (சீவக. ௧௧௩௪); "புலிதானே புறங்காக்கக் குட்டிகோட் படாதென்ன, வொலியாழி யுலகுரைக்கு முரைபொய்யோ", "புன்புற மயிரும் பூவாக் கட்புலம் புறத்து நாறு, வன்பறழ் வாயிற் கவ்வி வலலிய மிரிந்த" கம்ப. சூர்ப்பநகை. ௧௦௨;

கடறுவு. எ.

கஎ - அ. "வன்புல.....பொருந: என்றக்கால் பகைவேந்தரை வென்றி கொள்ளுங்கால அவர்தாமே தத்தம்பொருள் பிறர்க்களிப்பாரென்னும் பொருள் தோன்றினும் தோன்றுமெப்பதலலது ஒருதலைபாக உள்ளுறை புவமங்கோடல் வேண்டுவதன்று; என்னை? 'தாய்சாப்பிறக்கும்...அலருர்' என்றாற்போலக்கூறாது அக்காட்டுக்கருங்களமர்முதலாயினர் வருந்தாமற் பெறும்பொருள் பிறநாட்டார்க்கு விருந்து செய்யத்தகும் என்று அக்காட்டினது வளமை கூறினமையினென்பது" தொல். உவம. சூ. ௩௧ - பேர்.

௧௯ - ௨௧. "கல்வீ ழருவி கடற்படர்ந் தாங்குப், பல்வேறு வகையிற்

(பி - ம்.) 1 'கடலினொலிக்கும்வைகறுதி' 2 'மின்போலவிர்வருருலத்து' 3 'வருவிருந்தமரும்'

## ௬௮ புறநானூறு மூலமும் உரையும்.

நீயே, மருந்தில் கணிச்சி வருந்த வட்டித்துக்
கூற்றுவெகுண் டன்ன முன்பொடு
மாற்றிரு வேந்தர் மண்ணோக் கினையே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

~~பாண்டியன் இலவந்திகைத்துஞ்சியநன்மாறனை~~ அவனை இடைக்காடனார் பாடியது.

இ - ள்.—அமையாத வண்மையையும், பகையைக்கொல்லும் பூசலையு முடைய தலைவ, நின துயானையும் மலைபோலத்தோன்றும்; பெரும, நின் படையும் கடல்போல முழங்கும்; கூரிய நுனையையுடைய வேலும் மின் போலவிட்டு விளங்கும்; இங்ஙனம் உலகத்தின்கண் வேந்து தலைமேங்கு தற்கு ஏதுவாகிய வலியையுடையையாதலால், குற்றம் தீர்ந்தது; அது நினக்குப் பழையதாய்வருகின்றது; குளிர்ந்த நீராலுள்ளதாகிய பூசலலைது வருந்தி 'எமது துயரத்தைத் தீர்ப்பாயாக வாழி வளவ' என்று சொல்லி, நினது முற்றுச்செலவும் படையுண்டாக்கும்பூசலைக் கனவின்கண்ணும் அறியாது, புலி பாதுகாக்கும் குட்டிபோலக் குறைவில்லாத செவ்விய கோ லால் நீ பாதுகாப்பப் பெரியவிசேடத்தையுடைய புதுவருவாயையுடைத்தாய் நெல்லறுப்பார் கடைமடைக்கட் பிடித்துக்கொள்ளப்பட்ட வாளையும், உழு வார் படைவாளால் மறிக்கப்பட்ட ஆமையும், கரும்பறுப்பார் கரும்பினின் றும் வாங்கப்பட்டதேனும், பெரிய துறைக்கண் நீரை முகந்துகொள்ளும் பெண்டிர் பறித்த செங்கழுநீருமென இவற்றை வன்புலத்தினின்றும் வந்த சுற்றத்தார்க்கு விருந்தாக விரும்பிக்கொடுக்கும் மென்புலத்தார்களையுடைய நல்ல நாட்டுக்கு வேந்தே; மலையினின்றிழிந்த பெரிய கடலைநோக்கி நிலவெல லையினின்றிழியும் பல யாறுகளையொப்பப் புலவர்யாவரும் நின்னைநோக்கினர்;

பணிந்த மன்னர்" (பெரும்பாண். சஉ எ - அ); " தாமலர் துவன்றிய கரை பொரு நிவப்பின், மீமிசை நலயாறு கடற்படர்ந் தாஅங்கு, யாமவணின்றும் வருதும்" (மலைபடு. ருக - ரு); "கடுவரை நீரிற் கடுத்துவர" (பு - வெ. க: கக); "பெய்யு மாரியாற் பெருகு வெள்ளம் போய், மொய்கொள வேலைவாய் முடுகு மாறுபோல" கம்ப. கையடை. கரு.

உஉ. புறநா. ரு: கஉ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க; "கூற்றுவெகு ண்டு வரினு மாற்றுமாற் றலையே" பதிற். கச: கo.

உரு - ச. " கூற்று.....நோக்கினையே; என்பது வெகுளியுவமம்" தொல். உவம. ரு. கரு - பேர்.

உக - ச. புறநா. உoரு; "நெருநலென்பது சென்றது நின்ற,

வின்

ருஞ் செல்லாநின்றது முன்சென்று,வருநாள் கண்டா ரியாரோ யதனு, லொரு நா ளகப்படுத் துடையோ ரின்மையி, னலலது நாடுமி னுள்ளது கொடுமின், வழாஅ வின்பமும் புணர்மி னதாஅன்று,இழது நீரகம் புகினு மேலது,விசும் பின் பிடர்த்தலை யேறினும் புடையது, நேமி மாலவரைக் கப்புறம் புகினுங், கோள்வாய்த்துக் கொட்குங் கூற்றத்து,மீளிக் கொடே விலக்குதற் கரிதே" ஆசிரியமாலை.

* மு. கொள்ளார்தேஎங்குறித்தகொற்றமென்னுந்துறைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௬௦ - இளம்; ஷை. ஷை. சூ. ௬௨ . ந.



ரன் அவர்க்குப் பரிசில் கொடுத்தற்பொருட்டுப் பரிகாரமில்லாத கணிச்சி ரன்னும் படைக்கலத்தை உயிர்வருந்தச் சுழற்றிக் கூற்றம் சினந்தாற் போ ம் வலியுடனே நினக்கு மறுதலையாகிய இருவேந்தருடைய நிலத்தைக் ரள்ள நோக்கினாய்.—எ - று.

அறியாதென்பதனை அறியாமலெனத் திரிப்பினுமமையும்.

வன்புலம்:—குறிஞ்சியும், முல்லையும். மென்புலம்: — மருதமும்,

யதலும.

கணிச்சியைக் குந்தாலியென்றும், மழுவென்றும் சொல்லுவர்.

யாணர்த்தாகி விருந்தயரும் கன்றொடெனக.

பொருந, புலவரெல்லாம் நின்னோக்கினர்; நீ அரசுதலைபணிக்கும் ஆற்லையாதலின், இருவேந்தர் மண்ணோக்கினை ; அதனால், இச்செய்தி புரைர்ந்தது, நினக்குப் புதுவதன்றாகலினெனக் கூட்டுக.

புரைதீர்ந்தன்றென்பதற்கு உயர்ச்சிதீர்ந்ததெனப்பொருளாக்கி, பொருந, ஆற்றலையாதலின், இருவேந்தர் மண்ணோக்கினை ; புலவரெல்லாம் பரிசில் பெறுதற்பொருட்டு நின்னோக்கினர்; இச்செய்தி நினக்குப் புதிதன்று ; ஆகன் உயர்ச்சி தீர்ந்ததென்றுரைப்பினுமமையும். (௪௨)

---

௪௩.) நிலமிசை வாழ்ந ரலமர றீரத்
தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்
காலுண வாகச் சுடரொடு கொட்கு
மவிர்சடை முனிவரு மருளக் கொடுஞ்சிறைக்
கூருகிர்ப் [1] பருந்தி னேறுகுறித் தொரீஇத்
தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
[2] றபுதி யஞ்சிச் சீரை புக்க
வரையா வீகை யுரவோன் மருக

உ - ச. "விண்செலலஂ மரபி னையர்" (புருது. கoஎ) என்பதற்கு ஞாயிற்றின் வெம்மையைப் பல்லுயிரும் பொறுத்தலாற்றுவென்றுகருதித் தமதருளினாற் சுடரொடு திரிதரு அவ்வெம்மையைப பொறுகினற முனிவர் என்று நச்சினார்க்கினியர் விசேடவுரையெழுதி இவ்வடிகளை மேற்கோள் காட்டியிருத்தலும், "சுடரொடு திரிதரு முனிவரும்" (சிலப். கஉ) என்பதும், 'ஆதித்தன் வெப்பந்தணிதல காரணமாக அவனுடனே கூடித் திரியுமுனிவரும்', 'கதிரவனுடைய வெம்மை உயிர்களைவருத்தாமல் அதனைத்தாங்கி அவனுடனேசுழன்று திரிதலைச்செய்யுக தெய்வவிருடிகளும்' என்னும் அதன் உரைகளும் இங்கே அறிதற்பாலன.

கூஎ. "என்புமுரியராதல,'தன்னகம்புக்க........சிரைபுக்கோன்' முதலாயினார்கட்காண்க" குறள். எஉ - பரிமேல்.

சஅ. புறநா. கூஎ : ரு - கு ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

கூ - அ. இவ்வடிகளாற் கூறிய அவ்வரசன் பெருமை கொடையாலுண்டாகிய வீரச்சுவைக்குதாரணம்; தொல். மெய்ப்பாடு. சூ. க - பேர்.

(பி - ம்.)—1 'பருந்தினெற்' 2 'தபுதிகண்டஞ்சி'

## புறநானூறு மூலமும உரையும.

கோர்க் கடுந்த முரண்மிகு திருவிற்
கo றேர்வண் கிள்ளி தம்பி வார்கோற்
1 கொடுமர மறவர் பெரும கடுமான்
கைவண் டோன்ற லைய முடையே

ஞார்புனை தெரியனின் முன்னோ ரெல்லாம்
பார்ப்பார் நோவன [2] செய்யலர் மற்றிது
நீர்த்தோ நினக்கென வெறுப்பக் கூறி
நின்யான் பிழைத்தது நோவா யென்னினும்
நீபிழைத் தாய்போ னனிநா ணினையே
தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்குஞ் செம்மல்
இக்குடிப் பிறந்தோர்க் கெண்மை காணுமெனக்
காண்டகு மொய்ம்ப காட்டினை யாகலின்
யானே பிழைத்தனென் சிறக்கநின் னாயுண்
மிக்கு [3] வரு மின்னீர்க் காவிரி
யெக்க ரிட்ட மணலினும் பலவே.*

திணையும் துறையும் அவை.

சோழன் நலங்கிள்ளிதம்பி மாவளத்தானும் தாமப்பல்கண்ணனும் வட்டுப்பொருவுழிக் கைகரப்ப வெகுண்டு வட்டுக்கொண்டெறிந்தானைச் சோழன்மகனல்லையென நாணியிருந்தானைத் தாமப்பல்கண்ணனார் பாடியது.

இ - ள்.—நிலத்தின்மேல் உயிர்வாழ்வார்க்கு வெம்மையான் உளதாகிய சுழற்சி நீங்கச் சுடுகின்ற கதிரையுடைய ஞாயிற்றினது வெப்பத்தைத் தாம் பொறுத்துக் காற்றை உணவாகக்கொண்டு அச்சுடருடனே சூழவரும் விளங்கிய சடையையுடைய அருந்தவரும் வியப்பான்மயங்க, வளைந்த சிறகினையும் கூரியஉகிரினையுமுடைய பருந்தினது எறிதலைக்கருதி அதனைத்தப்பித் தன்னிடத்தையடைந்த குறிய நடையையுடைய புறவினது அழிவிற்கு அஞ்சித் தன்னழிவிற்கு அஞ்சாது துலாத்தலையுட்புக்க வரையாத வண்மையையுடைய வலியோனது மரபினுள்ளாய், பகையரைவென்ற மாறுபாட்டான் மிக்க செல்

வத்தையுடைய தேர்வண்கிள்ளிக்குத் தம்பி, நீண்ட அம்பினையும் வளைந்தவில் லினையுமுடைய மறவர்க்குத் தலைவ, விரைந்த குதிரையையுடைய கைவள் ளியதோன்றல், நினது பிறப்பின்கண் ஐயப்பாடுடையேன்; ஆத்தியாற்செய் யப்பட்ட தாரையுடைய நினக்கு முன்னுள்ளார்யாவரும்
பார்ப்பார் வெறுக்கத்

---

* மு. "நிலமிசைவாழ்நரென்னும் புறப்பாட்டுப் புலவன்
அரசனைக்கடி
'ன்குரைத்தல்; அஃது இயற்கைவகையானன்றிச் செய்கைவகையாற் பர வலும் புகழ்ச்சியுந் தொடர்ந்தமுன்னோர் கூறியகுறிப்பு" தொல். புறத்திணை. சூ. உஎ - ந.

(பி - ம்.)—1 'தொடுவேலின்மறவர்' 2 'செய்யார்' 3 'வருநீர்க்'



தக்குவன செய்யார்; மற்று இவ்வெறுக்கத்தக்க செய்கை நினக்கு நாமையு டைத்தோவென்று நீ வெறுக்கச்சொல்லி நினக்கு யான்செய்த தவற்றிற்கு வெறுவென்னினும், நீ தவறுசெய்தாய்போல மிக நாணினை; இவ்வாறு தம் மைத் தப்பியவரைப் பொறுக்குந்தலைமை இக்குலத்தின்கட்பிறந்தோர்க்கு எளிமையுடைத்துக்காணுமெனக் காணத்தக்க வலியையுடையோய், நீ அறி வித்தாய்; ஆகலின், யானே தவறுசெய்தேன்; பெருகிவரும் இனிய நீரை யுடைய காவிரி கொழித்திட்டப்பட்ட மணலினும் பலவாக நின்வாழ்நாள் சிறப்பதாக.—எ - று.

முனிவரென்றது, வேள்வியோரை; அன்றி, சடாதிரிகதவழித்திரிந்து தவஞ்செய்யுமுனிவரென்றும் உரைப்ப.

சீரை - துலாக்கோற்றட்டு.

'மற்றிது, நீர்த்தோ நினககெ‌ன வெறுப்பக் கூறி' என்றது, சூதுபொருள் வழிக் கையாற கவறுபுதைபப வெகுணடு வடடுக்கொணடெறிநதானை 'இவ் வாறுசெய்தல நின்பெருமைக்குப் பொருநதுமோ ? அதனால நினபிறப்பிலே ஓரையமுடையேன' எனறசொலலே.

இது, பொறுததற்கரியபிழையைப பொறுத்த குணவெனறியான் அரச வாகையாயிற்று.

(சரு)

---

(சச.) இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா
நெல்லுடைக் கவளமொடு [1] நெய்ம்மிதி பெறாஅ
திருந்தரை நோன்வெளில் [2] வருந்த வொற்றி
நிலமிசைப் புரளுங் கைய வெய்துயிர்த்
ரு அலமரல் யானை யுருமென முழங்கவும்
பாலில் குழவி யலறவு மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவு நீரில்
வினைபுனை நல்லி லினைகூஉக் கேட்பவு
மின்னா தம்ம [3] வீங்கினி திருந்த

---

உ. "நெய்ம்மிதி கவளம்" (பெரும்பாண். கூகச); "நெய்ம்மலி கவளங் கொள்ளாது" (சீவக. க0எகு); "நெய்ம்மிதி கவளக தெவிட்டிநில

டர்க்கு நிழலசுளி தறுகண்மால யானை", "கைம்முகக் தெடுத்த செய் மிதி கவளங் களித்தெறி மும்மதக் களிறு" கூர்ம. சூரியன்மரபு. ௮, ௨௨.

௪. பலவின்பாற்படர்க்கைவினைக்குறிப்புமுற்று வினையெச்சக்குறிப்பா னதற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. ௩௫௦; நன் - வி. சூ. ௩௫௧ இ - வி. சூ. ௨௫௦.

௫. புறநா. ௩௬ : ௧௧.

(பி-ம்.)—[1] 'செய்மிகுதி' [2] 'வருத்தவெற்' [3] 'ஈண்டினிதிருத்தல்'



துன்னருந் துப்பின் வயமான் றோன்ற'
லறவை [1] யாயி னினதெனத் திறத்தன்
மறவை யாயிற் போரொடு திறத்த
லறவையு மறவையு மல்லை [2] யாகத்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவி
னீண்மதி லொருசிறை யொடுங்குத
னாணுத்தக [3] வுடைத்திது காணுங் காலே.*

திணையும் துறையும் அவை.

அவன் ஆவூர்முற்றியிருந்தகாலத்து அடைத்திருந்த மைக் கோவூர்கிழார் பாடியது.

நெடுங்கிள்ளி

இ - ள்.—கரிய பிடியினது ஈட்டத்தோடு பெரிய கயத்தின்கட்படியாவாய் கெலிலையுடைய கவளத்துடனே நெய்யால் மிதித்துத் திரட்டப்பட்ட கவளமும் பெறுவாய்த் திருத்திய மருங்கையுடைய வலிய கம்பம்வருந்தச் சாய்த்து நிலத்தின் மேலேபுரளும் கையையுடையவாய வெய்தாகவுயிர்த்துச் சுழலும்யானை உருமேறுபோல முழங்கவும், பாலில்லாதகுழவி அழவும், மகளிர் பூவில்லாத வறிய தலையை முடிப்பவும், நீரில்லாத தொழிலபுனைந்த நல்ல மனையிடத்துள்ளார் வருந்திக்கூப்பிடும் கூப்பீட்டைக்கேட்கவும், இவற்றிற்குநாணுது இவ்விடத்து நீ இனிதாக இருத்தல இன்னாது; நணுதற்கு

அரிய வலியையுடைய வலிய குதிரையையுடைய தோன்றுல, அறத்தை உடையையாயின், இது நினதன்றேவென்று சொல்லித் திறத்தல செய்வாயாக; மறத்தையுடையையாயின், போரால திறத்தலசெய்வாயாக; அவ்வாறன்றி, அறத்தையும் மறத்தையுமுடை யையல்லையாகத் திறவாது அடைக் கப்பட்ட திண்ணிய நிலையையுடைத்தாகிய கதவினையுடைய நீண்டமதிலுள் ஒருபக்கத்தே ஒதுங்குதல நாணுத்தன்மையையுடைத்து இஃது ஆராயுங்காலத்து.—எ - று.

செய்யென ஒருசொலவருவித்து உரைக்கப்பட்டது.

திறத்தலென்பதனை

இதுதிறக்கவெனவியங்கோளாகவுரைபபினுமமையும்.

---

௪௦. வயவென்னும் உரிசசொல 'வலி' என்னும் பொருளிலவந்ததற்கு மேற்கோள்; இ - வி. ௲. ௨௪௦ - உரை.

௧௧ - ௨. புறநா. ௩௪௦ : ௧ . ௨; "மறவையா யென்னுயிர்மேல் வந்த விம் மருணமாலை" சிலப். எ : ௪௨. -

௧௬. புறநா. ௩௬ : ௧௩.

௧௧ - ௬. "அறவை....காணுங்காலே: என இது செம்பொருட்செவி புறை ; தொல். செய். சூ. ௧௨௮ - பேர்.

* மு. அகத்தரசற்கழிந்தது கூறியதற்கு மேற்கோள் ; திணை. சூ. ௧௦ - இளம்.

தொல். புறத்

(பி - ம்.)—1 'ஆயினிற்றெனத்திறலைதன்மறவை' 2 'யாகித்' 3 'உடைத்தது'

## புறநானூறு மூலமும் உரையும்.

௧௦௩

அம்ம, கேட்பித்தற்கண்வந்தது.

'அறவியு மறவியு மல்லே யாயின்' என்று பாடமோதுவாருமுளர்.

படியா பெறு என்பன எதிர்மறைவினையெச்சமுற்று.

கையவென்பது, வினையெச்சவினைக்குறிப்புமுற்று.

(௪௪)

---

(சுரு.) இரும்பனை வெண்டோடு [1] மலைந்தோ னல்லன்
கருஞ்சினை வேம்பின் றெரியலோ னல்ல
னின்ன கண்ணியு மார்மிடைந் தன்றே, நின்னொடு
பொருவோன் கண்ணியு மார்மிடைந் தன்றே
ருு யொருவீர் தோற்பினுந் தோற்பதுங் குடியே
யிருவீர் வேற லியற்கையு மன்றே, அதனால்
குடிப்பொரு ளன்றுநுஞ் [2] செய்தி கொடித்தேர்
நும்மோ ரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி யுவகை செய்யுமிவ் விகலே.

திணை - வஞ்சி ; துறை - துணைவஞ்சி.

சோழன் நலங்கிள்ளி உறையூர்முற்றியிருந்தானையும் அடைத்திருந்த நெடுங்கிள்ளியையும் கோவூர்கிழார் பாடியது.

இ - ள்.—பெரியபனையினது வெளியதோட்டைச சூடினோனலலன் ; கரிய கோட்டினையுடைய வேம்பினது தாரையுடையோனலலன் ; நின்னு

டைய கண்ணியும் ஆத்தியாற் செறியக கட்டப்பட்டது ; நின்னுடன பொருவானுடைய கண்ணியும் ஆத்தியாற செறியக் கட்டப்பட்டது ; ஆதலால, நும்முள, ஒருவீர்தோற்பினும் தோற்பது நுங்குடியன்றே? இருவீரும் வெல

லுதல இயல்புமன்று; ஆதலால, நுங்குடிகருத் தக்கதொன்றன்று, நுமது செய்கை; கொடியாறபொலிந்த தேரையுடைய நும்மைப்போலும் வேந்தர்க்கு உடம்பு பூரிக்கும் உவகையைச்செய்யும், இம்மாறுபாடு ; இது தவிர்தலே நுமக்குத் தக்கது.—எ - று.

ஆதலான்,

சினகண்ணியுமென்பது, சின்னகண்ணியுமெனவிகாரமாயிற்று.

அதனுலென்பதனை ஒழித்தும் பாடமோதுப.

இது, சந்தசெய்தலால [illegible]ணைவஞ்சியாயிற்று.

(௬௫)

---

க. '[illegible]டு' என்பது புல்லுறப்பையுணர்த்துதற்கு மேற்கோள்; தொல். மரபு. சூ. அசு - பேர்.

ந - சு. முன்னிலைகூடியபடர்க்கையும் முன்னிலைமுடிபெற்றதற்கு மேற்கோள்; நன் - பெயில. சூ. நநந.

(பி - ம்.)—1 'பிலேக்தோனுமலலன்' 2 'செய்கை'

---

## [illegible] புறநானூறு மூலமும் உரையும்.

[illegible] சுவ, புறவி னல்ல லன்றியும் [1] பிறவு
மிடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை
யிவரே, புலனுழு துண்மார் புன்க ணஞ்சித்
தமதுபகுத் துண்ணுந் தண்ணிழல் வாழ்நர்
௫ களிறுகண் டழூஉ மழாஅன் மறந்த
புன்றலைச் சிறாஅர் [2] மன்றுமருண்டு நோக்கி
விருந்திற் புன்கணோ வுடையர்
கேட்டனை யாயினீ வேட்டது செய்ம்மே.*

திணையும் [3] துறையும் அவை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலையமான்மக்களை யானைக்கிடுவுழிக் கோவூர்கிழார்பாடி உய்யக்கொண்டது.

இ - ள்.—நீதான், புறவின் அல்லலன்றியும் பிறவும் உற்ற துன்பம்பல வற்றையும் தீர்த்த சோழனுடைய மரபிலுள்ளாய்; இவர்தாம், அறிவான் உழுதுண்ணுங் கற்றோர் துன்பவருமையை யஞ்சித் தமமுடையபொருளைப் பகுத் துண்ணும் குளிர்ந்த நிழலையுடையராய் வாழ்வார்தம் மரபிலுள்ளார்; இவர், இப்பொழுது களிற்றைக்கண்டு தம் இளமையால் தாம் முன்பு வெருவியழு கின்ற அழுகையைமறந்த புல்லிய தலையையுடைய சிறுபிள்ளைகள்; மன்றை வெருவிப் பார்த்து முன்பு அறியாத புதியதோர்வருத்தத்தையுடையர்; இதுகேட்டாயாயின், நீ விரும்பியதைச் செய்வாயாக.—எ - று.

தண்ணிழல்வாழ்நர் சிறாஅரென இயையும்மையும்.

அழாஅல் களிறுகண்டு மறந்தவெனக் கூட்டுக.

நீ புறாமுதலாயினவற்றின் துயர்தீர்த்தற்கு உயிர்கொடை பூண்டோன் மருகனாதலானும், இவர் கற்றோர்வறுமையஞ்சிப் பகுத்துண்ணும் தண் ணிழல்வாழ்நர் மரபினராதலானும், இவர், நின்னால் அருளத்தகுவதல் லது முனியத்தகாரென்பதாம்.

இதுவும், இவரைக்கொல்லாமற் சந்துசெய்வித்தலின் து ணைவஞ்சியாயிற்று.

(சசு)

---

க - உ. புறநா. கஎ: ரு - சு-ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

* மு. துணைவஞ்சியென்னுந் துறைக்கு மேற்கோள்; (தொல். புறத்திணை. சூ. எ - இளம்); இப்பாட்டு மேற்செலவினைக் கண்டவகாமையின் துணைவஞ்சியன்றென்றும், பாடாண்டிணையென்றும் கூறுவர்; மழி. ஷெ. ஷெ. அ - ந.

(பி-ம்.) 1 'பிறவும் பலவும்' 2 'மன்றமருண்டு' 3 'துறைஇயன்மொழி'

---



(சஎ.) வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடிய வென்னாது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்ற மருத்தி
யோம்பா துண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் 1 தீதறிந் தன்றோ வின்றே, திறப்பட
நண்ணார் நாண வண்ணாந் தேகி

யாங்கினி தொழுகி னல்ல [2] தோங்குபுகழ்
மன்னன் செல்வ [3] மெய்திய
நும்மோ ரன்ன செம்மலு முடைத்தே.*

திணையும் துறையும் அவை.

---

க. புறநா. களா: ௩; "பழுமர முள்ளிய பறவையின்...புக்கு" (பொருந. சுஉ - எ); "பழுமரந் தேரும் பறவை போல.....பாண" (பெரும்பாண். ௨௦ - ௨௨); "பழந்தேர் வாழ்க்கைப் பறவைபோல.....துவன்றி" (மதுரை. ருஎசு - அ௦); "கனிபொழி கானங் கிளையொடுணீஇய, துனைபறை நிவக்கும் புள்ளின மான...நன்னாற் படர்ந்த கொள்கையொடு" (மலைபடு. ருச - சுச); 'படர்' என்பது உள்ளுதலாகிய குறிப்புணர்த்துதற்கு இவ்வடிமேற்கோள்; தொல். உரி. சூ. சச - சே; பேர்; இ - வி. சூ. உஅ௨ - உரை.

உ. "வல்லாங்குச்செய்து" மணி. உரு: சசு.

ங. குப்வுருபு பொருட்டுப்பொருண்மைக்கண்வந்ததற்கு 'வரிசைக்கு வருந்தும்' என்பது மேற்கோள்; சிலப். பதி. ரு - அடியார்; நன் - மயிலை. சூ. உகஎ.

* மு. துணைவஞ்சியென்னுந்துறைக்குமேற்கோள் (தொல். புறத்திணை. சூ. எ - இளம்); இப்பாட்டு மேற்செலவின்கணடங்காமையின் துணைவஞ்சியன்றென்றும், பாடாண்டிணையென்றும் கூறுவர் (ஷை ஷை ஷை அ - ந); "வள்ளியோர்ப்படர்ந்து.....செம்மலுமுடைத்தே: இது சோழன் நலங்கிள்ளியுழைநின்று உறையூர்புக்க இளந்தத்தனென்னும்புலவனைக் காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்றுவந்தானென்று கொல்லப்புக்குழி அவ்வரசற்கு வருகின்ற துகளினைக் கோவூர்கிழார் புலப்படாமற் செய்யுள் செய்து,தமது சொல்லினை யரசன் கேட்டஞ்சினனென்னும் பொருளை நிறுத்துதலிற் பழிகாப்புச்செவியுறையங்கதமாயிற்று; இவ்வாறே புறத்தினுட் செவியுறைச்செய்யுட்கள்பலவும் வருவனவுள; அவ்வேறுபாடுணர்ந்து கொள்க" ஷை. செய். சூ. கஉஅ - ந.

(பி - ம்.)—1 'தீங்கறிந்தன்றே' 2 'ஓங்கிய' 3 'எய்தின'

14



சோழன் நலங்கிள்ளியுழைநின்று உறையூர்புகுந்த [1] இளந்தத்தனென்னும்புலவனைக் காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்றுவந்தானென்று கொல்லப்புக்குழிக் கோவூர்கிழார்பாடி உய்யக்கொண்டது.

இ - ள்.—வண்மையையுடையோரை நினைந்து பழுமரந்தேரும் பறவைபோலப்போகி நெடியவென்றுகருதாது அரியவழி பலவற்றையுங் கடந்து திருந்தாத நாவால் தாம்வல்லபடிபாடி ஆண்டுப்பெற்ற பரிசிலான் மகிழ்ந்து உள்ளமகிழ்ந்து அதனைத்தூட்டித் தாமும் பொருளைப்பாதுகாவாது உண்டு வழங்கித் தம்மைப்புரப்போராற்பெறும் சிறப்பு ஏதுவாக வருந்தும் இப்பரிசிலான்வாழும் வாழ்க்கை, பிறர்க்குச்செய்யும் கொடுமையறிந்ததோவென்று இல்லை; கூறுபடக் கல்விமுகத்தால் தம்மொடு மலைந்தோர்நாணக் கல்வியான்வென்று தலையெடுத்து நடந்து அவ்விடத்து இனிதாக முகமலர்ந்து, உயர்ந்த புகழையுடைய நிலமாளும் திருப்பொருந்திய நும்மைப்போலும் தலைமையுமுடைத்து.—எ - று.

ஓங்கியவென்பதூஉம், செல்வமுமுடைத்தென்பதூஉம் பாடம்.

சுரம்பலகடந்து புள்ளிற்போகியென மாறிக்கூட்டுக.

பரிசிலவாழ்க்கை, நும்மோரன்ன செம்மலுமுடைத்து; ஆதலான் அண்ணாந்து [3] இனிதொழுகலாலது, பிறர்க்குத்தீதறிந்தன்றோ? எனக்கூட்டுக.

இக்கோவூர்கிழார் தாமும்பரிசிலவாழ்க்கையருள் ஒருவராதலான், 'வடியவின் வல்லாங்குப்பாடி' எனப் பணிந்து கூறினாரெனக் கொள்க. (

(பி - ம்.)— 1 'இளாகததத்தனைக' 2 'கொலைபுகுவழிக்' 3 'இனிதெ இன்கலலது'

(௬௩.) கோதை மார்பிற் கோதை யானுங்

கோதையைப் புணர்ந்தோர் கோதை யானு
மாக்கழி மலர்ந்த நெய்த லானுங்
கண்ணு ணும்மே கானலந் தொண்டி
௫ யஃதெம் மூரே யவனெம் மிறைவ
னன்றோ படர்கி யாயி னீயு
1 மெம்மு முள்ளுமோ முதுவா யிரவல
வமர்மேம் படூஉங் காலைநின்

௧ - ௨. மோனைத்தொடைக்கும் (தொல். செய். சூ. ௯௨ - பே பிறவடிதொடுத்த கட்டளையடிமோனைக்கும் (ஷை. ஷை. ஷை. ௯௨ மேற்கோள்.

௩. தொண்டி: புறநா. ௪௮: ௩; ஐங்குறு. ௧௭௮.

௭. முதுவாயிரவல: புறநா. ௧௪௦: ௬; பதிற். ௬௬; சிறுபாண். 6

(பி - ம்.)— 1 'எம்மையுமுள்ளுமோ'

## புறநானூறு மூலமும் உரையும்.

௪௦௭

புகழ்மேம் படுநனைக் கண்டன மெனவே.

திணை - பாடாண்டிணை ; துறை - புலவராற்றுப்படை.

* சேரமான்கோக்கோதைமார்பனைப் பொய்கையார் பாடியது.

இ - ள்.—கோதையுடையமார்பிற்கு அணிந்த கோதையாலும், அக் கோதையைப்புணர்ந்த மகளிர்சூடியகோதையாலும், கரியகழியின்கண் மலர்ந்த நெய்தற்பூவாலும் தேன்நாறுகிற்கும் கானலையுடைய தொண்டி ; அஃது எம்முடையவூர் ; அவன் எம்முடையதலைவன் ; அத்தன்மையோ னிடத்தேபோகின்றாயாயின், நீயும் எம்மையும் நினைப்பாயாக, முதியவாய் மையையுடைய இரவல, நீ, அமரின்கண் மேம்படுங்காலத்து நினக்கு உளதாகிய புகழை மேம்படுத்துமவனைக் கணடேம்யாமெனசசொல்லி,—எ-று.

இரவல, நீயும் அன்னேற்படர்குவையாயின், நின்புகழ்மேம்படுநனைக் கண்டனமென எம்மையும் உள்ளுக்கூட்டுக.

கண்டனமென எம்முமுள்ளென்றேனும், உள்ளிக்கண்டனமெனச் சொலலென்பது கருத்தாகக்கொள்க.

மோ, முன்னிலை அசைச்சொல. நீயுமென்பதூஉம், எம்முமென்பதூஉம் எச்சவும்மை.

தலைவனதியல்பையும் ஊரையுங்கூறி, முதுவாயிரவல, எம்முமுள்ளென த் தன் தலைமைதோன்றக் கூறினமையால, இது புலவராற்றுப்படையாயிற்று. (சஅ)

---

* இப்பாட்டின்முதலடியில தலைவன்பெயர் அமைந்துள்ளது.

(௪௬௯.) நாட னென்கோ வூர னென்கோ
பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்ப னென்கோ
யாங்கன மொழிகோ வோங்குவாட் கோதையைப்
புனவர் தட்டை புடைப்பி [1] னயல
௫ திறங்குகதி ரவமரு கழனியும்
பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங் கெழுமே.

---

௨. "பாடிமிழருவி" மணி. ௧௭ : ௫௦.

௪. தட்டை: "வெதிர்புனை தட்டையேன்" (நற். ௧௪௭); "தழலுந் தட்டையு முறியுந் தந்து" (குறுந். ௨௨௩); "தழலை வாங்கியுந் தட்டை யோப்பியும்" (அகநா. ௧௮௮); "ஒலிகழைத் தட்டை புடையுநர் புனந்தொறும்" (மலைபடு. ௩௨௮); "தட்டையாவது:—மூங்கிலைக்கண்ணுக்கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப்பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதொருகருவி" குறிஞ்சி. ௪௩ - ந.

௪ - ௬. இணையயக்கத்திற்கு மேற்கோள்; திருச்சிற். ௬௩ - பேர்.

(பி - ம்.)—[1] 'அயலிணிரங்கு'



திணையும் துறையும் அவை; துறை - இயன்மொழியுமாம்.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—குறிஞ்சிநிலமுடைமையால், நாடனென்றுசொல்லுவேனோ? மருதநிலமுடைமையால், ஊரனென்றுசொல்லுவேனோ? நெய்தனிலமுடைமையால், ஒலிமுழங்குகின்ற குளிர்ந்த கடலையுடைய சேர்ப்பனென்று சொல்லுவேனோ? எவ்வாறுசொல்லுவேன் மேம்பட்ட வாளையுடையகோதையை? புனங்காப்போர் கிளிகடிகருவியைப்புடைப்பின், அப்புனத்திற்கு அயலாகிய வளைந்த நெற்கதிர்சூழலும் வயலின் கண்ணும், மிக்கநீரையுடைய கடற்கரையின்கண்ணும் உளவாகியபுட்கள் சேர எழுமாதலான்.—எ - று.

'புனவர்தட்டைபுடைப்பின்' எனக் குறிஞ்சிக்கும் முல்லைக்கும் ஏற்பக் கூறினமையான்' நாடனென்பதூஉம், அவ்விரண்டு நிலத்துக்கும் கொள்ளப்படும்; எனவேமுல்லைநிலமுமுடையனென்றவாறும்.

புனவர்தட்டைபுடைப்பின், கழனியிலும் சேர்ப்பினும் புள்ளெழுமாதலால், கோதையை யாங்ஙனமொழிகோவெனக்கூட்டுக.

இது, நானிலமுமுடையனாதலிற் பெருஞ்செல்வமுடையன்; நீ அவன் பாற் செல்லென ஆற்றுப்படுத்தவாறு; அவனது இயல்பைப்புகழ்ந்தமையான், இயன்மொழியுமாயிற்று. (சக)

---

(ரு0.) மாசற விசித்த வார்புறு [1] வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை
யொலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்
பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக்
குருதி வேட்கை யுருகெழு முரச
மண்ணி வாரா வளவை யெண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
யறியா தேறிய வென்னைத் தெறுவர
விருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை
யதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறித

௩. புறநா. ௨௭௪ : ௨.

௫. "குருதி வேட்ட மயிர்புதை மாக்கண் கடியகழற" (பதிற். ௨௯); "கூற்றுக்கண் விளிக்குங் குருதிவேட்கை, முரசு" மணி. ௧: ௩௦ - ௩௧.

௪ - ௫. "விரவிய சநதமென் சேறு மட்டித்துப்,பிரவிபந் தழையொடு பிணையல் வேய்ந்தன, பரவிய பலிபெறு முரசம் பன்மையி, லரவியன் கதிர் கொள வதிர்க் தனநதே" சூளா. சுயம். ௨௧௦; பெருங். ௨. ௨ : ௨௯ - ௩௦.

௭. பு. அகநா. ௯௩ : ௧௩.

(பி - ம்.)—1 'வளப்பின்', 'வள்ளின்'

# புறநானூறு மூலமும் உரையும்.

௧௦௯.

வதனொடு மனையா தணுக வந்துநின்
மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென
வீசி யோயே வியலிடங் கமழ
விவணிசை யுடையோர்க் கல்ல தவணை
துயர்நிலை யுலகத் துறையு ளின்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குருசினீ யீங்கிது செயலே.

திணை - அது; துறை-இயன்மொழி.

சேரமான் தகடூரெறிந்தபெருஞ்சேரலிரும்பொறை முரசுகட்டி லறியாதேறிய 1 மோசிகீரனைத் தவறுசெய்யாது அவன் துயிலெழுந்துணை யும் கவரிகொண்டு வீசியானை மோசிகீரனர் பாடியது.

இ -ள்.—குற்றந்தீர வலித்துப்பிணித்த வாரப்பட்ட வாரையுடைய கரு மரத்தாற் செய்கலான இருட்சிபொருந்திய பக்கம் பொலிவுபெற மயிலி னது தழைத்த நெடியபீலியால் தொடுக்கப்பட்ட ஒள்ளிய பொழிலையுடைத் தாகிய நீலமணிபோலும் நிறத்தையுடைய தாரைப் பொற்றளிரையுடைய உழிஞையுடனே பொலியச்சூட்டப்பட்டுக் குருதிப்பலிகொள்ளும் விருப்பத் தையுடைய உட்குப்பொருந்திய வீரமுரசம் நீராடிவருவதன் முன்னே எண் ணெயினது நுரையை முகந்தாற்போன்ற மெல்லிய பூவையுடைய கட்டிற் கண்ணே இதனை முரசுகட்டிலென்பதறியாது ஏறிக்கிடந்த என்னைவெகுட்சி தோன்ற இருகூறாக்கும் நின்னுடைய வாளை வாங்கி மாற்றியதாகிய அதுவும் அமையும், நல்லதமிழ்முழுதும் அறிந்தமைக்கு ; அவ்வெகுட்சியொழிந்து அதனுடும் அமையாதே குறுகவந்து நினது வலியையுடைய முழவுபோலும் தோளையெடுத்துச் சாமரத்தாற் குளிரவீசினுய் ; இவ்வகன்ற உலகத்தின் கண்ணே பரக்கும்பரிசு இவ்வுலகத்துப்புகழுடையோர்க்கல்லது, அவ்விடத்த தாகிய உயர்ந்த நிலைமையையுடைய உலகத்தின்கண் உறைதலில்லாமையைத் தெரியக்கேட்ட பரிசாலேயோ ? வெற்றிபொருந்தப்பட்ட தலைவா, நீ இவ் விடத்து இச்சாமரையைவீசுதல்,அதற்குக்காரணம்சொல்லுவாயாக.—எ-று.

கட்டி யென்பதனைச் சூட்டவென்று திரிப்பினுமமையும்.

உழிஞை - கொற்றான்; அது குடநாட்டார் வழக்கு.

---

கச - ௫. புறநா. உஎ: எ - ௬ ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க; “புகழ் வெய் யோர்க்குப் புத்தேளுடெளிது” முதுமொழிக். எக.

கச - ௬. “ஒருவர்க்கு இம்மை மறுமைகட்கு இன்பத்தைத்தந்து பூமி யுள்ளளவும் நிற்பது புகழென்னுமாம்; ‘ஒன்றுவுலகத்...தொன்றில்’ எ - ம், ‘இவணிசையுடையோர்க்......மாறுகொல’ எனவும் கூறினாராகலின்” சிலப். கக: ககஉ - எ அடியார்.

* மு. முரசுகாட்கோடலுக்கும் (சிலப். ௫ : ௮௬ - ௮௭ - அடியார்), இயன்மொழிக்கும் (தொல். புறத்திணை. சூ. ௩௫ - ந) மேற்கோள்.

(பி - ம்)—1 'மோசுகீரனார்'



முழவுத்தோளோச்சியெனவும், தண்ணெனவீசியோயெனவு மாற்றால், சாமரையென்பது பெற்றும்.

கமழ்தல் - ஈண்டுப் பரத்தற்பொருட்டாய் நின்றது.

தமிழென்பதற்குத் தமிழ்நாடெனினுமமையும்.

குருசில், நீ இதுசெய்தல, இசையுடையோர்க்கல்லது உறை கேட்டமாறுகொலெனக்கூட்டுக.

எண்ணென்பது, கருதெனவுமாம்.

எண்ணியென்று பாடமாயின், கருதியென்க.

---

(௫௧.) நீர்மிகிற் சிறையு மில்லை தீமிகின்
மன்னுயிர் நிழற்று நிழலு மில்லை
வளிமிகின் வலியு மில்லை யொளிமிக்
கவற்றோ ரன்ன சினப்போர் வழுதி
[1] தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன் போரெதிர்
கொண்டி வேண்டுவ னாயிற் கொள்கெனக்

கொடுத்த மன்னர் நடுக்கற் றனரே
அளியரோ வளியரவ னளியிழந் தோரே
நுண்பல சிதலை யரிதுமுயன் றெடுத்த
செம்புற் றீயல் போல
வொருபகல் வாழ்க்கைக் [2] குலமரு வோரே.

---

க - உ. "ஒலித்துட, னீர்மிகி னில்லை சிறை" (பழ. கக0); "முண்டோ செழும்புனல் மிக்குழீஇ" (மணி. ௫: கக); "சிறையெனட செவ்வே செம்புனல் பெருகு மாயின்" சூளா. கல்யாண. க௫௫.

௩. ஒளியாவது:—அரசர்பாலுள்ள தெய்வத்தன்மை; அதனை, "தினைமுறைய ரென்றிகழார் நின்ற, வொளியோ டொழுகட் படும்" (ககூஅ); "உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை கன் காக்குமால்" (சீவக. உ௪அ) என்பவற்றாலறிக.

௫. புறநா. அ: உ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

௬. கொண்டி - கொள்ளப்படுவது; ஆவது திறை; "கட்கொண்டி குடிப்பாக்கத்து" மதுரை. க௩எ.

க0. புறநா. கககூ.

கூ - க0. "சிறுபுன் சிதலை சேண்முயன் றெடுத்த, நெடுஞ்செட

றத்து" (அகநா. க௪௯); "மண்ணுள்வாழ் சிதலைச்சாதி மற்றவை நாள்க, ளெண்ணியாங் கிகந்தபின்னை யிறகுபெய் தெழும்" சூளா யல். ௩க௬.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

பாண்டியன் கூடகாரத்துத்துஞ்சிய மாறன் வழுதியை [1] ஐயூர்முடவனார் பாடியது.

இ - ள்.—நீர்மிகுமாயின், அதனைத்தாங்கும் அரணுமில்லை ; நெருப்பு மிகுமாயின், உலகத்துநிலைபெற்ற உயிர்களை நிழலசெய்யும் நிழலுமில்லை ; காற்றுமிகுமாயின், அதனைப்பொறுக்கும் வலியுமில்லை ; விளக்கமிக்கு அவற்றையொத்த சினம்பொருந்திய போரையுடையவழுதி குளிர்ந்ததமிழ்நாடு மூவேந்தர்க்கும் பொதுவென்றுகூறப் பொறுடைப் போரயேற்றுத் திறையை வேண்டுவனாயின், கொள்கவென்றசொல்லி முன்னேகொடுத்த மன்னர் நடுக்கந்தீர்ந்தார் ; கொடாமையின், யாவராலும் மிக இரங்கத்தக்கார், அவனது அருளையிழந்த அரசர் ; நுண்ணிய பல கறையான் அரிதாக முயன்றெடுக்கப்பட்ட செம்புற்றினின்றும் புறப்பட்ட ஈயலைப் போல ஒரு பகற்பொழுதின்கண்வாழும் உயிர்வாழ்க்கையின்பொருட்டுச் சுழல்வோர்.— எ - று.

வழுதி, தமிழ்பொதுவெனப்பொறாளுய்க் கொணடிவேண்டுவனாயின், கொடுத்தமன்னர், நடுக்கற்றனர் ; கொடாமையின் அவனளியிழந்தோர், ஒருபகல் வாழ்க்கைக்கு அலமருவோர் ; ஆதலான், அவர் அளியரோ வளிய ரெனக்கூட்டி வினைமுடிவுசெய்க ; அவனளியிழந்தோராகிய அலமருவோர் அளியரெனக் கூட்டியுரைப்பினுமமையும்.

அளியரோ அளியரென இரங்கற்குறிப்புததோன்ற அடுக்கின்றது.

(௫௧)

(பி - ம்.)—1 'ஐயூர்கிழார்'

(௫௨.) அணங்குடை நெடுங்கோட் டளையக முனைஇ
முணங்குநிமிர் வயமான் முழுவலி யொருத்த
[1] லூனசை யுள்ளந் துரப்ப விசைகுறித்துத்
தான்வேண்டு மருங்கின் வேட்டெழுந் தாங்கு
வடபுல மன்னர் வாட வடல்குறித்
தின்னா வெம்போ ரியறேர் வழுதி
யிதுநீ கண்ணிய தாயி னிருநிலத்
தியார்கொ லளியர் தாமே யூர்தொறு

---

௨. மூரிநிமிர்தல் - துயிலெழுந்தவுடன் இரண்டு கைகளையும் நிமிர்த்துச் சோம்பலைப் போக்குதல்; "பொய்த்ததோர் மூரியா னிமிர்ந்து போக்குவாள்" கம்ப. உண்டாட்டு. ௩௫.

௧ - ௪. புறநா. ௭௮: ௧ - ௪.

௭. "இதுநீ கருதினை யாயி னேற்பவர், முதுநீ ருலகின் முழுவது மில்லை" சிலப். ௨௫: ௧௬௫ - ௭.

(பி - ம்.)—1 'ஊன்பிசையுள்ளம்'



மீன்சுடு புகையின் புலவுநாறு நெடுங்கொடி
வயலுழை மருதின் வாங்குசினை வலக்கும்
பெருநல் யாணரி னொரீஇ யினியே
[1] கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப்
பலிகண் மாறிய பாழ்படு பொதியில்

றெழுகுபலி மறநத மெழுகாப் புன்றிணை ", "கடவுள்போகிய கருந்த
கந்தம்" (அகநா. கஅஎ, டOஎ); " கநதுடைப் பொதியில்" (பட்டி
உசகூ); "அருந்திறற் கடவுட் டிருந்துபலிக் கநதமும்", "இலகொளிக க
மும்" (மணி. கூ: கூO; உச: கஉ); 'கலி' என்பது ஒலித்தற்றெழிற்ப
பில் வந்ததற்கு மேற்கோள்; நன் - மயிலே. சூ. சருஅ.

கச. காய் -சூதாடுகருவியுளொன்று; "பனிகுகாய் சிவப்பத்தொட்
கம்ப. மிதிலைக்காட்சி. கஎ.

கா - கூ. "கரைமு தா.ா ரதிர்தலை யிறகிக், கவைமனத் திருத்த
வல்லுவனப் பழிய......பொதியில்" அகநா. ர எஎ.

கச - கூ. "உமண ருயக்குவயி னெழித்த, பண்ணழி பழம்பார் வெ
குரு கீனும் தண்ணந் துறைவன்" நற். காஅ.

கரு - எ. "கானங் கோழிக கவர்குரற் சேவ, லொண்பொறி யெருத்தி
றண்சித ருறைப்ப" (குறுந். உசஉ); கோழியை வாரணமென்றல் மரபென்
தற்கு மேற்கோள்; தொல். மரபு. சூ. கூஅ - பேர்.

(பி [illegible])—1 'கலிகெழு மூதூர்க்கந்து' 2 'மருதினிளநாகனார்'

# புறநானூறு மூலமும் உரையும்.

கக.

பரிசு பலி இட்டதின்மாறிய பாழ்பட்ட அம்பலத்தின்கண் முற்காலத்து
கரையையுடைய முதியோர் சூதாடுகருவியை இடுதலாற்குழிந்த அச்[illegible]
கருவியினது கல்லமணியாகிய இடம்சிறைப் பலபொறியையுடைய காட்டுக்
கோழி முட்டையிடும் காடாய்க்கெடும் நாடுடையோர்.—எ - று.

கலி - புகழும் அரவமுமாம்.

வழுதி, அடல்குறித்து நீகருதியது இதுவாயின்,
விளியுநாடுடையோர் தாம் யார்கொல அளியரெனக்கூட்டுக.

(௫௨) (௫௩.) முதிர்வா ரிப்பி முத்த வார்மணற்
கதிர்விடு மணியிற் கண்பொரு மாடத்
திலங்குவளை மகளிர் தெற்றி யாடும்
விளங்குசீர் விளங்கில் விழுமங் கொன்ற
களங்கொள் யானைக் கடுமான் பொறைய
விரிப்பி னகலுந் தொகுப்பி னெஞ்சு
மம்மா மெஞ்சத் [1] தெம்மனோர்க் கொருதலை
கைம்முற் றலநின் புகழே யென்று
மொளியோர் பிறந்தவிம் மலர்தலை யுலகத்து
வாழே மென்றலு மரிதே தாழாது
செறுத்த செய்யுட் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபில
னின்றுள னாயி னன்றுமற் றென்றநின்
னாடுகொள் வரிசைக் [2] கொப்பப்
பாடுவன் மன்னாற் பகைவரைக் கடப்பே.

௧. "விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்"

மதுரை. ௧௧௫.

௪. விளங்கில - ஒருநகரம்; "மாவண் கடலன் விளங்கி லன்னவெம், மையெழி லுண்கண்" அகநா. ௮௧.

௫. 'களங்கொள்பொறைய' என்றது போர்க்களம் வென்ற வேந்தர்க் குரித்தாதலான்; புறநா. ௬௨ : ௧௨; "ஏந்துவாட் டானை யிரிய வுறைகழித்துப், போந்துவாண் மின்னும் பொருசமத்து - வேந்த, னிருங்களிற் யானை யினமிரிய தோட்ட, கருங்கழலான் கொண்டான் களம்" (பு - வெ. அ : ௨௧); "தேன் மிடைந்த தாரினன் செங்களஞ் சிறந்ததே" சீவக. ௨௪௬ - உரை.

க-. வெறுப்பென்னும் உரிச்சொல செறிவென்னும்பொருளில் வந்த தற்கும் (தொல். உரி. சூ. ருக - ஃசே ; ஷை ஷெ. சூ. சாரு - ந; இ - வி. சூ. உஅக - உரை), 'வெறுப்பு' புறப்பொருட்கணவந்ததற்கும் (தொல்.
பொருளியல், சூ. ருக - ந) மேற்கோள்.

கக - ௨. "மறம்புரி கொள்கை வயங்குசெங் காவி, னுவலை கூராக் கவ லையி னெஞ்சி, னனவிற் பாடிய நல்லிசைக், கபிலன்" பதிற். அரு; க௦-கரு.

கரு - ௫. பழிகரப்பங்கதத்திற்கு மேற்கோள் ; தொல். செய். சூ. கஉசா - பேர்.

(பி - ம்.)—1 'எமக்கோவொருசிலை' 2 'ஏற்பப்'
15



திணையும் துறையும் அவை.

சேரன் மாந்தரஞ்சேரலிரும்பொறையைப் பொருந்திலிளங்கீரனர் பாடியது.

இ - ள்.—முற்றிநீண்டசிப்பிக்கண் முத்துப்போலும் வெளிய ஒழுங்கு பட்ட மணற்கண்ணே ஒளிவிடுகின்ற மணிகளாற் கண்ணைப்பொருகின்ற மாடத்திடத்து விளங்கிய வினையையுடையமகளிர் வேதிகைக்கணணே வினை யானும் விளங்கிய சீர்மையையுடைய விளக்கிற்குப் பகைவரான் வந்த இடம்

பையைத்தீர்த்த, போர்க்களத்தைத் தனதாக்கிக்கொண்ட, யானையையும் விரைந்த குதிரையையுமுடைய பொறைய, விரித்துச்சொல்லிற் பரக்கும்; தொகுத்துச்சொல்லிற் பொருள் ஒழிவுபடும்; ஆதலான், மயக்கம்பொருந்திய நெஞ்சையுடைய எங்களுக்கு ஒருதலையாகமுடியா, நினதுபுகழ், எங்களும்; கல்வியால்விளக்கமுடையோர்பிறந்த இப்பெரிய இடத்தையுடைய உலகத்தின்கண்ணே வாழேமென்றிருத்தலும் கூடாது; விரைய, பல பொருளையும் அடக்கிய செய்யுளைச்செய்யும் செவ்விய நாவினையும் மிக்கேள்வியையும் விளங்கியபுகழையுமுடைய கபிலன் இன்று உளனாகப்பெறின், நன்று; அது பெற்றிலேனெனறுசொல்லிய நினது வென்றிகொண்ட சிறப்பிற்குப் பொருந்தப் பாடுவேன், நீ பகைவரைவென்றவெற்றியை.—எ - று.

மாடத்துமகளிர் மணலிடத்துத் தெற்றிக்கண் ஆடும் விளங்கிலெனக.

தெற்றியென்பதனைக் கைகோத்தாடும் குரவையென்பாருமுளர்.

பொறைய, கபிலன் இன்றுளனாயின், நன்றுமனென்ற நின் ஆடுகொள் வரிசைக்கொப்ப பகைவரைக்கடப்பை யான் தாழாதுபாடுவேன்; நின் புகழ விரிப்பின் அகலும்; தொகுப்பின் எஞ்சும்; ஆதலான், எமக்குக் கைம்முற்றல; ஒளியோர்பிறந்த இம்மலர்தலையுலகத்து வாழேமெனறலும் அரிதென மாறிக்கூட்டுக.

தாழாதுசெய்யுட்செய் செந்நாவென இயைப்பினுமமையும்.

'ஒளியோர்' என்றது, கபிலன்முதலாயினோரை.

வாழேமெனறலும் அரிதென்றகருத்து, பாடாதிருத்தலும் அரிதென்ற நாக்கி, யாமும் வல்லபடி பாடிப்போதுவேமென்றதாகக் கொள்க.

நன்றுமனென்பது, கழிவின்கண் வந்தது.

பாடுவன்மன்றெனறவழி, மன்னும் ஆலும் அசைநிலை.

பாடுவன்மன்னெனபதனை

அலலீற்றுத்தனித்தன்மைவினையாக்கி,நின்வரி சைக்கொப்ப,
நின்பகைவரைககடப்பைப் பாடுவேனா; அதனால, விரிப்பின் அக
லும்; தொகுப்பின் எஞ்சும் ; மம்மர்நெஞ்சத்த எமககு நின்புகழ
கைம்முற் றலவென

அவன் புகழைமேம்படுத்தக்கூறியவாறாகவுரைப்பினுமமையும். இப்
பொருட்குப் பாடுவன்மனோ றதனை ஒழியிசையாகக்கொள்க.

'சிறக்தசெய்யுள்'என் றும்'செய்யுட்செய்தசெநகா'
என்றும்பாடம்.(ருங)

---



(ருச.) எங்கோ னிருந்த கம்பலை மூதூ
ருடையோர் போல விடையின்று குறுகிச்
செம்மா ளுளவை யண்ணாந்து [1] புகுத
லெம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே
ரு யிரவலர்க் கெண்மை யல்லது புரவெதிர்ந்து
வான ஈாண வரையாது சென்றோர்க்
கானா தீயுங் கவிகை வண்மைக்

கடுமான் கோதை துப்பெதிர்ந் தெழுந்த
நெடுமொழி மன்னர் நினைக்குங் காலைப்
க0 பாசிலைத் தொடுத்த வுவலைக் கண்ணி

2 மாக னுடுக்கை மடிவா யிடையன்
சிறுதலை யாயமொடு குறுகல்-செல்லாப் ௬-

புலிதுஞ்சு வியன்புலத் தற்றே
வலிதுஞ்சு தடக்கை யவனுடை நாடே.*

திணையும் துறையும் அவை.

சேரமான் குட்டுவன் கோதையைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரன் பாடியது.

இ - ள்.—எம்முடைய இறைவனிருந்த ஓசையையுடைய பழைய ஊரிடத்து அதனையுடையவாகளைப்போலக் காலம்பாராதே அணுகித் தலைமையை

---

க. "கம்பலை யென்னும் உரிச்சொல் அரவமாகிய இசைப்பொருண்மை யுணர்த்தும்" தொல். உரி. சூ. ருடு - சே.

உ. இடை - சமயம்; "தளரிடை யறியுந் தன்மையள" (மணி. ௪:௩௬); "நம்பன சிறிதே யிடைதந்திது கேட்க" சீவக. ௧௭௫.

௩ - உ. "நசையுநர்த் தடையா நன்பெரு வாயில், இசையேன புக்கு" (பொருந. ௬௬ - ௭); "பொருநர்க் காயினும் புலவர்க் காயினும், அருமறை நாவி னந்தணர்க் காயினும், கடவுண் மால்வரை கண்விடுத் தன்ன, அடையா வாயிலவ னருங்கடை குறுகி" (சிறுபாண். உ0௩ - ௬); "நும்மில் போல நில்லாது புக்கு", "அருங்கடி வாயி லயிராது புகுமின்" (மலைபடு. ௧௬௫, ௪௯௧); "நசையுநர்க் கடையா நன்பெரு வாயில" (கூர்ம. சூரியன்மரபு. ௧௩); "தடைஇய வாயி றடையாது நுழைந்து" தணிகையாறு. உ௩௧.

௩. புறநா. உ௧:௫.

௭. கவிகை - கொடுத்தற்குக் கவிந்த கை; "கலம்பெயக் கவிந்த கழறொடித் தடக்கை" அகநா. உ௩௨.

௯. நெடுமொழி: புறநா. உ௫:௫ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

கக. "இடையன் மடிவிடு வீணை" அகநா. உஎச.

* மூ. கருத்து: புறநா. ௬௬௦: ௯ - நி.

(பி - ம்.—) 1 'புகுதசெம்மனை' 2 'மாகுணுமேகை'



யுடைய காளோலக்கத்தின்கண்ணே தலையெடுத்துச் செம்மாந்து சென்று புகுதல் எம்மைப் போலும் வாழ்க்கையையுடைய இரப்போருக்கு எளிது; இக் குணம் இரப்போர்க்கு எளிதாவதல்லது, பாதுகாத்தலை ஏற்றுக்கொண்டு மழைகாணும்படி எப்பொருளையும் வரையாது தன்பாற்சென்றவர்கட்கு இடக்கவிந்த கையால் அமையாதுகொடுக்கும் வண்மையையுடைய கடுமான்கோதையது வலியோடுமாறுபட்டெழுந்திருந்த வஞ்சினங்கூறியவேந்தர் கருதுங் காலத்து, பசியிலையால் தொடுக்கப்பட்ட தழைக்கண்ணியையும் மாசுண்ட உடையையும் மடித்தவாயையுமுடைய இடையன் சிறிய தலையையுடைய ஆட்டினத்தினோடுகூட அணுகவொண்ணாத புலிதங்கும் அகன்ற நிலத்தை யொக்கும், வலிதங்கிய பெரியகையையுடையவனுடையநாடு.—எ - று.

எங்கோனிருந்தகூடு தூரப்புகுதல், இரவலர்க்கெளிது; அவனுடைய நாடு, மன்னர்சினைகருக்காலே, இடையன சிறுதலையாயமொடு குறுகலசெல்லாப் புலிதுஞ்சுவியன்புலத்தற்றெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

மன்னர்க்கு இடையனும், அவர்படைக்குச் சிறுதலையாயமும், கோதை நாட்டிற்குப் புலிதுஞ்சுவியன்புலமும் உவமையாகக்கொள்க.

உவலைக்கண்ணியென்றதனைப் பெயராகக்கொள்க.

புலியுடைவியன்புலமெனபதூஉம் பாடம்.

(௫௪)

(ருரு.) ஓங்குமலைப் பெருவிற் பாம்பு[1] ஞாண் கொளீஇ
யொருகணை கொண்டு மூவெயி லுடற்றிப்
பெருவிற லமரர்க்கு வென்றி தந்த
கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்
பிறைநுதல் விளங்கு மொருகண் போல

க. நேர்பு நிரை ஆசிரியத்துள் வந்ததற்கும் (தொல். செய். சூ. கச - பேர்; ந), தனிநிலைவகையான் வந்து கட்டளையாய இன்னோசைபெற்றதற்கும் (ஷை ஷை சூ. ரு - ந) மேற்கோள்.

உ. தருசொல் படர்க்கைக்கண் வந்ததற்கு மேற்கோள்; தொல். எச்சவி. சூ. உக - சே; ந; இ - வி. சூ. உ0க - உரை.

க - ச. "தொடங்கற்கட் டோன்றிய முதியவன் முதலாக, வடங்காதார் மிடல்சாய வமரர்வந் திரத்தலின், மடங்கல்போற் சினைஇ மாயஞ்செயவுணரைக், கடந்தடு முன்பொடு முக்கண்ணா னூவெயிலு, முடன்றக்கான் முகம்போல வொண்கதிர் தெறுதலின்" (கலி. உ); "திரிபுர மெரியத் தேவர் வேண்ட, வெரிமுகப் பேரம் பேவல் கேட்ப" சிலப். ௬ : ௪0 - சக.

ச - ரு. புறநா. க: ௬ - ஆம் அடிக்குறிப்பையும், ௯க: ரு - ௬ - ஆம் அடிகளையும், "பிறைநுதல் விளங்கும்", "தேயபொடி வெள்ளை பூசி யதன்மேலோர் திங்க டிலகம் பதித்த நுதலர்" (தே) என்பவற்றையும் நோக்குக.

(பி - ம்.)—1 'நாண்'

வேந்துமேம் பட்ட பூந்தார் மாற
கடுஞ்சினத்த கொல்களிறுங் கதழ்பரிய கலிமாவு
நெடுங்கொடிய நிமிர்தேரு நெஞ்சுடைய
புகன்மறவரு,[1]மென
நான்குடன் மாண்ட தாயினு மாண்ட

வறநெறி முதற்றே யரசின் கொற்ற
மதனுல், நமரெனக் கோல்கோடாது
பிறரெனக் குணங்கொல்லாது
ஞாயிற் றன்ன வெந்திற லாண்மையுந்
திங்க ளன்ன தண்பெருஞ் சாயலும்
வானத் தன்ன வண்மையு மூன்று
[2] முடையை யாகி யில்லோர் கையற
[3] நீநீடு வாழிய நெடுந்தகை தாழ்நீர்

---

எ. புறநா. கச: முதலாம்அடிக்குறிப்பைப்பார்க்க;

பதினெட்டெழுத்தான் வந்த ஆசிரிய அடிக்குமேற்கோள்; தொல். செய். சூ. சசு - இளம்.

அ. பத்தொன்பதெழுத்தா லவந்த ஆசிரியஅடிக்குமேற்கோள்; தொல். செய். ,, சசு - இளம்.

எ - கூ. திணைவிராயெண்ணப்பட்ட பெயர் செய்யுாகத்து அஃறிணைச் சொற்கொண்டு முடியுமென்பதற்கு மேற்கோா; தொல். எளவி. ரு. ருக - சே; ந; இ - வி. ரு. உகூ - உரை.

கூ - கo. "அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா, மான முடைய தரசு", "வேலன்று வென்றி தருவது மன்னவன், கோலதூஉங் கோடா தெனின்" (ந௩அக, ருசகூ) என்னுந் திருக்குறள்களின் விசேடவுரையில், 'மாண்ட, அறிநெறி முதற்றே யாசின் கொற்றம்' எனனும் இப்பகுதியை மேற்கோளாக எடுத்துக் காட்டினர் பரிமேலழகர்; "உருளு நேமியு மொண் கவ ரெஃகமு, மருளில வாணியும் வலவர் மூவர்க்கும, தெருளு கலைற மும் மனச் செம்மையு, மருளுநீத்தபி னுவதுண் டாகுமோ" (கம்ப. மகதரை. கக); "அறத்தினை லன்றி யமரார்க்கு மருஞ்சமங் கடத்தல், மறததி னலரி தெனபது மனத்திடை வலித்தி" வெடி முதற்போர். உ௨ரு.

கரு - ரு. "நின்,வெம்மையும் விளக்கமு ஞாயிற்றுள, நின், றண்மையுஞ் சாயலுந் திங்களுள, நின், சுரத்தலும் வண்மையு மாரியுள" பரி. ச: உரு-எ.

கரு - சு. புறநா. ருகூ: கூ - எ; "ஈண்டுநீர் மிசைத்தோன்றி யிருள் சீக்குஞ் சுடரேபோல, வேண்டாதார் நெஞ்சுட்க வெருவந்த கொடுமையு, நீண்டுதோள் றுயர்குடை நிழலெனச் சேர்ந்தார்க்குக், காண்டகு மதியென னக் கதிர்விடு தண்மையு, மாண்டநின் னொழுக்கத்தால" கலி. க௦௦.

(பி-ம்.)—1 'எனும்' 2 உடையாயாதலினில்லோர்' 3 'நீவேவையொழிய' ·

## புறநானூறு மூலமும் உரையும்.

வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி
னெடுவே ணிலைஇய காமர் வியன்றுறைக்

௨௦ கடுவளி தொகுப்ப வீண்டிய
வடுவா ழெக்கர் மணலினும் பலவே.

தி. திணை - பாடாண்டிணை ; துறை - செவியறிவுறூஉ.

பாண்டியன் இலவந்திகைப்பள்ளித்துஞ்சிய நன்மாறனை மதுரை மருதனிளநாகனார் பாடியது.

இ - ள்.—உயர்ந்தமலையாகிய பெரியவில்லைப் பாம்பாகிய நாணைக் கொளுத்தி ஒப்பில்லாததோரம்பைவாங்கி மூன்றுமதிலையுமெய்து பெரிய வலியையுடைய தேவர்கட்கு வெற்றியைக்கொடுத்த கரியமிறஞ்சேர்ந்ததிரு மிடற்றையுடைய இறைவனது அழகிய திருமுடிப்பக்கத்து அணிந்த பிறை சேர்ந்த திருநெற்றிக்கண்ணே விளங்கும் ஒரு திருநயனம்போல மூவேந் தருள்ளும் மேம்பட்ட பூததாரையுடையமாற, கடிய சினத்தையுடையவாகிய கொலைகளிறும் விரைந்த செலவையுடையவாகிய மனஞ்செருக்கிய குதிரை யும் நெடிய கொடியையுடையவாகிய உயர்ந்ததேரும் நெஞ்சுவலியையுடைய போரைவிரும்பும் மறவருமென நாற்குப்படையுங் கூட மாட்சிமைப்பட்ட தாயினும் மாட்சிமைப்பட்ட அறநெறியை முதலாகவுடைத்து, வேந்தரது வெற்றி ; அதனை, இவர் நம்முடையரென அவர்செய்தகொடுந்தொழிலைப் பொறுத்துக் கோலவேண்டாது, இவர் நமக்கு அயலாரென்று அவர்க்குணங் களைக்கெடாது, ஞாயிற்றைப்போன்ற வெய்யதிறலையுடைய வீரமும், திங் களைப்போன்ற குளிர்ந்த பெரியமென்மையும், மழையைப்போன்றவண்மையு மென்ற மூன்றையுமுடையையாகி இல்லாதோர் இல்லையாக நீ நெடுங்காலம் வாழ்வாயாக, நெடுந்தகாய், தாழ்ந்த நீரையுடைய கடலின்கண் வெளிய தலையையுடைய திரையலைக்கும் செந்திலிடத்து நெடிய முருகவேள் நிலை பெற்ற அழகிய அகன்ற துறைக்கண் பெருங்காற்றுத் திரட்டுதலால் குவிந்த வடுவுமுதிய எக்கர்மணலினும் பலகாலம்.—எ - று.

'குணங்கொல்லாது' என்பதற்கு முறைமையழிய நீ வேண்டியவாறு செய்யாதெனினுமாம்.

பூசுதார்மாற, கெடுகதகாய், நான்குடனமாணடதாயினும், அரசின் கொற்றம்அறநெறிமுதற்று ; அதனுல, கோலகோடாது, குணங்கொலலாது, ஆண்மையும் சாயலும் வண்மையும் உடையையாகி இலலோாகையற நீ மணலினும் பலகாலம நீடுவாழியவெனககூட்டி வினைமுடிவுசெய்க. (ருரு)

---

கஅ - க. "திருமணி விளக்கி னலைவாய்ச செருமிகு சேஎய்" (அகநா. உசுசு); "அலைவாய்ச சேறலு நிலைஇய பணபே" (முருகு: கஉரு); "சீர்கெழு செந்திலுஞ் செங்கோடும் வெண்குன்று, மேரகமு நீங்கா விறையவன்" (சிலப்: உச); "கஞ்செந்தினமேய வளளிமணாளற்குத் தாதைகண்டாய்" (தே); "முருகன் றீம்புன லலைவாய்" தொல். களவு. சூ. உந - ந; நீடிப்புன்மாலை."

உக. மு. மலைபடு. ருருசு.

தன - உக. புறநா. க: அ - கக ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க,



(ருசு.) ஏற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை
மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனுங்
கடல்வளர் புரிவளை புரையு மேனி
யடல்வெந் நாஞ்சிற பனைக்கொடி யோனும்
ரு [1] மண்ணுறு திருமணி புரையு மேனி
விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனு
மணிமயி லுயரிய மாறா வென்றிப்

பிணிமுக வூர்தி யொண்செய் யோனுமென
ஞாலங் காக்குங் கால முன்பிற்
றோலா நல்லிசை நால்வ ருள்ளுங்
கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்

---

க. பதினோரெழுத்தான் வந்த ஆசிரியவடிக்கு மேற்கோள்; தொல். செய். ரு. சக - இளம்.

உ. "ஈருங் கணிச்சியோனை" (கலி. உ); "மழுவா ணெடியோன்றலை வருக" மதுரை. சருரு.

க - உ. "வெள்ளேறு, வலவயி னுயரிய...அமலையின் முருகிய முரண்மிகு செல்வனும்" புறநா. கருக - சு.

ச. 'கொடி' என்னுஞ்சொல் 'பனை' என்னுஞ் சொல்லுக்கு முன் வரின் ஐகாரம் கெடாது நிற்றற்குப் 'பனைக்கொடி' என்பது மேற்கோள்; தொல், உயிர்மயங்கு. ரு. அஅ - இளம்; ந.

ரு. புற. சிலப். உஉ : கஎ.

எ. "பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய, வொடியா விழவி னெடியோன்" (அகநா. கசக : கரு-சு); "பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ" புறநா. கஉஉ. நக்க. 2ரு.-உரை

எ - அ. "மணிநிற மஞ்ஞை யோங்கிய புட்கொடிப், பிணிமுக மூர்ந்த வெல்போ ரிறைவ" பரி. கஎ : சஅ - சு.

க - க0. "முக்கட் பகவ னடிதொழா தார்க்கின்னா, பொற்பனை வெள்

ளையை யுள்ளா தொழுகின்னா, சக்கரத் தானை மறப்பின்னா தாங்கின்னா, சத்தியான் றாடொழா தார்க்கு" (இன்னா. க); "கண்மூன் றுடையான்றாள் சேர்தல் கடிதினிதே, தொன்மாண் டுழாய்மாலை யானைத் தொழ லினிதே" (இனியது. க); "பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலு, மறுமுகச் செவ்வே ளணிதிகழ் கோயிலும், வால்வளை மேனி வாலியோன் கோயிலு, நீலமேனி நெடியோன் கோயிலும்", "நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலு, முவணச் சேவ லுயர்த்தோ னியமமு, மேழிவல னுயர்த்த வெள்ளை நகரமுங், கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்" (சிலப். ரு: கசுகூ - எஉ; கச: எ - க0); "நுதல்விழி நாட்டத் திறையோன்முதலா" மணி. க: ருச.

கக. புறநா. கூ: கஉ; சஉ: உஉ; "மாற்றருஞ் சீற்றத்துக் கூற்று வனே" கனுநால். கரு.

(பி - ம்.)—1 'மன்னிய'



வலியொத் தீயே வாலி யோனைப்
புகழொத் தீயே யிகழுந ரடுநனை
முருகொத் தீயே முன்னியது முடித்தலி
னாங்காங் கவரவ ரொத்தலின் யாங்கு
மரியவு முளவோ நினக்கே யதனா
லிரவலர்க் கருங்கல மருகா தீயா
யவனர், நன்கலந் தந்த தண்கமழ் தேறல்
பொன்செய் புனைகலத் தேந்தி நாளு
மொண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்

தாங்கினி தொழுகுமதி யோங்குவாண் மாற
வங்கண் விசும்பி ஞரிரு ளகற்றும்
வெங்கதிர்ச் செல்வன் போலவுங் குடதிசைத்
தண்கதிர் மதியம் போலவு
உரு நின்று நிலைஇய ருலகமோ டுடனே.*

திணை - அது; துறை - பூவைநிலை.

அவனை [1]மதுரைக்கணக்காயனார்மகனார் நக்கீரனார் பாடியது.

இ - ள்.—ஆனேற்றை வெற்றியாகவுயர்த்த அழலபோலும் விளங்கிய சடைபிணையும் விலகுதற்கரிய மழுப்படையையுமுடைய நீலமணிபோலுந் திருமிடற்றையுடையோனும், கடற்கண்ணே வளரும் புரிந்த சங்கையொக்கும் திருநிறத்தையுடைய கொலையைவிரும்பும் கலப்பையையும் பனைக்கொடி யையுமுடையோனும், கழுவப்பட்ட அழகிய நீலமணிபோலும் திருமேனியை யும் வானுறவோங்கிய கருடக்கொடியையுமுடைய வென்றியை விரும்புவோனும், நீலமணிபோலும் நிறத்தையுடைய மயிற்கொடியையெடுத்த மாறாத வெற்றியையுடைய † அம்மயிலாகிய ஊர்தியையுடைய ஒள்ளியசெய்யோனு மென்று சொல்லப்பட்ட உலகைக்காக்கும் முடிவுகாலத்தைச் செய்யும் வலியி

கஉ. 'வாலவளை மேனி வாலியோன' என்பதற்கு மேற்கோள்;

(ரு): களக - அடியார்.

சிலப். கக. புறநா. ருள : உ -

"உரைசால சிறப்பி னெடியோன்" சிலப். உஉ: சுo.

கஅ - உக. புறநா. உச : ரு க-ரு ஆம் அடிகளின்குறிப்பைப் பார்க்க.

* ıբ. பூவைநிலையாவது மூன்றனையொப் றுபோற்கூறுந்துறை; அஃது ஓராசனைக் குத்திருமாலையும் ஏனைத்தேவர்களையும் உவமைகூறுதலென் றுரைத்து இச்செய்யுளைமேற்கோள்காட்டினர்; தொல். புறத்திணை. ரு. ரு; இ - வி. ரு. ௬௧௭ - உரை.

† "பிணிமுக மேற்கொண் டவுணர் பீடழியும் வண்ண, மணிவிசும்பிற் கோனேத்த மாறட்ட வெளவேலே" (சிலப். ௨௪); "பிணிமுக மஞ்ஞை செருமுகத், தேர்திய, மூவிரு திருமுகத் தொருவே லவற்கு" கல்லா. எ.

(பி - ம்.)—1 'அவர் பாடியது'

## புறநானூறு மூலமும் உரையும்.

௧௫௬

ளையும் தோல்வியில்லாத நல்லபுகழினையுமுடைய நால்வருள்ளும், விலக்கு தற்கரிய வெகுட்சியாற் கூற்றத்தையொப்பை; வலியால் வாலியோனை யொப்பை ; புகழாற் பகைவரைக்கொலலும் மாயோனையொப்பை ; கருதி யது முடித்தலான் முருகனையொப்பை ; அப்படி அப்படி அவரை அவரை யொத்தலான், எவ்விடத்தும் அரியனவுமுளவோ நினக்கு ? ஆதலால, இரப் போர்க்குப் பெறுதற்கரிய அணிகலங்களைப் பெரிதும்வழங்கி, யவனர் நல்ல குப்பியிற் கொடுவரப்பட்ட குளிர்ந்த நறுநாற்றத்தையுடைய தேறலைப் பொ னாற் செய்யப்பட்ட புனைந்த கலத்தின்கண்ணேயேந்தி நாடோறும் ஒள் ளிய வளையையுடைய மகளிருட்ட மகிழ்ச்சிமிக்கு இனிதாக நடப்பாயாக ;

வென்றியானுயர்ந்த வாளையுடைய மாற, அழகிய இடத்தையுடைய வானத்
தின் கணனே நிறைந்த இருளைடபோககும் வெய்ய கதிரையுடைய ஞாயிற்றையொப்பவும் மேலேத்திகிற்றேன்றும் குளிர்ந்த கதிரையுடைய பிறை
யைப்போலவும் இவ்வுலகத்தோடேகூட நின்று நிலைபெறுவாயாக.—எ - று.

பிணிமுகம் - பிள்ளையாரேறும் யானையென்றும் சொல்லுப.

காலமுன்பென்றது, தம்மையெதிர்ந்தோர்க்குத் † தாம்நினைந்தபொழு
தே முடிவுகாலத்தைச்செய்யும் வலியை.

‡ மணிமிடற்றேனைக்கூற்றமென்றது, அழித்தற்றொழிலையுடைமையான்.

வாலியோனென்றது, § நம்பிமூத்தபிரானை.

இகழுநரடுநனென்றது, மாயோனை.

ஆரிருளகற்றும் வெங்கதிர்ச்செல்வனென்றது, எழுகின்ற ஞாயிற்றை.

|| மதி - இளம்பிறை.

இது, தேவரோடுவமித்தமையாற் பூவைநிலையாயிற்று.

(௫௬)

---

* இதனை, "சேயுயர் பிணிமுக மூர்ந்து" (பரி: ௫), "ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" (முருகு. உ௪எ) என்பவற்றின் உரைகளானுணர்க.

† புறநா. ௬௧: ௧ - ௩.

‡ இவர் காலக்கடவுளெனவுங் கூறப்படுவர்; "எரியெள் ளுவன்ன .... இளம்பிறை சேர்ந்த நுதலவ் கண்கண், மாறேற்கும் பண்பின் மறமிடற் றண்ணேறிச், சூலம்பிடித்த சுடர்ப்படைக், காலக் கடவுட் குயர்கமா வலனே" தொல். புறத்திணை. ரு. உ-சு - ந. மேற்.

§ நம்பிமூத்தபிரான் - பலதேவர்.

|| "இருகோட டொருமதி யெழிலிபெற மிலைத்தனை" ௪௧ - ஆம் திருமுறை, திருவெழுகூற்றிருக்கை.

(௫எ.) வல்லா ராயினும் வல்லுந ராயினும்
புகழ்த லுற்றோர்க்கு மாயோ னன்ன
வுரைசால் சிறப்பிற் புகழ்சான் மாற

௧ - ௩. புறநா. உஎ: ௧௫; "வலலினும் வலலா ராயினுஞ் சென்றோர்க் கு................கிறைய வீசு, மாஅல் யானை யாஅய்" அகநா. ௧௫௨.

௨ - ௩. புறநா. ௫௬: ௧௩ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.





நின்னொன்று கூறுவ துடையே னென்னெனி
னீயே, பிறர்நாடு கொள்ளுங் காலை யவர்நாட்
டிறங்குகதிர்க் கழனிநின் னிளையருங் கவர்க
நனந்தலைப் பேரூ ரெரியு நக்க
மின்னுநிமிர்ந் தன்னநின் னொளிறிலங்கு நெடுவே
லொன்னார்ச் செகுப்பினுஞ் செகுக்க வென்னதூஉங்

௬0 கடிமரந் தடிதலோம்புநின்
னெடுநல் 1 யானைக் கந்தாற் றாவே. *

திணை - வஞ்சி ; துறை - துணைவஞ்சி.

அவனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியது.

இ - ள்.—யாதொரு கலவியை மாட்டாராயினும் அதனை வல்லாராயினும் புகழ்தலைப்பொருந்தியவர்கட்கு மாயோனையொத்த சொல்லுதலமைந்த தலைமையையுடைய புகழமைந்தமாற, நினது ஒரு காரியஞ்சொல்லுதலுடையேன்!; அது யாதெனின், நின்பகைவர்நாட்டைக் கொள்ளுங்காலத்து அவர் நாட்டின்கண் வினைந்தகதிரையுடையவயலை நின்னுடைய வீரரும் கொள்ளை கொள்க ; அகலிய இடத்தையுடைய பெரிய ஊரைத் தீயுஞ்சுடுக ; மின் நிமிர்ந்தாற்போன்ற நினது பாடஞ்செய்கின்ற விளங்கிய நெடியவேல பகைவரை அழிக்கினும் அழிக்க ; யாவதும் காவன் மரத்தைவெட்டுதலைப் பாதுகாப்பாயாக, நின்னுடைய நெடிய நல்யானைகட்கு முன்பு நட்டுநிற்கின்ற

தறிகள் ஆற்றமாட்டாவாதலான்.—எ - று.

† அவை இளமரமாதலால, நின் நெடுநல்யானைக்குத் தறியாதற்குப் பொறையாற்றாவென்று உரைப்பாருமுளர்.

வல்லவர்க்கும் மாட்டார்கும் ஒப்பப் புகழ்ந்து முடியவொண்ணாமையான், மாயோனன்னவென்றார்; அன்றி, அவ்விருவர்க்கும் ஒப்ப அருள்பண்ணுதலின், அவ்வாறு கூறிற்றெனினுமமையும்.

மாற, நின்யானைக்குக் கந்து ஆற்றாவாதலால, கடிமரந்தடிதலோம்பெனக் கூட்டுக.

நின்யானைக்குக் கந்து ஆற்றாவாதலாற் கடிமரந்தடிதலோம்பெனக் கூறுவான்போற் சந்துசெய்விக்கும் நினைவாற் கூறினமையின், இது துணைவஞ்சியாயிற்று. (௫௭)

---

௫. 'நீ' என்பது ஆண்பாலில வந்ததற்கு மேற்கோள்; தொல்.பெயர்.

கு. ௩க - பேர்; ந.

ரு - எ. புறநா. கரு: கரு - எ ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

கO. புறநா. உ௩: அ - கூ ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

* மு. "......கூறுதல் கருத்தாயின் வஞ்சியாம்; புகழ்தல் கருத்தாயிற் பாடாண்டிணையாம்" (தொல். புறத்திணை. சூ. உஅ - இளம்); பாடாண்கொற்றவள்ளையென்பர்; ஷை ஷை ஷை ௩௪ - ந.

† "ஆடுகோ டாகி யதரிடை நின்றதூஉங், காழ்கொண்ட கண்ணே களிற்றணைக்குங் கந்தாகும்" நாலடி. ககஉ.

(பி - ம்.) 'யானைக்குக்கந்து.

## புறநானூறு மூலமும் உரையும்.

கஉகூ

(ரு௮.) நீயே, தண்புனற் காவிரிக் கிழவனை யிவனே
முழுமுத றொலைந்த கோளி யாலத்துக்
கொழுநிழ னெடுஞ்சினை வீழ்பொறுத் தாங்குத்
தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல் செல்லாது
நல்லிசை முதுகுடி நடுக்கறத் தழீஇ
யிளைய தாயினுங் கிளையரா வெறியு
மருநரை யுருமிற் பொருநரைப் பொறாஅச்
செருமாண் பஞ்சவ ரேறே நீயே
யறந்துஞ் சுறந்தைப் பொருநனை யிவனே
நெல்லு நீரு மெல்லார்க்கு [1] மெளியவென
வரைய சாந்தமுந் திரைய முத்தமு

மிமிழ்தூரன் முரச மூன்றுட னாளுந்
தமிழ்கெழு கூடற் றண்கோல் வேந்தே
பானிற வுருவிற் பனைக்கொடி யோனும்
நீனிற வுருவி னேமி யோனுமென்
றிருபெருந் தெய்வமு முடனின் றாஅங்

---

உ. "கோடுபல முரஞ்சிய கோளி யாலத்து" (மலைபடு. உசு அ); "கோளி - பூவாது காய்க்கும் மரம்; என்னை ? 'கோளியாலத்து' என்றார்" சிலப். கசு: உஉ - அ. அடியார்.

உ - ரு. "சிதலை தினப்பட்ட வால மரத்தை, மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக், குதலைமை தந்தைகட் டோன்றிற்றான்பெற்ற, புதல்வன் மறைப்பக் கெடும்" (நாலடி. கசள); "ஆலங்குசிறை வாவலுறை தொன்மரங்க ளென்ன, வோங்குகுல வைபவத லுட்பிறந்த வீரர், தாங்கல கடனாகும்" சீவக. சகூஅ.

ச - ரு. "தளங்குடி திருத்திய வலம்படு வென்றி" பதிற். ஙஉ: எ.

சு - அ. "இளைய ராயினும் பகையரசு கடியுஞ், செருமாண் டென்னர்" சிலப். ச: உக - உ.

கூ. புறநா. ஙக: அ - கூ ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

கO. புறநா. எO: கூ ; கஅசு: க.

கூ - கரு. "செழியன், றமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின், மகிழ்நனை மறுகின் மதுரை" சிறுபாண். சுரு - எ.

கரு. "நீனிற வுருவி னெடியோன்" (பெரும்பாண். சOஉ); "நீல மேனி நெடியோன்" சிலப். ரு: களஉ.

கச - ரு. புறநா. ருகசு: ஙு - சு.

கச - கூ. "மன்புனை யிளவெயில் வளாவவிருள் வளர்வெனப், பொன்புனை யுடுக்கையோன்புணர்ந்தமர்நிலையே" பரி. கரு: உஎ - அ.

(பி - ம்.)—1 'எளியவரைய'

குருகெழு தோற்றமொ டேட்குவர விளங்கி
யின்னீ ராகலி னினியவு முளவோ
வின்னுங் கேண்மினும் மிசைவா ழியவே
யொருவி ரொருவிர்க் காற்றுதி ரிருவிரு
முடனிலை திரிகி ராயி னிமிழ்திரைப்
பௌவ முடுத்தவிப் பயங்கெழு மாநிலங்
கையகப் படுவது பொய்யா காதே
அதனால், நல்ல போலவு நயவ போலவுந்
தொல்லோர் சென்ற நெறிய போலவுங்
காத னெஞ்சினு மிடைபுகற் கலமரு
மேதின் மாக்கள் பொதுமொழி கொள்ளா
தின்றே போல்கநும் புணர்ச்சி வென்றுவென்
றடுகளத் துயர்கநும் வேலே கொடுவரிக்
கோண்மாக் குயின்ற சேண்விளங்கு தொடுபொறி
நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த
குடுமிய வாகபிறர் குன்றுகெழு நாடே.

திணை - பாடாண்டிணை ; துறை - உடனிலை.

சோழன் குராப்பள்ளித்துஞ்சியபெருந்திருமாவளவனும் பாண்டியன் வெள்ளியம்பலத்துத்துஞ்சியபெருவழுதியும் ஒருங்கிருந்தாரைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியது.

இ - ள்.—நீ, குளிர்ந்த நீரையுடைய காவிரிக்குத்தலைவன்; இவன், பரிய அடிமாய்ந்த கோளியாகிய ஆலத்துக் கொழுவிய நிழலையுடைய நெடிய கொம்பை அதன்வீழ் தாங்கினாற்போலத் தனக்கு முன்னுள்ளோர் இறந்தாராகத் தான் தளராது நலலபுகழையுடைய பழையகுடியைத் தமோற்றமற அணைத்துத் தான்சிறிதேயாயினும் கிளையுடனே பாம்பையெறியும் பொறாத் தற்கரிய வெள்ளிய உருமேறுபோல இளமைக்காலத்தும் பகைவரைக்காணப் பொறாத போரின்கண் மாட்சிமைப்பட்ட பாண்டியர்குடியுள் ஏறுபோல வான்; நீ அறந்தங்கும் உறையூரின்கண் அரசன்; இவன், நெலலும் நீரும்

உரு. "பெரியோர் சென்ற வடிவழிப் பிழையாது" மதுரை. ககஉ.

உஅ. "இன்றை யன்ன நட்பு" (குறுந். கடுக); "புணர்ச்சி பழகுதல வேண்டா வுணர்ச்சிதா, னட்பாங் கிழமை தரும்" (குறள். எஅரு) என்பதன் உரையில, "புணர்ச்சி - ஒருதேயத்தாராதல; 'இன்றே போலக்தும் புணர்சசி' என்றதும் அதனை" என்பர் பரிமேலழகர்.

நு௦ - நுஉ. அரசர் தாம்வென்ற நாட்டிலுள்ள மலையில தம் கொடியை எழுதுவித்தல மரபு; "கயலெழுதிய விமயநெற்றி" (சிலப். கள:க) என்பதனாலும் அதன் உரைகளாலும் உணர்க.

உக - நுஉ. பரி. ந: கள - அ. பரிமேல். மேற்.

யாவர்க்கும் எளியவெனக்கருதி அவைபோலாது யாவர்க்கும் பெறுதற்கரிய * பொதியின்மலையிடத்துச் சந்தனமும் கடலிடத்து முத்துமென இவற்றை ஒலிக்கும் குரலையுடைய † முரசம்மூன்றுடனேயாளும் தமிழ்பொருந்திய மதுரைக்கட் குளிர்ந்த செங்கோலையுடையவேந்தன்; நீர், பால்போலும் நிறத்தையுடைய பனைக்கொடியையுடையோனும் நீலநிறம்போலும் திருமேனியையுடைய ஆழியையுடையோனுமென்று சொல்லப்படும் இரண்டு பெரிய தெய்வமும் ஒருங்கு நின்றாற்போல உட்குப்பொருந்திய காட்சியோடு அச்சம் வர விளங்கி இத்தன்மையிராகுதலின், இதனினும் இனியபொருள் உளவோ? இன்னமும் கேளீர்; நும்முடையபுகழ் நெடுங்காலம் செல்வதாக; நும்முள் ஒருவீர் ஒருவீர்க்கு உதவுவீராக; நீங்களிருவீரும் கூடிநின்ற இந்நிலையின் வேறுபடீராயின் ஒலிக்கும் திரையையுடைய கடல்சூழ்ந்த இப்பயன் பொருந்திய உலகங்கள் கையகத்தேயகப்படுதல் பொய்யாகாது; ஆதலால், நல்லன போலேயிருக்கவும் நியாயத்தையுடையன போலேயிருக்கவும் பழையோரொழுகிய ஒழுக்கமுடையனபோலேயிருக்கவும் அன்புபொருந்திய நெஞ்சையுடைய நும் இடையேபுகுந்து நும்மைப்பிரித்தற்கு அலமரும் அயலோருடைய ‡ சிறப்பில்லாத மொழியைக் கேளாது இன்றுபோலக, நுமது கூட்டம்; § வென்றுவென்று கொலைக்களத்தின்கண் மேம்படுக, நும்முடைவேல்; வளைந்தவரியையுடைய புலிவடிவாகச்செய்யப்பட்ட சேய்மைக்கண் விளங்குகின்ற தோன்றிய இலாஞ்சனையைப் பெரிய நீரின்கண்வாழும் கயலுடனே பொறித்த சிகரங்களையுடையவாக, பிறருடைய குன்றையுடைய காடுகள்.—எ - று.

குன்றுகெழுகாடென்றதாயினும், கருதியது பிறர்நாட்டுக்குன்றுகளென்றதாகக் கொள்க.

கோளியென்றது, பூவாதுகாய்க்குமரம்.

தமீஇப் பொறுவென இயையும்.

முரசமூன்றவன :—வீரமுரசும், நியாயமுரசும், தியாகமுரசும்; மணமுரசுடனே ஏனை இரண்டுமுரசென்பாருமுளர்.

* புறநா. ௯௮0: "தென்கடற் பிறந்த முத்தி னாரும், மலைதிறை கொடுக்குந் துப்பிற் றன்மலைத், தெறலரு மரபிற் கடவுட் பேணிக், குறவர் தந்த சந்தினாரமும்......அணியும்......தென்னவன்" (அகநா. ௧௩); "குடமலைப் பிறந்த வாரமு மகிலுந், தென்கடல் முத்தும்" (பட்டின. ௧௮௮ - ௯); "தென்கடன் முத்துந் தென்மலைச் சந்தும்", "கொற்கையம் பெருந்துறை முத்தொடு பூண்டு, தெக்கண மலயச் செழுஞ்சே றாடி", "கோவா மலையாரங் கோத்த கடலாரம்" (சிலப். ௮: ௧௬; ௧௪: ௮0 - ௮௧; ௧௭: "உள்வரி"); "வெண்டிரைத் தென்கடன் முத்துந் தென்மலைச் சந்தும்" தஞ்சை. ௧௩.

† "முரைசுமூன் றாள்பவர் முரணியோர் முரண்டப" (கலி. ௧௩௨) என்பதும், "முரசு மூன்றவன:—வீரமுரசு தியாகமுரசு நியாயமுரசென்பன; தன்முரசும் சேரன்முரசும் சோழன்முரசுமெனமூன்றெனுமாம்" என்னும் அதனுரையும் இங்கே அறியத்தக்கவை.

‡ "மறமன்னர், வெங்களத்து வேலுயர்த்த வேந்து" பு-வெ.—௯: ௧௧.



செல்வும் நீரும் எல்லார்க்குமெளியவென முற்றுகவுரைப்பாருமுளர். தொடுபொறி, பெயர் மாத்திரையாய் நின்றது.

ஒருவீர் ஒருவீர்க்கு உதவியாய்
மென்பாருமுளர்.

வலியையுடையீராய் நீங்கள் இருவிரு

இருவரரசர்
யாயிற்று.

ஒருங்கிருந்தாரைப்பாடினமையின், இஃது உடனிலை
(ருஅ)

---

(ருகூ.) ஆரந் தாழ்ந்த 1 வணிகிளர் மார்பிற்
றாடோய் தடக்கைத் தகைமாண் வழுதி
வல்லை மன்ற நீநயந் தளித்த
றேற்றாய் பெரும பொய்யே யென்றுங்
ரு காய்சினந் தவிராது கடலூர் பெழுதரு
ஞாயி றனையைநின் பகைவர்க்குத்
திங்க ளனையை யெம்ம னோர்க்கே.

திணை - அது; துறை - பூவைநிலை.

பாண்டியன் சித்திரமாடத்துத்துஞ்சிய நன்மாறனை மதுரைக்கூல வாணிகன் சீத்தலைச்சாத்தனார் பாடியது.

இ - ள்.—ஆரந்தாழ்ந்த அழகுமிக்கமார்பினையும் முழந்தாளிலேதோய்ந்த பெரியகையினையுமுடைய அழகுமாட்சிமைப்பட்டவழுதி, நீ யாவர்க்கும் உவந்து அருளைப்பண்ணுதலைத் தெளிவாக வல்லை, மெய்யாக; யாவரிடத்தும் தெளியாய், பெரும, பொய்யை; எந்நாளும் சுடுமெவெம்மையொழியாது கடலிடத்தே கிளர்ந்தெழுகின்ற ஞாயிற்றையொப்பை, நின்பகைவர்க்கு; எம்போல்வார்க்குத் திங்களையொப்பை.—எ - று.

தேற்றாயென்றது, தேறாயெனத் தன்வினையாய்நின்றது; தேற்றாயென்பதற்குப் பொய்தெளிக்கப்படாயெனினுமமையும்.

ஞாயிற்றேடும் திங்களோடுமுவமித்தமையால், இறு
யிற்று.

பூவைநிலையா
(ருகூ)

---

௪. புறநா. உ0உ : கசு; தேற்றலென்பது 'அறிதல' என்னும்பொருளில் வந்ததற்கு மேற்கோள்; சீவக. உருஎ, எஎ0 - ந.

கூ - எ. புறநா. ருகூ : உா - ச; "எண்டூநீர் பிசைத்தோன்றி யிருள் சீக்குஞ் சுடரேபோல், வேண்டாதார் நெஞ்சுட்க வெருவந்த கொடுமையு, நீண்டுதோள் றுயர்குடை நிழலெனச் சேர்ந்தார்க்குக், காணடகு மதியென னக் கதிர்விடு தண்மையும் ...... இரங்கிசை முரசினுய்" (கலி. க00); "நன்னுகர் பகைவரென் றிவர்க்கு நாளினும், தண்ணியன் வெய்யனந் தானை மன்னனே" சூளா. நகர. கஎ.

(பி - ம்.)—1 'அம்பகட்டுமார்பித்'

---

# புறநானூறு மூலமும் உரையும.

கஉஎ

'௬0) முந்நீர் நாப்பட் டிமிற்சுடர் போலச்
1 செம்மீ னிமைக்கு மாக விசும்பி
னுச்சி நின்ற வுவ்வுமதி கண்டு

கட்சி மஞ்ஞையிற் சுரமுதல் சேர்ந்த
சில்வளை விறலியும் யானும் வல்விரைந்து
தொழுதன மல்லமோ பலவே கானற்
கழியுப்பு முகந்து கன்னாடு மடுக்கு
மாரைச் சாகாட் டாழ்ச்சி போக்கு
முரனுடை நோன்பகட் டன்ன வெங்கோன்
வலனிரங்கு முரசின் வாய்வாள் வளவன்
வெயின்மறைக் கொண்ட வுருகெழு சிறப்பின்
மாலை வெண்குடை [2] யொக்குமா லெனவே.

திணை - அது ; துறை - குடைமங்கலம்.

சோழன் குராப்பள்ளித்துஞ்சியபெருந்திருமாவளவனை உறையூர் மருத்துவன்தாமோதரனார் பாடியது.

இ - ள்.—கடலொடுவேதோன்றுகின்ற திமிலின்கண் இடப்பட்ட விளக்கப்போலச் செவ்வாய்மீன் விளங்கும் மாகமாகிய விசும்பினது உச்சிக்கண்ணின்ற உவாநாளின் மதியத்தைக்கண்டு காட்டுள்வாழும் மயிலைப்போலச் சுரத்திடைப் பொருந்திய சிலவாகிய வளையையுடையவிறலியும் யானும் கடிதின் விரைந்து தொழுதேமல்லேமோ ? பலகால ; கடற்கரையிடத்துக் கழியி

௧. முரனீர் : புறநா. ௬ : ௧௦ - ஆம் அடி உரையின்விசேடக் குறிப்

மைப் பார்க்க.

உ. மாகவிசும்பு : புறநா. ௩௫: ௧௮: ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

௧ - உ. "மீன்றிமில விளக்கமும்" என்பதற்கு இவ்வடிகளை மேற்கோளாகக்காட்டினர்; சிலப். ௬ : ௧௪௨ - அடியார்.

எ-௯. புறநா. ௮௪: ௯; ௯0: ௯-௮; "கதமெனமண்ட, வள்ளற் படுத் துள்ளுபு தரப்ப,கல்லெருது முயலுமள றுபோகு விழுமத்துச்,சாகாட் டாளர் கம்பலை" (பதிற். ௨எ:௧௨-௪); "அள்ளற் றங்கிய பகடுறு விழுமம், களளார் களமர் பெயர்க்கு மார்ப்பே" (மதுரை. ௨௫௯ - ௬0); "மடுத்தவா யெல்லாம் பகடன்னான்" (குறள். ௬௨௪); "நிரம்பாத நீரியாற் றிடுமணலு ளாழ்ந்து, பெரும்பார வாடவர்போற் பெய் பண்டந் தாங்கி" (சீவக. ௨எ௮௪); "குன்றுதுறை யிடுமணற் கோடுற வழுந்திய, பண்டிதழை யேற்றும் பகட்டினைபோல" பெருங். ௧. ௵ : ௫௨ - ௪.

௧௧ - உ. புறநா. ௩௫ : ௧௯ - ௨௧ ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க; தலைவன்புகழ் குடையடுத்துவந்ததற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. ௩. ௩௧ - ந.

(பி - ம்.)—1 'செய்ம்மீன்' 2 'ஓர்க்குமால்'

## ௧௨௮ புறநானூறு மூலமும் உரையும்.

லீரான் விளைத்த உப்பை முகந்துகொண்டு மலைநாட்டைநோக்கிச்செல்கின்ற ஆரையுடைய சகடையினது குழிப்பாய்தலைத்தீர்த்துச் செலுத்தும் வலியையுடைய பாரம்பொறுக்கும் பகட்டையொக்கும் என்கோன், வென்றியாகமுழங்கும் முரசினையும் தப்பாத வாளினையுமுடைய வளவனது வெயிலைமறைத்தற் கெடுத்த உட்குப்பொருந்திய தலைமையையுடைய் நாமம்பொருந்திய வெண் கொற்றக்குடையை ஒக்குமெனக்கருதி.—எ - று.

செம்மீனிமைக்கும் விசும்பினுச்சியின்றமதியை உவமித்தமையின்,

இது தலைப்பெயலுவமையாயின்றது.

கானல் - கடற்கரை.

வெயிலென்றது, பகைவரானும் கொடியோரானும்வரும் வெம்மையை.

இராச்சியபாரத்தைப்பொறுத்துகடத்துமாறுநோக்கி நோன்பகட்டோடு உவமித்தமையின், * இறப்ப இழிந்த ஆனந்தவுவமை அன்றுயிற்று.

உவாமதியைக்கண்டு வளவன்வெண்குடையையொக்குமென விறலியும் யானும் பலகால் தொழுதேமல்லேமோவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

வளவன்வெண்குடையைக்காட்டித் தொழுமினென்றார்க்கு †நிறைமதி தொழப்படாதாயினும், குடையோடு ஒப்புமைகண்டு தொழுதயாம் குடை தன்னைக்கண்டால் தொழுதல் சொல்லவேண்டுமோவென அதன்சிறப்புக் கூறியவாறு.

செம்மீன் - திருவாதிரையுமாம்.

(கo)

---

* இறப்ப இழிந்த ஆனந்தவுவமையாவது, உயர்ந்தபொருளுக்குத் தாழ்ந்தபொருளையுவமம் கூறுவது; "இறப்ப விழிநதது பிறப்ப வுயர்நதது, மறத்தகை வழீஇய வானந்த வுவமை" என்பது விதி.

† நிறைமதி தொழப்படாதென்றது, பிறை தொழப்படுமென்பது கருதி; இதனை, புறநா. க : கூ - கo ஆம் அடிக்குறிப்பாலும், "வளையுடைத் தனைய தாகிப் பலர்தொழச், செவ்வாய் வானத் தையெனத் தோன்றி, யின்னம் பிறந்தன்று பிறையே" (குறுந். நoஎ) என்பதனாலும் அறிக.

(௬௧.) கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்
சிறுமா ணெய்த லாம்பலொடு கட்டு
மலங்குமிளிர் செறுவிற் றளம்புதடிந் திட்ட
பழன வாளைப் பருஉக்கட் டுணியல்

௧. தழை - ஒருவகையுடை ; அஃது ஆம்பல் முதலிய மலர்களினாலேனும், தளிர்களினாலேனும் விரவிய இவ்விரண்டினாலேனும் ஆக்கப்படுவது; இதனை, புறநானூறு, ௧௧௬: ௧ - ௨; ௨௪௮: ௧ - ௨ ஆம் அடிகளாலும், "முடித்தகுல்லை யிலையுடை நறும்பூச், செங்கால் மராஅத்த வாலிணர் இடையிடுபு, சுரும்புணத்தொடுத்த பெருந்தண் மாத்தழை...உடீஇ" (முருகு. ௨0௧ - ௩) என்னும் அடிகளாலுமுணர்க.



புதுநெல் வெண்சோற்றுக் கண்ணுறை யாக
விலாப்புடை மருங்கு விசிப்ப மாந்தி
நீடுகதிர்க் கழனிச் சூடுதடு மாறும்
வன்கை வினைஞர் புன்றலைச் சிறாஅர்
தெங்குபடு வியன்பழ [1] முனையிற் றந்தையர்
குறைக்கண் ணெடும்போ ரேறி விசைத்தெழுந்து
செழுங்கோட் பெண்ணைப் பழந்தொட முயலும்
வைகல் யாணர் நன்னாட்டுப் பொருந
னெஃகுவிளங்கு தடக்கை யியறேர்ச் சென்னி

சிலைத்தா ரகல மலைக்குந ருளரெனிற்
கடு ருமறி குவர்தமக் குறுதி யாமவ
னெழுவுறழ் திணிதோள் வழுவின்று மலைந்தோர்
வாழக் கண்டன்று மிலமே தாழாது
திருந்தடி பொருந்த வல்லோர்
வருந்தக் காண்ட லதனினு மிலமே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

சோழன் 2இலவந்திகைப்பள்ளித்துஞ்சியநலங்கிள்ளி*சேட்சென்னி யைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன்மதுரைக்குமரனூர் பாடியது.

இ - ள்.—கொண்டையாகியமயிரையும் குளிர்ந்ததழையையுமுடைய நடைசியர் சிறிய மாட்சிமையுடையநெய்தலை ஆம்பலுடனேகளையும் மலங்கு தெழ்கின்ற செய்யின்கண்ணே தளம்புதுணித்திடப்பட்ட பொய்கையிடத்து

ரானையினது பரிய இடத்தையுடையதடியைப் புதியநெல்லினது வெள்ளிய சோற்றிற்கு மேலீடாகக்கொண்டு விலாப்புடைப்பக்கம் விம்மவுண்டு நெடிய கதிரையுடைய கழனியினிடத்துச் சூட்டை இடுமிடமறியாது தடுமாறும் வலிய கையையுடைய உழவர் புல்லியதலையையுடையசிறுவர் தெங்குதரும் பெரிய பழத்தைவெறுப்பின், தந்தையருடைய தலைகுவியாமல இடப்பட்ட நுறைந்த இடத்தையுடைய நெடியபோரின்கண்ணேயேறி உகைத்தெழுந்து வளவிய கோட்புக்க பனையினது பழத்தைத் தொடுதற்கு முயலும் நாடோ

---

எ. சூடு: புறநா. கரு: கக.

கச. புறநா. கo: கூ-கo; கூஎ: கஉ-ஆம் அடிக்குறிப்புக்களைப்பார்க்க; "திருவிற்றுன் மாரி கற்பான் றுவலைநாட் செய்வ தேபோ, லுருவிற்றாய்த் தளிக்குந் தேற லோங்குதார்" சீவக. உoஎo.

கஅ. புறநா. கo: ரு - கூ.

* 'சென்னி' எனத் தலைவன் பெயரில் ஒருபகுதி கஉ-ஆம்

அடியில் வந்துள்ளது.

(பி - ம்.)—1 'முனையின்' 2 'காலேகப்பள்ளி'

17



றம் புனவருவாயையுடைய நல்லநாட்டிற்கு வேந்தனாகிய வேல் விளங்கும்
பெரியகையினையும் இயற்றப்பட்ட தேரினையுமுடைய செழியனது இந்திர வில்போலும் மாலையையுடைய மார்போடும் மாறுபடுவோருளராயின், தாமறிகுவர் தமக்குற்றகாரியம்; யாங்கள், அவனுடைய கணையமரத்தோடு மாறுபடும் திணிந்ததோளைத் தப்பின்றாக மாறுபட்டோர் வாழக்கண்டதுமிலமே; விரைய அவனது திருந்திய அடியை அடையவல்லோர் வருந்தக்கண்டல அவ்வாழக்கண்டதனினுமிலம்.—எ - று.

தளம்பென்றது, சேறுகுத்தியை.

வழுவின்று மலைதலாவது, வெளிப்படநின்று மலைதல். (௬௧)

---

(௬௨.) வருதார் தாங்கி யமர்மிகல் யாவது
பொருதாண் டொழிந்த மைந்தர் புண்டொட்டுக்
குருதிச் செங்கைக் கூந்த நீட்டி
நிறங்கிளர் உருவிற் பேஎய்ப் பெண்டிர்
௫ எருத்தெழி யனந்தற் பறைச்சீர் தூங்கப்

பருந்தருந் துற்ற தானையொடு செருமுனிந்
தறத்தின் மண்டிய [1] மறப்போர் வேந்தர்
தாமாய்ந் தனரே குடைதுளங் கினவே
யுரைசால் சிறப்பின் முரைசொழிந் தனவே
பன்னூ றடுக்கிய வேறுபடு பைஞ்ஞில
மிடங்கெட வீண்டிய வியன்கட் பாசறைக்
களங்கொளற் குரியோ ரின்றித் தெறுவர
வுடன்வீழ்ந் தன்று லமரே பெண்டிரும்
பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்
மார்பகம் பொருந்தி யாங்கமைந் தனரே

௪-௫. "இடிககுரல் முரசினமு ழொழுந்தன ளாடி" (பெருங். ௧. ௩௭: ௨௪௬); "தானையா டும்டேய், பறைபெறரு லாடாதோ பாய்ந்து" புறத் திரட்டு.

௭. புறநா. ௬ : ௧ - ௬.

௧௦. பைஞ்ஞிலம் - தொகுதி; பஞ்ஞிலம் டஞ்ஞிலமெனவும் வழங்கும்; "கனைத்தலைப் பைஞ்ஞிலம் வருகவிந நிழலென", "உண்ணுப் பைஞ்ஞிலம பனித்துறை மண்ணி"; (பதிற். ௧௭, ௩௧); "வேறுபல் பெரும்படை" முல்லை. ௪௩.

௧௨. புறநா. ௫௩ : ௫ ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

௧௩ - ௫. "தயங்கிணர்க் கோதை தன்றுயர் பொறுஅண், மயங்கினள் கொல்லென மலாடி வருடித், தலைத்தா ணெடுமொழி தன்செவி கேளாள்,

(பி - ம்.)—1 'விறற்போர்', 'வயப்போர்'

*வாடாப் பூவி னிமையா நாட்டத்து*
*நாற்ற வுணவி னோரு மாற்ற*
*வரும்பெற லுலக நிறைய*
*விருந்துபெற் றனராற் பொலிகநும் புகழே**

*திணை - தும்பை ; துறை - தொகைநிலை.*

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன்வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போர்ப்புறத்துப்பொருதுவீழ்ந்தாரைக்கழாத்தலையார் பாடியது.

*இ - ள்.—வருகின்ற தூசிப்படையைத்தடுத்துப் போரின்கண் ஒருவர் ஒருவரை வெல்லேமெனமிகுதல் எவ்வவைமாவது ? பொருது அக்களத்தின்கட்பட்ட வீரரதுபுண்ணைத்தோண்டி அவ்வுதிரந்தோய்ந்த செய்யகையால் தமது மயிரைக்கோதி நிறமிக்க வடிவையுடைய பேய்மகளிர் மேன்மேலும் கொட்டுகின்ற மந்தமான ஓசையையுடைய பறையினது தாளத்தேயாடப் பருந்து ஊனைதின்னப் பொருந்திய படையானே போரின்கண்வெகுண்டு அறத்தான் அடர்த்துச்செய்த வலியபோரையுடைய அரசரிருவரும்பட்டார்; அவர்கொற்றக்குடையும் தளர்ந்தன; புகழமைந்த தலைமையையுடைய முரசு வீழ்ந்தன; பலராலும் அடுக்கப்பட்ட †பதினெண்பாடைமாக்களாகிய படைத்தொகுதி இடமில்லையாம்படி தொக்க அகன்ற இடத்தையுடைய பாடிவீட்டின்கட் போர்க்களம் தமதாக்கிக்கொள்ளுதற்கு உரியோரொருவரின்றிக் கண்டார்க்கு அச்சம்வர உடனேமடிந்தது, பூசல் ; அவர் பெண்டிரும், பச்சையிலைதின்னாராய்க் குளிர்ந்த நீரின்கண்மூழ்காராய் அவர் மார்பத்தைக் கூடி அக்களத்தின்கண்ணே உடன்கிடந்தார் ; வாடாத கற்பகத்தின் தாரினையும் இமையாதகண்ணினையும் நாற்றமாகிய உணவையுமுடைய தேவர்களும் மிகப்பெறுதற்கரிய உலகநிரம்பவிருந்துபெற்றார் ; அதனாற்பொலிக நுங்கள் புகழ்.—எ . று.*

. .

அளந்தல் - பறைகொட்டுவார்கைபுண்படுதலின், மந்தமாக ஒலித்தல்.

---

கலக்கங் கொள்ளாள் கடுந்துயர் பெருஅள், மன்னவன் செலவுழிச் செல்க யானெனத், தன்னுயிர் கொண்டவ னுயிர்தே டினள்போற், பெருங்கோப் பெண்டு மொருங்குடன் மாய்ந்தனள்" (சிலப். உரு: அ0 - அசு); "காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி, யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா, தின்னுயி ரீவர்...பத்தினிப் பெண்டிர்" (மணி. உ: சஉ-அ); "காடினர் காடியே கனைவருங் கொம்பனார், வாடினார் கணவர்தம் மார்புறத் தழுவியே, வீடினார்" கம்ப. அக்ககுமாரன். சஅ.

கசு-எ. "வாடாப் பூவி னிமையா நாட்டத்து, நாற்ற வுணவி னுருகெழு பெரியோர்" மதுரை, சருள - அ.

* மு. தும்பைத்திணையுள், வாள்வாய்த்து இருபெருவேந்தர் தாமும் சுற்றமும் ஒருவரும் ஒழியாத்தொகைநிலையென்னுந்துறைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. கஎ - இளம்; ஷை ஷை ஷை. கஎ - ந.

† "முட்டிலா மூவறு பாடை மாக்கள்" சீவக. கூரு.

## கூஉ புறநானூறு மூலமும் உரையும்.

அறத்தின்மண்டுதலாவது, படைபட்டபின்பெயராது சென்று இருவேந்தரும் பொருதல்.

பட்ட இருவேந்தரும் அக்களத்துக் கிடக்கின்றபடியையக் கண்டு தம் மனத்தோடு நொந்து அவரைநோக்கிக் கூறுகின்றாராதலான், நும்புகழெனக் கூறினர்.

வேந்தர் மாய்ந்தனர் ; குடை துளங்கின ; முரசு ஒழிந்தன ;

அமர் உடன்வீழ்ந்தது ; பெண்டிரும், மார்பகம்பொருந்தி அமைந்தனர் ; நாற்ற
உணவினோரும், விருந்துபெற்றனர் ; இவ்வாறானபின்பும், யாம் அமரினை மேற்கொண்டு பொருது வெலவேமென்று தாந்தாம் நினைந்த நினைவு எவ்வண்ணமாவதென்று தன்னெஞ்சொடு கூறிப் பின்
பொலிகதும்புகழேயென அவ்வரசர் இடந்தவாறு கண்டு கூறியவாறு.
மறத்தின் மண்டியவென்றுபாடமோதுவாருமுளர்.
வருதார்தாங்கி அமர்மிகல் யாவதென்பதற்கு இவர்கள் செய்தபடி கண்டு.........இனிச் சிலர் பொருதுவேறல் எங்கேயுளதென வியந்து கூறியதாக உரைப்பாருமுளர்.
(கூ௨)

---

(கூ௩.) எனைப்பல் யானையு மம்பொடு துளங்கி
விளைக்கும் வினையின்றிப் படையொழிந் தனவே
விறற்புகழ் மாண்ட புரவி யெல்லா
மறத்தகை மைந்தரொ டாண்டுப்பட் டனவே
௫ தேர்தர வந்த சான்றோ ரெல்லாந்
தோல்கண் மறைப்ப வொருங்குமாய்ந் தனரே
விசித்துவினை மாண்ட மயிர்க்கண் முரசம்
பொறுக்குந ரின்மையி னிருந்துவிளிந் தனவே
சாந்தமை மார்பி னெடுவேல் பாய்ந்தென
௧0 வேந்தரும் பொருதுகளத் தொழிந்தன ரினியே
யென்னா வதுகொ றுனே கழனி

———— ' ௫. "நோன்புரித் தடக்கைச் சான்றோர" பதிற். கச:
கஉ.

எ. புறநா. ௫0: க-௫; உஅஅ: க-ச; "ஓடா நல்லேற் றுரிவை தைஇய, பாடுகொண் முரசம்" (அகநா. ௩௩ ச);"கொலலேற்றுப் பைந்தோல சீவாது போர்த்த, மாக்கண் முரசம்" (மதுரை. எ௩உ - ௩); "ஏற்றுரிபி னியிழ் முரசம், கூற்றுட்க வெழீஇச் சிலப்ப" (யா-வி. மேற். "தாழிரும்பிணர்"); "மயிர்க்கண் முரசமொடு வான்பலி யூட்டி" (சிலப். ௫: அஅ); "புனைமருப் பழுந்தக் குத்திப் புலியொடு பொருது வென்ற, கனைகுர லுருமுச் சீற்றக் கதழ் விடை யுரிவை போர்த்த, துனைகுரன் முரசம்" (சீவக. உஅகக); "பசும் பொற் பலவார் விசித்துப் பிணியுறீஇ...ஏற்றுரி போர்த்த......முரசம்" பெருங். உ. உ: உசு - க.

## புறநானூறு மூலமும் உரையும்.

கக௩.

யாம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
பாசவன் முக்கித் தண்புனற் பாயும்
யாண ரறாஅ வைப்பிற்
கடு காமர் கிடக்கையவ ரகன்றலை நாடே.

திணையும் துறையும் அவை.

அவனை அக்களத்திற் பாணர் பாடியது.

இ - ள்.—எத்துணையும் பலவாகிய யானையும், அம்பாற்கலங்கி இனி மேலுண்டாக்கும் போரின்றிப படையிடத்துப் பட்டன ; வெற்றிப்புகழ் மாட்சிமைப்பட்ட குதிரையெல்லாம், ஆண்மைக்கேற்ற வீரப்பாட்டுக்கூற்

றையுடைய மேலாட்களுடனே அக்களத்தேபட்டன ; தேர் கொடுவரவந்த போரிற்கு அமைந்தோரெல்லாம் தாம்பிடித்த பரிசை தம்கண் மறைப்பச் சேரப்பட்டனர் ; வாரால் விசிக்கப்பட்டுத் தொழில் மாட்சிமைப்பட்ட மயிர் சீவாது போர்க்கப்பட்ட கண்ணையுடைய முரசமெல்லாம்,
ரிப்பார்படுதலான் இருந்துகெட்டன ; சாந்தமைந்த மார்பின்கண்ணே
நெடியவேல் பாய்ந்தனவாக அரசரும் பொருது
அக்களத்தின்கண்ணே மடிந்தனர் ; இனி,
என்னவருத்தமுறுவதோதான்? கழனிக்கண் ஆம்பற்றண்டாற் செய்த வளை யணிந்த கையினையுடைய மகளிர் செவ்வி அவலைமுக்கிக் குளிர்ந்த புனற்
கண்ணே பாயும் புதுவருவாயறாத ஊர்களையுடைய அழகிய
இடையையுடைய அவரது அகன்றவிடத்தையுடையநாடு.—எ - று.

அன்னோவென் றுவதுகொலென்று பாடமோதுவாருமுளர்.

நாடுதான் என்றுவதுகொலெனக்கூட்டுக.

நாடென்றுமொருமைநோக்கி, என்றுவதுகொலென ஒருமையாற் கூறப்பட்டது. (௬௨)

---

௧௨. மு. புறநா. ௬௨ : ௫.

௧௩. முக்குதல - உண்ணுதல ; 'முத்தைக், கொக்குமுக் கிக்கக்கி விக் குமச சோலைக் குறுங்குடியே' (தனிப்பாடல்); "கங்க முக்கின சிறுமீ னெல் லாம்" திருவிளை. இந்திரன். ௫௬.

௧௪. "அறாஅ யாணர் அகன்றலைப் பேரூர்" பொருந. ௪.

௧௫. புறநா. ௬௮ : ௨௦.

(௬௪.) நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கிச்
செல்லா மோதில் சில்வளை விறலி

க. புறநா. ௧௫௨: ௧௪-௬; "குரலபுணர் நல்யாழ முழவோ டொன்றி, நுண்ணி ராகுளி யிரட்ட" மதுரை. ௬௦௰-௬.
உ. "செல்லா யோதில் சில்வளை விறலி", "செல்லா மோதில் சில்வளை விறலி" பதிற். ௪௦: உக; ௫௭: ௬.

## ௧௬௪ புறநானூறு மூலமும் உரையும்.

களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
1 விசும்பா டெருவை பசுந்தடி தடுப்பப்
௫ பகைப்புல மரீஇய தகைப்பெருஞ் சிறப்பிற்
குடுமிக் கோமாற் கண்டு
நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே.*

திணை - பாடாண்டிணை; துறை - விறலியாற்றுப்படை.
† பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை ‡ நெட்டிமையார் பாடியது.

இ - ள்.—நல்லயாழையும் சிறுபறையையும் ஒருதலைமாக்கிணைவுடனே கட்டிபபோலமைலேமோ? சொலலுவாயாக, சிலவளையையுடையவிறலி, யானையணிபொருத இடமகன்ற பாசறைக்கண் ஆகாயத்தின்கண்ணே

பறக்கும் எருவையைப் பசிய ஊன்றடி தகைப்ப மாற்றாதேயதனைக் கண்ணே மருவிய அழகிய பெரிய செல்வத்தினையுடைய முதுகுடுமியாகிய கோமானைக கண்டு மிக்கநீரான் அடப்பட்ட புற்கையைக் கைவிடவேருவதற்கு.—எ-று.

எருவை = தலைவெளுத்து உடல சிவந்திருக்கும் பருந்து; கழுகெனினு மமையும்.

விறலி, குடுமிக்கோமாற்கண்டு புற்கையை நீத்தனம்வாற்குச செலலா மோவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

தகைப்பருஞ் சிறப்பினென்பதூஉம் பாடம்.

(கூச)

---

௩. நிரைபுநிரை ஆசிரியத்துள் வந்ததற்கு மேற்கோள்; தொல். செய். சூ. கச - ந.

எ. புறநா. அச: க; "தெண்ணீரடுபுற்கை" குறள். கoகூரு.

* ம. பரிசில்பெறப்போகலவேணடுமென்னுங் குறிப்பிறகு மேற்கோள; தொல். புறத்திணை. சூ. ௩o - இளம்; ௫௫ ௫௯ ௬௨. ௩கூ - ந.

† பாட்டுடைத்தலைவன் பெயரின் ஒரு பகுதி கூ - ஆம் அடியில வந்துள்ளது.

‡ இவரது பெயர்க்காரணததை முதலடி அறிவிக்கின்றது.

(பி - ம்.)—1 'விசும்போடெருவை'

---

(கூரு.) மண்முழா மறப்பப் பண்யாழ் மறப்ப
விருங்கட் குழிசி கவிழ்ந்திழுது மறப்பச்
சுரும்பார் தேறல் சுற்ற மறப்ப
வுழவ ரோதை மறப்ப விழவு

# புறநானூறு மூலமும் உரையும்.

கடுரு

மகலு ளாங்கட் சீறூர் மறப்ப
வுவவுத்தலை வந்த பெருநா ளமையத்
திருசுடர் தம்மு ணோக்கி யொருசுடர்
புன்கண் மாலை மலைமறைந் தாங்குத்
தன்போல் வேந்தன் முன்புகுறித் தெறிந்த
புறப்புண் ணாணி மறத்தகை மன்னன்
வாள்வடக் கிருந்தன னீங்கு
நாள்போற் கழியல ஞாயிற்றுப் பகலே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.

சேரமான் 1 பெருஞ்சேரலாதன் சோழன்கரிகாற் பெருவளத்தா னோடு பொருது புறப்புண்ணாணி வடக்கிருந்தானைக் கழாத்தலையார் பாடி

யது.

இ-ள்.—முழா மார்ச்சனையிடுதலொழிய, யாழ் பண்ணையொழிய, பெரிய இடத்தையுடைய பானை பாலின்மையிற் கவிழ்ந்து நெய்கடைதலையொழிய, தம்முடைய கிளை உண்டார்ந்த மதுவையுண்ணுதொழிய, உழவர் தொழில்செய்யுமோசையையொழிய, அகன்ற தெருவினையுடைய சீறூர். விழாவினையொழிய, உவாவந்துகூடிய பெரியநாளாகிய பொழுதின்கண் ஞாயிறும் திங்களுமாகிய இருசுடரும் தம்முள் எதிர்நின்றுபார்த்து அவற்றுள் ஒரு சுடர் புல்லியமாலைப்பொழுதின்கண் மலையுள்ளேயொளித்தாற்போலத் தன்னையொக்கும்வேந்தன் முனையாகக் கருதியெறிந்த புறத்துற்ற புண்ணுக்கு நாணி மறக்கூறுபாட்டையுடைய வேந்தன் வாளோடு வடக்கிருந்தான்; ஆத

---

அ. மலைமறைதல்: "மலைமறைந் தொளித்தி" புறநா. அ: அ.

கூ - கக. புறநா. கூகூ: அ; மேலுலகத்தை அடைய விரும்பினோர் இவ்வுலக நுகர்ச்சியைத் துறந்து விரதத்தால் உடலை மெலிவித்து யோகப் பயிற்சியால் உயிரை நீத்தற்குத் தாம் உறைந்த இடத்தை விட்டுப் புண்ணிய திசையாகிய வடதிசையிற் சென்று தங்குதலும், மீளாமல் நியமத்துடன் வடதிசையிற் செல்லுதலுமரபு; அங்ஙனஞ் செல்லுதல் உத்தரகமனமென்றும், மகாப்பிரத்தானமென்றும் கூறப்படும்; (புறநா. உகச, உகசு, உகஅ; சிறுபஞ்ச. எஉ) கருத்து: "கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப், பொருதுபுண் ணாணிய சேரலாதன், அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென, வின்னா வின்னுரை கேட்ட சான்றோர், அரும்பெற லுலகத் தவனொடு செலீஇயர், பெரும்பிறி தாகியாங்கு" (அகநா. ருரு); "சிறக்கவல் விரும்பைச் செம்பொனும் வனைந் நிகழ்த்திய விரதமே நிகர்ப்பப், பிறக்கமும் வனமு மொழித்தவ னமைத்த பெரும்பதிக் குவமையும் பெருமல், மறக்கடுங் களிற்றுக் குபேரன்வா ழளகை வடக்கிருந்தது" (வில்லி-பாரதம், இந்திரப். உரு); "வானவன்றென் மாறையில்வாழ், நின்றோகைக் கற்பி னிலைமையென் றெதிர் நின்று வென்னிட், டன்றே வடக்கிருந் தாண்மடப் பாவை யருந்ததியே" (தஞ்சை. கூஎச); போரில் தோல்வியுற்றோர் வடபாற்சென்றிருத்தல் மர பென்றுங் கூறுவர்.

(பி - ம்.)— 1 'பெருந்தோளாதன்'

லால், இவ்விடத்து யாம் அவனையன்றித் தனித்து உயிர்வாழும் ஞாயிற்றை யுடையபகல் எமக்கு இனி முன்புகழிந்த நாள்போலக் கழியா.—எ - று.

'மண்முழா மறப்ப' என்பதுமுதலாகிய செயவெனெச்சங்களெல்லாம், வாள்வடக்கிருந்தனனென்னும் வினையோடுமுடிந்தன.

எறிந்தபுண் - எறிதல் ஏதுவாக உற்றபுண்.

'முன்புகுறித் தெறிந்த புறப்புண்ணாணி' என்றது, மார்பினைத்துருவினபுண்ணும் புறப்புண்ணாதலையொக்குமென நாணியென்றதாகக் கொள்க. (சுரு)

---

(சுசு.) நளியிரு முந்நீர் நாவா யோட்டி
வளிதொழி லாண்ட வுரவோன் மருக
களியியல் யானைக் கரிகால் வளவ
சென்றமர்க் கடந்தநின் னாற்ற றோன்ற
வென்றோய் நின்னினு நல்ல னன்றே
கலிகொள் யாணர் 1 வெண்ணிப் பறந்தலை
மிகப்புக ழுலக மெய்திப்
புறப்புண் ணாணி வடக்கிருந் தோனே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

*சோழன்கரிகாற்பெருவளத்தானை 2 வெண்ணிக்குயத்தியார் பாடியது.

இ - ள்.—நீர்செறிந்த பெரியகடலின்கண்ணே மரக்கலத்தையோட்டிப் போர்செய்தற்குக் † காற்றி எதிர் நாவாய்ஓடாதாக ஆண்டு வளிச்செல்வினையழைத்து ஏவல்கொண்ட வலியோன்மரபிலுள்ளானே, மதம்பொருந

க. "களியிருமுந்நீர்" மணி. கஉ : ஈஉ.

க - உ. முற்காலத்திற் கொண்டமை, "வாதராசனை சோழனொருவன் கடலிற் காற்றை ஏவல் வலிந்து பணி கொண்ட வவனும்" (கலிங்க. இராச. கக) என்பதனுலும் விளங்குகின்றது.

ச. புறநா. உசஉ : ச.

ரு - அ. அகநா. ருரு : கO - கரு; "காய்சின மொய்ம்பிற் பெரும் பெயர்க் கரிகா, லார்கலி நறவின் வெண்ணி வாயிற், சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்......வேந்தர்சாய மொய்வலி யறுத்த ஞான்றை" (ஷை, உசசு: அ - கந); "இரும்பனம் போந்தைத் தோடுங் கருஞ்சினை, யரவாய் வேம்பி னங்குழைத் தெரியலும், மோங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த, விருபெரு வேந்தரு மொருகளத் தவிய, வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாட், கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்" பொருந. கசந - அ.

* பாட்டுடைத்தலைவன் பெயர் ௯ - ஆம் அடியில் வந்துள்ளது.

† "வாயுவினை நோக்கியுள மாண்டவினை நாவாய்" குண்டலகேசி.

(பி - ம்.)—1 'வெண்ணிற்பறந்தலை' 2 'வெண்ணிக்குயத்தியார்'

ய யானையையுடைய கரிகால்வளவ, மேற்சென்று போரை எதிர்நின்று

தாந்த நினது வலிதோற்ற வென்றவனே, நின்னினும் நல்லனல்லனே ? ழைத்தலைக்கொண்ட புதுவருவாயையுடைய வெண்ணியென்னும் ஊர்ப் றத்துப் போர்க்களத்தின்கண் மிகப் புகழை உலகத்துப்பொருந்திப் புறப் ண்ணிற்குநாணி வடக்கிருந்தோன், அவ்வாறிருத்தலான்.—எ - று.

புகழெய்தியென்றது, புறப்புண்ணிற்கு நாணுதலன்னே.

ஓட்டியென்பதனை ஓட்டவெனத்திரிக்க.

எய்தி, எய்தவெனத்திரிப்பினுமமையும் ; எய்தவென்றுபாடமோதுவாருமுளர்.

உரவோன்மருக, கரிகாலவளவ, வென்றோய், வெண்ணிப்பறந்தலைப் ட்ட புறப்புண்ணுணி உலகத்துப் புகழ்மிகவெய்தி வடக்கிருந்தோன், நின் ிறு நல்லனன்றேயெனக்கூட்டுக.

இது கரிகால்வளவன் வென்றிகூறியதாகலின் அரசவாகையாயிற்று (கசு)

---

(கள.) அன்னச் சேவ லன்னச் சேவ
லாடுகொள் வென்றி யடுபோ ரண்ண
லுடுதலை யளிக்கு மொண்முகம் போலக்
கோடுகூடு மதிய முகிழ்நிலா விளங்கு

மையன் மாலையாங் கையறு பிளையக்
குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி
வடமலைப் பெயர்குவை யாயி னிடையது
சோழ நன்னாட்டுப் படினே கோழி
யுயர்நிலை மாடத்துக் குறும்பறை யசைஇ
வாயில் விடாது கோயில் புக்கெம்
பெருங்கோக் கிள்ளி கேட்க விரும்பிசி
ராந்தை யடியுறை யெனினே மாண்டநி

---

க. தொல். களவி. சூ. சஅ - பேர். மேற்.

---

அ - கூ. புறநா. கூகூ: கஉ.

க0. புறநா. கூகூ: கஎ.

கக. பிசிர் - பாண்டிநாட்டிலுள்ளதோரூர்; புறநா. உகரு: சு - எ.

கஉ. அடியுறை - அடியில் வாழ்வேன்; புறநா. கககூஅ: உஅ - உரை; "காவலற் குறுகி, யடியுறை யருண்மொழி யாணபணிக தரைப்ப" பெருங். க. சஎ: எ - அ.

கக - ச. நற்செய்தி கேட்டோர் சொன்னவர்களுக்குத் தாமணிந்த அணிகலம் நல்குதலை, "அணிகலம் பரிந்து நங்கை யணிமரு ளுருவத் தந்த, மணிமருண் முறுவற் செவ்வாய் மாதவசேனைக் கீந்து" (சூளா. கல்யாண.

னின்புறு பேடை யணியத்த

னன்புறு நன்கல நல்குவ னினக்கே.

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.

† கோப்பெருஞ்சோழனைப் [1] பிசிராந்தையார் பாடியது.

இ-ள்.—அன்னச்சேவலே, அன்னச்சேவலே, கொல்லுதலைப்பொருந்திய வென்றியையுடைய அடுபோரண்ணல் தன்னுடைத் தலையளிசெய்யும் விளங்கிய முகம்போல இரண்டுபக்கும் வந்து பொருந்தியமதியம் அரும்புகிலா விளக்கும் தமியோராயினர்க்கு மயக்கத்தைச்செய்யும் மாலைப்பொழுதின் கண் யாம்செயலற்று வருந்தக் குமரியாற்றினது பெரியதுறைக்கண்ணே அயிரையைமேய்ந்து வடதிசைக்கண் இமயமலைக்கண்ணே போகின்றாயாயின், இவ்விரண்டிற்குமிடையதாகிய நல்ல சோழநாட்டின்கட் சென்றபொருந்தின், உறையூரின்கண் உயர்ந்த நிலையையுடைய மாடத்தின்கண்ணே நினது குறும்பறையோடு தங்கி வாயில்காவலர்க்கு உணர்த்திவிடாதே தடையின்றிக் கோயிற்கண்ணே புக்கு எம்முடைய பெருங்கோவாகிய கிள்ளிகேட்பப் பெரியபிசிரென்னுமூரின்கண் ஆந்தையுடைய அடிக்கீழெனறு சொல்லின், மாட்சிமையையுடைய நினது இன்புறும் பேடைபூணத் தனது விருப்பமுறும் நல்ல அணிகலத்தையளிப்பன், நினக்கு.—எ - று.

'அடுகொள்வென்றி' என்பதற்கு வென்றியுண் மிக்க வென்றியெனினுமமையும்.

குறும்பறையென்றது, பேடையை.

வாயில்விடாதென்றதற்கு வாயில்காவலர் விடவேண்டாதெனினுமமையும்.

---

கஅ௨); "ஆயபே ரன்பெனு மளக்க ரார்த்தெழத், தேய்விலா முகமதி விளங்கித் தேசுறத், தூயவ ளுவகைபோய் மிகச்சுடர்க்கலா, நாயக மனைய தோர் மாலை நல்கினன்" கம்ப. மந்தரை. ருஉ.

* மு. "காராய் காராய்" என்னும் சத்திமுற்றப்புலவர் பாடல் ஞாபகத்திற்கு வருகின்றது ; "அன்னச் சேவ லன்னச் சேவலென்னும் பாட்டினுள் இரும்பிசிராந்தையடியுறையெனினென்பது......குறிப்புமொழி" தொல். எச்ச. சூ. உரு - பேர்.

† கக, கஉ - ஆம் அடிகளில தலைவன் பெயரும் புலவர்பெயரும் அமைந்திருத்தல்காண்க ; "புணர்ச்சி : ஒரு தேயத்தாராதல்; பழகுதல: பலகாற்கண்டும் சொலலாடியும் மருவுதல; இவ்விரண்டுமின்றிக் கோப்பெருஞ் சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும்போல உணர்ச்சியொப்பின் அதுவே உடனுயிர் நீக்குமுரிமைத்தாய நட்பினைப் பயக்குமென்பதாம்" (குறள். எஅரு - பரிமேல்) ; "கோப்பெருஞ்சோழன் துறந்துழிப் பிசிராந்தையாரும் பொத்தியாரும் போல்வார் துறந்தாரென்றுகூறும் புறச்செய்யுட்கள் உதாரணம்" என்னும் நச்சினார்க்கினியர் வாக்கியம் ஈண்டறியத்தக்கது; தொல். கற்பியல், சூ. ருஉ.

(பி - ம்.)—1 'இரும்பிசிராந்தையார்'



முகிழ்நிலாவினம்
முகிழ்நிலாவென்பது, ஒருசொன்னடைத்தாய் மதியம் முகிழ்க்கும் நிலாவெனினுமமையும்.
மன முதல்வினைகொண்டது;
ஆந்தையடியுறையென்பதற்கு ஆந்தை நின் அடிக்கணுறைவானென்
ரப்பாருமுளர்.
பேடையணிய கலம் கல்குவனென்பதனற்பயன்: மறவாதுபோதல்
ண்டுமென்னும் நினைவாயிற்று.
(௬எ)

---

அ.) உடம்புரித் தன்ன வென்பெழு மருங்கிற்
கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது
சில்செவித் தாகிய கேள்வி நொந்துநொந்
தீங்கெவன் செய்தியோ பாண பூண்சுமந்
தம்பகட் டெழிலிய செம்பொறி யாகத்து
மென்மையின் மகளிர்க்கு வணங்கி வன்மையி
னாடவர்ப் பிணிக்கும் பீடுகெழு நெடுந்தகை
புனிறுதீர் குழவிக் கிலிற்றுமுலை போலச்
சுரந்த காவிரி மரங்கொன் மலிநீர்
மன்பதை புரக்கு நன்னாட்டுப் பொருந
னுட்பகை யொருதிறம் பட்டெனப் புட்பகைக்
கேவா னாகலிற் சாவேம் யாமென
நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்பத்

ந. "புலவுவாயப்பாண" (பெரும்பாண். உஉ) என்பதற்கு, "கற்ற
லவியை வெறுத்துக் கூறுகின்ற வாயினையுடைய பாணனே" என்று பொ
ருள் கூறி இவ்வடியையே மேற்கோளாகக் காட்டினர் நச்சினார்க்கினியர்.
ரு. மார்பில் மூன்று வரிகள் கிடத்தல் ஆடவர்க்கு உத்தம இலக்
கணம்; "மார்பிற், செம்பொறி வாங்கிய மொய்ம்பு". (முருகு. கoச - ரு);
"பொறிகுலாய்க் கிடந்த மார்பிற் புண்ணியன்" (சீவக. களoரு);"செவ்வரை
யாகத்தான்", சீகாளத்தி. நக்கீர. ருக. '1 7 ரு௭ . கூ ௯௯ கூ; ரு ?
ள - எ. புறநா. ருரு: கஉ - ச.
அ. 'புனிறு' என்னும் உரிச்சொல் ஈன்றணிமையாகிய குறிப்புப்
பொருளை யுணர்த்தியதற்கு மேற்கோள் ; தொல். உரி. ரு. எஎ - ந.
அ - கூ. "மணத்தினைக்க நீருறு மைந்தர்கள் வாய்வைத், துணைச்சுரக்கும்
தாய்முலை யொண்பால" (திருவள். ந க); "சரயு வென்பது தாய்முலை யன்ன
திப், வுரவுநீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம்" (கம்ப. ஆற்று. கஉ); "பிள்ளை
மைதவரப் பெருகுபால் சொரிமுலைத் தாய்போன், மன்னர் வேனிலின் மணற்
திடர் பிசைந்துகை வருட, வெள்ள நீரிரு மருங்குகால் வழிமிதந் தேறிப்,
... ...வி" பெரிய. திருக்குறிப்ப. உஉ.

பள்ளநீள்வயற் பருமடை யுடைப்பது பாலை ...

கக-ங. "ஏகும்மள வையின் வந்தன வலமும்மயி லிடமும், காகம்முத லியமுத்திய தடைசெய்வன கண்டா, ஞகம்மன னிடையிக்குள திடைபூநென



தணிபறை யறையு மணிகொ டேர்வழிக்
கடு கடுங்கட் பருகுநர் நடுங்குகை யுகுத்த
நறுஞ்சே றாடிய வறுந்தலை யானை
நெடுநகர் வரைப்பிற் படுமுழா வோர்க்கு
முறந்தை யோனே குருசில்
பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே.

திணை - அது; துறை - பாணாற்றுப்படை.

சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார் பாடியது.

இ - ள்.—உடும்புரித்தாற்போன்ற எலும்பெழுந்த விலாப்புடையை யுடைய சுற்றத்து மிக்கபசியைத் தீர்ப்பாரைக்காணுதே கேட்டார்பலரும் அறிதற்கரிதாய் அறிவார் சிலராதலின் சிலசெவிக்கண்ணதாகியயாழை இப்பாண் சாதியது உணவிற்கு முதலாகப்பெற்ற பரிசு என்னென்றுவெறுத்து இங்கே என்செய்கின்றுயோ பாண, பூணேத்தாங்கி அழகிய பெருமையையுடைய எழில்பெற்ற செம்பொறிபொருந்திய மார்பினையுடைய மென்மையான் மகளிர்க்குத்தாழ்ந்து வன்மையான் வீரரை அகப்படுக்கும் பெருமைபொருந்திய நெடுந்தகை, ஈன்றணிமைபொருந்தி அதுநீங்காத குழவிக்குச் சுரக்குமுலை போல நீர்மிக்க காவிரியினது கரைமரத்தைச்சாய்க்கும் மிக்கவெள்ளம் உல

கந்து உயிரப்பன்மையைப் பாதுகாக்கும் நல்ல சோழநாட்டையுடைய வேந்தன்; உட்பகை ஒருகூற்றிலேபட்டதென்னும்படி எம்மைப் புட்செய்யும்பகை விடத்து ஏவானாகலான் யாம் எம்மிற்பொருது மடியக்கடவேமென்று நீங்காத மறத்தையுடையோர் தம்முடைய பூரித்ததோள்களைத்தட்ட அவருடைய மேற்கோள் தணிதற்குக் காரணமாகிய பறையறைபும் அழகுபொருந்திய தேர்வழிக்கண் வெய்யகளிறுபருகுவார் தம் கடுங்கு கையான் உகுக்கப்பட்ட கறிய அச்சேற்றின்கண் ஆடிய பாகரோருதயானை கெடிய ககரிடத் தொலிக்கும் பறையினது ஓசையைச் செவிதாழ்த்துக்கேட்கும் உறையூரிடத்தான்; அவ்விறைவன், நீ பிறன்வாயிலையினையாமை நினக்கு அளிப்பன், அவன்பாற்செல்லவையாயின்.—எ - று.

---

கடவான், மாகம்மணி யணிதேரொடு நிலைறுனெறி வருதான" (கம்ப. பரசுராம. ரு); புள்ளின் தீய நிமித்தத்தையும் மதித்திலரென மறவரின் வீரச்சிறப்புக்கூறினர்; "உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன், செறினுஞ்சீர் குன்றலிலர்" (எஎஅ) என்னும்குறளும், "போர்பெற்றறியாமையின், அது பெற்றுல் அரசன் றடுப்பினும் நிலாரெல்பதாம்; பிறரும்......'புட்பகைக், கேவானகலிற் சாவேம் யாமென, நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப' என்றக்கூறினர்" என்று வந்துள்ள பரிமேலழகர் வாக்கியங்களும் ஈண்டறியத்தக்கன.

கசு - எ. "காறுமயிர் மடப்பிடி தழீஇ வேறுநாட்டு, விழப்படர் மள்ளரின் முழவெடுத் துயரிக், களிறதர்ப் படுத்த" அகநா. கஅசு: ச - சு.

கக. புறநா. உஉ : ௩க - ௩ ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

செம்பொறியென்றது, *"வரையகன் மார்பிடை வரையு மூன்றுள" என்னும் இலக்கணத்தை; † திருமகளெனினுமமையும்.

உறகதையோனென்பது, வினைக்குறிப்புமுற்று.

பூண்சுமாதெழிலிய அம்பகட்டாகதது கெடுகதகையென இயையும்.

பாண, நீசெலின், கெடுகதகை, பொருகன், குருசில, உறகதையோன்; அவன் பிறன்கடைமறபபசலகுவன்; நீ ஈங்குளவல செயதியோவெனக்கூட்டுக.

'உட்பகைபொருதிறம்பட்டென' என்பதறகு உள்ளபகை சந்தாகிய ஒரு கூற்றிலே பட்டதாகவென்று உரைபபினுமமையும்.

பகட்டினுடைடதோற்றம் பொலிவுபெறவெனபாருமுளர்.

'பட்பகையேவரினுகலின்' எனறேதி, உளளபகை தம்மிற்கூடிற்றக, புள்

நிமித்தத்திற்குபபகைவன் ஏவானுகலிற் சாவேம்யாமென மறவர் தோள் புடைபபவென்று உரைப்பாருமுளர். புடபகையென்று இவனுககு ஒரு பெயர்.

(கூஅ)

* சீவகசிந்தாமணி, கசகூஉ.

† புறநா. எ: ரு.; "திருமறு மார்பநீ யருளல வேண்டும்", "பொன்னிற் றேன்றிய புனைமறு மார்ப" (பரி. க: ; : ௭); "இருநிலங் கடந்த திருமறு மார்பின், முகநீர் வண்ணன்" பெரும்பாண். உ௯ - ௦.

---

(கூகூ.) கையது கடனிறை யாழே மெய்யது

புரவல ரின்மையிற் பசியே யரையது
வேற்றிழை நுழைந்த [1] வேர்நனை சிதாஅ
ரோம்பி யுடுத்த வுயவற் பாண
[2] பூட்கை யில்லோன் யாக்கை போலப்
பெரும்புல் லென்ற விரும்பே [3] ரொக்கலை
வையக முழுதுடன் வளைஇப் பையென
வென்னை வினவுதி யாயின் மன்ன
ரடுகளி றுயவுங் கொடிகொள் பாசறைக்
குருதிப் பரப்பிற் கோட்டுமா தொலைச்சிப்
புலாக்களஞ் செய்த கலாஅத் தானையன்

---

௩. "வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த, துன்னற் சிதாஅர்" பொருந. ௮௦ - ௮௧.

௪. உயவல் : மணி. ௩ : ௬௦.

௧௧. "செற்றமுங் கலாமுஞ் செய்யா தகலுமின்" மணி. ௧ : ௬௩.

(பி - ம்.)—1 'வெயர்நனை' 2 'பூண்டகை' 3 'ஒக்கலொடு'

பிறங்குநிலை மாடத் துறந்தை போனே
பொருநர்க் 1 கோக்கிய வேல வொருநிலைப்
பகைப்புலம் படர்தலு முரியன் றகைத்தா
ரொள்ளெரி புரையு முருகெழு பசும்பூட்
கிள்ளி வளவற் படர்குவை யாயி
னெடுங்கடை நிற்றலு மிலையே கடும்பகற்
றேர்வீ சிருக்கை யார நோக்கி
நீயவற் கண்ட பின்றைப் பூவி
னாடும்வண் டிமிராத் தாமரை
சூடா யாத லதனினு மிலையே.

திணையும் துறையும் அவை.

சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர்கிழார் பாடியது.

இ - ள்.—பிணையலாகிய கைத்தது, இலைகம்பட முறுக்குமயிர் செம்பிய யாழ்; உடம்பின்கண்ணது அரத்தளிப்போரில்லாமையாற் பசி; அரையதாகிய வேற்றிழையூடுபோன வேர்ப்பானனைந்த கோமையை அற்றமறைத்து உடுத்த வருத்தத்தையுடைய டாணை, மடியால மேற்கோளில்லாதவனுடம்பையொப்பப் பெரிதாகப் புத்கெல்ற மிகப்பெரிய சுற்றத்தையுடையையாய் உலகமெல்லாவற்றையுஞ்சூழ்வந்து பின்னை என்னை மெலல வறுமைதீர்ப்பார் யாரெனக் கேட்கின்றாயாயின், கேளாய்; வேகதராத கொலையானை புனைபட்டுவருந்தும் கொடியெடுக்கப்பட்ட பாடிவீட்டின்கட் குருதிப்பரப்பின்கண்ணே யானையைக் கொன்று புலாலையுடைய போர்க்களத்தையுண்டாக்கிய போர்செய்யும் படையையுடையவன், உயர்ந்தநிலையையுடைத்தாகிய மாடத்தையுடைய

உறை

பூசிடத்திருந்தான் ; அவன், பொருவோர்பொருட்டெடுக்கப்பட்ட வேலை யுடையனும் ஒருபெற்றியேபகைவர் நாட்டின்கட் போதலுமுரியன்; சுற்றப் பட்ட மாலையையும் ஒள்ளிய எரியையொக்கும் நிறம்பொருந்திய பசும் பொன்னாற்செய்யப்பட்ட பூணினையுமுடைய இள்ளிவளவனிடத்தே செலகு வையாயின் அவனது நெடியவாயிலின்கட காலம் பார்த்திருத்தலும் உடை

---

கஉ. புறநா. கூஎ : அ - கூ; பட்டின. உஅடு; உறைபூரென்பதனை உறந்தையென முன்னோர் திரித்து வழங்கியதற்கு மேற்கோள்; தொல். செய். கு. அப - பேர்; ந.

கரு. "திருமா வளவன தெவ்வர்க், கோக்கிய வேலினும் வெய்ய" பட்டின. உகக- ௱௦௦.

கஅ. "நயந்தோர்க்குத், தேரீயும் வண்கையவ்ன்" கலி. சஉ.

உ௦. "ஆடுவண் டிமிரா வழலவிர் தாமரை" பெரும்பாண். சஅக.

கஅ - உக. புறநா. க௦ : கக - கஎ ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

* "அந்நகர் காவாச சுற்றுடைப் பூந்துகில்" மணி : ருக; ருக.

(பி - ம்.)—1 'ஏற்றியவில்லன்'

## புறநானூறு மூலமும் உரையும்.

கசரு.

யயல்லை; விளங்கிய பகற்பொழுதின்கண் அவன் பரிசிலர்க்குத் தேர்வழங்கி
இருக்குமிருப்பை நின்கண்ணாரப்பார்த்து நீ அவனைக் கண்டபின்பு பூவின்கண்
ம் வண்டு ஊதாத பொற்றாமரைப் பூவைச்சூடாயாதல அக்கொடுங்கடை
ற்றலினுமுடையையலலை ; அதனால், ஆண்டுசெல்வாயாக.—எ - று.

தகைதார் - தகைத்தாரெனநின்றது ; மேம்பட்ட தாருமாம்.

பாண, ஒக்கலையாய் வினாஇ வினவுதியாயின், தானையையுடையவன்,
தந்தையோன்; அவன் பாற்படர்குவையாயின், நின்கையது யாழாதலானும்,
மெய்யது பசியாதலானும், கொடுங்கடைநிற்றலுமிலை; நீஅவற்கண்டபின்
ரைத் தாமரை சூடாயாதல் அதனினுமிலையென மாறிக்கூட்டுக.

பூவாகிய தாமரையெனினுமமையும்; அதற்கு இ ், அல்வழிச்சாரியை.

'புகழ்த்தகையிலலோன்' என்பதூஉம் பாடம்.

ஒருநாளுள் முதலனபத்துநாழிகையும் அறத்தின்வழியொழுகிப் பின்
பத்துநாழிகையும இறைவினை முறைமைகேட்டுச் செய்த பொருளைப் பரிசிலர்க்
குக் கொடுத்து மகிழ்ந்திருத்தலால,கடும்பகற்தேர்வீசிருக்கையென்றார். (௬௧)

---

(௭௦.) தேஎந் தீந்தொடைச் சீறியாழ்ப் பாண
கயத்துவாழ் யாமை காழ்கோத் தன்ன
நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை
யினிய காண்கிவட் டணிகெனக் கூறி
௫ வினவ லானா முதுவா யிரவல
தைஇத் திங்கட் டண்கயம் போலக்
கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்

க. "நீகதே, னணிபெற வொழுகி யனை வ ரிழதுறழ காம்பி னலயாழ்".

சிறுவெள் ளாம்பன் ஞாங்க ரூதுங்
கைவள் ளீகைப் [1] பண்ணன் சிறுகுடிப்
பாதிரி கமழு மோதி யொண்ணுத
லின்னகை விறலியொடு மென்மெல வியலிச்
செல்வை யாயிற செல்வை யாகுவை
விறகொய் மாக்கள் பொன்பெற றன்னதோர்
தலைப்பா டன்றவ னீகை
நினைக்க வேண்டா வாழ்கவன் றாளே.

திணையும் துறையும் அவை.

அவனைக் [2] கோவூர்கிழார் பாடியது.

இ - ள்.—தேனைப்போல இனிய சாப்புத்தொடைபொருந்திய சிறிய யாழையுடையபாண, கயத்திலேகளைவாரும் யாமையை ஊராசத்தின்கண்ணே கோத்தாற்போன்ற நுண்ணிய கோலாற் பிணிக்கப்பட்ட தெளிந்த கண்ணையுடைய பெரியஉடுக்கையோசை இனிய கானக இவ்விடத்தே சிறிது

அ. புறநா. ௨௦: எ - ௯.

க. புறநா. ௫அ: ௧௦; 'சோறு' மருத்தெனப்படுதலை, மணி. ௧௧: ௬அ, ௧௨௭ - ஆம் அடிகளாலும் அறிக; "சோழ வளநாடு சோறுடைத்து" ஔவையார்.

௧௨. ஊதும் - நுகரும்; கலி. ௬௬; அகநா. ௧௩௨.

௧௩. பண்ணன் சிறுகுடி: "தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன், பண்ணன் சிறுகுடி", "பண்ணன் சிறுகுடி படாஅது, நீர்க் கான்யாறு", "கழற்காற் பண்ணன் காவிரி வடவயின், னிழற்கயம்" அகநா. ௫௪, ௧௧௭, ௧௨௭.

கச. "காணப் பாதிரிக கருநதகட டொளவீ, வேனி லதிரலொழி விரை

இக் காணவரச, சிவலை கூநதல" அகநா. உகக: க - ௬.

கரு. "நன்மா மயிலின் மொழிமெல வியலி" மதுரை. கூ0அ.

கசு. செலவு-செலவம்; "செலவாய செலவக தருவாய் நீயே", "செலவாய்த் திருவானாய் நீயே" தே.

கஎ. ஒயதல் - செலுத்துதல; புறநா. ககசு : அ; பதிற். எ௬, அஎ.

கஅ. தாள்வாழ்க வெனறல மரபு; "தாதன்றாள்வாழக" திருவாசகம். புறநா. ௪0க : ௪0 ; ௪0௬ : ௪௨ ;

(பி - ம்.)—1 'பாணன்' 2 'கோழுரமுதியார்'

# புறநானூறு மூலமும் உரையும்.

கசுரு

ூதிப்போவீராக' என்றுசொல்லிப்பலவும் என்னைவினவுதலமையாத முதிய ரய்மையையுடைய இரவலனே, யான்சொல்லுவதனைக் கேட்பாயாக;தைமா த்தின்கட் குளிர்ந்த பொய்கையைப்போலக் கொள்ளக்கொள்ளத்தொலை ாத சோற்றையுடைய அகன்றநகரிடத்து அடுநெருப்பல்லது சுடுநெருப்பறி

ாது சோற்றையும் தண்ணீரையும் விளக்கும் நலல நாட்டுக்கு வேந்தன், ிள்ளிவளவனது நல்லபுகழைநினைத்து மணத்தை ஆராயும் ஆராய்ச்சியை டைய வண்டு சிறிய வெளிய ஆம்பலின்மீதே ஊதும் கையானவள்ளிய காடையையுடைய பாணனது சிறுகுடிக்கட் பாதிரிநாறும் மயிரினையும் ஒள் ரியநுதலினையும் இனியமுறுவலையுமுடைய விறலியுடனே மெல்ல மெல்ல டந்துசெல்லவையாயின் செல்வத்தையுடையையானவ; விறகைக்காட்டினின் நம் ஊரகத்துச்செலுத்துமாகதர் அக்காட்டகத்து விழுப்பொருள் எடுத்துக் கொண்டாற்போல்வதொரு நேர்பாடன்று, அவனது உண்மை ; அதுபெறு வெக்கொலென்று கருதவேண்டா; அவனது தாள் வாழ்க.—எ - று.

பாண, தங்கிக எனக்கூறி விளவலாறு இரவல, விறலியொடு மென்மெ

வச் செல்குவையாயினை இயையும் ; வியனகர்ச்செல்வையாயினைவு ாமையும். நகரையுடையகாடென இயைப்பாருமுளர்.

'விறகொய்மாக்கள் பொன்பெற்றன்னதோர் தலைப்பாடன்று' என்ப

தற்கு விறகிற்குச்சென்றோர்பொன்பெற்றாற்போலவதொருதலைப்பாடுதெ ன்று பொருளுரைப்பாருமுளர்; அதுபொருந்துமேல் அறிந்துகொள்க. (எ0)

---

(எக.) மடங்கலிற் சினை இ மடங்கா வுள்ளத்
தடங்காத் தானை வேந்த ருடங்கியைந்
தென்னொடு பொருது மென்ப வவரை
யாரம ரலறத் தாக்கித் தேரொ
டு டவர்ப்புறங் காணே னாயிற் சிறந்த
பேரம ருண்க ணிவளினும் [1] பிரிக

---

க. "மடங்கலபோற் சினை இ" கலி. உ.

வந்தவன் சாத்தனு மாத [1] னழிசியும்
வெஞ்சின வியக்கனு முளப்படப் பிறரும்
கண்போ னண்பிற் கேளிரொடு கலந்த
வின்களி மகிழ்நகை யிழுக்கியா னொன்றோ
மன்பதை காக்கு நீள் [2] குடிச் சிறந்த
தென்புலங் காவலி னொரீஇப் பிறர்

---

கலவியிற் சிறப்புற்றச் செய்யுள் செய்யும் ஆற்றலுடையளாயிருந்தா ளென்பதும் இவன் அவளிடத்தே மிக்க அன்புடையவனாயிருந்தது போலவே அவளும் இவனிடத்துப் பேரன்புடையவளாயிருந்து இல்லறத்தை இனிது நடத்தி இவனிறந்தவுடன் தீப்பாய்ந்து தானும் இறந்தாளென்பதும் வெளியாகின்றன; தன்னுடைய குற்றமற்ற மனைவியை மனத்தால் அங்கீகரியாது விட்டவன் மிக்க பாவியாய்ப் பிணிவாய்ப்பட்டு வருந்துவானென்று நீதிநூல்கள் கூறுதலின் 'இவளினும்பிரிக' என்றான்; "குழற்சிகைக் கோதை சூட்டிக் கொண்டவனிருப்ப மற்றோர், நிழற்திகழ் வேலினானை நேடிய நெடுங்கணாளும், பிழைப்பிலாட் புறந்தந்தானுங் குரவரைப் பேணல்செய்யா, திழுக்கினாரிவர்கள் கண்டா யிம்மைநோய்க் கிரைகளாவார்" (சீவக. ௨௫௨) என்னுஞ்செய்யுள் இதனை நன்கு புலப்படுத்தும்; "கடிசொலில்லைக் காலத்துப்படினே" என்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். எச்ச. ௫. ௫௬ - பேர்.

௭ - ௯. புறநா. ௭௨ : ௧௦ - ௧௨; "நடுவிகந் தொரீஇ நயனில்லான் வினைவாங்கக், கொடிதோர்த்த மன்னவன்" (கலி. ௮); "உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்தபெருமை, யடக்கமி லுள்ளத்த னாகி-நடக்கையி, னொள்ளிய னல்லான்மேல் வைத்தல் குரங்கினைக் கொள்ளி கொடுத்து விடல்", "முறைதெரிந்து செல்வர்க்கு நல்கூர்ந் தவர்க்கு, மிறைதிரியா னேரொக்கல் வேண்டு - முறைதிரிந்து, நேரொழுகா னாயி னதுவா மொருபக்க, நீரொழுகப் பாலொழுகுமாறு" பழ. ௨௦௦, ௨௦௯.

௧௫. "கரவா தவர்தீயுங் கண்ணன்னார் கண்ணும், மிரவாமை கோடி யுறும்" குறள், ௧௦௬௧.

௪௦ - ௪௬. "கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட,விலங்கிற்கும் விள்ள ளரிது" நாலடி, ௭௬.

௬௧ - அ. "மன்பதை காக்கு தென்புலங் காவ, லென்முதற் பிழைத்

†(பி - ம்.)— 1 'இழிசினும்' 2 'குடிப்புறந்த'

## புறநானூறு மூலமும் உரையும்.

[illegible]

வன்புலங் காவலின் மாறியான் பிறக்கே.*

திணை - காஞ்சி; துறை - வஞ்சினக்காஞ்சி.

ஒல்லையூர்தந்த 1 † பூதப்பாண்டியன் பாட்டு.

இ - ள்.— சிங்கம்போலச் சினந்து மீளாத மேற்கோள் பொருந்திய உள்ளத்தினையும் மிகைத்தச செலவும் படையையுமுடைய வேந்தர், தம் மில ஒப்பக்கூடிவந்து என்னொடு பொருவேமென்று சொல்லுவர் ; அவ்வேந்தரைப் பொறுத்தற்கரிய போரின் கண்ணே அலறப்பொருது தேருடனே அவருடைந்தோடும் புறக்கொடையைக் கண்டிலேனாயின், எனக்குச் சிறந்த பெரியவாய் முகத்தோடு பொருந்திய மையுண்ட கண்ணினையுடைய இவ ளினும் நீங்குவேனாக; அறமாவது நிலைகலங்காத அன்பினையுடைய அவைக் களத்து அறத்தின் திறப்பாடிலலாத ஒருவனை வைத்து முறைகலங் கிக் கொடுங்கோல செய்தேனாகுக ; மிக்க புகழையுடைய வையையார்

நழப்பட்ட செலவம் பொருந்திய ஊர்களிற் பொய்யாத புதுவருவாயை யுடைய மையலென்னும் ஊர்க்குத் தலைவனாகிய மாவனும், நிலைபெற்ற எயி லென்னும் ஊரையுடைய ஆதனையும், புகழமைந்த அந்துவஞ்சாத்தனும், ஆதனழிசியும், வெய்ய சினத்தையுடைய இயக்கனுமென இவருட்படப் பிற ரும் எனது கண்போலும் நண்பினையுடைய நட்டாரோடு கூடிய இனிய செருக்கையுடைய மகிழ்ச்சியைத் தப்பியவனாகிப் பலவுயிரையும் பாதுகாக் கும் அரசர்குலத்திற் சிறந்த பாண்டிநாடுகாக்கும் காவலினீங்கிப் பிற ருடைய வன்புலங்களைக் காக்கும் காவற்கண்ணே இக்குடிப் பிறப்பினீங்கி யான் பிறப்பேனாகுக.—எ - று.

'மெலிகோல செய்தேனாகுக' என்பதனுள் ஆகுகவென்பது, எங்கும் நந்துரைக்கப்பட்டது.

‡ ஒன்றோவென்பது எண்ணின்கண் வருவதோரிடைச்சொல் ; அதனை முன்னும் பின்னுங் கூட்டுக. (எக)

---

தது" (சிலப். உ௦ : எசு - எ) என்பதும் இவ்வடிகளைபோலவே பாண்டிய ருடைய குலப்பெருமையைப் புலப்படுத்துகின்றது.

* மு. காஞ்சித்திணைத்துறைகளுள் இன்னதுபிழைப்பின் இதுவாகிய ரெனத் துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத்தானுமென்டதன் விசேடவுரையில், "நகுதக்கனரே (எஉ), மடங்கலிற் சினை இயெனனும் புறப்பாட்டுக்கள் உயிரும் செல்வமும் போலவன நிலையும் பொருளென நினையாது வஞ்சினஞ் செய்தன" என்பர் ; தொல். புறத்திணை. சூ- உச - ந.

† இவன் தென்னாடு புரந்தமை கஅ - ஆம் அடியால புலப்படுகின்றது.

‡ புறநா. கஉ : உ - உரை.

---



(௭௨.) நகுதக் கனரே நாடுமீக் கூறுந
ரிளைய னிவனென வுளையக் கூறிப்
படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தா
'ணெடுநல் யானையுந் தேரு மாவும்
படையமை மறவரு முடையம் யாமென்
றுறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
யருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ
டொருங்ககப் படேஎ னாயிற் பொருந்திய

---

௧. எள்ளல் நகையை விளக்குமிடத்து "நகுதக்கனரே நாடுமீக் கூறுநர் என்றாற்போல வீரத்தெழுந்த வெகுளி நகையும் எள்ளல் நகையின்கண் அடக்கவேண்டும்" என்பர்; தொல். மெய்ப்பாடு. சூ. ௪ - பேர்.

௨. புறநா. ௭௭, ௭௮; "இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற வொளியோ டொழுகப் படும்" (குறள். ௬௯௮); "அளையுறை பாம்பு மரசும்...... இளைய வெளிய பயிலாதனவென் றெண்ணி யிகழி னிழுக்கந் தரும்" (ஆசார. ௮௪); "சீர்த்தகு மன்னர்...இளைதென்று பாம்பிகழ்வா ரில்" பழ. ௩௮௫.

ங - ச. "படுமணி யிரட்டுமொருங்கி ஏ.........வேழம்" (முருகு. அ0 - அஉ) பாடீடி: புறநா. கடு: அ.

ச - ரு. "திணைவிராயெண்ணல வழுவெனபடே கருத்தாயின், 'நெடு நலயானை புகதேரு மாவும், பன டயமை மறவரு முடையம்யாம்' எ - ம், 'இரு மனப்பெணடிருங் களருங் கவறும்' எ - ம், படர்கைச் சொலலும் அஃறி ணைக் கிளவியும் விராயெண்ணுதல வழக்குப பயிற்சியுடைமையான் அவைபு மடக்க 'உயர்திணைச் சொலலே யஃறிணைக் கிளவி' எனப்போதப்படலுதாது 'தன்மைச் சொலலே யஃறிணைக் கிளவி' எனத் தன்மைச சொல்லையே விதந் தோதல குன்றக்கூறலாமாகலானும் அவர்க்கது கருததன்மையறிக" தொல். கிளவி. சூ. சரு - சே.

ச - க. உடைமையென்னும் மெயபபாட்டிற்கு
மெய்ப்பாடு. சூ. கஉ - இளம்.
மேற்கோள்; தொல்.

எ. சிறுசொல: சீவக. உ0எ; சூளா. அரசியல, நகஎ.

க - எ. "உறுதுட்பஞ்சா......வேகதரையெனபது கொலைபொருளாக
வெகுளிச்சுவை பிறநதது ; என்னை ? சிறுசொற்சொலலுதலென்பது கொன்றுரைத்தலாகலின்" தொல். மெயபடாடு. சூ. க0 - பேர்.
புகழ

க - க. வெகுளிசசுவைக்கு இவ் வடிகள் மேற்கோள்; தொல். மெய்ப் பாடு. சூ. க0 - இளம்.

அ - கூ. புறநா. உரு: ரு - எ ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க; "துளங்குடி விழுத்திணை திருத்தி முரசுகொண், டாண்கட னிறுத்த", "இருபெரு வேந்தரையு முடனிலை வென்று, முரசங் குடையுங் கலனுங் கொண்டு" பதிற். ஙக; அ - ஆம் பத்துப்பதிகம்.



தென்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாகுக
வோங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் றலைவ னாக
வுலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை
புரப்போர் புன்கண் கூர
விரப்போர்க் கீயா வின்மையா னுறவே.*

திணையும் துறையும் அவை.
பாண்டியன் தலையாலங்கானத்துச்செருவென்ற நெடுஞ்செழியன்

பாட்டு.

இ - ள்.—நம்மாற் சிறக்கத் தக்கார் இவன் ஆளுநாட்டை மிகுத்துச் சொல்லுவரெனவும் இவன்றான் இளையனெனவும் யாவர் வெறுப்பச்சொல்லி ஒலிக்குமணி இருமருங்கும் ஒன்றோடொன்று மாறியிசைக்கும் பருத்த அடியினையும் பெரிய காலினையுமுடைய உயர்ந்த நல்லயானையினையும் தேரையும் குதிரையையும் படைக்கலத்தொழிலமைந்த வீரரையும் உடையேம் யா

---

௧௨. "வன்பழி தூற்றுங் குடியதே மாமதுரை", "குடிபழி தூற்றுங் கோலனு மல்லன்" சிலப். ௧௧: ௨௮; ௨௩: ௩௪.

௧௧ - ௨. 'பெயர்' என்பதற்கு 'வஞ்சினம்' எனப்பொருள் கூறி, 'கொடியனெம்........கோலேனாகுக' என்னும்பகுதியை மேற்கோள்காட்டி, 'கூறும் வஞ்சினத்தால் தனக்கு ஒருபெயர் பெறுதலின் வஞ்சினத்தைப் பெயரென்றார்' என விசேடவுரையும் எழுதினர்; பட்டின. ௨௮௯ - ந.

௧௮. "சாதலி னின்னாத தில்லை யினிததூஉம், ஈதலியையாக் கடை" (குறள், ௨௩௦) என்பதும் இவ்வடியின் பொருளை வலியுறுத்துகின்றது.

௧௭ - ௮. "கலிமா னோயே கலிமா னோயே, நாகத் தன்ன நன்னெடுந் தடக்கைக், காய்சின யானைக் கலிமா னோயே, வெள்ளத் தானைமுன்...... ......முன், னுள் ளழித்துப் புகேள னாயி னுள்ள, திரைபபோ னிக்கமை வண்டுக், காப்போன் சிறுமை யானுறு கவ்வே" தகடூர்யாத்திரை.

* ம. காஞ்சித்திணைத்துறைகளுள், இன்னாது பிழைப்பின் இதுவாகிய ரெனத்தன்னாருஞ்சிறப்பின் வஞ்சினங் கூறியதற்கு மேற்கோள்; (தொல். புறத்திணை. சூ. ௧௧ - இளம்; ஷை ஷை ஷை ௨௪ - ந); "மன்னர் நுங்கள்புறக்கொடை கண்டு........கலப்ப லன்றேல், செரி சுடர் வழங்கும் வையத் தென்பெயர் கெடுகவென்றான்" (சீவக. ௭௯) என்பதன் விசேடவுரையில், "இது சீவகன் வஞ்சினம். இது, முன் இளமை முதலியவற்றை அவ்வரசர்கொன்று கூறுதலின் அதுகொலை பொருளாகப்பிறந்த வெகுளியென்னும் மெய்ப்பாடு. இது, 'நகுதக்கனரே' என்னும் புறப்பாட்டினுட் கண்டு கொள்க" என்று எழுதி யிருக்கின்றனர் நச்சினார்க்கினியர்.

மென்று எனது மிக்க வலிக்கு அஞ்சாதே மாறுபடுஞ் சினம் பெருகிப் புல்லிய வார்த்தைகளைக் கூறிய சினம்பொருந்திய அரசரைப் பொறுத்தற்கரிய போரின்கண்ணே சிதறப்பொருது முரசத்தோடேகூட அவரைக் கைக்கொண்டிலேனாயின், பொருந்திய எனது குடைநிழற்கண் வாழ்வார், தாங்கள் சென்றடையுநிழற்காணாதே கொடியன் எம்முடைய வேந்தனென்று கருதிக் கண்ணீரைப் பரப்பிக் குடிமக்கள் பழிதூற்றும் கொடுங்கோலையுடையேனாகுக ; உயர்ந்த தலைமையுடனே மேம்பட்ட கேள்வியையுடைய மாங்குடிமருதன் முதல்வனாக உலகத்தோடு நிலைபெற்ற பலரும்புகழும் தலைமையையுடையபுலவர் பாடாது நீங்குக, எனது நிலவெல்லையை ; என்னாற் புரக்கப்படுவோர் கேளிர் துயரம்மிக இரக்குமவர்கட்குக் கொடாதவறுமையை யானுற.—எ-று.

என்னிழல வாழ்நராகிய குடியென்க.

உளையக்கூறியதனைத் தம்மிடத்திருந்து கூறியதாகவும், சிறுசொற் சொல்லியதனைப் போர்க்களத்து எதிர்ப்பட்டுக் கூறியதாகவுங் கொள்க.

இவனென்றார், தம் கருத்துக்கண் அணுமையான்.

அகப்படேனாயினென்றது, ஈண்டுப்பிறவினைமேல் நின்றது.

வேந்தரைத் தாக்கி அகப்படேனாயின், கோலேனாகுக ; இன்மை யானுற ; என் நிலவரை புலவர்பாடாது வரைகவென மாறிக்கூட்டி வினை முடிவு செய்க.

'நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்' என்பதனை, நாட்டாரால மீக்கூறப்பட்ட மந்திரிச்சுற்றமுதலாயினர் நகுதக்கனரெனப் பிரித்துரைப்பினுமமையும்.

'நிலவரைப் புரப்போர்' எனவும் பாடம்.

---

(எ௩.) மெல்ல வந்தென் னல்லடி பொருந்தி
ஈயென விரக்குவ ராயிற் சீருடை
முரசுகெழு தாயத் [1] தரசோ தஞ்ச
மின்னுயி ராயினுங் கொடுக்குவெ னிந்நிலத்

---

௩. புறநா. ௭௫ : ௧௨ ; "முரசுகெழு தாயத தரசோ தஞ்சமெனத் தஞ்சக்கிளவி அரசுகொடுத்தலெளிதெனா எண்மைப்பொருளுணர்த்தியவாறு கண்டுகொள்க" தொல். இடை. சூ. ௧௮ - பேர்; சே ; ந ; இ - வி. சூ. ௨௭௧ - உரை.

௧ - ௪. இவ்வடியிலுள்ள மொழிகளால், சோழன் நலங்கிள்ளியது மேம்பாடும் வீரமும் வண்மையும் விளங்குகின்றன ; புறநா. ௧௦ : ௫ - ௬ ஆம் அடிக்குறிப்பும், "தனதுமேம் பாடுரைத்தநெடுமொழி", "தன்னுடையாற்ற லுணரா ரிடையினுந், தன்னை மறுதலை பழித்த காலையுந், தன்னைப் புகழ்தலுந் தகும்", "ஈயென் கிளவி யிழிந்தோன் கூற்றே", "கொடுவென் கிளவி யுயர்ந்தோன் கூற்றே" என்பவைகளும் இங்கே அறியற்பாலன.

(பி - ம்.)—1 'அரசே'



௭௫

௫ தாற்ற லுடையோ ராற்றல் போற்றுதென்

னுள்ள மெள்ளிய மடவோன் றெள்ளிதிற்
றுஞ்சுபுலி யிடறிய சிதடன் போல
வுய்ந்தனன் பெயர்தலோ வரிதே மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப் பட்ட
வன்றிணி நீண்முளை போலச் சென்றவண்
1 வருந்தப் பொரேஎ னாயிற் பொருந்திய
தீதி னெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தன் மகளி
ரொல்லா முயக்கிடைக் குழைகவென் றாரே *

திணையும் துறையும் அவை.

சோழன் 2 நலங்கிள்ளி பாட்டு.

இ - ள்.—மெல்லியதாக என்னை நல்ல அடியையடைந்து எமக்கு ஈய வேண்டுமென்று தாழ்ந்திரப்பாராயின், அவர்க்குச் சீர்மையையுடைய முரசு பொருந்திய பழையதாய்வருகின்ற உரிமையையுடைய எனது அரசாட்சி கொடுத்தலோ எளியது ; இனிய உயிரேயாயினும் கொடுப்பேன், இந்நிலத்தின்கண் ; அமைச்சர் படைத்தலைவர்முதலாகிய வலியையுடையோரது வலியைப் பாதுகாவாது என்னுள்ளத்தையிகழ்ந்த அறிவில்லாதோன் யாவர்க்கும் விளங்கத் துயில்கின்ற புலியை இடறின குருடன்போலப் பிழைத்துப்போதலோ அரிது; மூங்கிலைத்தின்னும் வலியையுடைய யானையினது காலின்கணகப்பட்ட வலிய திணியமூங்கிலது நீண்ட முளையையொப்ப மேற்சென்று அவ்விடத்து வருந்தும்படி பொருதிலேனாயின், கூடிய தீதில்லாத நெஞ்சத்தாற் காதல்கொள்ளாத பலவகைப்பட்ட கரியகூந்தலையுடைய பொதுப் பெண்டிரது பொருந்தாத புணர்ச்சியிடை என்மாலை துவள்வதாக,—எ .

எ. இந்த அடியும், "எழுப்புபவோ, துஞ்சு புலியைத் துயில" (பழ. ௩௩) என்பதும் ஒருபொருளன.

௯ - ௧௧. புறநா. ௮௦: எ; "வார்முகின் முழக்கின் மழகளிறு மிகீஇத் தவ, கான்முளைமுங்கிற் கவர்கிளைபோல, வுய்தல யாவதுநின் னுடற்றி யோரே" பதிற். ௮௪: ௧௧ - ௩.

௧௨ - ௪. "அன்பின் விழையார் பொருள் விழையு மாய்தொடியார், தின் சொலிழுக்குத் தரும்" (குறள். ௯௧௧); ஒலலாமுயகரு: "வேளாமுயக்கம்" (கலி. ௬௮); குழைகதார்: "செழுந்தார் குழையச் சேர்த்தார்" (சீவக. ௨0௬௪); காமம்பற்றியும் பெருமிதம் பிறக்குமெனபதற்கு, "பலவிருங்கூந் தல......தாரே" என்பது மேற்கோள; தொல். மெய்ப்பாடு. சூ. ௯ - பேர்.

* மு. காஞ்சித்திணையுள இன்னதுபிழைப்பினிதுவாகியரெனத் தன் னருஞ் சிறப்பின்வஞ்சினங்கூறியதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௨௪ - ந.

(பி - ம்.)—1 'வருந்த வொற்றேனுயிற்' 2 'கல்லுருத்திரன்'



'இரக்குவிராயின்' என்று பாடமோதுவாருமுளர்.

நீநில்காதல்கொள்ளாவென இயைப்பினுமமையும்.

உள்ளமென்றது, உளளத்தாறநிழும் சூழ்ச்சியை.

தன்மேம்பாடு கூறுகின்ற இடமாதலின், கலலடியென்பது தற்புகழ்த லென்னுங் குற்றமாகாது.

(எ௩)

வரின் வாழாத மான முடையார், ஒளிதொழு தேத்து முலகு", (குறள், ௯௬௪, ௯௬௮, ௯௬௯, ௯௭0) ; "மானமழிந்தபின் வாழாமை முன்னினிதே" (இனியது. ௧௨) என்பவை இச்செய்யுளின் பொருளை விளக்குகின்றன; "தொடாப்பு.... உவகைதாமே: இது தன்மாட்டு வருத்தத்தான் இழிப்புப்பிறந்தது" தொல். மெய்ப்பாடு. ௫. ௮ - இளம்.

* மு. காஞ்சித்திணையுள், தாமேயேங்கிய தாங்கரும்பையுள் என்னுந் துறைக்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. ௧௯ - இளம்) ; "தாமே யேங்கிய வென்பதற்குச் சிறைப்பட்டார் தாமே தனித்திருந்த வென்றுகூறி 'குழவி...உலகத்தானே' என்னும் புறப்பாட்டைக் காட்டுவாருமுளர்" ஷை ஷை ௨௪-ந.

(பி - ம்.)—1 'மாணவினையின்றெனவாளில' 2 'வயிற்றலைத்தித்' 3 'உண் பரோ'

## புறநானூறு மூலமும் உரையும்.

௭௰௪.

திணை - பொதுவியல்; துறை - முதுமொழிக்காஞ்சி.

சேரமான்கணைக்காலிரும்பொறை சோழன்செங்கணானொடு [1]திருப்போர்ப்புறத்துப் பொருது பற்றுக்கோட்பட்டுக் குடவாயிற்கோட்டத்துச் சிறையிற்கிடந்து தண்ணீர் தாவென்று பெறாது பெயர்த்துப்பெற்றுக் கைக்கொண்டிருந்து உண்ணான் சொல்லித் துஞ்சியபாட்டு.

இ - ள்.—பின்னை இறக்துபிறப்பினும் தசைத்தடியாகிய மகவை பிறப்பினும் அவற்றையும் ஆளலவென்று கருதாது வாளோக்குத்லில் 2தவறார் அரசராயிருக்க, பகைவர்வாளாற்படாது, சங்கிலியாற்பிணிக்கப்பட்டாய்போலப் பிணித்துத் துன்பத்தைச்செய்து இருத்திய கேளலலாதகேளிருடைய உபகாரத்தான் வந்த தண்ணீரை இரந்துண்ணக்கடவேமல்லேமென்னும் மலவலியின்றி வயிற்றின்கட் டீயை யாற்றவேண்டித் தாமேயிரந்துண்ணும் அளவினையுடையாரை அவ்வரசர்பெறுவார்களோ இவ்வுலகத்தின்கண்.—எ - று.

அளவையுடையாரை அளவையென்றார்.

இதன்கருத்து: சாக்குழவியும் ஊன்பிண்டமுமென இவற்றின்மாத்திரையும் பெற்றிலேமெனப் பிறர்மேல வைத்துக்கூறியவாறு.

கேளலகேளிரென்றது, சிறைக்கோட்டங்காவலரை.

அன்றி, இவனாண்மையுடையனலலனென்று வாளாற்கொல்லாராய்த் தொடர்ப்படுஞமலிபோல இடர்ப்படுத்திருத்திய கேளலகேளிர் வேளாண் சிறுபதத்தை மதுலகயின்றி வயிற்றுத்தீத்தணிக்கவேண்டித் தாம் இரந்துண்ணுமளவாகக் குழவிசெத்துப பிறபபினும் ஊன்தடிபிறப்பினும் இவ்வுலகத்து மகப்பெறுவாருளரோவென உரைப்பினுமமையும்.

அரசர்க்கு மானத்தின்மிக்க அறனும் பொருளும் இன்பமுமில்லையென்றுகூறினமையின், இது முதுமொழிக்காஞ்சியாயிற்று. (எச)

---

(பி - ம்.)—1 'செங்கணானொடு போர்ப்' 2 'தவிரார்'

---

(எரு.) 1 மூத்தோர் மூத்தோர்க் கூற்ற முய்த்தெனப்
பாறர வந்த பழவிறற் றாய
மெய்தின மாயி னெய்தினஞ் சிறப்பெனக்
குடிபுர விரக்குங் கூரி லாண்மைச்

சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே
மண்டமர்ப் பரிக்கு மதனுடை நோன்றாள்
விழுமியோன் பெறுகுவ [2] னாயி னாழ்நீ

க. "எனக்குத்தா யாகியா ளென்னையீன் றிட்டுத், தனக்குத்தாய் நாடியே சென்றாள்" நாலடி. கரு.

உ - ௩. "உருகெழு தாய மூழி னெய்தி" பட்டின. உஉ௭.

௪ - ௫. "வேலொடு நின்றா னிடுவென் றதுபோலும், கோலொடு நின்றா னிரவு" குறள். ௫௫உ.

(பி-ம்.) 1 'மூத்தோர்க்கூற்றமுய்த்தெனவுய்த்தென' 2 'ஆயிற்கழீர்'

20



ரறுகய மருங்கிற் சிறுகோல் வெண்கிடை
யென்றூழ் வாடுவறல் போல நன்று
நொய்தா லம்ம தானே மையற்று
விசும்புற வோங்கிய வெண்குடை
முரசுகெழு வேந்த ரரசுகெழு திருவே.

திணை - அது; துறை - 1 பொருண்மொழிக்காஞ்சி.

சோழன் நலங்கிள்ளிபாட்டு.

இ - ள்.—தங்குடியின்முதியோரை முதியோரைக் கூறாம் கொண்டு போயிற்றாக,விதிதரப்பட்டுத் தம்பால்வந்தபழையவெற்றியாலுண்டாகிய அரசுரிமையைப் பெற்றேமானால் இத்தலைமையைப்பெற்றேமெனக்கொண்டு தங்குடிமக்களை இறைவேண்டியிரக்கும் மிகுதியில்லாத ஆண்மையையுடைய உள்ளஞ்சிறியோன் பெறின், அத்தாயம் அவனுக்குப் பரிக்கவொண்ணுதாம்படி கனத்தது, மிகவும்; அடுத்துப்பொரும் போரைப்பொறுக்கும் மனவெழுச்சியையுடைத்தாகிய வலிய முயற்சியையுடைய சீரியோன்பெறுவனாயின், தாழ்ந்தநீரையுடைய வற்றிய கயத்திடத்துச் சிறிய தண்டாகிய வெளிய கிடேச்சினது கோடைக்கணுலர்ந்த சுள்ளியைப்போலப் பெரிதும் கொய்து, குற்றமற்ற விண்ணின்கண்ணே பொருந்தவுயர்ந்த வெண்குடையினையும் முரசினையுமுடைய அரசாது அரசாட்சியைப்பொருந்திய செலவம்.—எ - று.

குடிபுரவிரக்குமென்பது, குடிமக்களைக் கொள்ளுங்கடமையன்றி மிகத் தரவேண்டுமென்று இரத்தலை.

தாயம் சிறியோன்பெறின், அது மிகவும்சிறந்தன்று; வேந்தர் அரசுகெழுதிரு விழுமியோன் பெறுகுவனாயின், கன்றுகொய்தாலெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

மன், ஆக்கத்தின்கண்வந்தது. அம்ம, அசைநிலை.

(எரு)

(பி - ம்.)—1 'பொதுமொழிக்காஞ்சி'

(எகா.) ஒருவனை யொருவ னடுதலுந் தொலைதலும்
புதுவ தன்றிவ் வுலகத் தியற்கை
யின்றி னூங்கோ கேளலந் திரளரை
மன்ற வேம்பின் மாச்சினை யொண்டளிர்
நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிடைந்து

௨. "பண்டுமிவ் வுலகத் தியற்கை யஃதின்றும், புதுவதன்றே" (கலி. ௨௨: ௩ - ௪); 'புதுவ தன்றே தொன்றியல வாழ்க்கை" சிலப். ௩௦: ௧௪௦.

௪. புறநா. எ௬: ௯. மாச்சினை: பொருந. ௧௪௩ - ௪.

௪ - ௫. புறநா. ௨௨: ௨௦ - ௨௧ ஆம் அடிகளின் குறிப்புரைப் பார்க்க; "போர்படு மள்ளர் போந்தொடு தொடுத்த கடவுள் வாகை" பதிற். ௬௬.

## புறநானூறு மூலமும் உரையும்.

௭௬

செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி
யொலியன் மாலையொடு பொலியச் சூடிப்
பாடின் றெண்கிணை கறங்கக் காண்டக
நாடுகெழு திருவிற் பசும்பூட் செழியன்
பீடுஞ் செம்மலு மறியார் கூடிப்
பொருது மென்று தன்றலை வந்த
புனைகழ லெழுவர் நல்வல மடங்க
வொருதா னாகிப் பொருதுகளத் தடலே.*

திணை - வாகை; துறை - அரசவாகை.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற யனை இடைக்குன்றூர்கிழார் பாடியது.

† நெடுஞ்செழி

இ - ள்.—ஒருவனை ஒருவன் கொல்லுதலும் ஒருவற்கு ஒருவன்

றலும் புதிதன்று, இந்தவுலகத்தின்கண் முன்னேதொட்டு இயல்பு; இம்மை ம்முன்கேட்டறியேம்; திரண்ட தாளையுடைய மன்றத்திடத்து வேம்பி னது பெரியகொம்பின்கண் உண்டாகிய ஒள்ளியதளிரை நீண்டகொடியாகிய உழிஞைக்கொடியுடனே விரவிச் செறியத்தொடுக்கப்பட்ட தேன்மிக்கமாலை யைய வளையமாலையுடனே சிறப்பச்சூடி ஓசையினிய தெளிந்த போர்ப்பறை யொலிப்பக் காட்சிதக்க நாடுபொருந்திய செல்வத்தினையுடைய பசும்பொன் னாற்செய்த பூணையணிந்த நெடுஞ்செழியனது பெருமையையும் உயர்ந்ததலை மையையும் அறியாராய்த் தம்மிற்கூடிப் பொருவேமென்று தன்னிடத்து வந்த புனைந்த வீரக்கழலினையுடைய இருபெருவேந்தரும் ஐம்பெருவேளிரு மாகிய எழுரசருடைய சேனை வென்றடக்கத் தானொருவனாய் நின்று பொருத களத்தின்கட் கொல்லுதல.—எ - று.

ஒருவனையொருவன் அடுதலும் தொலைதலும் புதுவதன்று, இவ்வுலகத் தியற்கை; செழியன் பொருதுமென்றுவந்த எழுவர்நல்வலமடங்க ஒருவனா கித் தெரியலை மாலையொடு காண்டகச்சூடிக் கிணைததுங்கப் பொருதகளத்து அடல் இன்றின் ஊங்கோ கேளலமெனக்கூட்டி வினைமுடிவுசெய்க. (எசு)

---

சு - கூ. புறநா. கக : கஎ-ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

* மூ. நூழிலென்னுந்துறைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. க - இளம.

† கூ ஆம் அடியில தலைவன்பெயரின் ஒரு பகுதிவந்துள்ளது.

---

(எஎ.) கிண்கிணி களைந்தகா லொண்கழ றொட்டுக்
குடுமி களைந்தநுதல் வேம்பி னொண்டளிர்

---

க. கழறொட்டு : புறநா. அ : க.

உ. குடுமிகளைதல : "எந்தை, நெடுமதில கொண்டு நிலமிசையோ ரேத் தக, குடுமி களைந்தானெங் கோ" பு - வெ. கூ : உக.

ம்நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து
குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி
நெடுந்தேர்க் கொடிஞ்சி பொலிய நின்றோன்
யார்கொல் வாழ்கவவன் கண்ணி தார்பூண்டு
தாலி களைந்தன்று மிலனே பால்விட்
டயினியு மின்றயின் றனனே வயின்வயி

னுடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை
வியந்தன்று மிழிந்தன்று மிலனே யவரை
யழுந்தப் பற்றி யகல்விசும் பார்ப்பெழக்
கவிழ்ந்துநிலஞ் சேர வட்டதை
மகிழ்ந்தன்று மலிந்தன்று மதனினு மிலனே.*

௨ - ௩. புறநா.

௨௨ : ௨௦ - ௨௧-ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

௧ - ௪. புறநா. ௭௨ : ௨-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

௫. நெடுந்தேர்க் கொடிஞ்சி: மதுரை. ௭௫௨ ; மணி. ௪ : ௪௮.

௭. தாலி - ஐம்படைத்தாலி ; இதனைப் பஞ்சாயுதமெனவும், பிறந்த ஐந்தாநாளில் பிள்ளைகளுக்கு இதனைத் தாரணஞ்செய்தல் மரபென்றுங் கூறுவர்; "பொன்னுடைத் தாலி யென்மகன்" (அகநா. ௫௪); "மழலை, சிதைபுசிலம்பினி ரைம்படை நனைப்ப", "ஐம்படைத்தாலி......புதல்வர்" (மணி. ௩ : ௧௩௭ - ௮; ௭ : ௫௬ - ௭); "எழிலார் திருமார்பிற் கேற்கு மிவையென், றழகிய வைம்படையு மாரமுங் கொண்டு" (பெரியாழ்வார் திருமொழி. ௧.

௪ : ௫); "பணபெச தேவளமக ஞுகில மாதின் படாகனயு மாயனிவ னொனறு தெளி
வெய்தத், தண்டுதனு வாளபணில நேமியெனு நாமத, தனபடைக ளானதிரு வைம்படை தரிததே" (கலிங்க. அவதாரம், ௯); "தாலி யைம்படை தழுவு மார்பிடை" (கம்ப. நாடு. ௫அ); "ஐம்படை மாரபிற காப்பென" திருவிளை. ௬௯: ௨௫.

௯. வம்பமள்ளர்; புறநா. எ௮: எ; எ௯: ௫.

எ - ௧0. "இதத நகரஉகரம் 'தாலிகளைதன்றமிலனே' எ - ம், 'வியாத தன்றமிழுநதனறமிலனே' எ-ம் உயர்திணைகண்ணும் வநததாலெனின், அவை 'களைந்தான்' 'வியநதான்' 'இழநதான்' எனபனவற்றிறகு மறையாய்க் 'களைநிலன்' 'வியநிலன்' 'இழிநிலன்' எனநிறகின்றவை 'களைநதனறமிலன்', 'வியநதன்றமிலன்', 'இழிநதனறமிலன' என முறறுவினைத்திரிசொல்லாயின்றன" தொல். வினை. சூ. ௨0 - ந.

௧0 - ௧௧. பெரும்பாண். ௪௧௯; மலைபடு. ௩௮௬.

௧௩. அகத்தடக்கல்; புறநா. ௬ : ௨௫.

* மு. உழிஞைத்திணைத்துறைகளுள் ஒன்றாகிய 'திறப்படவொருதான் மண்டிய குறுமையும்' என்பதற்கு மேற்கோள் ; (தொல். புறத்திணை. சூ. ௧0 - இளம்); "மதிமை சாலா மருட்கையானே......கிண்கிணி களைந்தகா லொண்கழ றொட்டென்னும் பாடசே திறியோர் பெருந்தொழிலைச் செய்தது" தொல். மெய்ப்பாடு. சூ. எ - பேர்.

## புறநானூறு மூலமும் உரையும்.

௭௮

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள.—சதங்கை வாங்கப்பட்டகாலிலே ஒள்ளிய வீரக்கழலினைச் செறித்துக் குடுமியொழிக்கப்பட்ட சென்னிககண்ணே வேம்பினது ஒள்ளிய தளிரை நெடியகொடியாகிய உழிஞைக்கொடியோடுசூடிக் குறியவளைகளை யொழிக்கப்பட்ட கையின்கண்ணே விலைப்பிடித்து நெடிய தேரினது மொட்டுப் பொலிவுபெறநின்றவன் யாரோதான் ? யாரேயாயினும், அவன்கண்ணே வாழ்வதாக ; தாரையணிந்த ஐம்படைத்தாலி கழித்ததுமிலன் ; பாலையொழிந்தது உணவும் இன்றுண்டான் ; முறைமுறையாகவெகுண்டு மேல்வந்த புதியவீரரை மதித்ததும் அவமதித்ததுமிலன் ; அவரை இறுகப்பிடித்துப் பரந்தஆகாயத்தின்கண்ணே ஒலியெழக் கவிழ்ந்து உடலம் நிலத்தின்கண்ணே பொருந்தக் கொன்றதற்கு மகிழ்ந்ததுவும் இவ்வாறுசெய்தேமென்று தன்னை மிகுத்ததுவும் அதனினுமிலன.—எ - று.

யார்கொலென்றது, வியப்பின்கட்குறிப்பு.

இழித்தன்றெனபது, இழிந்தன்றென மெலிந்துநின்றது.

(எஎ)

---

(எஅ) வணங்குதொடைப் பொலிந்த 1 வலிகெழு நோன்ற
ளணங்கருங் கடுந்திற லென்னை முணங்குநிமிர்ந்
தளைச்செறி யுழுவை யிரைக்குவந் தன்ன
மலைப்பரு மகல மதியார் சிலைத்தெழுந்
து விழுமியம் பெரியம் யாமே நம்மிற்
பொருநனு மிளையன் கொண்டியும் பெரிதென
வெள்ளி வந்த வம்ப மன்னர்

புல்லென் கண்ணர் புறத்திற் பெயர
ஈண்டவ ரடுதலு மொல்லா னாண்டவர்
மாணிழை மகளிர் நாணினர் கழியத்

---

உ. என்னை - எனதுதலைவன்; (புறநா. அச : க ; அரு : க ; அகூ : கூ; உகூஉ : ரு); "என்னைமுன் னில்லன்மின்" (குறள், எஎக); முணங்குநிமிர்தல்; புறநா. ருஉ : உ-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

ச. புறநா. க0 : கூ - க0 - ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

க - ச. புறநா. ருஉ : க - ச.

கூ. இளையன் : புறநா. எஉ : உ-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

எ. வம்பமள்ளர்: புறநா. எஎ : கூ; எகூ : ரு.

(பி - ம்.)—1 'மதனுடை நோன்றாள்'



தந்தை தம்மூ ராங்கட்
டெண்கிணை கறங்கச்சென் றாண்டட் டனனே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—வளைந்த சந்துகளாற்பொலிந்த வலிபொருந்திய போரின்கண் நிலைதளராத பொனதயினையுடைய தாளினையும் வருத்துதற்கரிய மிக்க வலியையுமுடைய என்னிறைவன் மூரிநிமிர்ந்து முழையின்கட்கிடந்த புலி தான் விரும்பியதோர் இரையை நோக்கிவந்தாற்போன்ற மாறுபடுதற்கரிய மார்பத்தை மதியாராய் ஆர்த்து எழுந்திருந்து, 'சிறப்புடையேம் படையாற் பெரியேம்யாங்கள் நம்மிற பொருவானும் இளையன் கொள்ளையும்பெரிது'

தாகிய வுதையுள்போய்த் தடம்புல லாடி" கந்த. சூரபன்மன்வதை. கஙு.

உ. புறநா. எக: ௪; இவ்வடி ஏழாம்வேற்றுமைத்தொகைக்கு மேற் கோள்; தொல். எச்ச. ௫. கஎ - ந.

௩. புறநா. ௯அ: கங - ௭; சிறந்த ஆடவர் கடைக்குக்களிற்றின் கடை உவமையாதல், "மங்கல மழகளி றனைய செலவுகையன்" (சூளா. குமார கால. ௬); "பொன, குகமு காகமு காண கடந்தான்" (கம்ப. கார்முக. ௩உ) என்பவற்றாலும் அறியலாகும்.

## புறநானூறு மூலமும் உரையும்.

௯௱௬

வெம்போர்ச் செழியனும் வந்தன னெதிர்ந்த
௫ வம்ப மள்ளரோ பலரே
யெஞ்சவர் கொல்லோ பகறவச் சிறிதே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—தனது பழையபகரிவாயிற்கட குளிர்ந்த பொய்கையில்கண்

ட வ மூழ்கி மன்றத்திடத்து வேம்பினது ஒளிய தளிரைச் நடித் தெளிந்த ஓசையையுடைய பறைமுழங்கக களிறுபோலப் பெருமிதத்தோடுநடந்து வெய்ய போரையுடைய நெடுஞ்செழியனும்வநதான்; அவனோடுபகைத்த நிலையிலலாதமறவர் பலரே; பகற்பொழுது மிகச் சிறிதாதலால், அவருட் சிலர் படாதொழியவுங்கூடும்.—எ - று.

போர்மடந்தையைப் புணரவருகின்ற * 1 கன்னிப்போராதலாற் பனிக் கயமண்ணியென்றார்.

இணை முன்னர்வருதல, யானைக்கும், இவனுக்கும் ஒக்கும். (எ௮)

---

* "கடிககணணி வேந்தரை யாற்றுக முடிக்கல்வி வாலைகொண்ட, முடிககணணி மேலவைத்த மும்மதில வேந்தன்" (இறை. மேற். க - தை. ௨); "காண்டிமிக காளைதல் கல்விப் போரொ" (சூளா. அரசியல. எக); "காகுத்தன் கல்விப் போரில" (கம்ப. தாடகை. எஎ); "கன்னி வேட்டை மகவ போக" பெரிய. கண்ணபபர். சு.

(பி - ம்.)—1 'கண்ணிப்போர்'

---

(அ0.) இன்கடுங் கள்ளி னுழை ராங்கண்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
யொருகான் மார்பொ துங் கின்றே யொருகால்
வருதார் தாங்கிப் பின்னொதுங் கின்றே
௫ நல்கினு நல்கா னாயினும் வெல்போர்ப்
1 போரருந் தித்தன் காண்கதி லம்ம
பசித்துப் பணைமுயலும் யானை போல

---

க. "இன்கடுங் கள்ளி னுறந்தை யாங்கண்" அகநா. கஎ.

௨. மதவலி: புறநா. ௨௩ ௨.

௫. நல்கல-உவத்தல்; "நறுமலர்க் கோதாய் நல்கினை கேளாய்" மணி. க : ௫ .

௬. தித்தன் - உறையூரிலிருந்த ஒரு சோழன்; (புறநா. ௩௫௨ : ௯-௧௦); "நொச்சி வேலித் தித்த னுறந்தை" அகநா. ௧௨௨.

எ. புறநா. ௭௩ : ௯ - ௧௧-ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

(பி - ம்)—1 'பொரலருந்தித்தன்'



விருதலை யொசிய வெற்றிக்
களம்புகு [1] மல்லற் கடந்தடு நிலையே

திணை - தும்பை; துறை † ஏகமைமறம்:

சோழன் போர்வைக்கோப்பெருநற்கிள்ளி முக்காவனுட்டு ஆமூர்மல்லனைப்பொருது அட்டுநின்றனைச் சாத்தந்தையார் பாடியது.

இ - ள்.—இனிய அழகிய கள்ளினையுடைய ஆமூரிடத்து வலியையுடைய மல்லனது மிக்க வலியைக்கெடுத்து ஒருகால் மண்டியாக மார்பிலே மடித்துவைத்து ஒருகால் அவன்செய்கின்ற உபாயத்தைவிலக்கி முதுகின் கண்வளைத்தட பசித்து மூங்கிலைத் தின்றற்குமுயலும் யானையையொப்பத் தலையுங் காலுமாகிய இரண்டிடமும் முறியமோதி அக்களத்தின்கட்புக்க அம்மல்லனை எதிர்த்துநின்று கொன்றநிலையை, கண்டால் உவப்பினும் உவவாளாயினும், இவன்றந்தையாகிய வெல்லும் போரினையுடைய பொருதற்கரிய தித்தன்காண்பானாக.—எ - று.

என்றது, தந்தையுடன் வெறுத்துப்போந்தான் அமருட் புகுந்து இப் போர்செய்தானை அவன் விரும்பின் உவக்கின்றான், விரும்பாவிடின் அஞ்சு கின்றானென்பதாம்.

'பணைமுயலும் யானைபோல வொருதலை யொசிய வொற்றி' என்று பாடமோதி, அம்மல்லன் முற்கூறுயினும் பிற்கூறுயினும் ஒருதலைமுறியமோதி

யென்ற உரைப்பாருமுளர்.

தில், விழைவின்கண் வந்தது.

(அ0)

*

ழ. மல்வென்றிக்குமேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. கசு - இளம்; ஷெ ஷெ ரூ. உ0 - ந.

† புறநா. உஎச ; சீவக. உஉ௱கூ - ந.

(பி - ம்.)—1 'மன்னார்க்கடந்தடு'

---

(அக.) ஆர்ப்பெழு கடலினும் பெரிதவன் களிறே
கார்ப்பெய லுருமின் முழங்க லானவே
யார்கொ லளியர் தாமே யார்நார்ச்
செறியத் தொடுத்த கண்ணிக்
கவிகை மள்ளன் கைப்பட் டோரே.

க - உ.

யானைமுழக்கிற்கு இடிமுழக்கு உவமையாதலை, "யானைமுழக் கங்கேட்ட, கதியிற்றே காரின்குரல்" (பரி. ௬: கஎ - ௮); "விசும்பி, னேறெ ழுந்து முழங்கினு மாறெழுந் தசிலைக்கும், கடாஅ யானை" (அகநா. கசச); "கார்ப்பெய லுருமிற் பிளிறி......மைபல வேழ மடங்கலின்" (குறிஞ்சி. கசுஉ - ரு) ; "களிறுங் களித்ததிருங் கார்" (பு - வெ. ரு : உ) என்ப வற்றாலுமறிக.

ந-ச. ஆர்க்கண்ணி: புறநா. அஉ : கூ.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—படையினது ஆரவாரம், எழுகடலுங் கூடி ஒலிக்கும் ஒலியினும் பெரிது ; அவனுடையகளிறு, கார்காலத்துமழையின்கண் இடியினும் முழங்குதலை அமையா ; நாராற் பயிலத்தொடுக்கப்பட்ட ஆத்திக்கண்ணியையும் இடக்கவிந்த கையினையுமுடைய வீரனது கையின்கட் பட்டோராகிய இரக்கத்தக்கார் தாம் யார்கொல்?—எ - று.

(அக)

---

(அ௨.) சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற் றுற்றெனப்
பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றுக்
[1] கட்டி னிணக்கு மிழிசினன் கையது
[2] போழ்தூண் டூசியின் விரைந்தன்று மாதோ
ஊர்கொள வந்த பொருநனொ
டார்புனை தெரிய னெடுந்தகை போரே.*

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

உ. ஞான்றஞாயிறு - அத்தமித்த சூரியன; "ஞான்றுதோன் றவிர்டர்" (அகநா. ௩௬); தொல். தொகைமரபு. சூ. உ௧ - இளம். மேற்.

௩. பிணக்கும் - பிணிக்கும்; "பிணக்கதெ மெஞ்ச சிறைகொண்ட கள்ளே" (சீவக. ௯௧௧); இழிசினன் - இழிவையுடையான் (புறநா. உ௮எ: உ; உ௮௯: ௧௧); "இழிசினர்க்கே யாதும் பசித்தார்க ணீதல், கழிசினக் காத்தல் கடன்" சிறுபஞ்ச. எஎ.

௪. 'விரைவு' என்றும்மெய்ப்பாட்டிற்கு மேற்கோள்; தொல். மெய். கஉ - இளம்.

* ௰. "சாற......போரேயென்பது இழிந்ததன்மேல் வந்ததாலெனின் ...பசியிலாது விரைவு மற்றுள்ளவிரைவின் உயர்ந்ததாதலின் அதுவும் உயர்ந்ததாம்" (தொல். உவம. சூ. ௩ - இளம்); "சாறுதலைக் கொண்டென. .... என்றும் பாட்டிலுள்ள உவமப்பொருளாகிய போழ்தூண்டூசிக்குப் பல அடைகூறி அதனொடு உவமிக்கப்படும் போர்த்தொழிலினை யாதுமோரடையின்றி யோராது கூறினுமியினும் உவமப்பொருளாகிய போர்த்தொழிற்குற்றதும் நேரக் கூறினும்; எங்ஙனே? உண்டாட்டும் கொடையும் உரனொடுநோக்கி மறுத்தலுமுதலாகிய உள்ளக்கருத்தினன் ஒருகணத்துள்ளே பலவேந்தரை நெருக்கு வென்றதற்கு விரைகின்றது போர்த்தொழிலென்பது தெளியப்பட்டமையின்". (தொ. பொ. உ௦-பேர்); "சாறுதலைக் கொண்டென...... கெடுந்தகை போரே: இதனுள் ஆர்புனை தெரியல நெடுந்தகை போர்த்தொழில்வமையாகிய போழ்தூண்டூசித்தொழிற்குப் பலஅடைபுணர்ப்பினும் அவையனைத்தும் போர்த்தொழில விரைவையே சிறப்பித்து வந்தமையால் வழுவாகாது இலக்கணமாம்" இ - வி. சூ. ௬௪௧ - உரை.

(பி - ம்.)—1 'கட்டினிணர்க்குமிழிசனன்' 2 'போழ்துன்னூசி'

21

இ - ள்.—ஊரின்கண் விழாத் தொடங்கிற்றாக அவ்விழாவிற்கு உதவப் போகவும் தன்மனைவி பிள்ளைப்பெறு தலைப்பொருந்தினளாக அவள் மெய்நோவிற்கு உதவப்போகவும் வேண்டிப் பெய்கின்றமழையையுடைய ஞாயிறு வீழ்ந்தபொழுதின்கட் கட்டிலைப்பிணிக்கும் புலைமகன்கையதாகிய வாரைச செலுத்தும் ஊசியினும் விரைந்தது, ஊரைக்கொள்ளவந்த வீரனோடு ஆத்தியாற்றொடுக்கப்பட்ட கண்ணியையுடைய பெருந்தகையது போர்.—எ-று.

நெடுந்தகைபோர், பட்டமாரி ஞான்றஞாயிற்றின்கட் சாறுதலைக்கொள்ள டெனப் பெண்ணீற்றுற்றென இழிசினன்கையதாகிய ஊசியின் விரைந்த. தெனக்கூட்டுக.

சாறுதலைக்கொண்டென அதற்கு உதவப்போகவும், பெண்ணீற்றுற்றென அதற்கு உதவப்போகவுமென வேறுவேறுகொள்க ; ஒன்றாகவுரைப பாருமுளர்.

(அ௨) (ஷ௱.) அடிபுனை தொடுகழன் மையணற் காளைக்கென்
றொடிகழித் திடுதல்யான் யாயஞ் சுவலே
[1] யடுதோண் முயங்க லவைநா ணுவலே
[2] யென்போற் பெருவிதுப் புறுக வென்று
ரு மொருபாற் படாஅ தாகி
யிருபாற் பட்டவிம் மைய லூரே.*

திணை - கைக்கிளை ; துறை - பழிச்சுதல்.

அவனைப் பெருங்கோழிநாய்கன் மகள்நக்கண்ணையார் பாடியது.

இ - ள்.—அடியின்கட்புனைந்த செறிந்த வீரக்கழலினையும் மைபோன்ற

† தாடியினையுமுடைய இளையோன் பொருட்டு எனது வளை என்னைக் கைவிடுதலான், யான் யாரை அஞ்சுவேன் ; அவன்பகையைக்கொலலுந்தோளைத் தழுவுதற்கு அவையின்கணுள்ளாரைநாணுவேன் ; என்னைப்போல மிக்க நடுக்கமுறுவதாக, எக்காளும், யாயேயாதல் அவையேயாதல் ஒருகூற்றிற் படாதாகி யாயும் அவையுமாகி இருகூற்றிற்பட்ட இம்மயக்கத்தையுடையவூர்.—எ - று.

---

க. தொடுகழல் - செறித்தகழல் (புறநா. எஎ: க); மையணற்காளை: "செய்வினைப்பொலிந்த செறிகழ னோன்றாண், மையணற் காளையொடு" (ஐங்குறு. ௩௮௬); "மையணற் காளை மகிழ்தடி" பு - வெ. க: கஉ.

௨. ம. புறநா. உ௫௫: ௩; உ௬௧: ௫; "என்போற் பெருவிதுப் புறுக வென்புழி, போலென்பது போல வென்னுஞ்செயவெனெச்சக்குறிப்பாகிய உவமவுருபு" தொல். எச்ச. ௬. கஅ - ந.

---

* ம. "அடிபுனை தொடுகழன்...மைய ணோரே : இது பெருங்கோழி நாய்கன்மகளொருத்தி, ஒத்த அன்பினாற் காமமுறாதவழியும் குணச்சிறப் பின்றித் தானே காமமுறக் கூறியது இதனினடக்குக" தொல். புறத் திணை. ௬. உஅ - ந.

† தாடி-மீசை; "இரலைமருப்பிற் றிரிந்து மறிந்தவீழ்தாடி" (கலி. க௫); "கலையிரு மருப்பிற் கோடிக் காதள வோடுக்தாடி" திருவிளை: உ௬: உஉ.

(பி - ம்.)—1 'அடுதொறுமுயங்கல்' 2 'எம்போற்பெருவிதிர்ப்பு'



(அ௫.) என்னைக் கூறிஃ தன்மை யானு
மென்னைக்கு நாடிஃ தன்மை யானு
மாடா டென்ப வொருசா ரோரே

யாடன் றென்ப வொருசா ரோரே
ரு நல்ல பல்லோ ரிருநன் மொழியே
யஞ்சிலம் பொலிப்ப வோடி யெம்மின்
முழாவரைப், போந்தை பொருந்தி நின்று
யான்கண் டனனவ னாடா குதலே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—என்னுடையதலைவனுக்கு ஊர் இஃதல்லாமையாலும் என்னுடைய தலைவனுக்கு நாடு இஃதல்லாமையாலும் அவனுக்கு இயல்பாயவெற்றியை அவனதுவென்றியென்று சிறப்பாகச்சொல்லுவர் ஒருபக்கத்தார்; அவனது வென்றியன்றென்றுசொல்லுவர் ஒருபக்கத்தார்; பலரும் ஒத்து ஒவ்வாமற்கூறும் இவ்விருவகைப்பட்ட நல்லவார்த்தையும் நல்லவாயிருந்தன; அவ்வாறுகூறினராயினும், அழகிய சிலம்பார்ப்ப ஓடிச்சென்று, எம்முடையமனையின்கண் முழாப்போலும் பக்கத்தையுடைய பனையைப்பொருந்திநின்று, எனதுவனையும் கலையுமுதலானவை தோற்கும் ஆண்மையுடைமையின், அவனதுவென்றியாதல் யான்கண்டேன்.—எ - று.

பின்னும் ஒருகால் என்னையென்றதனால், இவரது ஆதரவுதோற்றி நின்றது.

நல்லவென்றது, இகழ்ச்சிக்குறிப்பு.

ஆடென்றதூஉம் ஆடன்றென்றதூஉம் அவனைச் சுட்டியேகூறினமையின், இருநன்மொழியும் நல்லவென்றொனினுமமையும். (அரு)

---

க - உ. புறத்திணைப் பகுதியில், தலைவி தலைவனை 'என்னை' என்பதற்கு மேற்கோள்; தொல். பொருளியல், சூ. ௫உ - ந.

எ. "மூழாவரைப் போகதை யரவாய் மாமடல" (புறநா. கஎ௫: ச); ஏதாவதொன் றனைச் சார்ந்துநின்று ஒருவரைப்பார்த்தலும் அங்ஙனம் நின்று ஒன்றைக்கேட்டலும் நாணமுடைய குலமகளிர்க்கு இயல்பு; புறநா. அ௬: க - உ.

---

(பு௬.) சிற்றி னற்றூண் பற்றி நின்மகன்
யாண்டுள னோவென வினவுதி யென்மகன்
யாண்டுள னாயினு மறியே னோரும்

---

௩. புறநா. உஅஉ: ௩.

# புறநானூறு மூலமும் உரையும்.

க௬௫.

புலிசேர்ந்து போகிய கல்லளை போல
வீன்ற வயிறோ விதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே.

திணை - வாகை; துறை - ஏறாண்முல்லை.

*1 காவற்பெண்டின் பாட்டு.

இ - ள்.—சிறிய இல்லின்கண் நல்லதூணைப்பற்றிநின்று நின்மகன் எவ்விடத்துளனோவென்று கேட்பை; என்னுடையமகன் எவ்விடத்துளனாயினும் அறியேன்; புலிகிடந்துபோன கன்முழைபோல அவனைப்பெற்றவயிறோ இஃது; அவன் செருக்களத்தின்கண்ணே தோன்றுவன்; அவனைக்காண வேண்டின் ஆண்டுச்சென்றுகாண்.—எ - று.

'என்றவயிறேவிது' என்றகருத்து : புலிசேர்ந்துபோகிய அளைபோல அவருக்கு என்னிடத்து உறவும் அத்தன்மைத்தென்பதாம்.

ஒருமென்பதூஉம் மாதோவென்பதூஉம், அசைசசொல.

(அ௬)

ச - ரு. "வீடுணர்ந் தோர்க்கும் வியப்பாமா லிந்நின்ற,வாடன் முதியாள் வயிற்றிடம் - கூடார், பெரும்படை வெள்ள நெரிதரவும் பேரா, விரும்புலி சோந்த விடம்" பு - வெ. ஈ : கக.

* காவற்பெண்டு - செவிலித்தாய் ; சிலப். உ௬. அரும்பத.

(பி - ம்.)—[1] 'காதற்பெண்டு'

(அஎ.) களம்புக லோம்புமின் றெவ்விர் போரெதிர்ந்
தெம்முளு முளனொரு பொருநன் வைகல்
லெண்டேர் செய்யுந் தச்சன்
றிங்கள் வலித்த காலன் னோனே.[x]

திணை - தும்பை ; துறை - தானைமறம்.

[1] அதியமான்நெடுமானஞ்சியை ஔவையார் பாடியது.

இ - ள்.—போர்க்களத்தின் கட்புகுதலைப் போற்றுமின், பகைவிர், போரிலகண யாறுபட்டு. எங்களுள்வைத்தும் ஒருவீரனுளன் ; ஒருநாள் எட்டுத்தேரைச் செய்யுந்தச்சன் ஒருமாதங்கூடிக் கருதிச்செய்யப்பட்டதொரு தேர்க்காலையொப்பன்.—எ - று.

போரெதிர்ந்து களம்புகலோம்புமின், எம்முளுமுளனெனக்கூட்டுக.

எம்முளுமென்ற உம்மை, சிறப்பும்மை.

தேர்க்காலோடு உவமை, விரைவும் திண்மையுமாகக்கொள்க.

(அஎ)

க. "என்னைமுன் னில்லன்மின் றெவ்விர்" குறள், எஎக.

* மூ. வாகைத்திணையின் துறைகளு ளொன்றாகிய, 'அரும்பகை தாங்கு மாற்றலானும்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. கஎ. இளம்; ஷை ஷை ஷை உக - ந.

(பி - ம்.)—1 'அதிகமானெடுமானஞ்சி'



யாவி ராயினுங் கூழை தார்கொண்
டியாம்பொருது மென்ற லோம்புமி னோங்குதிற
லொளிறிலங்கு நெடுவேன் மழவர் பெருமகன்
கதிர்விடு நுண்பூ ணம்பகட்டு மார்பின்
விழவுமேம் பட்ட நற்போர்
முழவுத்தோ ளென்னையைக் காணா வூங்கே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—எப்பெற்றிப்பட்டீராயினும், அணியையும் தூசியையுங் கொண்டு யாம் அவனோடு பொருவோமென்றுசொல்லுதலைப் பாதுகாமின், உயர்ந்த வலியையுடைய பாடஞ்செய்யும் விளங்கிய நெடியவேலையுடைய இளையோர்க்குத் தலைவனாகிய சுடர்விடுகின்ற நுண்ணிய தொழிலையுடைய பூணணிந்தஅழகிய வலிய மார்பினையும் களவேள்விமுதலாகிய விழாச்சிறந்த நல்லபோரைச்செய்யும் முழாப்போலுந்தோளினையுமுடைய என்னிறைவனைக் காண்பதற்குமுன்; கண்டால் அதுசெய்தல் அரிதாகலான்.—எ - று.

என்னையைக் காணாவூங்கு யாவிராயினும் பொருதுமென்றல் ஓம்புமினெனக்கூட்டுக. (அஅ)

ந. மழவர் - ஒருவகை வீரர் (புறநா. கூ0: கக) ; "உருவக்குதிரை மழவர்" (அகநா. க: உ); 'கழற்காலர் மழவர்", "பெருந்தோண் மழவர்" மதுரை. நகரு, கூஅஎ.

ரு. புறநா. அச: ௪.

கூ. ஊக்கு - இங்கே காலமுன்; புறநா. எசு: ந; கசக: எ.

---

(அகூ.) இழையணிப் பொலிந்த வேந்துகோட் டல்குன்
மடவர லுண்கண் வாணுதல் விறலி
பொருநரு முளரோநும் மகன்றலை நாட்டெனை
வினவ லானுப் பொருபடை வேந்தே
யெறிகோ லஞ்சா வரவி னன்ன
சிறுவன் மள்ளரு முளரே யதாஅன்று

---

உ. "மடவரல வள்ளி" (முருகு. க0உ); "மடவரல் மகளிர்" பெரும் பாண். நஅஎ.

ச. "வினவ லானுப் புனையிழை" அகநா. உகூ: கச.

ரு-கூ. "அரவியத் தறுகண் வன்று ளாஅ", "மூரி வெஞ்சிலை யிராவண

னராவென முனிநதாள்" (கம்ப. முதற்போர். கருக, உநகூ) ; "கதையிற் ருக்கப்படு மரவென்னப் பொங்கி" காஞ்சிப். பாசிரம. நக.

பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை
வளிபொரு தெண்கண் கேட்பி
னதுபோ ரென்னு மென்னையு முளனே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—மணிக்கோவையாகிய அணியாற்பொலிந்த ஏந்திய பக்கத்
தையுடைய அல்குலினையும் மடப்பத்தினையும் மையுண்டகண்ணினையும் ஒளிதங்கிய நுதலினையுமுடைய விறலி, என்னோடு பொருவாருமுளரோ

நம்முடைய பெரிய இடத்தினையுடைய நாட்டின்கண்ணென என்னைக் கட்டமையாத செருச்செய்யுந்தானையையுடைய வேந்தே, நீ போர்செய்யக் கருதுவையாயின், எம்முடைய நாட்டின்கண்ணே அடிக்குங்கோலுக்கு அஞ்சாது எதிர்மண்டும் பாம்புபோன்ற இளைய வலியவீரருமுளர்; அதுவேயன்றி, மன்றின்கண் தூங்கும் பிணிப்புற்ற முழவினது காற்றெறிந்த தெளிந்த ஓசை வாயுடைய கண்ணின்கண் ஒலியைக்கேட்பின், அது போர்ப்பறையென்று மகிழும் என்னுடைய தலைவனுமுளன்.—எ - று.

'தெண்கண்' என்றது, அதன்கண் ஓசையை.

போரென்றது, போர்ப்பறையை.

(அக)

எ - அ. புறநா. கஉஅ: உ - ௩.
௯. புறநா. ௩க: ௯ ; உஎ௯ : எ.

(கூ0.) உடைவளை கடுப்ப மலர்ந்த காந்த சிவ க.
ளடைமல்கு குளவியொடு கமழுஞ் சாரன்
மறப்புலி யுடலின் மான்கண முளவோ
மருளின விசும்பின் மாதிரத் தீண்டிய
விருளு முண்டோ ஞாயிறு சினவி
னச்சொடு தாக்கிய பாருற் றியங்கிய
பண்டச் சாகாட் டாழ்ச்சி சொல்லிய

---

க. "இவட்கே, யலங்கிதழ்க் கோடல வீயுகு பவைபோ, லிலங்கே ரெல ்ா யிறையூ ரும்மே", "ஊழுறு கோடலபோ லெல்வளை யுகுபவால்" (கலி. எ, [redacted] கசஅ) ; "வளையுடைந் தன்ன வள்ளிதழ்க் காந்தள்" மலை படு. ருகக.

ரு. "ஞாயிற்று முன்ன ரிருள்போல மாய்ந்ததென், னுயிழை மேனிப் பசப்பு", "ஞாயிற்று முன்ன ரிருள்போல மாய்ந்ததென், னுயிழை யுற்ற துயர்", "ஆயிழை மடவா லவலமகலப், பாயிருட் பரப்பினைப் பகல்களைந் ததுபோல" கலி. சஉ, கசரு, கசஅ.

எ. சொல்லிய : புறநா. ருக: க.

அ - க. புறநா. கூ0: எ - கூ ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.



1 வரிமணன் ஞெமரக் கற்பக நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ
வெழுமரங் கடுக்குந் தாடோய் தடக்கை
வழுவில் 2 வன்கை மழவர் பெரும

விருநில மண்கொண்டு சிலைக்கும்
பொருநரு முளரோ நீகளம் புகினே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—முரிந்த வளையையொப்ப மலர்ந்த வெண்காந்தட்பூ இலை தழைத்த *குளவியுடனே நாறும் மலைச்சாரற்கண் மறத்தையுடைய புலிசீறின் எதிர்நிற்க வல்ல மானினமுமுளவோ? மயங்கிய ஆகாயத்திடத்தும் திசையின்கண்ணும் செறிந்த இருளுமுண்டோ ஞாயிறு கொதித்தெழுமாயின்? பாரத்துமிகுதியாற் பார் அச்சுமரத்தோடு வந்து தாக்கி உற இருத்தலின் நிலத்தின்கட்குளித்த பண்டத்தையுடைய சகடத்தினது ஆழ்ச்சியைப்போக்குதற்குப் புலைகொழிக்கப்பட்ட மணற்பாக்கவும் கற்பிளக்கவும் நடக்க வல்ல மிக்க மனச்செருக்கினையுடைய கடாவிற்குப் போதற்கரிய துறையுமுண்டோ? இல்லையன்றே; அவைபோல, கணையமரத்தையொக்கும் முழந்தாளிலேபொருந்திய பெரியகையாகிய தப்பாத வன்மையைச் செய்யும் கையினையுடைய வீரர்க்குத்தலைவ, பெரிய நிலத்தின்கண் நின்று மண்ணைக்கொண்டு ஆர்க்கும் வீரரும் உளரோ? இல்லையன்றே, நீ போர்க்களத்திற் புகின்.—எ - று.

மழவர்பெரும, நீ களம்புகின், பொருநருமுளரோ? இல்லையன்றே யெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

தடக்கையையுடைய பெருமவெனக்கூட்டி, வன்கையை மழவரொடு கூட்டியுரைப்பினுமமையும்.

இருநிலமாகிய மண்ணென்பாருமுளர்.

'மதப்பகடு' என்பதூஉம் பாடம்.

(௯0)

அ - கூ. "வரிமணல் ... உண்டோவென்றாற்போலும் உவமப்பொருள்களும் இக்காலத்திற்கு ஆகாவாயின" தொல். செய். சூ. அ௦ - ந.

க௦. எழுமரம் - கோட்டைக்கதவின் உட்புறத்தே குறுக்காகப் போடப்படும் வலியமரம் (புறநா. கஎ: அ); கணையமரமெனவும் வழங்கும்; "முழுவிறற் கணையம்" (சிலப். கரு: உகரு) என்பதன் உரையைப் பார்க்க. தாடோய் தடக்கை: புறநா. ருக: உ.

கக. வழுவில் வன்கை: "கருணையாற் குழைக்குங் கைகளா, வாளமர் நீந்தும் போழ்தின் வழுவழுத் தொழியு மென்றான்" சீவக. உருஎ.

* குளவி - மலைமல்லிகை; புறநா. ககூஅ: கஉ - உரை.

(பி - ம்.)—1 'வரிமணன்ஞமல்' 2 'வண்கை'



இ - ள்.—வெற்றியுண்டான தப்பாத வாளையெடுத்துப் பகைவர் களத்தின்கட்பட வென்ற கழலவிடப்பட்ட வீரவளைபொருந்திய பெரிய கையினையுடைய மிக்க ஆரவாரத்தைச் செய்யும் மதுவினையுடைய அதியர்கோமான் மாற்றாரைப் போரின்கட்கொல்லும் வீரச்செல்வத்தினையும் பொன்னாற்செய்யப்பட்ட மாலையையுமுடைய அஞ்சி, நீ பால்போலும் பிறைநுதல்போலப் பொலிந்த திருமுடியினையும் நீலமணிபோலும் கரிய திருமிடற்றினையுமுடைய ஒருவனைப்போல நிலைபெறுவாயாக; பெரும, நீ, பழைய பனியையுடைய பெரியமலையிடத்து விடரின்கண் அரிய உச்சிக்கட்கொள்ளப்பட்ட சிறிய இலையினையுடைய நெல்லியின் இனிய பழத்தைப் பெறுதற்கரிதென்று கருதாது அதனாற்பெறும் பெரும்பேற்றினை எமக்குக்கூறாது நின்னுள்ளே அடக்கிச் சாதலொழிய எமக்கு அளித்தாயாதலால்.—எ - று.

என்றுடைய வாயின்கட்சொலலும் அத்தன்மையன,பகைவரது காவலையுடைய்தாகிய மதிலையுடைய அரண் பலவற்றையும் வென்ற நெடுமானஞ்சி, நீ அருளுதலால.—எ - று.

". மழலை - எழுத்து வடிவுபெறாத தோற்றம் இளஞ்சொல; "மெய் பெறா வெழுத்துயிர்க்கு மழலை" (சீவக. கூ௬க)| "அவர்மழலை கேட்டலதெ ணிதோ" இனியது. கரு.

## புறநானூறு மூலமும் உரையும்.

கஎக

புதலவர்மழலை தநதைபர்க்கு அருளவந்தல; அஞ்சி, நீ அருளுத லால்,

வாய்சசொலலும் அவவளவெனக கூட்டுக.

யாழென்றது, யாழிற்பிறநத ஓசையை.

பொருளுமென்னும் உம்மை, விகாரத்தால தொக்கது.

(கூ௨)

---

(௲ாம்.) திண்பிணி முரசு மிழுமெண முழங்கச்

சென்றமர் கடத்தல் யாவது வந்தோர்

தார்தாங் குதலு மாற்றார் வெடிபட்

டோடன் மரீஇய பீடின் மன்னர்

௫ நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்

காதன் மறந்தவர் தீதுமருங் கறுமா

ரறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புற பரப்பினர் கிடப்பி
மறங்கந் தாக [1] நல்லமர் வீழ்ந்த
நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென
வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர் மாதோ
வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்
தண்ணல் யானை யடுகளத் தொழிய
வருஞ்சமந் ததைய நூறிநீ
பெருந்தகை விழுப்புண் பட்ட மாறே.*

---

க. "ஏமமுரச மிழுமென முழங்க" புறநா. ௩: ௨.

௬. நன் - மயிலை. ௫. ௩௬க - மேற்.

க0. செலவுழிச்செல்க : நன் - வி. ௫. கூ ; ஓ - வி. ௫.

கூஅ -

௪ர, மேற்.

க0 - கக. நல் - மயிலை. ௫. உ௨அ; இ - வி. ௫. கரு௬ - உரை.

௮ - கக. புறநா. எச: க - உ ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

கஉ. புறநா. ௨௨: க௩.

கஉ - ௩. "வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்துப், பொறிநுதற் பொலிந்த வயக்களிறு" (அகநா. எஅ: ௩ - ௪); "வரிவண் டார்க்கும் வாய்புகு கடாஅத்த, வண்ணல யானை" தொல். களவியல், ௫. கக - ந. "என்னியது" என்றுமேற்கோளிலுள்ளது.

கரு. விழுப்புண் - முகத்திலும் மார்பிலும்பட்ட புண்; குறள்,

எ௭௬ -

௮ மேல்.

* மு. வஞ்சித்திணைத்துறைகளுள், 'அடுத்தூர்ந்தட்ட கொற்றம்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. எ - இளம்.

(பி - ம்.)—1 'வாளமர்'



திணை - வாகை; துறை - அரசவாகை.

அவன் பொருது புண்பட்டு நின்றானை அவர் பாடியது.

இ - ள்.—திண்ணிய பிணிப்பையுடைய முரசம் இருமென்னும் ஓசையையுடைத்தாய் ஒலிப்ப மேற்சென்று போரைவெல்லுதல் இனி எங்கேயுள்ளது? நின்னோடு எதிர்ந்துவந்தோர், நினது தூசிப்படையைப் பொறுத்தற்கும் மாட்டாராய்ச் சிதறிக்கெட்டுப்போகவிடுமே மருவிய பெருமையில்லாத அரசரது நோயின்பக்கத்தால் இறந்த உடம்பினைத் தமது ஆசைத் தன்மையை மறந்து அவர் வாளாற்படாத குற்றம் அவரிடத்தினின்றும் நீங்க வேண்டி அறத்தைவிரும்பிய கோட்பாட்டையுடைய நான்குவேதத்தையுமுடைய அந்தணர் நல்லசூத்திரத்திலே பொருந்திய பசிய தருப்பைப்புல்லைப் பரப்பினவராய்க் கிடத்தித் தமது ஆண்மையே பற்றுக்கோடாக நல்ல பூசலின் பட்ட மேம்பட்ட வீரக்கழலினையுடைய வீரர்செல்லும் உலகத்திலே செல்கவென்று வாளோக்கியடக்கும் இழிதகவும் பிழைத்தார்கள், வரியையுடைய தேனீ ஒலிக்கும் வாயின்கண்ணைவந்துபுகுகின்ற மதத்தினையுடைய தீமைபொருந்திய யானை போர்க்களத்தின்கண்ணேபட்ட பொறுத்தற்கரிய பூசற்கண்ணே சிதறவெட்டி, பெரிய தகைமையையுடையாய், நீ சீரிய புண் பட்டபடியால்.—எ - று.

பெருந்தகாய், நீ அருஞ்சமம் ததையத் தாக்கி விழுப்புண்பட்டமையால் நின்னோடெதிர்த்துவந்தோர்தாம் பீடில மன்னர் இவரிகந்த யாக்கைதழீஇ நீள்கழல் மன்னர் செலவுழிச்செல்லென வாள்போழ்ந்தடக்கலும் உய்ந்தனராதலின், இனி நின்னோடெதிர்ப்பாரின்மையின், முரசமுழங்கச்சென்று அமர்கடத்தல் யாவதெனக்கூட்டுக.

சென்றமர்கடத்தல யாவதென்றதனையும் வாள்போழ்ந்தடக்கலுமுய்ந்தனரென்றதனையும் வந்தோர்பட்டமை விளக்கும்.

* இன்னும் இதற்கு நின்வாளாற் பட்டுத் துறக்கம்பெற்றதேயன்றி வாள்போழ்ந்து அடக்கலுமுய்ந்தனராகலின், அவர்க்குப் பின்மேற்சென்று அமர்கடத்தல என்னபயனுடைத்தென்றுரைப்பினுமமையும்.

இனி, வந்தோராகிய மன்னர் நீ விழுப்புண்பட்ட படியாலேவாள் போழ்ந்தடக்கலும் உய்ந்தார்; இனி நின்னோடெதிர்ப்பாரின்மையின் மேற் சென்று அமர்கடத்தல யாவதெனக்கூட்டி அதற்கேற்ப உரைப்பாருமுளர்.

தார்தாங்கலுமென்ற உம்மை, இழிவுசிறப்பு.

வாள்போழ்ந்தடக்கலுமென்பது, நினக்குத்தோலைத்தாரென்னும் இழி தகவேயன்றித் தமர்வாள்போழ்ந்தடக்குமிழிவையும் உய்ந்தனரென எச்சவும்மையாய்நின்றது. (௩)

---

* இப்பொருள், "போற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு, மாற்றா ரென்னும் பெயர்பெற், றாற்றா ராயினு மாண்டுவாழ் வோரே" (புறநா உ௬: க௬ - அ) என்பதை நினைப்பிக்கின்றது.

(கூச.) ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்
1 நீர்த்துறை படியும் பெருங்களிறு போல
இனியை பெரும வெமக்கே மற்றதன்
துன்னருங் கடாஅம் போல
ரு இன்னாய் பெருமநின் னொன்னா தோர்க்கே.*

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ-ள்.—ஊரின்கட் சிறுபிள்ளைகள் தம் தம் வெள்ளிய கோட்டைக் கழுவுதல் காரணமாக நீரையுடைய துறைக்கண் படியும் பெரிய களிறு அவர்க்கு எவ்வாறு எளிதாய் இனிதாம்? அவ்வாறே எங்களுக்குப் பெரும, இனியை; மற்றதனுடைய அணுகுதற்கரிய மதம்பட்ட நிலைமை எவ்வாறு இன்னாதாம்? அதுபோலப் பெரும, நின்பகைவர்க்கு இன்னாய்.—எ-று.

கழாஅலின் என்பதற்குக் கழுவப்படுதலாலெனினுமமையும். (கூச)

---

க. ஊர்க்குறுமாக்கள்: (புறநா. க0ச: உ.); "ஒலித்தொருங் கீண்டிய ஊர்க்குறு மாக்களும்" மணி. கரு: ருக.

ச. புறநா. ரு: ௪.

* மு. பாடாண்டிணைத் துறைகளுள், 'இயன்மொழி' என்பதற்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. உ௯ - இளம்); "ஊர்க்குறுமாக்களென்னும் பாட்டினுள் உவமையாகிய பொருளினை யானையும் கடாமுமென்று இரண்டாக்கி யானைக்கே ஊர்க்குறுமாக்கள் வெண்கோடு கழாலின் நீர்த்

துறை படியுமென்னும் அடைகூறி யூர்க்குறமாக்க ளபோலவாரைத் தம் பெருங் கடாத்திற்குச் சொல்லாமையின் இதுவும் வேறுபடவந்த உவமத் தோற்றமெனப்பட்டது" தொல். உவம. ௩. ௬௨ - பேர்.

(பி - ம்.)—1 'நீரத்துமறப் படி'

---

(௯௫.) இவ்வே, பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்டிர ளேோன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே யவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
௫ கொற்றுறைக் குற்றில மாதோ வென்றும்

---

௪. வேலுக்குப்பீலியணிதல்: "தொடையமை பீலிப் பொலிந்த கடிகை, மடையமை திண்சுரை மாக்காழ் வேல" அகநா. ககர :கஉ - ௩.

௩. புறநா. உஎஉ: ௪; "கடியுடை வியனகர்ச் சிறுகுறுந் தொழுவர்" நெடுநல். சக.

௫. "அழல்வாய்க் கிடந்த வைவேல" (சீவக. கஙரு) என்பதற்கு, 'கொலைலனுலையை விரும்பினவேல' என்று பொருள்கூறி, "கொற்றுறைக்குற்றில" என்பதனை மேற்கோள்காட்டினர் நச்சினார்க்கினியர்.



முண்டாயிற் பதங்கொடுத்
தில்லாயி னுடனுண்ணு
மில்லோ ரொக்கற் றலைவ
னண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே

அ. "கற்றவர் கற்று ... பானை பொககல" திருச்சிற். ௪௦௦.

' ம. வாகைத்திணைத்துறைகளுள், 'பெரும்பகை தாங்கும் வேல' என்ப தற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. ரு. கன - இளம்; ஷை மேடி மேடி

உக - ந.

† "இறுதி பயப்பினு மெஞ்சா நிறைவற், குறுதி பயப்பதாந் தூது"

என்னும் (௬௯௦) குறளின்படி தம்முடைய அரசனது மேம்பாட்டை வேற்று வேந்தனிடத்து ஔவையார் இசெய்யுளாவாயிலாக எடுத்துக்கூறியவன்மை மிகவும் பாராட்டற்பாலது.

‡ பணிக்களரி - வேலைசெய்யுங்கொட்டில்.

---

(கூகூ.) அவர்பூந் தும்பை யம்பகட்டு மார்பிற்
றிரண்டுநீடு தடக்கை யென்னை யிளையோற்

க. அம்பகட்டு மார்பு: புறநா. அஎ: ௪.

புறநானூறு மூலமும் உரையும்.

கஎ௩

கிரண்டெழுந் தனவாற் பகையே யொன்றே
பூப்போ லுண்கண் பசந்துதோ ணுணுகி

Γ.

1. "முனிதல - வெறுத்தல்; அஃது அருளும் சொல்லுமின்றி இடைவிடாததாதல்; 'வாழ்க்கை முனிந்தான்' எ-ம், 'உரையுண் முனியுமவன் செலவுண் மறப்பரே' எ-ம் சொல்லுபவாதலின்" தொல். மெய்ப்பாடு. (ந. உ - பேர்.

ப - கூ. புறநா. ௬௫: கூ - கo.

---

(கஎ.) போர்க்குறைஇப் புகன்றுகழித்தவா
ளு'_ன்றவர்காப்புடை மதிலழித்தலி
னூறுற மூழ்கி யுருவிழந் தனவே



வேலே, குறும்படைந்த வரண்கடந்தவர்
நறுங்கள்ளி னூடுடைத்தலிற்
சுரைதழீஇய விருங்காழொடு
மடைகலங்கி நிலைதிரிந்தனவே
களிறே, எழூஉத்தாங்கிய கதவுமலைத்தவர்
[1] குழூஉக்களிற்றுக் குறும்புடைத்தலிற்
பருஉப்பிணிய தொடிகழிந்தனவே
மாவே, பரந்தொருங்கு மலைந்தமறவர்

பொலம்பைந்தார் கெடப்பரிதலிற்
களனுழந் தசைஇய மறுக்குளம் பினவே
அவன்றானும், நிலந்திரைக்குங் கடற்றானைப்
பொலந்தும்பைக் கழற்பாண்டிற்
கணைபொருத துளைத்தோலன்னே
ஆயிடை, உடன்றோ ருய்தல் யாவது தடந்தாட்
பிணிக்கதிர் நெல்லின் செம்மன் மூதூர்
நுமக்குரித் தாகல் வேண்டிற் சென்றவற்
கிறுக்கல் வேண்டுந் திறையே மறுப்பி
னொல்வா னல்லன் வெல்போ ரானெனச்
சொல்லவுந் தேறீ ராயின் மெல்லியற்
கழற்கனி வகுத்த துணைச்சில் லோதிக்
குறுந்தொடி மகளிர் தோள்விட
லிறும்பூ தன்றஃ தறிந்தா டுமினே.

திணையும் துறையும் அவை.

அதியமான்நெடுமானஞ்சியை அவர் பாடியது.

இ - ள்.—போரைச்செய்தற்குப் படைபெயர்த்து உலாவி விரும்பி உறைகழித்தவாள்கடாம், பகைத்தவரது காவலையுடைய அரணையழித்தலால

௪ - ௭. "மடையமை திண்சுவர் மாக்காழ்வேல", "மாக்காழ் நெடுவேல" (அகநா. ௧௧௬, ௯ ); "காழ்மண் டெஃகம்" மதுரை. ௭௩௬; மலைபடு. ௧௨௯,

௯ - ௰. புறநா. ௪: ௧௦ - ௧௧; மகரஉகரவீற்றுச்சொற்கள் நீண்டு உகரம் பெறுதற்கு மேற்கோள்; தொல். உயிர். ௬. ௫௪ - ௩; இ - வி. ௫. ௯௫ - உரை.

௧௧ - ௩. புறநா. ௯௮: ௫ - ௭.

௧௪. "நிலந்திறைத்தானை" சிலப். உ௮: ௧௮௰.

௧௫. புறத்திணைமாலை பொன்னாற் செய்யப்படல்: புறநா. ௨௨: ௨௦.



அவர் தசையின்கண்ணே உறக்குளித்துக்* கதுவாய்போய்வடிவிழந்தன; அவன் வேல்கள்தாம், குறும்பர்சேர்ந்த அரண்களைவென்று அப்பகைவரது கடிய மதிலையுடைய நாட்டையழித்தலாற் சுரையோடுபொருந்திய கரியகாம் புடனே ஆணிகலங்கி நிலைகெட்டன; அவன் களிறுதாம், கணையமரத்தால் தடுக்கப்பட்ட கதவைப்பொருது அப்பகைவரது திரண்ட களிற்றையுடைய ஊரையழித்தலாற் பரிய பிணித்தலையுடையவாகிய இம்புரிகள கழன்றன; அவன் குதிரைதாம், பாய்ந்துவந்து ஒக்கப்பொருதவீரரது பொன்னாற்செய்யப்பட்ட பசிய மாலையையுடைய மார்பு உருவழிய ஓடுதலாற் போர்க்களத்தின்கட் பொருதுவருந்திய குருதியான் மறைப்பட்ட குளம்பையுடையவாயின;

அவன்றானும், நிலவுலகத்தைத் தன்னுள்ளேயடக்கும் கடல்போன்ற படையுடனே பொன்னாலியன்ற தும்பைக்கண்ணியையுடைய, கழல்வடிவாகவும் கிண்கிணிவடிவாகவும்செய்து செறிக்கப்பட்டு அம்புபடுதலால் துளைபட்ட பரிசையையுடையன் ; அவ்விடத்து அவனால் வெகுளப்பட்டோர் பிழைத்தல் எங்கேயுளது ? பெரியதாளினையும் ஒன்றோடொன்று தெற்றிக்கிடக்கின்ற கதிரினையுமுடைத்தாகிய நெல்லினையுடைய தலைமைபொருந்திய பழையவூர் நுங்கட்கு உரித்தாக வேண்டுவிராயிற் போய் அவனுக்குத் திறைகொடுத்தல் வேண்டும் ; கொடீராயின், அதற்கு உடம்படுவானல்லன் வெல்லும்பூசலையுடையானென்று யான்சொல்லவும் தெளியீராயின், நுமக்கு மெல்லிய தன்மையையும் கழன்மணியினது கனியால் கூறுபடுத்துச் சுருட்டப்பட்ட இனமாகிய சிலவாகிய பனிச்சையையும் குறிய வளையையுமுடைய உரிமைமகளிரது தோளைப் பிரிந்துறைதல் வியப்பன்று ; அதனையறிந்து போர்செய்ம்மின்.—எ - று.

அறிந்தாடுமினென்றகருத்து, அறியீர் போர்செய்தல் அரிதென்பதாம்.

குறும்பு - சிற்றரண்.

கடற்றானையினையும், பொலந்தும்பையினையுமுடைய அவன்றானுமெனக.()

---

* கதுவாய்போய் - வடுமிக்கு (பெருங். க. ௩௫: ௧௬௯ - குறிப்புரை); "அரக்கன் கதுவாய்த் தலைகள் பத்தலறிடக் கண்டான்", "கதுவாய்த் தலையிற் பலிநீகொள்ளக் கண்டாலடியார் கவலாரோ" தேவாரம்.

---

(௯௮.) முனைத்தெவ்வர் முரணவியப்
பொரக்குறுகிய நுதிமருப்பி
னினக்களிறு செலக்கண்டவர்

மதிற்கதவ மெழுச்செல்லவும்
பிணனழுங்கக் களனுழக்கிச்
செலவமைஇய மறுக்குளம்பினி
னினநன்மாச் செலக்கண்டவர்

ரு - எ. புறநா. கஎ: கக - ௧ ; "எறிபிண மிடறிய செம்மறுக் குளம்பிற், பரியுடை நன்மா" பதிற். கூரு: க - உ.





கவைமுள்ளிற் புழையடைப்பவும்
மார்புறச் சேர்ந்தொல்காத்
தோல்செறிப்பினின் வேல்கண்டவர்
தோல்கழியொடு பிடிசெறிப்பவும்
வாள்வாய்த்த வடுப்பரந்தநின்
மறமைந்தர் மைந்துகண்டவர்
புண்படுகுருதி யம்பொடுக்கவும்
நீயே, ஐயவி புகைப்பவுந் தாங்கா தொய்யென
வுறுமுறை மரபிற் புறநின் றுய்க்குங்
கூற்றத் தனையை யாகலிற் போற்றுநி
ரிரங்க விளிவதுகொல்லோ வரம்பணைந்
திறங்குகதி ரலம்வரு கழனிப்
பெரும்புனற் படப்பையவ ரகன்றலை நாடே.

திணை - வாகை. துறை - அரசவாகை; திணை-வஞ்சியும், துறை கொற்றவள்ளையுமாம்.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—போர்முனைக்கட் பகைவரது மாறுபாடு அடங்கப் பொருத லால் தேய்ந்துகுறைந்த நுனையுடைத்தாகிய கோட்டையுடைய நினது இளை மாகிய யானை போகக்கண்ட பகைவர் தமது மதிலவாயிற்கதவங்களும் கணையமரங்களும் புதியனவாக இடுதற்குப் பழையன போகவும், பட்டோரது பிணம் உருவழியப் போர்க்களத்தை உழக்கிச்செலுதலால் வருந்திய குருதிக்கறைபொருந்திய குளம்பையுடைய நினது இளமாகிய நல்ல குதிரை போகக்கண்ட அப்பகைவர்தாம் கவைத்தவேலமுள்ளாற் காட்டுவாயில்களை அடைப்பவும், நின்பகைவரது மார்பின்கண் எதிர்ந்தவழி ஆண்டுத்தைத்து நில்லாது உருவிப்போன உறையின்கட் செறித்தலில்லாத நின்வேலைக்கண்ட பகைவர் தமது கிடுகைக் காம்புடனே கைந்நீட்டுச் செறிக்கவும், வாள் வாய்க்கத் ததைத்த வடுப்பரந்த நின்னுடையமறத்தையுடையவீரரது வலியைக் கண்ட அப்பகைவர் புண்பட்ட குருதியையுடைய அம்பைத் தூணியகத் தடக்கிக் கொள்ளவும், நீதான் வெகுண்டு நோக்குதலைக் காவலாகப் பகைப்பவும் தரியாது விரைய வந்து பொருந்துதன்முறைமையையுடைய இயல்பிற் புறத்தேநின்ற உயிரைக் கொடுபோதும் கூற்றத்தையொப்பை; ஆதலால் பகைவரிரங்கக் கெடுவது கொல்லோ! வரம்பைச்சேர்ந்து விளையும் நெற்கதிர் சுமந்தும் கழனியொடு மிக்க நீர்ப்பக்கத்தையுடைய அவரது அகன்ற இடத்தையுடைய நாடு.—எ - று.

செல்லவுமென்பது முதலாய செயவெனெச்சங்கள் கூற்றத்தனையை யென்னும் வினைக்குறிப்பொடு முடிந்தன.

---

கரு. புறநா. உ௬௩: உ.

கசு. புறநா. ௭௬: ௫; "இறங்குகதிர்க் கழனியும்" சிலப். கச: உ.

நீ கூற்றத்தனையையாகலிற் போற்றார்நாடு அவரிரங்க விளிவதுகொல் லெனக்கூட்டுக.

கொல்லும் ஓவும் அசைநிலை.

(௯௮)

---

(௯௯.) அமரர்ப் [1] பேணியு மாவுதி யருத்தியு
மரும்பெறன் மரபிற் கரும்பிவட் டந்து
நீரக விருக்கை யாழி சூட்டிய
தொன்னிலை மரபினின் முன்னோர் போல
வீகையங் கழற்கா லிரும்பனம் புடையற்
பூவார் காவிற் புனிற்றுப்புலா னெடுவே
லெழுபொறி நாட்டத் தெழாஅத் தாயம்
வழுவின் றெய்திய மமையாய் செருவேட்
டிமிழ்குரன் முரசி னெழுவரொடு முரணிச்
சென் றமர் கடந்துநின் னாற்ற றோற்றிய
வன் றும் பாடுநர்க் கரிதே யின்றும்
பரணன் பாடினன் மற்கொன் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறிநின்
னரண்டு திகிரி யேந்திய தோளே.

திணையும் துறையும் அவை.

அவன் கோவலூரெறிந்தானை அவர் பாடியது.

இ - ள்.—தேவர்களைப் போற்றி வழிபடும் அவர்களுக்கு வேள்விக்கண் ஆவுதியை அருந்துவித்தலும் பெறுதற்கரிய முறைமையையுடைய கரும்

---

க. மு. பட்டின. ௨00; ஞானாமிர்தம் கஎ; பேணென்னும் உரிச்சொல் பெட்பின்பொருளில் வருதற்கு மேற்கோள்; தொல். உரி. ௯. ௪௨. பேர்; சே; ஷெ ஷெ ஷெ ௪0 - ந; ஸ்ரீ - வி. ௯. ' அக - உரை.

௨. இவன் முன்னோர் விண்ணுலகத்திலிருந்து இவ்வுலகத்திற்குக் கரும்பைக்கொண்டு வந்தனரென்பது, புறநா. ௩௯௨: ௧௯ - ௨௧ ஆம் அடிகளாலுமறியப்படும்.

௫. "மாயிரும் புடையல் மாக்கழல் புனைந்து", "இரும்பனம் புடையல் ஈகை வான்கழல்", "இரும்பனம் புடையலொடு வான்கழல் சிவப்ப", "புடையலங் கழற்கால்" (பதிற். ௬௭: ௮; ௪௨: ௧; ௫௭: ௨; ௮0: ௭); "புடையலங் கழற்கால்" அகநா. ௨௯௫: ௧.

௭. எழுபொறி - ஏழிலாஞ்சனை; இவை ஏழரசர்க்குரியன; இது, "கேழல் மேழிகலை யாளி வீணைசிலை கெண்டை யென்றினைய பல்கொடி" (கலிங்க. கடவுள். ௧௮) என்பதனாலும் ஒருவாறு விளங்குகின்றது.

(பி - ம்.)—1 'பேணியாகுதி'

யை விண்ணுலகத்தினின்று இவ்வுலகத்தின்கட் கொடுவந்து தந்தும் கடவுட் குட்பட்ட நிலத்தின்கண்ணே சக்கரத்தை நடாத்திய பழமையமைந்த பொருந்திய முறைமையையுடைய நின்குடியிற் பழையோரையொப்பப் பொன்னாற் செய்யப்பட்ட வீரக்கழல் பனைத்த காலினையும், பெரிய பனந்தோடாகிய தாரினையும் பூசிய தந்த காலினையும் நாடோறும் புதிய ஈரம்புலராத புலாலையுடைய நெடிய வேலினையுமுடைய ஏழிளாஞ்சலியும் காடுதலையுடைய ஒருநாளும் நீங்காத அரசவுரிமையைத் தப்பின்றாகப்பெற்றும் அமையாயாய்ப் போனாவிரும்பி ஒலிக்கும் ஓசைபொருந்திய முரசினையுடைய ஏழரசரோடு பகைத்து மேற்சென்று போரின்கண்வென்று நின்வலியைத்தோற்றுவித்த அந்நாளும் பாடுவார்க்குப் பாட அரியை; இந்நாளும் பரணன்பாடினன், நீ மாறுபாடுமிக்க கோவலூரை அழித்தவென்று பிறவும் அரண்களை அழிக்கின்ற ஆழியைத்தாங்கிய சினத்தோனை.—எ - று.

இன்றும் பரணன்பாடினனென்றது, அன்றும் தன்பெருமையாற் பாடினன்; பிறராற் பாடப்படுதலரிதென்றதாம்.

நின் ஆத்தரேற்றிய அன்றும் பாடுநர்க்கு அரியை ; திகிரியேந்திய தோளை இன்றும் பரணன்பாடினனெனக் கூட்டுக.

கழற்காலையும் புடையலையும் காலையும் வேலையுமுடைய நின்முன்னோர் போலத் தாயமெய்தியும் அமையாயென மாறிக்கூட்டுக.

காடுதல் - ஆய்தல.

'மூவரொடு முரணி' என்றும், 'முரணுடுதிகிரி' என்றும் பாடம்.

கொல, ஐயம். மன், அசைநிலை.

பூவார் கா - வானோர் இவன் முன்னோர்க்கு வரங்கொடுத்தற்கு வந் திருந்ததொரு கா.

இவனுக்குப் பனந்தார்கூறியது, 1 சேரமாற்கு உறவாதலின்.

எழுபொறிநாட்டமென்பதற்கு ஏழாசனமேம்கூடி. ஒருநாடாய் அவ் வேழாசா பொறியும் கூடிய பொறியோடு கூடிகின்று நம்மையும் நீமையுமா ராய்தலெனினுமமையும். (கூ
க)

(பி - ம்.)—1 'உதியவேந்தாதலின்'

(கூ௦௦.) ஒருகையது வேலே காலன புனைகழன்
மெய்யது வியரே மிடற்றது பசும்புண்

க. கழல: "ஆடவர் கொடை வீரத்தா லணிவதுகழலென் றுமே" சூடா மணி. எ: உக.

உ. மிக்க கோபமுற்றோர்க்கு உடம்பிலவேர்வை தோன்றுதல் இயல்பு:
"வெயர் பொடிப்பச் சினக்கடைஇ" (பு - வெ. எ: கா) உடம்பு முழுதும் புண்படப் போர்செய்தல வீரர்க்கு இயல்பாதலின், இவனுக்கு மிடற்றுப் புண் கூறப்பட்டது; (புறநா. கூ௦௦: ரு-கூ); "விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள், வைக்குந்தன் னாளை யெடுத்து" (குறள், எஎகூ),

அஃன்றே! இவ

னுடற்றியோர் உய்ந்த. 'பலவொடு கூட்டி வினைமுடிவு செய்க.

வட்காரென்பது, வட்கப்பண்ணுகின்றது ; வட்கர் - குற்றமெனினு மமையும். (௧00)

---

(௧0௧.) ஒருநாட் செல்லல மிருநாட் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினுந்
[1] தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ
வணிபூ ணணிந்த யானை யியறே
ரதியமான் பரிசில் பெறூஉங் காலம்
நீட்டினு நீட்டா தாயினும் யானைதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுவது பொய்யா காதே
யருந்தே மாந்த நெஞ்சம்
வருந்த வேண்டா [2] வாழ்கவன் றாளே.

---

௧-௨. "பன்னாள் வழிநடப்பினும் சோர்தலின்றி செல்லினும்" மலைபடு. ௪௫௨.

௧-௩. புறநா. ௫௪: ௨-௭ - ஆம் அடிக்குறிப்பும், "தலைநா ளன்ன

பேணலன்'' (நற். ௧ ௨), "பெருவரை யடுக்கத்துக் கிழவ னென்று,மன்றை யன்னர நடபினர்'' (குறுந். ௩ அடு), "தண்டாக்காதலும் தலைநாட் போலவே'' (அகநா. ௩ ௨), "அன்றை யன்ன விருப்பொடு'' (குறிஞ்சி. ௨௩௪), "தலைநா ளன்ன புகலொடு வழி சிறந்து, பலநா ணிற்பினும்'' (மலைபடு. ௫௬௰ - ௧), "பன்னருஞ் சென்றக்காற் பண்பிலார் தம்முழை,யென்றூனும் வேண்டுப வென்றிகழப-வென்றும், வேணாடு ணன்றமற் றென்று விழுமி யோர், காண்டொறுஞ் செய்வர் சிறப்பு'' (நாலடி. ௧௫௰), "தலைநாள் விழைவொடு'' (வில்லி - பாரதம், குருகுல. எ௯) என்பனவும் ஈண்டு அறி யற்பாலன.

௯. ஏமாந்த - ஆசைப்பட்ட ; (புறநா. ௧௯௨ : அ; பொருந. ௯௩); "இரப்போர்க காணு தேமாந திருப்ப'' மணி. ௧௪: ௫௦.

௧௦. தாள்வாழ்கவென்றல் மரபு; புறநா. ௭௦: ௧௯; ௪௦௯: ௧௨ ; ௧௭௧: ௧௫.

(பி - ம்).—1 'தலைநாள் விருப்பினையனை பேணலன்' 2 'வாழ்கவவன்றாளே'

## புறநானூறு மூலமும் உரையும்.

### ௧௰௩

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—யாம் ஒருநாட்செல்லேம் இரண்டுநாட்செல்லேம் பலநாளும் பயின்று பலரோடுகூட சசெல்லினும்

முதற்சென்றகாள்போன்ற விருப்பத்

தையுடையன், அணிகலமணிகதயானையையும் இயன்றதேரையுமுடைய அதியமான்; பரிசில்பெறுங்காலை நீட்டிப்பினும் நீட்டியாதொழியினும், யானை தனதுகொம்பினிடையே வைக்கப்பட்ட கவளம்போல நமது கையகத்தது, அப்பரிசில; அது தப்பாது; உண்ண ஆசைப்பட்டநெஞ்சே, நீ பரிசிற்கு வருந்தவேண்டா; அவன்தாள வாழ்வதாக.—எ - று.

அதியமான்விருப்பினனென்ன முன்னேகூட்டுக.

கோட்டிடைவைத்தகவளம்போலவென்றதற்கு யானை வாயிற்கொண்டு

நுகருமளவும் கோட்டிடைவைத்தகவளம்போலப் பரிசில் கையகத்ததெனாக; அன்றிக் களிறுகோட்டிடைவைத்த கவளத்தைச் சிறிது தாழ்த்ததாயினும் அஃது அதற்குத்தப்பாதவாறுபோலப் பரிசில் சிறிது தாழ்ப்பினும் நமக்குத் தருதல் தப்பாதென்பதாக்கி உவமப்பிரமமையும்.

தாளே முயற்சியென்பாருமுளர்.

அருந்தவென்பது, அருந்தெலாக்கடைக்குரைக்கப்பட்டது; தென முன்னிலையேவலாக்கியுரைப்பினுமமையும்.

அருந்

(௧0௧)

---

(௧0உ.) எருதே யிளைய நுகருண ராவே
சகடம் பண்டம் பெரிதுபெய் தன்றே
யவலிழியினு மிசையேறினு

மவனை தறியுநர் யாரென வுமணர்
௫ கீழ்மரத் தியாத்த சேமவச் சன்ன
விசைவிளங்கு கவிகை நெடியோய் திங்க
ளணிநிறை மதியத் தனையையிருள்
யாவண தோங்கின் னிழல்வாழ் வோர்க்கே.

---

௫. "கீழ்மரத் தியாத்த சேமவச் சன்னவென்றதுபோலவும் உவமப் பொருள் இக்காலத்திற்கு ஆகாதாயின" தொல். செய். சூ. ௮௦ - ந.

௬. கவிகை: புறநா. ௫௪: ௭ - ஆம் அடிக்குறிப்பையும், "தேம்பாய் கள்ளவிழ் தோர்விசு கவிகை" (மலைபடு. [illegible]) என்பதன் பொருளையும் பார்க்க.

௬ - ௭. "பாமபி னுப்பட் டிங்கள்போலப, பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை" (பதிற். ௯௦); "பன்மீ னடுவட் பான்மதி போல, வின்னகை யாயமோ டிருந்தோர்க் குறுகி" (சிறுபாண். ௨௧௯ - ௨௦); "பன்மீனவேட் டிங்கள் போலவும், பூத்த சுற்றமொடு பொலிந்து" (மதுரை. ௭௬௯ - ௭௦); "பூண்மின்னு மார்பன் பொலிந்தாங் கிருந்தான் விசும்பிற், கோண்மின்னு மீன்சூழ் குளிர்மாமதித் தோற்றமொத்தே" சீவக. ௮௮௨.



திணை - அது ; துறை - இயன்மொழி.

அவன்மகன் பொகுட்டெழினியை அவர் பாடியது.

இ - ள்.— ஏறு நுகர் இளையதாம் நுகம்பூண்டலை யறியா ; சகடக்

தான் பண்டம் பெரிதாக இடப்பட்டது; ஆதலால், அது பள்ளத்தே இழியி னும்மேட்டிலே ஏறினும் அவ்விடத்துவரும் இடையூறறிவார் யார்தானென்று நினைந்து உப்புவாணிகர் அச்சுமரத்தின்கண்ணே அடுத்துக் கட்டப்பட்ட சேமவச்சுப்போன்ற புகழ்மிக்க இடக்கவிந்த கையையுடைய உயர்ந்தோய், நீ திங்களாகிய நாண்நிறைந்தமதியத்தை யொப்பை; ஆதலின், நின் நிழற்கண்வாழுமவர்கட்குத் துன்பமாகியஇருள் எவ்விடத்துளது?—எ-று.

திங்கள் நாணிறைமதியத்தனையையென்றது, அறிவும் நிறைவும் அருளு முதலாகிய குணங்களால் அமைந்தாயென்றவாறும்.

சேமவச்சன்னையவென்றது, ஏற்றிழிவுடையவழி அச்சுமுறிந்துழிச் சேம வச்சு உதவினாற்போல நீ காக்கின்றநாட்டிற்கு ஒரிடையூறு உற்றால் அதுநீக்கிக் காத்தற்குரியையென்பதாம்.

'எருதே யிளைய நுகமுணராவே, சகடம் பண்டம் பெரிதுபெய் தன்றே' என்பது உவமங்குறிதாது சகடத்திற்குவரும் ஏதங்குறித்து உமணர் சேமவச்சுயாத்தற்குக் காரணமாய்நின்றது.

(௧0௨)

(பி - ம்.)—1 'மதியா'

---

(௧0௩.) ஒருதலைப் பதலை தூங்க வொருதலைத்
தூம்பகச் சிறுமுழாத் தூங்கத் தூக்கிக்
கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச்
சுரன்முத லிருந்த சில்வளை விறலி
௫ செல்வை யாயிற் சேணோ னல்லன்

முனைசுட வெழுந்த மங்குன் மாப்புகை
மலைசூழ் மஞ்சின் மழகளி றணியும்
பகைப்புலத் தோனே பல்வே லஞ்சி

க-உ. புறநா. க ; க; கரு : கசு - அ; "நரம்பின் நீர்தொடை பழு

னிய, வைரமை நல்யா ழினை யர் பொறப்பப், பண்ணமை முழவும் பதலையும் பிறவும், கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கிக், காவிற் றகைத்த துறை கூடு கலப்பையர்" (பதிற். சுக: க - ரு); "திண்வார் விசித்த முழவொ டாகுளி, நுண்ணுருக் குற்ற விளங்கடர்ப் பாண்டில், மின்னிரும் பீலி யணி தழைக் கோடடொடு,......கொடிதரு பாணிய பதலையும், .....நேர்சீர் சுருக் இக் காய கலப்பையிர்" மலைபடு. க - கரு.

ரு. மண்டை-ஒருவகையுணகலம் (வாயுய்); புறநா. ககரு:உ; கஉ௫: ரு; கஎக: உ - ரு; "பிழற்பெய் மண்டை" மணி. ரு: சுஉ.

ச. புறநா. சு: உஉ; உரு: க - கo; ருஎ: எ.

## புறநானூறு மூலமும் உரையும்.

கஅ௫

பொழுதிடைப் படாஅப் புலரா மண்டை
மெழுகுமெல் லடையிற் கொழுநிணம் [1] பெருப்ப
வலத்தற் காலை யாயினும்
புரத்தல் வல்லன் வாழ்கவன் றாளே.

திணை - அது ; துறை - விறலியாற்றுப்படை.

அதியமானெடுமானஞ்சியை அவர் பாடியது.

இ - ள்.—காவினது ஒருதலைக்கண்ணே பதலைதூங்க ஒருதலைக்கண்ணே துளையை அகத்தேயுடைய சிறிய முழாவைத் தாங்கும்பரிசு தூக்கி இடுவோரின்மையின் ஏலாதுகவிழ்ந்த என்மண்டையை இட்டுமலர்த்தவல்லார் யாரெனச்சொல்லிச் சுரத்திடத்தேயிருந்த சிலவாகியவளையையுடைய விறலி, நீ அவன்பாற்போவையாயின் அவன் சேய்மைக்கண்ணனல்லன்; முனைப் புலத்தைச் சுடுதலானெழுந்த இருட்சியையுடைய கரியபுகை மலையைச் சூழும் முகில்போல இளங்களிற்றைச் சூழும் பகைவர்தேயத்திருந்தான், பலவேற் படையையுடைய அதியமான்; ஒருபொழுதும் ஓயாமல் உண்ணவும் தின்னவும் படுதலான் ஈரம்புலராத மண்டை மெழுகானியன்ற மெல்லிய அடைபோலக் கொழுத்தசிணம் மிக உலகம் வறுமையுறுதலையுடைய காலமாயினும் பாதுகாத்தலைவல்லன்; அவன்றாள்வாழ்க.—எ - று.

பதலையென்பது, ஒருதலைமுகமுடையதொருதோற்கருவி.

பகைப்புலத்தோனென்றகருத்து : பகைவர்பால் திறைகொண்ட பொருளுடையனாதலின், நீவேண்டியவெல்லாந்தருதல் அவனுக்கு எளிதென்பதாம்.

உம்மை, சிறப்பு.

சேய்மையனல்லனென்பதற்குப் பரிசில் நீட்டிப்பானல்லனென்று உரைப்பினுமமையும்.

(கoரு)

---

கo. "கல்வரி யிறுஅல் புரைய மெல்லடை" (மதுரை. ௫உ௧); "தேனிருலன நீஞ்சுவை யின்னடை" சீவக. உ௯௭௪.

க0 - கஉ. புறநா. உஉ : உசு - அ.

(பி - ம்.)—1 'பரிப்பவறத்தற்காலை'

---

(க0ச.) போற்றுமின் மறவீர் சாற்றுது நம்மை
யூர்க்குறு மாக்க ளாடக் கலங்குந்
தாட்படு சின்னீர்க் களிறட்டு வீழ்க்கு
மீர்ப்புடைக் கராஅத் தன்ன [1] வென்னை

---

உ. ஊர்க்குறுமாக்கள்: புறநா. கூ௪ : முதலாமடிக்குறிப்பைப் பார்க்க.

ச. என்னை: புறநா. எஅ: உ.

க - ச. "என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை முன்னின்று கன்னின் றவர்" குறள். எஎக.

(பி - ம்.)—1 'எந்தை'





நுண்பல் கரும நினையா
திளையனென் றிகழிற் பெறலரி தாடே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—நீங்கள் பாதுகாமின், மறவீர், நமக்கு நாங்கள் அறிவிப்பேம்;

ஊரின்கண் இளம்புதல்வர் ஆடக் கலங்குகின்ற காலளவான அளவிற்பட்ட நீருள்ளே யானையைக்கொண்டு வீழ்க்கும் இழுத்தலையுடைய முதலையையொக்கும் என் இறைவனது நுணுகிய பலகருமத்தையும் நினையாதே அவனை இளையனென்று மதியாதிருப்பின் நுங்களுக்கு வெற்றிபெறுதல அரிது.— எ - று.

மறவீர், நமக்குச சாற்றுதும் ; என்னை இளையனென்றிகழின் வெற்றி பெறுதல அரிது ; ஆதலால, நீர் போற்றுமினெனக்கூட்டுக.

மீப்புடையென்றோதி, மிகுதியையுடையவென்று செப்பினுமமையும்.(கoச)

---

(கoரு.) சேயிழை பெறுகுவை வாணுதல் விறலி
தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை
வண்டுபடு புதுமலர்த் தண்சிதர் கலாவப்
பெய்யினும் பெய்யா தாயினு மருவி
கொள்ளுழு வியன்புலத் துழைகா லாக
மால்புடை நெடுவரைக் கோடுதோ றிழிதரு
நீரினு மினிய சாயற்
பாரி வேள்பாற் பாடினை செலினே.*

திணை - பாடாண்டிணை ; துறை - விறலியாற்றுப்படை.

வேள்பாரியைக் கபிலர் பாடியது.

இ - ள்.—சிவந்த அணியைபபெறுகுவை, ஒளிதங்கிய நுதலினை யுடைய விறலி, பெரிய இடத்தையுடைய சுனையின்கண் தழைத்த கரிய

௬. கணவேணி -

கணுக்களிலேயே அடிவைத்து ஏறிச்செலலும்படி

அமைத்தனபா மூங்கில; "கலைகை யற்ற காணபி னொடுவரை, நிலைபெய் திட்ட மாலபுநெறி யாக" மலைபடு. ௩௧௫ - ௬.

௭-அ "வானி நீரினும் தீந்தண் சாயலன்" (பதிற். அ௧); "வேனிற் புனலன்ன

நுந்தை" (கலி. அ௮); " புனலன்ன சாயல.....ன்னவன் " மலைபடு. ௧௧ - ௪.

* ௰. புறநா. க0௬ : க௬ - அ ; ககக ; க௨-அ : ௫-எ ; க௫அ: க-௪ ; ௩௩எ : ௬ - எ ; "பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெணணீர்" (குறுந். க௯௬) ; "பாரி நிம்பெரும் பைஞ்சுனை பூத்த, தேங்கமழ் புதுமலர்" (அகநா. எஅ); விறலியாற்றுப்படைக்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. ௬. ௩௬ - ந.

# புறநானூறு மூலமும் உரையும்

## கஅஎ

இதழையுடைய நீலத்தினது வண்டுமொய்க்கும் புதியமலரின்கட் குளிர்த்த அரிகலக்க மழைபெய்யினும் பெய்யாதொழியினும் அருவி கொள்ளிற்கு உழுத பரந்தநிலத்திடை நீரோடுகாலாக ஓடக் கணவேணியையுடைய நெடியமலையினது சிகரந்தோறும் இழிதரும் நீரினும் மிகவினிய மென்மையையுடைய வேள் * பாரிபக்கலே நீ பாடிச்செல்லின்,—எ - று.

விறலி, பாரிவேள்பாற் பாடி னை செல்லின்,

சேயிழைபெறுகுவையெனக் கூட்டுக.

அவன்மலையாதலால், எக்காலமும் அருவி

கோடுதோறிழிதருமெனப்

நடைத்தி.

புதுமலர்த் தண்சிதர் கலாவப்பெய்யினும் பெய்யாதாயினும் உழைகா

மரக் கோடுதோற்றுதரும் அருவிநீரினும் இனியவெனவியையும்.

எனவே அவன்குணங்கள் தோன்றின்றன.

(கoடு)

* பாரியின்பெருமையை "கொடுக்கிலாதானைப்பாரியே யென்று கூறினுங்கொடுப்பாரிலை" (தே.சுந்தர), "களியானை செம்பொன், தரும்பாரி" (தஞ்சை. ௩எ) எனபவற்றாலுமுணர்க.

---

(க0ௌ.) நல்லவுந் தீயவு மல்ல குவியிணர்ப்
புல்லிலை யெருக்க மாயினு முடையவை
கடவுள் [1] பேணே மென்னா வாங்கு
மடவர் மெல்லியர் செல்லினுங்
டு கடவன் பாரி கைவண் மையே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

அவரை அவர் பாடியது.

இ - ள்.—நல்லவையெனும் தீயவையென்றும் சொல்லப்படுவன வல்லாத குவிந்த பூங்கொத்தினையும் புல்லிய இலையையுமுடைய எருக்கம்பூவாயினும் ஒருவனுடையனவற்றைத் தெய்வங்கள் விரும்பேமென்னா ; அதுபோல, யாதும் அறிவில்லாதாரும் புல்லிய குணங்களையுடையாரும் செலினும் பாரி கைவண்மைசெய்தலைக் கடப்பாடாகவுடையன்.—எ - று.

'குவியிணர்ப் புலவிலை யெருக்கம்' என்றது, முதற்கேற்ற அடையடுத்த ஆகுபெயர்.

உம்மை, இழிவுசிறப்பு.

மெல்லியரென்பதற்கு வறுமையுற்றோரென்றுமுரைப்பர.

---

(௧0௬)

---

உ. "புலவெருக்கங்கண்ணி" (தொல். சொல். ந. சூ. சே. "ஒல்லேம்"); "தன்னியலு ரிறும்விரைசார்க் தறியாத புலவெருக்குஞ் சூடிக கொவை டாய்" இரத்தினகிரிக்கலம்பகம், ௭௬.

(பி - ம்.)—[1] 'வேண்டேமென்று'



(௧0௭.) பாரி பாரி யென்றுபல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே.*

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ-ள்.—பாரிபாரியென்றுசொல்லி அவனுடைய பல புகழையும்வாழ்த்தி அவ்வொருவனையே புகழ்வர், செவ்விய நாவையுடைய அறிவுடையோர்; பாரியாகிய ஒருவனுமேயல்லன், மாரியுமுண்டு, இவ்விடத்து உலகத்தைப் பாதுகாத்தற்கு.—எ - று.

உலகுபுரத்தற்கு மாரியுமுண்டாயிருக்கப் பாரியொருவனேப்புகழ்வர் செந்நாப்புலவரெனப் பழித்ததுபோலப் புகழ்ந்தவாறு. (௧௦௭)

---

* மு. பாடாண்டிணைத்துறைகளுள், கொடுப்போரேத்தற்கு (தொல். புறத்திணை. சூ. உசு - இளம் ; கூடி கூடி கூடி ௩(ரு) - ந) மேற்கோள் ; "உவமிக்கப்படும் பொருளொடு உவமை தோன்றவருதலேயன்றி உவமையது தன்மைகூறலும் உவமையாதற்குரித்துப் பயனிலை பொருந்திய வழக்கின்கணென்றவாறு ; எனவே, இவ்வாறு வருவது பயனிலையுவமைக்க ணென்று கொள்க ; 'பாரிபாரி.........புரப்பதுவே' இது மாரிபோலும் பாரியது கொடையென்னுது இவ்வாறு கூறும் பொருண்மையும் உவமமாம் எ - று" (தொல். உவம. சூ. ௩௬ - இளம்); "உவமத்தன்மையும்" என்னும் (கூடி கூடி கூடி ௩௪) சூத்திரத்தில், "அது 'பாரிபாரி.....புலவர்'என்னும் பாட்டிறுவா உலகளித்தற்கு மாரியுமுண்டென மாரியை உவமித்துச் சிறப்பித்துக் கூறுவான் மாரியைச்சிறப்பித்துப் பாட்டுடைத் தலைவனுகியபாரியை உயர்த்துக் கூறுதான்போல இயல்பினும் உவமை கூறினும் ; இது மாரிக்கும் பாரிக்கும் ஓரிழிவில்லை எனவுந் தன்மைபடக் கூறவே அவனுயர்வு கூறுதலிற் பயனிலை புரிந்த வழக்கெனப்படுமென்பது" என்றனர் பேராசிரியர்; விலக்குவமையின்பாற்படுமென்பர் ~~சுப்பிரமணியதீக்ஷிதர்~~ (தண்டி. சூ. ௩௮; இ - வி. சூ. ௬௪(ரு) - உரை); குறிப்புவமையின்பாற்படுமென்பர் காரிரத்நகவிராயர். (மாறன். சூ. ௧௦௦); "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங் கொல்லோ வுலகு" (குறள். ௨௧௧) என்பது ஈண்டு அறியத்தக்கது.

---

(௧௦௮.) குறத்தி மாட்டிய வறற்கடைக் கொள்ளி
யார மாதலி னம்புகை யயலது
சாரல் வேங்கைப் பூஞ்சினைத் தவழும்

---

௨. புறநா. ௩௨௦: ௧௨.
௧ - ௩. "புனத்த, வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே, வெறி புனந் தீப்பட்டக் கால்" நாலடி. ௧௮௦.



பறம்பு பாடின ரதுவே யறம்பூண்டு
௫ பாரியும் பரிசில ரிரப்பின்
வாரே னென்னு னவர்வரை யன்னே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—குறத்திமடுத்ததாகப்பட்ட வற்றிய கடைக்கொள்ளி சந்தனமாதலால் அதன் அழகியதாகியபுகை அதற்கு அருகாகிய சாரற்கண் வேங்கையின் பூங்கொம்பின்கட் பரக்கும் பரம்பு, பாடுவார்க்குக் கூறிட்டுக் கொடுத்தலின் அவருடையதாயிற்று; தன்மத்தைப்பரித்துப் பாரியும் பரிசிலர்வேண்டுவாராயின் அவ்வழி வாரேனென்னும் அவரெல்லையின்கண்ணே

சிற்பன்.—எ - று.

சந்தனப்புகை வேங்கையின்மிசைத்தவழும் பறம்பெனவே, இவையொ ழியமரமின்மையும்,பகைவர்சுடும் புகையின்மையுங்கூறியவாறாயிற்று.(கoஅ)

---

ரு - சு. "அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார், ரென்பு முரி யர் பிறர்க்கு" குறள். எ௨.

---

(கoசு.) அளிதோ தானே பாரியது பறம்பே
நளிகொண் [1] முரசின் மூவிரு முற்றினு
முழவ ருழா தன நான்குபய னுடைத்தே
ஒன்றே, சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே
இரண்டே, தீஞ்சுளைப் பலவின் [2] பழமூழ்க் கும்மே
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக் கிழங்குவீழ்க் கும்மே

க. புறநா. கககூ: க.

உ. " ஆளிடூஉக் கடந்து வாளம ருழக்கி, யேந்துகோட்டியானை
வேந்த ரோட்டிய, கடும்பரிப் புரவிக் கைவண் பாரி" (அகநா. எஅ)

ச. "சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே: இது, விளையுமேயெனற்
பாலது, விளையும்மேயென ஒற்றில்வழி ஒற்றை விரித்தவாறு; இதனுட் சிறிய
விலை யெனற்பாலது சிறியிலையென த் தொகுத்தவாறு" நன். வி. ரு. கருரு.

சு. கிழங்கு கீழே தாழவிருத்தலை, வீழ்த்தலென்றல மரபு; "வள்ளி
கீழ் வீழா வரைமிசைத் தேன்தொடா" (கலி. " ௬); "கீழ்செல வீழ்ந்த
கிழங்கொடு" (மதுரை. ௨௯௪); "வயவுப்பிடி முழந்தாள் கடுப்பக் குழி
தொறும், விழுமிதின் வீழ்ந்தன கொழுங்கொடிக் கவலை" மலைபடு. கஉஎ-அ.

(பி - ம்.)—1 'மூரசம்' 2 'பழம்வீழக்கும்'



நான்கே, அணிநிற வோரி [1] பாய்தலின் மீதழிந்து
திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே
வான்க ணற் [2] றவன் மலையே வானத்து
மீன்க ணற்றதன் சுனையே [3] யாங்கு
மரந்தொறும் பிணித்த களிற்றின ராயினும்
புலந்தொறும் பரப்பிய தேரின ராயினுந்
[4] தாளிற் கொள்ளலிர் வாளிற் றரலன்
யானறி குவனது கொள்ளு மாறே
சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
[5] விரையொலி கூந்தனும் விறலியர் பின்வர

வாடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்று மொருங்கீ யும்மே.*

திணை - நொச்சி ; துறை - மகண்மறுத்தல்.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—இரங்கத்தக்கது, பாரியுடையபறம்பு, பெருமையைக்கொ

ண்ட முரசினையுடைய நீயிர் மூவேந்தரும் சூழினும் ; உழவரால உழுது விளைக்கப்படாதன நான்குவிளையுளையுடைத்து ; அவற்றுள், முதலாவது, சிறிய இலையையுடைய மூங்கிலினது நெல்விளையும் ; இரண்டாவது, இனிய சுளையையுடைய பலாவினதுபழம் ஊழக்கும் ; மூன்றாவது, கொழுவிய கொடியையுடைய வள்ளிக்கிழங்கு தாழவிருக்கும் ; நான்காவது, அழகிய

நிறத்தையுடைய ஓரிபாய்தலால் அதன்மேற் பவரழித்து கலத்தகெடிய மலை தேனைப்பொழியும்; அகலநீள உயரத்தால வானிடத்தையொக்கும், அவனதுமலை ; அவ்வானத்தின்கண் மீனையொக்கும், அம்மலையின்கட்சுனை ; அவ்விடத்து மரந்தோறும் கட்டப்பட்ட யானையையுடையீராயினும் இடந்தோறும் பரப்பப்பட்ட தேரையுடையீராயினும் உங்கள் முயற்சியாற்கொள்ள மாட்டீர் ; நுமது வாள்வலியால வவன் தாரான் ; யான் அறிவேன், அதனைக்

---

ச - கூ. "கொளற்கரிதாய் கொண்ட கூழ்த்தாகி யகத்தார், நிலைக் கெளிதா நீர தரண" குறள். எசரு.

க-கா. "பேரிசை யுருமொடு மாரி முற்றிய,பலகுடைக் கள்ளின் வண் மகிழ்ப் பாரி, பலவுறு குன்றம் போலப, பெருங்கலி
பினவோ" நற். உருஉ.

னெய்திய வருங்காப்

வான்கணத்தென்றது, மலையின ஒக்கமும் பரப்பும்.

மீன்கணத்தென்றது, சுனையினது பன்மையும், தெளிவும், சிறுமையும்.

ஈண்டுக்கண்ணென்பது, அசைநிலை.

தாளென்றது, படையறுத்தலும் அழித்தற்குவேண்டும் கருவிமுதலாயின இயற்றலும்.

விறலியரென்றது, அவர் உரிமைமகளிரை.

(௧0௯)

* "நீவெய்தாழகோதை"

(பரி. ௧௧:௧௨௪);"நீலநிற வோரி பாய்ந்தென நெடுவரை, சேயிற் செல்லு மெய்க்க ணிருஅல்" மலைபடு. ௫௨௪ - ௫.

(௧௧0.) கடந்தடு தானை மூவிருங் கூடி
யுடன்றனி ராயினும் பறம்புகொளற் கரிதே
முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்
௫ [1] யாமும் பாரியு முளமே
குன்று முண்டுநீர் பாடினிர் செலினே.

திணையும் துறையும் அவை.

மூவேந்தரும் பறம்புமுற்றியிருந்தாரை அவர் பாடியது.

இ - ள்.—வஞ்சியாது எதிர்நின்றுகொல்லும் படையினையுடையமூன்று திறத்தீருங்கூடிப் பொருதீராயினும் பறம்புகொள்ளுதற்கு அரிது; மு...

௧. கடத்தல - வஞ்சியாதெதிர்நிற்றல ; "மூன்றூர்க கடந்தட முரவு நீர் மாகொனற, வெவ்வேலான்" கலி. ௨.

உ. புறநா. ௧௦௯ : ௧௩; ௧௧௧ : உ.

௩ - ௪. "உள்ளி யுள்ளமெல்லாமுவ நீயுமல், வள்ளி யோரின் வழங்கிலை" கம்ப. ஆற்ற. ௪.

(பி - ம்.)—1 'யாநும்'

## ௪௬௨ புறநானூறு மூலமும் உரையும்.

...ரையுடைத்து, குளிர்ந்த நல்ல பறம்புநாடு ; அம்முந்நூறூரும் பரிசிலர் பெற்றனர் ; நீயிர்பாடினிராய்வரின், நமக்கு யாமும்பாரியுமுள்ளேம் ; அது வேயன்றி மலையுமுண்டு.—எ - று.

நீர் பாடிவரினும் பறம்புநாடு பரிசிலர் முன்னேபெற்றமையின், அது நமக்குக் கிடையாதென்பது கருத்தாகக்கொள்க. (௧௧௦)

---

(௧௧௧.) அளிதோ தானே பேரிருங் குன்றே
வேலின் வேறல் வேந்தர்க்கோ வரிதே
நீலத், திணைமலர் புரையு முண்கட்
கிணைமகட் கெளிதாற் பாடினள் வரினே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—இரங்கத்தக்கது, பெரிய கரிய குன்றம் ; அது வேலான் வெல்லுதலவேந்தர்க்கோ அரிது ; நீலத்தினது இணைத்தமலரையொக்கும் மை யுண்ட கண்ணையுடைய கிணை மயுடைய

விறலிக்கு எளிது, பாடினளாய்வ ரின்.—எ - று.

அளிதோவென் றது ஈண்டுவியப்பின்கண் வந்தது.

பாடினளாய்வரிலென் றகருத்து: அவட்கும் அவ்வாறன்றித் தன் பெண் மையால மயக்கிவென் றகோடல அரிதென்பதாம்.

(கக௧)

---

க. புறநா. க0௬ : க.

உ. புறநா. க0௬ : க௫ ; கக0 : உ.

உ - ௩. "எதிரிதழ் நீலம் பிணைந்தன்ன கண்ணாய்" கலி. ௬௬.

௪. புறநா. க0௬ : க௬ - ௭.

---

(ககஉ.) அற்றைத் திங்க ளவ்வெண் ணிலவி
னெந்தையு முடையேமெங் குன்றும் பிறர்கொளா
ரிற்றைத் திங்க ளிவ்வெண் ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெங்
௫ குன்றுங் கொண்டார்யா மெந்தையு மிலமே.

திணை - பொதுவியல் ; துறை - கையறுநிலை.

பாரிமகளிர் பாடியது.

இ - ள்.—மூவேந்தரும் முற்றியிருந்த அற்றைத்திங்களின் அவ்வெள் ளிய நிலாவின்கண் எம்முடைய தந்தையையுமுடையேம் ; எம்முடையமலை

யையும் பிறர்கொள்ளார்; இற்றைத்திங்களது இவ்வெள்ளியநிலவின்கண் வென்றெறிந்த முரசினையுடைய அரசர் எம்முடைய மலையையுங்கொண்டார்; யாம் எம்முடைய தந்தையையுமிழந்தேம்.—எ - று.

திங்களை மாதமென்பாருமுளர்.

ஒருவனை மூவேந்தருமுற்றியிருந்தும் வஞ்சித்துக்கொண்டமையின், 'வென்றெறி முரசின்வேந்தர்' என்றது, ஈண்டு இகழ்ச்சிக்குறிப்பாய் நின்றது.(௧௧௨)

---

(௧௧௩.) மட்டுவாய் திறப்பவு மைவிடை வீழ்ப்பவு
மட்டான் றானாக் கொழுந்துவை யூன்சோறும்
பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி
நட்டனை மன்னோ முன்னே யினியே
௫ பாரி மாய்ந்தெனக் கலங்கிக் கையற்று
நீர்வார் கண்ணேந் தொழுதுநிற் பழிச்சிச்
சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே
கோறிரண் முன்கைக் குறுந்தொடி மகளிர்
நாறிருங் கூந்தற் கிழவரைப் படர்ந்தே.

திணையும் துறையும் அவை.

அவன்மகளிரைப் பார்ப்பார்ப்படுக்கக்கொண்டு போவான் பறம்பு விடுத்த கபிலர் பாடியது.

இ - ள்.—மதுவிருந்த சாடியை வாய்திறப்பவும் ஆட்டுக்கிடாயை

வீழ்ப்பவும் அடப்பட்டு அமைதல் தொழியாத கொழுவிய தசையையும் நெய்யையு முடைய சோற்றையும் விரும்பிய பரிசே தரும் மிக்க செல்வமுதிர்ந்து எம்மோடு நட்புச் செய்தாய் முன்பு; இப்பொழுது, பாரி இறந்தானாகக் கலங்கிச் செயலற்று நீர்வார்கண்ணையுடையேமாய்த் தொழுது நின்னை வாழ்த்திச்செல்லுதும், பெரிய புகழையுடைய பறம்பே, கோற்றொழிலாகச் செய்யப்பட்ட திரண்ட குறிய வளையையணிந்த முன்கையினையுடைய மகளிரது மணங்கமழும்* கரியகூந்தலைத் தீண்டுதற்கு உரியவரை நினைந்து.—எ - று.

பறம்பே, பெருவளம்பழுனி நட்டனை முன்; இனி நாறிருங்கூந்தற் கிழவரைப் படர்ந்து சேறுமெனக் கூட்டுக.

மன், கழிவின்கண் வந்தது.
வாழியும் ஓவும், அசைநிலை.

ஆனுக்கொழுந் தசையென்பதற்கு
யெனினுமமையும்.
விருப்பம் அமையாத கொழுந்தசை

(கக௬)

---

க. புறநா. உருஉ : க.

ரு. "பல்வளம் பழுனிய" மணி. ரு : உஅ.

சு. "நீர்வார் கண்ணேம்" (நற். கசரு); தன்மைப்பன்மை வினைக் குறிப்புமுற்று வினையெச்சக்குறிப்பானதற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. ருருo; நன் - வி. சூ. ருருக; இ - வி. சூ. உருo - உரை.

* "கூந்த லணிகொடேப்பேம் யாம்" (கலி. கoக); "தோடேந்து பூங் கோதை வேண்டேன் கூந்தல் தொடேல்" சீவக. கஉஉரு.

(௧௧௪.) ஈண்டுநின் றோர்க்குந் தோன்றுஞ் சிறுவரை
சென்றுநின் றோர்க்குந் தோன்று மன்ற
களிறுமென் றிட்ட கவளம் போல
நறவுப் பிழிந்திட்ட கோதுடைச் சிதறல்
௫ வாரசும் பொழுகு முன்றிற்
றேர்வீ சிருக்கை நெடியோன் குன்றே.

திணையும் துறையும் அவை.

அவன்மகளிரைக்கொண்டுபோம் கபிலர் பறம்புநோக்கி நின்று சொல்லியது.

இ - ள்.—இவ்விடத்து நின்றோர்க்குந் தோன்றும், சிறிது எல்லைபோய் நின்றோர்க்குந் தோன்றும், நிச்சயமாக; யானை மென்று போகடப்பட்ட கவளத்தினது கோதுபோல மதுப்பிழிந்து போகடப்பட்ட கோதுடைத்தாகிய சிதறியவற்றினின்றும் வார்ந்த மதுச்சேறொழுகும் முற்றத்தையுடைய தேர் வழங்கும் இருப்பையுடைய உயர்ந்தோனுடைய மலை.—எ - று.

நெடியோன் குன்று தோன்றுமெனறது, புகழான்உயர்ந்து காணாதார்க்கும் செவிப்புலனாகத் தோன்றும், அவனுளனாயகாலத்து; இப்பொழுது பிற மலைபோலக் கட்புலனாகத் தோன்றுமளவாயிற்றெனக் கையற்றுக் கூறியவாறாகக் கொள்க.

(௧௧௪)

---

௬. தேர்வீசிருக்கை: (புறநா. ௧௧௮:௫); "தேர்வீசு கவிகை" மலைபடு. ௩௯௯.

(கக௫.) ஒருசா ரருவி யார்ப்ப வொருசார்
பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்
வாக்க வுக்க தேக்கட் டேறல்
கல்லலைத் தொழுகு மன்னே பல்வே
௫ லண்ணல் யானை வேந்தர்க்
கின்னா னாகிய வினியோன் குன்றே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—ஒருபக்கம் அருவி ஆர்த்தொழுக ஒருபக்கம் பாணருடைய மண்டைகள் நிரம்ப வாக்கவேண்டி வடிக்க உக்க இனிய கள்ளாகிய தேறல் கல்லையுருட்டியொழுகும், பல வேற்படையுடனே தலைமைபொருந்திய யானையையுமுடைய வேந்தர்க்குக் கொடியோனாகிய இனியோன்மலை; அது கழிந்தது.—எ - று.

குன்றுதேறல் கல்லலைத்தொழுகும்; இனி அது கழிந்ததென்று கூட்டுக.

---

உ. மண்டை: புறநா. கO௩ : ௩ - ஆம் அடியின் குறிப்பைப்பார்க்க.

## புறநானூறு மூலமும் உரையும்.

அருவியும் அவனுளனாயின் உளதாவதென்பது கருத்து.
மன், கழிவின்கண் வந்தது.
குன்று தேறல்கல்லலைத்தொழுகுமெனை
ரெழில் இடத்துமேல் ஏறிநின்றது.
இடத்துநிகழ்பொருளின்
(ககரு)

---

(ககசா.) [1] நீர்ப் பெருங்குண்டு சுனைப்பூத்த குவளைக்
கூம்பவிழ் முழுநெறி புரள்வரு மல்கு
லேந்தெழின் மழைக்க ணின்னகை மகளிர்
புன்மூசு கவலைய முண்மிடை வேலிப்
பஞ்சி முன்றிற் சிற்றி லாங்கட்
பீரை நாறிய சுரையிவர் மருங்கி
னீத்திலைக் குப்பை யேறி யுமண
ருப்பொ யொழுகை யெண்ணுப மாதோ
ணோகோ யானே தேய்கமா காலை
பயில்பூஞ் சோலை மயிலெழுந் தாலவும்
பயிலிருஞ் சிலம்பிற் கலைபாய்ந் துகளவுங்
கலையுங் கொள்ளா [2] வாகப் பலவுங்
கால மன்றியு மரம்பயம் பகரும்
யாண ரருஅ வியன்மலை யற்றே
யண்ண னெடுவரை யேறித் தந்தை

க. "மலிசுனைக்குவளைத், தேம்பாயொண்பூ" அகநா. ஙoஅ.

உ. முழுநெறி - புறவிதழொடியாதமுழுப்பூ ; "கழனி யாம்பல் முழுநெறிப் பகைத்தழை" (அகநா. கருகூ); "கழுநீர்ப் பிணையல் முழுநெறி" சிலப். உ : ஙச.

க-உ. "முழுநெறிக்குவளை" (சிலப். உ : கச) என்பதற்கு, இதழொடிக்கப்படாத குவளையென்று பொருள் கூறி, இவ்வடிகளை மேற்கோள் காட்டினர் அடியார்க்குநல்லார். தழை: புறநா. சுக : க; ஙசo : க; "மணிப்பூம் பைந்தழை தைஇ", "மணிநகு வயலை மரனிவர் கொழுங்கொடி, யரிமல ராம்பலொ டார்தழை தைஇ, விழவாடு மகளிர்" (அகநா. உo, கஎசு); "இணையிதழ் பறியாப் பைவிரி யல்குற், கொய்தழை தைஇ" (குறிஞ்சி. கoக - உ); "பைந்தழைமாமகளிரொடு" பட்டின. சுக.

அ. ஒய்தல் : புறநா. எo : கஎ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

கங. "கால மன்றியு மரம்பயன் கொடுத்தலின்" (மலைபடு. கஙசு); "கால மின்றியுங் கனிந்தன கனி", "தீங்கனி, காலமின்றிக் கனிவது காண்டிரால" கம்ப. வனம்புகு. சச ; நாடவிட்ட. கஅ.

(பி - ம்.)—1 'தீம்பெருங்' 2 'வாகிப்'



பெரிய நறவிற் கூர்வேற் பாரிய
தருமை யறியார் போரெதிர்ந்து வந்த
வலம்படு தானை வேந்தர்
பொலம்படைக் கலிமா வெண்ணு வோரே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—இனிய நீரையுடைய பெரிய ஆழ்ந்த சுனைக்கட் பூத்த செங்
கழுநீரினது முகையவிழ்ந்த புறவிதழொடித்த முழுப்பூவாற் செய்யப்பட்ட தழையசையுமல்குலையும் மிக்க அழகையுடையகுளிர்ந்த கண்ணினையும்இனிய முறுவலையுமுடைய மகளிர் புலமொய்த்தகவலையையுடையனவாகிய முள்ளால் நெருங்கியவேலியையும் பஞ்சுபரந்த முற்றத்தையுமுடைய சிறியமனையிடத் தின்கட் பீர்க்குமுளைத்த சுரைபடர்ந்தவிடத்தில் ஈத்திலையையுடையகுப்பை யின்கண்ணேறிஉமணர் உப்புச்செலுத்தும் சகடத்ததையெண்ணுவர்; கோவேன், யான் ; எனதுவாழ்நாள் கெடுவதாக ; பயின்ற பூவையுடையசோலைக்கண் மயிலெழுந்து ஆடவும் பயின்ற பெரியமலையின்கண்ணேயேறி முசுக்கலை தாவியுகளவும் அம்முசுக்கலையும் நுகர்ந்துவெறுத்தலாற் கொள்ளாவாம்பரிசு காலமன்றாகவும் மரங்கள்பலவும் காயும்பழமுமுதலாயினவற்றைவிளைந்து கொடுக்கும் புதுவருவாயொழியாத அகன்ற மலையைப்போலும் பயனுடைத் தாகிய தலைமையையுடைய உயர்ந்த வரையின்கண்ணேயேறித் தம்முடைய தந்தையாகிய மிக்க மதுவினையும் கூரியவேலினையுமுடைய பாரியதுபெறு தற்கருமையையறியாராய்ப் போரேற்றுவந்த வென்றிப்பட்ட சேனையை யுடைய அரசரது பொன்னாற்செய்யப்பட்ட கலமுதலியவற்றையுடைய மனஞ்செருக்கிய குதிரையையெண்ணுவார்.—எ - று.

வியன்மலையென்றது, அரைமலையை.

நெடுவரையென்றது, உச்சிமலையை.

இன்னகைமகளிர், நெடுவரையேறி முன்பு வேந்தர்கலிமாவை என்னு
வோர், இப்பொழுது ஈத்திலைக்குப்பையேறி உமணர் உப்பொயொழுகையை எண்ணுவர் ; இதற்கு கோவேன்யான் ; எனதுவாழ்நாள் கெடுவதாகவென வினைமுடிவு செய்க.

அந்தேயென்னுமேகாரம், அசைநிலை.

வியன்மலை அத்தன்மைத்தெனப் பிறிதொருதொடராக்கி

உல.'ப்பிறு

மமையும்.

(ககஎ)

---

கசு - அ. "எஃகுகோட் டியானை வேந்த ரோட்டிய, கடும்பரிப் புரவிக் கைவண் பாரி" அகநா. எஅ.

கஅ. புறநா. ௨௯௯ : கச ; "பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி" (மலைபடு. ருஎச); "புனையும் பொலம்படைப் பொங்குளைமான்" பு - வெ. க0 : முல்லைப்பொதுவியற்பால, உ.

---



ககஎ

(ககஎ.) மைம்மீன் புகையினுந் தூமந் தோன்றினுந்
தென்றிசை மருங்கின் வெள்ளி யோடினும்
வயலக நிறையப் புதற்பூ மலர
மனைத்தலை மகவை யீன்ற வமர்க
ணாமா நெடுநிரை நன்புல் லாரக்
கோஒல் செம்மையிற் சான்றோர் பல்கிப்
பெயல்பிழைப் பறியாப் புன்புலத் ததுவே
பிள்ளை வெருகின் முள்ளெயி றுரையப்
பாசிலை முல்லை முகைக்கு
மாய்தொடி யரிவையர் தந்தை நாடே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ-ள்.—சனிமீன் புகைகளோடுகூடிப் புகையினும்

எல்லாத்திசையினும்

புகைதோன்றினும் தென்றிசைக்கண்ணே வெள்ளிபோக்குறினும்

வயலிடம்

விளைவுமிகப் புதலிடத்துப பூமலர மனையிடத்துக் குழவியயின்ற

மேவிய

---

க - உ. புறநா. கரு : கூ - எ; சனி கரியநிறமுடையனுதலின்மைம் மீனென்றார்; சனிபுகைதலாவது, இடபம் சிங்கம் மீனம் இவற்றொடுமாறு படுதல்; இவற்றுள, சனி தனக்குப் பகைவீடாகிய சிங்காரசியிற் புகின் உலகிற்குப் பெருந்தீங்கு விளைவிப்பனென்பதை, "மகத்திற் புக்கதோர் சனியெனக் காளுய" (தேவாரம்), "அடையார்தமக்கு,மகத்திற் சனியன்ன திர வாணன்" (தஞ்சை. சஅ), "மகத்தில வாழசனியாயினே" (வாயுசங்கிதை, கடவுள். எ), "விசயன் றயமுற் குதவி செய்யாமன், மகத்திற் சனி போல வணக்குவம் யாம்" (வில்லி - பாரதம், கக - ஆம்போர். சo) என்பவற்றுலுணர்க; (நக்ஷத்திரங்களுள மகம், பூரம், உத்தரத்தின் முதற்பாதம் சிங்காரசிக்கு உரியவை.) தூமம், புகைக்கொடியென்றுங் கூறப்படும் ; தூமகேது வென்பதுமிதுவே ; இது வட்டம்,சிலை, நுட்பம், தூமமென்னுங் கரந்துறை கோட்கள் நான்கனுளொன்று; இதன தோற்றம் உலகிற்குப் பெருந்தீங்கு விளைவிக்குமென்பர்;" தூமகேது புவிக்கெனத் தோன்றிய" (கம்ப. மந்தரை சூழ்ச்சி. உக); "கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும், விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்" (சிலப். கo : கoஉ-ங) என்பதனுரையில இவ்வடிகளைமேற்கோள்காட்டினர் அடியார்க்குநல்லார்.

ங. 'கோஒல் செம்மையிற் சான்றோர்பலகி யெனவரூம் பண்புபொருளியையின்றேனும் பெயர்கொளவருதற்பாற்படுதலும்,...இதனுற் கொள்க'

தொல். வேற்றுமை. சூ. ௫ - ந.

அ. வெருகு - காட்டுப்பூனை; இதனை, "பட்ட்ப வேலியும் புதலும் பற்றி, விடக்கிற்கு வேற்றயிர் கொலவது" (தொல். மரபு. சூ. ௬அ) என்பர் பேராசிரியர்.

அ - க. "வெருகுவேட்பச் சிரிப்பனபோன் முகைத்த முல்லை" சீவக. கஙருக.

## கசூஅ புறநானூறு மூலமும் உரையும்.

கண்ணையுடைய ஆமாவினது நெடியநிரை நல்லபுல்லைமேயக் கோல் செவ்விதாகவின் அமைந்தோர் பலராக மழைபிழைப்பறியாத புல்லியநிலத்தின்கண்ணது, இளையவெருகினது கூரியபல்லையொப்பப்பசிய இலையையுடைய முல்லை முகைக்கும் நுணணிய தொழிலையுடைய வளையினையணிந்த மகளிருடைய தந்தைநாடு.—எ - று.

பல்லியென்பதனைப் பலகவெனத் திரிக்க.

அரிவையர்தந்தைநாடு, பெயலபிழைப்பறியாப் புன்புலத்ததுவெனக் கூட்டுக.

என்றதனற்போந்தது : புன்புலத்ததாயிருந்ததே ! அது பெயல் பிழைப்பறியாமை, கோல்செம்மையின் உளதாயதன்றே; அவ்வாறு*கோல்செவ்விதாக நிறுத்தியவனை இழப்பதேயென்று அவன் நாடுகண்டு இரங்கியவாறாகக் கொள்க. (கஎ)

---

* "முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி, யொல்லாது வானம் பெயல்", "ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர், காவலன் காவா னெனின்" குறள். ருருக, ருசo.

---

(ககஎ.) அறையும் பொறையு மணந்த தலைய
வெண்ணாட் டிங்க ளனைய கொடுங்கரைத்
தெண்ணீர்ச் சிறுகுளங் கீள்வது மாதோ
கூர்வேற் குவைஇய மொய்ம்பிற்
றேர்வண் பாரிதண் பறம்பு நாடே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—பாறையும் சிறுகுவடுங்கூடிய தலையையுடையவாகிய எட்டாம்பக்கத்துப் பிறைபோலும் வளைந்த கரைகளையுடைத்தாகிய தெளிந்த நீரையுடைய சிறியகுளம் பாதுகாப்பாரின்மையின் உடைவதுபோலும், கூரியவேலையேந்திய திரண்டதோளையுடைய தேர்வண்மையைச்செய்யும் பாரியது குளிர்ந்த பறம்புநாடு.—எ - று.

நாடுகுளங்கீள்வதென இடத்து நிகழ்பொருளின்றொழில இடத்துமேல ஏறி நின்றது.

மாதோ, அசைநிலை.

(ககஅ)

---

௫. புறநா. ககசு : ௫; உ00: ௯ - கஉ; உ0க: உ - ௫; "சுரும்புண, நறவுவா யுறைக்கு நாக நெடுவழிச், சிறுவீ முல்லைகுப் பெருந்தேர் நல்கிய, பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற், பறம்பிற் கோமான் பாரியும்" (சிறு பாண். அ௭ - ௯க); "முல்லைக்குத் தேரு மயிலுக்குப் போர்வையும், தொல்லை யளித்தாரைக் கேட்டறிதும்" (பழ. ௩௬௧) ; " முல்லைக்குத்

தேரு மயிலுக்

குப் போர்வைபு, மெலலேர் ஞாலத் திலசவிளக்கத் - தொல்லே, யிரவாம லீந்த விறைவர்போ னியும், கரமாம லீகை கடன்" பு - வே. ௬: ௫.

# புறநானூறு மூலமும் உரையும்.

௧௬௬

(௧௧௬.) கார்ப்பெய றலேஇய காண்பின் காலேக்
களிற்றுமுக வரியிற் றெறுழ்வீ பூப்பச்
செம்புற் றீயலி னின்னளேப் புளித்து
மென்றினே யாணர்த்து நந்துங் கொல்லோ
௫ நிழலி னீளிடைத் தனிமரம் போலப்
பணைகெழு வேந்தரை யிறந்து
மிரவலர்க் கீயும் வள்ளியோ னுடே.

திணையும் துறையும் அவை.

அவனே அவர் பாடியது.

இ - ள்.—கார்காலத்து மழைபெய்துமாறிய காட்சியினியகாலத்துக் களிற்று முகத்தின்கட் புகர்போலத் தெறுழினது மலர்பூப்பச் செம்புற்றின் கண் ஈயலே இனியமோரோடு கூட்டி அடப்பட்ட புளிங்கறியையுடைத்து; மெல்லிய திணேயாகிய புதுவருவாயையுடைத்து, முன்பு ; இது அது கெடுங் கொல்லோ! நிழலில்லாத கெடிய வழிக்கணின்ற தனிமரத்தையொப்பமுரசை யுடைய அரசரின்மிகுத்தும் இரவலர்க்கு வழங்கும் வண்மையையுடையவ னதுநாடு.—எ - று.

பூப்பவென்னும் விணேயெச்சம் இன்னளேப் புளித்தென்னும் குறிப்பொடு

முடிபதது.

வள்ளியோனுடு, இன்னளைப்புளித்து ; யாணர்த்து ; அது

நந்துவ்

கொல்லோவெனக் கூட்டுக.

தெறுமென்றது, காட்டகத்ததொருகொடி ; புளிமாவெண்றுரைப்பாரு (கககூ)

முளர்.

---

க. "தலைப்பெயநிலைஇய" முருகு. கூ.

ங. புறநா. ருக: ங-க0 ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க. "சிறுத் தலைத் துருவின் பழுப்புறு விளைதயி, ரிதைப்புன வரகி ன வைப்புமா ணரிசி யொடு, கார்வாய்ப் பொழிந்த வீர்வாய்ப் புற்றத், தியலபெய் தட்ட வின்புளி வெஞ்சோறு" அகநா. ங கூச: உ - ரு.

ரு. "அழன்மண்டு போழ்தி ன டைந்தவர்கட் கெல்லா, நிழன்மரம்போ னேரொப்பத் தாங்கி" (நாலடி. உ0உ), "அருஞ்சுரத்தின் மரம்போல அடைந்தார்க்களித்தல் அவற்கியல்பு" சீவக. ஙட - ந.

சு - எ. புறநா. ககரு: ரு - சு.

---

(கஉ0.) வெப்புள் விளைந்த வேங்கைச் செஞ்சுவற்
கார்ப்பெயற் கலித்த பெரும்பாட் டீரத்துப்
பூழி மயங்கப் பலவுழுது வித்திப்

பல்லி யாடிய பல்கிளைச் செவ்விக்
களைகால் கழாலிற் றோடொலிபு நந்தி
மென்மயிற் புனிற்றுப் பெடைகடுப்ப நீடிக்
கருந்தாள் [1] போகி யொருங்குபீள் விரிந்து
கீழு மேலு மெஞ்சாமைப் பலகாய்த்து
வாலிதின் விளைந்த புதுவர கரியத்
தினைகொய்யக் கவ்வை கறுப்ப வவரைக்
கொழுங்கொடி விளர்க்காய் கோட்பத மாக
நிலம்புதைப் பழுனிய மட்டின் றேறல்
புல்வேய் குரம்பைக் [2] குடிதொறும் பகர்ந்து
நறுநெய்க் கடலை விசைப்பச் சோறட்டுப்
பெருந்தோ டாலம் பூசன் மேவர
வருந்தா யாணர்த் நந்துங் கொல்லோ
விரும்பல் கூந்தன் மடந்தையர் தந்தை
யாடுகழை நரலுஞ் சேட்சிமைப் புலவர்
பாடி யானாப் பண்பிற் பகைவ
ரோடுகழற் கம்பலை கண்ட
செருவெஞ் சேஎய் பெருவிற லூரே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—வெம்மைமுதிர்ந்த வேங்கைமரத்தையுடைய சிவந்த மேட்டு நிலத்துக் கார்காலத்து மழையான் மிகுந்த பெரிய செவ்வியையுடைய ஈரத்தின்கட் புழுதிகலக்கப் பலசால்பட உழுது வித்தித் தாளியடிக்கப்பட்ட பல கிளையையுடைய செவ்வியின்கட் களையை அடியினின்றும் களைதலான் இலை

தழைத்துப் பெருகி மெல்லிய மயிரினையுடைய நன்றணிய பேடையையொப்ப ஓங்கிக் கரிய தண்டுநீண்டு எல்லாம் ஒருங்கு சூலவிரிந்து கதிரினது அடியும் தலையும் ஒழியாமல மிகக்காய்த்துச் சீரிதாகவிளைந்த புதியவரகையறுக்கத் தினையையரிய எள்ளிளங்காய்கறுப்ப அவரையினது கொழுவிய கொடியின்

---

ச. பலவியாடுதல, தாளியடித்தல், ஊடுடித்தலென்பன ஒருபொருட் சொற்கள்; அது நெருங்கி முளைத்த பயிர்களை விலகுதற்கும் வருத்தமின்றிக் களைபிடுங்குதற்குமாகக் கீழ்நோக்கியுள்ள கூரியபல முளைகளையுடைய பலகையின் இரண்டுபக்கத்தும் மேற்புறத்திலுள்ள வளையங்களிற் கட்டிய கயிறுகளைச் சேர்த்துப் பூட்டிய நுகத்தை வாய்கட்டப்பட்டுள்ள எருதுகளின் பிடரியில வைத்துப்பூட்டியுழச்செய்தல்.

கo. "சிறுதினை கொய்யக் கவ்வை கறுப்ப" மதுரை. உஎக.

(பி - ம்.)—1 'போக்கி' 2 'குடிஞெறும்'

கவ வெள்ளைக்காய் அறக்கும்செவ்வியாக நிலத்தின்கட் புதைக்கப்பட்ட
மூத்திய மதவாகிய தேறலைப் புல்லாலே வேயப்பட்ட சிறியமனைகின்கட்
டியுள்ள இடந்தோறும் நுகரக்கொடுக்க நறியநெய்யிலே கடலைதுள்ள
ஆதனோடு சோற்றையிட்டு வட்டுதற்குப் பெரியதோளையுடைய மனையாள்
தலம்பூசுதலைப்பொருந்த வருந்தவேண்டாத புதுவருவாயையுடைத்து,முன்பு;
இனி அது கெடும்போதும் ! கரிய பலவாகியகூந்தலையுடைய மடந்தையர்க்
குத் தந்தையாகிய அசைந்த மூங்கில இழைந்தொலிக்கும் உயர்ந்த உச்சியை
யுடைய, புலவர் பாடப்பட்டமையாத தன்மையையுடைய பகைவரது புறக்
கொடுத்தோடும் வீரக்கழலினது ஆரவாரத்தைக்கேட்டு காணிப் பின் செல்
லாது கண்டுநின்ற போரைவிரும்பிய சேயையொக்கும் பெரிய வென்றியை
யுடையவனது காடு.—எ - று.

வித்தி ஆடி யசெவ்வியெனவியையும்.

வந்தியென்பதுமுதலாய வினையெச்சங்கள் விளந்தவென்னும் பெய
ரெசவினையோடும், அரியவென்பதுமுதலாக மேவாவென்பதீறாக நின்ற
வினையெச்சங்கள் யாணர்த்தென்னும் குறிப்புவினையோடும் முடிந்தன.

பகர்ந்தென்பது, பகரவெனத் திரிக்கப்பட்டது.

விசைப்பச் சோறட்டுமேவாவென இயையும்.

செருவெஞ்சேஎய் பெருவிறலது சேட்சியமையையுடையகாடு, யாணர்த்து ; அது நந்துங்கொல்லோவெனக்கூட்டுக.

பெருந்தோளென்பது, பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை.

வெப்புளென்பது வெம்மைக்கு அதுவும் ஒரு வாய்பாடாய்நின்றது. வெம்மையை உள்ளும் முதிர்ந்தவெனினுமமையும். (௩௨௦)

(கஉக.) ஒருதிசை யொருவனை யுள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசின் மாக்கள்
வரிசை யறிதலோ வரிதே பெரிது
மீத லெளிதே மாவண் டோன்ற
லதுநற் கறிந்தனை யாயிற்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே. *

௩. வரிசை : புறநா. ௬: ௧௬.

உ - ௪. புறநா. ௨௪: ௩௦; "அறிவுமடம் படுதலு மறிவுநன் குடைமையும், வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும், பரிசில் வாழ்க்கைப் பரிசில ரேத்த" சிறுபாண். ௨௧௬ - ௮.

ரு. மு. புறநா. ௩ரு: ௩௦.

௬. "தத்தம் வரிசையா னின்புறாஉ மேல்" (நான்மணி. ௬௭); "பொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின், அதுநோக்கி வாழ்வார் பலர்" குறள். ருஉ௮.

* மு. பாடாண்டிணைக்குரிய விடைகள் பலவற்றுள், சிறிதென் றவிடைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. ரு. ௩௬ - ந.

26



திணை - அது ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.
மலையமான் திருமுடிக்காரியைக் கபிலர் பாடியது.

இ - ள்.—ஒருதிசைக்கண் வள்ளியோனாகிய ஒருவனை நினைந்து நான்கு திசையினுமுள்ள பரிசின்மாக்கள்பலரும் வருவர்; அவர் வரிசையறிதல் அரிது; கொடுத்தல் மிகவும் எளிது; பெரிய வண்மையையுடைய தலைவ, நீ அவ்வரிசையறிதலை நன்றாக அறிந்தாயாயின், அறிவுடையோரிடத்து வரிசை கருதாது ஒருதரமாகப்பார்த்தலைத் தவிர்வாயாக.—எ - று.
(கஉக)

---

(கஉஉ.) கடல்கொளப் படாஅ துடலுந ருக்கார்
கழல்புனை திருந்தடிக் காரிநின் னாடே
யழல்புறந் தரூஉ மந்தண ரதுவே
வீயாத் திருவின் விறல்கெழு தானை
மூவரு ளொருவன் றுப்பா கியரென
வேத்தினர் தரூஉங் கூழே நுங்குடி
வாழ்த்தினர் வரூஉ மிரவல ரதுவே
வடமீன் புரையுங் கற்பின் மடமொழி
யரிவை தோளள வல்லதை
நினதென விலைநீ பெருமிதத் தையே.

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—கடலாற்கொள்ளப்படாது, அதனைக்கொள்ளுதற்குப் பகைவர் மேற்கொள்ளார், வீரக்கழலணிந்த இலக்கணத்தாற்றிருந்திய கலல அடியையுடைய காரி, நினது நாடு; அது, வேள்வித்தீயைப் பாதுகாக்கும்

பார்ப்பாருடையது; கொடாத செல்வத்தினையும் வெவ்வழிபொருந்திய படையையுமுடைய மூவேந்தருள் ஒருவனுக்கு வலியாகவேண்டுமென்று அம்மூவர் பாணியும் வருதோர் தனித்தனி புகழ்ந்து நினக்குத்தரும்பொருள், நமது குடியை வாழ்த்தினராய்வரும் பரிசிலருடையது; ஆதலால், வடதிசைக்கட் டோன்றும் அருந்ததியையொக்கும் கற்பினையும் மெல்லிய மொழியினையுமுடைய அரிவையுடைய தோள்மாத்திரையல்லது சொல்ல ஒன்றுடையையல்லையாயிருக்கவும் நீ பெரிய நின்னுடையதென்று செருக்கினையுடையை யாயிராநின்றாய்; இதற்குக்காரணமென்னை?—எ - று.

க-உ. காரியின்காடு, மலையும் மலைசார்ந்த இடமுமாதலின் இங்ஙனம் கூறினார்; இவன் இராசதானி பெண்ணையாற்றங்கரையிலுள்ள திருக்கோவலூரென்று, "துஞ்சா முழவிற் கோவற் கோமான், நெடுந்தேர்க் காரி கொடுங்கால் முன்றுறைப், பெண்ணையம் பேர்யாற்று நுண்ணறல்" (அகநா. ௩௫) என்பதனால் தெரிகின்றது.

௪-எ. புறநா. ௩௨௦: ௧௪-அ.

அ-௯. "வடமீன்போற் றொழுதேத்த வயங்கிய கற்பினாள்: கலி, ௨.

# புறநானூறு மூலமும் உரையும்.

௨௦௩.

ஏத்தினர்தருஉமென்று பன்மையாற்கூறியது, அவ்வேந்தன் அமைச்சரை.

மூவருமா யாரொருவன் ; எனக்குத் தப்பாகியரென அம்மூவரும் ஏத் ்ினர்தருஉமென்று உரைப்பினுமமையும்.

நாடு அருதணரது ; கூழ இரவலரது ; அரி வடூதாளாளவல்லு ்த நீலக்கு உ ்த்தாகக்கூறுதற்கு யாதும் இலலையாயிருநதது ; நீ பெருமிதத் ்தபு ட
பயா யிருநதாயென விய ் துகூறியவாறு.
(௧௨௨)

---

(௧௨௩.) நாட்கள் ளுண்டு நாண்மகிழ் மகிழின்
யார்க்கு மெளிதே தேரீ தல்லே
தொலையா நல்லிசை விளங்கு மலையன்
மகிழா தீத்த விழையணி நெடுந்தேர்
ரு பயன்கெழு முள்ளூர் மீமிசைப்
பட்ட மாரி யுறையினும் பலவே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ-ள்.—நாட்காலையே மதுவையுணடு
நாளோலககததுமகிழசசியை

மகிழின், தேர்வழங்குதல யாவர்க்கும் எளி ; கெடாத நலல புகழவிளங்கு மலையன் மது நுகரா து மகிழாது வழஙகிய பொறப டகளால அணியபபட்ட

உயர்ந்தேர், பயன்பொருந்திய முள்ளூர்மலையுச்சியின் கருணைடாகிய மழைமினாது துளியினும் பல.—எ - று.

இதன்கருத்து : ஏனோயோர்கோ ட
கொடை இயற்கையென்றும் கூறியவாறு.
செயற்கையென்றும், இவன்
(கஉரு.)

---

க. "தூங்கு தசும்பு வாக்கிய பசும்பொரித்த தேற,விளங்கதிர் ஞாயிற்றுக் கள்ளக்கொடோறம் பெறகுவிர்" (மலைபடு. சஅ - ச.) காணமகிழ: புறநா. உக: ரு.

ரு. முள்ளூர் மலையுடைய தென்பது, " ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப், பலருடன் கழித்த ஒள்வாள மலையன" (நற். கஎ0),"முரண் கொ டிப்பித் செவ்வேல் மலையன், முள்ளூர்க் கானம்" (குறுந். ௩கஉ), " முள்ளூர் மன்னன்கழறொடிக் காரி " (அகநா. உ0க)
என்பவற்றாலும் விளங்கும்.

ச. புறநா. கூச: உ0 - உக ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

---



(கஉச.) நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குவ ரல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கு மருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—நல்லநாளன்றாகப்போகிய புரிசிமித்தம் இடையேநின்று தடுப்பச் செவ்வியன்றாகச்சென்றுகூடிக் கூறுபாடன்றாக முனியும்வார்த்தை களைச்சொல்லினும் வறிதாக மீளாவரலலர், ஒழுங்குபட ஓசைநிறைந்து ஒலிக்கும் அருவியையுடைய பெருமைபொருந்திய மலையையுடையோனைப்பாடியவர்கள்.—எ - று.

மலையற்பாடியோர், வறிதுபெயர்குவரலலரெனக்கூட்டுக.

அன்றியென்பது, அன்றெனத்திரிந்தது செய்யுளாகலின்.

வறிதென்னும் குறிப்புவினையெச்சம், பெயர்குவரல்லரென்பதனுட பெயர்தலோடு முடிந்தது. வறியரென்றுரைப்பாருமுளர். (கஉசு)

---

க. "புலரி விடியற் புள்ளோர்த்துக் கழிமின்" (மலைபடு. ௪௪௮); "நாளும் புள்ளுங் கேளா வூக்கமொ, டெங்கோ லேயினை றுதலின் யாமதத் தச், செங்கால் வெட்சியுந் தீயுகு துஉய், மறிக்குரற் குருதி மன்றுதுக ளவிப்ப, விரிச்சி யோர்த்தல வேணடா, வெயிற்புறக் தருதும்யாம் பகைப் புல நிரையே" (தகடூர்யாத்திரை); 'அன்றி' என்னும் குறிப்புவினையெச்சத்தின் ஈற்று இகரம் செய்யுளில உகரமாகததிரிந்து வநததற்கும் (தொல். உயிர்மயக்கு. சூ. ௩௫ - இளம்; ந; நன் - மயிலை. சூ. ௧௭௨; நன் - வி. சூ. ௧௭௩; இ - வி. சூ. ௬௧ - உரை), அது செய்தெனெச்சவினைக்குறிப்பாய் வநததற்கும் (தொல். வினை. சூ. ௩௪ - பேர்; ௸ ௸ ௸ ௩௧-ந; நன் - மயிலை. சூ.௩௪௩; இ - வி. சூ. உ௪௬ - உரை) மேற்கோள்.

௨. திறனன்று மொழிதல: "திறனறிந்து சொலலுக சொலலை யறனும்,
பொருளு மதனினூஉங் கில்" குறள். ௬௪௪.

௧ - ௩. குறுந். ௧௪௦; வினையெச்சக்குறிப்பு அடுக்கிவந்து ஒருவினை கொண்டதற்கு மேற்கோள்; (நன் - மயிலை. ந. ௩௫௪); இவை அடுக்காகா வென்பர் விருத்தியுரையாசிரியர்; நன் - வி. சூ. ௩௫௫.

௪. புறநா. ௩௧௧; ௨௨ - ௩.

---

(௧௨௫.) பருத்திப் பெண்டின் பனுவ லன்ன
நெருப்புச்சினந் தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை

௧. பருத்திப்பெண்டு: புறநா. ௩௨௬: ௫; "ஆளில பெண்டிர் தாளிற் செய்த, நுணங்குநுண் பனுவல் போலக் கணங்கொள" (நற். ௩௫௩); "நுண்ணிய பலவாய பஞ்சுநுனிகளாற் கைவன் மகடூஉத் தனது செய்கை

# புறநானூறு மூலமும் உரையும்.

௨௦௫

பருஉக்கண் மண்டையொ டூழ்மாறு பெயர
வுண்கு மெந்தையிற் காண்குவந் திசினே
௫ நள்ளாதார் மிடல்சாய்த்த

வல்லாளனின் மகிழிருக்கையே
யுழுத நோன்பக டழிதின் றாங்கு
நல்லமிழ் தாகநீ நயந்துண்ணு நறவே
குன்றத் தன்ன களிறு பெயரக்
கடந்தட்டு வென்றோனு நிற்கூ றும்மே
வெலீஇயோ னிவனெனக்
கழலணிப் பொலிந்த சேவடி நிலங்கவர்பு
விரைந்து வந்து சமரந் தாங்கிய
வல்வேன் மலைய னல்ல னாயின்
நல்லமர் கடத்த லெளிதும னமக்கெனத்
தோற்றோன் றானு நிற்கூ றும்மே
தொலைஇயோ னிவனென
வொருநீ யாயினை பெரும பெருமழைக்
கிருக்கை சான்ற வுயர்மலைத்
திருத்தகு சேஎய்நிற் பெற்றிசி னோர்க்கே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

சேரமான்மாந்தரஞ்சேரலிரும்பொறையும் சோழன் இராசசூயம் வேட்டபெருநற்கிள்ளியும் பொருதவழிச் சோழற்குத் துப்பாகிய தேர் வண்மலையனை வடமவண்ணக்கன்பெருஞ்சாத்தனார் பாடியது.

---

மாணப்பிறர் ஒருமைப் படுத்தலாம் உலகத்து நானாற்றலென்பது" (இறை. சூ. க - உரை); "பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச், செஞ்சொற் புலவனே சேயிழையா - எஞ்சாத, கையேவா யாகக் கதிரே மதியாக, மையிலா

றான்முடியு மாறு'' நன்னூல், சூ. உ௯.

௪ - ௨. புறநா. ௩௯௯ : ௯௨ - ௪ ; ''இழுதி யன்ன வாணிணம்'' (மலை படு. ௨௪௬) ; ''இன்னுமவ்விலேசானே, 'நெருப்புச்சினந் தணிந்த நிணந் தயங்கு கொழுங்குறை' என்றாற் போலச் சினமிலவற்றை யுள்ளதுபோலக் கூறுவனவும் கொள்ளாமோவெனின், உணர்வுடையனவற்றுக்கல்லது சுவை தோன்றாமையின் வெகுளியென்று ஈண்டுக் கூறப்படாவென்பது. இது பிறன் கட் டோன்றிய பொருள்பற்றிவரும்'' தொல். மெய்ப்பாடு. சூ. ௧௦ - பேர்.

எ. புறநா. ௩௭௭ : ௧௪ ; ''அழி - வைக்கோல் ; 'ஆளழிவாங்கியதரி திரிப்ப' இது சிலப்பதிகாரம்; 'உழுத நோன்பக டழிதின் றாங்கு' இது புற நானூறு'' தக்க. ௫௩௪ - உரை ; தொல். உவம. சூ. ௨௦ - பேர்.

(பி - ம்.)—1 'தப்பாகியவொருவனும்மலையனை வடவண்ணத்தன் பேரிசாத்தன்'

## ௨௦௬. புறநானூறு மூலமும் உரையும்.

இ - ள்.—பருத்திநூற்கும் *பெண்டாட்டியது சுகிர்ந்தபஞ்சுபோல நெருப்புத் தன்வெம்மை ஆறுதற்கேதுவாகிய நிணமயாசந்த கொழுவியதடி களைப் பெரிய உடலிடத்தையுடைய கள்வார்த்தமண்டையோடு முறை முறையாக ஒன்றற்கொன்றுமாறுபட உண்பேமாக, எம்முடைய தலைவ, நின்னைக்காண்பேன்வந்தேன், பகைவரது வலியைத்தொலைத்த வலிய ஆண் மையையுடையோய், நினது மகிழ்ச்சியையுடைய இருக்கைக்கண் ; உழுத வலியபகடு தின்ற வைக்கோலைத்தின்றாற்போல நீயது தாளாற்றலாற்செய்த பொருளை யாவர்க்கும் அளித்துப் பின் நீ விரும்பியுண்ணும் கள், நல அமிழ்தாவதாக ; மலைபோலும்யானைபட எதிர்நின்று கொன்று வென்றவ னும், நம்மை வெலவித்தோனிவனென நின்னையே மகிழ்ந்து சொலலும் ; வீரக்கழலாகிய அணியாற்சிறந்த செய்ய அடியாலே போர்க்களத்தைக் கைக் கொள்ளவேண்டி விரைந்துவாத போரைத்தடுத்தவலியவேலினையுடையமலை

திணைநதயவகுகொழுங்குழை யெனினுமமையும்.

பருஉக்கண்மண்டையென்பதற்குக் கள்ளையுடைய மண்டையெனினுமமையும்.

உடலிடம்பரிய
(௧௨௫)

* பெண்டாட்டி - பெண்மையையுடையாள்; "ஒருபெண்டாட்டி தமரொடு கலாய்த்து" இறை. சூ. க - உரை



(கு. சு.) ஒன்னார் யானை யோடைப்பொன் கொண்டு
பாணர் சென்னி பொலியத் தைஇ
வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீ
ரோடாப் பூட்கை யுரவோன் மருக
வல்லே மல்லே மாயினும் வல்லே
நின்வயிற் கிளக்குவ மாயிற் கங்கு
லுயின்மடிந் தன்ன தூங்கிரு ளிறும்பிற்
பறையிசை யருவி முள்ளூர்ப் பொருந
தெறலரு மாபினின் கிளையொடும் பொலிய
நிலமிசைப் [1] பரந்த மக்கட் கெல்லாம்

புலனழுக் கற்ற வந்த ணாள
னிரந்துசென் மாக்கட் கினியிட னின்றிப்
பரந்திசை நிற்கப் பாடின னதற்கொண்டு
சினமிகு தானை வானவன் குடகடற்
பொலந்தரு நாவா [2] யோட்டிய வவ்வழிப்
பிறகலஞ் செல்கலா தனையே மத்தை
யின்மை துரப்ப விசைதா வந்தினின்
வண்மையிற் றொடுத்தனம் யாமே முள்ளெயிற்
றரவெறி யுருமின் முரசெழுந் தியம்ப
வண்ணல் யானையொடு வேந்துகளத் தொழிய
வருஞ்சமர் ததையத் தாக்கி நன்று
நண்ணாத் தெவ்வர்த் தாங்கும்
பெண்ணையம் படப்பை நாடுகிழ வோயே.

திணை - பாடாண்டிணை; துறை - பரிசிற்றுறை.
மலையமான் திருமுடிக்காரியை [3] மாறோக்கத்து நப்பசலையார் பாடியது.

இ - ள்.—பகைவருடைய யானையினது பட்டத்திற் பொன்னைக்கொண்டு பாணரது தலை பொலியும்படிசெய்து வாடாத பொற்றாமரையைச் சூட்

க. புறநா. ௧௨௬ : ௭ ; "பூட்டாப்பூட்கை" புறம். ௨௭௭.

உ-௭. "கார்வண்டு, தொக்கிருந்தா லித்துழலும் பூங்கிருங்வெய்யோற் கொதுங்கிப், புககிருந்தா லன்ன பொழில்" நள. சுயம். ௨௨.

௩. புறநா. ௨௨௬ : க ; "பலதரக்குரலருவி" (பதிற். ௭0) ; "பலவிசையருவி" (சிலப். ௨௫ : ௨௮) ; 'இசை' என்னும் உரிச்சொல் ஒலித்தற் பொருளிற் பண்பில வருதற்கு மேற்கோள்; நன் - மயிலை. ௫. ௪௫௮ ; நன்- வி. ௬. ௪௫௬.

(பி - ம்.)—1 'பிரசதமக்கள்' 2 'ஓட்டியவழிப்பிறர்கலஞ்' 3. 'மாறே

டிய சிறந்த தலைமையினையும் புறக்கொடாத மேற்கோளினையுமுடைய டெயோன்மரபிலுள்ளாய், ஒன்றைக்கற்றறியேமாயினும் அறிவேமாயினும் விரைநின்னிடத்துப் புகழைச் சொல்லுவேமாயின், இராப்பொழுதுதான் ஓரிடத்தே உறங்குவதுபோன்ற செறிந்த இருளையுடைய சிறுகாட்டையும் பறையொலிபோலும் ஒலிபொருந்திய அருவியையுமுடைய முள்ளூர்க்குவேந்தே அழித்தற்கரிய தன்மையையுடைய நின்சுற்றத்துடனேபெருக நிலத்தினமேல் மிக்க மாகதரெல்லாரினும் அறிவின்கண்மாசற்ற * அந்தணனாகிய கபிலன் இரந்துசெல்லும்புலவர்க்கு இனிப்புகழ்தற்கு இடமில்லையாகப் பரந்து புகழ்சிறப்பப்பாடினன்; அதனைக் கொண்டு சினமிக்க சேனையையுடைய சேரன் மேலகடலின்கட் பொன்னைத்தரும் நாவாய்செலுத்திய அவ்விடத்து வேறுசில மரக்கலம் போகமாட்டாத அத்தன்மையையுடையேமாயும் எமது மிடிதுரக்க நின்புகழ்கொடுவா வாது நினது வண்மையிலே சில சொல்லத்தொடுத்தனம், யாங்கள்; முடபோலும் பலவினையுடைய பாம்பையெறியும் இடியேறுபோல முரசு இளர்ந்தொலிபத் தலைமையையுடைய யானையுடனே அரசுபோர்க்களத்தின்கட்பட பொறுத்தற்கரிய பூசலைச் சிதறவெட்டிப் பெரிதும்பொருந்தாதபகைவரைத் தடுக்கும் பெண்ணையாற்றுப்பக்கத்தையுடைய நாட்டையுடையோய்.—எ-று.

உரவோர்மருக, பொருந, நாடுகிழவோய், நினவயிற்கிளக்குவமாயின, அந்தணன் கிளையொடும்போகிய இசைசிறப்பப்பாடினன்; அதற்கொண்டு பிறர்தலைச்செல்லாத அனையேமாயும், இன்மைதுரத்தலால இசைதரவந்து நின்வண்மையிற் சிலதொடுத்தேம்யாமெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

மக்கட்கெல்லாமெனபது, ஐந்தாவதன்பயககம். மக்கட்கெல்லாம் ஒக்க வெனினுமமையும்.

வண்மையிற்ருடுத்தனமெய்பதற்கு இன்வணமையால்
டனமெனினுமமைமயும்.

வினைப்புண
(கஉ௬)

*அதணைளஞெய கபிலம் ; புறநா : ௨௦௦ : கா. ; ௨௦௧ : எ - பார்க்க.

---

(கஉஎ.) களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாடின் பனுவற பாண ருய்த்தெனக்
களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப
௫ வீகை யரிய விழையணி மகளிரொடு
சாயின் றென்ப வாஅய் கோயில்

---

க. புறநா. கசரு: ௫ ; "கருங்கோடடுச சீறியாழ பணனுமுறை நிறுப்ப" (நெடுநல். எ௦) ; "கருங்கோட்டுச் சீறியாழ்" மலைபடு. ௫௩௪.

க - ௬. "ஒப்புரவி னலகரும் கேடெனி னஃதொருவன், விற்றுக் கோட் டக்க துடைத்து" (குறள். ௨௨௦) ;
"வள்ளன்மையில்லாதான் செல் வத்தின் மற்றையோ, னல்குரவே போலு கனிநல்" நீதிநெறி. ௬எ.

சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி
யுரைசா லோங்குபுக ழொரீஇய
முரசுகெழு செல்வர் நகர்போ லாதே.*

திணை - அது ; துறை - கடைநிலை.

ஆயை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது.

இ - ள்.—களாப்பழம்போலும் கரிய கோட்டையுடைத்தாகிய சிறிய யாழைக்கொண்டுபோம் இனிய பாட்டைவல்லபாணர் பரிசிலபெற்றுக் கொண்டுபோனார்களாக, களிறுகள் இல்லையாகிய புல்லிய பக்கத்தையுடைய கெடியதறியின்கண்ணே காட்டுமயில்கள் தத்தம் இனத்தோடு தங்கப் பிறி தோரணிகலமுமின்றிக் கொடுத்தற்கரிய மங்கலிய சூத்திரத்தையணிந்த மக ளிருடனே பொலிவழிந்துசாய்ந்ததென்று சொல்லுப, ஆயுடையகோயில் ; நுகர்தற்கினிதாகிய தாளிபபையுடைய அடிசிலைப்பிறர்க்கு உதவலின்றித்தம் முடைய வயிற்றையேநிறைத்துச் சொல்லுதற்கமைந்த மேம்பட்டபுகழைநீ ங்கிய முரசுபொருந்திய செல்வத்தினையுடைய அரசர்கோயில், இதனை ஒவ் வாது.—எ - று.

என்றதன் கருத்து : செல்வர்நகர், பெருந்திருவுடைமையிற் சிறந்தது போன்றிருப்பினும் ஆய்கோயில்வறிதெனினும் இஃது அதனினுஞ்சிறந்ததென் பதாம்.

ஆய்கோயில் சாயின்றென்ப; ஆயினும், முரசுகெழுசெல்வர்நகர் இதனை யொவ்வாதெனக்கூட்டுக. (கஉஎ)

எ - கO. "நறியவை வயலவர் காவி னீர்வர, வுறுபத நுங்கிய வொருவ லுகையான்" கம்ப. பள்ளியடை. ககக.

* மு. பாடாண்டிணைத்துறைகளுள், கொடுப்போரேத்திக்கொடார்ப் பழித்தற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. உகூ - இளம்; ஷை. ஷை. சூ. நரு - ந.

---

(கஉ௲.) மன்றப் பலவின் மாச்சினை மந்தி 3, , . 5
யிரவலர் நாற்றிய விசிகூடு முழவின்
பாடின் றெண்கண் கனிசெத் தடிப்பி
னன்னச் சேவன் மாறெழுந் தாலுங்
கழல்றொடி யாஅய் மழைதவழ் பொதியி

---

க - உ. புறநா. அக : எ - அ.

ந. செத்து - கருதி; "துவற்கலித்த புதுமுகை யூன்செத், தெடுத்த புன்புறச் சேவல்" மலைபடு. கசசு - எ.

தழியா

ரு. மு. குறுந். அச: ந.

ஆடுமகள் குறுகி னல்லது
பீடுகெழு மன்னர் குறுகலோ வரிதே.

திணை - அது ; துறை - வாழ்த்து ; இயன்மொழியுமாம்.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—மன்றப்பொதுவின்கண் பலவினது பெரிய கோட்டின்கண் வாழும் மந்தி பரிசிலர் தூக்கிவைக்கப்பட்ட பிணிப்புப்பொருந்திய மத்தளத்தினது ஓசையினிய தெளிந்த கண்ணைப் பலாப்பழமென்றுகருதித் தட்டினவிடத்து அதன்கண் வாழும் அன்னச்சேவல் அவ்வோசைக்குமாறாகவெழுந்து ஒலிக்கும் கழலவிடப்பட்ட வீரவளையையுடைய ஆயது முகில்படியும் பொதியின்மலை, ஆடச்செல்லுமகளிர் அணுகினல்லது பெருமைபொருந்திய அரசர் அணுகுதலரிது.—எ - று.

இது, கொடைச்சிறப்பும் வென்றியும் கூறியவாறாயிற்று.

(கஉஅ) கூ - எ. புறநா. ருசு

: ச - கச ; கoகூ : கரு - அ.

---

(கஉகூ.)[1] குறியிறைக் குரம்பைக் குறவர் மாக்கள்
வாங்கமைப் பழுனிய தேறன் மகிழ்ந்து
வேங்கை முன்றிற் குரவை யயருந்
தீஞ்சுளைப் பலவின் மாமலைக் கிழவ
ஆஅ யண்டிர னடுபோ ரண்ண
லிரவலர்க் கீத்த யானையிற் கரவின்று

வான மீன்பல பூப்பி னானு
தொருவழிக் கருவழி யின்றிப்
பெருவெள் ளென்னிற் பிழையாது மன்னே.

திணை - அது ; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

---

உ. மதுவை மூங்கிற்குழாயில வார்த்து முதிரச்செய்தலை, "நெடுங்க ணுடைமைப் பழுனிய கடுந்திறற், பாப்புக் கடுப்பன்ன தோப்பி", "அம்பணை விளைந்த தேக்கட் டேறல்" (அகநா.நடு,நகூ), "நீடமை விளைந்த தேக் கட் டேறல்" (புறநா. கசுரு) என்பவற்றாலுமறிக.

ரு. பரிசிலர்க்கு யானை கொடுக்கப்படுதலை, புறநா. கூo, கசுக, கசுரு,
கஙுக - ஆம் பாட்டுக்களாலும், "இரவலர் வருஉ மளவை யண்டிரன், புர வெதிர்ந்து தொகுத்த யானைபோல" (நற். உகூஎ)," தாடியடியன்ன தூங்கு நடைக் குழவியொடு, பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கென"(பொருந. கஉரு - கூ), "குன்று இயபொழும் வேழக்குழாமுங் கொடைபுகழ்ந்து, சென்றார் முகக்கும்" (தஞ்சை. கசக) என்பவற்றாலுமறிக.

(பி - ம்.)—1 'குதைபிதை'

# புறநானூறு மூலமும் உரையும்.

உகக

இ - ள்.—குறிய இறப்பையுடைய சிறிய மனையின்கட் குறமக்கள் வளைந்த மூங்கிற்குழாயின்கண் வார்த்திருந்து முதிர்த்த மதுவை நுகர்ந்து வேங்கைமரத்தலையுடைய முற்றத்தின்கட் குரவைக் கூத்தையாடும் இனிய சுனையை யுடைத்தாகிய பலாமரத்தையுடைய

பெரிய மலையையுடையோன்,

ஆயாகிய அண்டிரன், கொல்லும் போரைச்செய்யும் தலைவன், அவன் இரப்போர்க்குக் கொடுக்கப்பட்ட யானைத்தொகைபோல, மேகமறைத்தலின்றி ஆகாயம் பலமீனையும் பூக்குமாயின் அமையாது, யாரிடத்தும் கரிய இடம் இல்லையாகப் பெருக வெண்மையைச் செய்யுமாயின் அம்மீன்றொகை அதற்குத் தப்பாது.—எ - று.

யானையிற் பிழையாதென இயையும். மன், அசை. (கஉக)

---

(கஙO.) விளங்கு[1]மணிக் கொடும்பூ ணாஅய் நின்னாட்
டிளம்பிடி யொருசூல் பத்தீ னும்மோ
நின்னுநின் மலையும் பாடி வருநர்க்
கின்முகங் கரவா துவந்துநீ யளித்த
(ரு) வண்ணல் யானை யெண்ணிற் கொங்கர்க்
குடகட லோட்டிய ஞான்றைத்
தலைப்பெயர்த் திட்ட வேலினும் பலவே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—விளங்கிய மணிகளானியன்ற வளைந்த பூணுகிய ஆரத்தையுடைய ஆயே, நினது நாட்டின்கண் இளையபிடி ஒருகருப்பம் பத்துக்கன்று பெறுமோதான்? நின்னையும் நின்மலையையும் பாடிவரும் பரிசிலர்க்கு இனிய முகத்தை ஒளியாது வெளிப்படுத்திக் காதலித்து நீகொடுத்த தலைமையையுடைத்தாகிய யானையை யெண்ணின், நீ கொங்கரை மேலகட

க. புறநா. ௨௦௦ : அ; லகரவொற்று ஒழிந்த ஏனைப்புள்ளி சிறுபான்மை விளியேற்றதற்கும், (தொல். விளி. ந. ௧௨ - இளம்; சே, கல்; ந), யகாரவீற் றுயர்திணைப்பெயர் அளபெடையாகிய விளியுருபேற்றதற்கும் (நன் - மயிலை. சூ. ௩௦௧) மேற்கோள்.

க - உ. "விளங்குமணிக் கொடும்பூணாய்...பத்தினும்மோ: என்புழி யகரம் விளியேற்றதாலெனின் அவ்வாறு வருவன வழக்குப் பயிற்சியின்மை யின் எடுத்தோதிற்றிலராயினும் 'செய்யுண்மருங்கின்' என்னுமதிகாரப்புற நடையான் இதனைக்கொள்ளாமை மறுத்துக் கொள்க" (தொல். விளி. சூ. ௩௫- பேர்) ; யகாரவீறு சேய்மைக்கண் அளபெடுத்தல விளியுருபாமெனக் கூறி இவ்வடிகளை மேற்கோளாகக் காட்டினா ; இ - வி. சூ. ௨௧௨ - உரை.

௩ - ௫. புறநா. ௧௨௬ : ௯ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

(பி - ம்.)—1 'மணிப் பசும்பூணாய்', 'மணிக்கொடும் பூணாய்'



ஓட்டப்பட்ட காலில் அவர் புறக்கொடுத்தலால் தம்மிடத்தினின்றும் பெயர்த்துப் போகட்டப்பட்ட வேலினும்பல.—எ - று.

தலைப்பெயர்த்திட்டவேலென்றகருத்து: படைக்கலமில்லாதாரை ஏதஞ் செய்வாரில்லையாதலின், தம்முயிர்க்கு அரணாகப் பெயர்த்திடப்பட்ட வேலென்பதாம்; அன்றி, புறக்கொடுத்தோடுகின்றார் முன்னோக்கிச் சாய்த்துப் பிடித்தவேலென்பாருமுளர்.

இதனாற் கொடைச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் கூறியவாறு. (௩௦)

(௱௩௧.) மழைக்கணஞ் சேக்கு மாமலைக் கிழவன்
வழைப்பூங் கண்ணி வாய்வா ளண்டிரன்
குன்றம் பாடின கொல்லோ
களிறுமிக வுடையவிக் கவின்பெறு காடே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ-ள்.—முகிலினம் சென்றுதங்கும் உயர்ந்தமலைக்குத் தலைவன், சுர புன்னைப் பூவால தொடுக்கப்பட்ட கண்ணியினையும் வாய்த்தவாளினையு முடைய அண்டிரனது மலையைப் பாடினவோ களிறுகளை மிகவுமுடைய இந்தக் கவினையுடைய காடு?—எ-று.

யானைக்குப் பிறப்பிடமாயிருக்கிற காட்டினும் 'அண்டிரனைப்பாடினோர், யானை மிகவுமுடையரென்று அவன் கொடைச்சிறப்புக் கூறியவாறு.

ஆய்க்கு அண்டிரனென்பதும் ஒரு பெயர்.

(௱௩௧)

---

௪. புறநா. ௧௨௬ : ௬ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

(௱௩௨.) முன்னுள்ளு வோனைப் [1] பின்னுள்ளி னேனே
யாழ்கென் னுள்ளம் போழ்கென் னாவே
பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே
நரந்தை நறும்புன் மேய்ந்த கவரி
குவளைப் பைஞ்சுனை பருகி யயல
தகரத் தண்ணிழற் பிணையொடு வதியும்
வடதிசை யதுவே வான்றோ யிமயம்

௪. " கவரி...சாந்தங்களவும்" பதிற். ௧௧.

௫. புறநா. ௧௧௬ : ௧ ; ~~"குவளையும் பைங்கலை" மலைபடு. ௨~~

(பி - ம்.)—1 'பின்னுள்ளின் யானே'

# புறநானூறு மூலமும் உரையும்.



தென்றிசை யாஅய் குடியின் றாயிற்
பிறழ்வது மன்னோவிம் மலர்தலை யுலகே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—யாவரினும் முன்னே நினைக்கப்படுமவனைப் பின்பே நினைத்தேனா யான்; அவ்வாறு நினைந்த குற்றத்தால் எனதுள்ளம் அழிந்துபோவதாக; அவனையன்றிப் பிறரைப்புகழ்ந்த நாவும் கருவியாற் பிளக்கப்படுவதாக; அவன்புகழன்றிப் பிறர்புகழைக்கூறக்கேட்ட எனது செவியும் பாழ்பட்ட ஊரின்கட் கிணறுபோலத் தூர்வதாக; நரந்தையையும் நறியபுல்லை மேய்ந்த கவரிமாக் குவளைப்பூவையுடைய பசிய சுனையின்நீரை நுகர்ந்து அதன் பக்கத்தவாகிய தகரமரத்தினது குளிர்ந்தநிழலின்கண் தனது பிணையுடனே தங்கும் வடதிசைக்கண்ணதாகிய வானைப்பொருந்தும் இமயமலையும் தென்றிசைக்கண் ஆய்குடியும் இல்லையாயின் இந்தப் பரந்த இடத்தையுடைய உலகம் கீழ்மேலதாகிக் கெடும்.—எ - று.

1 'முன்னுள்ளுவோனைப் பின்னுள்ளினேனே' என உள்ளம் ஆழ்தற்குக்காரணங்கூறினமையால், பிறரைப்புகழ்ந்த நாவெனவும், பிறர்புகழ் கேட்ட செவியெனவும் ஏனையவற்றிற்கும் காரணம் வருவித்துரைக்கப்பட்

டது.

அன்றி வடதிசை, தேவருலகோடு ஒத்தலான், இமயத்தால தாங்க வேண்டுவதில்லை; தென்றிசை சககலை ஆய்குடி தாஙகித்திலலையாயின், இவ்வுலகுபிறழும்; அதனால இமயத்தக்கு முன்னு மாபடுகோனேப் பின்னுமினி லோனதலால், எனதுள்ளம் ஆழ்க; எனது நாப்போழ்க; எனதுசெவி தூர்வதாக வென்றதாக்கி உரைப்பினுமமையும். (கா உ)

அ. 'திசை' எனனுஞ்சொல ஏழாம்வேற்றுமையுருபாக வந்ததற்கு மேற்கோள்; நன்-மயிலை. ரு. ௦௧.

(பி - ம்.)—1 'இமயத்திற்கு ஒருதரமாக உலகத்தைத் தாங்கும் ஆய் உனனதவும் பிறரிசையைக்கேட்ட செவிதூர்க; கேட்டுப் பிறரை நினைத்த வுள்ளம் ஆழ்க; நினைத்துப பிறரைப்பாடியநாப் போழவதாகவென உள்ள மொழிந்தவற்றிற்கும் காரணம் வருவித்துக்கொள்க'.

---

(காஙா.) மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியிற்
கேட்பி னல்லது காண்பறி யலையே
காண்டல் வேண்டினை யாயின் மாண்டநின்
விரைவளர் கூந்தல் வரைவளி யுளரக்
ரு கலவ மஞ்ஞையிற் காண்வர வியலி

ரு. "மயிலகண்டன்ன மடநடை மகளிர்" (முந்த. உ௦ரு); "நன்மா மயிலின் மென்மெல வியலி" மதுரை. சுOஅ.

மாரியன்ன [1] வண்மைத்
தேர்வே ளாயைக் காணிய சென்மே.*

திணை - அது ; துறை - விறலியாற்றுப்படை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—மெல்லிய இயலபினையுடையவிறலி, நீ நல்லபுகழைச் செவி யாற் கேட்பினல்லது அவன்வடிவைக் காண்டலறியாய்; காண்டலை விரும்பி

னையாயின், மாட்சிமைப்பட்ட நினது மணம்வாரும் கூந்தலிலே வரையிடத் துக் காற்றுவந்தசைப்பப் பீலியையுடைய மயில்போலக் காட்டுபுண்டாக நடந்து மழைபோன்ற வண்மையையுடைய தேரினையுடைய வேள் ஆயைக் காணச்செலவாயாக.—எ - று.

'விரைவளர் கூந்தல வரைவளி யுளர' என்றது, 'கொண்டைமேற்காற் றடிக்க' என்பதொருவழக்குப்பற்றி நின்றது.

என்றதனாற் பயன் : பிறிதொன்றுல இடையூறிலலையென்பதாம்.

ஆய் மாரியன்னவண்மையனாதலின், விறலியை
மயில்போலக் களித்துச்செலலென்றவாறும்.
அம்மாரியைக்கண்ட

யாழசிசின்னென்று பாடமோதுவாருமுளர்.
(கரு௫)

---

க. 'அன்ன' என்பது பயனுவமத்தின்கண் வந்ததற்கு மேற்கோள் ; தொல். உவம. சூ. கரு - இளம்; இ - வி. ரு. ௬௪௨ - உரை.

கு - எ. "மாரி யன்ன வண்கைத், தேர்வே ளாயைக் காணிய சென்மே: என்பது பயவுவமம்; என்னை ? மாரியான்விளைக்கப்படும் பொருளும்வண்மை யாற்பெறும் பொருளும் ஒக்குமென்றவாறு" (தொல்.உவம. சூ. க - பேர்;

இ - வி. சூ. சஅக-உரை); உவமையினது உயர்ச்சியாற் பொருட்கு உயர்ச்சியாயிற்று என்பதற்கும், தொன்றுதொட்டு வரும் உவமைக்கும் மேற்கோள்; (மாறன். கூஉ, கூரு - உரை); 'ஈன்றவெ..' என்னும் கல்லாடச் செய்யுளில், 'மழதிரை......மேனியை' (அடி. கஉ - அ) என்பதன் விசேடவுரையில் இவ்வடியைப் பயவுவமத்தின் வகையென்று மேற்கோள் காட்டுவர் மயிலேறும்பெருமாள்பிள்ளை.

*ம.பாடாண்டிணைத்துறைகளு ள் விறலியாற்றுப்படைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை சூ. ௩0 - இளம்; படை பெடி அடி ௩ன - ந.

(பி - ம்.)—1 'வண்கை'

---

(கஉசு.) இம்மைச் செய்தது மறுமைக் காமெனு

மறவிலை 1 வணிக னாயலன் பிறருஞ்

---

க - உ. புறநா. கசுக; கசு - ரு ; "ஏற்றகை மாற்றாமை யென்னானுந் தாம் வரையார், தாற்றாதார்க் கீவதா மாண்கடன்" (நாலடி. கூஅ); "இம்மையாற் செய்ததை யிம்மையே யாம்போலு, மும்மையே யாமென்பா ரோரார் காண்" (திணைமாலைநூற்றைம்பது, கஉ௩) ; "உறியார்க் கொன்றீவதே யீகைமற் றெல்லாங் குறியெதிர்ப்பை நீரதுடைத்து" (குறள், ௨உக)

(பி - ம்.)—1 'வாணிகனாஅயல்லன்பிறவும்'

சான்றோர் சென்ற நெறியென

ஆங்குப் பட்டன் றவன்கைவண் மையே *

திணை - அது, துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—இப்பிறப்பின்கட் செய்ததொன்று மறுபிறப்பிற்கு உதவுமென்று கருதிப் பொருளை விலையாகக்கொடுத்து அதற்கு அறங்கொள்ளும்வணிகன் ஆயல்லன்; அமைந்தோர் பிறரும் போயவழியென்று உலகத்தார்கருத அந்த நற்செய்கையிலே பட்டது, அவனது கைவண்மை.—எ - று.

அன்றி, ஆய் அறவிலைவணிகனல்லன்; பிறரும் சான்றோர்சென்ற நெறியெனக்கருதி அச்செய்கையிலேபட்டதன்று, அவன் கைவண்மை யென்றுரைப்பாருமுளர். இதற்குப் பட்டன்றென்பது மறைப்பொருள்படாமையின், பட்டதன்றென்பது பட்டன்றென விகாரமாகக்கொள்க. (கஙச)

---

"வைப்பாலேவள்ளல் வழங்குவாள் வாணிகன்" (சிறுபஞ்ச. ருச); "ஆற்று நர்க் களிப்போ ரறவிலை பகர்வோர்" (மணி. கக: கூ); "சிறுநன்றி யின்றிவர்க்கியாஞ் செய்தக்கா லிம்மைப், பெறுநன்றி மன்னும் பெரிதென் - றறு நன்றி, தானவாய்ச் செய்வதூஉந் தானமன் றென்பவே, வானவாமுள்ளத் தவர்" யா - வி. எழுத். ந. ச - ம்மேற்.

* மு. 'இது பிறருஞ் சான்றோர் சென்றநெறியென் றமையின், அயலோரையும் அடுத்தூர்ந்தேத்தியது' (தொல். புறத்திணை. சூ. ஙரு) என்பர் நச்சினார்க்கினியர்.

---

(கஙரு.) கொடுவரி வழங்குங் கோடுயர் நெடுவரை

யருவிடர்ச் சிறுநெறி யேறலின் வருந்தித்
தடவரல கொண்ட தகைமெல் லொதுக்கின்

வளைக்கை விறலியென் பின்ன ளாகப்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்

வரிநவில் பனுவல் புலம்பெயர்ந் திசைப்பப்

---

க - ங. "உயர்ந்தோங்கு பெருமலை யூறுநீர்த் தேறலை, மதகதபு முமலி நாவி னன்ன, தாஅகிய நூ மெலிந்த கலைபொரு ளடிக், கனைக்கோ டேகை யிற் கதுப்பிகுத் தசைஇ, விலங்குமலைத் தமர்ந்த சேயரி நாட்டத், திலங்கு வளைவிறலியர்" மலைபடு. சக - சு.

ரு. "வரியெனப் படுவது வகுக்குங் காலைப், பிறந்த நிலனும் சிறந்த தொழிலு, மறியக்கூறி யாற்றுழி வழங்கல", "கண்கூடு காண்வரியுள்வரி புறவரி, கிளர்வரி யைந்தோ டொருஉ வுரைப்பிற், காட்சி தேர்ச்சி யெடுத்துக்கோ ளென, மாட்சியின் வரூஉ மெண்வகை நெறித்தே" சிலப். அ: எஎ, க0அ - உரை, மேற்.



படுமலை நின்ற பயங்கெழு சீறியா
ழொல்க லுள்ளமொ டொருபுடைத் தழீஇப்
புகழ்சால் சிறப்பினின் னல்லிசை யுள்ளி
வந்தனெ னெந்தை யானே யென்று
மன்றுபடு பரிசிலர்க் காணிற் கன்றொடு

கறையடி யானை யிரியல் போக்கு
மலைகெழு நாடன் மாவே ளாஅய்
களிறு மன்றே மாவு மன்றே
யொளிறுபடைப் புரவிய தேரு மன்றே
பாணர் பாடுநர் பரிசில ராங்கவர்
தமதெனத் தொடுக்குவ ராயி னெமதெனப்
பற்ற றேற்றாப் பயங்கெழு தாயமொ
டன்ன வாகநின் னூழி நின்னைக்
காண்டல் வேண்டிய வளவை வேண்டா
ருறுமுரண் கடந்த வாற்றற்
பொதுமீக் கூற்றத்து நாடுகிழ வோயே.

திணை - அது; துறை - பரிசிற்றுறை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—புலியியங்கும் சிகரமுயர்ந்த நெடியமலையின்கண் ஏறுதற் கரிய பிளப்பின்கட் சிறியவழியையேறுதலான் வருத்தமுற்று உடல்வளைவைப் பொருந்திய பயில அடியிட்டுநடக்கின்ற மெல்லியநடையினையுடைய வளையை யணிந்த கையையுடைய விறலி என்பின்னேவரப் பொன்னைக் கம்பியாகச் செய்தாற்போன்ற முறுக்கடங்கிய நரம்பினையுடைய வரிப்பொருண்மை யோடேயிலும் பாட்டு நிலந்தோறும் மாறிமாறி யொலிப்பப் படுமலைப்பாலை நிலைபெற்ற பயன்பொருந்திய சிறியயாழைத் தளர்ந்த நெஞ்சத்துடனே

ஒரு

---

எ. படுமலைப்பாலை - பாலைப்பண் பன்னிரண்டனுள் ஒன்று; அது கைக்கிளை குரலாகத் தோன்றுவது.

அ. ஒல்கா-தளரா; "ஒல்கா வுள்ளத் தொழியா ளாகி" மணி. கரு

;கஅ.

கக. "வயிரியமாகக ா...மலா றகணணி" (பதிற். உக); "மன்றில வதிபு கர் சேட்புலப் பரிசிலர்" மலைபடு. சகஉ.

கஉ. புறநா. கஉக : கூ.

கக - உ. "பொருநர்க், குருகெழுபெருஞ்சிறப்பி, னிருபெயர்ப் போரய மொ, டிலங்கு மருப்பிற் களிறு கொடுத்தும்" மதுரை. கக - க0உ.

உஉ. "மீக்கூற்றெனபது புகழ்; அதுமேலாய சொல்லாற் பிறந்த புக

ழென்னுமேம்பாடெனப்பொருடகது நிற்றலிற் பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை" நன் - வி. சூ. களஅ.

# புறநானூறு மூலமும் உரையும்.

உகஎ

மருங்கிலேயுனைத்துக்கொண்டு புகழ்தற்கமைந்த தலைமையையுடைய நினது நலபுகழை நினைத்துவநதேன், என்னுடைய இறைவா, யான்; எககாளும் மனறத்தின்கண்வந்த பரிசிலரைக்காணிற் கன்றுடனே * கறைபொருந்திய அடியையுடைய யானையை அணியணியாகச் சாய்த்துக்கொடுக்கும் மலையை யுடையகாடனே, மாவேளாகிய ஆயே, யாம்வேண்டியது: யானையுமன்று; குதிரையுமன்று; விளங்கிய பொற்டைையயுடைய குதிரையிற்பூட்டப்பட்ட தேருமன்று; பாணரும் புலவரும் கூத்தர் முதலாயினருமாகிய அவர்கள தமமுடைய பொருளென வளைத்துக்கொள்வாராயின அதனை எம்முடைய தென்று அவர்பானின்றும் மீணடு கைக்கொள்ளுதலைத் தெளியாத பயன் பொருநதிய உரிமையோடுகூடி மற்றும் அத்தன்மையவாக, நின்னுடைய வாழ்நாட்கள்; யான்வநதது நின்னைக் காணடலவேண்டிய மாத்திரையே. பகைவரது மிகக மாறுபாட்டைவென்ற வலியையுடைய, யாவரும் ஒப்பப் புக

மும் காட்டையுடையரிய்.—எ - று.

காடுகிழவோய், யான்வந்தது, களிறு முதலாயினவேண்டியன்று ; நின்னைக் காணடலவேணடிய அளவே ; நின்னுழி அனைவாகவெனக்கூட்டுக.

அலலதூஉம், யானைமுதலாயினவன்றிப் பிறவற்றையும் பாணர்முதலாயினர் தமதெனத்தொகுகுவாராயினென இயைததுரைப்பினுமமையும்.

கொடுவரி, பணபுத்தொகைபபுறத்துப்பிறநத அன்மொழித்தொகை; ஆகுபெயருமாம்.

இனித், 'தகைமெலலொதுககின்' எனவும், 'வடிநவிலபறுவல' எனவும், 'ஒளிறுநடைபபுரவிய' எனவும் பாடமோதுவாருமுளர்.

வடிநவில பறுவல புலம்பெயாத்திசைப்பவென்றுகொணடு வடித்தல் பயின்ற பாட்டை இசைதோறும் பெயாத்தவாசிக்கவென்றுரைப்பாருமுளர்.

பொதுவியக்கூற்றம் பொதியிலுமாம். (கரு௫)

புறநா. ௩௧ : க - உ உரை.

---

(கொசா.) யாழ்ப்பத்தர்ப் புறங்கடுப்ப
விழைவலந்த பஃறுன்னத்
திடைப்புரைபற்றிப் பிணிவிடாஅ
வீர்க்குழாத்தோ டிறைகூர்ந்த
௫ பேஎற்பகையென வொன்றென்கோ

வுண்ணாமையி னூன்வாடித்
தெண்ணீரிற் கண்மல்கிக்
கசிவுற்றவன் பல்கிளையொடு

ச - ரு. புறநா. கக : ௩ - ச ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க ; கடுஅ : ரு.





பசியலைக்கும் பகையொன்றென்கோ
வன்னதன்மையு மறிந்தியார்
நின்னது தாவென நிலைதளரா
மரம்பிறங்கிய நளிச்சிலம்பிற்
குரங்கன்னபுன் குறுங்கூளியர்
பரந்தலைக்கும் பகையொன்றென்கோ
ஆஅங், கெனைப்பகையு மறியுனனை
யெனக்கருதிப் பெயரேத்தி
வாயாரநின் னிசைநம்பிச்
சுடர்சுட்ட சுரத்தேறி
யிவண்வந்த பெருநசையே
மெமக்கீவோர் பிறர்க்கீவோர்
பிறர்க்கீவோர் தமக்கீபவென

வனைத்துரைத்தனன் யானுக
நினக்கொத்தது நாடி
நல்கினை விடுமதி பரிசி லல்கலுந்
தண்புனல் வாயிற் * றுறையூர் முன்றுறை
நுண்பல மணலினு மேத்தி
யுண்குவம் பெருமநீ நல்கிய வளனே.

திணை - அது ; துறை - பரிசில்கடாநிலை.
அவனைத் துறையூர் 1 ஓடைகிழார் பாடியது.

---

க0 'செய்த' என்பதன் குறிப்பாய் 'அன்ன' என்பது வந்ததற்கு மேற்கோள் ; தொல். வினை. சூ. கஎ - ந ; இ - வி. சூ. உசாக - உரை.

கரு. "மகாஅ ரன்ன மந்தி" (சிறுபாண். ருசு) ; "கடும்பறைக் கோடியர் மகாஅ ரன்ன, நெடுங்கழைக் கொம்பர்க் கடுவ னுகளினும்" மலைபடு. உஙக. ௬ா.

கக-ச. "ஒப்போன் கூற்றென் றுரேனும் சிறுபான்மை வலியாற்கொண்டு மிடத்தும் தாவென்பது வருமெனக்கொள்க; 'நின்னது... ஒன்றென் கோ' எனவரும்" தொல். எச்ச. சூ. ருO - ந.

உக - உ. புறநா. கடச ; க - உ ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

உரு - ச. புறநா. கசO ; ௬ா - அ.

உரு - ௬. புறநா. கூ : அ - கக ; சாரு : உக - ரு ; ருரு : கஎ - உக.

* இது பாடிய புலவர் துறையூரினராதலின் அவ்வூர்த்துறைமணலைக் கூறினர்.

(பி - ம்.) — 1 'அரிசில்கிழார்'

இ - ள்.—யாழ்ப்பத்தரின துபுறத்தையொப்ப இழைசூழ்ந்த பலதைய லாது இடைக்கண் உளவாகிய புரைகளைப்பற்றி ஒன்றோடொன்றுதொடர்ந்த பிணிப்பு விடாதேகிடக்கின்ற ஈரினது திரளோடு தங்குதல் மிக்க பேனுகியபகையை ஒரு பகையென்பேனோ? உண்ணுமையின் உடம்பு புலர்ந்து கண் தெளிந்தநீரால் நிறைந்து வியர்ப்புற்ற எனது பலசுற்றத்தோடு பசிநோய்வருத்தும்பகையை ஒருபகையென்பேனோ? அப்பெற்றிப் பட்ட எனதியல்பையும் அறியாராய் நின்னைப்பொருளாகத் தாவென்றுசொல்லி நம்முடையசிலைகள் தளரும்படி மரங்கள்செறிந்த குளிர்ந்தமலையிற் குரங்கு போலப் பறித்துக்கொள்ளும் இயல்பையுடைய புல்லிய குறிய ஆடைகளவர் பரந்துவந்தலைக்கும்பகையை ஒருபகையென்பேனோ? எல்லாப பகையும் அறிவான் ஆமேயெனக்கருதி எமதுவாக்கினுல மிகவும் நினதுபெயரை வாழ்த்தி நின்னுடையபுகழை நச்சி ஞாயிறுசுடப்பட்ட சுரத்தின்கண்ணே யேறி இவ்விடத்துவந்த பெரிய நச்சுதலையுடையேம்; இங்ஙனம் வறுமையுற்ற எங்களுக்கு ஒன்றை இடுவோரன்றோ பயன்கருதாது பிறர்க்கு இடுமவர்களாவாரெனவும் எம்மையொழிந்த பிறர்க்கு இடுவாரன்றோ பயன்கருதியிடுதலால தங்களுக்கே இடுவோரெனவும் அவ்வளவாக யான் சொன்னேனாக, நினக்குப்பொருந்தியது நீ ஆராய்ந்து எமக்குப் பரிசிலதந்தனையாய் விடுவாயாக; நாடோறும், குளிர்ந்தநீரோடும் வாய்த்தலைகளையுடைய துறையூரின்கண துமைமுன்னர் நுண்ணிய பாமணலினும் பலகாலம் வாழ்கவென வாழ்த்தி உண்பேம், பெரும, நீதந்தசெல்வத்தை.—எ - று.

பெரும, நீ நல்கியவளத்தை யாங்களும் ஏத்தி உண்பேம் ; சினக்கொற்றத்து நீ நாடிப் பரிசிலர்க்கின்னே விடுமதியெனக் கூட்டுக.

'ஆயென' என்பதற்கு ஆமென்று பிறர்சொல்லவென்றும், 'எமக்கீவோர் பிறர்க்கீவோர்' என்பதற்கு எமக்கீவோர் எம்வறுமைகண்டு வருத்தமுறுவோர் யாவர்க்கும் ஈவோரெனவும், 'பிறர்க்கீவோர்தமக்கீப' என்பதற்குப் பிறர்க்குக்கொடுப்போர் அக்கொடுக்கப்படுகின்றோர் தமக்கேகொடுப்போராவரெனவுமுரைப்பாருமுளர்.

கசிவுற்றவென்பதற்கு இரக்கமுற்றவெனினுமமையும்.

பேர்த்தகையெனவென்புழி எனவும், ஆங்கனையபகையுமென்புழி ஆங்கும் அசைநிலை.

கண்ணெணவிரின்மலங்கியெனவும், வாயாரப்பெயரேத்தியெனவும் மாற்றப்பட்டன. (கஙசு)

* "வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங், குறியெதிர்ப்பை நீர துடைத்து" குறள், உஉக.

---

(கஙஎ.) இரங்கு முரசி னினஞ்சால் யானை
முந்நீ ரேணி விறல்கெழு மூவரை
யின்னு மோர்யா னவாவறி யேனே
நீயே, முன்யா னறியு மோனே துவன்றிய

---

க. 'இரங்கு' என்னும் உரிச்சொல் ஒலித்தற்பொருட்பண்பிலவருதற்கு மேற்கோள் ; நன் - மயிலை. சூ. சருஎ ; நன் - வி. சூ. சருச.

உ. முந்நீரேணி : புறநா. ஙஅ : க.



கயத்திட்ட வித்து வறத்திற் சாவாது

கழைக்கரும்பி னொலிக்குந்து
கொண்டல் கொண்டநீர் கோடை காயினுங்
கண்ணன்ன மலர்பூக்குந்து
கருங்கால் வேங்கை மலரி னாளும்
பொன்னன்ன வீசுமந்து
மணியன்னநீர் கடற்படருஞ்
செவ்வரைப் படப்பை நாஞ்சிற் பொருந
சிறுவெள் ளருவிப் பெருங்க லாடனை
நீவா ழியர்நின் றந்தை
தாய்வா ழியர்நிற் பயந்திசி னோரே.

திணை - அது ; துறை - இயன்மொழி ; பரிசிற்றுறையுமாம்.

நாஞ்சில்வள்ளுவனை ஒரு சிறைப் [1] பெரியனார் பாடியது.

இ - ள்.—ஒலிக்குமுரசினையும் இனமமைந்தயானையையுமுடைய கடலாகிய எல்லையையுடைய நிலத்தின் கண் வென்றிபொருந்திய மூவேந்தரை இன்னமும் யானொருவனே பாடுமவாவையறியேன் ; நீதான் முன்னேதொடங்கி யானறியுமவன் ; நீர்நிறைந்த பள்ளத்தின்கண் விதைத்தவித்து நீர்மையாற் சாவாது கரும்புபோலத்தழைக்கும், மழையால் முகந்துசொரியப்பட்டநீர் கோடைகாயினும் மகளிர்கண்போன்ற குவளைமுதலிய மலர்பூக்கும், கரியதாளையுடைய வேங்கைமலரின் நாடோறும் பொன்போலும் அப்பூவைச்சுமந்து மணிபோலும் நீர் கடற்கட்செலலும் செவ்விய மலைபக்கத்தையுடைய நாஞ்சிலென்னுமலையையுடைய பொருந, சிறிய வெளிய அருவியையுடைய பெரிய மலையையுடைய நாட்டையுடையாய், நீ வாழ்வாயாக ; நின்னைப் பெற்றோராகிய நின்தந்தையும் தாயும்வாழ்க.—எ - று.

நீர் மலர்பூக்குமென இடத்துநிகழ்பொருளின்றொழில இடத்துமேல
ஏறிநி - - -

கோடைக்காயினுமென்பதுபாடமாயின், கோடைக்கட்காயினுமென்றானும் கோடைக்கணாயினுமென்றுமுரைக்க.

முன்னின்ற பெயரெச்சமூன்றும், நாஞ்சிலென்னும் நிலப்பெயர்கொண்டன.

தன்பழமைதோன்றப் புகழ்ந்துகூறுவான், மூவரையும் பாடுமவனை இன்னுமறியேனென்றதாகக்கொள்க. (கஙஎ)

---

ரு. கழைக் கரும்பு : "ஆலைக் கலமரு நீங்கழைக் கரும்பே" (மலை படு. ககூ); "மோடு கொண்டெழு மூரிக கழைககரும்பு" சூளா. நாடு. உரு.

கக. மணி - பளிங்கு ; புறநா. கருo : உஎ.

கச - ரு. ரகரவீற்றுவியங்கோள் வாழ்த்துதற்பொருளில் வந்ததற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. கூகஎ ; இ - வி. சூ. உ௱௪ - உரை.

(பி - ம்.) — 1 'பெயரியனார்', 'பெயரினார்'

---

# புறநானூறு மூலமும் உரையும்.

உஉக

(கஙஅ.) ஆனினங் கலித்த வதர்பல கடந்து
மானினங் கலித்த மலைபின் னொழிய
மீனினங் கலித்த துறைபல நீந்தி
யுள்ளி வந்த வள்ளுயிர்ச் சீறியாழ்
சிதாஅ ருடுக்கை முதாஅரிப் பாண
நீயே பேரெண் ணலையே நின்னிறை
மாறி வாவென மொழியலன் மாதோ

வொலியிருஞ் சதுப்பி ஞயிழை கணவன்
கிளிமரீஇய வியன்புனத்து
மரனணி பெருங்குர லனைய ஞதலி.
னின்னை வருத லறிந்தனர் யாரே.

திணை - அது ; துறை - பாணாற்றுப்படை.
அவனை மருதனிளநாகனூர் பாடியது.

இ - ள்.—பெற்றத்தினது இலைமிக்க வழியைப் பெய்யும்வந்து மான்றிரள்மிக்க மலையின்கழிய மீனினாந்தழைத்த துறைபலவற்றையுநீந்தி நின்னைநயவந்த வள்ளிய ஓசையையுடைத்தாகிய சிறியயாழையும் சிதாராகிய உடையையுமுடைய மூத்தபாணனே, நீதான், அவன்பாற் சிலகருதிப் போகின் றமையின் பெரிய எண்ணத்தை யுடையை ; நின்னுடையதலைவனை இப்பொழுது போய்ப் பின் ஒருநாட் பரிசிற்குவாவென்றுசொல்லான் ; தழைத்த சரியகூந்தலையுடைய ஆயிழைக்குத்தலைவன், கிளி மருவிய அகன்றபுனத்தின்கண் மரம்பொருந்தும் பின்கண்வைத்த பெரிய கதிரையொப்பனுதலின், நீ அவன்பாற் பரிசில் பெறவருதற்கண் நின்னைப்*பழையபாணனென்று அறிவார்யார்.—எ - று.

'நின்னைவருதலறிந்தனர்யார்' என்றதன்கருத்து : நின்னை அறிவாரும் அறியாதசன்மையையாவையென்பதாம்.

அறிவார்யாரென்பது, அறிந்தனர்யாரெனக் காலமயக்கமாயிற்று.

நினக்கு அவன் பரிசில் தப்பாமல் தருமென்பான்,

நின்னிறையென்றான்.

' கிளி......குரலனையன் ' என்றது, கிளிவீடுவாயத்தாற்போலவனென்னும் வழக்கைப்பற்றிநின்றது. (கா. அ)

---

(ரு). முதாரி - முதுமை ; சிலப். கங : உச - உரை.

௪ - ௫. புறநா. ௬௧: ௰ - ௪ ; ௧௰௯ : ௰ - ௫.

எ. "இரகதோர்க் கெஞ்ஞான்றுக, காலம்பகராதார் காழிநகர் தாயே" தேவாரம்

அ. ஆயிழைகணவன்: புறநா. ௰ : ௯ - ஆம்

அடிக்குறிப்பைப்பார்க்க.

* பொருந. ௯௯ - ௧00.



(௱௩௬.) சுவலழுந்தப் பலகாய
சில்லோதிப் பல்லிளைஞருமே
யடிவருந்த நெடிதேறிய
கொடிமருங்குல் விறலியருமே
வாழ்தல் வேண்டிப்
பொய்கூறேன் மெய்கூறுவ
லோடாப் பூட்கை யுரவோர் மருக
வுயர்சிமைய வுழாஅ நாஞ்சிற் பொருந
மாயா வுள்ளமொடு பரிசி றுன்னிக்
கனிபதம் பார்க்குங் காலை யன்றே
யீத லாஞன் வேந்தே வேந்தற்குச்
சாத லஞ்சாய் நீயே யாயிடை

பிருகில பினிர்ந்திசி ஞஅங் கொருகா
ளருஞ்சமம் வருகுவ தாயின்
கடு வருந்தலு முண்டென் பைதலங் கடும்பே.

திணை - அது ; துறை - பரிசில்கடாநிலே.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—தோள் வடுப்படப் படமுட்டுக்ககளையுங்காவிய சிலவாயமயிரை யுடைய பல இளையோரும் அடிவரு தலெடும்பொழுது எதிய கொடிபோலும் இடையினையுடைய விறலியரும் எம இவர் வாழதலைவிரும்பிப் பொய்சொல லேன் ; மெய்சொல்லுவேன் ; புறக்கொடாத மேற்கோளையுடைய வலியோர் மரபிலுள்ளானே, உயர்ந்த உச்சியையுடைத்தாய் உழப்படாத காஞ்சியெல்லா னும் பெயரையுடைய மலைக்குவேந்தே, மரவாதநினைவுடனே பரிசிற்குவந்து பொருந்திப் பின்புநின்று நின்மனம்நெகிழும் செவ்விபார்க்கும் காலமல்ல, யான் வறுமையுற்று நிற்கின்றநிலையாம ; நினக்கு வேண்டிற்றுத்தருதலை அமையாமன், நின்னுடைய அரசன் ; அவ்வரசன் பொருட்டுச் சாதலுக்கு அஞ் சாய், நீ ; அவ்விடத்துப பெரிய நிலம்பிரழ்ந்தாற் போல ஒருநாள் பொறுத் தற்கரிய பூசல வருவதாயின், வருந்துதலுமுளதாம், எனது பசித்துன் பத்தையுடைய சுற்றம்.—எ - று.

அதனாற் போர்வருவதன்முன்னே பரிசிலை தந்துவிடுவாயாகவென்பது கருத்து.

வேந்து என்றது சேரனை.

(கரு௬)

---

எ. புறநா. ௬உ௯ : ௪. கக. குறள், ௩அரு - பரிமேல் பார்க்க.

கஉ. முதுரை, ௬. க - க௩. புறநா. ௬௦௩.

(கசo.) தடவுநிலைப் பலவி னாஞ்சிற் பொருநன் 380 : 86
மடவன் மன்ற செந்நாப் புலவீர்
வளைக்கை விறலியர் [1] படப்பைக் கொய்த
வடகின் [2] கண்ணுறை யாக யாஞ்சில
வரிசி வேண்டினே மாகத் தான் [3] பிற
வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி
யிருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே [4] யன்னதோர்
தேற்றா வீகையு [5] முளதுகொல்
[6] போற்றா ரம்ம பெரியோர்தங் கடனே.*

திணை - அது ; துறை - பரிசில்விடை.

அவனை [7] ஔவையார் பாடியது.

இ - ள்.—பெரிய நிலைமையையுடைய பலாமரத்தையுடைத்தாய நாஞ்சில் மலைக்கு வேந்தன், அறிவுமெல்லியன், நிச்சயமாக ; செவ்விய நாவையுடையபுலவீர், வளையணிந்த கையையுடைய விறலியர் மனைப்பக்கத்திற்கட் பறித்த இலைக்கு மேல தூவுவதாக யாங்கள் சில அரிசிவேண்டினேமாக, தான் பரிசிலர்க்குதவும் வரிசை யறிதலால் எம்வறுமையைப்பார்த்தேயன்றித் தனது மேம்பாட்டையும் சீர்தூக்கிப் பெரிய சாரல் நழுந்த மலைபோல்வதொரு பெரியயானையையளித்தான் ; ஆதலான், ஒருவற்கு ஒன்றனைக் கொடுக்குமிடத்து அப்பெற்றிப்பட்டதொரு தெளியாக கொடையும் உளதோ தான் ? பெரியோர் தாங்கள் செய்யக்கடவ முறைமையைத் தெரிந்து பாதுகாத்துச் செய்யார்கொல்,—எ - று.

பிறவென்பது, அசைநிலை.
கொல்லென்பது, பின்பும் கூட்டியுரைக்கப்பட்டது. (கசo)

---

க. அகரவீற்றுஉரிச்சொல் 'தடவுநிலை' என உகரம் பெற்றுவந்ததற்கு மேற்கோள் ; தொல். குற்றியலுகரப். சூ. எஎ - ந.

ச. கண்ணுறை - மேற்பெய்வது ; புறநா. ங௬க : ரு.

ரு - சு. 'பிற' என்னும் இடைச்சொல் அசைநிலையாகவந்ததற்கு மேற்கோள் ; தொல். இடை. சூ. உஅ-சே ; பேர் ; ந; இ-வி. சூ. உளஎ-உரை.

ரு-அ. புறநா. கஙய : உo - உ ; " சிரப்பான் மணிமவுலிச சேரலர்கோன் றன்னைச், சுரப்பா டியான்கேட்கப் பொன்னுடோ டீந்தா,னிரப்பவரென்பெறினுங் கொள்வார் கொடுப்பவர், தாமறியார் தங்கொடையின் சீர் " தமிழ்நாவலர்சரிதை, உச.

* மு. பாடாண்டிணைத்துறைகளுள், கொடுப்போரேத்தற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. உக - இளம்; ஷ. ஷ. ஷ. ௩ரு - ந.

(பி-ம்.)—1 'படப்பைகொய்த' 2 'கைபுனையாக' 3 'பிறர்' 4 'இன்னதேற்று' 5 'உண்டுகொல' 6 'போற்றுதம்ம' 7 'அவர்பாடியது'



பாணன் சூடிய பசம்பொற் றாமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
யூரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
யாரீ ரோவென வினவ லானாக்
காரென் ஒக்கற் கடும்பசி யிரவல
1 வெல்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியே மன்னே யினியே
யின்னே மாயினே மன்னே யென்றும்
உடாஅ போரா வாகுத லறிந்தும்
படாஅ மஞ்ஞைக் கீத்த வெங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேக
னெத்துணை யாயினு மீத்த னன்றென
மறுமை நோக்கின்றோ வன்றே
பிறர், வறுமை நோக்கின்றவன் கைவண் மையே.*

திணை-அது; துறை-பாணாற்றுப்படை; புலவராற்றுப்படையுமாம்.

வையாவிக்கோப்பெரும்பேகனைப் பரணர் பாடியது.

இ - ள்.—'பாணன் சூடிய ஓட்டத்த பொன்னாற்செய்யப்பட்ட தாமரைப்பூ மாட்சிமைப்பட்ட அணியினையுடைய விறலியணிந்த பொன்னரி மாலையுடனே விளங்கக் கடியகுதிரையைப்பூண்ட நெடியதேரைப் பிணிப்பை விட்டு இளைப்பாறி ஊரின்கண் இருந்தீரோ அல்ல சுரத்திடையிருந்தீர்; நீர்யாவிர் பாணரோ' என எம்மைக்கேட்டலமையாத புலவென்ற சுற்றத்தையும் மிக்கபசியையுமுடைய இரவலனே, வென்றிவேலையுடைய தலைவனைக் காண

க - உ. புறநா. கக : கக - எ

ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

௫. புறநா. க௫0; உ௨.

எ. வினைத்தொகைக்கு இவ்வடி மேற்கோள்; தொல். எச்ச. சூ. க௬ - ந.

அ - ௬. பொருந. ௩அ.

கஉ. மு. புறநா. கச௫ : ௩.

க0 - கஉ. புறநா. கச௫ : க - ௩ ; "கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய, வருந்திய வணங்கி ஞவியர் பெருமகன், பெருகனுடைப் பேகனும்" சிறுபாண். அ௫ - எ.

க௩ - ௫. புறநா. க௩௪ ; நாலடி. ௬ச; குறள், உஉஉ.

* மு. பாணாற்றுப்படைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௩0- இளம் ; நச். நச். சூ. ௩௬ - ந.

(பி - ம்).—1 'வென்வேல'

டதன்முன் யாம் நின்னினும்வறியேம் ; இப்பொழுது அவ்வறுமை நீங்கி இத் தன்மையேமாயினேம் ; எக்காலும், உடாஅ போராஅவாதலை அறிந்துவைத்தும் படாத்தினை மயிலுக்குக் கொடுத்த எம்மிறைவன், மதமிக்கயானையினையும் மனஞ்செருக்கிய குதிரையினையுமுடைய பேகன், யாவர்க்காயினும் கொடுத் தல் அமைந்ததென்று மறுபிறப்பைநோக்கிற்றோவெனின், அன்று ; பிறரது மிடியைக்கருதிற்று, அவனது கைவண்மை.—எ - று.

எங்கோ, பேகன் ; அவன் கைவண்மை மறுமைநோக்கிற்றன்று ; பிறர் வறுமை நோக்கிற்றெனக்கூட்டுக.

'நின்னினும்புல்லியேமன்' என்பது, 'பண்டுகாடுமன்' என்பதுபோல நின்றது. ஒழிந்த மன், அசைநிலை. (கசக)

---

(கசஉ.) அறுகுளத் துகுத்து மகல்வயற் பொழிந்து
[1] முறுமிடத் துதவா துவர்நில மூட்டியும்
வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்கால் பேகன்
கொடைமடம் படுத லல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே.

திணை - அது ; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—வற்றிய குளத்தின் கண்ணே பெய்தும் அகன்ற விளைநிலத்தின் கண்ணே சொரிந்தும் இவ்வாறு குளத்தும் விளைநிலத்தும் பெய்யாது களர்நிலத்தை நிறைத்தும் எவ்விடத்தும் வரையாத மாரியினையுடைய மழைபோல மதமிக்க யானையினையுடைய கழலணிந்த காலையுடைய பேகன் கொடையிடத்துத் தான் அறியாமைப் படுதலல்லது பிறர் படைவந்து கலந்தபொழுது அப்படையிடத்துத் தான் அறியாமைப்படான்.—எ - று.

க - டீ. "மழைவள்ளல்" சீவக. அகூகூ.

(ரு). புறநா. கசக : கo-கட; "கொடைமடம்படுதல்-அகாரணத்தாற் கொடைகொடுத்தல்" (ஞானாமிர்தம், கஎ-உ); "கொடைமடம் வரையாது கொடுத்தலாகும்" (திவாகரம்); "கொடைமட மென்று சொல்ப வரையாது கொடுத்தலாமே" (சூடாமணி. க: கo); "வல்லார்வல்ல கலைஞருக்கு மறைநாவலவர்க்குங் கடவுளர்க்கு, மில்லாதவர்க்கு முனிவர்க்கு மிருந்தோர் தமக்குந் துறந்தவர்க்குஞ், சொல்லாதவர்க்குஞ் சொல்லவர்க்குஞ் சமயாதிபர்களுக்கு, மல்லாதவர்க்கு மிரவிமகனரியதாவ மளிக்கின்றான்" (வில்லி—பாரதம், கிருட்டினன்றூது. உகரு) என்னுஞ்செய்யுளிற் கொடைமடம் விளக்கக்கூறப்பெற்றிருத்தல் காண்க; "கொடைமடம்படுதலல்ல தென்பது வசைபோன்று புகழ்; இது செம்பொருளின்பாற்படும்" தொல். செய்., சூ. கஉச - ந.

(பி - ம்.)—1 'உறுநிலத்துதவா'

29

*படைமடமென்றது, வீரரலலார்மேலும், முதுகிட்டார்மேலும், புண்பட்டார்மேலும் மூத்தார் இளையார்மேலும் செல்லுதல். (கய உ)

* “உடையிட்டார் புன்மேய்வா ரோடுநீர் புக்கார், படையிடார் பற்றேது மின்றி - நடையிட்டா, ரிவ்வகை யைவரையு மென்று மனுகாரே, செவ்வகைச் சேவகர் சென்று” (சிறுபஞ்ச. சக); “சடையினர் உடையினர் சாம்பற் பூச்சினர், பீடிகைப் பீலிப் பெருநோன் பாளர், பாடு பாணியர் பல்லியத் தோளின, ராடு கூத்த ராகி யெங்கணு, மேத்தவா ளொழிய...

வேண்டுவயிற் படர்தரக், கச்சையானைக்

காவலர்நடுங்க......அதரிதிரித்த

வாளேருழவன்” (சிலப். உரு : உஉடு - கூச) என்பனவும், ‘ஏந்துவன்’ ‘கைப்படை’, ‘வீறின்மையின்’ (சீவக. உஉடுஅ, உஉடுகூ, உஉகூக) என்னுஞ் செய்யுட்களும், “மீனாய் வேலையை யுற்றார் சிலர்சிலர் பசுவாய் வழிதொடர மேவுற்றார், ஞானார் பறவையின் வடிவுற் றூர்சிலர் சிலர்நான் மறையவ ருருவானார், மானார் கண்ணின மடவா ராயினர் முன்னே தங்குழல் வகிர்வுற்றா, ரானார் சிலர்சில ரையா நின்சர ணென்றார் நின்றவ ரரியென்றார்” (கம்ப. அக்க. சo) என்பதும், “படைமயக் குற்ற போதும் படைமட மொன்றி லாதான்” (சூடாமணி. கூ: கo) என்பதும் ஈண்டறியற்பாலன.

---

(கசா௱.) மலைவான் கொள்கென வுயர்பலி தூஉய்,
மாரி யான்று மழைமேக் குயர்கெனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கள்
பெயல்கண் மாறிய வுவகையர் சாரற்
புனத்தினை யயிலு நாட சினப்போர்க்
கைவள் ளீகைக் கடுமான் பேக

யார்கொ லளிய டானே நெருநற்
சுரனுழந்து வருந்திய வொக்கல் பசித்தெனக்
குணில்பாய் முரசி னிரங்கு மருவி
நளியிருஞ் சிலம்பிற் சீறூ ராங்கண்
வாயிற் றோன்றி வாழ்த்தி நின்று
நின்னுநின் மலையும் பாட வின்னா

க. "குன்றக் குறவ னார்ப்பி னெழில், நுணப லழிதுளி பொழியு நாட" (ஐங்குறு. உருக);"ஏனற்பசுங்கதி ரென்றாழக்கழிய வெழிலியுள்ளிக், கானக்குறவர்கள் கம்பலை செய்யும்வம் பார்சிலம்பா" (திருச்சிற். கருக) 'என' என்னும் இடைச்சொல் வினைப்பொருண்மைகுறித்து வந்ததற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. க௦-சே; இ - வி. (ரு). உருரு-உரை.

கூ. "பறையிசையருவி" (புறநா. கஉசு : அ) என்பதன் குறிப்பைப் பார்க்க.

~~க௦. "தாக்கருமாயிற் றன்னுந் தந்தை,~~ வின்பெரு நெடுவரை வள னும் பாடி" ~~சிறுபாண். க௨எ-௮~~

# புறநானூறு மூலமும் உரையும்.

உஉஎ

திருந்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்
முலையக நனைப்ப விம்மிக்
குழலினை வதுபோ லழுதனள் பெரிதே.

திணை - பெருந்திணை ; துறை - குறுங்கலி ; தாபதநிலையுமாம்.

அவனால் துறக்கப்பட்ட கண்ணகிகாரணமாக அவனைக் கபிலர் பாடியது,

இ - ள்.—மலையை மழைவந்து நமுகவென்று மிக்கபலியைத்தூவி அம்·

மழை மிகப்பெய்தலான் அப்பெயல அமைந்து முகில மேலேபோவதாக வேண்டுமெனத் தெய்வத்தைப்போற்றிய குறமாக்கள் மழை இடத்தமாகிய உவகையராய் மலைச்சாரற்கட் புனத்தினையை உணைாட, சினத்தினாற் செய்யும் போரையும் கைவண்மையாற் கொடுக்கும் கொடையினையுமுடைய விரைந்த குதிரையையுடைய பேக, அவ்வருந்தத்தக்காள், யாரோதான் ? செரு நற்றுச்சுரத்தின்கண்ணே நடந்துவருந்திய எனதுசுற்றம் டசித்ததாக, கடிப்பு அறையப்பட்ட முரசுபோல ஒலிக்கப்பட்ட அருவியையுடைய பெரிய உயர் ந்தமலைக்கட சிறிய ஊராகிய அவ்விடத்து வாயிற்கண்ணேவந்து தோன்றி வாழ்த்திநின்ற நின்னையும் நினமலையையும்பாட, அப்பொழுது இன்னாதாகச் சொரியப்பட்ட கண்ணீரை ஒழித்தலமாட்டாளாய் அக்கண்ணீர் முலையிடத் தை நனைப்பப் பொருமிக குழல இசையொலிப்பதுபோல அழுதாள், மிகவும்.—எ - று.

மழை வேண்டுங்காலத்துப் பெய்வித்தற்கும் வேண்டாக்காலத்து தற்கும் பலிதூஉய்ப்பேணிய குறவராகியமாக்களென்க.

ஒழித் குறவர்மாக்கள், இருபெயரொட்டுப்பண்புத்தொகை.

மாக்கள் புனத்தினை அயிலுநாட, பேக, என்னொக்கல்பசித்தென வாயிற் றோன்றி வாழ்த்திநின்று நின்னும்நின்மலையும்பாடக் குழல இனைவதுபோல அழுதாள் ; அவ்வளிக்கத்தக்காள் யார்கொல் ? அவளபால அருள்பண்ணத் தகுமென வினைமுடிக்க.

இது, சின்மலையிற்குறவர்மாக்கள் கடவுட்பேணி மழைவேண்டிய பொழுது பெற்றுத் தாம்வேண்டுமுணவு நுகருமாறுபோல் இவளும் நின் அருள்பெற்று இன்பநுகர்வாளாகவேண்டுமென் பது தோன்றுகின்றது.

மழைமிகப்பெய்தலாமென்பது, ஆற்றலாற் கூறப்பட்டது.

---

கந. இருத்தல - சொரிதல; மலைபடு. உஉக.

கரு - ச. "மைக்க ணீல வாலிசிந்த வைகிய தடத்து" நைடதம், கைக்கிளை. க.

மங்கைமென் முலைத்

கரு. "செய்த லுண்கண் பைதல கூரப், பின்னிருங் கூந்தன் மறை யினள் பெரிதழுத, றுதியன் மண்டிய வொலிதலை ஞாட்பி,னிம்மென் பெருங் களத் தியவ ருது, மாம்பலங் குழலி னேங்கிக், கலங்கஞ ருறுவோள்" (நற். ககந); "குழலேங்கு மாதேக்கி யழுதார் கோதை மடவாரே" (சீவக. உகசரு); "வேய்ங்குழல விளிகொ ளல்யாழ வீணையென் றினையநாண வேங்கி னள்" கம்ப. கிட்கிந்தா. அரசியல். ரு.



பேகனுற்றதக்கப்பட்ட கண்ணகியை அவனோடுகூட்டவுறுவார், அருள் பண்ணவேண்டுமென்று இரந்துகொண்டுகூறியமையின், தறுங்கலி யாயிற்று. (கசந)

(கசச.) அருளா[1] யாகலோ கொடிதே யிருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக
நீனற நெய்தலிற் பொலிந்த வுண்கண்
கலுழ்ந்துவா ரரிப்பனி பூணக நனைப்ப
வினைத லானு ளாக வினையோய்
கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென
யாந்தற் றொழுதனம் வினவக் காந்தண்
[2] முகைபுரை விரலிற் கண்ணீர் துடையா
யாமவன் கிளைஞரே மல்லேங் கேளினி
யெம்போ லொருத்தி நலனயந் தென்றும்
வரூஉ மென்ப வயங்குபுகழ்ப் பேக
னொல்லென வொலிக்குந் தேரொடு
முல்லை வேலி நல்லூ ரானே.*

திணையும் துறையும் அவை.

அவனை அவள்காரணமாகப் [3] பாணர் பாடியது.

இ - ள்.—அருள்பண்ணுயாதல கொடிது; மாலைக்காலம்வந்தவளவிலே சிறிய யாழை இரங்கற்பண்ணாகிய செவ் வழியென்னும்பண்ணிலே வாசிக்கும்

---

க. ஆகலல்லென்பதும் வினைக்குறிப்புச்சொல் சார்ந்துநின்ற சொற்பொருளையே உணர்த்திநிற்றற்குமேற்கோள்; தொல். இடை. ௩. ௩௨ - ந.

௨. புறநா. கசகூ: ௩; கசஎ: ௨.

௬. புறநா. க௱௪ : க௬. ஸகரவீற்றுசசொல வேற்றுமைக்கண் அம் முப்பெற்று நிற்றற்கும், (தொல். குற்றியலுகரப. சூ. ௭௮ - ந), செயவெனெச்சம் முற்றுயத்திரிவுழி ஆகவென்னும் இடைசசொலவந்து அதன் பொருளையே உணர்ததிச செயவெனெச்சமாய் நிற்றற்கும் (ஷ இடை, சூ. ௩௨-ந) மேற்கோள்.

ங. செயவெனெச்சம் முற்றுய்த்திரிவுழி ஆகவென்னும்
இடைச்சொல
வந்துஅதன்பொருளையேயுணர்ததிசெயவெனெசசமாய்நிற்றற்குமேற்கோ ;

தொல். இடை. சூ. ௩௨ - ந.

அ-ங. "செழுங்குலைக் காந்த கைவிரல் பூப்பவும்" சிறுபாண். கசள.

*ழ. "அருளாயாகலோ.... கலபூராரனே : இது கண்ணகி காரணமாக வையாவிக்கோப்பெரும்பேகனைப் பரணர்பாடிய கைக்கிளை வகைப்
( ... ) 1 '...' 2 'மகைபுணர்' 3
'வன்பரணர்'

# புறநானூறு மூலமும உரையும.

௨௨௪

பரிசுபண்ணி கிளைந்து மழையையேற்றுக்கொண்ட காட்டைப்பாடினேமாக, நீலநறுநெய்தல்போலம் றுபொலிந்த மையுண்டகண்கள் கலங்கிவீழ்ந்தஇடை விட்ட துளிகள் பூணையுடைய மார்பைநனைப்ப வருந்துதல அமையாளாக,
இளையோய், 'கிளைமையையுடையையோ எம்முடையகேண்மையை விரும்புவோருக்கு' என யாக்கள் தன்னை வணங்கிக்கேட்டேமாக, அவர் கா'தன்

மொட்டுப்போலும் விரலாலே தம் கண்ணீரைத்துடைத்து ஏங்க ா
அவனு
டைய இளைஞரேமவலேம் ; கேட்பாயாக, நீ இப்பொழுது ; எம்மை ஒப்பா
ளொருத்தியுடைய அழகைக்காதலித்து எகாளும் வருமெ ன்று பலரும்சொல
லுவரென்றுகூறினர் ; விளங்கிய புகழையுடைய பேகன், ஒலிமுழங்
கும்தேருடனே முலைவேலியையுடைய நல்லூரின்கண், — எ - று.

இளையைபோவென ஏகாரமும் எவருனென ஒருசொல்லும்
வருவித் துரைக்கப்பட்டன.

நின் காமம் பாடினேமாக, இனைதலாளாக, யாம்
தற்றெழுதனம்
வினவ, தன்கண்ணீர் துடைத்துப் பேகன் ஒருத்தி நலனயந்து
என்றும் வருமென்பவென்றாள் ; அவனை அருளாயாதல
நல்லூரின்கண்
கொடிதெனக்
கூட்டி வினைமுடிவுசெய்க.

எம்போலொருத்தியென்றது, உவமைகருதாது வன்மைபுரைதோன்ற
நின்றது; எம்மைப்போலும் பொதுமகளொருத்தியென அவனை இழித்துக்
கூறியவாறுமாம்.

இனி, யாம் தற்றெழுதனம்வினவினேமாக, அவளாயத்தார் தம்விர
லால் அவள் கண்ணீரைத்துடைத்து யாம் அவன்இளைஞரேமல்லேம்; இது பு
குந்தவாறு யாம் கூறக்கேளாமுன் புகுதிப் பின் பேகன் எம்போலொருத்தி
நலன் நயந்து நல்லூரின்கட்சென்று வருமென்றுசொன்னார்கள் ; இவ்வாறு
இளையோளும் ஆயத்தாரும் உறம் தெள்ப்புரவுரைத்து அருளாயாதல கொடி
தெனவுரைப்பினுமமையும். (கசச)

---

பாடபேதம்; இளையை மன்னெங் கேளெவ யோற்கென விவை,
யாம்

இளையபாலேம் ; முலையிலேயேபிறவாற்றுப்படைக்கண்ணே யருமையொன்று சொல்லுவ ரெனக்கூறுதலின், அஃது ஏனைக்கைக்கிளைகளின் வேறாயிற்று" தொல். புறத்திணை. ரு. ௩௰ - ந.

---

(௧௪௫.) மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக
பசித்தும் வாரேம் பாரமு மிலமே
களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்

---

௧ - ௩. புறநா. ௧௪௧ ; ௧௦ - ௧௨.

௫. மு. புறநா. ௧௨௭ : ௧; "மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்" மலைபடு. ௫௩௪.



நயம்புரிந் துறையுந ரடுக்கப் பண்ணி
யறஞ்செய் தீமோ வருள்வெய் யோயென
விஃதியா மிரந்த பரிசிலஃ திருளி
னினமணி நெடுந்தே ரேறி
யின்னா துறைவி யரும்படர் களைமே.

திணையும் துறையும் அவை.

அவனே அவள் காரணமாக அவர்பாடியது.

இ - ள்.—மெல்லிய தகைமையையுடைய கரிய மயில
குளிராலகடுங்கு மென்று அருளசெய்து படாம்கொடுத்த அழியாத
நலலபுகழினேயுடைய
மதம்பட்டயானையையும் மனஞ்செருக்கிய குதிரையையுமுடைய பேக,யாம்
பசித்தும்வருவேமலலேம்; எம்மாற்பரிககப்படுஞ்சுற்றமுமுடையேயலலேம்;
களாப்பழம்போன்ற கரியகோடடையுடைய சிறிய
யாழை* இசையின்பத்தை
விரும்பியுறைவார் அவ்விசையின்பத்தால தலையசைத்துக கொணடாடும்படி
வாசித்து, அறத்தைசசெய்வாயாக அருளேவிரும்புவோயென இது, நின்பால
யாம் இரந்தபரிசில்; இற்றையிரவின்கண இனமாகிய
உயர்ந்ததேரையேறிப்போய்க காண்டற்கு இன்னாதாக
மணியையுடைய
உறைநின்றவள
பொறுத்தற்கரிய நினைவாலுணடாகிய நோயைத் தீர்ப்பாயாக.—எ - று.

பேக, தேரேறி இன்னாதுறைவி அரும்படர் களே;
யாழைப்பண்ணியாம் இரந்தபரிசில இதுவெனக்கூட்டுக.

இதுவென்றது, அப்படிப் படர் களைதலே.

'மடத்தகை மாமயில பனிககுமென் றருளிப், படாஅ மீத்த......பேக'
என்ற கருத்து: இவ்வாறு ஒருகாரணமின்றியும் அருாபணணுகின்ற நீ
நின்னால வருந்துகின்ற இவட்கு அருளாதொழிதல தகாதென்பதாம்.

இனி, 'அருள்வெய்யோய், யாமிரந்தபரிசில, அறஞ்செய்யவேண்டு
மென்று கூறுமிது; அவ்வறந்தான் யாதென்றுகேட்பின், நின்பால அருள
பெறுமையின் இன்னாதுறைவி அரும்படரை நீசென்று களைதல; அதனைச
செய்வாயாகவெனக கூட்டியுரைப்பினுமமையும்.

'பனிக்குமென் றஞ்சி' என்பதூஉம் பாடம்.
(கசரு)

---

கO. முன்னிலைமுன்னர் ஏகாரம் அசைநிலைமரபின் மெய்யூர்ந்துவருதற்கு மேற்கோள்; தொல். எச்ச. ரு. ருஉ - பேர்.

* "பண்வனப்புக், கேட்டார் நன்றென்றல்" (சிறுபஞ்ச. க); "இசை பெறு திருவின் வேத்தவை" (மலைபடு. ருக),'இசையை எக்காலத்தும் கேட்கின்ற செல்வத்தினையுடைய அரசர்களுடைய அவைக்களம்' (௸ உரை) என்பவை இங்கே அறியற்பாலன.

---

# புறநானூறு மூலமும் உரையும்.

உருக

(கசசு.) அன்ன வாகநின் னருங்கல வெறுக்கை
யவைபெறல் வேண்டே மடுபோர்ப் பேக
சீறியாழ் செவ்வழி பண்ணிநின் வன்புல
நன்னாடு பாட வென்னை நயந்து
ரு பரிசி னல்குவை யாயிற் குரிசினீ

[1] நல்கா மையி னைவரச் சாஅ
யருந்துய ருழக்குநின் திருந்திழை யரிவை
கலிமயிற் கலாவங் கால்குவித் தன்ன
வொலிமென் கூந்தற் கமழ்புகை கொளீஇத்
தண்கமழ் கோதை புனைய
வண்பரி நெடுந்தேர் பூண்கநின் மாவே.

திணையும் துறையும் அவை.

அவனை அவள்காரணமாக அரிசில்கிழார்பாடியது.

இ - ள்.—அத்தன்மையவாக; சொல்லப்பட்ட பெறுதற்கரிய ஆபரணமும் செல்வமுமாகிய அவைபெறுதலைவிரும்பேம்; கொல்லும்போரையுடைய வேந்தே, சிறியயாழைச் செவ்வழியாகப்பண்ணி வாசித்து நினது வலிய நிலமாகிய நல்ல மலைநாட்டைப்பாட, என்னைக்காதலித்துப் பரிசில்தருகுவையாயின், தலைவனே, நீ அருளாமையால் கண்டாரிரங்க மெலிந்து அரிய துயரத்தானவருந்தும் உன்னுடைய திருந்திய அணியையுடைய அரிவையது தழைத்த மயிலினது பீலியைக் காலொன்றாகக்குவித்தாற்போன்ற தழைத்த மெல்லியகூந்தற்கண்ணே மணங்கமழும் புகையைக்கொளுவித்துக் குளிர்ந்த மணங்கமழும் மாலையைச்சூட வளவிய செலவையுடைய உயர்ந்த தேரை நின்குதிரைகள் பூண்பனவாக.—எ - று.

அன்னவாகவென்றது, இரவலர்க்கு அருங்கலவெறுக்கைகளை எளிதிற் கொடுப்பையன்றே? அவ்வெறுக்கை எமக்கும் எளிதாகவென்றவாறும். (கசசு)

---

க - உ. "அரும்பொருட் பரிசிலே னல்லேன்" சிலப். உஅ : கஎக.

ரு. புறநா. கசச: உ; கசஎ: உ.

எ. தயருழத்தல: மணி. பதி: சஅ.

அ - கூ. "கலிமயிற் கலாவத் தன்னவிவ, ளொலிமென் கூந்த லுரிய வாம்" குறுந். உஉரு.

கூ - கo. புறநா. கசஎ : சு - அ; "பெறுகசின செவ்வி பெருமகன் வருதா, னறுமலர்க் கூந்த னாணி பெறுகென" சிலப். உஎ : உகரு - சு.

எ - கக. "மாணிழை யரிவை காணிய வொருநாட், பூண்க மாவென புரவி நெடுந்தேர்" பதிற். அக : ருக - உ.

(பி - ம்.)—1 'கலகாமையிர்வாச'

---



(கசஎ.) [1] கன்முழை யருவிப் பன்மலை நீந்திச்
சீறியாழ் செவ்வழி பண்ணி வந்ததைக்
கார்வா னின்னுறை தமியன் கேளா
நெருந லொருசிறைப் புலம்புகொண் டுறையு
மரிமதர் மழைக்க ணம்மா வரிவை
நெய்யொடு துறந்த மையிருங் கூந்தன்
மண்ணுறு மணியின் மாசற மண்ணிப்
புதுமலர் கஞல வின்று பெயரி
னதுமனெம் பரிசி லாவியர் கோவே.*

திணையும் துறையும் அவை.

அவள்காரணமாக அவனைப் பெருங்குன்றூர்கிழார் பாடியது.

இ - ள்.—கடமுழைக்கணின்றும் விழும் அருவியையுடைய பலமலைகளை அரிதிற்கழித்துச் சிறியயாழைச் செவ்வழியென்னும்பண்ணை வாசிக்கும்படியாகப் பண்ணி வாசித்துவாத தற்குக் கார்காலத்துமலைமுழங்கினது இனியதுளி வீழ்கின்ற ஓசையைத் தமியளாகக்கேட்டு நெருநற்று ஒருபக்கத்துத் தனிமை கொண்டிருந்த அரிபரந்த மதர்த்த குளிர்ச்சியையுடைய கண்ணினையும் அழ கியமாமைநிறத்தினையுமுடைய அந்த அரிவையது நெய்யாற்றுதக்கப்பட்ட மைபோலும் கரியமயிரை ஒப்பமிடப்பட்ட நீலமணியினும் மாசறக்கழுவிச செவ்விமலர்நெருங்கும்பரிசு இன்று வருவையாயின், அதுவாகும், எம் முடையபரிசில் ; ஆவியருடையவேந்தே.—எ - று.

உறை - துளி; என்பது ஆகுபெயரால் துளியினோசையை.மன், அசை.

சிறியாழ் செவ்வழிபண்ணிவந்தநற்கு அரிவைகூந்தல் புதுமலர் களும் படி. அவள்பால் என்றெடும்வரின் எம்பரிசில அதுவெனக்கூட்டுக.

நெய்பூசுதலோடு பேணுதலைத்துறந்தவெனினுமமையும்.

செவ்வழிபண்ணிவந்தது, புதுமலர்களுமென்று இயைத்துரைப்பாருமுளர்.

(கசஎ)

---

௨. புறநா. கசச : ௨ ; கசரு : ௩.

௩. " முடங்கிறைச சொரிதரு மாத்திர ளருவி, யின்ப விமிழிசை யோர்ப்பனள்" மல்லை. அஎ - அ.

௬ - எ. பரி. க0: அக. " மணியேசுமிருங்கூந்தல் " கலி. எஎ.

அ. புறநா. கஙச ; ௬.　　௯ - அ புறநா. கசகு : கூ - கo.

கூ. "ஆவியர் பெருமகன் பெருங்க ளுடனை பேகனும்" சிறுபாண். அகு-எ.　　அ - கூ. "புதுமலர்....கோவே : இதனுள் மன்னென்பது ஆமென்பது குறித்து நின்றது" (தொல். இடை. சூ. ச - பேர் ; ந); மன்னென்பது பெயர்ச்சொல்லை அடுத்து வந்ததற்கு மேற்கோள் ; நன்-மயிலை. சூ. சகக.

* ௰. கைக்கிளைவகைப் பாடாண்பாட்டிற்கு மேற்கோள் ; புறத்திணை. சூ. ௩௫ - ந.

தொல்.

(பி - ம்.)— 1 'கன்முழைஅருவி'



உ.கூ.கூ

(கசஅ.) கறங்குமிசை யருவிய பிறங்குமலை நள்ளிநின்
னசைவி னொன்று ணசைவள னேத்தி
நாடொறு நன்கலங் களிற்றொடு கொணர்ந்து
கூடுவிளங்கு வியனகர்ப் பரிசின்முற் றளிப்பப்
பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்த
லெய்யா தாகின்றெஞ் சிறுசெந் நாவே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.

1 கண்டீரக்கோப் பெருநள்ளியை வன்பரணர் பாடியது.

30



(௧௪௮.) நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்
மாலை மருதம் பண்ணிக் காலைக்
கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி
வரவெமர் மறந்தன ரதுநீ
புரவுக்கடன் பூண்ட வண்மை யானே.

திணை - அது ; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—நள்ளி, வாழ்வாயாக ; நள்ளி, நள்ளென்னும் ஓசையையுடைய மாலைப்பொழுதின்கண்ணே மருதமென்கின்றபண்ணை வாசித்துக் காலைப்பொழுதின்கண் கைவழியாகிய யாழின்கட் செவ்வழியென்னும் பண்ணைவாசித்து வாலாற்றுமுறைமையை எம்முடைய பாணர்சாதியிலுள்ளோர் மறந்தார் ; அவ்வாறு மறந்தது, நீ கொடுத்த ஓம்புதலைக் கடனாக மேற்கொண்டவண்மையான்.—எ - று.

கையகத்து எப்பொழுதும் இருத்தலான், யாழைக் கைவழியென்றார், ஆகுபெயரான்.

'வாவவர் மறந்தனர்' என்பதூஉம் பாடம்.

(கசக)

---

உ - ரு. மாலையிற் செவ்வழிப்பண்ணும் காலையில் மருதப்பண்ணும் வாசிக்க வேண்டுமென்பது இசைநூன்மரபு ; இதனை, "திவவுமெய்ந் நிறுத்துச் செவ்வழி பண்ணி", "யாழோர் மருதம் பண்ண" (மதுரை. கூ0ச, கூருஅ) என மாலைக்கும் காலைக்கும் உரியனவாக அப்பண்கள் கூறப்பெற்றிருத்தலாலும் அறிக.

உ - ரு. புறநா. கருா : எ - கஉ.

---

(கரு0.) கூதிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன
பாறிய சிதாரேன் பலவுமுதற் பொருந்தித்
தன்னு முள்ளேன் பிறிதுபுலம் படர்ந்தவென்
னுயங்குபடர் வருத்தமு முலைவு நோக்கி
மான்கணந் தொலைச்சிய குருதியங் கழற்கால்
வான்கதிர்த் திருமணி விளங்குஞ் சென்னிச்

---

க - உ. "நீர்ப்படு பருந்தி னிருஞ்சிற கன்ன, நிலந்தின் சிதாஅர்" பதிற். கஉ : கக - உ0.

கூ. "முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி, மின்னுறழ் இமைப்பிற் சென்னிப் பொற்ப" முருகு. அச - ரு.

செல்வத் தோன்றலோர் வல்வில் வேட்டுவன்
றொழுதன னெழுவேற் கைகவித் திரீஇ
யிழுதி னன்ன வானிணக் கொழுங்குறை
கானதர் மயங்கிய விளையர் வல்லே
தாம்வந் தெய்தா வளவை யொய்யெனத்
தான்ஞெலி தீயின் [1] விரைவனன் சுட்டுநின்
னிரும்பே ரொக்கலொடு தின்மெனத் தருதலி
னமிழ்தின் மிசைந்து காய்பசி நீங்கி
நன்மர னளிய நறுந்தண் சாரற்
[2] கன்மிசை யருவி தண்ணெனப் பருகி
விடுத்த றொடங்கினே னாக வல்லே
பெறுதற் கரிய வீறுசா னன்கலம்
பிறிதொன் றில்லைக் காட்டுநாட் டேமென
(மார்பிற் பூண்ட வயங்குகா ழாரம்
மடைசெறி முன்கைக் கடகமொ டீத்தன)
னெந்நா டோவென நாடுஞ் சொல்லான்
யாரீ ரோவெனப் [3] பேருஞ் சொல்லான்
பிறர்பிறர் கூற வழிக்கேட் டிசினே

எ. வல்வில வேட்டுவன்: ஓரேகாலத்திற் பல பொருள்களை ஊடுருவிச் செல்லும்படி அம்பையெய்யும் விற்றொழிலையுடைய வீரனை வல்விலவி யென்றல் மரபு; இதனை, புறநா. கருஉ: க - ரு-ஆம் அடிகளாலும் அவற்றின் குறிப்புரையாலுமுணர்க.

அ. "மகவியாச் சென்று" அகநா. கூ: உக.

க. "இழுதி னன்ன வானிணஞ் செருக்கி" மலைபடு. உசச.

கஉ. ஞெலிநீ: புறநா. உசஎ: உ.

கங. புறநா. ௱உ0: கச ; ௱எஅ: உங ; ௱கக: ககூ ; ௱கூரு : க0.

கரு. புறநா. ககூக: கஉ.

கசு. காட்டோடு: "வன்புலக் காட்டோட் டதுவே" (நற். ருகூ) ; பாண்டிநாட்டின் உள்ளாடொன்றதற்குக் காட்டோடென்று பெயர் வழங்கிய தாகத் தெரிகின்றது; திருவால. சச: ருச - ஆம் செய்யுள்பார்க்க.

உக. "மடைசெறி கடகத் தோளான்" சூடாமணி. கூ: க0.

உச. இசின், தன்மைக்கண் வந்தது; (புறநா. உஉ: ௱கூ; கருக: எ); "கேட்டிசினல்லனோ" நற். கக௫.

(பி - ம்.)—1 'விரைவினான்' 2 'கண்முகையருவி' 3 'பெயரும்'

உருகூ புறநானூறு மூலமும் உரையும்.

உரு விரும்புபுனைந் தியற்றுப் பெரும்பெயர்த் தோட்டி
யம்மலை காக்கு மணிநெடுங் குன்றிற்

பளிங்குவகுத் தன்ன தீநீர்
நளிமலை நாட னள்ளியவ னெனவே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—கூதிர்க்காலத்துப் பருந்தினது கரியசிறகையொத்த துவரி யாகிய சீரையையுடையோனுய்ப் பழவாழ்வையைப்பொருந்தி, தன்னையுநினையே னுய வேற்றுநாட்டின்கட்செலாதலாது ஏய்ந்த செலவாழ்வினதாகிய வருத் தத்தினையும் மிடியையும்பார்த்து மாவினது இலைத்தொலைத்த, குருதி தோய்ந்த அழகிய வீரக்கழலினையுடைய காலினையும் வாலிய ஒளியையுடைய அழகிய நீலமணிவிளங்கும் உச்சியையுமுடைய செல்வத்தையுடைய தலைவ னாகிய ஒரு வலியாவியலிலினையுடைய வேட்டுவன், தன்னை அஞ்சலிபண்ணியோ னுய் எழுந்திருப்பேனாக கைகவித்து இருத்தி நெய்யிழுதுபோன்ற வெள்ளிய நிணத்தையுடைய கொழுவியதடியைக் காட்டுவழியிடகண் வழிமயங்கிப் போகிய இளையர்தாம் விரைய வந்து பொருந்துவதற்குமுன்னே கடிதாகத் தான்கடைந்த தீயான் விரைந்துசுட்டு நீவாது மிகப்பெரிய சுற்றத்துடனே நுனமியென்றுதருதலான் அதனை யாங்கள அமிழ்துபோலத்தின்று சுடு கின்ற பசிநீர்ந்ததாக, நல்ல மரச்செறிவையுடைய நறிய குளிர்ந்த மலைச் சாரற்கண மலையுச்சியினின்றும் வீழ்ந்த அருவிநீரைக் குரைக்குடித்து விடை கொள்ளத்தொடங்கினேனாக, விலையாவந்து பெறுதற்கரிய
பெருமையமைந்த நல்ல அணிகலங்கள தருதற்குவேறென்றில்லை,யாம்
காட்டுநாட்டின்கண்ணே

மெனச்சொல்லித் தனது மார்பிற்பூணபபட்ட விளங்கிய முத்துவடங்களை யுடைய ஆரத்தைக் கொளுத்துச செறிந்த முன்கைக்கணிந்த கடகத்துடனே தந்தனன் ; நும்முடையநாடு யாதோவெனறுகேட்ப நாடும் சொல்லிற் றிலன் ; நீர் யாரெனக்கேட்பப் பெயரும் சொல்லிற்றிலன் ; அவனுடும் பெய

ரும் பிறர்பிறர் வழியின்கண்ணே சொல்லக்கேட்டேன்யான்; இரும்பாற் புனைந்து செய்யப்படாத மிக்க புகழுடைய தோட்டியாகிய அம்மலையைக் காக்கும், அழகிய பெரிய பக்கமலையினையும் பார்க்கை வருத்தாற்போன்ற வெளியநிறத்தையுடைய இனியநீரையுமுடைய பெரிய மலைநாட்டையுடைய நள்ளி அவனெனா.—எ - று.

நீக்கி, நீங்க.

பலவுமுதற்பொருளித் தொழுதனவெனவும், மலைகாக்கும் நள்ளியென வுமியையும்.

அவன் நள்ளியெனப் பிறர்பிறர்கூற வழிகேட்டிப் பெனைக்கூட்டுக.

()

---

உஎ. புறநா. கஎ: கக.

உஅ. "நளிமலை நாட னள்ளியும்" (சிறுபாண். க0எ); 'நளி' என்னும் உரிச்சொல் பெருமையையுணர்த்தியதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. உச - சே; டிெ டிெ டிெ உக - பேர்; டிெ டிெ டிெ உஉ-ந; இ-வி. சூ. உஅச - உரை.

# புறநானூறு மூலமும் உரையும்.

உகஎ

(கருக.) பண்டும் பண்டும் பாடுந ருவப்ப
விண்டோய் சிமைய விறல்வரைக் கவாஅற்
கிழவன் சேட்புலம் படரி னிழையணிந்து
புன்றலை மடப்பிடி பரிசி லாகப்

தொக்குநின்றதெய்தே கோடும்" (பெ. பே. நு. கஎ-ந); "கேழற் பன்றி...கேழற்பன்றி முதலாயினவும் சாதிதொகக பலபுடைமையின் ஈண்டு வேண்டினுரெனக", "பூமலர், பூம்போத், களிறுருத்தல, கேழற்பன்றி



தாழற் புற்றத் துடும்பிற் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்
புகழ்சால் சிறப்பி னம்புமிகத் திளைக்குங்
கொலைவன் யார்கொலோ கொலைவன் மற்றிவன்
விலைவன் போலான் வெறுக்கைநன் குடைய
னாரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற்
சார லருவிப் பயமலைக் கிழவ
னோரி கொல்லோ வல்லன் கொல்லோ
பாடுவல் விறலியோர் வண்ண நீரு
மண்முழா வமைமின் பண்யாழ் நிறுமின்
கண்விடு தூம்பிற் களிற்றுயிர் தொடுமி

அயன்றற்றொடக்கத்த வோமொழியின்,......சேருமெனபது ஆயபன்றி முத லாவற்றை நீககுதலாறும் பொருள் வேறுபாடுடைமையின் ஒருபொருட் பன்மொழியாகா; பலபுத்தொகையு மடங்குமெனக" நன் மாபிலை.

னெல்லரி தொடுமி னாகுளி தொடுமின்
பதலை யொருகண் பையென வியக்குமின்
மதலை மாக்கோல் கைவலந் தமினென்
றிறைவ னாகலிற் சொல்லுபு குறுகி
மூவேழ் துறையு முறையுளிக் கழிப்பிக்
கோவெனப் பெயரிய காலை யாங்கது
தன்பெய ராகலி னாணி மற்றியா
நாட்டிட னாட்டிடன் வருது மீங்கோர்
வேட்டவ ரில்லை நின்னொப் போரென
வேட்டது மொழியவும் விடாஅன் வேட்டத்திற்
றானுயிர் செகுத்த மானிணப் புழுக்கோ
டானுருக் கன்ன வேரியை நல்கித்
தன்மலைப் பிறந்த தாவி னன்பொன்
பன்மணிக் குவையொடும் விரைஇக் கொண்மெனச்
சுரத்திடை நல்கி யோனே விடர்ச்சிமை
யோங்கிருங் கொல்லிப் பொருந
னோம்பா ஈகை விறல்வெய் யோனே.*

௧௭. "கோடிதரு பாணிய பதலையும்" (மலைபடு. ௧௧) என்பதும், 'மாத்திரையைச் சொல்லுந் தாளத்தையுடைய ஒருகண்மாக்கிணையும்' என்னு மதனுரையும் ஈண்டு அறியற்பாலன.

கச - அ. மலைபடு. உ - கக.

உ௦. "துறைபல முற்றிய" (மலைபடு. ச௦) என்பதனுரையைப்பார்க்க.

உஉ. ஆகவென்னும் வினைக்குறிப்புச்சொல் சார்ந்துநின்ற சொற் பொருளையே உணர்த்தி நிற்றற்கு மேற்கோள் ; தொல். இடை. ரு. நஉ-ந.

உக - உ. புறநா. கரு௦: உஉ - ரு; "சான்றோர், புகழுமுன்னர் நாணுப, பழியாங் கொல்பவோ காணுங் காலே" (குறுந். உருஉ) ; "தம்புகழ் கேட் டார்போற் றலைசாய்த்து மரந்துஞ்ச" (கலி. கககூ) ; "பிறர்தன்னைப் பேணுங்கா னாணலும்" திரி. கூ.

உரு. புறநா. நகூ: உக ; "ஒன்றியான் பெட்டா வளவை யின்" (பொருந. எரு) ; "நீசில மொழியா வளவை" சிறுபாண். உருரு.

உஅ. "தாவி னன்பொன் றைஇய பாவை" அகநா. உகஉ.

நக - உ. கொல்லிமலை ஓரிக்குரியதென்பது, "கொல்லி யாண்ட வல்வி லோரி" (புறநா. கருஅ: ரு), "ஓரி, பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லி", "வல்வி, லோரிக் கொன்று சேரலற் கீத்த, செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகநா. உ௦அ, உ௦கூ) என்பவற்றாலும் விளங்கும்.

* மு. "வேழம் வீழத்த விழுத்தொடைப்பகழியென்னும் புறப்பாட்டு, இடைநிலத்திற்பரிசுபெற்றமை கண்டார்க்குக்கூறியது" தொல். புறத்திணை. ரு. நகூ - ந.

# புறநானூறு மூலமும் உரையும்

உ௦கூ

திணை - அது ; துறை - பரிசில்விடை.

வல்விலோரியை வன்பரணர் பாடியது.

இ - ள்.—ஆனையைக் கொன்றுவீழ்த்த சிறந்த

தொடையையுடைய அம்பு, பெரியவாயையுடைய புலியை இறந்துபாட்டையுறுவித்துத் துளை பொருந்திய கோட்டையுடைத்தாகிய தலையினையுடைய புள்ளிமான்கலையை உருட்டி உரல்போலும் தலையையுடைய கேழலாகிய பன்றியைவீழச்செய்து அதற்கு அயலதாகிய ஆழ்தலையுடைய புற்றின்கட் கிடக்கின்ற உடும்பின்கட் சென்றுசெறியும் வல்வில்லாலுண்டாகிய வேட்டத்தை வென்றிப்படுத்தியிருந்தவன், புகழமைந்த சிறப்பினையுடைய அம்புஏத்தொழிலிலேமிகச் சென்றுறுதற்குக்காரணமாகிய கொலைவன் யாரோதான்? கொலைவன் மற்றிவன், விலை ஏதுவாகக் கொன்றானாகமாட்டான்; செல்வத்தை மிகவுடையனாயிருந்தான்; சந்தனம்பூசிப்புலர்த்திய அழகிய பரந்தமார்பினையுடைய, சாரற்கண்ணே அருவியையுடைய பயன்படுமலைக்குத் தலைவனாகிய ஓரியோ அல்லனோதான்? அவனாகத்தகும்; யான்பாடுவேன், விறலி, ஒருவண்ணம்; நீங்களும் முழவின்கண்ணே மார்ச்சனையையிடுமின்; யாழிலே பண்ணைநிறுத்துமின்; கண் திறக்கப்பட்ட தூம்பாகிய களிற்றினது கைபோலும் வடிவையுடைய பெருவங்கியத்தை இசையுங்கோள்; சல்லியை வாசியுமின்; சிறுபறையை அறையுங்கோள்; பதலையில் ஒருமுகத்தை மெல்லெனக்கொட்டுமின்; நமது * பிறப்புணர்த்தும் கரியகோலைக் கையின்கண்ணே தாருங்கோளென்று சொல்லி அணுகித்தலைவனாதலாலே இருபத்தொரு பாடற்றுறையையும் முறையாற்பாடிமுடித்துப் பின்னர்க்கோவேயென்று அவன்பெயர்கூறியகாலத்து அவ்விடத்து அவ்வார்த்தை தன்பெயராதலால் நாணி, பின்னை யாங்கள் நாட்டிடந்தோறும் காட்டிடந்தோறும் சென்றுவருவேம்; இவ்விடத்து ஒரு வேட்டுவரில்லை, நின்னை ஒப்போரென யாம்விரும்பியதுகூறவும் அதற்குக் காலந்தாரானாய் வேட்டையின்கண் தானெய்த மானினது நிணத்தையுடைய தசையினது புழுக்குடனே ஆவின் நெய்யை உருக்கினாற்போன்ற மதுவைத் தந்து தன்னுடைய மலையின்கட்பிறந்த வலியிலலாத நல்லபொன்னைப் பல மணித்திரளுடனே கலந்து இதனைக் கொண்மினெனச்சொல்லிச் சாரத்திடத்தே எமக்குத்தந்தான்; முழையையுடைத்தாகிய உச்சியையுடைய உயர்ந்த பெரிய கொல்லிக்குத்தலைவன், பாதுகாவாத வண்மையினையுடைய வென்றியைவிரும்புவோன்.—எ - று.

புழலென்றது ஆகுபெயராற் புழலையுடையகோட்டை.

களிற்றுயிரென்றது, ஆகுபெயராற் களிற்றினது கைபோலும் வடிவை யுடைய பெருவங்கியத்தை.

பாடுவல்விறலியோர்வண்ணமென்றது, நீயும் ஒன்று பாடுவாயாகவென் றுரிவித்து.

நீருமென்றது, கூட்டத்தை.

† மூவேழ்துறையுமென்றது, வலிவு மெலிவு சமமென்னும் மூன்றுதானத்

* 'நுண்கோல் - பிறப்புணர்த்துங்கோல' பதிற். சரு : உஎ - உரை.

† "ஏழேயேழே நாலேமூன் றியலிசை யிசையியல்பா வஞ்சத்தேய் வின்றிக்கே மனங்கொளப் பயிற்றுவோர்" (தேவாரம், திருத்தாளச்சதி),





திலும் ஒவ்வொன்றில் ஏழுதானமுடித்துப்பாடும் பாடற்றுறையை ; அன்றி, இருபத்தொருகாம்பாற்றெடுக்கப்படும் பேரியாழெனினுமமையும்.

தம்பியென்றது, தம்பியெனக் குறைந்தவின்றது.

கொலலிப்பொருநனாகிய விறல்வெய்யோன் கோவெனப் பெயரியகாலை, அது தன்பெயராகலின் காணி வேட்டதுமொழியவும்விடானாய் கல்லியோனெனக் கூட்டுக. (கருஉ)

"பண்களுக்கு இன்றியமையாத மூவேழ்திறம்" (சிலப். ரு: நரு - எ அடியார்) என்பனவும் ஈண்டறியத்தக்கன.

(கருரு.) மழையணி குன்றத்துக் கிழவ னாளு
மிழையணி யானை யிரப்போர்க் கீயுஞ்
சுடர்விடு பசும்பூட் சூர்ப்பமை முன்கை
யடுபோ ரானா வாத னோரி
மாரி வண்கொடை காணிய நன்றுஞ்
சென்றது மன்னெங் கண்ணுளங் கடும்பே
பனிநீர்ப் பூவா மணிமிடை குவளை
வானார்த் தொடுத்த கண்ணியுங் கலனும்
யானை யினத்தொடு பெற்றனர் நீங்கிப்
பசியா ராகன் மாறுகொல் விசிபிணிக்
கூடுகொ ளின்னியங் கறங்க
வாடலு மொல்லார்தம் பாடலு மறந்தே.

திணை - அது; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—முகில்சூழ்ந்த மலைக்குத்தலைவன், நாடோறும் பட்டமுதலாகியபூண்களையணிந்த யானையை இரப்போர்க்குக்கொடுக்கும் கதிர்விடுகின்ற பசும்பொன்னாற்செய்த அணியினையும் வளைந்த கடகமமைந்த முன்கையினையு முடைய கொல்லும்போர் அமையாத ஆதனோரியது மழைபோலும் வள்ளிய கொடையைக்காண்டற்கு மிகவும்சென்றது, எம்முடையகூத்தச்சுற்றம்; அச்

உ. புறநா. கருக: ரு - அ.

௩. சூர்ப்பு - வளைவு; ஆகுபெயராத கடகத்திற்காயிற்று; "சூர்ப் புறு கோல்வளை செறிந்த முன்கை" அகநா. கசஉ.

ர./ ரு. கஙங: ௯ - எ.

எ. புறநா. ஙசுச: உ - ங.

அ - க. புறநா. கசஅ; ங - ச.

# புறநானூறு மூலமும் உரையும்.

உசங

சுற்றத்தார் குளிர்ந்தநீரின்கட்பூவாத மணிமிடைந்த குவளைப்பூவை *வெள்ளி நாராற்றொடுக்கப்பட்ட பொன்னரிமாலையினையும் பிற அணிகலங்களையும் யானையணிகளுடனேபெற்றனராய்நீங்கிப் பசியாராகலானேகொலலோதான், வாரால்வலித்துப்பிணிக்கப்பட்ட பலகருவியும் தொகுதிகொண்ட இனிய இயங்களொலிப்ப ஆடுதலுமாட்டாராயினர், தமதுபாடுதலையுமறந்து.-எ-று.

சூர்ப்புடையதனைச் சூர்ப்பென்றார்.

† குடிமை ஆண்மைத்தொடக்கத்தன ,கின்றுங்கேகின்றுஉயர்திணைமுடி வும்பெறுதலின் இக்கடும்பென்பதும் பொருளேக்கால் முடிவுபெற்றது.

கண்ணுளங்கடும்பெனகின்றவழி, அம், அல்வழிச்சாரியை. மன், அசை நிலை.

ஓரிவண்கொடைகாணிய கண்ணுளங்கடும்புசென்றது; சென்றபின்னை அக்கடும்பாயினோர் தமது ‡ பாடலுமறந்து ஆடலும் ஒல்லாராயினர்; அதற்குக்காரணம் பசியாராகன்மாறுகொலெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

'நுண்பூண் ' என்று பாடமோதுவாருமுளர்.

* "வெள்ளி காராத் பூட்பெத் திசிலே" புறநா. ௧௧: ௧௭.

† குடி மை ஆண்மை முதலியவை, "குடிமையாண்மை" (தொல். இளவி. சூ. ௫௭) என்பதனால் அறியலாகும்.

‡ பலநாளாகக் கற்றகல்வியைப் புதிதாகப்பெற்ற செல்வம் மறப்பிக்கு மென்று கூறுமுகத்தால், வலவிலோரியின் கொடைச் சிறப்பை இங்கே கூறிய வன்பரணரே இந்நூல் ௧௪௬ - ஆம் பாடலில் நள்ளியென்னும் வள்ளலின் கொடைச்சிறப்பையும் இங்ஙனமே பாராட்டினர்.

---

(௧௫௪.) திரைபொரு முந்நீர்க் கரைநணிச் செலினு
மறியுநர்க் காணின் வேட்கை நீக்குஞ்
சின்னீர் வினவுவர் மாந்த ரதுபோ
லரச ருழைய ராகவும் புரைதபு
௫ வள்ளியோர்ப் படர்குவர் புலவ ரதனால்
யானும், பெற்ற தூதியம் பேறியா தென்னே
னுற்றனெ னாதலி னுள்ளிவந் தனனே

---

௧. நணி: "துறைநணி யூரனை" (ஐங்குறு. ௨௦); "நணி நணித் தாயி னும் சேஎய்ச் சேய்த்து" (பரி. ௧௭: ௨௫); "நீர்நணிப்பிரம்பின்" பெரும் பாண். ௨௮௮.

௧-௩. புறநா. ௨௦௪: ௫ - ௯; " கடல்சார்ந்து மின்னீர் பிறக்கும் மலை சார்ந்து, முப்பீண் டுவரி பிறத்தலால்" (நாலடி. ௨௪௫) ; " கடல் பெரிது, மண்ணீரு மாகா ததனருகே சிற்றூற, லுண்ணீரு மாகி விடும்" மூதுரை. ௧௨.

௫. புறநா. ௪௭: ௧. 'படர்' என்றும் உரிச்சொல் நினைத்தலும் செல்லுதலுமாகிய குறிப்பையுணர்த்து மென்பதற்கு மேற்கோள்; தொல்.

யீயென விரத்தலோ வரிதே நீயது
நல்கினு நல்கா யாயினும் வெல்போ
ரெறிபடைக் கோடா வாண்மை யறுவைத்
தூவிரி கடுப்பத் துவன்றி மீமிசைத்
தண்பல விழிதரு மருவியின்
கொண்பெருங் கானம் பாடலெனக் கெளிதே.

திணை - அது; துறை - பரிசிற்றுறை.

கொண்கானங்கிழானை மோசிகீரனார் பாடியது.

இ - ள்.—திரையலைக்கும் கடலினது கரைக்கண் அணியவிடத்தேபோயினும் அறிவாரைக்காணின் நீர்வேட்கையினைத் தணிக்கும் சிறியநீரைக்கேட்பர், உலகத்துமக்கள்; அதுபோல,வேந்தரிடத்தராகவும், குற்றமறத்தீர்ந்த வள்ளியோரை நினைத்துச்செல்வர், அறிவுடையோர்; அதனால், யானும் பெற்றதனைப் பயனாகக்கொண்டு பெற்றபொருள்சிறிதாயினும் இவன்செய்தது என்னென்று இகழேன், வறுமையுற்றேனாதலின்; நின்னைநினைத்துவந்தேன்; எனக்கு * ஈயாயென்று இரத்தல் அரிது; நீ அப்பரிசிலைத் தரினும் தாராயாயினும் பூசலிடத்து எறியும் படைக்கலத்துக்குப் புறத்தடியிடா ஆண்மையையும், துகிலினது தூயவிரியையொப்ப நெருங்கி உச்சியினின்றும் பலவாய் இழியும் குளிர்ந்த அருவியையுடைய நினது கொண்கானத்தையும் பாடல் எனக்கு எளிது.—எ - று.

புரைதபவென்றுபாடமோதிப் புரைதபப்படர்குவரெனினுமமையும்.

நீ அதுகல்லினும் நலகாயாயினும் ஈயெனவிரத்தல எனக்கு அரிது ; நினது ஆண்மையையும் கொண்பெருங்கானத்தையும்பாடல் எனக்கு எளி தெனக்கூட்டி வினைமுடிவுசெய்க. (கடுச)

---

அ. புறநா. உ0௪: க; "நல்லா றெனினுங் கொளல் தீது" (குறள். உஉஉ); "கொள்ளுத தீது கொடுப்பது நன்றால்" (கம்ப. வேள்வி. உக); தொல். எச்ச. சூ. ௪கூ - ந. மேற்.

க0. புறநா. கஙரு: கரு; "ஓடாப் பூட்கை...அறுவையர்", "ஓடாப் பூட்கை மறவர்" (பதிற். ௬௪, ருஎ); "ஓடாப் பூட்கை வேந்தன்" (அகநா. க00); "ஓடாப் பூட்கைப் பிணிமுகம்" (முருகு. உ௪எ) ; "ஓடாப் பூட்கை யுறந்தையும் வறிதே" (சிறுபாண். அ௩) ; "விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி, னோட்டன்றோ வன்க ணவர்க்கு" குறள், எரு.

கக. மீமிசை: "நவிரத்து மீமிசை" மலைபடு. ருஎக.

க0 - கஉ. துகில் அருவிக்குவமம் ; "வேறுபஃ றுகிலி னுடங்கி... இழிதருமருவி" (முருகு. உகங - ௩கக) ; "அவிர்துகில் புரைய மவ்வெள் ளருவி" குறிஞ்சி. ருரு.

க௩. கொண்பெருங்கானம் : புறநா. கருரு: எ; கரு௬: உ; "பொன் படு கொண்கான நன்னன்" நற். ௩கக.

* "ஈயா யெனக்கென் றிரப்பானே லக்கிலேயே, மாயானே மாற்றி விடின்" நாலடி. ௩0அ.

# புறநானூறு மூலமும் உரையும்.

௫௫.) வணர்கோட்டுச் சீறியாழ் வாடுபுடைத் தழீஇ
யுணர்வோர் யாரென் னிடும்பை தீர்க்கெனக்
கிளக்கும் பாண கேளினி நயத்திற்
பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ
௫ ஏர்தரு சுடரி னெதிர்கொண் டாஅங்
கிலம்படு புலவர் மண்டை விளங்குபுகழ்க்
கொண்பெருங் கானத்துக் கிழவன்
றண்டா ரகலம் நோக்கின மலர்ந்தே.

திணை - அது ; துறை - பாணாற்றுப்படை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—வளைந்த கோட்டையுடைய சிறிய யாழை உலர்ந்தமருங்கிலே தழுவிக்கொண்டு அறிவோர்யார்தான் எனது துன்பத்தைத் தீர்க்கவென்று நயத்திற் சொல்லும் பாண, யான்சொல்லுகின்றதனை இப்பொழுது கேட்பாயாக; பாழூரின்கண் நெருஞ்சியினது பொன்னிறத்தையுடைய வாலியபூ எழுகின்றஞாயிற்றை எதிர்கொண்டாற்போல, வறுமையுற்ற யாழ்ப்புலவரது ஏற்றமண்டை, விளங்கிய புகழையுடைய கொண்பெருங்கானக்கிழானது குளிர்ந்த தாரையுடைய மார்பத்தை மலர்ந்துநோக்கின.—எ - று.

'ஏர்தரு சுடரி னெதிர்கொண் டாங்கு' என்புழி, இன், சாரியை; அது, * தோற்றம்வேண்டாத்தொகுதிக்கண்வந்தது; அன்றி, ஐகாரம், விகாரத்தால் தொக்கதெனினுமமையும்.

நயத்திற்கிளக்கும்பாணவென இயையும்; நயத்தின் அகலம் நோக்கின வென இயைப்பினுமமையும்.

மண்டை அகலநோக்கி மலர்ந்தவென்ற கருத்து : கொடுக்கும் பொருள் மார்பின்வலியான் உளதாமாகலின், அகலநோக்கின கொள்க.
வென்றதாகக்
(௧௫௫)

க. "வணரமை நலயாழ்" பதிற். சக.

ரு. "வலமேர்பு திரிதரு பலர்புகழ் ஞாயிறு" முருகு. க - உ.

ச - ரு. நெருஞ்சிப்பூக்கள் சூரியனையே நோக்குதல் இயல்பு; "ஒங்கு மலைநாடன், ஞாயி றனையனென் றோழி, நெருஞ்சி யனையவென் பெரும்ப ணைத் தோளே" (குறுந். ௩கரு); "வானிடைச், சுடரொடு திரிதரு நெருஞ்சி போல" (அகநா. ௩௩௬); "வெஞ்சுடர் நோக்கு நெருஞ்சியில" (இறை. சூ. சஎ - உரை, மேற். உ௬௬); "நீள்சுடர் நெறியை நோக்கு நிரையிதழ் நெருஞ் சிப் பூப்போல்" (சீவக. ச௬க); "அருந்தவர்க் காயினுந் திருந்தமுக மிறைஞ் சாது, செங்கதிர் விரும்பும் பைங்கொடி நெருஞ்சிப், பொன்புனைமலர்" பெருங். உ. ச: க௩ - ரு.

௬. "இலம்படு புலவ ரேற்றகை நெமர" (பரி. க0: கஉ௬); "இலம் படு புலவ ரேற்றகை நிறைய" மலைபடு. ருஎ௬.

எ. புறநா. கருச : க௩.

௬ - அ. புறநா. க0௩ : ௩; கஎ௬: உ - ௩; ௩௯௩ : ச - ரு.

* "தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்" தொல். புணரியல், சூ. ௩0.



(கரு௬.) ஒன்றுநன் குடைய பிறர்குன்ற மென்று
மிரண்டுநன் குடைத்தே கொண்பெருங் கான
நச்சிச் சென்ற விரவலர்ச் சுட்டித்
தொடுத்துணக் கிடப்பினுங் கிடக்கு மஃதான்று
நிறையருந் தானை வேந்தரைத்
திறைகொண்டு பெயர்க்குஞ் செம்மலுமுடைத்தே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—வண்மையாதல் வலியாதல் நன்மையொன்றுடைய, பிறருடைய மலைகள்; எங்களுடம் இரண்டுநன்மையையுடைத்து, பெரிய கொண்கானமென்னு மலை; அது, தன்பாற் பரிசிலுகச்சிப்போன இரப்போர்கானமாகத் தான் அவர்க்கு முன்பு * கடன் கொடுத்தோராலே வளைப்புண்ணப் பட்டுக் கிடப்பினுங்கிடக்கும்; அதுவன்றி, நிறுத்தற்கரிய படையையுடைய அரசரைத் திறைகொண்டு அவரை மீட்கும் தலைமையையுமுடைத்து.-எ-று.

இரவலர்சுட்டியென்றுபாடமோதி, இரவலர்கருதிக்கொண்டு புகழ்களைத் தொடுத்துண்ணக்கிடக்கினும் கிடக்குமெனவும், இரவலர் எமது எமதென்று கூறிட்டுண்ணக் கிடக்கினுங்கிடக்குமெனவும் உரைப்பினுமமையும்.

இது, கொடைச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் கூறியவாறு. (கருரு)

---

ரு. "நிறையருந் தானை வெல்போர் மாந்தரம்பொறையன்" (அகநா. 142); "நிறையருந் தானை வேந்தரு நேர்ந்து" (சிலப். 25: 178);"நிறை யருந் தானையொடு...நீங்கி" மணி. 9 : 2ள் - எ.

* கடன் கொடுத்தோர் - இரவலர்க்குக் கடன் கொடுத்தவர்; அவர் சூழ்வது இரவலர்பெறும் பரிசிலைத் தாம் வாங்கிக்கொண்டு செலுத்தற்கு.

---

(கருஎ.) தமர்தற் றப்பி னதுநோன் றல்லும்
பிறர்கை யறவு தானு ணுதலும்

படைப்பழி தாரா மைந்தினை னாகலும்
வேந்துடை யவையத் தோங்குபு நடத்தலு
நும்மோர்க்குத் தகுவன வல்ல வெம்மோன்
சிலைசெல மலர்ந்த மார்பிற் கொலைவேற்
கோடற் கண்ணிக் குறவர் பெருமக

௧. "அன்பெனப் படுவது தன்கிளை செறாமை" (கலி. ௧௩௩);"குற்றம் பார்க்கிற் சுற்றமில்லை" (கொன்றைவேந்தன், ௧௮) ; " குற்றமதுபார்க்குங் காற் சுற்றமில்லை" வில்லி - பாரதம், கிருட்டினன் றூது. ௧௭.

௭. "மலைச்செங் காந்தட் கண்ணி" நற். ௧௭௩.



னாடுமழை தவிர்க்கும் பயங்கெழு மீமிசை
யெற்படு பொழுதி னினந்தலை மயங்கிக்
கட்சி காணாக் கடமா னல்லேறு
மடமா னாகுபிணை [1] பயிரின் விடர்முழை
யிரும்புலிப் புகர்ப்போத் தோர்க்கும்
பெருங்க னாடனெம் மேறைக்குத் தகுமே.

திணையும் துறையும் அவை.
ஏறைக்கோனைக் குறமகள் இளவெயினி பாடியது.

இ - ள்.—தனக்குச்சிறந்தோர் தன்னைப்பிழைப்பின் அதுபொறுத்த
ும், பிறருடைய மிடிமைக்குத் தான் நாணுதலும், படையிடத்துப் பிறர்
நிக்கப்படாத வலியையுடையதனாலும், அரசுடைத்தாகிய அவைக்களத்
ன்கண் மேம்பட்டுகேடத்தலும் நம்மால மதிக்கப்படுந்தலைவர்க்குத்தகுவன
ல்ல; எம்முடையதலைவன், விலலைப் பூரணமாகவலித்தலான் அகன் றமார்
லேயும் கொல்லும்வேலினையும் காநதட்பூவாற்செய்த கண்ணியினையு
டைய குறவர்க்குத்தலைமகன், இயங்குகின் றமுகிலைத் தாளாது உயரத்தால்
டுக்கும் பயன்பொருந்தியமலையினது உச்சிக்கண் ஞாயிறுபடுகின்றகாலத்
ல இனத்தினின்றும் தலைமயங்கித் தாவரசேரும் சேக்கையைக் காணாத
ாட்டின்கண் மானினதுகலைகலை மடப்பத்தினையுடைய மானாகிய இனம்
ணயைப் பயிரான் அழைப்பின் அவ்வோசையை விடாராகிய முழையின்கட்
டக்கின்ற பெரும்புலியாகிய புகர்நிறத்தினையுடைய ஏறு செவிதாழ்த்தக்
கட்கும் பெரிய மலைநாடனாகிய எம்முடைய
ஏறைக்கோனுக்குப்பொருந்தும்.—எ - று.

'சிலைசெலமலர்ந்தமார்பு' என்பதற்கு மலைதோற்க மலர்ந்த
றம் அமையும்.
மார்பெனி தலைமயங்கியென்பதனான், தலை அரசன்லை.

(கருள)

அ. புறநா. கசுக: நூஉ; உ00 : ௬.
கக. "மான்மறி விழுந்தது கண்மேமா மயங்கிப், பயிர்க்குரல் கேட்டதன்
ான்மைய ளகி" மணி. உந : ககடு - ௬.
(பி - ம்.)—1 'பயிரழைப்பின', 'பயிர்ப்பழைப்பின்', 'பயிர்பழைப்பின்'

கருஅ.)முரசுகடிப் பிகுப்பவும் வால்வளை துவைப்பவு
மரசுடன் பொருத வண்ண னெடுவரைக்

க. "கடிப்பிகு கணமுரசம்" (நாலடி. க00); "கடிப்பிகு முரசே" (சிலப். கஎ: "என்றியாம்"); 'துவைத்தல்' என்னும் உரிச்சொல் இசைப்பொருள் உணர்த்தியதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. சுO - ந; இ. வி. சூ. உஅரு - உரை.

க - உ. அரசென்றது, சேர சோழ பாண்டியரை; பாரி, தன் மலை யாகிய பறம்பை முற்றிய இவர்களோடு பொருதமை இந்நூல், க0சு, கக0- ஆம் பாட்டுக்களாலும், அகநானூறு, எஅ-ஆம் பாட்டாலும் உணரப்படும். உசஅ புறநானூறு மூலமும்

உரையும்:

கறங்குவெள் ளருவி கல்லலைத் தொழுகும்
பறம்பிற் கோமான் பாரியும் பிறங்குமிசைக்
கொல்லி யாண்ட வல்வி லோரியுங்
காரி யூர்ந்து பேரமர்க் கடந்த
மாரி யீகை மறப்போர் மலையனு
மூரா தேந்திய குதிரைக் கூர்வேற்
கூவிளங் கண்ணிக் கொடும்பூ ணெழினியு
மீர்ந்தண் சிலம்பி னிருடூங்கு நளிமுழை
யருந்திறற் கடவுள் காக்கு முயர்சிமைப்
பெருங்க லடுக்கத்துப் பேகனுந் திருந்துமொழி
மோசி பாடிய வாயு மார்வமுற்
றுள்ளி வருந ருலைவுநனி தீரத்

தள்ளா தியுந் தகைசால் வண்மைக்
கொள்ளா ரோட்டிய நள்ளியு மெனவாங்
கெழுவர் மாய்ந்த பின்றை யழிவரப்
பாடி வருநரும் பிறருங் கூடி
யிரந்தோ ரற்றந் தீர்க்கென விரைந்திவ
ணுள்ளி வந்தனென் யானே விசும்புறக்
கழைவளர் சிலம்பின் வழையொடு நீடி
யாசினிக் கவினிய பலவி னார்வுற்று
முட்புற முதுகனி பெற்ற கடுவன்
றுய்த்தலை மந்தியைக் கையிடூஉப் பயிரு
மதிரா யாணர் முதிரத்துக் கிழவ
விவண்விளங்கு சிறப்பி னியறேர்க் குமண
விசைமேந் தோன்றிய வண்மையொடு

---

ரு. வல்வில்லோரி: புறநா. கருஉ: க-சு ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

அ. புறநா. கசுஅ: கச; "கெடுநெறிக் குதிரைக் கூர்வே லஞ்சி" அகநா. சுஎஉ.

அ - சு. கூர்வே லெழினி; "பல்வே லெழினி" குறுந். அ0.

க0 - கக. புறநா. கருக: கக.

கஅ - கூ. புறநா. கூ: உச - கூ.

உச. "தஞ்சபதம் பெற்ற துய்த்தலை மந்தி" நற். ருஎ.

உரு. முதிரம்: புறநா. கசு0; கஎ ; கசுஎ : அ.

உஎ. புறநா. கருகூ: உஅ.

## புறநானூறு மூலமும் உரையும்.

௨௪௯

பகைமேம் படுகர் யேந்திய வேலே.*

திணை - அது ; துறை - வாழ்த்தியல் ; பரிசில்கடாநிலையுமாம்.

குமணனைப் பெருஞ்சித்திரனார் பாடியது.

இ - ள்.—முரசு கடிப்பு அறையவும் வெள்ளியசங்கு முழங்கவும் வேந்தருடனே பொருத தலைமையையுடைய நெடியமலைக்கண் ஒலிக்கும் வெளிய அருவி கல்லை உருட்டியோடும் பறம்பிற்கு வேந்தனாகிய பாரியும், உயர்ந்த உச்சியையுடைய கொல்லிமலையையாண்ட வலியவில்லையுடைய ஓரியும், காரியென்னும் பெயரையுடைய குதிரையைச்செலுத்திப் † பெரிய பூசலைவென்ற மாரிபோலும்வண்மையையும் மிக்கபோரினையுமுடைய ‡ மலையனும், செலுத்தப்படாத உயர்ந்த குதிரையென்னுமலையையும் கூரியவேலையும் கூவிளங்கண்ணியையும் வளைந்த ஆரத்தையுமுடைய எழினி அதியமானும், மிகக்குளிர்ந்த மலையின்கண் இருள்செறிந்த பெரிய முழையினையும் மலைத்தற்கரிய வலியினையுமுடைய தெய்வங்காக்கும் உயர்ந்த சிகரங்களையுடைய பெரியமலைநாடனாகிய பேகனும், திருந்தியசொல்லையுடைய § மோசியென்னும் புலவனாற்பாடப்பட்ட ஆயும், ஆசைப்பட்டுத் தன்னை நினைந்து வருவாருடையவறுமை மிகவுநீங்கத் தவிராதுகொடுக்கும் கூறுபாடமைந்த வண்மையினையுடைய, பகைவரைத்தூரத்திய நள்ளியுமெனச்சொல்லப்பட்ட § எழுவரும் இறந்தபின்பு கண்டார்க்கு இரக்கம்வரப் பாடிவருவாரும் பிற

---

௨௮. புறநா. ௫௮ : ௨௯.

* மு. "முரசுகடிப் பிகுப்பவும் வால்வளை துவைப்பவுமென்னும் புறப் பாட்டு,' எழுவர் மாய்ந்த பின்றை' எனப் புறத்திணைத் தலைவர் பலராய் வந்தது", "முரசுகடிப்பிகுப்பவும்......வேலே : இஃது இன்னோர்போல எமக்கு ஈயென்ற இயன்மொழிவாழ்த்து" தோல். அகத்திணை. சூ. ருரு ; டிை புறத்திணை. சூ. ௩ரு - ந.

† பெரியபூசலென்றது, வல்விலோரியுடன் இவன்செய்த பூசலை; "முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி, செல்லா நல்லிசை நிறுத்த வல்வில், லோரிக் கொன்று சேரலர்க் கீத்த, செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகநா. உ0௯) என்பதனாலும் விளங்கும்.

‡ காரியென்பவன் இவனே ; இவனை மலையமான்திருமுடிக்காரி யென்றுங் கூறுவர்.

§ மோசியென்றது, உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரை ; புறநா. ௧உஎ-ஆம்பாடல் முதலியவற்றின் பின்னுரைகளைப் பார்க்க.

$ இச்செய்யுளிற்போலவே "வானம்வாய்த்த வளமலைக் கவாஅற்,கானமஞ் ஞைக்குக் கலிங்க நல்கிய,வருந்திற லணங்கி னாவியர் பெருமகன்,பெருங்க லொடன் பேகனுஞ் சுரும்புண, நறுவீ யுறைக்கு நாக நெடுவழிச், சிறுவீ முல்லைக் குப்;பெருந்தேர் நல்கிய,பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற்,பறம்பிற் கோமான் பாரியுங் கறங்குமணி, வாலுளைப் புரவியொடு வையக மருள, வீர நன்மொழி யிரவலர்க் கீந்த,வழறிகழ் திமைக்கு மஞ்சுவரு நெடுவேற், கழறொடித் தடக் கைக் காரியு நிழறிகழ், நீல நாக நல்கிய கலிங்க, மாலமர் செல்வற் கமர்ந்த னன் கொடுத்த, சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோ, ளார்வ நன்மொழி

32

ருங்கூடி இரக்கோரது துன்பத்தைத் தீர்க்கக்கடவேன் யானென்று நீ இருத்தலால் விரைந்து இவ்விடத்தே பரிசில்பெற நினைந்துவந்தேன், யான்; வானகத்தின்கண்ணே பொருந்த மூங்கில்வளரும் மலையின்கட் சுரபுன்னையோடு ஒக்கி ஆசினியோடு அழகுபெற்ற பலாவின்கண் ஆசைப்பட்டு முள்ளைப் புறத்தேயுடைய முதிர்ந்த பலாப்பழத்தைப்பெற்றகவேன் பஞ்சுபோலும் மயிரையுடைத்தாகிய தலையினையுடைய மந்தியைக்கையாற் குறிசெய்தழைக்கும்· தளராத புதுவருவாயையுடைய முதிரமென்னுமலைக்குத்தலைவ, உலக முழுவதிலும் விளங்குகின்ற தலைமையினையும் இயற்றப்பட்ட தேரினையுமுடைய குமணனே, புகழ்மேம்பட்டவண்மையுடனே பகைமிடத்து உயர்க நீ எடுக்கப்பட்டவேல்.—எ - று.

ஆசினியொடுங்கவினியவெல, ஒடு விரித்துரைக்கப்பட்டது.

ஆசினியென்பது, ஒருமரம்; ஈரப்பலாவென்பாருமுளர்.

ஆர்வுற்றப்பயிருமென்க.

பாடிவருநரும் பிறருங்கூடி. இரக்தோரற்றம் கருதியென்று உரைப்பாருமுளர்.

தீர்க்கவேண்டுமெனக்

(கருத்)

---

யாவு மால்வரைக், கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி, யமிழ்துவிளை தீங்கனி யௌவை யீந்த, வுரவுச்சினங் கனலு மொளிதிகழ் நெடுவே, லரவக்கடற்

றானை யதிகருங் கரவாது, நட்டோ ருவப்ப நடைப்பரி கார, முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்,துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங் கோட்டு, நளிமலை நாட னள்ளியு நளிசினை, நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக், குறும்பொறை நன்னாடு கோடியர்க் கீந்த, காரிக் குதிரைக் காரி யொடு மலைந்த, வோரிக் குதிரை யோரியு மெனவாங், கெழுசமங் கடந்த

வெழுவுறழ் திணிதோ, ளொழுவர்" (சிறுபாண். அச - ககஉ) என வந்திருத் தல் காண்க.

---

(கருரு.) வாழ நாளோ டியாண்டுபல வுண்மையிற்
தீர்தல்செல் லாதென் னுயிரெனப் பலபுலந்து
கோல்கா லாகக் குறும்பல வொதுங்கி
நூல்விரித் தன்ன கதுப்பினள் கண்டுயின்று
முன்றிற் போகா முதிர்வினள் யாயும்
பசந்த மேனியொடு படரட வருந்தி

---

ச - ரு. சினைப்பொருட்கண்வந்த வினையெச்சம் காரணகாரியப் பொருட்டாய் வினைமுதலோடு முடிந்ததற்கு மேற்கோள் ; தொல். வினை. சூ. ௩௪ - ந ; இ - வி. சூ. ௨௪௮ - உரை.

சு. "பசந்த மேனியள் படர்கூ ருற்று" (சிலப். காட: கூஅ) ; படரென்னுமுரிச்சொல், உள்ளுதல் செலவுதலென்னுங்குறிப்புக்களை உணர்த்து மென்பதற்கு மேற்கோள் ; தொல். உரி. சூ. ௪௨ - ந.

## புறநானூறு மூலமும் உரையும்.

உருக

மருங்கிற் கொண்ட பல்குறு மாக்கள்
பிசைந்துதின வாடிய முலையள் பெரிதழிந்து

குப்பைக் கீரை கொய்கண் ணகைத்த
முற்றா விளந்தளிர் கொய்துகொண் டுப்பின்று
நீருலை யாக வேற்றி மோரின்
றவிழ்ப்பத மறந்து பாசடகு மிசைந்து
மாசொடு குறைந்த வுடுக்கைய ளறம்பழியாத்
துவ்வா ளாகிய வென்வெய் யோளு
மென்றாங், கிருவர் நெஞ்சமு முவப்பக் கானவர்
கரிபுன மயக்கிய வகன்கட் கொல்லை
யைவனம் வித்தி மையுறக் கவினி
யீனல் செல்லா வேனற் கிழுமெனக்
கருவி வானந் தலைஇ யாங்கு
மீத்த நின்புக ழேத்தித் தொக்கவென்
பசிதினத் திரங்கிய வொக்கலு முவப்ப
வுயர்ந்தேந்து மருப்பிற் கொல்களிறு பெறினுந்
தவிர்ந்துவிடு பரிசில் கொள்ளலெ னுவந்துநீ
யின்புற விடுதி யாயிற் சிறிது
குன்றியுங் கொள்வல் கூர்வேற் குமண
வதற்பட வருளல் வேண்டுவல் விறற்புகழ்

எ - அ. புறநா. ௧௬௦: ௧௮ - ௯.

௯ - ௧௨. "அளைக்கைக் கிணைமகள் வளருகிர் குறைத்த, குப்பை வேளை யுப்பிலி வெந்ததை, மடவோர் காட்சி நாணிக் கடையடைத், திரும்பே ரொக்கலொ டொருங்குடன் மிசையு, மழிபசி" சிறுபாண். ௧௩௭ - ௪௦.

கச. என்வெய்யோனொன்றது, மனைவியை.

கூ - கச. "பசகத...வெய்யோளுமெனச் செய்தெனெச்சத்திடையே அவ்வினையெச்சமுற்றும் அதன்குறிப்பெச்சமும் உடனடுக்கி முடிந்தனவும் பிறவும் 'பன்முறையானும்' என்றதனாற் கொள்க" தொல். வினை ருஉகூரு.

கரு. இருவரென்றது - தாயையும் மனைவியையும்; மிகக மூப்பினராய இருமுதுகுரவரும் கற்புடைமனைவியும் குழவியும் பசியான்வருந்தும் எல்லைக்கண் தீயனபலவும் செய்தாயினும் புறந்தருகவென்பது அறநூற்பொருளாதலின் 'இருவர்நெஞ்சமுமுவப்ப' என்றார்; குறள். கூஙக - பரிமேல்.

கக. "கருவி வானந் துளிசொரிந் தாங்கு" (பெரும்பாண். உச); "கருவி மாமழை கனைபெயல பொழிந்தென" சீவக. உஎஙஉ.

உக. புறநா. ககூ0: ச.

# உ௫உ புறநானூறு மூலமும் உரையும்.

வசையில் விழுத்திணைப் பிறந்த
விசைமேர் தோன்றலிற் பாடிய யானே.

திணை - அது ; துறை - பரிசில்கடாநிலே.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—தனக்குச்சென்ற ஆண்டுகள் பல உண்டாதலின், இன்னும் போகின்றதில்லை எனதுயிரென்று சொல்லிக்கொண்டு வாழுநாளோடு பலவாகவெறுத்துத் தான்பிடித்த தண்டே காலாகக்கொண்டு ஒன்றற்கொன்று அணுகப் பலஅடியிட்டுநடந்து நூலைவிரித்தாற்போலும் மயிரையுடையளாய்க் கண்மறைந்து முற்றத்திடத்துப் புறப்படமாட்டாத மூப்பையுடைய தாயும், பசப்புற்றமேனியுடனே நினைவுவருத்த வருந்தி *மருங்கிலே எடுத்த பலசிறுபிள்ளைகள் பிசைந்துமெல்லுதலால உலர்ந்தமுலையினையுடையளாய் மிகவும்வருந்திக் குப்பையின்கண் படுமுதலாகவெழுந்த கீரையினது முன்புகொய்யப்பட்ட கண்ணிலேகிளைத்த முதிராத இளையதளிரைப்பறித்துக்கொண்டு உப்பின்றியே நீரை உலையாகக்கொண்டு ஏற்றிக் காய்ச்சி மோரின்றி அவிழாகிய உணவைமறந்து பசிய இலையைத்தின்று †மாசோடு கூடிய துணிபட்ட உடையினளாய் ‡ அறக்கடவுளைப்பழித்து உண்ணுளாகிய என்னை விரும்பியோளுமென்றுசொல்லப்பட்ட இருவருடையநெஞ்சமும் காதலிப்ப, வேடர் சுடப்பட்டுக் கரிந்தபுனத்தை மயங்கவுழுத அகன்ற இடத்தையுடையகொல்லைக்கண் ஐவனநெல்லோடுவித்தி இருட்சியுற அழகு பெற்றுக் கோடைமிகுதியான் ஈன்றலைப் பொருந்தாத தினைக்கு இழுமெனும் அனுகரணவொலியுடனே § மின்னும் இடியுமுதலாகிய *தொகுதியையுடையமழை துளியைச்சொரிந்தாற்போலத் தந்த நினது புகழைவாழ்த்திப் பசிதினலாலவருத்தமுற்ற ஈண்டிய எனது சுற்றமுமகிழ, மேம்பட்டு ஏந்திய கோட்டையுடைய கொல்யானையைப்பெறினும் முகமாறித் தரும்பரிசிலைக் கொள்ளேன்; மகிழ்ந்து நீ யான் இன்புற விரையத் தந்து விடுவையாயிற் சிறிதாகிய குன்றியென்னும் அளவையுடையபொருளாயினும் கொள்வேன்; கூரிய வேலையுடைய குமணனே, அவ்வின்புறுதற்கண்ணே பட அருளுதலைவேண்டுவேன், ¶ வென்றிப்புகழையுடைய வசையில்லாத சிறந்த குடியிலே கட்பிறந்த இசைமேம்பட்ட அண்ணலே, நின்னைப்பாடிய யான்.—என்று.

குமணை, இசைமேந்தோன்றல், நிற்பாடிய யான் கொல்களிறுபெறினும் தவிர்ந்துவிடுபரிசில் கொள்ளலேன் ; இருவர்நெஞ்சமுமுவப்ப, ஒக்கலு முவப்ப உவந்து இன்புற்றுவிடுதியாயிற் குன்றியுங்கொள்வேன் ; அதற்பட அருளல்வேண்டுவலெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

---

உஅ. புறநா. கருஅ : உஎ.

* மருங்கு - ஒக்கலை ; பழ. சசு.

† "மாசித்திங்கண்மாசினைசின்னத்துணிமுள்ளி, னூசித்துன்ன மூசிய வாடை" சீவக. உகூஉக.

‡ "அறனெனு மடவோய்" சிலப். கஅ : சக.

§ "மின்னு முழக்கு மிடிபு மற்றின்ன" ஐந்திணையம்பது, ரு.

§ "மறம்வீங்குபல்புகழ்" (பதிற். கஉ : அ) என்பதனுரையைப்பார்க்க.

# புறநானூறு மூலமும் உரையும்.

உருஉ

'வாழு நாளோ டியாண்டுபல வுண்மையின்' என்பதற்கு, இன்பப் பகர்ந்துகழிந்த இளமைநாளுடனே மூப்புவந்து துன்பமுற்ற யாண்டுபல வுண்மையினெனினுமமையும்.

• குன்றியுமென்பதற்குக் குறைந்துமென்று உரைப்பாருமுளர்.

ஆங்குமென்னும் உம்மை, இசைநிறைவு.

---

(கருக) ருசுO.) உருகெழு ஞாயிற் றொண்கதிர் மிசைந்த

முளிபுற் கானங் குழைப்பக் கல்லென
வதிர்குர லேறொடு துளிசொரிந் தாங்குப்
பசிதினத் திரங்கிய கசிவுடை யாக்கை
யவிழ்புகு வறியா தாகலின் வாடிய
நெறிகொள் வரிக்குடர் குளிப்பத் தண்ணெனக்
குய்க்கொள் கொழுந்துவை நெய்யுடை யடிசின்
மதிசேர் நாண்மீன் போல நவின்ற
சிறுபொ னன்கலஞ் சுற்ற விரீஇக்
கேடின் றாக் பாடுநர் கடும்பென
வரிதுபெறு பொலங்கல மெளிதினின் வீசி
நட்டோர் நட்ட நல்லிசைக் குமணன்
மட்டார் மறுகின் முதிரத் தோனே
செல்குவை யாயி னவ்குவன் பெரிதெனப்
பல்புகழ் நுவலுநர் கூற வல்விரைந்
துள்ளந் துரப்ப வந்தனெ னென்றும்

க. உருவென்னுமுரிச்சொல் உட்கென்னும் பொருளில் வருதற்கு மேற்
காள் ; தொல். உரி. சூ. ச - ந ; இ - வி. சூ. உகூ0 - உ௱ர.
ச. புறநா. கருகூ: உக.

உ - ச. "பெருவறங் கூர்ந்த கானங் கல்லெனக், கருவி வானந் துளி
)சொரிந் தாங்குப், பழம்பசி கூர்ந்தவெம் மிரும்பே ரொக்கல" பெரும்பாண்.
_௲ - ரு.

க - ச. புறநா. களச : உ௲ - அ.
எ. நெய்யுடையடிசில: புறநா. கஅஅ: ரு.

௮ - ௧௧. "திங்களலஞ் சூழ்ந்ததிரு மீன்களெனச் செம்பொற், பொங்குகதிர் மின்னுபுகழ்க் கலங்கள்டல பரப்பி" சீவக. ௨௦௨௫.

௧௫. பலபுகழ் - கல்வி, ஆண்மை, கொடைமுதலியவற்றால் உளவாய புகழ்; "மறம்வீங்கு பலபுகழ்" (பதிற். ௧௨) என்பதனுரையையும், ௨௩௧-ஆம் குறளின் பரிமேலழகருரையையும் பார்க்க.

௧௬. "ஊக்கத்தரப்ப" புறநா. ௮: ௩.

௧௪ - ௬. புறநா. ௧௬௧: ௨௧.



## புறநானூறு மூலமும் உரையும்.

நில்லுணாத் துறத்தலி னின்மறந் துறையும்
புல்லுளைக் குடுமிப் புதல்வன் பன்மாண்
பாலில் வறுமுலை சுவைத்தனன் பெறாஅன்
கூழுஞ் சோறுங் கடைஇ யூழி
னுள்ளில் வறுங்கலந் திறந்தழக் கண்டு
'4:11-2. மறப்புலி யுரைத்து மதியங் காட்டியு
நொந்தன ளாகி நுந்தையை யுள்ளிப்
பொடிந்தநின் செவ்வி காட்டெனப் பலவும்
வினவ லாற்று ளாகி மனைவி
னல்ல லுழப்போண் மல்லல் சிறப்பச்
செல்லாச் செல்வ மிகுத்தனை வல்லே
1 விடுதல் வேண்டுவ லத்தை படுதிரை
நீர்சூழ் நிலவரை யுயரநின்

௩௦ சீர்கெழு விழுப்புகழ் ஏத்துகம் பலவே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—உட்குப்பொருந்திய ஞாயிற்றினது ஒள்ளிய சுடர்தின்னப் பட்ட முளிந்த புல்லையுடையகாடு தளிர்ப்பக் கல்லென்ற ஓசையுண்டாக நடுக் கத்தைச் செய்யும் ஓசையையுடைய உருமேற்றுடனேகூடித் துளியைப் பொழிந்தாற்போலப் பசிதின்னப்பட்டு உலர்ந்த வேர்ப்புடைய உடம்பு அவிழ்புகுவதறியாதாகலால் வாட்டமுற்ற முடக்கங்கொண்ட பலவரியை யுடைய குடர் தன்கண்ணே மூழ்கும்பரிசு குளிரத் தாளிப்புச்சேரப்பட்ட கொழுவிய துவையோடுகூடிய நெய்யுடைய அடிசிலைத் திங்களைச்சேர்ந்த நாளாகியமீனையொப்பப் பயிலாத பொன்னாற்செய்யப்பட்ட சிறிய நல்ல கலங்களைச் சூழவைத்திருத்தி ஊட்டிக் கேடில்லையாகப் பாடுவாரது சுற்ற மெனச்சொல்லி | பெறுதற்கரிய பொன்னாற்செய்யப்பட்ட அணிகலங்களை எளிதாகவழங்கித் தன்னுடைய நட்டோரினும் எம்மோடுநட்புச்செய்த நல்ல புகழையுடைய குமணன், மதநிறைந்த தெருவிலையுடைய முதிரமென்னும் மலையிடத்தான்; நீ அவன்பாற் செல்லவிரும்பின், நினக்கு மிகவுந்தருவ னென நினது பல புகழையும் சொல்லுவார்சொல்ல, அதுகேட்டுக் கடிதாக விரைந்து எனது உள்ளம் செலுத்துதலான் வந்தேன்; எனதுமனை உலை

---

௧௮. "புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து" அகநா. ௱௭௬: ௧௯.

௧௮ - ௯. புறநா. ௧௫௬: ௭ - ௮; ௧௬௪: ௩ - ௫; ௨௧௧: ௨௦ - ௨௧.

௩௦. ஏத்துகம் பல: புறநா. ௧௦: ௧௩.

௨௯ - ௩௦. புறநா. ௧௬௯: ௨௩; "மண்டேய்த்த புகழினன்" சிலப். ௧: ௩௬.

(பி - ம்.)—1 'விடுத்த'

ணப்படுவனவற்றைக் கைவிடுதலான் அம்மனையிகழ்ந்து நினையாத்
உறைநின்ற புல்லிய உளைமயிர்போலும் குடுமியையுடையபுதல்வன் பலபடியும் பாலில்லாத வறியமுலையைச் சுவைத்துப் பால் பெருனாய்க் கூழையும் சோற்றையும்வேண்டி முடுகி முறைமுறையே உள்ளொன்றில்லாத வறிய அடுகலத்தைத் திறந்து அங்கு ஒன்றுங்காணுதழ, அதனைப்பார்த்து மறத்தையுடைய புலியைவரவுசொலலி அச்சமுறுத்தியும் அம்புலியைக்காட்டியும் அவற்றால் தணிக்க அருமையின் வருந்தினளாய் நின்பிதாவைநினைந்து வெறுத்த நின் செவ்வியைக்காட்டெனச்சொல்லிக் கேட்டல் அமையாளாய் மிகுதிப்பட நனவின்கண்ணும் துயாமுறுவோள் வளப்பமிகத்தொலையாத செல்வத்தை மிகுத்தனையாய் விரையப் பரிசில்தந்து விடுத்தலைவிரும்புவேன், யான் ; ஒலிக்குநதிரையையுடைய நீராற்சூழப்பட்ட நிலவெல்லையிலே யோங்க நினது சீர்மைபொருந்திய சிறந்த புகழைப் பலவாகவாழ்த்து வேம்.—எ - று.

அத்தை, அசைநிலை,
ஊன்கலமிரீஇ அடிசிலைக் குடர்குளிப்பத் தண்ணென ஊட்டியெவ்க.
ஊட்டியென ஒருசொல் தரப்பட்டது.
'கட்டோர்கட்ட' என்பதற்கு கட்டோரைகாட்டியவெனினுமமையும்.
'செல்லாச்செல்வமீத்தனை' என்பதூஉம், 'நிலவரையுளா'

பாடம்.

என்பதூஉம்

(௧௬௦)

(௧௬௧.) நீண்டொலி யழுவங் குறைபட முகந்துகொண்
டீண்டுசெலற் கொண்மூ வேண்டுவயிற் குழீஇப்
பெருமலை யன்ன தோன்றல சூன்முதிர்
புருமுரறு கருவியொடு பெயல்கட னிறுத்து
வளமழை மாறிய வென்றூழ்க் காலை
மன்பதை யெல்லாஞ் சென்றுணக் கங்கைக்
கரைபொரு மலிநீர் நிறைந்து தோன்றியாங்
கெமக்கும் பிறர்க்குஞ் செம்மலை யாகலி
னன்பி லாடவர் கொன்றாறு கவரச்
சென்றுதலை வருந வல்ல வன்பின்று

௧. "கடல்குறை படுத்தநீர் கல்குறைபட வெறிந்து" (பரி. ௨௦: ௧); "தடிந்தெழிலி தானல்கா தாகி விடின்" குறள், ௧௭.

௪. புறநா. ௧௭௪ : ௨௮; "உருமுரறு கருவிய பெருமழை" (அகநா. ௧௫௮); "உருமுரறு கருவிய பெருமலை பிற்பட" மலைபடு. ௩௬௭.

௪ - ௫. புறநா. ௨௦௩ : ௧.

௯-௧௦. புறநா. ௧௫௯: ௧௦-௧௪; "அற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்தாங், கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர், துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலிற், புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை" கலி. ௪.

வன்கலெ தெவிட்டு மருஞ்சுர மிறந்தோர்க்
கிற்றை நாளொடும் யாண்டுதலைப் பெயரவெனக்
[1] கண்பொறி போகிய கசிவோ டுரனழிந்
தருந்துய ருழக்குமென் பெருந்துன் புறுவிநின்
முன்படு செல்வங் காண்டொறு மருளப்
பனைமரு டடக்கையொடு முத்துப்பட முற்றிய
வுயர்மருப் பேந்திய வரைமரு ளேன்பக
டொளிதிக ழோடை பொலிய மருங்கிற்
படுமணி யிரட்ட வேறிச் செம்மாந்து
செலனசைஇ யுற்றனென் விறன்மிகு குருசி
லின்மை துரப்ப விசைதர வந்துநின்
வண்மையிற் றொடுத்தவென் னயந்தனை கேண்மதி
வல்லினும் வல்லே னாயினும் வல்லே
யென்னளந் தறிந்தனை நோக்கா து சிறந்த
நின்னளந் தறிமதி பெரும வென்றும்
வேந்தர் நாணப் பெயர்வேன் [2] சாந்தருந்திப்
பல்பொறிக் கொண்ட வேந்தெழி லகல

கக. தெவிட்டல்: "புரவி புல்லுணாத் தெவிட்ட" (மதுரை. சுசு௦); "புரவி புல்லுணாத் தெவிட்டும்" நெடுநல். கூ௩ - ச.

கங. பொறி - ஒளி; "பொறிவரிப் புகர்முகம்" பெரும்பாண். சசஅ.

௧௪. புறநா. ௧௪௯ : ௭.

௧௯. புறநா. ௩௪0 : ௭; "பனைக்கை மும்மத வேழ முரித்தவன்" தே.

௧௭. புறநா. ௩௮, ௪௨, ௬௨௫, ௧௪0, ௧௯௭, ௨௩௮, ௩௮௭; நற். ௧௪௧ ; மலைபடு. ௫௭௨.

௧௯ - ௭. யானைக்கொம்புமுத்தம் : புறநா. ௧௭0 : ௧0 - ௧௧.

௧௯. புறநா. ௩ : ௧0; ௭௨ : ௩ ; ௧௯௫ : ௯ ; ௩௫௧ : ௧.

௨௩. வல்லினும்-வல்லேனாயினும்; "உணர்த்த வல்லின்" (தொல். உரி. ௬. ௯௪); வல்லேன் - வன்மையில்லேன்; "பரிசின் மாக்கள் வல்லாராயினும்" பதிற். ௨0 : ௨௨ ; புறநா. ௫௭ : ௧ - ௩ ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

௨௪ - ௫. "சிரப்பான் மணிமுடிச் சேரமான் றன்னைச், சுரப்பாடு கேட்கவே பொன்னொடொன் றீந்தா, னிரப்பவ ரென்பெறினுங் கொள்வர் கொடுப்பவர், தாமறிவர் தங்கொடையின் சீர்" (ஔவையார்பாடல்) என்பது இங்கே அறியற்பாலது.

௨௭. பொறி - உத்தமஇலக்கணம்; புறநா. ௯௮ : ௫ - ஆம் அடிக குறிப்பைப்பார்க்க.

(பி - ம்.)—1 'கண்பொறிமாறிய' 2 'சாத்தருந்து'

## புறநானூறு மூலமும் உரையும்.

௨௫௭

மாணிழை மகளிர் புல்லுதொறும் புகல
நாண்முர சிரங்கு மிடனுடை வரைப்பினின்
றூணிழல் வாழ்நர் நன்கல மிகுப்ப

வாளம ருழந்தநின் றுணையுஞ்
சீர்மிகு செல்வமு மேத்துகம் பலவே.

திணை - அது ; துறை - பரிசிற்றுறை.

அவனை அவர்பாடிப் பகுப்பற்றது.

இ - ள்.—பெரிதாய் ஒலிக்கின்ற பரப்பினையுடைய கடல்குறைபட நீரைமுகந்துகொண்டு விரைந்தசெலவையுடையமுகில்கள் வேண்டியவிடத்தே திரண்டு பெரிய மலைபோலுந்தோற்றத்தையுடையவாய்ச் சூல்முதிர்ந்து உருமேறிடிக்கும் மின்முதலாகியதொகுதியுடனே கூடிப் பெயலை முறைமையாகப்பெய்து வளத்தைத்தரும் மழைநீங்கிய கோடைகாலத்து உயிர்ப்பன்மைகளெல்லாஞ்சென்று நீருண்டற்குக கங்கையிலுண்டு கரையைப்பொரும் மிக்க வெள்ளம் நிறைந்துதோன்றியவாறுபோல எங்கட்கும் பிறர்க்கும் தலைமையையுடையையாதலின், யாவரோடும் உறவில்லாத ஆறலைகள்வர் கொன்று வழியிலே அடித்துப்பறித்தலாற் போய் முடிவிலவலல அருஞ்சுரமாயிருக்கத் தம்முயிர்மேல் அன்பின்றி வலிய கலைகிடந்து அசையிடும் போதற்கரிய அச்சுரத்தின்கண்ணே அளவின்றிப் பிரிந்தவர்க்கு இத்துணைநாளோடுங்கூடி யாண்டுகழிகவெனச்சொல்லிக கண்ணொளிமழுங்கிய இரக்கத்துடனே *வலி

கெட்டுப் போதற்கரிய அன்பமுறும் எனது பெரியவறுமையுறுவோர் நினைத்† முயற்சியாலுண்டாகிய செல்வத்தைக்காணுந்தோறும் வியப்பப்பனை யையொக்கும் பெருங்கையுடனே முத்துப்படும்படி முதிர்ந்த உயர்ந்த கொம் பேந்திய மலையையொக்கும் வலிய களிற்றை ஒளிவிளங்கும் பட்டம் பொலி யப் பக்கத்தேயொலிக்குமணி ஒன்றற்கொன்று மாறியொலிப்ப ஏறித் தலைமை தோன்ற இருந்து போதலைவிரும்பினோன்; வென்றிமிக்கதலைவனே, எனது வறுமை பின்னே நின்றுதூரத்த இன்புகழ்கொடுவாவகது நினது கைவண்மை யினே செலவற்றைத்தொடுத்த என்னைக் காதலித்துக்கேட்பாயாக; செல வற்றைச்சொல்ல அறிவேனாயினும் அறியேனாயினும் வினாய எனகல்வியளவை ஆராய்ந்தறிந்தனையாய் ஆராயாது சிறந்த சின்னாளவை அளந்தறிவாயாக, பெருமானே, என்றாரும்; எனதுமிகுதியைக்கண்டு அரசர்காணும்படி பெயர்

---

உ௯. ஐங்குறு. ௪௪௮ ; மதுரை. ௨௩௨ ; சிலப். ௧௬ : ௩.

௩0. தாணிழல : "வீரன் றாணிழல்", "அடிநிழற் றருக வெள்ளெம் மாணைவேந் தருளிச் செய்தான்" சீவக. ௪0௯, ௧0௮௭.

௩௧. புறநா. ௨௪: ௨௬.

௩௨. புறநா. ௧0 : ௧௩ ; ௧௬0 : ௩0.

* புறநா. ௧௪௮ : ௨-ஆம் அடிக்குறிப்பையும், "பாக்க வேந்த னக்கம் போல" (பெருங். ௩. ௫: ௨0) என்பதையும் பார்க்க.

† "இம்மியனு நுண்பொருள்க ணீட்டிநிதி யாக்கிக், கம்மியரு மூர்வர் க்ளி றேடைநுதல் சூட்டி" சீவக. ௪௬௫.

வேன்; சாந்துபூசப்பட்டுப் பல நல்ல இலக்கணத்தைப்பொருந்திய மேம்பட்ட அழகினையுடையமார்பை மாட்சிமைப்பட்ட ஆபரணத்தையுடைய மகளிர்தழுவுந்தோறும் விரும்ப நாட்காலையே முரசுமுழங்கும் இடனுடைத்தாய எல்லையின்கண் நினது தாணிழற்கண்வாழ்வார் நலல ஆபரணத்தை மிகுப்ப வாளாற்செய்யும் போரின்கண்ணே உழக்கப்பட்ட நினதுபடையையும்நினது சீர்மிக்க செல்வத்தையும் பலபடப்புகழ்வேம்.—எ - று.

அருஞ்சுரம்சென்று தலைவருவனவல்லவென முற்றுக்கி, அவ்வருஞ்சுரயிறந்தோரெனவும், அன்பின்றியிறந்தோரெனவுங்கூட்டுக.

நின்வண்மையிற் றொடுத்தவென்பதற்கு நின்வண்மையால் வினைத்துக் கொள்ளப்பட்டவெனினுமமையும்.

புகல மிகுப்பவென்னும் செயவெனெச்சங்கள், வாளமருழந்தவென்னும் பிறவினையொடுமுடிந்தன.

துன்புறுவி மருளப் பகடேறிச் செலல்கரைஇ உற்றனெனவும், மகளிர்புகலத் தாணிழலவாழ்நர் நன்கலமிகுப்ப வாளமருழந்தநின்தானையும் செல்வமும் ஏத்துகமெனவுங்கூட்டுக. (கசக)

---

(கசஉ.) இரவலர் புரவலை நீயு மல்லை
புரவல ரிரவலர்க் கில்லையு மல்ல
ரிரவல ருண்மையுங் காணினி யிரவலர்க்
கீவோ ருண்மையுங் காணினி நின்னூர்க்
ரு கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானையெம் பரிசில்
கடுமான் றோன்றல் செல்வல் யானே.*

திணை - அது; துறை - பரிசில்விடை.

அவர் வெளிமானுழைச்சென்றூர்க்கு வெளிமான்றுஞ்சுவான் தம்பி யைப் பரிசில்கொடுவென அவன்சிறிதுகொடுப்பக் கொள்ளாதுபோய்க்

---

௫. கடிமரம்- காவன்மரம்; அது பகைவரறுகாதவண்ணம் வளர்க்கப் படுவது.

௬. யானைப்பரிசில: புறநா. ௧௩௧, ௧௪௦, ௩௯௪.

௫ - ௬. பகைவருடைய காவன்மரத்தை அல்லது காவற்சோலையை வெட்டுதலும் வெட்டாமல் அம்மரத்திலதம்முடைய யானைகளைக்கட்டுதலும் அரசர்க்கியல்பு; புறநா. ௨௩ : அ-௯; ௩௬ : ௬-௯; ௫௭ : ௧௦ - ௧௧; ௩௩ : ௪; ௩௪௫ : ௧) என்பதனுலுணர்க ; அநுமான் அசோகவனத்தை அழித் ததும் இங்கே அறியற்பாலது.

* மு. அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கத்துள், ஏற்றற்கு மேற்கோள்; ஏற்றலாவது, கொள்வோன் தனது சிறப்பிற் குன்றுமற்கொள்ளுதல் ; (தொல். புறத்திணை. ௱. ௧௬ - இளம்); "இரவலர்......யானே : இது பிறன்பாற் பெரிது பெற்றுச் சிறிதுதந்தவற்குக்காட்டிய விடை" வெ டீ வெ டீ ௩௬ - ந.

புறநானூறு மூலமும் உரையும்.

(மு)மணனைப்பாடிக் குமணன் பகடுகொடுப்பக் கொணர்ந்துநின்று வெளிமானூர்க் கடிமரத்துயாத்துச்சென்று அவர்சொல்லியது.

இ - ள.—இரப்போர்க்கு ஈந்து தாங்காப்பாய் நீயுமல்லை; புரப்போர் இரப்போர்க்கு இல்லையுமல்லர்; இனி இரப்போருண்டாதலையும் காண்பாயாக; இனி இரப்போர்க்கு இடுவோருண்டாதலையும் காண்பாயாக; நின்னுடைய ஊரின்கட் காவலையுடையமரம்வருந்தக் கொடுவந்து யாம் கட்டிய உயர்ந்த நல்ல இலக்கணமுடைய யானை எமதுபரிசில்; விரைந்த செலவினையுடைய குதிரையையுடைய தலைவனே, இனி யான்போவல்.—எ - று.

யான்போவலென்றகருத்து: முன்பெற்றுக்கொடுப்பக் கொள்ளாத மிகுதி தோன்றநின்றது.

இரவலருண்மையுங்காணினியென்றகருத்து: இரப்போர்க்குப்பெருந்தன்மையுடைத்தாதல் என்னைவிடேகாணென்பதாம்.

'யாம்பிணித்த' என்னும் பன்மை * பெருமிதந்தோன்றநின்றது.

† "கைவிற்றேன்று மிருவகை விடையும்" என்பதனால், இதுபெற்றுப் பெயர்ந்த பரிசில்விடை. (கசஉ)

* "யாம்' என்றது, தம்பிராட்டிப்பாதலால், தன்பெருமிதந்தோன்ற" (சிலப். உ0: கஉ - அரும்பத.

† தொல்காப்பியம், புறத்திணையியல், சூ. ௩௬.

(கசுங.) நின்னயந் துறைநர்க்கு நீநயந் துறைநர்க்கும்
1 பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்கும்

கடும்பின் கடும்பசி தீர யாழநின்
னெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கு
ரு. மின்னோர்க் கென்ன தென்னெடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்து மென்னாது நீயு
மெல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேற் குமண னல்கிய வளனே.*

௧. கடும்பு - சுற்றம்; (புறநா. ௨௫ : ௨௭), கடும்பசி - மிக்க பசி; புறநா. ௨௬௦ : ௬.

௪. "குறியெதிர்ப்பையாவது அளவுகுறித்து வாங்கி அவ்வாங்கிய வாறே எதிர்கொடுப்பது" (குறள், ௨௨௧ - பரிமேல்); "கூற்றுங் குறி யெதிர்ப்பை கொள்ளுந் தகைமைத்தே...களிறு" முத்தொள்ளாயிரம்.

௬. வல்லாங்கு: புறநா. ௪௭: ௩.

* மு. அரசன்விடைகொடுப்பப் போகவன்கூற்றிற்கு மேற்கோள்; (தொல்.புறத்திணை. சூ. ௩௦ - இளம்); "நின்னயந்துறைநர்க்கு......வளனே : இது மனைக்குமகிழ்ந்து கூறியது" (டி டி டி ௩௬ - ந) என்பர்.

(பி - ம்.)—1 'முன்மாண்'



திணை அது; துறை - பரிசில்.
பெருஞ்சித்திரனார் குமணனைப்பாடிப் பரிசில்கொணர்ந்து மனையோட்குச்சொல்லியது.

இ - ள்.—நின்னைக்காதலித்துறையும் நின்சார்வாய மகளிர்க்கும் ஏ அன்புசெய்தொழுகப்பட்ட மகளிர்க்கும் பலகுணங்களும் மாட்சிமைப்பட்ட கற்பினையுடைய நின்னுசுற்றத்து மூத்தமகளிர்க்கும் மெதுசுற்றத்தினுடமிக்க பசிநீங்க நினக்கு நெடுநாடபடக் குறித்த எதிர்ப்பை தருவோர்க்கும் மற்றும் இன்னதன்மையாரென்றுகருதாது எல்லோருடேகூடி உசாவுதலுஞ்செய்யாது சதுரப்படக் குடிவாழ்க்கையொழுக்கடவேமென்றுகருதாது நீயும் யாவர்க்கும் வழங்குவாயாக, எனது மனைக்குரியோயே, பலாப்பழமுதலாயினதாங்கும் முதிரமென்னுமம்பகுத்தலைவனுகிய திருநதியவேலையுடைய குமணன் நலகியம்செல்வத்தை.—எ - று.

மனைகிழவோய், குமணனலகிய செல்வத்தை நீயும் எல்லோர்க்கும் கொடுமதியெனக்கூட்டுக.

நின் பன்மாணகற்பிற்கினை முதலோர்க்குமெனவிரையும்; கின்றுங்குரைப் பினுமமையும்.

நீயுமென்ற உம்மை, யானுங்கொடுப்பேன் ; நீயுங்கொடுவெனஎச்ச வும்மையாய்நின்றது.

(கக )

---

(கசுச.) ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பி
னாம்பி பூப்பத் தேம்புபசி யுழவாப்
பாஅ லின்மையிற் றோலொடு திரங்கி
யில்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி
நீரொடு நிறைந்த விரிதழ் மழைக்க ணென்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ

நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண
வென்னிலை யறிந்தனை யாயி னிந்நிலைத்

௧ - ௨. "புனிற்றுநாய் குரைக்கும் புல்லென் அட்டில், காழ்சோர் முதுசுவர்க் கணச்சித லரித்த, பூழி பூத்த புழற்கா ளாம்பி, ஒல்குபசி யுழந்த ...வளைக்கைக் கிணைமகள்" சிறுபாண். ௧௩௨ - ௬.

௩ - ௫. புறநா. ௨௧௧ : ௨௦ - ௨௧.

௭. புறநா. ௧௫௧ : ௧௫- ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

௪ - ௮. "இல்லிதூர்ந்த...குமண : என்புழி, முலைப்பசைகாணாது அழுகின்றது குழவியென்பது. தன்கட்டோன்றிய வறுமைபற்றி அவலம்பிறந்தது; மகமுகநோக்கி அழுகின்றாள் என்மனைவியென்பது பிறர்கட்டோன்றிய வறுமையவலம்" தொல். மெய்ப்பாடு. ௫. ௫ - பேர்.



1 தொடுத்துங் கொள்ளா தமையலெ னடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
2 மண்ணமை முழவின் வயிரிய
ரின்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே*

திணை - அது; துறை - பரிசில்கடாநிலை.

தம்பியால் நாடுகொள்ளப்பட்டுக் காடுபற்றியிருந்த குமணனைப் பெருந்தலைச் சாத்தனார் பாடியது.

இ - ள்.—அடுதலை மிகவும் மறந்த புடையோங்கிய அடுப்பின்கட் †காளாம்பி பூப்ப உடம்புமெலியும் பசியால் வருந்திப் பாலின்மையால் தோலாந்தன்மையுடனே திரங்கித் துளை தூர்ந்த பொல்லாத வறிய முலையை வறிதே சுவைக்குந்தோறும் அழுகின்ற தன் புதல்வனைத் தனது முகத்தைப் பார்த்து நீரால் நிரம்பிய ஈரிய இமையையுடைய குளிர்ந்த கண்ணையுடைய என் மனைவியது வருத்தத்தைப் பார்த்து இவ்வருத்தந் தீர்த்தற்குரியாய் நீயென நினைந்து நின்பால் வந்தேன்; நல்ல போரையுடைய குமண, எனது வறுமையின் நிலைமையை நீ அறிந்தாயாயின், இவ்வாறு வறுமையுற்று நின்றதின் நிலைமைக்கண் வளைத்தாயினும் பரிசில்கொள்ளாது விடேன்; பலவாக அடுக்கப்பட்ட பண்ணமைந்த நரம்பினையுடைய தோலாற்போர்க்கப்பட்ட நல்லயாழையும் மார்ச்சனை நிறைந்த மத்தளத்தினையுமுடைய கூத்தரது மிடியைக்கெடுக்கும் குடியின்கட்பிறந்தோயாதலால்.—எ - று.

அடுதலைமிகவும் மறத்தலால் தேய்பிறை உயர்ந்த அடுப்பென்றாராம்.

குமண, நீ இன்மைதீர்க்குங்குடிப்பிறந்தோயாதலால் இந்நிலைத் தொடுத்தும் கொள்ளாது அமையலெனெனக் கூட்டுக. (கசுச)

---

க0. தொடுத்தும் - வளைத்தும்; புறநா. கடுரு : கஎ; கருகூ : ச; "வளைத்துவாங்கு பொருளிழவாதே யென்றார்" திருவால. ௰அ : உ.

கக. பண்ணமை : புறநா. கஎ0 : கஉ. பச்சை - யாழின் தோற் போர்வை; "விளக்கழ லுருவின் விசியுறு பச்சை" (பொருந. ௫); "புகழ் வினைப் பொலிந்த பச்சை" சிறுபாண். உஉ௭.

கரு. புறநா. ரு : உச - சு.

க௦ - கரு. "கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின், றிரப்புமோ ரேஎ ருடைத்து" (குறள், க௦ருங) என்பது இங்கே அறியற்பாலது.

* மு. வாகைத்திணையின்பகுதியாகிய பரிசில்கடைஇய கடைக்கூட்டு நிலைக்கு மேற்கோள்; (தொல். புறத்திணை. சூ. ரு௦ - இளம்); "ஆடுகனி மறந்த...குடிப்பிறந்தோயே: இது பரிசிலகடாநிலை" வெ. வா. வெ. ருக - ந.

† காளாம்பி - காளான்.

(பி - ம்.)—1 'தடுத்தும்' 2 'மன்னர்'

---



மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே
துன்னருஞ் சிறப்பி னுயர்ந்த செல்வ
ரின்மையி னிரப்போர்க் கீஇ யாமையிற்
றொன்மை மாக்களிற் றொடர்பறி யலரே
தாடாழ் படுமணி யிரட்டும் பூநுத
லாடியல் யானை பாடுநர்க் கருகாக்
கேடி னல்லிசை வயமான் றோன்றலைப்
பாடி நின்றனெ னாகக் கொன்னே

பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்
னாடிழந் ததனினு நனியின் னாதென
வாடந் தனனே தலையெனக் கீயத்
தன்னிற் சிறந்தது பிறிதொன் றின்மையி
னாடுமலி யுவகையொடு வருவ

---

௧. 'மன்னுமை' என்பது நிலையாமையையுணர்த்துவதற்கு இது மேற்கோள்; தொல். களவி. சூ. ௩௪ - ந.

௧ - ௨. புறநா. ௧௮ : ௩ ; "நின்றுநீ கெடாஅ நல்லிசை நிலைஇ" "நல்லிசை நிலைஇய நனந்தலை யுலகத்து" (பதிற். ௧௪, ௮௬); "மண்ணிய மேல வான்புகழ் நட்டாலும், ...சாவா வுடம்பெய்தினார்" (திரி. ௧௬); "மன்னியன் ஞாலத்து மன்னு புகழ்வேண்டிப், பெண்ணிய வல்லாய பிரிந்தார்" (கார். ௮); "நிலலா வுலகத்து நிலைமை தூக்கி, யந்நிலை யணுகல வேண்டி" (பெரும்பாண். ௪௬௭ - ௭); "தொலையா நல்லிசை யுலகமொடு நிற்ப", "இன்றிவட் செலலா துலகமொடு நிற்ப" (மலைபடு. ௭0, ௫௪௧);

"ஒருவன திரண்டு யாக்கை யூன்பயி னரம்பின் யாத்த, வுருவமும் புகழு மென்றாங் கவற்றினுள் காத்து வந்து, மருவிய வுருவ மிங்கே மறைந்துபோ மற்றை யாக்கை, திருவமர்ந் துலக மேத்தச் சிறந்துபின் னிற்கு மன்றே", "பொன்று மிவ்வுட லின்பொருட், டென்று நிற்கு மிரும்புகழ் பின்று நீர்களிற் றீர்களாற், குன்றின் மேற்றுடை வேத்திர்காள்" (சூளா. சீயவதை. ௨0௪; டி அரசியல. ௨௩௬); "மன்று வுலகத்து மன்னிய சீர்த்தஞ்சை வாணன்" (தஞ்சை. ௨௧); "மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கள் மாயா, தேந்திய கைகொ டிரந்தவ ரெந்தாய், வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனும், மீந்தவ ரல்ல திருந்தவர் யாரே" கம்ப. வேள்வி. ௬0.

உ - ரு. மலைபடு. ருசக - ௬.

௬ - எ. புறநா. எஉ: ௬ - ச ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

கக. "கடலங் கான லாய மாய்ந்தவென், னலமிழந் ததனினு நனியின் னாதே" குறுந். உசரு.

# புறநானூறு மூலமும் உரையும்.

உ௬௭

க்கு லோடாப் பூட்கையின் கிழமையோற் கண்டே.*

திணை - அது; துறை - பரிசில்விடை.

தம்பியால்நாடுகோள்ளப்பட்டுக் காடுபற்றியிருந்த குமணனைக் கண்டு அவன் தன்வாள்கொடுப்பக் கொண்டுவந்து இளங்குமணற்குக் காட்டிப் பெருந்தலைச்சாத்தனார்பாடியது.

பரிசில்விடையாவது,—

† "வேந்தனுண் மகிழ வெல்புக ழறைந்தோர்க்
கீந்து பரிசி லின்புற விடுத்தன்று."

இ - ள்.—எப்பொருளும்நிலையாத இவ்வுலகத்தின்கண் நிலைபெறுதலைக்

கருதினோர் தம்முடையபுகழைப் பூமியிடத்தேநிறுத்தித் தாங்கள் இறந்தார்; நணுகுதற்கரிய தலைமையையுடைய மிக்கசெல்வர், வறுமையால் இரப்போர்க்குக் கொடாமையிற் பழைய வண்மையையுடைய மாக்கள்போலப் பின்னும் தம்பெயரைநிறுத்தி உலகோடுதொடர்ந்துபோதுதலை அறியார்; தாளின்கண் தாழ்ந்த ஓசையையுடைய மணி ஒன்றற்கொன்றுமாறியொலிக்கும் புகர்நுதலையுடைய வென்றியியன்ற யானையைப் பாவலர்க்குமிகக்கொடுக்கும் அழிவில்லாத நல்லபுகழையுடைய வலிய குதிரையையுடைய தலைவனைப்பாடிநின்றேனாக, பயனின்றியே பெருமைபெற்றபரிசிலன் வாடினனாகப்பெயர்தல் எனது நாட்டையிழந்ததனினும் மிக இன்னாதென நினைந்து வாளைத்தந்தான், தனது தலையை எனக்குத்தருவானாக; ஆங்குத்தருதற்குத் தன்னிற்சிறந்த பொருள் வேறொன்றில்லாமையின்; வென்றிமிக்க உவகையான்வந்தேன், புறக்கொடாத மேற்கோளையுடைய நின்தமையனைக்கண்டு.—எ - று.

வருவலென்பது, காலமயக்கம்.

மன்னுதல்குறித்தோர் புகழ்நிறுத்துதலும், புகழ்நிறுத்தாதோர் மன்னாரதலும் இவ்வாறன்றோவென்பது கருத்தாகக்கொள்க.

நின்கிழமையோற்கண்டு வருவலெனவும், வயமான்றோன்றலைப்பாடிநின்றேனாகப் பரிசிலன் கொன்னேபெயர்தல் இழந்ததனினும் இன்னாதெனத் தன்னிற்சிறந்தது பிறிதொன்றின்மையின், தலை எமக்கீய வாள்தந்தனன்; ஆதலால், ஆடுமலியுவகையின் வருவலெனவும் கூட்டுக.

'இளமை யோற்கண்டு' என்றுபாடமோதுவாருமுளர். (கசுரு)

---

கரு. ஓடாப்பூட்கை: புறநா. கருச: ௪0-ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

* ரு. வாகைத்திணைத்துறைகளுள் 'இடையில் வண்புகழ்க் கொடை' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. கஎ - இளம்; ஷை ஷை ஷை உக - ந.

† புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம், உகூ.

(கசுசு.) நன்றாய்ந்த நீணிமிர்சடை
முதுமுதல்வன் வாய்போகா
தொன்றுபுரிந்த வீரிரண்டி
னாறுணர்ந்த வொருமுதுநூ
லிகல்கண்டோர் மிகல்சாய்மார்
மெய்யன்ன பொய்யுணர்ந்து
பொய்யோராது மெய்கொளீஇ
மூவேழ் துறையு முட்டின்று போகிய
வுரைசால் சிறப்பி னுரவோர் மருக
வினைக்குவேண்டி நீபூண்ட
புலப்புல்வாய்க் கலைப்பச்சை
சுவற்பூண்ஞாண் மிசைப்பொலிய
மறங்கடிந்த வருங்கற்பி
னறம்புகழ்ந்த வலைசூடிச்
சிறுநுதற்பே ரகலல்குற்
சிலசொல்லிற் பலகூந்தனி
னிலைக்கொத்தநின் றுணைத்துணைவியர்

தமக்கமைந்த தொழில்கேட்பக்
காடென்றா நாடென்றாங்
கீரேழி னிடமுட்டாது
நீர்நாண நெய்வழங்கியு
மெண்ணாணப் பலவேட்டு
மண்ணாணப் புகழ்பரப்பியு

க - உ. புறநா. க : கா; ருக : க - உ; "திமிர்புன் சடையின் முடியாய்", "நீர்பரந்த நிமிர் புன்சடை மேலோர் நிலாவெண்மதி சூடி", "நிமிர் புன்சடை யெம்பிரானவன்", "நிமிர்புன்சடைப் பெருமான்" தேவாரம்.

உ - ௩. "மறைமுதாமுதல்வன்" சிலப். கஉ : (ப. ௩உஉ.)

கா. தொல். தொகை. ரு. கரு - ந; மெய் இளவி. ரு. க-ந; இ - வி. ரு. எரு - உரை, மேற்.

கசு. தொல். தொகை. ரு. கரு - ந; மெய் இளவி. ரு. க - ந; இ-வி. ரு. எரு - உரை, மேற்.

உக. ழ. புறநா. ௩அச.
உஉ. புறநா. கரு : உ0 - உக.
உ௩. புறநா. கக0 : உகூ - ௩0.
உஉ - ௩. தொல். மரபு. ரு. எ௩ - பேர். மேற்.

மருங்கடிப் பெருங்காலை
விருந்துற்றநின் றிருந்தேந்துநிலை
யென்றுங், காண்கதில் லம்ம யாமே குடாஅது
பொன்படு நெடுவரைப் புயலேறு சிலைப்பிற்
பூவிரி புதுநீர்க் காவிரி புரக்குந்
தண்புனற் படப்பை யெம்மூ ராங்க
ணுண்டுந் தின்று மூர்ந்து மாடுகஞ்
செல்வ லத்தை யானே செல்லாது
மழையண் ணாப்ப நீடிய நெடுவரைக்
கழைவள ரிமயம் போல
நிலீஇய ரத்தைநீ நிலமிசை யானே.*

திணை - வாகை ; துறை - பார்ப்பனவாகை.

சோணாட்டுப் [1] † பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் ‡ கௌணியன்விண்ணந்தாயனை ஆவூர்மூலங்கிழார் பாடியது.

பார்ப்பனவாகையாவது,—

§ " கேள்வியாற் சிறப்பெய்தியானை
வேள்வியான் விறன்மிகுத்தன்று."

இ - ள்,—பெரிதும் ஆராயப்பட்ட மிக்க நீண்டசடையினையுடைய
முதிய இறைவனது வாக்கைவிட்டுநீங்காத அறமொன்றையேமேவிய நான்கு

உஅ. "காவிரி புரக்கு நாடுகிழ வோனே" பொருந. உசஅ.

உரு-அ. "மலைத்தலைய கடற்காவிரி" (பட்டின. ரு);"குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி" (மலைபடு. ருஉஎ); "குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரமொடு, கடல்வல னெதிரக் கயவாய் நெரிககும், காவிரி" சிலப். க0 : க0ள் - அ.

௩௦ - ௩௧. எண்ணிடைச்சொல் வினைச்சொறகண் வாதத்தற்கு மேற் கோள்; தோல். இடை. ரு. சரு - ந.

௩௨. புறநா. ௩௯-அ: ௧-௩; கருள: அ-ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

௩௩ - ௪. புறநா. ௨௨௦ - ௨௪ ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

* மு. அந்தணன் வேட்டதற்கும் (தோல். புறத்திணை. ரு. கா-இளம்); அந்தணன் வேட்டதற்கும் ஈதற்கும் (மேற்படி ரு. ௨௦ - ந) மேற்கோள்.

† பூஞ்சாற்றூர் - சோழநாட்டில உளளதோரூர். முடிகொண்டானாற்றங்கரையில்

‡ கௌணியன் - கௌண்டின்னியகோத்திரத்திற்பிறந்தவன்.

§ புறப்பொருள்வெண்பாமாலை, வாகைப்படலம், ௬.

$ முதிய இறைவன் - சிவபெருமான்.

(பி - ம்.)—1 'பூஞ்சிற்றூர்'

34

கூற்றையுடைத்தாய் * ஆறங்கத்தாலும் உணரப்பட்ட ஒருபழைய நூலாகிய, வேதத்திற்கு மாறுபட்ட நூல்களைக் கண்டோராகிய புத்தர்முதலாயினோர் புறச்சமயத்தோரது மிகுதியைச் சாய்க்கவேண்டி அவரது மெய்போன்ற பொய்யை உளப்பட்டறிந்து அப்பொய்ம்மையை மெய்யென்று கருதாமல் உண்மைப்பொருளை அவர்களுக்கு ஏற்பச்சொல்லி † இருபத்தொருவேள்வித் துறையையும் குறையின்றாகச் செய்துமுடித்த புகழமைந்த தலைமையை யுடைய அறிவுடையோர்மரபிலுள்ளானே, வேள்வித்தொழிற்கு வேண்டி நீபோர்க்கப்பட்ட காட்டுநிலத்துவாழும் ‡ புல்வாய்க்கலையினது உறப்புத தோல்கிடந்ததோளின்கண் இடப்பட்ட பூணுநூல்மீதே சிறந்ததோன்றக் கொடுமையைநீக்கிய பெறுதற்கரிய கற்பினையும், அறநூல்புகழ்ப்பட்ட § சாலகத்தைச் சூடி, சிறியநுதலினையும் பெரிய அகன்ற அல்குலையும் மெத் தென்றசொல்லையும் பலவாகியகூந்தலையுமுடையநின்னுடையநிலைமைக்குமட மொத்த நின்னுடைய துணைவியாகிய ‖ காதலிமார் தத்தமக்குப்பொருந் திய ஏவற்றொழிலைக்கேட்டுச் செய்யக் காடென்றும் நாடென்றுஞ்சொல்லப் பட்ட அவ்விடத்தின்கட் ¶ காட்டின் எழுவகைப்பட்டபசுவானும் நாட்டின் எழுவகைப்பட்டபசுவானும் முட்டாது நீர் காணும்பரிசு செய்யைவழங்கியும்

---

* வேதத்தின் ஆறங்கங்களாவன:—வியாகரணம், சோதிடம், நிருத்தம், சந்தம், சிக்கை, கற்பமென்பன; "கற்பங் கைசந் தங்கா லெண்கண, டெற்ற நிருத்தஞ் சொலிசிக் கைமுக், குற்ற வியாகர ணமுகம் பெற்றுச், சார்பிற் றோன்று வாரண வேதக், காதி யந்த மிலலை" மணி. உ௭: ௧௦௦ - ௧௦௪.

† இருபத்தொருவேள்விகளாவன:—ஸோமயஜ்ஞம், ௭; ஹவிர்யஜ்ஞம், ௭; பாகயஜ்ஞம், ௭; அவற்றுள், ஸோமயஜ்ஞங்களேழாவன:—அக்கினிஷ்டோமம், அதியக்கினிஷ்டோமம், உக்தியம், ஷோடசி, வாஜபேயம், அதிராத்திரம், அப்தோர்யாமமென்பன. ஹவிர்யஜ்ஞங்களேழாவன:- அக்கினியாதேயம், அக்கினிஹோத்திரம், தரிசபூர்ணமாசம், சாதுர் மாஸ்யம், நிரூடபசுபந்தம், ஆக்கிரயணம், ஸௌத்திராமணியென்பன. பாகயஜ்ஞங்களேழாவன:—அஷ்டகை, ஆபார்வணம், சிராத்தம், சிராவணி, ஆக்கிரகாயணி, சைத்திரி, ஆச்வயுஜியென்பன.

‡ யாகத்தலைவர்கள் யாகஞ்செய்யுங்காலத்துக் கலைமானின் உறுப்புத் தோலைப் போர்த்துக் கொள்ளுதல மரபு; "கடகரி யுரிவை போர்த்த கண னுதற் கடவுள் மாறி, யிடம்வல மாகப் பாகத் திறைவியோ டிருந்த வாபோ, லுடல்கலை யுறுப்புத் தோலி னுளித்திடப் போர்த்து வேமாவிக், கடனிறைக் குரிய வெல்லாங் கவினுறச் சார்த்தி னனே" வில்லி—பாரதம், இராசசூய. கஙச.

§ சாலகம் - ஜாலகம்; இது யாகபத்தினிகள் அணியும் அணிவிசேடம்.

§ யாகங்களுட் சிலவற்றிற் பணிவிடை செய்தற்குப் பத்தினிகள் மூவ ருக்குக் குறையாதிருத்தல் வேண்டுமென்பது விதி.

¶ காட்டுப்பசு ஆரண்யபசுவென்றும்; நாட்டுப்பசு கிராமபசுவென் றும் வழங்கப்படும்.

# புறநானூறு மூலமும் உரையும்

உகஎ

மண்ணிறப்பப் பலவேள்விகளைவேட்டும் மண்பொருமற் புகழைப்பரப்பியும் அவ்வாறு பெறுதற்கரிய விளக்கமுற்ற வேள்விமுடிபாகிய பெரியகாலத்து நிருந்தினரைப்பொருந்திய நினது திருந்திய மேம்பட்ட நிலைமையை எக்கா ரும்காண்பேமாக, யாங்கள்; மேற்றிசைக்கண் பொன்படுகின்ற நெடிய குடகமலைக்கண்ணே முகிலின்கண் இடியேறுமுழங்கிப் பூப்பரந்த புதுநீரை யுடைய காவிரி உலகத்தைப்பாதுகாக்கும் குளிர்ந்த புனற்பக்கத்தையுடைய எம் ஊரிடத்தின்கண் உண்ணப்படுவனவற்றையுண்டும் தின்னப்படுவனவற் றைத்தின்றும் ஏறப்படுவனவற்றையேறியும் கொண்டாடுவேமாகப் போ வேன், யான்; போகாது, மழை தலையெடுப்ப உயர்ந்த நெடிய

பக்கவரை கலையுடைத்தாய் மூங்கிலவளரும் இமயமலைபோல
நிலைபெறுவாயாக, நீ
நிலத்தின்மேலே.—எ - று.

முதுமுதலவன்வாய்போகாதென்றகருத்து : * அப்பெரியோனாலும் எக்
காலமும் அத்தியயனம் பண்ணப்படுமென்றதாகக்கொள்க.

'வாய்போகாதொன்றுபுரிந்த' என்பதற்கு மெய்ம்மைநீங்காமலவிடோன்
றையுமே புரிந்தவென்றும், 'பொய்யோராது' என்பதற்குத் தாம்பொய்ம்மை
யை விசாரியாதென்றும், 'மூவே ழுதுறைத்' என்பதற்கு
இருபத்தொருகூறு

பட்டதருக்கநூலென்றும், 'ஏரேழின்' என்பதற்குக் காட்டுள ஏழுநாளும்
நாட்டுள ஏழுநாளுமென்றும், 'கற்பினைவலைநுடி' என்பதற்குக் கற்பினலை
வலைநுடியென்றுமுரைப்பினுமமையும்.

உரவோர்மருக, பொலியக் கேட்ப வழக்கியும் வேட்டும் பரப்பியும் இவ்
வாறு விருத்துற்ற நின் இருக்கைத்தேம்தியே என்றும் இன்றுபோலக் காண்பே
மாக, யாமும்; எம்மூரிடத்து உணடும் தின்றும் ஊர்ந்தும் இவ்வாறுசெய்து
நீதந்தபரிசில்கொண்டு கொண்டாடுவேமாகச் செலவேன் ; நீதானும் இம
யம்போல நிலைபெறுவாயாகவென முடிக்க.

நன்றாய்ந்த ஒருமுதுநூலெனவும், கற்பையும் நுதலையும் அலகுலையும்
சொல்லையும் கூந்தலையுமுடைய துணைவியர் வலைநுடித் தொழில கேட்பவென
வும், செல்லாது நிலியரெனவுமியையும்.

மூவேழ்துறையுமென்பதற்கு இருபத்தொருகூறுபட்ட அருத்

நூலென்பாருமுளர்.

விருந்தென்றது, அதிதிகளை; அன்றி

உறப்புத்தோல்முதலியவற்றாற் புதுமையுற்றவெனினுமமையும்.

தில், விழைவின்கண்வந்தது.

'காவிரிபரக்கும்' என்பதூஉம் பாடம்.

(கசுரு)

---

* "வேதகானவினர்", "பாடினார் சாமவேதம்", "சாமத்தினிசைவீணை தடவிக்கொண்டார்", "சாமவேதமோதி" தேவாரம்.



(கசுஎ.) நீயே, அமர்காணி னமர்கடந்தவர்
படைவிலக்கி யெதிர்நிற்றலின்
வாஅள் வாய்த்த வடுவாழ் யாக்கையொடு
கேள்விக் கினியை கட்கின் னாயே
ரு அவரே, நிற்காணிற் புறங்கொடுத்தலி
னூறறியா மெய்யாக்கையொடு
கண்ணுக் கினியர் செவிக்கின் னாரே
அதனா, னீயுமொன் றினியை யவருமொன் றினிய
ரொவ்வா யாவுள மற்றே,வெல்போர்க்

கo கழல்புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி
நின்னை வியக்குமிவ் வுலகமஃ
தென்னோ பெரும வுரைத்திசி னெமக்கே.

திணை - அது ; துறை - அரசவாகை.

ஏனாதிதிருக்கிள்ளியைக் கோனாட்டு எறிச்சிலூர் மதுரைக்குமரனார் பாடியது.

மாடலன்

இ - ள்.—நீதான, போரைக்காணின் அப்போரைவென்று அப்பகைவரது படையைவிலக்கி எதிர்நிற்றலான் வாள்வாயக்கதைத்த வடுவழுந்திய உடம்புடனே கேட்டசெவிக்கு இனியை, கண்ணுக்கு இன்னாய ; பகைவராகிய அவர்தாம், நின்னைக்காணிற் புறக்கதருதலாற் புண்ணறியாத உடம்பாகிய வடிவுடனே கண்ணுக்கு இனியர், செவிக்கு இன்னாதலர்; ஆதலால், இவ்வனம் நீயும் ஒன்றினியை; அவரும் ஒன்றினியர்; இனி அவரொவ்வாதன வேறுயாவையுள ; வேலனும் போரினைசசெய்யும் வீரகழலணிந்த திருந்திய அடியினையும் கடிய செலவினையுடைய குதிரையையுமுடையகிள்ளி, நின்னை மதித்திருக்கும் இவ்வுலகம் ; அதற்குக்காரணம் யாதோ பெருமானே,எமக்குச்சொல்லுவாய்.—எ - ற.

நீ கட்கின்னாயெனப் பழித்ததுபோலப் புகழ்தலும், அவர் கட்கினியரெனப் புகழ்ந்ததுபோலப் பழித்தலும் சில அணிதோன்ற நின்றன. (கசுஎ)

---

ரு. புறநா. கஉக : ௬.

க - ரு. புறநா. கஉ : க - உ ; கOO : உ - ஆம்

அடிக்குறிப்பைப் பார்க்க.

௬ - ௭. "காலினும் முருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார், பேணினும் வரகதா மிடுக்கிலாத தேவரை" திவ். திருச்சந்த. ௬௬.

* புதுக்கோட்டையைச்சார்ந்த ஊர்களுள் 'எறிச்சி' என்று வழங்கு மூர் இவ்வூர் போலும்; இது கோனாட்டைச்சார்ந்ததே. இதில், பஞ்சபாண்டவர் சுனையென்று ஐந்து பழையசுனைகளும் அவற்றின் பக்கத்தில் ஒரு பழைய சிவாலயமும் உள்ளன.



# புறநானூறு மூலமும் உரையும்.

௨௬௧

(௱௬௮.) அருவி யார்க்குங் கழைபயி னனந்தலைக்
கறிவளர் அடுக்கத்து மலர்ந்த காந்தட்
கொழுங்கிழங்கு மிளிரக் கிண்டிக் கிளையொடு
கடுங்கட் கேழ லுழுத பூழி
நன்னாள் வருபத நோக்கிக் குறவ
ருழாஅது வித்திய பரூஉக்குரற் சிறுதினை
முந்துவிளை யாணர் நாட்புதி துண்மார்
மரையான் கறந்த நுரைகொ டீம்பான்
மான்றடி புழுக்கிய புலவுநாறு குழிசி
வான்கேழ் இரும்புடை கழாஅ தேற்றிச்
சாந்த விறகி னுவித்த புன்கந்

1 கூதளங் கவினிய குளவி முன்றிற்
செழுங்கோள் வாழை யகலிலைப் பகுக்கு
மூராக் குதிரைக் கிழவ கூர்வே
கறு ணறைநார்த் தொடுத்த வேங்கையங் கண்ணி

௩ - ௭. "கிழங்ககழ் கேழ லுழுத சிலம்பிற், றமிலவினை கானவர் கொய் தனர்" (ஐங்குறு. ௨௭0); "கேழ லுழுத கரிபுனக் கொல்லை" ஐந்-எழு. ௧௧.

௪ - ௮. "உய்யாமன் மலைந்தும ராமுயிலை ர, மெய்யாக விராமன் விருந் திடவே, கையார முகத்துகொ ட டதகனு,வாயா புதிதுண்டதிற தின்லயோ" கம்ப. சடாயுவுயிர். ௬௬.

௧௧. சாநதவிறகு: புறநா. ௧௦௮: ௧-௨; உவித்தல: புறநா. ௩௬௫: ௪; புன்கம்: "புன்க மிதவை பொம்மல் பேரனகம" திவாகரம், ஆறுவது.

௧௨. "காறிதழ்க் குளவியொடு கூதளங் குழைய" (புறநா. ௩௮0: ௭); "குலலை குளவி கூதளங் குவளை" (நற். ௩௭௬); "குறுகதாட் கூதளி யாடிய நெடுவரை" (குறுந். ௬0); "குாவியொடு வெணகூதாளந் தொடுத்த கண்ணியன்" முருகு. ௧௯௧ - ௨.

௧௪. ஊராக்குதிரை: புறநா. ௧௬௮: ௮; குதிரைமலை பிட்டனுக்குரியதென்பதை, "வசையில வெம்போர் வானவன மறவ, வசையின் வாழ்நர்க்கு கன்கலஞ் சுரக்கும்,பொய்யா வாய்வாட் புனைகழற பிட்டன், மைதவழுயர்சிமைக் குதிரைக கவாஅன்" (அகநா. ௧௪௩) என்பதனுலுமுணர்க.

௧௧ - ௪. "சாந்த ஞெகிழியி, னூன்புழுக் கயரும் குன்ற நாடன்" அகநா. ௧௭௨.

கடு. நறைநார் - நறைக்கொடியிலிருந்து எடுத்தநார்; "நறைப்பவர்" (நற். ரு); "தண்கமழ் நறைகொடி கொண்டு" (ஐங்குறு. உஎசு); "நறை நார் வேங்கைக் கண்ணி" அகநா. உஅஉ.

(பி - ம்.)—1 'கூதளங்கவினிய'



வடிநவி லம்பின் வில்லோர் பெரும
கைவள் ளீகைக் கடுமான் கொற்ற
வையக வரைப்பிற் றமிழகங் கேட்பப்
பொய்யாச் செந்நா நெளிய வேத்திப்
பாடுப வென்ப பரிசிலர் நாளும்
மீயா மன்னர் நாண
வீயாது பரந்தநின் வசையில்வான் புகழே.

திணை-பாடாண்டிணை ; துறை-பரிசிற்றுறை ; இயன்மொழியும், அரசவாகையுமாம.

பிட்டங்கொற்றனைக் கருவூர்க் கந்தப்பிள்ளைசாத்தனார் பாடியது.

இ - ள்.—அருவி புலித்திழியும் வேய்பயிலற அகன்றவிடத்து மிளகு கொடிவளரும் மலைச்சாரலிடத்து மலர்ந்தகாந்தளினது கொழுவிய இழங்குபிழக்கிளறித் தவணிட்டுத்தோட்டகூடத் தறுகண்மையையுடைய கேழலுழுதபுழுதிக்கணே நல்லநாள்வந்த செவ்வியைப்பார்த்துக் குறவர் அகிலமுழாதே அதுவே உழவாக வித்திய பரியதோரைகயையுடைய சிறிய தினை முற்பட விளைந்த புதுவருவாயாகிய கதிரை நல்லநாளின்கணே புதி

துண்ணவேண்டி மரையாவைக்கறந்த நுரைகொண்ட இனியபாலை மானடிபுழுக்கப்பட்ட புலாலையாறும் பாலையினது நிணநோயாத வெளியசிறத்தினையுடைய பெரியபுறத்தைக்கழுவாதே உலைநீராகவார்த்து ஏற்றிச சந்தவிறகான் உலிக்கப்பட்ட சோற்றைக் கூதாளி கவின்பெற்ற மலைமல்லிகை நாறுமுற்றத்து வளவியகுலையையுடைய வாழையினது அகன்ற இலைக கண்ணே பலருடனேபகுத்துணணும் [illegible]பபடாத குதிரையென்னுமலைக்

குத்தலைவ, கூரியவேலையும் நறைக்கொடியின் நாராற்றொடுக்கப்பட்ட வேங்கைப்பூமாலையினையும் வடித்தலபயின்ற அம்பினையுமுடைய விலலாட்களுக்குத்தலைவ, கையான்வழங்கும் எளிய தொடியினையும் கடிய குதிரையையுமுடையகொற்ற, உலகத்தெலலையுள தமிழ்நாடுகேட்கப் பொய்யாத செவ்வியநா வருந்தும்படி வாழத்திப் பாடுவொன்றுசொலலுவர் பரிசிலர், நாடோறும் ; கொடாதவேந்தர் நாணக் கொடாது பரந்த நினது வசையில்லாத வரிசையபுகழை.—எ - று.

கிழவ, பெரும, கொற்ற, பரிசிலர் நின்புகழைப்புயோத்திப் பாடுபவென்ப; அதனலை, யானும் நினபாற் பரிசிலபெற்றுப் பாடுவேனாகவேணடுமெனப் பரிசிற்றுறைக்கேற்கக் கூறியதாக்குக.

[illegible]ராக்குதிரை , மலைகுவெளிபபடை. [illegible] - *
பச்சிலைக்கொடி.()

கஅ. தமிழகம்: பதிற். உ - ஆம் பத்தின்பதிகம்; சிலப். [illegible] : [illegible]
எ; மணி. கஎ : சுஉ.

கக. புறநா. [illegible] : கக - உ ; கசஅ : சு - எ.

* "பைங்கொடி - பசசிலைக்கொடி ; எலலாவற்றிலும்
பசுத்திருத்த
லின், பச்சிலை யென்றுபெயர் பெற்றது" (முருகு. ககo-த) என்பது இங்கே அறியற்பாலது.

(கசாசு) நம்படை செல்லுங் காலை யவர்படை
யெடுத்தெறி தானை முன்னரை யெனாஅ
வவர்படை வருஉங் காலை நம்படைக்
கூழை தாங்கிய வகல்யாற்றுக் குன்று
விலக்கு சிறையி னின்றனை யெனாஅ
வரிதாற் பெருமநின் செல்வ மென்றும்
பெரிதா லத்தையென் கடும்பின திடும்பை
யின்னே விடுமதி பரிசில் வென்வே
லிளம்பல் கோசர் விளங்குபடை கன்மா
றிகலின ரெறிந்த வகலிலை முருக்கின்
பெருமரக் கம்பம் போலப்
பொருநர்க் குலையாநின் வலன்வா ழியவே.

திணை - அது ; துறை - பரிசில்கடாநிலை.

அவனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியது.

இ - ள்.—நம்முடையபடை பகைவர்மேற் போம் காலத்து அவரது

படையாகிய வேல்முதலாயவற்றை ஓக்கியெறியும் படைக்கு முன்னேநிற்
பயாகலானும், அவர்படை அடர்த்துவருங்காலத்து நம்படையினது அணி

யத்தாங்கவேண்டி அகன்ற ஆற்றின்கட் குறைகேதடுத்துக்கிடக்கின்ற

௪ - ௫. புறநா. ௨௮௭, ௩௯௦; "வருபுனற் கற்சிறை கடுப்ப விடைய றுத், தொன்று போரெதிர் செருப்புக மறவர்" (மதுரை. ௭௨௫ - ௬); "வருவிசைப் புனலைக் கற்சிறை போல, வொருவன் றாங்கிய பெருமை யானும்" (தொல். புறத்திணை. ௮); "பொருபடை யுட கற்சிறைபோன், ஞெருவன்றாங்கிய நிலையுரைத்தன்று" பு - வெ. ௩ : ௧௯.

௮. புறநா. ௧௧௬ : ௨௪.

௬ - ௮. புறநா. ௧௨௬ : ௬ - ௧௫.

௯. கோசர் - ஒருவகைவீரர் ; "நாலூர்க் கோசர் நன்மொழி", "ஒன்று மொழிக்கோசர்" (குறுந். ௧௫, ௭௩); "மெய்ம்மலி பெரும்பூட் செம்மற்கோ சர்", "வடுவுடை முகத்தர், கடுங்கட் கோசர்", "காடபுக்க நிறுத்த பல் வேற் கோசர்", "ஒன்றுமொழிக் கோசர்", "வாய்மொழி நிலைஇய சேண் விளங்கு நல்லிசை, வளங்கெழு கோசர்", "பல்லிளங்கோசர்", "புனைதேர்க் கோசர்", "ஊர்முது கோசர்" (அகநா. ௧௫, ௯௦, ௧௧௩, ௧௯௬, ௨௦௫, ௨௧௬, ௨௫௧, ௨௬௨); "அனவயகம் விளங்க, நான்மொழிக் கோசர்", "கடந் தடு வாய்வா ளிளம்பல கோசர்" (மதுரை. ௫௦௮-௯, ௭௭௩); "கொங்கிளங் கோசர் - குறும்புசெலுத்துவார் சிலவீரர்" (சிலப். உரைபெற. ௨ : அரும் பத) என்பவை இங்கே அறியற்பாலன ; புறநா. ௨௮௩, ௩௯௬ - பார்க்க.

௯ - ௧௧. புறநா. ௪ : ௬ அடிக்குறிப்பு ; சீவக : ௬௬௫.

மலையையொப்ப அதனைத்தடுத்துநின்றுயாதலானும் பெரும; நின்னைக்
காணுங்காலம் பெறுதலரிது, என்றாலும்; எனதுசுற்றத்தினது இடும்பை பெரிதாதலால் நீ இப்பொழுதே எனக்குப் பரிசில்தந்துவிடுவாயாக; வென்றி வேலையுடைய இளைய பலகோசர் விளக்கிய படைக்கலங்கற்பார் மாறுபட்டனராயெறிந்த அகன்ற இலையையுடைய முருக்காகிய பெரியமரத்தாற்செய்யப்பட்ட தூணமாகிய இலக்கைப்போலப் பொருவார்க்குத்தொலையாத நினது வென்றிவாழ்வதாக.—எ - று.

'எஞ்' என்பன, எனவினையெச்சசொல்.

'எளிதாலத்தை' என்று பாடமோதுவாருமுளர்.
(௧௬௯)

---

(௧௭௦.) மரைபிரித் துண்ட நெல்லி வேலிப்
பாலுடை முன்றி லங்குடிச் சீறூ
ரெல்லடிப் படுத்த கல்லாக் காட்சி
வில்லுழு துண்மார் நாப்ப ணொல்லென
விழிபிறப் பாளன் கருங்கை சிவப்ப
வலிதுரந்து சிலைக்கும் வன்கட் கடுந்துடி
புலிதுஞ்சு நெடுவரைக் குடிஞையோ டிரட்டு
மலைகெழு நாடன் கூர்வேற் பிட்டற்
குறுக லோம்புமின் றெவ்வி ரவனே
சிறுகண் யானை வெண்கோடு பயந்த

க. மரை-மரையா; ஒருவகைவிலங்கு; "மரையாமாலகவர" கலி. ௬.

௧ - ௨. நெல்லிக்காயை மரையா உண்ணும்; "நெல்லி, மரையின
மாரு முன்றிற், புலவேய் குரமபை கல்லோ ரூரே", "புரிமட மரையான் க(
கரை நல்லேறு,தீம்புளி நெல்லி மாந்தி" (குறுந். ௨௩௫,௩௧௭); "புல்லிலை
பரரரை நெல்லி யம்புளித் திர ாகாய், கான மடமரைக் கணநிரை கவரும்'
"பளிங்கி னன்ன தோற்றப், பலகோ ணெல்லிப் பைங்கா யருந்தி, மெலி
கவுள மடமரை யோர்க்கும்" அகநா. ௬௯, ௩௯௯.

௪. புறநா. ௩௩௧: ௨; "வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்'
"வானம் வேண்டா வில்லே ருழவர்" (அகநா. ௩௫, ௧௧௩); "வில்லே ரு
வர் பகை கொளினும்" குறள், ௮௭௨.

௬ - ௭. புறநா. ௩௭0 : ௬; "தடிக்குடிரைக் குடிப்பாக்கத்த
(பொருந. ௨௪0); "ஆகுளி கடுப்பக், குடிரை யிரட்டு நெடுமலை" மலைபடு
௧௪0 - ௪௧.

௮. பிட்டன் : புறநா. ௧௭௨ : ௮; அகநா. ௭௭, ௧௪௩.

௧0 - ௧௧. யானைக்கோடு முத்தம் பயத்தல்: புறநா. ௧௬௧ : ௧௬ - ௭
"முத்துடை மருப்பின் மழகளிறு பிளிற" (பதிற். ௩௨); "பெருங்களிற்

## புறநானூறு மூலமும் உரையும்.

௨௭௩

வெளிறிகழ் முத்தம் விறலியர்க் கீத்து
நார்பிழிக் கொண்ட வெங்கட் டேறல்

கஉ. புறநா. உஎஉ: ௩; "நாரரி நறவு படுநர்த் தந்தைக்கு", "பன் மீன் கொள்பவர் முகந்த வெப்பி, நாரரி நறவின் மகிழ்கொடைக் கூட்டும்" அகநா. உகசு, உசுஅ.

கரு. பண்ணமைகலயாழ்: புறநா. கருச: கக.

கஉ - ரு. புறநா. கஎ0: க0 - கக.

கஎ. உலைக்கல்: குறுந். கஉ.

கச - எ. புறநா. க0சு: கக - அ; கஎஅ : சு - கக.

* புறப்பொருள்வெண்பாமாலை, வாகைப்படலம், உரு.

† புறநா. உஉச: க - ச.





யுடைய கொல்லன் விசைத்தடிக்கப்பட்ட கூடத்தோடேயெதிர்ந்து மாறுபடும் உலையிடத்து அடைகல்போலும் வலிய ஆண்மையையுடையன்.—எ - று.

பிட்டன் நசைவர்க்கு மென்மையல்லது பகைவர்க்குக் கல்லன்ன வல்லாளனாதலால், தெவ்விர், அவனைக் குறுகலோம்புமினெனக் கூட்டுக.

வலிதுரந்தென்பதற்கு மாற்றார்வலியைக்கெடுத்தெனினுமமையும்.

கார்பிழிக்கொண்டவென்பதற்குக் கோதைப்பிழிந்துகொண்டவெனினு மமையும். (கஎ0)

(கஎக.) இன்று செலினுந் தருமே சிறுவரை
நின்று செலினுந் தருமே பின்னு
முன்னே தந்தனெ னென்னாது துன்னி
வைகலுஞ் செலினும் பொய்யல னாகி
யாம்வேண்டி யாங்கெம் வறுங்கல நிறைப்போன்
றான்வேண்டி யாங்குத் தன்னிறை யுவப்ப
வருந்தொழின் முடியரோ திருந்துவேற் கொற்ற
னினமலி கதச்சேக் களனொடு வேண்டினுங்
களமலி நெல்லின் குப்பை வேண்டினு
மருங்கலங் களிற்றொடு வேண்டினும் பெருந்தகை
பிறர்க்கு மன்ன வறத்தகை யன்னே
யன்ன னாகலி னெந்தை யுள்ளடி
முள்ளு நோவ வுறற்க தில்ல
வீவோ ரரியவிவ் வுலகத்து
வாழ்வோர் வாழவவன் றாள்வா ழியவே.[௭]

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

அவனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனூர் பாடியது.

இ - ள்.—இன்று போகியும் தருவன் ; சில்நாட் கழித்துப்போகினும் தருவன் ; பின்னையும் முன்னே தந்தேனென்னாது பயின்று நாடோறும்

---

க - ௫. புறநா. ௧௪௨ : ௫.

க - ௭. புறநா. ௪௨ : க ; ௧௦௧ : க - ௮ ; ௧௮௦ : க - ௭ ;

பிறர்க்குமென்பது, எச்சம். இவ, விளைவிக்கண்வந்தது.

இருந்தவேத்கோறலர், பெருந்தலக, சேக களனெடுவேண்டினும், நெல்லின் குப்பைவேண்டினும், அருங்கலம் களிறொடுவேண்டினும் நமக்கேயன்றிப் பிறர்க்கும் அத்தன்மைய அறஞ்செய்யுந் தகுதியையுடையன்; யாம் வேண்டியாங்கு எம் வறுங்கலம் நிறைப்போன்; தான்வேண்டியாக்குத் தன் இறையுவப்ப அருந்தொழில்முடிப்பானாகவேண்டுவது; எந்தை உள்ளாடி முயனாளும் நோவவுறுத்க ; வாழ்வோர் வாழ அவன் தாள வாழியவெனக் கூட்டுக.

'வாழ்வோர்வாழவு' என்றேறி, வாழ்வோர்வாழும் வாழ்வெல்லாம் அவன் தாள்வாழ்கவென்றுய ரபயினுமனமயும்.

தானை முயற்சியெனினுமமையும.

(௧எக)

---

(௧எ௨.) ஏற்றுக வுலையே யாக்குக சோறே
கள்ளுங் குறைபட லோம்புக வொள்ளிழைப்
பாடுவல் விறலியர் கோதையும் புனைக
வன்னவை பிறவுஞ் செய்க வென்னதூஉம்
௫ பரியல் வேண்டா வருபத நாடி
யைவனங் காவலர் பெய்தீ நந்தி
ஞெலிதிகழ் திருந்துமணி நளியிரு ளகற்றும்
வன்புல நாடன் வயமான் பிட்ட

உ - ரு. புறநா. ௧௧; ௧௧ - ௫.

எ. மணி இருளைப்போக்குமென்பதை, "இருள்பருகுமணி"
கசுக) என்பதன் உரையாலுமுணர்க.
(சீவக.

அ - கo. பிட்டன் - சேரனுடைய வீரன்; புறநா. கஎo : அ; "வானவன் மறவன் வணங்குவிற் றடக்கை, யானா நறவின் வண்மகிழ்ப் பிட்டன்", "வானவன் மறவ, னசையின் வாழ்நர்க்கு நன்கலஞ் சுரக்கும், பொய்யா வாய்வாட் புனைகழற் பிட்டன்" அகநா. எஎ, கசங.



ஞாமர் கடக்கும் வேலு மவனிறை
மாவள் ளீகைக் கோதையு
மாறுகொண் மன்னரும் வாழியர் நெடிதே.

திணையும் துறையும் அவை.

அவனை வடமவண்ணக்கன் தாமோதரனார் பாடியது.

இ - ள்,—உலையை ஏற்றுக; சோற்றை ஆக்குக; மதுவையுங்குறைய உண்டாக்குக; விளங்கிய அணிகலத்தையுடைய பாடுதலவல்லவிறலியர், மாலையும் சூடுக; அத்தன்மையனமறமும் செய்க; சிறிதும் இரங்குதல் வேண்டா, மேல வரக்கடவ உலவை ஆராய்ந்து ஓவாதெல்லைக்காப்பார் காவற்கிடப்பட்ட தீ ஆவ்விடத்துக்கெட்டகாலத்து ஒளிவிளங்கும் திருந்தினமாணிக்கம் செறிந்த இருளைத்துரக்கும் வலியநிலமாகிய மலைநாட்டையுடையவன்,

வலியகுதிரையையுடையபிட்டன் ; பொருதற்கரியபோரை வெல்லும் வேலும் அவன் றம்பிஞகிய பெரிய வள்ளியகொடையையுடைய கோதையும் அவனேடுபகைத்தவேந்தரும் நெடிதுவாழ்க.—எ - று.

பிட்டன்வேலும் கோதையும் மாறுகொள்மன்னரும் நெடிதுவாழியர்; அதுவேவேண்டுவது ; மேலவரும் உணவைத்தேடி என்னாளும் பரியல் வேண்டா ; ஆதலால், ஏற்றுக ; ஆக்குக ; ஓம்புக ; கோதையும்புனைக ; பிறவும்செய்கவெனமாறிக் கூட்டுக.

மாறுகொண்மன்னரும் வாழியவென்றகருத்து: இவன்வென்றுதிறை கொள்வது அவருளராயினென்பதாம்.

விறலியரென்பது, ஈண்டு முன்னிலைக்கண்வந்தது.

வேண்டாவென்பது, வினைமேனின்றதோர்முற்றுச்சொல்.

அன்னவைபிறவுமென்பது, பூசுவன உடுப்பன பூண்பன முதலாயினவற்றை.

வருவதூஉமென்றேற, ஓவலத்தகுவரும் இடையறாதேயென்று அதனைக்காவலென்பதனுன்முடிப்பினுமமையும். (கஎ௨)

---

௯. " கைவளை செறிய வலங்காமத் தமர்கடந் துயர்த்த வேல " அகநா. கஎ௫.

௧0. " வான நாண வரையாது சென்றோர்க், கானு நீயுங் கவிகைவண் மைக், கடுமான்கோதை" புறநா. ௫௪ : ௬ - அ.

---

(கஎ௩.) யான்வாழு நாளும் பண்ணன் வாழிய
பாணர் காண்கிவன் கடும்பின திடும்பை

க. பன்னன்: புறநா. ௭௦: ௧௩; ௧அ௧: ௬; ௩அஅ; வாழ்த்துதற் பொருண்மைக்கண்வந்த யகரவீற்று வியங்கோள்வினைமுற்றிற்குமேற்கோள்; நன் - மயிலை. சூ. ௨௪௭; இ-வி. சூ. ௨௩௬ - உரை.



யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன
வூணொலி யரவந் தானுங் கேட்கும்
பொய்யா வெழிலி பெய்விட நோக்கி
முட்டை கொண்டு வற்புலஞ் சேருஞ்
சிறுநுண் ணெறும்பின் சில்லொழுக் கேய்ப்பச்
சோறுடைக் கையர் [1] வீறுவீ றியங்கு
மிருங்கிளைச் சிறாஅர்க் காண்டுங் கண்டு
மற்று மற்றும் வினவுதுந் தெற்றெனப்
பசிப்பிணி மருத்துவ னில்லம்
மணித்தோ சேய்த்தோ கூறுமி னெமக்கே.

திணையும் துறையும் அவை.

சிறுகுடிகிழான்பண்ணனைச் சோழன்குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் பாடியது.

இ - ள்.—யான் உயிர்வாழுநாளையும்பெற்றுப் பண்ணன்வாழ்வானாக; பாணரே, காண்பீராக, இந்தப் பரிசிலரது சுற்றத்தின்வருமையை. புது வருவாயையுடைத்தாகிய பழுத்தமரத்தின்கண்னே புள்ளொலித்தாற்

போன்ற ஊறுணுண்டாகிய ஆரவாரத்தானுங்கேட்கும்; காலந்தப்பாத மழை பெய்யுங்காலத்தைப்பார்த்துத் தம்முட்டைகளைக்கொண்டு மேட்டு நிலத்தினையடையும் மிகச்சிறிய எறும்பினது சீலவாகிய ஒழுக்கத்தையொப்பச் சோறுடைக்கையினராய் வேறுவேறுபோகின்ற பெரியசுற்றத்தோடுங் கூடியபிள்ளைகளைக்காண்பேம்; கண்டுவைத்தும் எம்பசிவருத்தத்தானும் வழிவரல்வருத்தத்தானும் பின்னாரும்பின்னாரும் விதுப்புற்றுக் கேளாநின்றேம்; தெளிய, பசிநோய்தீர்க்குமருத்துவனது மனை அணித்தோ? தூரித்தோ? எங்களுக்கு நீர்சொல்லுமின்.—எ - று.

௩ - ௪. புறநா. ௭௭ : ௧ ; ௩௭௦: ௧௧.

௫ - ௭. கருத்து: "இனித் தெளிவு எ - து, எறும்பு முட்டைகொண்டு தெற்றியேறின் மழை பெய்தது மழைபெய்யுமென்பது" (தொல். வினை. ௫. ௪௫ - இளம்); "எறும்பு முட்டைகொண்டு தெற்றியேறின மழைபெய்தல் நூலாற்றெளிந்தான் அவை முட்டைகொண்டு தெற்றியேறியவழி, மழை பெய்யாமுன்னும் மழை பெய்தது, மழை பெய்யும் என்னும்; ஆண்டு எதிர்காலத்திற்குரிய பொருள் இறந்தகாலத்தானும் நிகழ்காலத்தானும் தோன்றியவாறு கண்டுகொள்க", "எறும்பு முட்டைகொண்டு திட்டையேறியது கண்டுழி மழை பெய்வதாமென்றது மழைபெய்தது பெய்கின்றதெனக்கூறுதல் தெளிவு" ௳ ௳ ௳ ௪௮ - சே; கல்: ந; நன் - மயிலை. ௫. ௩௮௩; நன் - வி.௫. ௩௮௪.

௧௧. "பசிப்பிணி யென்னும் பாவியது தீர்த்தோர், இசைச்சொ லளவைக் கென்னா நிமிராது", "பசிப்பிணிமருந்து" மணி. ௧௧: ௮௦-௮௧; ௨௮: ௨௭.

௧௨. வினைக்குறிப்புச்சொல், பிறிதின்கிழமையாகியஉடைமைப்பொருள் பட நிற்றற்கு மேற்கோள்' தொல். வினை. ௨௰ - சே; கல்; ந.

(பி - ம்.)—1 'வீற்றுவீற்று'

காண்க இவனென்பது, காண்இவனெனக் கடைக்குறைத்தின்றது. தானென்பது ,அசைநிலை.

இது, பரிசில்பெறப்போகின்றான் வருகின்றவரைக்கண்டுவினவுவான் பண்ணனது இயல்புகூறிவாழ்த்தியவாறு.

இனி, பரிசிலன்றான், 'அரவமுங்கேட்கும் ; சிறாரைக்காண்டும் ; கண்டும் மற்றும் மற்றும்வினவுதும் ; நீர் எமக்குப் பசிப்பிணிமருத்துவனில்லம் அணித்தோ சேய்த்தோ கூறுமின்' என்றுகின்றான் ; இவனாகடும்பினது இடும்பையைப் பாணர்காண்க ; இங்ஙனம் எம்போலும் இரவலர்வறுமையைத்தீர்க்கின்றபண்ணன்வாழியவென்று பெற்றுவருகின்றான் பககட்பாணரைநோக்கிக் பெறப்போகின்றானைக்கண்டு கூறியதாக உரைப்பினுமமையும். இதற்கு என்றுகின்றுமெனா ஒருசொல வருவித்துரைக்கபபட்டது.

அன்றியும், பரிசிற்குசசெலகின்றான், பசிப்பிணிமருத்துவனில்லம் அணித்தோசேய்த்தோவென்று பலகாலும்வினவ, அதனை உட்கொண்டு, ஊழொலியரவமுங்கேட்கும் ; இருக்கினாச்சிறார்க்காண்டும் ; கணடும் மற்றும் மற்றும்வினவுதுமெனச் சாதியொருமையாலுளப்படுத்திகூறிப் பின்பு இங்ஙனம் காணவும் · கேட்கவும்படுவது நமக்கு ஏற அணித்தோ சேய்த் தோகூறுமின் எமக்கென்று அவனரநோக்கிக்கூறி, பின்பு இங்ஙனம் என் வறுமையும்தீர்த்து இவன்வறுமையுந்தீர்க்கவிருக்கின்றபண்ணன் யான் வாழுநாளும்பெற்றுவாழவாளுகவெனப் பரிசிலபெற்றுவருகின்றான் தன்பக்கப்பாணரைநோககிக் கூறியவாறுகவுரைபபாருமுளர்.

இனி, செலகின்றான்பக்கப்பாணருள் ஒருவன் ஆண்டுநிற்கின்ற பாணன் பக்கப்பாணனரநோக்கிக் கூறியதாகவுரைப்பாருமுளர்.

ஈண்டும் இவனென்றது, பரிசிலனை.

'மற்றுமற்றும் வினாவும்தெற்றெனவும்' என்று பாடமோதுவாருமுளர். (கஎரு)

---

(கஎச.) அணங்குடை யவுணர் கணங்கொண் டொளித்தெனச்
சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணா
திருள்கண் கெடுத்த பருதி ஞாலத்
திடும்பைகொள் பருவர றீரக் கடுந்திறல்
[1] லஞ்சன வுருவன் றந்து நிறுத்தாங்
கரசிழந் திருந்த வல்லற் காலை
முரசெழுந் திரங்கு முற்றமொடு கரைபொரு

சு. "அரசுகெடுத் தலம்வரு மல்லற் காலை" சிலப். ச: அ; உஎ: கூஉ.

எ. "வள்வார்முரசங் கறங்குமணி முன்றில் வேந்தன்" நைடதம், அன்னத்தைத்தூது. சுச.

(பி - ம்.)—[1] 'அஞ்சனவண்ணன்'

திரங்குபுன னெரிதரு மிகுபெருங் காவிரி
மல்ல னன்னாட் டல்ல தீரப்
பொய்யா நாவிற் கபிலன் பாடிய
மையணி நெடுவரை யாங்க ணொய்யெனச்
செருப்புகன் மறவர் செல்புறங் கண்ட
வெள்ளறு சிறப்பின் முள்ளூர் மீமிசை
யருவழி யிருந்த பெருவிறல் வளவன்
மதிமருள் வெண்குடை காட்டி யக்குடை
புதுமையி னிறுத்த புகழ்மேம் படுந
விடர்ப்புலி பொறித்த கோட்டைச் சுடர்ப்பூட்
சுரும்பார் கண்ணிப் பெரும்பெயர் நும்மு
னீண்டுச்செய் நல்வினை யாண்டுச்சென் றுணீஇய
ருயர்ந்தோ ருலகத்துப் பெயர்ந்தன னாகலி
னாறுகொள் மருங்கின் மாதிரந் துழவுங்
கவலை நெஞ்சத் தவலந் தீர
நீதோன் றினையே நிரைத்தா ரண்ணல்
கல்கண் பொடியக் கானம் வெம்ப

க0. "பொய்யாச் செந்நா" (புறநா. கசுஅ: கக);
"மரம்புரிகொள்கை வயங்குசெந் நாவி, னுவலை கூராக் கவலையி
நலவிசைக் கபிலன்" பதிற். அரு.
னெஞ்சி, னனவிற் பாடிய

கக. "மைபடுமாலவரை" (நற். ௩௭௩ .) "மைபடுமாமலை" அகநா. கடுரு.

கஉ. செருப்புகன் மறவர் : புறநா. ௩ க: க - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க ; "செருவேட்டுச் சிலைக்குஞ் செங்கணாடவர்" (அகநா. "ஒன்னு ரோட்டிய செருப்புகல் மறவர்" மதுரை. எஉசு. கருஎ) ;

கO - கரு. முன்னூர்மலை யலையவுடையதென்பதும் அதனைக் கபிலர் பாடியதும் இந்நூல் கஉரு - ஆம் பாடல் முதலியவற்றாலும் விளக்கும்.

கரு. புறநா. ௩ : க ; "மதிமருள் வெண்குடை மன்னவன்", "மதிமருள் வெண்குடை மன்னை" (மணி. ச : உஎ ; உஉ : கசுச); "மலைமிசைத் தோன்று மதியம்போல யானைத், தலைமிசைக் கொண்ட குடையர்" நாலடி. உக.

கசு - உO. "ஈண்டுச் செய்வினை யாண்டுநுகர்ந் திருத்தல், காண்டகு சிறப்பினுங் கடவுள ரலலது" (மணி. கச : ௩அ - க) ; "புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க மென்னுமீ தருமறைப் பொருளே" கம்ப. நகர. ரு.

உO - உரு. "சுடர்வழக் கற்றுத் தடுமாறு காலையோ, ரிளவள ஞாயிறு தோன்றிய தென்ன, நீயோ தோன்றினை" மணி. கO: கO - கஉ.

மல்குநீர் வரைப்பிற் கயம்பல வுணங்கக்
கோடை நீடிய பைதறு காலை
யிருநில நெளிய வீண்டி
யுருமுரறு கருவிய மழைபொழிந் தாங்கே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

மலையமான் சோழியவேனாதி [1] திருக்கண்ணனை மாறோக்கத்து நப்பசலையார்பாடியது.

இ - ள்.—பிறரைவருத்தும் அச்சத்தினையுடைய அசுரர் திரள் கொண்டுபோய் மறைத்தார்களாக, சேய்மைக்கண்ணே விளங்குகின்ற தலைமையினையுடைய ஞாயிற்றைக் காணாமையால இருளானது உலகத்தாரது கண்ணைமறைத்த வட்டமாகிய உலகத்தினது நோய்கொண்ட துன்பம் நீங்கும்பரிசு மிக்கவலியையுடைய அஞ்சனம்போலும் நிறத்தையுடைய திருமேனியையுடையகண்ணன் அந்தஞாயிற்றைக்கொண்டுவந்து இவ்வுலகத்தின்கண் அந்தகாரநீங்கும்பரிசு ஆகாயத்தின்கண்ணே நிறுத்தினாற்போலப் பகைவேந்தரொடுபொருது உடைந்துபோதலால் தம் வேந்தனை இழந்தழலும் இன்னாமையையுடைய பொழுதின்கண் முரசு இரங்கிமுழங்கும் செண்டுவெளியையுடைய கோயிலுடனே கரையைப்பொருது முழங்கும் நீராலே உடைந்து ஆழ்ந்தோடுகின்ற மிக்க பெரிய காவிரியையுடைய வளவிய நலநாட்டினது துயரங்கெடப் பொய்யாதநாவினையுடைய கபிலனாற்பாடப்பட்ட முகிலணிந்த பெரிய மலையிடத்து விரையப் போரைவிரும்புமறவர் ஓடுபுறங்கண்ட இகழ்ச்சியற்ற தலைமையினையுடைய முள்ளூர்மலையுச்சியின்கண் பிறரால்காண்டற்கு அரிய இடத்தின்கணிருந்த பெரியவென்றியையுடைய சோழனது திங்கள்போலும் வெண்குடையைத் தோற்றுவித்து அக்குடையைப் புதுமையுண்டாக நிலைபெறுவித்த புகழ் மேம்படுந, வரைமுழைஞ்சில்வாழும் புலியை

பெழுதப்பட்ட இலாஞ்சனையையுடைய கோட்டையையும் விளங்குதலையுடைய அணிகலத்தினையும் வண்டார்க்கப்பட்ட கண்ணியையும் பெரிய புகழினையுமுடைய நம்முமன்றாகிய தந்தை இவ்வுலகத்துச் செய்யப்பட்ட நல்ல அறத்தின்பயனை ஆண்டாகிய தெய்வலோகத்துப்போய் நுகரவேண்டிப் போனதைலின், நல்ல நெறியைக்கொண்ற பக்கத்தினையுடைய திசையெங்குஞ் சூழ்வரும் கவலையுற்றமனத்தின்கண் வருத்தங்கெட நீவாதுதோன்றினாய், இணர்த்தமாலையையுடையதலைவ, மலையிடம்பொடியக் காடு தீமிக மிக்க நீரெல்லையையுடைய நீர்நிலைகள்பலவும் முளிய இவ்வாறு கோடை நீடப்பட்ட பசுமையற்றகாலத்துப் பெரியநிலக்குழியும்பரிசு திரண்டு உருமேறுமுழக்கும் மின்முதலாயினதொகுதியையுடைய மழை சொரிந்தாற் போல.—எ - று.

உ௫ - ௬.

"உருகெழு மண்டிலங், கயங்கண் வறப்பப் பாஅய் நன்னி லம், பயங்கெடத் திருகிய பைதறு காலை" அகநா. உ௬௩.

உ௪. புறநா. க௬௪ : ௭.

உ௩ - ௮. புறநா. க௬0: க - ௩.

(பி - ம்.)—1 'திருக்கிள்ளியை'

# புறநானூறு மூலமும் உரையும்.

உ௪க

முற்றமென்றது, அதனையுடையகோயிலை.

வெளிமுற்றமொடு வெண்குடை காட்டியென இயைப்பினுமமையும்.

கோட்டைவெளியாகிய சுடர்ப்பூணென்றுமாம்.

ஞாயிற்றை அஞ்சனவுருவன் தந்துநிறுத்தாங்கு முற்றமொடு காட்டு

அல்லல் தீர வளவன்வெண்குடைகாட்டி அக்குடைநிறுத்த புகழ்மேம்படுந, நிரைத்தாரண்ணல்; நம்முன் பெயர்த்தனனாகலின், நெஞ்சத்து அவலந்தீரப் பைதறுகாலை மழை பொழிந்தாங்கு நீதோன்றினை; ஆதலால், இவ்வுலகத்திற்குக் குறை என்னையெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

அவுணர் கணங்கொண்டொளித்தென ஞாயிறுகாணாத பருவரறீர அஞ்சனவுருவன் தந்துநிறுத்தாங்கென்பது, தேவர்களும் அசுரர்களும் பொருவழிப் பகலும் இராப்போல இயங்கித் தாம்போர்செய்தற்பொருட்டு அசுரர் ஞாயிற்றைக் கரந்தார்கள்; ஞாலம் அதனால் உள்ளபருவரறீரத் திருமால் அதைக்கொண்டுவந்துவிட்டதொருகதை.

'விடர்ப்புலிபொறித்தகோட்டை' என்றதனால், சோழனொடுதொடர்புபட்டு * அவனுக்குத் துப்பாதல் தோன்றி நின்றது.

'ஆறுகொண்மருங்கின்' என்றும் பாடமோதுவாருமுளர்.

(கஎச)

---

* "மூவரு ளொருவன் றுப்பா கியரென வேத்தினர் தரூஉங் கூழே" புறநா. கஉஉ: ரு - சு.

(கஎரு.) எந்தை வாழி யாத னுங்கவென்
னெஞ்சந் திறப்போர் நிற்காண் குவரே
நின்னியான் மறப்பின் மறக்குங் காலை
யென்னுயிர் யாக்கையிற் பிரியும் பொழுது
மென்னியான் மறப்பின் மறக்குவென் வென்வேல்
விண்பொரு நெடுங்குடைக் [1] கொடித்தேர் மோரியர்
திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த
வுலக விடைகழி யறைவாய் நிலைஇய
மலர்வாய் மண்டிலத் தன்ன நாளும்

பலர்புர வெதிர்ந்த வறத்துறை நின்னே.

௧. ஆதனுங்கன் : புறநா. ௩௮௯ : ௧௪.

௮. "உலக விடைகழி யொருங்குடன் னீங்கி" சிலப். ௧0 : ௨௭.

௯ - ௮. "விண்பொரு நெடுங்குடை யியறேர் மோரியர், பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த வறை", "வம்ப மோரியர், புனைதேர் நேமி யுருளிய குறைத்த, இலங்குவெள் ளருவிய வறை", "மோரியர், தென்றிசை மாதிர முன்னிய வரவிற்கு, விண்ணுற வோங்கிய பனியிருங் குன்றத், தொண்கதிர்த் திகிரி யுருளிய குறைத்த வறை" அகநா. ௬௯, ௨௫௧, ௨௮௧.

(பி - ம்.)—1 'கொடித்தேரோரியர்'





திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

ஆதனுங்கனைக் கள்ளில் ஆத்திரையனார் பாடியது.

இ - ள்.—என்னுடைய இறைவ, வாழ்வாயாக ; ஆதனுங்க, யான் ஒன்றைச்சொலவினைப்பின், நினது புகழல்லது சொலலாமையால், எனது நெஞ்சை வெளிப்படுத்திக் காணலுறுவோர் ஆங்குநின்னைக் காணுகிற்பர் ; நின்னையுடைய யான் நின்னைமறப்பின் மறக்குங்காலமாவது சொல்லக்கேட்பாயாக ; என்னுடைய உயிரானது என்னுடம்பைவிட்டு நீங்குங்காலத்தும் என்னை யான்மறக்குங்காலம் உண்டாயின் அப்பொழுதுமறப்பேனல்லது மறவேன். வென்றிவேலையுடைய விசும்பைப்பத்தேரும் நெடியகுடையினையும் கொடியணிந்த தேரினையுமுடைய நிலமுழுதுமாண்ட வேந்தரது திண்ணிய

ஆர்சூழ்ந்த சக்கரமியங்குதற்குக் குறைக்கப்பட்ட வெள்ளிமலைக்கு அப்பாலாகிய உலகத்திற்குக் கழியும் இடைகழியாகிய அற்றவாயின்கண் தேவர்களால் சிறத்தப்பட்டு இருபொழுதும்ஒருபெற்றியே நிலைபெற்று விளங்கும் பரந்த இடத்தையுடைய ஆதித்தமண்டலத்தையொப்ப நாள்தோறும் இரவு பகலென்னாமல் பலரையும்காத்தலை ஏற்றுக்கொண்டு ஒருபெற்றியே விளங்கிய அறத்துறையாகியநின்னை.—எ - று.

எந்தை, வாழி; ஆதனுங்கனே, மண்டிலத்தன்ன அறத்துறைநின்னை நின்னுடையேனாகியயான் மறப்பின் மறக்குங்காலமாவது என்யான்மறப்பின் மறக்குவென் ; ஆதலால, என்னெஞ்சைத்திறப்போர் நிற்காண்குவரெனக் கூட்டி வினைமுடிக்க.

**மோரியராவார்** - சக்கரவாளசக்கரவர்த்திகள்; விச்சாதரரும், நாகரு மென்ப.

'திகிரி திரிதரக்குறைந்த' என்றேதி,சச்காவாளத்திற்கு அப்பாற்பட்ட உலகத்து மோரியர் திகிரி ஊடறுத்துச்சேறலிற் குறைந்த பிளவுபட்ட வாயிற்கு அப்பாலாகிய உதயகிரிக்கண் நிலைபெற்ற றுரைப்பாருமுளர்.

ஆதித்தமண்டலமென்

(கஎரு)

---

(கஎசு.) ஓரை யாயத் தொண்டொடி மகளிர்
கேழ லுழுத விருஞ்சேறு கிளைப்பின்
யாமையின்| புலவு நாறு முட்டையைத்
தேனா ரும்பற் கிழங்கொடு பெறூஉ
ரு மிழுமென வொலிக்கும் புனலம் புதவிற்

7 பெருமா விலங்கைத் தலைவன் சீறியா

௧. "விளையா டாயமொ டோரை யாடாது" (நற். ௬௮); "ஓரை யாயங் கூற", "ஓரைமகளிர்" குறுந். ௪௮, ௱௪௪, ௪௦௧.

௩. ஆமைமுட்டை : "நிறைச்சூ லியாமை மறைத்தீன்று புதைத்த கோட்டுவட் டுருவின் புலவுநாறு முட்டை" அகநா. ௧௬௦.

௫. "புனலம் புதவின் மிழலை" புறநா. ௨௪ : ௧௯.

## புறநானூறு மூலமும் உரையும்.

௨௮௬

ழில்லோர் சொன்மலை நல்லியக் கோடனை
யுடையை வாழியெற் புணர்ந்த பாலே
பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீ
ரோரூ ருண்மையி னிகந்தோர் போலக்
காணாது கழிந்த வைகல் காணா
வழிநாட் கிரங்குமென் னெஞ்சமவன்
கழிமென் சாயல் காண்டொறு நினைந்தே.

திணையும் துறையும் அவை.

* ஓய்மான் நல்லியக்கோடனைப் புறத்திணை நன்னாகனார்பாடியது.

இ - ள்.—விளையாட்டுத்திரட்சிக்கண் ஒள்ளியவளையையுடைய மகளிர்

கேழற்பன்றியுழுத கரிடசேற்றைக்கிளறின், அதட் கணவே ஆமைமீனப் பட்ட புலாலுறும்முட்டையைத் தேனுறும் ஆம்பலினது கிழங்குடனே பெறும் இழுமென்னும் அனுகரணமுண்டாகமுழக்கும் நீர்வழக்கும்வாய்த் தலைகளையுடைய பெரிய மாவிலங்கையென்னும் ஊர்க்குத் தலைவன், சிறிய யாழையுடைய வறியோர்தொழுக்கும் புகழ்மாலைநடும் கலலியக்கோடனைத் துணையாக நீயுடையையாதலால், என்னைப் பொருந்தியவிதியே, நீ ஒரு

குறையுடையையலலை, வாழ்வாயாக; பாரியதுபறம்பின்கட் குளிர்ச்சியை யுடைய சுனையிடத்துத் தெளிந்தநீர் போய்த்தேடிக்கொள்ள வேண்டாமல் ஒருநின்கண்ணேயுண்டாதலின் அதனை யாம் வேண்டியபொழுது உணகின்றேமென்று மகிழ்ந்திருந்தாரையொப்ப அவனைக்காணுதொழிந்த நாட்களை எனக்கு நாட்களாய்க்கருதுவதல்லவென்று உட்கொண்டு அவனுடுதொடர்ந்த நட்பு இன்றேபோல இடையறாதுசெல்லவேண்டுமென்று பின்வரு

எ. "இல்லோர் செம்மல" சிலப். கரு : கo.

அ - எ. "நன்மா விலங்கை மன்னா ருள்ளும்,...பலலியக் கோடியர் புரவலன் பேரிசை, நலலியக் கோடனை", "செல்லிசை நிலைஇய பண்பி, னல்லி யக் கோடனை" சிறுபாண். கஉo - உ௧; உகஅ - க.

எ. "அறிந்தோர் சொன்மலை" புறநா. உ௬௮.

அ. "நல்லைமன் றம்ம பாலே" குறுந். உஉக.

க. மு. புறநா. ௯௭ : ௬; குறுந். கக௬ : ௬.

க - கo. "இனியே, பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர், தைஇத் திங்கட் டண்ணிய தரினும், வெய்ய வுவர்க்கு மென்றனிர்" குறுந். ககக.

கக - உ. செய்யாவெனனும் வாய்பாட்டுவினையெச்சம் வினைமுதலும்

இறந்தகாலமும் தழுவிவருதற்கு மேற்கோள்; நன்-மயிலை. சூ. ௩௪௩.

௧௩. சாயல் ஆண்பாலார்க்கும் கூறப்படுதல், "நீரினு மினிய சாயற் பாரிவேள்" (புறநா. ௧0௫) என்பதனாலும் அதன் குறிப்பாலும் உணரலாகும்.

* இவன், பத்துப்பாட்டிற் சிறுபாணாற்றுப்படைத்தலைவன்.

† "இன்றே போல்கநும் புணர்ச்சி" புறநா. ௫௮ : ௨௮.



காணேக்கு இரங்காநின்றது என்னுடையநெஞ்சம், அவனது மிக்க மெல்லிய சாயலைக் காணுந்தோறும்நினைந்து.—எ - று.

என்னெஞ்சம் அவன்சாயலைக்காணுந்தோறும் நினைந்து வழிகாட்டிரங்கும் ; என்னைப்புணர்ந்தவிதியே, நீ நல்லியக்கோடனை உடையையாதலால், நீ என்னகுறையையுடையை ; நீவாழவாயாகவெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

'இல்லோர்சொன்மலை' என்பதற்கு இல்லோர்சொல்லைச்சூடுமென்றும், 'எற்புணர்த்தபாலே' என்றேதி என்னை அவனோடுகூட்டியவிதியேயென்றும், 'வழிகாட்டிரங்கும்' என்பதற்கு இன்றும் இவனொடுதொடர்ந்தாட்பு இடைஅற்றுக்கழியுங்காலென்று இரங்குமென்றும் உரைப்பாருமுளர். (௧௭௬)

---

(௧௭௭.) ஒளிறுவாண் மன்ன ரொண்சுடர் நெடுநகர்
வெளிறுகண் போகப் பன்னாட் டிரங்கிப்
பாடிப் பெற்ற பொன்னணி யானை
தமரெனின் யாவரும் புகுப வமரெனிற்

திங்களு நுழையா வெந்திரப் படுபுழைக்
கண்மாறு நீட்ட நணிநணி யிருந்த
குறும்பல் குறும்பிற் றதும்ப வைகிப்
புளிச்சுவை வேட்ட செங்க ணாடவர்
தீம்புளிக் களாவொடு துடரி முனையின்
மட்டற னல்யாற் றெக்க ரேறிக்
கருங்கனி நாவ லிருந்துகொய் துண்ணும்
பெரும்பெய ராதி பிணங்கரிற் குடநாட்
டெயினர் தந்த வெய்ம்மா னெறிதசைப்

---

க. "ஒளிறுவாட் பொருப்பன்" பரி. உஉ: க.

உ. கண்வெளிறுபோதல்: "நீளிடை யத்த நோக்கி வாளற்றுக், கண்ணுங் காட்சி தௌவின" (நற். ௩௯௭); "என் கண்ணே, நோக்கி நோக்கி வாளிழந் தனவே" (குறுந். ௪௪); "கோலஞ் செய்பவர் கோல வெறிப்பின், மாலை வண்டின மாலைக்கண் கொண்டவே" (சீவக. உ௩௯௭); திரங்கல் - உலர்தல்; "நிழலிடம் பெறாது, மடமா னம்பிணை மறியொடு திரங்க" ஐங்குறு. ௩உக.

க - உ. "அகத்தாரே வாழ்வாரென் றண்ணாந்து நோக்கிப், புகத்தாம் பெறாஅர் புறங்கடை - பற்றி, மிகத்தாம் வருந்தி யிருப்பரே மேலைத், தவத் தாற் றவஞ்செய்யா தார்" நாலடி. ௩க.

௬. "நணிநணித் தாயினுஞ் சேஎய்ச் சேய்த்து" பரி. க௭: உ௫.

௭. "களவுட்புளி" (புறநா. ௩௫௨); "களவும் புளித்தன" அகநா. ௩௯௪.

க௦. புறநா. கக௫: ௩ - ௪.

கக. "காலி னுதிர்ந்தன கருங்கனி நாவல்" மலைபடு. க௩௫.

பைஞ்ஞிணம் பெருத்த பசுவெள் ளமலை
வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய
இரும்பனங் குடையின் மிசையும்
பெரும்புலர் வைகறைச் சீர்சா லாதே.

திணையும் துறையும் அவை.

மல்லிகிழான்காரியாதியை ஆவூர்மூலங்கிழார் பாடியது.

இ - ள்.—விளங்கிய வாளையுடைய வேந்தரது ஒளியமைந்த நகரினையுடைய உயர்ந்தகோயிற்கண் கண்ணொளிகெடப் பலகால் நின்றுலர்ந்து அவ்விடத்துப் பாடிப்பெற்ற பொற்பட்டமணிந்தயானை, தமக்குச்சிறந்தாராயின் எல்லாரும் எளிதிற்புகப்பெறுவர். போராயின், திங்களாலும் நுழையப்படாத பொதிகளைப்பொருந்திய இட்டியவாயிலையுடைத்தாய்க் கள்ளை ஒருவர்க்கொருவர் மாறுமாறுகட்டிட ஒன்றற்கொன்று அணித்தாயிருந்த குறிய பல அரணின்கண்ணேயிருந்து அக்கள்ளை நிரம்பவுண்டுகாலங்கழித்துப் பின்னைச் செருக்கினால் விடாய்மிக்குப் புளிச்சுவையை விரும்பிய மதத்தாற்சிவந்த கண்ணையுடைய ஆண்மக்கள் இனியபுளிப்பையுடைய களாப்பழத்துடனே துடரிப்பழத்தைத்தின்று வெறுப்பிற் களாமரத்துப் பைந்தேன் அரித்தொழுகுகின்ற நல்ல கான்யாற்றினது மணற்குன்றின்கண்ணேயேறிக் கரிய நாவற்பழத்தைப்பறித்து இருந்துண்ணும் பெரிய பெயரையுடையனாகிய ஆதியினது, பிணங்கிய அரில்பட்ட காட்டையுடைய குடநாட்டின்கண் மறவர் எய்து கொடுவரப்பட்ட எய்ப்பன்றியினது கடியப்பட்டதசையினது செவ்வியையுடைய நிணமிக்க புதியவெண்சோற்றுக்கட்டியை வருவார்க்கெல்லாம் ஒப்பக்கொடுத்துச்சொரியப் பெரியபனையோலையானியன்ற குடையிலே நுகரும் பெரியபுலர்ச்சியையுடைய விடியற்காலத்துச்சிறுக்கு நீகொல்

வாறு.—எ - று.

எந்திரப்புழையுடைய கணிகணியிருந்த குறும்பிற் கைமாறுநீட்டத் தசும்ப உண்டுவைகிய புளிச்சுவைவேட்ட ஆடவர் முனையின் எக்கரேறி யிருந்து நாவற்கனி கொய்து உண்ணுமெல்லையும்.

பாடிப்பெற்றயானைப் பன்னாள் இரங்கிய பெற்றமையிற் பனங்குடை யின் மிசையும் வைகறைச்சீர் சாலாதென்றார்.

வெளிறுகண்போகப்பாடியெனக்கூட்டி, வெண்மை இடத்தினின்றும் நீங்கப் பாடியெனினுமமையும்.

வைகறைச் சீர்சாலாதென்றது, அக்காலத்து அவன்செய்யுஞ்சிறப்பினை நோக்கி.

'கைமாறு நீட்டி கணிகணி யிருந்து, குறும்பல குறும்பிற் றசும்ப உண்டுவைகி' என்று பாடமோதுவாருமுளர். (கஎ)

---

கச. 'ஊன்சோற்றமலை' புறநா. ௩௩ :

கரு. “செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்” குறள், அசு.

கசு. பனங்குடை - பனையோலையாற்செய்யப்பட்ட உண்கலம்; (புறநா. ௨ரு௨); “வேணீருண்ட குடையோ ரன்னர்” (கலி. ௨௩); “ஆறுசெல் மாக்கள் சோறுபொதி வெண்குடை” அகநா. ௱௨௧.

(களஅ.) கந்துமுனிந் துயிர்க்கும் யானையொடு பணைமுனிந்து,
காலியற் புரவி யாலு மாங்கண்
மணன்மலி முற்றம் புக்க சான்றோ
ருண்ணா ராயினுந் தன்னொடு சூளுற்
றுண்மென விரக்கும் பெரும்பெயர்ச் சாத்த
னீண்டோ வின்சா யலனே வேண்டா
ரெறிபடை மயங்கிய வெருவரு ஞாட்பிற்
கள்ளுடைக் கலத்த ருள்ளூர்க் கூறிய
நெடுமொழி மறந்த சிறுபே ராள
ரஞ்சி நீங்குங் காலை
யேம மாகத் தான்முந் துறுமே.

திணை - வாகை ; துறை - வல்லாண்முல்லை.

பாண்டியன் கீரஞ்சாத்தனை அவர் பாடியது.

இ - ள்.—கம்பத்தை வெறுத்து நெட்டுயிர்ப்புக் கொள்ளும் யானையோடு பந்தியை வெறுத்துக் காற்றுப்போலும் இயல்புடைய குதிரை ஆலிக்கும் அவ்விடத்து இடமணல் மிக்க முற்றத்தின்கட் புக்க சான்றோர் அப்பொழுது உண்ணாராயினும் தன்னுடனே சார்த்திச் சூளுற்று உண்மினென்று அவரை வேண்டிக்கொள்ளும் பெரிய பெயரையுடைய சாத்தன் எம்போல்வாரிடத்து இனிய மென்மையையுடையன் ; இவ்வளவு மெல்லியனாயினும் போரின்கண் விரும்பாதாரெறியும் படைக்கலம் தம்மிற்கலந்த அஞ்சத்தக்க வீரபானத்தையுடைய கலத்தினராய் அதனையுடைய தம் ஊர்க்குள்ளே யிருந்து சொல்லிய வீரம் மேம்பட்ட வார்த்தையைப் போரின்கண் மறந்த சிறிய பேராண்மையை யுடையோர் போர்க்கு அஞ்சிப் புறங்

(கஎசு.) ஞால மீமிசை வள்ளியோர் மாய்ந்தென
வேலாது கவிழ்ந்தவென் னிரவன் மண்டை
மலர்ப்போர் யாரென வினவலின் மலைந்தோர்
விசிபிணி முரசமொடு மண்பல தந்த
திருவீழ் நுண்பூட் பாண்டியன் மறவன்
படைவேண்டுவழி வாளுதவியும்
வினைவேண்டுவழி யறிவுதவியும்
வேண்டுப வேண்டுப வேந்தன் றேஎத்
தசைநுகம் படாஅ வாண்டகை யுள்ளத்துத்
தோலா நல்லிசை நாலை கிழவன்
பருந்துபசி தீர்க்கு நற்போர்த்
திருந்துவே னாகற் கூறினர் பலரே.

திணையும் துறையும் அவை.

நாலைகிழவனாகனை [1] வடநெடுந்தத்தனார் பாடியது.

இ - ள்.—உலகத்தின்மேல வண்மையுடையோர் இறந்தாராகப் பிறர் பால ஏலாதுகவிழ்ந்த எனது இரத்தலையுடைய மண்டையை ஏற்கும்பரிசு இட்டுமலர்த்த வல்லார்யாரென்று கேட்டலில், தன்னொடு மாறுபட்டோரது வலித்துப் பிணிக்கப்பட்ட முரசத்தோடு மண்பலவற்றையும் கொண்ட திரு

மகள் விரும்பிய நுண்ணிய தொழில்பொருந்திய ஆபாணத்தையுடைய பாண்டியன்மாவன், அவனுக்குப் படைவேண்டியவிடத்து வாட்போரை யுதவியும் அரசியற்கேற்ற கருமசசூழ்ச்சிவேண்டியவிடத்து அமைச்சியலோடு நின்று அறிவு உதவியும் இவ்வாறு வேண்டுவன அவ்வரசனிடத்து உதவித் தான் பூ...ட நகம் ஒருபாற்கோடித் தளாமற் செலுத்தும் பகடுபோல

---

க - ௩. புறநா. ௧0௩ : ௩ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

௪ - ௫. "நிலநதந்த பேருதவிப், பொலந்தார் மார்பி னெடியோன்" (மதுரை. ௬0 - ௬௧); "நிலநதரு திருவிற் பாண்டியன்" தோல். சிறப்புப்.

௬ - அ. "முறைவேண்டுநர்க்குங் குறைவேண்டுநர்க்கும், வேண்டுப வேண்டினர்க் கருளி" பெரும்பாண். ௪௪௩ - ௪.
வேண்டுப

௧0. தோலா நல்லிசை: புறநா. ௫௬: ௧0.

(பி - ம்.)—1 'வடமநெடுநத்தனர்', 'வடமநெடுந்தச்சனர்'

## உஅஅ புறநானூறு மூலமும் உரையும்.

ஆண்மையினும் சூழ்ச்சியினுந் தளராத் ஆண்மைக்கூறுபாடு பொருந்தி ஊக்கத்தினையும் தோலாத நல்ல புகழையுமுடைய நாலைகிழவன், பருநினது பசிதீர்க்கும் நல்ல போரைச் செய்யும் திருந்திய வேலையுடைய நாளைப் பலரும் சொன்னர்.—எ - று.

பருந்துபசிதீர்க்கும் வேலைவினையும்.

(௧எ௪

(கஅ௦.) இரப்பது கொடுக்குஞ் செல்வமு மிலனே
இல்லென மறுக்குஞ் சிறுமையு மிலனே
இறையுறு விழுமந் தாங்கி யமரகத்
திரும்புசுவைக் கொண்ட விழுப்புண் ணோய்தீர்ந்து
மருந்துகொண் மரத்தின் வாள்வடு மயங்கி
வடுவின்று வடிந்த யாக்கையன் கொடையெதிர்ந்
[1] தீர்ந்தை யோனே பாண்பசிப் பகைஞ
னின்மை தீர வேண்டி னெம்மொடு
நீயும் வம்மோ முதுவா யிரவல
யாந்தன் னிரக்குங் காலைத் தானெம்
முண்ணா மருங்கு காட்டித் தன்னூர்க்

---

௨. புறநா. ௨௦௪: ௨; "இல்லென் றிரந்தோர்க்கொன் றீயாமை யிழிவு" (கலி. ௨); "உள்ள, திரப்போ னின்மை கண்டுங், கரப்போன் சிறுமை யானுறு கவ்வே" தகடூர். "கலிமானோயே" என்னும் பாடல்.

௪. "இரும்புமேய்ந்த தொழிற்ற மிச்சில வரைமார்பன்", "இரும்புண்டு மிகுத்த மார்பு", "இரும்பெச்சிற் படுத்தமார்பர்" சீவக. ௧எ௬௦, ௨௨௪௧, ௨௩௫௩.

௫. "மரஞ்சா மருந்துங் கொள்ளார் மாந்தர்" (நற். ௨௨௬) ; "
ம ர

முதல் சாய மருதுகொண டாக்கு" (பெருங். க. ௩ ௩; கஅ௮); "பால கொண்ட எத்தியெமவே யுடல வடுப்பட்ட வெமர்" (வேங்கைக்கோவை, ௬௯); தொல். உவம. ௩. உ௦. பேர். மேற்.

௫ - ள. "கொடுஞ்சமரிற் படட வடுத்தனைத்த கல்லபிராமம்" தனிப் பாடல.

எ. புறநா. ௩௭௩ : ௧௧; " ஈர்ந்தையோனே.... ..பகைவனென்புழி,

ஈர்ந்தையோனென்னுமுற்றிற்கு முடிபாகிய பகைவனென்னும் பெயரை இடையினின்றசொல் விசேடித்துநின்றது" தொல். எச்ச. சூ. ௫௯ - ந.

௯. முதுவாயிரவல: புறநா. ௪௮: எ - ஆம் அடி க்குறிப்பைப்பார்க்க,

(பி - ம்.)—1 'ஈரந்தையோன்', 'ஈந்தையோன்'.

# புறநானூறு மூலமும் உரையும்.

உ௮௯

*கருங்கைக் கொல்லனை யிரக்குந்*
*திருந்திலை நெடுவேல் வடித்திசி னெனவே.**

திணையும் துறையும் அவை; துறை - பாணாற்றுப்படையுமாம்.

1 ஈர்ந்தூர்கிழான் தோயன்மாறனைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் பாடியது.

இ - ள்.—நாடோறும் தொடர்ந்துகொடுக்கும் செல்வமுமுடையானல் லன் ; இன்மையால் வறியராயினும் இரந்தோர்க்கு இல்லையெனச்சொல்லி மறுக்கும் புன்மையுமுடையனல்லன் ; தன் அரசக்குவந்தற்ற போரா

னமைந்த இடும்பைகளைத் தான் பொறுத்து அந்தப்போரின்கட் படைக்கலங்கள் சுவைக்கொண்ட சிறந்தபுண்ணுகியநோய்தீர்ந்து, மருந்துவாங்கிக்கொள்ளப் பட்டமரம்போல வாளுற்ற வடு ஒன்றோடொன்று மயிரவி ஆண்மைக்குறை பாடின்மையின் வசையின்றி அழகுபெற்ற உடம்பையுடையனாய் வண்மையை ஏற்றுக்கொண்டு ஈர்ந்தையென்னுமூரின்கண்ணேயிருந்தான், பாணரதுபசிக் குப்பகைவனாயவன் ; நினது வறுமைநீங்கவேண்டுவையாயின் எம்முடனே

நீயும் வாராய் முதியவரையையுடைய இரவல, யாம் தன்னையிரக்கும்பொழுது தான் எம்முடைய உண்ணுதமருங்கினைக்காட்டித் தன்னுடைய ஊரின் வலிய கையினையுடைய கொல்லனைவேண்டிக்கொள்ளாநிற்கும் அவன் ; திருந்தின இலையையுடைய நெடியவேலைவடிப்பாயாகவெனச்சொல்லி.—எ - று.

பாண்பசிப்பகைஞன் ஈர்ந்தையோன் ; அவன் தன்னை யாமிரக்குங்

காலைத் தான் எம்மருங்கைக்காட்டி வேலைவடித்திசினெனக் கொல்லனையிரக்கும் ; இரவல, இன்மைதீரவேண்டின், எம்மொடு நீயும் வருவாயாகவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

இரக்குமென்று இழித்துக்கூறியது,பலகாலும் வடிக்கவேண்டுதலானும் பசிகுஉதவவேண்டுதலானும். (கஅ0)

கஉ. புறநா. கஎ0: கரு.

கஉ - ரு. புறநா. ஈகஉ: ரு.

* ழ. தும்பைத்திணைக்குரிய துறைகளுள், 'தார்நிலை' என்பதற்கு மேற் கோள்காட்டி, "இதனுள், பாணன் அது தோன்றப் புகழ்ந்தவாறு காண்க" என்பர் (தொல். புறத்திணை. ரு. கரு - இளம்) ; "இரப்பாது கொடுக்கு மென்னும் புறப்பாட்டினுள் இதையுறவிழுமதாங்கியென்பதும் அது" ஷை ஷை ஷை கஎ - ந.

(பி - ம்.)—1 'ஈரந்தூர்கிழான்கோயமான்'

(க௮க.) மன்ற விளவின் மனைவீழ் வெள்ளில்
கருங்க ணெயிற்றி காதன் மகனொடு
கான விரும்பிடிக் கன்று தலைக்கொள்ளும்
பெருங்குறும் புடுத்த வன்புல விருக்கைப்

---

க. மன்றமரம் : புறநா. எசு, ௩எக, ௯எ௪.

௪. புறநா. உக : சு ; "வன்புலக் காட்டுநாட் டதுவே" நற். ருசு.

37



புலாஅ லம்பிற் போருங் கடிமிளை
வலாஅ ரோனே வாய்வாட் பண்ணன்
னுண்ணா வறுங்கடும் புய்தல் வேண்டி
னின்னே சென்மதி நீயே சென்றவன்
பகைப்புலம் படரா வளவையின்
பசிப்பகைப் பரிசில் காட்டினை கொளற்கே.

திணையும் துறையும் அவை.

வல்லார்கிழான்பண்ணனைச் சோணாட்டுமுகையலூர்ச் சிறுகருந்துபியார் பாடியது.

இ - ள்.—மன்றத்தின்கண்ணோசிற்கப்பட்ட விளாவினது மனையிடத் வீழ்ந்த விளாம்பழத்தைக் சரியகண்ணையுடையமதத்தி காதன்மகனுடே காட்டுவாழுங் கரியபிடியினது கன்றுவந்தெடுக்கும் பெரிய அரண்சூழ்ந்த வலிய நிலத்தின்கண் ஊராகிய இருப்பையும் புலால்காறும் அம்பினையு
பொருதற்கரிய காவற்காட்டினையுமுடைய
வாய்த்தவாளையுடைய பண்ணன் ; நினது
வல்லாரென்கிற ஊரிடத்தான்
உண்ணப்பெறாத வறியசுற்ற
உண்டு பிழைத்தல்வேண்டுவையாயின், நீ
இப்பொழுதேசெல்வாயாக போய் அவன் வேற்றுபுலத்துச்செலலாத எல்லையில் நினது பசிக்குப்பகைட இயபரிசிலை நினது
வறுமையைக்காட்டினையாய்க் கொள்ளுதற்கு,—எ - .

'அம்பிற்போராருங்கடியினை' என்பதற்கு அம்பாற்பொருதற்கரிய கடியினையெனினுமமையும்.

காட்டிப் பரிசில்கொள்ளுதற்கு இன்னேசென்மதியெனக்கூட்டுக.

மதி, முன்னிலைவினைகுறும் அசை.

(கஅச

---

ரு. புலாலம்பு: "புலவுநுனைப்பகழி" (பெரும்பாண். உகக) ; "புலக்கணை" (பு - வெ. க: கo);போராருங்கடியினை: "கடியினைக் குன்றுகிடக்கை வெடுமதி னிரைஞாயி, லம்புடை யாரெயில" (பதிற். உo: களஅ); "அரு குழுயினை" மதுரை .கூசு.

கூ. புறநா. கஅo : எ.

எ - அ. "பாசம், பசிப்ப மடிமையக் கொளாலும்" திரி. உo.

கூ - கo. புறநா. காகூ: கசு - ரு.

(கஎ௨) உண்டா லம்மவிவ் வுலக மிந்திர
ரமிழ்த மியைவ தாயினு மினிதெனத்

---

க. 'அம்ம' என்னும் இடைச்சொல் அசைநிலையாக வந்தற்கு மேற்கோள்; தொல். இடை. ௬. ௨எ - பேர்.

க - ௨. "இந்திரர்க்கும் புகழ்வரிதே" (சீவக. கஎ௩); 'இந்திர குமரர் என்பதற்குத் தேவகுமரரென்று பொருள்கூறி இவ்வடிகளை மேற்கோம் காட்டினர்; சிலப். கரு: கஎ௨ - அடியார்.

௨ - ௩. "இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்" பதிற். ௩௮.

# புறநானூறு மூலமும் உரையும்.

௨கஉ

தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
௫ புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனி
னுலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்வில
ரன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்

பிறர்க்கென முயலுந ருண்மை யானே.[அ]

திணை - பொதுவியல் ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

கடலுண்மாய்ந்த இளம்பெருவழுதி பாட்டு.

இ - ள்.—உண்டேகாண், இவ்வுலகம் ; இந்திரர்க்குரிய அமிழ்தம் தெய்வத்தானுதல் தவத்தானுதல் தமக்குவந்தகூடுவதாயினும் அதனை இனிதென்றுகொண்டு தனித்து உண்டலுமிலர் ; யாரோடும் வெறுப்பிலர் ; பிறர் அஞ்சத்தகுந்துன்பத்திற்குத் தாமும் அஞ்சி அதுதீர்த்தற்பொருட்டு மடிந்திருத்தலுமிலர் ; புகழ்கிடைக்கின் தம்முடைய உயிரையுங்கொடுப்பர் ; பழியெனின் அதனுல் உலகமுழுதுமபெறினும் கொள்ளார் ; மனக்கவற்சியிலலர் ; அப்பெற்றித்தாகிய மாட்சிமைபபட்ட அததன்மையராகித் தமக்கென்று முயலாத வலிய முயற்சியையுடைய பிறர்பொருட்டெனமுயலவார் உண்டாதலான்.—எ - று.

அஞ்சித்தஞ்சலுமிலரெனா மாறிக்கூட்டுக.

இவ்வுலகம், பிறர்க்கெனமுயலுநருணமையான் உண்டெனக்கூட்டுக.

ஆலும் அம்மவும், அசை.

(கஅ௨)

---

ச. "அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ, தஞ்ச லறிவார் தொழில்" (குறள், ௪௨அ); "அறிவ தறிந்தடங்கி யஞ்சுவ தஞ்சி, யுறுவ துலகுவப்பச் செய்து - பெறுவதனால், இன்புற்று வாழு மியல்பினா ரெஞ்ஞான்றுந், துன்புற்று வாழ்த லரிது" நாலடி. எ௪.

ரு - சு. "வானவர் வைத்த விழுநிதி பெறினும், பழிநமக் கெழுக வென் னாய் விழுநிதி,யீத லுள்ளமொ டிசைவேட் குவையே" மதுரை. ௨0௩ - ௫.

அ. "தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்" அகநா. ௫௪;மணி.௫;எ௩.

௧. "பிறர்க்கற முயலும் பெரியோய்" மணி. ௧௧: ௬௩.

அ - ௧. "தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பு, மன்னுயிர் முதல் வன்" (மணி. ௨௫ : ௧௧௬-எ); "தனக்கென் , றொன்றானு முள்ளான் பிறர்க் கே யுறுதிக் குழந்தான்" குண்டல. கடவுள்.

* பகட்டினானும் ஆவினானும் தகட்டபு சிறப்பிற சான்றோர் பக்கமென்

பதற்கு இச்செய்யுளை மேற்கோள்காட்டி, நோன்றாட் பிறர்க்கென முயலுநர் வணிகவேளாளரென்பர் இளம்பூரணர்; (தொல். புறத்திணை. சூ. ௧எ); "உண்டாலம்ம..................உண்மையானே : இது, வகைபடமுன்னோர் கூறிய சென்துறைப்பாடாண்பாட்டு; முனிவர் கூறுமாறு போலக்கூறிப் பா வ்லும் புகழ்ச்சியுங் கூறாது மறுமைப்பயன் பிறர்க்கு உறுதி பயப்பக்கூறலிற் கைக்கிளைப்புறனாய் பாடாணாயிற்று" டெடுடெ௫. ௨எ - ந.

## ௨௬௨ புறநானூறு மூலமும் உரையும்.

(௧அ௩.) உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே
பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளுஞ்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியு
௫ மொருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளு
மூத்தோன் வருக வென்னா தவரு
ளறிவுடை யோனா றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்

கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே.[*]

திணையும் துறையும் அவை.

பாண்டியன் ஆரியப்படை [1] கடந்த நெடுஞ்செழியன் பாட்டு.

*இ-ள்.*—[2] *தன்னாசிரியர்க்கு ஒருறுபாடுற்றவிடத்து அதுதீர்த்தற்குவந்து*
உதவியும் மிக்கபொருளைக்கொடுத்தும் வழிபாட்டுநிலைமையைவெறாதுகற்றல் ஒருவற்கு அழகிது ; அதற்கு என்னோகாரணமெனின், பிறப்பு ஒருதன்மை யாகிய ஒருவயிற்றுப்பிறந்தோருள்ளும் கல்விவிசேடத்தால தாயும் மனம் வேறுபடும்; ஒருகுடியின்கட் பிறந்தபலருள்ளும் மூத்தோன்வருகவென்னாது அவருள் அறிவுடையோனசென்றநெறியே அரசனும்செலலும் ; வேறு பாடுதெரியப்பட்டநாற்குலத்துள்ளும் கீழ்க்குலத்துள் ஒருவனகற்பின் மேற் குலத்துளொருவனும் இவன் கீழ்க்குலத்தானென்று பாராது கல்வி பொருட்டு அவனிடத்தே சென்று வழிபடுவனுதலான்.—எ - று. (௧௮௩)

---

உ. குறள், ௩௯௫ - பரிமேல். உரைகடை.

ரு - சு "ஒருகுடியிற், கல்லாது மூத்தானைக் கைவிடுங் கற்று, மிளை மைபா ராட்டு முலகு" நான்மணி. ௬௫.

எ. "அறிவுடை யொருவனை யரசனும் விரும்பும்" வெற்றிவேற்கை.

அ - ௧௦. "தோணி யியக்குவான் றொழிலை வருணத்துக், காணி, கடைப்பட்டா னென்றிகழார் - காணு, யவன் றுணையா வாறுபோ யற்றே,

நூல் கற்ற, மகன் றுணையா நல்ல கொளல்" (நாலடி. ௧௩௮); "வேற்றுமை.. படுமே: இது வேதமொழிந்த கல்வியோதல் கூறிற்று" தொல். புறத்திணை சூ. ௧௬ - இளம்.

* மு. "சிறப்பின்பாலார் மக்களல்லார், மறப்பின் பாலார் மன்னர்க்கு (மணி. ௨௨: ௩௧ - ௨); "உற்றுழி...படுமே: இது வேளாளர் ஓதலின்சிறப்புக் கூறியது" தொல். புறத்திணை. சூ. ௨௦ - ந.

(பி - ம்.)—[1] 'தந்த' [2] 'தம்மாசிரியர்க்கு'

---



(௧௮௪.) காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகு
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கு
மறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்து
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
யானை புக்க புலம்போலத்

* மு. "வாய்ப்படுங் கேடு மின்றும் வரிசையி னரிது நாளும், காய்த்த நெற் கவளமாக நீற்றிக் களிறுதான் கழனி மேயின், வாயப்பட லின்றிப் பொன்றும் வலையுய் மன்னன் கொள்ளி, னீத்தநீர் ஞால மெல்லா நிதிநின்று சுரக்கு மன்றே" (சீவக. உகூ0ஏ); "மாமயப்புறச் சிறுபுலப் பயனகளும் வயக்கரி நிலைநாடித், தானளித்திடி லடுபசி கெடுமதச் சாரமதுபுக் குவலின் வேலி, யானை தெவ்வினிலும் வாலினுங் காலினு மழிந்தவாய் புகவிலைதிப், போன தாமது போன்றதவ் விறைமகன் புவியெலாம் பொலிவற்றே" (சீகாழித்தல புராணம், பூதவிமோசனமானவத்தியாயம், எ) ; வாயுறைவாழ்த்திற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. உக - இளம் ; ஷெ ஷை ஷை கூரு - ந.

(பி - ம்.)—1 'திணையும் துறையுமவை'



கொள்ளுநெறியை அறிந்து கொள்ளின் அவன்நாடு கோடிபொருளினை ஈட்டிக்கொடுத்துத் தானும் மிகவுந்தழைக்கும் ; வேந்தன் அறிவால் மெல்லியனாகி நாடோறும்தரமறியாத உறுதிகூறாது* அவன்விரும்புவதனையே தானுங் கூறும் ஆரவாரத்தையுடைய சுற்றத்தோடுகூடி அன்புகெடக் கொள்ளும் பொருட்டொகுதியை விரும்பின் அந்த யானைபுக்கபுலம்போலத் தானும் உண்ணப்பெறான், உலகமுங்கெடும்.—எ - று.

பரிவுதப்வெனின்றி,
அக்குடிகட்குவருத்தமிகவென் றுரைப்பாருமுளர்.

'மெல்லியனா கிழவனுகி' என்றும் பாடம்.

(கஅ௪)

* "இகழி னிகழாதா னிறைமக னென்று, புகழினு மொகைப்புகழ்" நீதிநெறி. சச.

(கஅரு.) கால்பார் கோத்து [1] ஞாலத் தியக்குங்
காவற் சாகா டுகைப்போன் மாணி
னூறின் றாகி யாறினிது படுமே
யுய்த்த றேற்றா னாயின் வைகலும்
ரு பகைக்கூ ழள்ளற் பட்டு
மிகப்பஃ றீநோய் தலைத்தலைத் தருமே.*

திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக்காஞ்சி.
தொண்டைமான் இளந்திரையன் பாட்டு.

இ - ள்.—உருளையையும் பாரையுங்கோத்து உலகின்கண்ணே செலுத்தும் காப்புடையசகடந்தான் அதனைச்செலுத்துவோன் மாட்சிமைப்படின் ஊறுபாடிலலையாய் வழியை இனிதாகசசெலலும்; அவன் அதனை இனிதா
கச்செலுத்துதலைத் தெளியமாட்டானாயின் அது நாடோறும் பகையாகிய செறிந்த சேறறிலேயழுந்தி மிகப்பல தீயதுன்பத்தை மேன்மேலுமுண்டாக்கும்.—எ - று.

இஃது, உலகாளுமுறைமைகூறுதலையுட்கொண்டு சகடம்செல்லுமாற்றைக்கூறினமையின், நுவலாநுவற்சியென்றுமலங்காரமாயிற்று; ஒட்டென்றுகூறுவாருமுளர்.

அன்றி இதற்கு உலகத்தின்கண்ணே உலகியற்கையைநிறுத்தி அதனோடு ஞாலத்தின்கண்ணே செலுத்தபபடும் காப்பாகிய சகடம் தன்னைச்

---

உ. காவற்சாகாடுகைப்போன்; (புறநா. கூ0: எ - க; உருசு: உ); "அவை யாறுமுள்ளும் காவற்சாகாடுகைத்தற்கண் அவ்வரசர்க்கு இணையாய அமைச்சரா தியலபு" குறள். கூச - ஆம் அதி. அவ.

* மு. "ஆர்வலஞ் சூழ்ந்த வாழி யகலமணித் தேரை வல்லா,னேர்நிலத்

தாருமாய் வீடுபல் காலஞ்செல்லு, மூர்நில மதிதநேற்று தாருமேன் முறிந்து வீழும், தார்நில மார்ப வேந்தர் தன்மையு மன்ன தாமே" சீவக. உகா௦௬.

(பி - ம்.)—1 'ஞாலத்தியங்கும்'

# புறநானூறு மூலமும் உரையும்

உகரு

செலுத்துவோன் மாட்சிமைப்படின் தனக்கு ஒரிடையூறுமின்றாகி நெறி முறைமையேநடக்கும்; அதனைச் செலுத்துதல் தெளியானுயின் அச்சாகாடு நாளும் மறுதலையென்னும் செறிந்த அள்ளலிலே அகப்படுத்தற்கும் தன் மேலாழ்வார்க்கும் மிகப்பலவாகிய தீக்கேட்டினை மேன்மேலே தருமெனவும் பொருளுரைப்பர்; இப்பொருட்குப் பாரென்றது, உலகியற்கையை.

கால் - உருளை. (கஅரு)

---

(கஅசு.)நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால், 1 யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே.*

திணையும் துறையும் அவை.

2 மோசிகீரனுர் பாடியது.

இ - ள்.—வேந்தனுகிய உயிரையுடைத்து, பரந்த இடத்தையுடைய உலகம்; அதனன், இவ்வுலகத்தார்க்கு நெலலும் உயிரன்று,நீரும் உயிரன்று,

யான் உயிரென்பதனை அறிகை வேலாண்மிக்க படையையுடைய அரசனுக்கு முறைமை.—எ - று.

மன்னனுயிர்த்தென் றகருத்து: † உயிரையாக்கும் நெல்லும் நீரும் உளவாவது மன்னன்முறைசெய்து காப்பினென்றதாம். (கஅ௬)

உ. "உலகிற் கோருயிர்ப், பெற்றியாஞ் படாபதி யென்றும் பேருடை; வெற்றிவேன் மணிமுடி வேந்தர் வேதனே" (துளா. ௧௪ா. ௧௬) ; "மன்னுயிர் ஞாலக் கின்னுயி ரொக்கு மிறை" (பெருங். உ. ௪௧: ௪௭-௮); "உலகினுக்குயிரா யிருக்குநா னிறைகுலோத் துங்கன்" (திருவிளை. பழியஞ்சி. ௩௪);சிறப்பினால உயர்திணை அஃறிணையானதற்கு மேற்கோள்; நன். மயிலை. ௩௭௮; இ - வி. ௬. உ௬௬ - உ௭௩.

* ம. "நெல்லுயிர் மாகதர்க்கெல்லா நீருயி ரிரண்டுஞ் செப்பிற், புல்லுயிர் புகைந்து டொக்கு முழங்கழ லிலக்கு வாட்கை, மலைலங் களிற்ற மாலை வெண்குடை மன்னர் கண்டாய்,நலனுயிர் ஞாலந் தன்னு ளுமவே யெம்பியென்றுன்" சீவக. உ௬0அ.

† "இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட, பெயலும் விளையுளுந் தொக்கு" குறள், ருசரு.

(பி - ம்.)—1 'யாமுயிர்' 2 'மாதிமாதிரத்தனைர்பாட்டு'

---

(கஅஎ.) காடா கொன்றோ நாடா கொன்றோ

அவலா கொன்றோ மிசையா கொன்றோ

---

க. "காடாகொன்றோ நாடாகொன்றோ வென்பனவற்றையும் நாடேயாக காடேயாக என இதன்பாற்படுத்துக; இவற்றை ஏவல் கண்ணுதது இது வெனவுணர்க" தொல். வினை. ௬. உ௬ - ந.

*எவ்வழி நல்லவ ராடவ*
*ரவ்வழி நல்லை வாழிய நிலனே.*

திணையும் துறையும் அவை.

ஔவையார் பாடியது.

இ - ள்.—நிலனே, நீ ஒன்றில நாடேயாக, ஒன்றிற்காடேயாக ; ஒ றிற் பள்ளமேயாக, ஒன்றில் மேடேயாக; எவ்வாறாயினும் எவ்விடத்து நல்ல ஆண்மக்கள் அவ்விடத்து நீயும் நல்லையல்லது, நினக்கென ஒரு நலமுடைமை யல்லை வாழி.—எ - று.

நீயநிலனேயாயினும் நல்லோருளராயின் நன்றெனவும், நல்லநிலனே யினும் தீயோருளராயின் தீதெனவும், தன்னிடத்து வாழ்வோரியல்பல்ல தனக்கென ஓரியல்புடையதன்றென நிலத்தை இழித்துக்கூறுவதுபோ உலகத்தியற்கைகூறியவாறாயிற்று.

* ஒன்றேயென்பது, எண்ணிடைச்சொல். (கஅ

ரூ - ச. "க ...க் கெளியன் கடுஞ்சொலன் ...ல்லனேல், மீக்கூ மன்ன னிலம்" குறள், ரூஅ.

* புறநா. ௩உ: ௮ . எக: கரு.

(க௮௮.) படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணு
முடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்

---

க. படைப்பு: புறநா. உஉ: ௧௦.

க - உ. "துகளர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப், பகு நடக்கசூழ் பலரோ டுண்க" (நாலடி.உ); "இல்வாழ்க்கையைப் பலபடை பாகிய செல்வத் தோடே நடத்தி", "பலபடைப்பாகிய செல்வத்தோடே மிக்க கைப்பொருளையும் கொடுத்து" சிலப். உ: ௮௪ - ௯0; ௧௫ : ௫௪. ௭௫ அடியார்.

௩. "தளர்பு தளர்போடும் பூங்கட் புதல்வன்" (அகநா ௬௬); "குறு குறு நடந்து செல்லும்" (ஆனைக்கா. அகிலாண்ட. ௮); "மொகு மொகு வென்பது இரட்டைக்கிளவி.....குறுகுறு நடந்து சிறுகை நீட்டி" (தக்க ௮௯ - உரை. மேற்); இரட்டைக்கிளவிக்கு மேற்கோள்; நன் - மயிலை சூ. ௩௯௫; நன் - வி. சூ. ௩௯௬.

௪ - ௫. குறள், ௬௪ - பரிமேல். மேற்.

௩ - ௬. "முறியினா முலை மெல்லரும் பன்ன மூரல்வெண் டயிரை பொதிந்து, குறுகுறு நடந்து சிறுவர்வந் தீண்ட" பாகவத. ௯: விருந்தா வன. ௯.

பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே.*

திணையும் துறையும் அவை.

பாண்டியன் அறிவுடைநம்பி பாட்டு.

இ - ள்.—படைக்கப்படும் செல்வம் பலவற்றையும்படைத்துப் பலருடனே கூடவுண்ணும் உடைமை மிக்கசெல்வத்தையுடையோராயினும் காலம் இடையேயுண்டாகக் குறுகக்குறுக நடந்துசென்று சிறியகையை நீட்டிக் கலத்தின்கட் கிடந்ததனைத் தரையிலேயிட்டும் கூடப்பிசைந்துதோண்டியும் வாயாற்கவ்வியும் கையாலதுழாவியும் நெய்யையுடையசோற்றை உடம்பின்கட்படச்சிதறியும் இங்ஙனம் அறிவை இன்பத்தான்மயக்கும் புதல்வரை இலலாதார்க்குப் பயனாகிய முடிக்கப்படும் பொருளில்லை, தாம் உயிர்வாழு நாளின்கண்.—எ - று.

தொட்டென்பதற்குக் கூடவாரிப்பிடித்தெனினுமமையும்.

குறையென்பது, முடிக்கப்படுங்கால முடிக்கப்படும்பொருள்.

இனிப் பயக்குறையுள்ளதென ஒருசொல்வருவித்துத் தாம்வாழுநாளும் இல்லையென்று கூறுவாருமுளர். (௧௮௮)

எ. "குறை-இன்றியமையாப்பொருள்"; அது, 'பயக்குறையிலலைத்தாம் வாழு நாளே' என்பதனானுமறிக" (குறள். ௬௧௨ - பரிமேல்); "பொருளைச் சொல் இன்றியமையாமையின், அதனைக் குறையென்றார்,...'பயக்குறை...நாளே' என்றாற்போல" தொல். உரி. சூ. ௧00 - சே.

* மு. பொருளொடுபுணர்ந்தபக்கமென்பதில், 'புணர்ந்தபக்கமென்றதனாற் புதல்வர்ப்பெறுதலுங்கொள்க' என்று கூறி இதனை மேற்கோள் காட்டினர்; தொல். புறத்திணை. சூ. ௧எ - இளம்; டெ டெ டெ உக - ந.

(௧௮௯.) தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கு
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கு
[1] உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே

௧ - ௨. புறநா. ௮: ௧ - ௫.

௩. "அரையிருள் யாமத்தும் பகலுந் துஞ்சார்" (சிலப். ௪: ௪௧- அடியார்) என்பதற்கு மேற்கோள்.

௫. "நாழியரிசிக்கேநாம்", "உண்பது நாழி யுடுப்பது நான்குமுழம்" (நல்வழி. ௧௯, ௨௮); வினைப்பெயர், செயப்படுபொருண்மேற் பெயராய்க் காலந் தோன்றி நின்றதற்கு மேற்கோள்; தொல். வேற்றுமை. சூ. ௬- கல்; ந.

(பி - ம்.)—1 'உண்பவைநாழியுடுப்பன'





பிறவு மெல்லா மோரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீத
றுய்ப்பே மெனினே தப்புந பலவே.

திணையும் துறையும் அவை.

மதுரைக் கணக்காயனார்மகனார் நக்கீரர் பாடியது.

இ - ள்.—தெளிந்த நீராற்சூழப்பட்ட உலகமுழுதையும் பிறவேந்தர்
குப்பொதுவாதலின்றித் தமக்கேயுரித்தாக ஆண்டு வெண்கொற்றக்குடை
யால் நிழல்செய்த ஒருதன்மையையுடையோர்களும், இடையாமத்தும் நண்ட
களும் துயிலானாய் விரைந்தசெலவையுடைய மாக்களைப் படுக்கக்கருதிச
செல்லும் கல்வியில்லாத ஒருவனுக்கும் உண்ணப்படும்பொருள் நாழி, உடு
கப்படுமவை இரண்டே; பிறவுமெல்லாம் ஒக்குமாதலாற் செல்வத்தா
பெறும்பயனாவது கொடுத்தல்; செல்வத்தையாமே நுகர்வேமென்றுகரு
தின் தவறுவன பல.—எ - று.

பலவென்றது, அறம்பொருளின்பங்களை.

பகலை ஒருமாத்திரையென்றும், கடுமாவை யானையென்றும், கல்லா
ஒருவனைப்பாகனென்றும் உரைப்பாருமுளர். (கஅக

---

எ - அ. "வழங்கலுந் துய்த்தலுந் தேற்றுதான் பெற்ற, முழங்கு
முர சுடைச் செல்வம் - தழங்கருவி, வேய்முற்றி முத்துதிரும் வெற்ப
வதுவன்றே, நாய்பெற்ற தெங்கம் பழம்" பழ. கறுக.

---

(கசுo.) விளைபதச் சீறிட நோக்கி வளைகதிர்
வல்சி கொண்டளை மல்க வைக்கு
மெலிமுயன் றனைய ராகி [1] யுள்ளதம்
வளன்வலி யுறுக்கு முளமி லாளரொ
டியைந்த கேண்மை யில்லா கியரோ
கடுங்கட் கேழ லிடம்பட வீழ்ந்தென

வன்றவ னுண்ணு தாகி வழிநாட்
பெருமலை விடரகம் புலம்ப [2] வேட்டெழுந்
திருங்களிற் றொருத்த னல்வலம் படுக்கும்
புலிபசித் தன்ன மெலிவி லுள்ளத்

---

௪ - ரு. இவைபென்னுமுரிச்சொல கூட்டமென்னும் குறிப்புணர்த்து வதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. ௧௧ - ந ; இ - வி. சூ. ௨௯௦-உரை.

௧௦. புலிபசித்தாற் புல்லைத் தின்னுதென்பது ஒரு பழமொழி.

௯ - ௧௦. புறநா. ௨௩௭ : ௧௬ - எ.

(பி-ம்.)—[1] 'உடையதம்' [2] 'வேட்டெழுந்தாங்கிருங்களிற் றொருத்தல்'

# புறநானூறு மூலமும் உரையும்.

. ௨௧௪

தாளுடை யாளர் கேண்மையொ
டியைந்த வைக லுளவா கியரோ.

திணையும் துறையும் அவை.

1 சோழன் நல்லுருத்திரன் பாட்டு.

இ - ள்.—விளைந்த செவ்வியையுடைய சிறிய

இடத்தைப்பார்த்து
விளக்ககிராகிய உணவைக்கொண்டு முழைபின்கண்ணே நிறைய வைக்கும் எலிமுயன்றாற்போலும் சிறியமுயற்சியராகி உள்ள தம்முடையசெல்வத்தை நுகராது இறுகப்பிடிக்கும் உள்ளமிகுதியில்லாருடன் பொருந்தியநட்பு இல்லையாக; தறுகண்மையையுடைய கேழலாகியபன்றி தனது இடப்பக்கத்தேபட வீழ்ந்ததாக, அன்று அவ்விடத்து உண்ணுதாகிப் பிற்றைநாட் பெரிய மலையின்கண் தனதுமுழையிடம் தனிமைப்பட உணவைவிரும்பியெழுந்து பெரியகளிறாகியஒருத்தலை நல்லவலப்பக்கத்தேபடப் படுக்கும் புலிபசித்தாற்போலும் குறையில்லாத மேற்கோளையுடைய வலியையுடையோர்கட்போடு பொருந்திய நாட்கள் உளவாக.—எ - று.

ஏதிடமென்றது, விளக்குமுற்றியபின் அறுப்பதற்கு முன்னாகிய இடத்தை.

இல்லாகியர், உளவாகியரென்பன
நின்றன.
ரண்டு வியங்கோட்பொருளவாய்

(கக0)

---

சு - கக. "தொடங்குவினை தவிரா வசைவி ஞேன்றாட், இடத்தயிர் மறுகுவ தாயினு மிடம்படின், வீழ்களிறு மிசையாப் புலியினுஞ் சிறந்த, தாழ்வி லுள்ளம்" (அகநா. உக); "கடமா தொலைச்சிய கானுறை வேங்கை, யிடம் வீழ்ந்த துண்ணு திறக்கும்" (நாலடி. ௩00); "வாய்வ தாகிய பொருளினை வல்விரைந் தன்னே, வாய்வ தாய்கில ராக்குவான் புகுந்திழிப் பார்போற், காய்வ தாகிய திறத்தினுற் கதழுகதுதா யிடத்து, வீழ்வ தாக்கியுண் ணுதபோதுவ விளவேங்கை" தணிகைப்புராணம், களு. சஅ.

(பி - ம்.)—1 'சோழநல்லுத்திரன்'

(௧௯௧.) யாண்டுபல வாக நரையில வாகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்
மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர்
யான்கண் டனையரென் னிளையரும் வேந்தனும்

௧ - ௨. "உலகின்புறுதலாவது, இம்மிக்காரோடு தலைப்பெய்து அறியாதனவெல்லாம் அறியப்பெற்றேமென்றும், யாண்டு பலவாக நரையில மாயினேமென்றும் உவத்தல்" குறள். ௩௯௯ - பரிமேல்.

௩. மாண்ட: "மனைத்தக்க மாண்புடையளாகி", "மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின்", "இல்லவண் மாண்பானால்" குறள். ௫௧, ௫௨, ௫௩.

௪. "மேகமே சேர்கொடை வேந்தமிர்து சேவகனு, மாகவேசெய் யினமிர்து" (சிறுபஞ்ச.௪); "வெங்குருதி மல்க விழுப்புண் ணுகுதொறாட,



௫ மல்லவை செய்யான் காக்கு மதன்றலை
யான்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழு மூரே.

திணையும் துறையும் அவை.

கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தானுழைச்சென்ற பிசிராந்தையாரை, 'கேட்குங்காலம்பலவாலோ? நரைநுமக்கில்லையாலோ?' என்ற சான்றோர்க்கு அவர் சொற்றது.

இ - ள்.—நமக்குச்செல் நயாண்டுகள் பலவாயிருக்க நரையில்லை யாகுதல் எப்படியாயினீரெனக் கேட்பீராயின், என்னுடைய மாட்சிமைப் பட்ட குணங்களையுடைய மனைவியுடனே புதல்வரும் அறிவுநிரம்பினர்; யான் கருதிய அதனையே கருதுவர், என்னுடைய ஏவலசெய்வாரும்; * அரசனும் முறையல்லாதன செய்யானுய்க்காக்கும்; அதற்குமேலே யானிருக்கின்றவூரின் கண் நற்குணங்களால் அமைந்து பணியவேண்டுமுயர்ந்தோரிடத்துப்பணிந்து ஐம்புலனும் அடக்கிய கோட்பாட்டினையுடைய சான்றோர் பலராதலான்.— எ - று.

'ஆன்றவிந்தடங்கிய' என்பதற்குக் கல்வியாலநிறைந்து அதற்கேற்பச் சுவைமுதலியவற்றிற்செல்லும் அறிவவிந்து மனமொழிமெய்களான் அடங்கியவெனினுமமையும்.

'யாங்காகியர்' என்பதற்கு எவ்வாறாயிற்றென்றும், எப்படியாலாயிற்றென்றும் பொருள்கூறுவாருமுளர். (கககூ)

---

மிக்குலிசஞ் சோரும் வரையேட்கும் - பைங்க, ணிளம்போக்கி ரிகல்வாட்டி வேந்தன், மைம்போல வந்த மகன்" பு - வெ. உ: ரு.

நின்று ரு. "அல்லவை செய்தார்க் கறங்கூற்ற மாமென்னும், சொல்லும் பழுதன்றே" சிலப். உ0: இறுதிவெண்பா, க.

பல்லவையோர்

எ. "கற்றவ முனிவரும் கற்றடங் கினரு, நன்மொழி காணிய தொன் னூற் புலவரு, மெங்கணும் விளங்கிய வெயிற்புற விருக்கையின்,...வஞ்சி" மணி. உக: எசு - அ.

* "முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட், கிறையென்று வைக் கப்படும்" குறள். கூ௮௮.

(௧௯௨.) யாது மூரே யாவருங் கேளிர்
தீது நன்றும் பிறர்தர வாரா

---

௧. "யாதானு நாடாமா லூராமா லென்னொருவன், சாந்துணையுங் கல லாத வாறு" (குறள். ௩௯௭.) முற்றும்மைக்கு, 'யாதுமூரே' என்பது மேற் கோள்; தொல். இடை. ரு. எ - கல்; ந.

௨. "பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங், கருமமே கட்டளைக் கல்" (குறள். ௫0௫); "பெருமையுஞ் சிறுமையுந் தாந்தர வருமே" வெற்றி வேற்கை.

## புறநானூறு மூலமும் உரையும்.



நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்த
லினிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவி
னின்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்
முறைவழிப் படூஉ மென்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற

பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை யிகழ்த லதனினு மிலமே

திணையும் துறையும் அவை.

கணியன் பூங்குன்றன் பாட்டு.

இ - ள்.—எமக்கு எல்லாம் ஊர்; எல்லாரும் சுற்றத்தார்; கேடும் ஆக்கமும் தாமேவரினல்லது, பிறர்தரவாரா; நோதலும் அதுதீர்தலும் அவற்றையொப்பத் தாமேவருவன; சாதலும் புதிதன்று, கருவிற்றோன்றிய நாளே தொடங்கியுள்ளது; வாழ்தலை இனிதென்று உவந்ததுமிலம்; ஒரு வெறுப்புவந்தவிடத்து இன்னாதென்றிருத்தலுமிலம்; மின்னுடனே மழை குளிர்ந்த துளியைப் பெய்தலான் அமையாது கல்லைப்பொருது ஒலிக்கும் வளவிய பேர்யாற்றுநீர்வழியேபோம் மிதவைபோல அரியவுயிர் ஊழின்வழியேபடுமென்பது நன்மைக்கூறுபாடறிவோர் கூறிய நூலாலே தெளிந்தேமாகலான், நன்மையான்மிக்கவரை மதித்தலுமிலேம்; சிறியோரைப்பழித் தல் அம்மதித்தலினுமிலேம்.—எ - று.

தலைஇயென்பதனைத் தலையவெனத்திரிக்க.

'முனிவி னின்னா தென்றலு மிலமே' என்றதற்கு முன்னேகூறிய வாழ்தலைவெறுப்பான் இன்னாதென்று இகழ்ந்திருத்தலுமில்லேமெனினும் அமையும். (கஙஉ)

---

ச. "வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பிற்,பொருந்துத லருமை புதுமை" நன்னெறி, கஉ.

௮. "கல்லலைத் தொழுகு மன்னே" புறநா. ௧௯௫ : ௪.

௯. "நீர்வழிப் பட்ட புணை" நீதிநெறி. ௪௪.

௯ - ௧0 "முன்னே யொருவன் முடித்தான்றன் றப்பெலாம்" அறநெறி. ௧௧௪.

௰ - ௧௧. "சாதலும் பிறத்த றானுந் தம்வினைப் பயத்தி னாகு, மாதலு மழிவு மெல்லா மவைபொருட் டியல்பு கண்டாய், கோதலும் டரிவு மெல்லா நன்னுணர் வின்மை யன்றே" சீவக. ௨௯௧.

---



(௧௯௩.) அதளெறிந் தன்ன நெடுவெண் களரி
1 னொருவ னாட்டும் புல்வாய் போல
வோடி யுய்தலுங் கூடுமன்
னொக்கல் வாழ்க்கை தட்குமா காலே.

திணையும் துறையும் அவை.

* 2 ஓரேருழவர் பாட்டு.

இ - ள்.—தோலைப் புடைத்துவைத்தாற்போன்ற நெடிய வெளிய களரின்கண் ஒருவன் அலைக்கும்புல்வாய் எளிதின் ஓடிப்பிழைக்குமாபோலே யானும் நன்னெறிக்கண்ணேயொழுகிப் பிழைக்கவுங்கூடும்; சுற்றத்தோடு கூடிவாழும் இல்வாழ்க்கை அதன்கட் செல்லவொட்டாது காலைத் தளையாநிற்கும்; ஆதலான் உய்தல்கூடாது.—எ . று.

மன், கழிவின்கண் வந்தது. மா, அசைநிலை.

(௧௯௪)

ச. " உலோகமா பாலன்", "அஙகமாதிலகன்" (சீவக. ௩௧௫,

௨00௧) என்னுமிடங்களில, ' மா, வியங்கோளசைய்ன்றி இசைநிறைத்து நின்றது' எனக்கூறி இவ்வடியை மேற்கோள்காட்டுவர் நச்சினார்க்கினியர்; 'மா' என்பது முன்னிலையசையன்றி

அசைச்சொல்லாகவந்ததற்குமேற்கோள்; தொல். இடை. சூ. ௨௭ - ந; இ - வி. ந. ௨௭௫ - உரை.

௧ - ச "காட்டகத் தொருமகன் றுாகரு மாக்கலை, யோட்டைத் தாமெனி னுய்யு கக்கலை, யாட்டியிட் டாருயி ரனைத கூற்றுவ, னீட்டிய கிழன்மதப் போல வுண்ணுமே" சீவக. ௨௬௩0.

* "ஓரே ருழவன் போல" குறுந். ௱௩௧.

(பி - ம்.)—1 'ஒருவனோட்டும்' 2 'ஒன்றுருழவர்பாட்டு'

---

(௧௬௪.) ஓரி னெய்தல் கறங்க வோரி
லீர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி யணியப் பிரிந்தோர்

பைத லுண்கண் பனிவார் புறைப்பப்
௫ படைத்தோன் மன்றவப் பண்பி லாள

---

௧. "நெஞ்சுகடுக்குறூஉ நெய்த லோசையும்" மணி. ௬: ௭௧.

௧ - ௨. "கிளையுஞ் செலவத் தெதிர்மனைக ளிரண்டி னிகழ்மங் கலம யங்க, ளொயுமொலியெசன் றினிலொன்றி லழுகை யொலியக் தெழுதலும் பெரிய. வெள்ளானை. ௫.

௩. புறநா. ௧௫௭ : ௮ - ௯ ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

௫. ஙகரவீற்றுவினைச்சொல்லின ஈற்றயலினின்ற ஆகாரம் செய்ளுள் ஓகாரமானதற்கு மேற்கோள்; நன் - மயிலை. ௬. ௩௫௨ ; நன் - உ ௬. ௩௫௩.



*னின்னா தம்மவிவ் [1] வுலக*
*மினிய காண்கித னியல்புணர்ந் தோரே.**

திணை - அது ; துறை - பெருங்காஞ்சி.
பக்குடுக்கைநன்கணியார் பாடியது.

இ - ள்.—ஒருமனையின்கண்ணே சாக்காட்டுப்பறை ஒலிப்ப ஒருமனையின்கண்ணே மணத்திற்குக்கொட்டும் மிகக்குளிர்ந்த முழவினது ஓசை மிக ஒலிப்பக் காதலரோடு கூடினமகளிர் பூவணியையணியப் பிரிந்தமகளிரது வருத்தத்தையுடைய உண்கண்கள் நீர்வார்ந்து துளிப்ப இப்பரிசு ஒத்து ஒவ்வாமைப்படப் படைத்தான் நிச்சியமாக, அப்பண்பில்லாதோனாகிய காணமுகன் ; கொடிது இவ்வுலகின தியற்கை ; ஆதலான், இவ்வுலகினது தன்மை அறிந்தோர் வீட்டின்பத்தைத்தரும் நல்ல செய்கைகளை அறிந்து செய்து கொள்க,—எ - று.

காண்கவென்பது, காண்கெனக் குறைக்கப்பட்டது.

இதனியல்புணர்ந்தோர் இவ்வின்னுமைமையை இனியவாகக் காண்கவென் றுரைப்பினுமமையும். (கசச)

* ம. “மன்றங் கறங்க மணப்பறை யாயின, வறவர்க் காங்கே பிணப்பறையாய்ப் பின்றை, யொலித்தலு முண்டாமென் றுய்ந்துபோ மாறே, வலிக்குமா மாண்டார் மனம்” நாலடி. உரு.

(பி - ம்.)—1 ‘உலகினதியற்கை, யினிய’

---

(கசரு.) பல்சான் றீரே பல்சான் றீரே

கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ
1 நல்லது செய்த லாற்றீ ராயினு
மல்லது செய்த லோம்புமி னதுதான்

---

க. புறநா. உசரு : க; ‘பல’ என்னுஞ்சொன்முன் பிறவரின் அகரம் விகற்பித்து வருமென்பதற்கும், (நன் - மயிலை. ரு. கசுக) ரகரவீற்றுயர்திணைப்பெயரி னீற்றயலாகாரம் ஈகாரமாய் ஏகாரம் ஏற்றதற்கும் (நன்-வி. ரு. ருOக) மேற்கோள். ருOஅ.

க - ரு. சொலலுவான் குறிப்பினாற்பொருளறியவந்ததற்கு மேற்கோள்; நன்- மயிலை. சூ. உசுஅ; நன் - வி. சூ. உசுக.

சு - எ. “வறுமையா லீத லிசையா தெனினு, மிரவாமை யீதலி ரட்டியுறும்” (நாலடி. சுரு) ; பாடாண்டிணைத்துறைகளுள், ஓம்படை பற்றி வந்ததற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. ருO - இளம்.

(பி - ம்.)—1 'நல்லவை'



னெல்லாரு மூவப்ப தன்றியு
நல்லாற்றுப் படூஉ [1] நெறியுமா ரதுவே.*

திணை - அது ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

நரிவெரூஉத்தலையார் பாடியது.

இ - ள்.—பல அமைந்த குணங்களையுடையீர், பல அமைந்த குணங்களையுடையீர், கயலினது முட்போன்ற நரைமுதிர்ந்த திரைகதுப்பினையும் பயனில்லாத முதுமையையுமுடைய பல அமைந்த குணங்களையுடையீர், மழுவாகிய கூரிய படைக்கலத்தினையும் கடிய வலியினையுமுடைய ஒருவன் பாசத்தாற் கட்டிக்கொண்டு போங்காலத்து இரங்குவீர் நீர் ; நல்வினையைச் செய்யமாட்டீராயினும் தீவினையைச் செய்தலை பரிகரிமின் ; அதுதான் யாவரும் புகழ்வரென்றது ஒழியவும் நல்ல நெறியின்கண்ணே செலுத்தும் வழியும் அதுதான்.—எ - று.

பலராகிய சான்றீரென்பது, பல்சான்றீரெனத்தொக்கது; † "பல்குட்டு வர்" என்பதுபோல.

பலவாகிய குணங்களால் அமைந்தீரெனினுமமையும்.

பயனின் மூப்பென்றுவைத்துப் பல்சான்றீரேயென்றது இகழ்ச்சிக் குறிப்பு; அடுக்கு, பிரைவின்கண்வந்தது.

(௧௯)

* ழ. காஞ்சித்திணைத்துறைகளுள் 'கழிந்தோரொழிந்தோர்க்குக் காட்டிய முதுமை' என்பதற்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. ௧௯ - இளம்) ; " பலசான்றீரே......அதுவே : இது வீடு ஏதுவாகவன்றி வீடு பேற்று நெறிக்கட் செல்லும் நெறியேதுவாகக் கூறியது ; தொடி தொடி தொடி ௨ ௪ - ௫.

† மதுரைக்காஞ்சி, ௪0௫.

(பி - ம்.)—1 'நெறியுமற்றதுவே'

---

(௧௯௬.) ஒல்லுவ தொல்லு மென்றலும் யாவர்க்கு
மொல்லா தில்லென மறுத்தலு மிரண்டு
மாள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே
யொல்லா தொல்லு மென்றலு மொல்லுவ
௫ தில்லென மறுத்தலு மிரண்டும் வல்லே
யிரப்போர் வாட்ட லன்றியும் புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயி லத்தை

---

௪ - ௫. " இயைவது கரத்தலிற் கொடுமையில்லை " முதுமொழிக் காஞ்சி, ௫௫.

௧-௭. " இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும், வசையன்று வையத் தியற்கை ", "கட்டார்க்கு ளளா தவர்க்கு முளவரையா, லட்டது பாத்துண்ட லண்டுண்ட-லட்ட, தடைத் திருந்து துண்டொழுகு மாவதின்

யனைத்தா கியரினி [1] யிதுவே யெனைத்துஞ்
சேய்த்துக் காணாது கண்டன மதனா
னோயில ராகநின் புதல்வர் யானும்
வெயிலென முனியேன் பனியென மடியேன்
கல்குயின் றன்னவென் னல்கூர் வளிமறை
நாணல இல்லாக் கற்பின் வாணுதல்
மெல்லியற் குறுமக ளுள்ளிச்
செல்வ லத்தை சிறக்கநின் னாளே.*

திணை - பாடாண்டிணை; துறை - பரிசில்கடாநிலை.

பாண்டியன் இலவந்திகைப்பள்ளித்துஞ்சியநன்மாறன் பரிசில் நீட்டித்தானை ஆவூர்மூலங்கிழார் பாடியது.

இ - ள்.—தம்மாற்கொடுக்க இயலும்பொருளை இயலுமென்றுசொல்லிக்கொடுத்தலும், யாவர்க்கும் தம்மாற்கொடுக்க இயலாதபொருளை இல்லையென்றுசொல்லி மறுத்தலுமாகிய இரண்டும் தாளாண்மைப்பக்கத்துளவாகிய நட்பின்கூற்றிலுள்ளன; தனக்கு இயலாததனை இயலுமென்றலும் இயலும்பொருளை இல்லையென்று மறுத்தலுமாகிய இரண்டும் விரைய இரப்போரை மெலிவித்தலன்றியும் ஈவோர்புகழ் குறைபடும்வழியாம்; இப்பொழுது நீ எம்மளவிற்செய்தசெய்தியும் அத்தன்மைத்தாகுக; இஃது எத்துணையும் எக்குடியிலுள்ளார் முன்புகாணாதது யாம்கண்டேம்; அதனால், நின் பிள்ளைகள் நோயின்றியேயிருப்பாராக; யானும் "வெயிலென்றுநினைந்து போக் கைவெறேனாய்ப் பனியென்றுகொண்டு மடிந்திரேனாய் விட்டுநீங்காமையாற் கல்லாற்செய்தாற்போன்ற எனது நல்குரவின்மிகுதியான் வளிமறையாகிய

மாக்கட், கடைக்குமா மாணடைக கதவு" (நால'டி. கக௧, உஎக) ; "இசைவ கொடுப்பதூஉ மிலலெனபதூஉம், வசையன்று வையத்தியற்கையஃ தன்றிப், பசைகொண் டவனிற்கப் பாத்துண்ணு னாயி, னசைகொன்றான் செல்லுலக மில்" பழ, உ௪.

கரு ; "உயிரினுஞ் சிறந்த நாணும்" (நற். கஎ); "தாயிற் சிறந்தன்று நாண்டையலாருக் கநாண்டகைசால்...தோளிதிண் கற்பின் விழுமிதன்று" (திருச்சிற். உ0௪);"உயிரினுஞ் சிறநதன்று நாணே நாணினுஞ், செயிர்தீர் காட்சிச் சிறந்தன்று" தொல். களவியல், ரு. உஉ.

௩௪ - ௫. 'அத்தை' என்னும் இடைச்சொல் முன்னிலைக்கண் அசை நிலையாய் வந்ததற்கு மேற்கோள் ; நன் - மயிலை. ௱. ௪௩௬; நன் - வி. ரு. ௪௪0.

* மு. பாடாண்டிணைத்துறைகளுள் கொடார்ப்பழித்தற்கு மேற்கோள்; (தொல். புறத்திணை. ரு. உ௬-இளம்; ௸ ௸ ௸ ரு. ௩௫-ந); "ஓல்லுவ தொல்லுமென்னும் புறப்பாட்டினுள், 'கோயிலாக நின்புதல்வர்' எனவும், 'சிறக்கநின் னாளே' எனவும் வரும் மங்கலச்சொல் கெடுகவென்னும் பொருள் பட்டவாறு காண்க" ௸ பொருளியல், ரு. ௪அ - இளம்,

(பி - ம்.)—1 'அதவே'

39



மனையிடத்து நாணல்லது வேறில்லாத கற்பினையும் ஒளியையுடைத்தாகிய நுதலினையும் மெல்லிய இயலினையுமுடைய குறுமகளை நினைந்து போவேன்; நின் ஆயுள்மிகுவதாக.—எ - று.

'கோயிலாகநின்புதல்வர்' என்பதூஉம், 'சிறக்கநின்னாள்' என்பதூஉம் குறிப்புமொழி.

அன்றி, பரிசில்மறுத்தலான் இவன்புதல்வர்க்கும் இவனுக்கும் *தீங்கு வருமென்றஞ்சி நோயிலராகவெனவும், சிறக்கநின்னாளெனவும் கூறினாராக உரைப்பினுமமையும்.

கல்குரவென்பது, கல்லெனக் குறைந்துநின்றது.

'கல்குயின் றன்னவென் னல்கூர் வளிமறை' என்பதற்குக் கல்லாற் செய்தாற்போன்ற பயன் கொள்ளாத யாக்கையையுடைய எனது கல்கூர்ந்த
வளிமறையெனவும், கல்லைத் துளைத்தாற்போன்ற காற்றடைமாத்திரையாகச் செய்யப்பட்ட கல்கூர்ந்த என்மனையெனவுமுரைப்பாருமுளர். (௧௯௬)

* "தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற், றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா லும்மை, யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று, பரிவதூஉஞ் சான்றோர் கடன்" நாலடி. ௫௮.

---

(௧௯௭.) வளிநடந் தன்ன [1] வாச்செல லிவுளியொடு
கொடிநுடங்கு மிசைய [2] தேரின ரெனாஅக்
கடல்கண் டன்ன வொண்படைத் தானையொடு
மலைமாறு மலைக்கும் [3] களிற்றின ரெனாஅ
[4] உருமுரற் றன்ன வுட்குவரு முரசமொடு
செருமேம் படூஉம் வென்றிய ரெனாஅ
மண்கெழு தானை யொண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ விலமே

௧. புறநா. ௧௭௮: ௨ - ஆம் அடிக்குறிப்பையும், "காற்கடுப் பன்ன கடுஞ்செல லிவுளி" அகநா. ௨௨௪ - என்பதையும் பார்க்க.

ந. "கடன்மரு'-ரீனே" அகநா. உகஉ.

க - ச. "வளிகடகதன்ன......களிற்றின் றெறு என்பதனுள் 'எனவும் என்பது' எனுவென்று வந்த எண்ணுக்குறித்தது" தொல். இடை. ரு. சo - பேர்.

ரு. "கடிப்பிகு முரசின் முழங்கி யிடித்திடித்துப், பெய்தினி வாழியோ பெருவான்" (குறுந். உஎo); "உருமிடிமுரசம்" புறநா. கஉக.

க - அ. "வளிகடர்ந்தன்ன......இலமே : என்புழி விணைக்குறிப்பு என்ணிவந்து தொகைபெறுது நின்றது" தொல். இடை. ரு. சச - பேர்.

(பி - ம்.)—1 'வாஅய்செலிவுளி' 2 'தேரினமெனுஅ' 3 'களிற்றினமெனு' 4 'உருமுரன்றன்ன'

## புறநானூற்று மூலமும் உரையும்.

கoஎ

யெம்மால் வியக்கப் படூஉ மோரே
யிடுமுட் படப்பை மறிமேய்ந் தொழிந்த
குறுநறு முஞ்ஞைக் கொழுங்கட் குற்றடகு
புன்புல வரகின் சொன்றியொடு பெறூஉஞ்
சீறூர் மன்ன ராயினு மெம்வயிற்
பாட்டறிந் தொழுகும் பண்பி னோரே
மிகப்பே ரெவ்வ முறினு மெனைத்து

முணர்ச்சி யில்லோ ருடைமை யுள்ளே
நல்லறி வுடையோர் நல்குர
வுள்ளுதும் பெருமயா முவந்துநனி பெரிதே.

திணையும் துறையும் அவை.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன் பரிசினிட்டித் தானைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் பாடியது.

இ - ள்.—காற்றியக்கிறாற்போலும் தாவுதலுடைத்தாகிய கதியை யுடைய குதிரையோடு கொடிநுடங்கும் உச்சியையுடைய தேரினையுடைய ரெனவும் கடலைக் கண்டாற்போலும் ஒள்ளியபடைக்கலத்தையுடைய சேனை யுடனே மலையோடுமாறுபட்டுப் பொருங் களிற்றினையுடையரெனவும் இடி முழங்கிறாற்போலும் அஞ்சத்தக்க முரசத்தோடு போரின்மேம்படும் வெற் றியையுடையரெனவுங்கருதி நிலத்தைப்பொருந்தின படையினையுடைய ஒள் ளியபூணினையுடைய அரசர் வெண்கொற்றக்குடை நிழற்றப்படுஞ்செல்வத் தை மதித்தலிலலேம் ; எங்களால் மதிக்கப்படுவோர், இடப்பட்ட முள் வேலியையுடையதோட்டத்து மறிதின்ன ஒழிந்த நின்ற குறிய காற்றத்தினை யுடைய முஞ்ஞையுந்து கொழுவியகண்ணிறகிளக்கப்பட்ட குறிய இலையைப் புல்லியநிலைதிலவிலைத வரகினதுசோற்றுடனேபெறுகின்ற சிறிய வுணவை யுடைய வேளதராயினும் எம்மிடத்துச்செய்யும் முறைமையையறிந்தடக் கும் குணத்தினையுடையோர்காண் ; யாம் மிகப்பெரிய துன்பமுறினும் சிறி தும் அறிவிலாதோருடையசெல்வம் பயன்படாமையின் அதனைநினையேம் ; நல்லறிவினையுடையோரதுவறுமை பயன்படுதலின் அதனைப் பெருமானே, யாம் உவந்து மிகப்பெரிதும் நினைப்பேம்.—எ - று.

எனுவென்பது, எண்ணிடைச்சொல. (கசள)

---

கக. முஞ்ஞை : புறநா. ௩௨௦ : க ; ௩௨௮ : கச.

கo - கக. " முன்றிலாடு முஞ்ஞை மூதிலை கறிக்கும் " தொல்.

செய். சூ. ௩௧ - பேர் ; ந.

௧௬ - ௮. "நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே, கல்லார் கட் பட்ட திரு" குறள். ௪௦௮.

---



(௧௯௮.) அருவி தாழ்ந்த பெருவரை போல
வாரமொடு பொலிந்த மார்பிற் றண்டாக்
கடவுள் சான்ற கற்பிற் சேயிழை
மடவோள் பயந்த மணிமருு ளவ்வாய்க்
கிண்கிணிப் புதல்வர் பொலிகென் றேத்தித்
திண்டே ரண்ண னிற்பா ராட்டிக்
காதல் பெருமையிற் கனவினு மரற்றுமென்
காமர் நெஞ்ச மேமாந் துவப்ப
வாலமர் கடவு ளன்னநின் செல்வம்
வேல்கெழு குருசில் கண்டே னாதலின்
விடுத்தனென் வாழ்கநின் கண்ணி தொடுத்த
தண்டமிழ் வரைப்பகங் கொண்டி யாகப்
பணித்துக்கூட் டுண்ணுந் தணிப்பருங் கடுந்திற
லின்னோ ரன்னநின் புதல்வ ரென்று
மொன்னார் வாட வருங்கலந் தந்துநும்
பொன்னுடை நெடுநகர் நிறைய வைத்தநின்

முன்னோர் போல்கிவர் பெருங்கண் ணோட்டம்
யாண்டு நாளும் பெருகி யீண்டுதிரைப்
பெருங்கட னீரினு மக்கடன் மணலினு
நீண்டுயர் வானத் துறையினு நன்று
மிவர்பெறும் புதல்வர்க் காண்டொறு நீயும்
புகன்ற செல்வமொடு புகழினிது விளங்கி

---

௧-௨. "மணிமலைப் பணைத்தோளை மாநில மடந்தை, யணிமுலைத் துயல்வரூஉ மாரம் போலச், செல்புன லுழந்த சேய்வரற் கான்யாறு" (சிறுபாண். ௧-௩); "அலைநீ ராடை மலைமுலையாகத், தாரப் பேரியாற்று மாரிக் கூந்தற்,கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை" சிலப். ௫. ௧-௩.

௩. "கடவுட்கற்பின் மடவோள்" அகநா. ௩௧௪.

௪. "மணிபுரைசெவ்வாய்" கலி. ௭௬, ௮௧; அகநா. ௧௬, ௬௬.

௩-௬. "கடவுட்கற்பொடு குடிக்கு விளக்காகிய, புதல்வர்ப்பயந்த புகழ்மிகு சிறப்பி, னன்னராட்டிக் கன்றியுமெனக்கு, மினிதாகின்றாற் சிறக்க நின்னுயுள்" அகநா. ௧௮௪.

௮. ஏமாத்தல்: புறநா. ௧௦௧: ௬ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

௧௧. ~~"வார்கழல் [illegible] கண்ணி" (மணி. ௫ : [illegible]); "வார்கழற் [illegible] யாதோ" சீவக. [illegible]~~. புறநா. 77: 8, அதுக்.

௧௮-௨௨. பன்மைக்கு மணலையும் நீர்த்துளியையும் உவமங்கூறுதலை, "எத்துணை யாற்று ளிடுமணை னீர்த்துளி, புற்பனி யுக்க மரத்தில் நுண்மயி,

நீடு வாழிய நெடுந்தகை யானும்
கேளில் சேஎய் நாட்டினெந் நாளுந்
துளிநசைப் புள்ளினி னளிநசைக் கிரங்கிநின்
னடிநிழற் பழகிய வடியுறை
கடுமான் மாற மறவா தீமே.

திணையும் துறையும் அவை.

பாண்டியன் இலவந்திகைப்பள்ளித்துஞ்சிய நன்மாறனை வடமவண்ணக்கன் [1] பேரிசாத்தனார் பாடியது.

இ - ள்.—அருவிதாழ்ந்த பெரியமலைபோல ஆரத்தோடுபொலிந்தமார்பின்கண் வேட்கைதணியாத தெய்வத்தன்மையமைந்த கற்பினையும் செய்ய ஆபரணத்தையுமுடைய உன்னுடைய மடவோள்பெறப்பட்ட பவழமணி போன்ற அழகிய வாயையும் இன்கிளியையுமுடைய புதல்வர் பொலிக வென்றுவாழ்த்தித் இணையியதேரை யுடையவேந்தே, நின்னைப் புகழ்ந்துபரிசின்மேல் அன்புபெரிதாகலிற் கலவின் கண்ணும் நின்புகழையே கூறும் எனதுவிருப்பத்தையுடையநெஞ்சம் இன்புற்று மகிழ ஆலிலையின்கண்மேவிய திருமால்போலும் நின்னுடையசெல்வத்தையெல்லாம் வேலையுடையதலைவ, கண்டேன்; ஆதலால் விடைகொண்டேன்; வாழ்க, நினது கண்ணி, தொடர்புபட்ட குளிர்ந்த தமிழ்நாடெல்லைமுழுதும் கொள்ளையாகக்கொண்டு நின்பகைவரைத்தாழ்த்து அவர்கள்பொருள்களையும் வாங்கிக்கொண்டுண்ணும் தணித்தற்கரிய மிக்கவலியையுடைய நின்னையொக்கும்வலியையுடைய நின்னுடையமைந்தர்; எக்காலும் பகைவர்தேய அவருடைய பெறுதற்கரிய அணிகலத்தைக் கொண்டுவந்து நும்முடைய பொன்னுடையநெடியநகரின் கண் பொலியவைத்த நின்னுடைய முன்னுள்ளோரைப்போலக, இவருடைய பெரியகண்ணோட்டம்; யாண்டுநாளும்மிகுச செறிந்ததிரையையுடைய பெரியகடலினிடத்தும் அக்கடலகொழித்திடப்பட்ட மணலினும் நீண்டுயர்ந்த மழையிற்றுளியினும் பெரிதும் இவர் பெறும்பிள்ளைகளைக்காணுந்தோறும் நீயும் விரும்பியசெல்வத்துடனே புகழும் இனிதாகவிளங்கி நெடுங்காலம் வாழ்க; பெருந்தகாய், யானும், உதவிலலாத தூரிய நாட்டின்கண்ணே நாடோறும் துளியைநச்சுதலையுடைய வானம்பாடியென்னும் புட்போல நின்னுடைய வண்மைநசையான் இரங்கி நினது அடிநிழற்கட் பழைய அடியின் வாழ்வேன்; விரைந்தசெலவையுடைய குதிரையையுடைய மாறனே, நீ செய்தசெயலை மறவாதொழிவாயாக.—எ - று.

புதல்வர்மார்பிற் பொலிகெனக் கூட்டினுமமையும்.

---

ரத்துணையும்பிறரஞ்சொல்லி னூர்மனம், புக்கனமென்று பொறியறைப்பட்டார்" (வளையாபதி) என்னுமிடத்தும் காண்க.

உ-ம. புறநா. ௫௫: கஎ.

௨௫. " தற்பாடிய தளியுணவிற், புள் " பட்டின. ௬ - ௪.

௨௬. அடிபுறை : புறநா. ௬௭ : ௧௨ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

(பி - ம்.)—1 'பெரியசாத்தன்'



* 'ஆலமர் கடவு ளன்ன நின்' என்றதற்கு ஆலின்கீழமர்ந்த முக்கட்செல வனுகிய கடவுளையொப்ப என்றும்நிலைபெற்றிருப்பேனென்றிருக்கின்ற நீயு மென்றுரைப்பினுமமையும்.

'நின்முன்னோர் போல்கிவர்பெருங்கண்ணோட்டம்' என்றது, அவரும் வழங்காதவைத்தலிற் கண்ணோட்டமிலர்; இவரும் அவரையொக்கக் கண ணோட்டமிலராகவென்பதாயிற்று.

'முன்னோர்போல்கிவர்பெருங்கண்ணோட்டம்' எனவும், 'வாழ்கநின் கண்ணி' எனவும், 'நீடுவாழியர்' எனவுமிவை குறிப்புமொழி; அன்றி, என்னிடத்து நீ செய்தகொடுமையால நினக்குத் தீங்குவரும்; அதுவாரா தொழிகவென வாழ்த்தியதூஉமாம்.

மறவாதீமேயென்றது,'என்னளவில் நீசெய்தசெய்தியை மறவாதொழி யென்பதாயிற்று.

'யாண்டுகொளும்பெருகி' என்பதற்கு நின்னுளே திங்களனையவாக; அத் திங்கள் யாண்டோரனையவாக; யாண்டே ஊழியனையவரம்பினவாக வென்பது கருத்தாகக்கொள்க. (௧௬அ)

---

* புறநா. ௯௧: ௫-௬; "ஆலமர் செல்வ னணிசால பெருவிறல", "ஆலமர்செல்வ" (கலி ௮௧, ௮௩); ஆலமெரு கடவுள" (முருகு. ௨௫௬); "ஆலமர் செல்வன்" சிலப். ௨௪; மணி. ௩: ௧௪௪.

---

(௧௬௯.) கடவு ளாலத்துத் தடவுச்சினைப் பல்பழ
நெருந லுண்டன மென்னது பின்னுஞ்
செலவா னாவே கலிகொள் புள்ளின
மனையர் வாழியோ விரவல ரவரைப்
௫ புரவெதிர் கொள்ளும் பெருஞ்செய் யாடவ
ருடைமை யாகுமவ[1] ருடைமை
யவரின்மை யாகு மவரின் மையே.

திணையும் துறையும் அவை.

பெரும்பதுமனார் பாட்டு.

இ - ள்.—தெய்வமுறையும் ஆலமரத்தினது பெரியகொம்பின்கட் பல பழத்தை நென்னலுமுண்டேமென்னுவாய்ப் பின்னும் அவ்விடத்துப்போதலை

கழைமிசைт யதியா மால்வரை யடுக்கத்துக்
நிணந்தின்று துஞ்சங் கல்லக வெற்ப
களங்கொண்' செருக்கிய நெருப்புத்தலை நெடுவேற்
விளங்குமணிடி கனலுங் கடுங்கண் யானை
இவரே, பூத்த' கொடும்பூண் விச்சிக் கோவே
நாத்தழும் பிருவ யருஅப் புனைகொடி முல்லை
கறங்குமணி ெயப் பாடா தாயினுங்
பரந்தோங்கு சி. ஒந்தேர் கொள்கெனக் ( ாடுத்த
யானே, பரிசிலன் ஒற் பாரி மகளிர்
வரிசையில் வண.' மன்னு மந்தண னியே
னினக்கியான் ெகுெம் வாண்மேம் படுந
ரடங்கா மன்னை'டுப்பக் கொண்மதி சினப்போ
மடங்கா விளையு ெ வடக்கு

திணை - அது ; துறை ‍டுகிழ வோயே.
பாரிமக:ரிரை விச்சி ˚ பரிசிற்றுறை.
பாடியது. காறுழைக் கொண்டுசென்ற
- கபிலர்

௪. புறநா. ௧௨௯ : ௩௨ - .
எ. புறநா. ௫௫ : ௫-ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.
அ. புறநா. ௯௦ : ௧. க்குறிப்பைப் பார்க்க.

ரந்தணன் புலவன் கொண்டுவந் தனனே
நீயே, வடபால் முனிவன் றடவினுட் டோன்றிச்
செம்புபுனைந் தியற்றிய சேணெடும் புரிசை
யுவரா வீகைத் துவரை யாண்டு
நாற்பத் தொன்பது வழிமுறை வந்த
வேளிருள் வேளே விறற்போ ரண்ணல்
றாரணி யானைச் சேட்டிருங் கோவே
யாண்கட னுடைமையிற் பாண்கட னாற்றிய
வொலியற் கண்ணிப் புலிகடி மாஅல்

(உ0உ) வெட்சிக் கானத்து வேட்டுவ ராட்டக்
கட்சி காணாக் கடமா நல்லேறு
கடறுமணி கிளரச் சிதறுபொன் மிளிரக்
கடிய கதழு நெடுவரைப் படப்பை
வென்றி நிலைஇய விழுப்புக ழொன்றி
யிருபாற் பெயரிய வுருகெழு மூதூர்க்
கோடிபல வடுக்கிய பொருணுமக் குதவிய
நீடுநிலை யரையத்துக் கேடுங் கேளினி
நுந்தை தாய நிறைவுற வெய்திய
வொலியற் கண்ணிப் புலிகடி மாஅ
லும்போ லறிவி னுமரு ளொருவன்
புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை
யிகழ்ந்ததன் பயனே யியறே ரண்ணல்
லெவ்வி தொல்குடிப் படீஇயர் மறறிவர்
கைவண் பாரி மகளி ரென்றவென்
றேறாப் புன்சொ னேறுநிசிற் பெரும !
விடுத்தனென் வெலீஇயர்நின் வேலே யடுக்கத்
தரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை

இருங்கோவேள் பாரிமகளிரைக்கொள்ளானாகக் கபிலர் பாடியது.

இ - ள்.—வெட்சியையுடைய காட்டின்கடவன் வேட்டுவரலைப்பத் தனக்குப் புகலிடுக்காணாத நடமாவினது கல்ல ஏறு வரைச்சாரன்மணிமேலேகிளம்பவும் சிதறியபொன் விளங்கவும் விரையவோடும் நெடியமுனைப்பக் கத்து வெற்றிநிலைபெற்ற சிறந்த புகழ்பொருந்திச் சிற்றரையம் பேரரையமென இருகூற்றுப் பெயர்பெற்ற உட்குப்பொருந்திய பழைய ஊரின்கட் பலகோடியாக அடுக்கப்பட்ட பொன்னை நுங்களுக்கு உதவிய நீடியநிலையையுடைய அரையத்தினது கேட்டையும் இனிக் கேட்பாயாக ; அதுகெடுதற்குக்காரணம்: நினது தாளால்தரப்பட்ட பொருளையன்றி நுந்தையுடைய உரிமையை நிறையப்பெற்ற தழைத்த கண்ணியையுடைய புலிகடிமாலே, நும்மைமயொக்கும் அறிவினையுடைய நுங்குடியுளொருவன், புகழ்ந்தசெய்யுளையுடைய கழாஅத்தலையாரெனனும்புலவரை அவமதித்ததனுலுண்டான பயன் ; இயற்றப்பட்டதேரையுடையதலைவ, இவர் எவ்வியுடைய பழைய குடியிலேபய்வார்களாக ; பின்னை இவர் கைவண்மையையுடைய பாரிமகளிரென்று சொல்லிய எனது தெளியாத புன்சொல்லைப் பொறுப்பாயாக;பெருமானே, யான் நின்னை விடைகொண்டேன் ; நின்வேல் வெல்வதாக ; அரைமலையில் முகையற மலர்ந்த கரியகாலையுடைய வேங்கையினது கரிய புறவிதழையுடைய ஒள்ளியபூப்பரந்த பொற்றைக்கல் பெரும்புலியினது வரியையுடையபுறத்தையொக்கும் பெரிய மலையிடத்தூர்களையுடைய காட்டையுடையோய்.—எ - று.

புலிகடிமால், அண்ணல், காடுகெழுவோய், அரையத்துக்கேடும் கேள், இனி; அது கழாத்தலையையிகழ்ந்ததன்பயன் ; இப்பொழுது எவ்வி தொல்குடிப்படீஇயர், இவர் பாரிமகளிரென்ற புன்சொலைபொறுப்பாயாக; பெருமானே, நின்னைவிடுத்தேன் ; நின்வேல்வெல்வதாகவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

ஒலியற்கண்ணி - தளிர்மாலையெனினுமமையும்.

நீடுநிலையரையத்துக்கேடும் கழாத்தலையையிகழ்ந்ததன்பயனென்ற உம்மையான், இவ்விகழ்ச்சியும் உனக்குக் கேடுதருமென்பதாயிற்று.

அது கெடுதற்குக்காரணம், கழாத்தலையை நமருள் ஒருவன் இகழ்ந்ததனால், அவன்வாக்குத் தப்பாதாகலின், அவன் வசையாகப்பாடினனென்று சொல்லுவர் ; அதுவேயென்பதாம்.

'வெல்இயர்நின்வேல' என்றது குறிப்புமொழி.

'நுரைதாமயிலைநவுறவெய்திய' என்பதூஉம்,
என்பதூஉம் இகழ்ச்சிதோன்றநின்றன.

'நம்போலறிவின்'

வேங்கைவீ தாய தறுகல இரும்புலிவரிப்புறங்கடுக்குமென்றகருத்து : ஏதம்செய்யாததூஉம் ஏதம்செய்வதுபோலக் கண்டார்க்கு அச்சம்வரத் தோன்றுமென்றமையான், இதுவும் இகழ்ச்சிதோன்ற நின்றது. (உ0உ)

---

உக. தொல். விளிமரபு, சூ. கஉ - ந. மேற்.



(உ0௩.) கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினுந்
தொல்லது [1] விளைந்தென நிலம்வளங் கரப்பினு
மெல்லா வுயிர்க்கு [2] மில்லால் வாழ்க்கை
யின்னுந் தம்மென வெம்மனோ ரிரப்பின்
௫ முன்னுங் கொண்டிரென நும்மனோர் மறுத்த
லின்னா தம்ம வியலே ரண்ணை
யில்லது [3] நிரப்ப லாற்றா தோரினு

முன்னி வருநர் நசையிழப் போரே
யனையையு மல்லை நீயே யொன்னா
ரரெயி லவர்கட் டாகவு நுமதெனப்
பாண்கட னிறுக்கும் வள்ளியோய்
பூண்கட னெந்தைநீ யிரவலர் புரவே.

திணையும் துறையும் அவை.

சேரமான் பாமுளூரெறிந்த
நெய்தலங்கானலிளஞ்சேட்சென்னியை ஊன்பொதிபசுங்குடையார்
பாடியது.

(இ - ள்.) — கழிந்தகாலம் பெய்ததெனக்கருதி மழை பெய்யாதுமாறினும் முற்காலத்துவிளைந்ததெனக்கருதி நிலம் விளையாவை ஒழியினும் எல்லாவுயிர்கட்கும் உயிர்வாழ்க்கையில்லை; அதுபோல இப்பொழுதும் எனக்குப்பரிசில் தாருமென்று சொல்லி எம்போல்வார் இரப்பர்; அவர்க்கு முன்னரும்பரிசில்

---

க - உ. "தகரவுகரம், 'கழிந்தது......கரப்பினும்' என்னும் புறப்பாட்டினுள், 'பொழிந்து' எனவும், 'விளைந்து' எனவும் இறந்தகாலம்பற்றி வந்தமையின் ஏனையவற்றிற்கு நே சிறுபான்மை இறந்தகாலமுமுண்டென வறிந்துகொள்க", "கழிந்தது......கரப்பினும் : எனபுழிப் பொழிந்தெனவும் விளைந்தெனவும் இறந்தகாலம் உணர்த்தின" (தொல். வினை. சூ. ௪ - கல்; ந); "கழிந்தது...கரப்பினும் : என பொழிந்து விளைந்தென்னும் தவ்வீற்றுத் தன்மையொருமைவினைமுற்றுகள் இறந்தகாலமும் சிறுபான்மை காட்டுமெனவுங்கொள்க" இ - வி. சூ. ௫0 - உரை.

க - கக. "பெரிய வாயினு மமர்கடந்து பெற்ற, வரிய வென்று தோம்பாது வீசி" (பதிற். ௪௪); "அரிய வெல்லா மெளிதி னிற்கொண், டுரிய வெல்லா மோம்பாது வீசி" மதுரை. ௧௪௫ - ௬.

* மு. "கொள்ளார் தேஎங்குறித்த கொற்றமும் - பகைவர் நாட்டினைத் தான் கொள்வதற்கு முன்னேயுங் கொண்டான்போல வேண்டியோர்க்குக் கொடுத்தலைக் குறித்தவெற்றியும்; தன்னையிகழ்ந்தோரையும், தான் இகழ்ந்தோரையும் கொள்ளாரென்ப......'கழிந்தது பொழிந்தென' என்னும் புறப்பாட்டினுள், 'ஒன்னார்....வள்ளியோய்' என்பதுமது" தொல். புறத்திணை. சூ. கஉ - ந.

(பி - ம்.)—1 'வினைந்ததுகிலம்' 2 'இலவாழகயகயேயின்னுள்' 3 'விரப்ப தாற்று'



கொண்டீரென்று நும்போல்வார்மறுத்தல் இன்றுத; கேளாய். இயற்றப்பட்ட தேரையுடைய அண்ணலே, இல்லாதபொருளைத் தேடிசிரப்பமாட்டாத வறுவியோரினும், அவரால்பரிசில்வினைந்துவரப்படுவார் கொடாராயின் அவ் விரப்போரால் நச்சப்படும் இன்பத்தையிழப்பர்; தம்வறுமையாற்கொடுக்க முடியாமையின் நாணி அவரெதிர் முகநோக்கமாட்டாது இன்பமிழக்குமாறு தீர்தன்மையையுமல்லை நீ, இறந்துபடுவ; பகைவரது அரிய அரண் அவரிடத்ததாகவும் அதனை அழித்துக்கொள்ளுவதற்முன்னே நம்முடைய தெளப் பாணர்க்குக் கடனாகக்கொடுக்கும் வென்றியோடுகூடிய வண்மையையுடையோயாதலான் எம் இலைவ, நீ இப்போரைப்பாதுகாத்தலை முறைமையாகப் பரிகரிப்பாயாக.—எ - று.

அன்னையுமல்லையென்பதற்கு இரவலர்வேண்டுமளவும் பாணியாது முன்னே அளித்தலின், நசையிழப்போர்தன்மையையுடையாயல்லையென்றுமாம்.

ாளக்ஃகொடுக்குமுயர்ிவு
கிலக்குத் தக்கதறிந்து செய்யொ பதுகூறிரைாம்.

'பெருங்கட ,லுலூ ராகுப ர்வேட்டோர்' எ 'பதனுத் செலவ ரேயாயினும் ச எிப்ோரலைார்ாத்செய்ொ பதும், 'உண் 'ாமருங்கி லதர்பலவாகும்' என்பதனுல நீ வள்ளி 'யயாக ின் பதும் கொள்ளப்படும்.

கிப்ா ைகத்தேனென்

(௨௦௪)

---

௧௦ - ௧௧. புறநா. ௧௨௪ : ௧ - ௫.

௧௩. புறநா. ௧௫௯ : ௧௯ ; "கருவிமாமழை" (குறுந். ௪௨); "கருவி வானம்" சீவக. ௭௨௫.

* புறநா. ௩ : ௨௫-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

† சிலப். ௨௯ : ௩௦.



(௨௦௫.) முற்றிய திருவின் மூவ ராயினும்
பெட்பின் றீதல் யாம்வேண் டலமே
விறற்சினந் தணிந்த விரைபரிப் புரவி
யுறுவர் செல்சார் வாகிச் செறுவர்
௫ தாளுளந் தபுத்த வாண்மிகு தானை
வெள்வீ வேலிக் கோடைப் பொருந
சிறியவும் பெரியவும் புழைகெட விலங்கிய
மான்கணந் தொலைச்சிய கடுவிசைக் கதநாய்

கோன்சிலை வேட்டுவ நோயிலை யாகுக
வார்கலி யாணர்த் தரீஇய கால்வீழ்த்துக்
கடல்வயிற் குழீஇய வண்ணலங் கொண்மூ
நீரின்று பெயரா வாங்குத் தேரோ
டொளிறுமருப் பேந்திய செம்மற்
களிறின்று பெயரல பரிசிலர் கடும்பே.

திணையும் துறையும் அவை.

கடியநெடுவேட்டுவன் பரிசிலீட்டித்தானைப் பெருந்தலைச்சாத்தனார் பாடியது.

இ - ள்,—நிறைந்தசெல்வத்தையுடைய மூவேந்தராயினும் எம்மைப் பேணுதலின்றி ஈதலை யாங்கள் விரும்பேம்; வென்றியானுளதாகிய சினத் தீர்ந்த விரைந்த செலவையுடைத்தாகிய குதிரையையுடைய அஞ்சி வந்தடைந்த பகைவர்க்குச் செலனும் புகலிடமாய அவ்வாறலதில் போர்செய்யும் பகைவருடைய முயற்சியையுடைய கூர்ந்த உள்ளத்தைக்கெடுத்த வாட்போரின் மிக்க படையினையுடைய வெள்ளியபூவையுடைத்தாகிய முல்லைவேலியையுடைய கோடையென்னுமலைக்குத்தலைவ, சிறியனவும் பெரியனவுமாகிய புழைகளைப் போக்கறவிலக்கிய மானினது திரட்சியைத் தொலைத்த கடிய செலவையுடைய கணைமிக்காரையும் வலியவில்லையுமுடைய வேட்டுவ, நீ நோயின்றிஇருப்பாயாக; இடிமின்னு மிக்க ஓசையையுடைய புதுப்பெயலைத் தரவேண்டிக் கால்வீழ்த்துக் கடலிடத்தேதிரண்ட தலைமையையுடைய முகில் நீரின்றி மீளாதவாறுபோலத் தேருடன் விளங்கிய கோடுயர்ந்ததலைமையை யுடைய களிற்றையின்றி மீளா, பரிசிலர் சுற்றம்.—எ - று.

புரவியையுடைய விறற்சினத்தணிந்த உரவோரெனவியையும்.
செல்சார்வாகித்தாளுளத்தபுத்த பொருநவெனவியையும்.
புழைகெடவிலங்கிய ஈரயெனவியையும்.

---

க - உ. புறநா. கருகூ : உஉ - ரு.
கூ. புறநா. உ0கூ : கச.
அ - கூ. புறநா. உகூ :க - உ.

## புறநானூறு மூலமும் உரையும்.

கூ.உக

வெள்ளியென்றது அதனையுடைய முல்லை.
மூவராயினுமென்ற உம்மை சிறப்பும்மை.
கோடைப்பொருந, வேட்டுவ, பெட்பின்றிதல் யாம்வேண்டலம்; பரிசிலர்கடும்பு களிறின்றுபெயரல ; நீ கோயிலையாகுகவெனக்கூட்டுக.
யான்களிறின்றிப்பெயராகின்றேனென்பது கருத்தாகலின், கோயிலையாகவென்பது இகழ்ச்சிக்குறிப்பு.
'புழைகெட விலங்கி' என்பதூஉம் பாடம்.
(உ0ரு)

---

(உ0கூ.) வாயி லோயே வாயி லோயே
வன்னியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தா

[1] முன்னியது முடிக்கு முரனுடை யுள்ளத்து
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க் கடையா வாயி லோயே
கடுமான் றோன்ற னெடுமா னஞ்சி
தன்னறி யலன்கொ லென்னறி யலன்கொல்
லறிவும் புகழு முடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே யதனாற்
காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை
[2] மரங்கொற் றச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
யெத்திசைச் செலினு மத்திசைச் சோறே.*

---

க. மு. சிலப். உ0 : உச ; விளியேற்கும்பொழுது ஆவீறு.... ஏகாரம்பெற்று வந்ததற்கு மேற்கோள் ; தொல். விளி. சூ. கஉ - ந ; நன் - மயிலை. சூ. ௩0௬ ; நன் - வி. சூ. ௩0௭.

ச. மு. புறநா. சஎ : சு.

அ - க. புறநா. உ0எ : எ.

க0. "கோச்சீர் சுருக்கிக் காய கலப்பையிர்", "காஅய்க் கொண்டனம் மியம்" மலைபடு. கங, ௩சுரு.

க0-கங. "ஆற்றவுங் கற்றா ரறிவுடையா ரஃதுடையார், நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை யந்நாடு, வேற்றுநா டாகா தமவேயா மாயினா, லாற்றுணா வேண்டுவ தில்" பழ. ருரு.

* மு. பாடாண்டிணைத்துறைகளுள், 'செய்வரல் வருத்தம்வீட வாயில், காவலர்க்குரைத்த கடைநிலை' என்பதற்கு மேற்கோள்; (தொல். புறத்திணை. சூ. உக - இளம்); "வாயிலோயே......சோறே : இது தலைவனை எதிர்ப்பட்டுக் கூறாது வாயிலோனை நோக்கிக் கூறலிற் பரிசில்கடாயதின்றாம்" ஷை ஷை ஷை சூ. ரு - ந.

(பி-ம்.)—1 'முன்னியது முடிக்குமுரனுடை' 2 'மரங்கொறச்சச்'





திணையும் துறையும் அவை.

அதியமான்நெடுமானஞ்சி பரிசினீட்டித்தானை ஔவையார் பாடியது.

இ - ள்.—வாயில்காப்போய், வாயில்காப்போய், வண்மையுடையோரது செவியிடத்தே விளங்கிய சொற்களை விதைத்துத் தாம் நினைந்தபரிசிலை விளைக்கும் வலியையுடைத்தாகிய நெஞ்சினையுடைய, மேம்பாட்டிற்கு வருந்தும் இப்பரிசிலான்வாழும் இல்வாழ்க்கையையுடைய பரிசிலர்க்கு அடையாத வாயிலைக்காப்போய், விரைந்த குதிரையையுடைய குருசிலாகிய நெடுமானஞ்சி தான் தன்தரமறியான்கொல்லோ? அதுகிடக்க, என்தரமறியான்கொல்லோ? அறிவும்புகழுமுடையோர் இறந்தாராக வறிய இடத்தையுடைய உலகமுமன்றே; ஆகலாற் காவினெம் கலங்களை; கட்டினெம் முட்டுக்களை; மரத்தைத்துணிக்கும் தச்சன்பயந்த மழுவையுடைய கைத்தொழில்வல்ல மகார் காட்டிடத்துச்சென்றால அக்காட்டகம் பயன்படுமாறு அவர்க்கு எத்தன்மைத்து? எமக்கும் யாதொருதிசைக்கட்போகினும் அத்திசைக்கட் சோறு அத்தன்மைத்து.—எ-று.

கலம் - யாழுமாம்.

உள்ளத்தையுடைய பரிசிலரெனினுமமையும்.

மழுவென் றது வாய்ச்சியை; தறிகையுமாம்.

காட்டகமென்றாரேனும் கருதியது அதன்கண் மரமாகக்கொள்க.

பரிசிலர்க்குச் சிறுரும், கல்விக்கு மழுவும், செல்வநிலைக்குக் காடும், சோற்றிற்குக் காட்டுள்மரமும் உவமையாகக்கொள்க.
(உ0௬)

---

(உ0௭.) எழுஇனி நெஞ்சஞ் செல்கம் யாரோ
பருகு வன்ன வேட்கை யில்வழி
யருகிற் கண்டு மறியார் போல
[1] வகனக வாரா முகனழி பரிசி
௫ றுளி லாளர் வேளா ரல்லர்
வருகென வேண்டும் வரிசை யோர்க்கே
பெரிதே யுலகம் பேணுநர் பலரே

உ. "பருகு வன்ன காதலுள்ள மொடு" (அகநா. ௬௬௬); "பருகு வன்ன வருகா நோக்கமொடு" (பொருந. ௭௭); "பருகு வன்ன நோக்க மொடு" (பெருங். ௬. ௭: ௮0); "பருகுவான் போல நோக்கும்", "பருகு வனள்போ னோக்கி" (பாக. ௪: தருவன்பதம். ௬௫; ௬௨ ௧0: சகட முதைத்த. உக); "மலர்த்தடங் கலைவேல னாயாப், பருகுவான் னோக்கி" கூர்ம. திருக்கல்யாண. ௪௧.

போல

எ. இவ்வடியுடன், "காத மிருபத்து நான்கொழியக் காசினியை, யோதக் கடல்கொண் டொளித்ததோ-மேதினியிற், கொலைமிகுத் தேன்சொரியுங் கொற்றவா நீமுனிந்தா, லில்லையோ வெங்கட் கிடம்" (தனிப்பாடல்) என் பதை ஒப்புநோக்கற்பாலது.

(பி-ம்.) [illegible] 'அகனது'

## புறநானூறு மூலமும் உரையும்.

௨௦௭

*பீளி முன்பி றுனி போல*
*வுள்ள முன்னலிற் றடங்காது வெள்ளென*
*நோவா தோன்வயிற் றிரங்கி*
*வாயா வன்கனிக் குலமரு வோரே.*

திணையும் துறையும் அவை.

வெளிமான்துஞ்சியபின் அவன் தம்பி இளவெளிமானைப் பரிசில் கொடுவென அவன்சிறிதுகொடுப்பக் கொள்ளாது பெருஞ்சித்திரனார் பாடியது.

இ - ள்.—எழுக திருப்பாயாக, இனி எம்முடைய நெஞ்சமே, யாம்போ வேமாக; யார்தாம், கண்ணுற்பருகுவதுபோலும் விருப்பமில்லாதவிடத்துத் தம்மருகே கண்டுவைத்தும் கண்டறியாதார்போல உள்ளமகிழவாராது தம்முகமாறித்தரப்பட்ட பரிசிலைப்பிறிதோரிடத்துச்செல்லமுயலும் முயற்சி யில்லாதோர் விரும்பாரல்லர்; இங்ஙனம் வருவீராகவென்று எதிர்கோடல் வேண்டும் தாமுடையோர்க்கு; பெரிது உலகம்; விரும்புவோரும் பலர்; ஆதலால், மதம்பொருந்திய வலியையுடைய யானையையொப்ப, உள்ளம் மேற்கோளின்றித்தணியாது, கண்டோர்யாவர்களும் தெரியத் தம்மைக் கண்டிரங்காதவனிடத்தே நின்றுதிரங்கி உளனுமகனியாத வலியபழத்தின் பொருட்டுச் சுழல்வோர்.—எ - று.

வன்கனியென்றது, நெஞ்சுநெகிழ்ந்துகொடாதபரிசிலை.

உலமரலும்: அலமரல் போலவதோருரிசசொல்.

வரியா வன்கனிக்கு உலமருவோர்யாரோ? நெஞ்சமே, உள்ளம் உள்ள விந்தடங்காது யாளிபோல இனி எழுவெனக்கூட்டி விணைமுடிவுசெய்க.

வரிசையோர்க்கு யாளிபோல உள்ளம் உள்ளவிந்தடங்காநெனமுற்றுக்கி உரைப்பாருமுளர். (உ0எ)

---

அ. "ஆளி நன்மா னணங்குடைக் குருளை, மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி" பொருந. கூகூ - சo.

கக. "நற்றேர் மருவற் குலமரு வோரே" ஐங்குறு. சகூச.

(உ0அ.) குன்று மலையும் பலபின் னொழிய
வந்தனென் பரிசில் கொண்டனென் செலற்கென
நின்ற வென்னயந் தருளி யீதுகொண்
டீங்கனஞ் செல்க தானென வென்னை
யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்
காணா தீத்த விப்பொருட் கியானோர்

க - உ. "சேட்சென்று நல்குவார் கட்டே நசை" நாலடி. உருரு.

வாணிகப் பரிசில னல்லேன் பேணித்
தினையனைத் தாயினு மினிதவர்
துணையள வறிந்து நல்கினர் விடினே.

திணையும் துறையும் அவை.

அதியமான்நெடுமானஞ்சியுழைச்சென்ற பெருஞ்சித்திரனாரைக் காணாது இதுகொண்டுசெல்கென்று அவன்பரிசில்கொடுப்பக் கொள்ளாது அவர் சொல்லியது.

இ - ள்.—குன்றுகளும் மலைகளும் பல பின்கழியவந்தேன் யான் பரிசில்கொண்டேகுவப் போதற்கெனச்சொல்லிநின்றவென்னை அன்புற்றருளி இப்பொருளைக்கொண்டு இவ்வாறுபோக, தானென்னைச்சொல்ல என்னை எப்பரிசறிந்தான், பகைவரால் தடுத்தற்கரியவேந்தன் ? என்னையழைத்துக்காணாதே தந்த இப்பொருட்கு யான் ஓர் ஊதியமேகருதும் பரிசிலனல்லேன் ; விரும்பித் தினைத்துணையளவாயினும் நன்று, அந்தப்பரிசிலாது கல்விமுதலாகிய பொருந்திய எல்லையையறிந்து கொடுத்துவிடின்.—எ - று.

ஈங்கனஞ்செல்கவென்றது,காணாதே அவன்சொல்லிவிட்டவார்த்தையை.

அவர்துணையளவறிந்து பேணி நல்கினர்விடின், தினையளவாயினுமினிதெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

யான் தரங்கெடப் பொருள்கொடுபோமவனலலேன்; அவனாயின் இதுவும் கொடுபோவன; நீ எனக்குத் தரமறிந்து தரவேண்டுமென்பதாம்.

'அவர்துணையளவு' என்னாத் தம்மை உயர்வின்மேலிட்டுக்கூறினர். (௨௦௮)

---

௧. புறநா. ௧௨௧ : ௩.

௭, ௯. புறநா. ௧௫௧ : ௨ - ௫ ; ௨௦௫ : ௧ - ௨. * மு. ௩௬ - ௭.

பரிசிலனிலைகூறியதற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. ௫.

---

(௨௦௯.) பொய்கை நாரை போர்விற் சேக்கு
நெய்தலங் கழனி நெல்லரி தொழுவர்
கூம்புவிடு மென்பிணி யவிழ்ந்த வாம்ப
லகலடை யரியன் மாந்தித் தெண்கடற்

படுதிரை யின்சீர்ப் பாணி தூங்கு
மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந
பல்கனி நசைஇ யல்குவிசம் புகந்து
பெருமலை விடரகஞ் சிலம்ப முன்னிப்

௧. போர்வு - நெற்கதிர்ப்போர ; "கயலார் நாரை போர்விற் சேக்கும்" ஐங்குறு. ௧.

௨. புறநா. ௨௪ : ௧ ; "நெல்லரிதொழுவர்" நற். ௧௧௫.
௩. புறநா. ௧௧ : ௩.

## புறநானூறு மூலமும் உரையும்.

௧௨௫

பழனுடைப் பெருமரந் தீர்ந்தெனக் கையற்றுப்
பெறாது பெயரும் புள்ளினம் போலநின்
னசைதர வந்துநின் னிசைநுவல் பரிசிலேன்
வறுவியேன் பெயர்கோ வாண்மேம் படுந
வீயா யாயினு மிரங்குவே னல்லே
னோயிலை யாகுமதி பெரும நம்முட்
குறுநணி காண்குவ தாக நாளு
நறும்ப லொலிவருங் கதுப்பிற் றேமொழித்
தெரியிழை மகளிர் பாணி பார்க்கும்

பெருவரை யன்ன மார்பிற்
செருவெஞ் சேஎய்நின் மகிழிருக் கையே.

திணை - அது ; துறை - பரிசில்கடாநிலை.

* மூவன்பரிசில்நீட்டித்தானைப் பெருந்தலைச்சாத்தனார் பாடியது.

இ - ள்.—பொய்கைக்கண் மேய்ந்த நாரை போரின்கண் உறங்கும் செய்தலையுடைய அழகிய வயற்கண் நெல்லையறுக்குமுழவர் முகையவிழ்ந்த மெல்லிய இதழ்கள் நெகிழ்ந்த ஆம்பலினது அகன்ற இலையதனாலே மதுவையுண்டு தெளிந்த கடலினது ஒலிக்குந்திரையின் இனியவாகிய தாளத்தேயாடும் மென்புலத்தார்களையுடைய நல்லநாட்டுக்கு வேந்தே! பலபழத்தையும் நச்சித்தாம் வாழ்தற்கிடமாகிய ஆகாயத்தின்கண்ணே உயரப்பறந்து பெரியமலையின்முழை எதிரொலிமுழங்கச்சென்று அவ்விடத்துப் பழமுடைய பெரியமரம் பழுத்துமாறிற்றாகவருந்திப் பழம்பெறாதேமீளும் புள்ளினத்தையொப்ப நினது நச்சப்படுந்தன்மைகொண்டுவரவந்த நின்புகழைக் கூறும் பரிசிலேன்யான் வறியேனாய் மீளக்கடவேனோ? வாட்போரின்கண் மேம்படுவோய், நீ ஒன்றைக் கொடுத்திலையாயினும் யான் அதற்கு வருந்துவேனல்லேன் ; அதுநிற்க, நோயின்றியிருப்பாயாக ; பெரும, நம்மிடத்துளதாகிய அணிய அணுமையைக் காண்பதாக; நாடொறும் நறிய பலவாகிய தழைத்த மயிரையும் தேன்போலுஞ்சொல்லையும் ஆராய்ந்த ஆபரணத்தினையுமுடைய மகளிர் ஒருவரினொருவர் புணர்தற்குக் காலம்பார்க்கும் பெரியமலைபோலு மார்பினையுடைய போரை விரும்பும் சேயையொப்பாய்! நினதுமகிழ்ச்சியையுடைய நாளோலக்கம்.—எ - று.

பாணிபார்க்கும் மார்பு - பாணிபார்த்தற்கு பதவாகிய மார்பு.

நம்முட் குறுகணி காண்குவதாகவென்றது, நீ என்மாட்டுச்செய்த அன்பின்மையை அவ்விருக்கையன்றிப் பிறரறியாதொழிவாராகவென்னும் நினைவிற்று.

---

௪௨. வினையெச்சத்தன்மை வினைக்குறிப்புமுற்றுக்கு மேற்கோள் ;

தொல். எச்ச. சூ. கக - ந.

கச. புறநா. உ0௫ : க.

*மூவனென்னும்பெயர் நற்றிணை கஅ-ஆம் செய்யுளிலும் வந்துள்ளது.



பொருக, வாண்மேம்படுக, சேஎய், நின் இசைநுவல்பரிசிலேன் வறட்டேன் பெயர்கோ நீ ஈயாயாயினும் இரக்குவேனல்லேன்; பெரும, கோயிலை யாகுமதி; நம்முட் குறுநணியை நின்னிருக்கை காண்குவதாக; பிறர்காளு தொழுகவெனக்கூட்டுக.

கோயிலையாகென்பது, நீசெய்ததில்கால் கோயுறுவை, அஃதுறுதொழுக வென்பதாம்; இனி, நின்மகிழிருக்கைக்கண் நம்முள் மிக அணித்தாகக காணுங் காட்சி உளதாகவென்றமமாம்.

இதனுத் காட்சியுண்டாகாதென்பது குறிப்பு.

இனி, 'குறுநணி காண்குவ தாக' என்பதற்கு நம்மிடத்து மிகவும் மனத தாற்காணுங்காட்சி உளதாகவெனபதுகூடாது, நீசெய்தகொடுமையானென் றுரைப்பினுமமையும்.

(உ0சு.)

(உ௫௦.) மன்பதை காக்குநின் புரைமை நோக்கா
தன்புகண் மாறிய வறனில் காட்சியொடு
நும்ம னோருமற் றினைய ராயி
னெம்ம னோரிவட் பிறவலர் மாதோ
செயிர்தீர் கொள்கை யெம்மெங் காதலி
யுயிர்சிறி துடையா ளாயி னெம்வயி
னுள்ளா திருத்தலோ வரிதே யதனா
லறனில் கூற்றந் திறனின்று துணியப்
பிறனா யினன்கொ லிறீஇயரென் னுயிரென
நுவல்வுறு சிறுமையள் பல்புலந் துறையு
மிடுக்கண் மனையோ டிரிய விங்கிலை
விடுத்தேன் வாழியர் குருசி லுதுக்கா
ணவல நெஞ்சமொடு செல்வனிற் கறுத்தோ

---

க. புறநா. எக : கஎ.

ங. "நும்ம னோருமற் றினையராயினென்புழி அன்னோரென்பது உவம வுருபாகிய இடைச்சொன் முதனிலையாகப் பிறந்தபெயர்" தொல். எச்ச. சூ. கஅ - ந.

ங - ச. தொல். எச்ச. சூ. கச - ந. மேற்; "நும்ம னோருமற் றினைய

ராயி, னெம்ம னோரிவட் பிறவலர் மாதோ: என்புழி அன்னோரெனபது இடைச்சொன்முதனிலையாகப்பிறந்த குறிப்புப்பெயராகலானும், நும்மையன்னோர் எம்மையன்னோரென இரண்டாவது விரித்தற்கேற்புடைமையறிக" ஷை ஷை கஅ - சே.

௫. "செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ" புறநா. ௩: ௬.



சாருங்கடி முனையரண் போலப்
௧௫ பெருங்கை யற்றவென் புலம்புமுந் துறுத்தே.

திணையும் துறையும் அவை.
சேரமான்குடக்கோச் சேரலிரும்பொறை
பரிசினிட்டுத்தானைப்

பெருங்குன்றூர்கிழார் பாடியது.

இ - ள்.—உயிர்ப்பன்மையைக்காக்கும் நினது உயர்ச்சியைப்பாராது காதல கண்மாறிய அறமிலலாதபார்வையுடனேகூடி நம்போல்வார்யாவரும் இதற்கொத்த அறிவையுடையராய் அருள்மாறுவாராயின் எம்போலவார் இவ்வுலகத்துப் பிறவாதொழியக்கடவர்; குற்றந்தீர்ந்த கற்பினையுடையளாய எம்மைவிரும்பியகாதலி இறந்துபடாது உயிர்வாழ்வுடையாளாகக்கூடின் எம்மிடத்து நினையாதிருத்தல் அரிது; அதனால், அறனில்லாதகூற்றம் திறப்பாடின்றி உயிர்கொளத்துணிய இறந்துபட்டாள் கொல்லோ? என்னுயிர் கெடுவதாகவென்று சொல்லுதலுற்ற நோயையுடையாளாய்ப் பலபடவெறுத்துறையும் மனைவியது துன்பந்தீர்க்கவேண்டி இப்பொழுதே விடைகொண்டேன்; வாழ்வாயாக; இறைவ, இதனைப்பாராய்; இன்னாமையையுடைய நெஞ்சத்துடனே போவேன், நின்னைவெகுண்டாரது அணுகுதற்கரிய காவலையுடைய முனையிடத்து அரணைப்போலப் பெரிய செயலற்ற எனது வறுமையை முன்போகவிட்டு.—எ - று.

குருசிலே, நம்மனோரும் இனையராயின் எம்மனோர் இவட்பிறவார்; எங்காதலி உயிர் சிறிதுடையளாயின் நினையாதிருத்தலரிது; அதனால், அம்மனையோளிடுக்கண் தீர்க்கவேண்டி இப்பொழுதே விடுத்தேன்; நிற்கறுத்தோர்முனையரண்போலக் கையற்ற என்புலம்பு முந்துறுத்துச்செல்வேன், வாழியரெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

‘உறுக்கான்’ என்றது அசைசெலவை.

என்வறுமை என்னை விட்டுநீங்கப்போதலொழியப் புலம்பை முந்துறுத்துக்கொண்டு போகாநின்றேனென இரங்கிக்கூறியவதனால், ‘வாழியர்குருசில்’ என்பது இகழ்ச்சிக்குறிப்பாயிற்று.

‘உயிர்வெங்காதலி’ என்று பாடமோதுவாருமுளர். (உ௧0)

(௨௧௧.) அஞ்சுவரு மரபின் வெஞ்சினப் புயலே
றணங்குடை யரவி னருந்தலை துமிய
நின்றுகாண் பன்ன நீண்மலை மிளிரக்
குன்றுதூ வெறியு மரவம் போல
முரசெழுந் திரங்குந் தானையொடு தலைச்சென்
றரைசுபடக் கடக்கு முரைசா லோன்றனின்
உள்ளி வந்த வோங்குநிலைப் பரிசிலென்

௧ - ௪. புறநா. ௧௭ : ௩௮ - ௪௧ ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.



வள்ளியை யாதலின் வணங்குவ னிவனெனக்
கொள்ளா மாந்தர் கொடுமை கூறநின்
னுள்ளியது [1] முடித்தோய் மன்ற முன்னாட்
கையுள் ளதுபோற் காட்டி வழிநாட்
பொய்யொடு நின்ற புறநிலை வருத்த
நாணா யாயினு நாணக் கூறியென்
னுணங்கு செந்நா வணங்க வேத்திப்
பாடப் பாடப் பாடுபுகழ் கொண்டநின்
னாடுகொள் வியன்மார்பு தொழுதனென் பழிச்சிச்
செல்வ லத்தை யானே வைகலும்
வல்சி யின்மையின் வயின்வயின் மாறி

இல்லெலி மடிந்த தொல்சுவர் வரைப்பிற்
பாலு மின்மையிற் பல்பாடு சுவைத்து
முலைக்கோள் மறந்த புதல்வனொடு
[2] மனைத்தொலைந் திருந்தவென் வாணுதற் படர்ந்தே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—அஞ்சத்தக்க முறைமையையுடைய வெய்யசினத்தையுடைய மழையின்கணுள்ள இடியேறு, அச்சமுடைய பாம்பினது அணுகுதற்கரிய தலைமணிய நிலவகலத்தை நிலைமுறபார்ப்பதுபோன்ற நீண்டமலைபிறழச் சிறு மலைதாவவெறியும் ஓசைபோல வீரமுரசு இரங்கொலிக்கும் படையுடனே மேற்சென்று வேந்தர்பட எதிர்நின்றுகொல்லும் புகழமைந்த தலைவ, நீ வள்ளியையாதலான் எமக்குத் தாழ்ந்து பரிசில நல்குவனிவனென்று நின்னை நினைந்துவந்த உயர்ந்த நிலைமையையுடைய பரிசிலேனாகிய யான் நிலக்கு எம்மை எதிரேற்றுக்கொள்ளாமாகாத கொடுமையைச்சொல்லவும் நின்னுடைய நினைவேசெய்தாய், நிச்சயமாக; முன்னைநாட் பரிசில்கையிலேபுகுந்தது போலக்காட்டிப் பிற்றைநாட் பொய்யைப் பெற்றுநின்ற நினதுபுறநிலைமைக்கு யான்வருந்திய வருத்தத்திற்கு நீதான் காணுயாயினும் நீகாணச் சொல்லி எனது நண்ணிய ஆராய்ச்சியையுடைய செவ்வியகா வருத்தப் புகழ்ந்து நாட்டோறும் பாடப்பாடப் பின்னரும் பாடவேண்டும்புகழை யேற்றுக்கொண்ட நினது வென்றிபொருந்திய அகன்றமார்பை வணங்கிவாழ்த்திப் போவேன் யான்; நாடோறும் உணவில்லாமையான் இடந்தோறுமிடந்தோறும் மாறிமாறி அகழ்தலால் இல்லெலிமடிந்த பழையசுவராகிய எல்லையையுடைய பாலில்லாமையாற் பலபடிசுவைத்து முலையுண்டலைவெறுத்த பிள்ளையுடனே மனையின்கண்ணே வறுமையுற்றிருந்த என்னுடைய ஒளிபொருந்திய நுதலையுடையாளை நினைந்து.—எ - று.

---

௨௦ - ௨௧. புறநா. ௧௬௪ : ௫ - ௬.

(பி - ம்.)—1 'செய்தோய்' 2 'மனைத்தொலைஇத்திருந்த'

# புறநானூறு மூலமும் உரையும்.

௧௨௯

தோன்றல், நின்னுள்ளிவந்த பரிசிலென்றெய்ய நான்கூற, நின்னுள்ளியது செய்தாயாதலான் வருத்தங்கூறி ஏத்தித் தொழுதனென்பழிச்சி வரைப்பின் மனைக்கண்ணே புதல்வனொடு தொலைஇத்திருந்த என் வாணுதலை நினைந்துசெல் வல் யானெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

காணக்கூறியென்றதன்பின்னே ஏத்திப் பழிச்சிச் செலவலென்றமை யான், அவை குறிப்புமொழி.

வரைப்பின்மனையென இயையும்.

'வள்ளிய னாகலின் வணங்குவ னிவனென' என்று பாடமாயின், வண்மையையுடையனாதலால் இவன் எமக்குத்தாழ்ந்து பரிசிலளிப்பனெனக் கருதியென்க.

'வள்ளியை யாகலின் வணங்குவ னிவனெனக், கொள்ளா மாந்தர் கொடுமை கூற' என்றதற்கு வள்ளியையாதலின் இவனை வணங்குவேனெனநினைந்து வணங்க அதுபாராது நின்பாற்பரிசில்பெறுதமாந்தர்..........................

தூவவெறியுமென்பது, தூவெறியுமென வுகரங்கெட முடிதல் புறனடை யாற்கொள்க; விகாரமெனினுமமையும்.

'தூவவெறியும்' என்பதூஉம் பாடம்.

'புறநிலை' என்பதற்குப் புறக்கடை நின்றநிலையென்றுமாம்.

'இல்லெலிமடிக்கதொல்சுவர்' எஎ்பதற்கு இல்லெலிதான் மடிக்க தொல்சுவரென்றுரைப்பினுமமையும்.

தொழில்

பின்னைக்கொடுமைகூற வென்றுரைப்பினுமமையும்.

(உகக)

---

(உகஉ.) நுங்கோ யாரென வினவி னெங்கோக்
களமர்க் கரித்த விளையல் வெங்கள்
யாமைப் புழுக்கிற் காமம் வீட வாரா
வாரற் கொழுஞ்சூ டங்கவு ளடாஅ
வைகுதொழின் மடியு மடியா விழவின்
யாணர் நன்னாட் டுள்ளும் பாணர்
பைதற் சுற்றத்துப் பசிப்பகை யாகிக்
கோழி யோனே கோப்பெருஞ் சோழன்
பொத்தி னண்பிற் பொத்தியொடு கெழீஇ
வாயார் பெருநகை வைகலு [1] நக்கே.

க. மு. பதிற். உ0 : க.

ந - ச. புறநா. சஉ : கச - எ.

(பி - ம்.)—1 'மகிழ்ந்தே'

திணை - அது; துறை - இயன்மொழி.

கோப்பெருஞ்சோழனைப் பிசிராந்தையார் பாடியது.

இ - ள்.—உம்முடைய இறைவன் யார்தானென்று கேட்பீராயின், எம்முடைய இறைவன் களமர்க்கு அரிக்கப்பட்ட முதிர்ந்த விரும்பத்தக்க மதுவை ஆமையிறைச்சியுடனே வேட்கைதீர அக்களமர் உண்டு ஆரன்மீனொடு கொழு விய சூட்டை அழகிய கதுப்பகத்தேயடக்கி மதுவுண்டமயக்கத்தால் வைகுக தொழிலொழியும் நீங்காத விழவினையுடைய புதுவருவாயுளதாகிய கலவ சோழநாட்டுள்ளாரும் பாணருடைய வருத்தமுற்ற சுற்றத்தினது பசிக்குப்பக யாய் உறையூரென்னும் படைவீட்டிடத்திருந்தான், கோப்பெருஞ்சோழன்; புரையில்லாத நட்பினையுடைய பொத்தியென்னும் புலவனொடுகூடி மெய்ம்மை யார்ந்த மிக்கமகிழ்ச்சியை நாடோறு மகிழ்ந்து.—எ - று.

நன்னாட்டுள்ளுமென் றவும்மை சிறப்பும்மை.

கோழி - உறையூர்.

நுங்கோயாரெனவினவின், எங்கோக் கோப்பெருஞ்சோழன், அவன் பசிப்பகையாகிப் பொத்தியொடு வைகலும் நக்குக் கோழியிடத்திருந்தானெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

ஆகிக் கெழீஇ நக்கெனனுஞ் செய்தெனெச்சங்களைக் கோழியோனென்னும் வினைக்குறிப்போடு முடிக்க.

(௨௧௨)

(உ.கா.) மண்டம ரட்ட மதனுடை நோன்றாள்
வெண்குடை விளக்கும் விறல்கெழு வேந்தே
பொங்குநீ ருடுத்தவிம் மலர்தலை யுலகத்து
நின்றலை வந்த விருவரை நினைப்பிற்
றொன்றுறை துப்பினின் பகைஞரு மல்ல
ரமர்வெங் காட்சியொடு மாறெதிர் பெழுந்தவர்
நினையுங் காலை நீயு மற்றவர்க்
கனையை யல்லை யடுமான் றோன்றல்
பரந்துபடு நல்லிசை யெய்தி மற்றுநீ
யுயர்ந்தோ ருலக மெய்திப் பின்னு
மொழிந்த தாய மவர்க்குரித் தன்றே
அதனா, லன்ன தாதலு மறிவோய் நன்று
மின்னுங் கேண்மதி யிசைவெய் யோயே

க. "மண்டம ரட்ட களிறன்னை" கலி. ௯க.

௩. புறநா. கஅ: க - உ; க௯: க; உ0க; கஎ; ௩௬௩: க.

௯ - கo. புறநா. உஎ: எ - ௯ ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க,

கo - கக. புறநா. எரு: க - உ.

நின்ற துப்பொடு நிற்குறித் தெழுந்த
வெண்ணில் காட்சி யிளையோர் தோற்பி
னின்பெருஞ் செல்வம் யார்க்கெஞ் சுவையே
யமர்வெஞ் செல்வ நீயவர்க் குலைபி
னிகழுந ருவப்பப் பழியெஞ் சுவையே
அதனா லொழிகதி லத்தைநின் மறனே வல்விரைந்
தெழுமதி வாழ்கநின் னுள்ள மழிந்தோர்க்
கேம மாகுநின் றாணிழன் மயங்காது
செய்தல் வேண்டுமோ வன்றே வானோ
ரரும்பெற லுலகத் தான்றவர்
விதப்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்கே.

திணை - வஞ்சி ; துறை - துணைவஞ்சி.

அவன் மக்கண்மேற்சென்றானைப் புல்லாற்றூர் [1] எயிற்றியனார் பாடியது.

இ-ள்.—மடுத்தெழுந்த போரின்கட்கொன்ற மிகுதிபொருந்திய வலிய முயற்சியையுடைய வெண்கொற்றக்குடையான் உலகத்தை நிழல்செய்து புகழால் விளக்கும் வென்றியையுடைய வேந்தே, இளர்ந்த நீரையுடைய கடலாற் சூழப்பட்ட இப்பரதவிடத்தையுடைய உலகத்தின்கண் நின்னிடத்துப் போர்செய்யவந்த இருவரையும் கருதிற் பழையதாய்த்தங்கப்பட்ட வலியையுடைய நின்பகைவேந்தராகிய சேரபாண்டியருமல்லர், போரின்கண் விரும்பிய காட்சியுடனே நின்னொடு பகையாய் வேறுபட்டெழுந்த அவ்விருவர்தாம் ;

னையுங்காலத்து நீயும் அவர்க்கு அத்தன்மையையாகிய பகைவனலலை; பகையைக்கொலலும் யானையினையுடையத்லைவ, நீ பரநதுபட்ட நல்லபுகழை இவ்வுலகத்துப்பொருந்தித் தேவருலகத்தினகட்போய்ப் பின்பு நீ ஒழித்த அரசாட்சியுரிமை அவர்க்குரித்து ; ஆதலால அப்பெற்றித்தாதுமறிவோய், பெரிதும் இன்னமும் கேட்பாயாக ; புகழைவிரும்புவோய், நிலைபெற்ற வலியோடு நின்னைக்கருதிட் போர்செய்தற்கு எழுந்திருந்த சூழ்ச்சியில்லாத அறிவையுடையநின்புதலவர்தோற்பின் நினதுபெரியசெல்வத்தை அவர்க்கொழிய யாவர்க்குக் கொடுப்பை; போரைவிரும்பியசெலவ, நீ அவர்க்குத்தோற்பின் நின்னையிகழும் பகைவருவப்பப் பழியையுலகத்தேநிறுத்துவை; ஆதலான், ஒழிவதாக நின்னுடையமறன் ; கழிவிரைநதெழுந்திருப்பாயாக; நின்னுடைய உள்ளம் வாழ்வதாக; அஞ்சினோர்க்கு அரணாகும் நினதடிநிழல் மயக்காமற்செய்தலவேண்டும், நலவினையை; விணணோரது பெறுதற்கரிய உலகத்தின்கண் அமைந்தவர் விரைந்த விருப்பத்தோடு விருநதாக ஏற்றுக்கொள்ள.—எ - று.

---

கஞ - அ. புறநா. சஞ: ரு - சு.
உஉ - ச. புறநா. சுஉ: கஅ - க.
(பி - ம்.)—1 'எயிற்றியார்'



மற்று அசை. தில் விழைவின்கண்வந்தது.

வரினேருலகென்றது, ஒட்டன்றி ஒருபெயராய்நின்றது.

வேந்தே, நின்மறனொழிக ; ஆன்றவர் விருநதெதிர்கொளற்கு நன்றுசெய்தல்வேண்டும் ; ஆதலால், அதற்கு விரைந்தெழுவாயாக ; நின்னுள்ளம் வாழ்வதாகவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

செல்வமும் பழியும் சினைவினைப்பாற்பட்டு முதல்வினைகொண்டன.

எஞ்சுதல் - இவர்க்குப்பின்னும்நிற்றல்.

தாணிழல்மயங்காதென்பதற்கு நினக்கு ஒருநீக்கும் வாராமலென்றதாகக்கொள்க.

இனி 'அதனா லன்ன தாதலு மறிவோய்' என்றதற்கு உயர்ந்தோருலகமெய்துவதுகாரணத்தால அத்தாயம் அவர்க்கு அப்படியேயுரித்து; அன்னதாதல் நீயறிவையெனமுற்றாகவும், அழிந்தோர்க்கு ஏமமாகுநின்றாணிழலென முற்றாக்கி மயங்காதுதெளிந்துநின்று நன்றுசெய்தலவேண்டுமெனவுமுரைப்பாருமுளர்.

'மாவென் காட்சியொடு மாறெதிர்ந் தெழுந்தவர்' என்று பாடமோதுவாருமுளர். (உகங)

---

(உகச.) செய்குவங் கொல்லோ நல்வினை யெனவே

ஐய[1]மறாஅர் கசடீண்டு காட்சி
நீங்கா நெஞ்சத்துத் துணிவில் லோரே
யானை வேட்டுவன் யானையும் பெறுமே
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே
அதனா, லுயர்ந்த வேட்டத் [2] துயர்ந்திசி னோர்க்குச்
செய்வினை மருங்கி னெய்த லுண்டெனிற்
றொய்யா வுலகத்து நுகர்ச்சியுங் கூடுந்
தொய்யா வுலகத்து நுகர்ச்சி யில்லெனின்
மாறிப் [3] பிறப்பி னின்மையுங் கூடு

மாறிப் பிறவா ராயினு மிமயத்துக்
கோடியேர் தன்ன தம்மிசை நட்டுத்
தீதில் யாக்கையொடு மாய்தறவத் தலையே.

திணை - பொதுவியல் ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

அவன் *வடக்கிருந்தான் சொற்றது.

---

எ - அ. புறநா. ௬௬௪: ௧௯ - ௨௦ ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

௬ - ௯. புறநா. ௬௮: ௧௭ - ௬.

* புறநா. ௬௫ : ௯ - ௧௧ ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

(பி - ம்.)—1 'மாறுஅர்', 2 'உயர்நிலேரே' 8 'பிறப்பின்வன்மையும்'

# புறநானூறு மூலமும் உரையும்.

௬௧௧

இ-ள்,—அறவினையைச்செய்வேமோ அல்லேமோவென்றுகருதி ஐயப்பாடு நீங்கார், அழுக்குச்செறிந்த காட்சிநீங்காத உள்ளத்தினையுடைய தெளிவில்லாதோர் ; யானைவேட்டைக்குப்போவோன் யானையையும் எளிதாகப்பெறுவன் ; குறும்பூழ் வேட்டைக்குப்போவோன் அதுபெறாது வறிய கையினனாயும் வருவன் ; அதனால உயர்ந்தவிருப்பத்தையுடைய உயர்ந்தோர்க்குத் தாஞ்செய்யப்பட்ட நலவினைக்கூற்றிலே அதனை அனுபவித்தலுண்டாமாயின் அவர்க்கு இருவினையும் செய்யப்படாத உம்பருலகத்தின்கண் இன்பமனுபவித்தலும் 1 கூடும் ; அவ்வுலகத்தின்கண் நுகர்ச்சியில்லையாயின், மா

திப்பிறத்தலிலேகூடும் பிறப்பின்கண் இவ்வமையெய்தவுங்கூடும் ; மாறிப்பிற வாரென்று சொல்லுவாருளராயின் இமயமலையின்சிகரம் ஓங்கினற் போன்ற தமது *புகழை நிலைபெறுத்தி வசையிலாத உடம்பொடுகூடி நின்றிறத்தல் மிகத் தலையாயது ; அதனால் எவ்வாற்றானும் நல்வினைசெய்தல்அழகிது.— எ - று.

உயர்ந்திசினோர்க்கென்னும் நான்காவதன்றியும் உயர்ந்திசினோர்செய் வினைமருங்கினெய்தலுண்டெனின், இவர்க்கு நுகர்ச்சியுங்கூடுமென்றுரைப் பினுமமையும்.

'பிறவாராயினும்' என்னும் உம்மை அசைநிலை ; உம்மையின்றியோது வாருமுளர.

'காட்சியொடு நீங்கா நெஞ்சத்து' என்பதூஉம் பாடம். (உகச)

---

* "வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா, யாக்கை பொறுத்த நிலம்" குறள். ௨௩௯.

(பி - ம்.)—1 'கூட்டும்'

---

(உகரு.) கவைக்கதிர் வரகி னவைப்புறு வாக்க
லுதெரு மறுகிற் போதொடு பொதுளிய
வேளை வெண்பூ வெண்டயிர்க் கொளீஇ
யாய்மக ளட்ட வம்புளி மிதவை
யவரை கொய்யுந ராரமாந்தும்
தென்னம் பொருப்ப னன்னாட் டுள்ளும்
ஏசிரோ னென்பவென் னுயிரோம் புநனே
செல்வக் காலை நிற்பினு

மல்லற் காலே இல்லலன் மன்னே.

---

க. "கவைக் கதிர் வரகு" (மலேபடு. ககஉ - ௩; க0௫) "வரகினவைப்புமாணரிசி" அகநா. ௩௩௪.

பெரும். க. ௪௬:

உ. "தாதெருமறுகு" நற். ௩௪௩ ; அகநா. க௬௫.

௩. "வேளேவெண்பூ" புறநா. உ௩ : உக.

௩ - ௪. தயிர்மிதி மிதவை : அகநா. ௩௪0.

௩௩௪ புறநானூறு மூலமும் உரையும்.

திணே - பாடாண்டிணே; துறை - இயன்மொழி.

கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையார் * வாராரென்ற சான்றோர்க்கு அவர்வருவாரென்று சொல்லியது.

இ - ள்.—கவர்த்தகதிரினேயுடைய வரகினது குற்றுதலுற்ற வடிக்கப்பட்ட சோற்றையும் தாதாக உதிர்ந்த எருவையுடையதெருவின்கண் போதொடுதழைத்த வேளேயினது வெள்ளியபூவை வெளியதயிரின்கட்பெய்து இடைமகள் அடப்பட்ட அழகிய புளிக்கூழையும் அவரைகொய்வார் நிறையவுண்ணும் தென்றிக்கின்கட் பொதியின்மலேயையுடைய பாண்டியனது நல்ல நாட்டினுள்ளும் சேய்த்தாகிய பிசிரென்னுமூரிடத்தானென்று சொலலுவார், என்னுயிரைப் பாதுகாப்போனே ; அவன் எமக்குச் செல்வமுடையகாலத்து நிற்பினும் யாம் இன்னுமையுறுங்காலத்து ஆண்டிருல்லான்.—எ - று.

மன் அசைநிலே.

* "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண், மெய்ப் பொருள் காண்ப தறிவு" குறள். சஉ௩.

---

(உகசு.) கேட்டன் மாத்திரை யல்ல தியாவதும்
[1] காண்ட லில்லா தியாண்டுபல கழிய
வழுவின்று பழகிய கிழமைய ராகினு
மரிதே தோன்ற லதற்பட வொழுகலென்
றையங் கொள்ளன்மி னாரறி வாளீ
ரிகழ்வில னினிய னியாத்த நண்பினன்
புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே
தன்பெயர் கிளக்குங் காலை யென்பெயர்
பேதைச் சோழ னென்னுஞ் சிறந்த
காதற் கிழமையு முடைய னதன்றலை
யின்னதோர் காலை நில்லலன்
னின்னே வருகுவ னொழிக்கவலற் கிடமே.

திணையும் துறையும் அவை.

அவன்வடக்கிருந்தான் பிசிராந்தையார்க்கு இடனொழிக்கவென்றது.

இ - ள்.—'நின்னை அவன் கேட்டிருக்குமாவல்லது, சிறிதுபொழுதும் காண்டல்கூடாது; பலயாண்டுசெல்லத் தவறின்றாக மருவிப்போந்த

௧௫. "புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா, னட்பாங் கிழமை

தரும்" குறள். எ௮௫.

௬. "யார்த்தன் நட்பே" குறுந். ௩௧௩.

எ. "பொய்யாமை யன்ன புகழில்லை" குறள். ௨௯௬.

(பி - ம்.)—1 'காண்டலியாத'

# புறநானூறு மூலமும் உரையும்.

௩௩௫

யையுடையோராயினும் அரிதே தலைவ, அவ்வழுவாதகூற்றிலேபடவொழு குதல்' என்றுகருதி ஐயப்படாதொழிமின், நிறைந்த அறிவினையுடையீர், அவன் என்னை என்றும் இகழ்ச்சியிலனாய் இனிய குணங்களையுடையன் ; பிணித்தநட்பினையுடையன் ; புகழ்வரூஉம் பொய்ம்மையைவிரும்பான் ; தனதுபெயரைப் பிறர்க்குச்சொல்லும்பொழுது என்னுடையபெயர் பேதைமையையுடைய சோழனென்று எனதுபெயரைத் தனக்குப்பெயராகச்சொல்லும் மிக்க அன்புபட்ட உரிமையையுமுடையன் ; அதற்குமேலே இப்படி யான் துயரமுறுங்காலத்து ஆண்டுநில்லான், இப்பொழுதே வருவன்; அவனுக்கு இடமொழிக்க,—எ - று.

'அதற்பட' என்பதற்கு அவ்விறந்துபாட்டிலேபடவென்றும், 'இகழ் விலன்' என்பதற்கு இகழப்படுவன குணமிலனென்றுமுரைப்பினுமமையும்.

பேதைச்சோழனென்றது, தான் தன்னை இழித்துக்கூறியது.

(௨௧௬)

---

(உகஎ.) நினைக்குங் காலை மருட்கை யுடைத்தே
யெனைப்பெருஞ் சிறப்பினோ டீங்கிது துணித
லதனினு மருட்கை யுடைத்தே பிறனாட்டுத்
தோற்றஞ் சான்ற சான்றோன் போற்றி
யிசைமர பாக நட்புக் கந்தாக
வினையதோர் காலை யீங்கு வருதல்
வருவ னென்ற கோனது பெருமையு
மதுபழு தின்றி வந்தவ னறிவும்
வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே
அதனால், தன்கோ லியங்காத் தேயத் துறையுஞ்
சான்றோ னெஞ்சுறப் பெற்ற தொன்றிசை
யன்னோனை யிழந்தவிவ் வுலக
மென்னா வதுகொ லளியது தானே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.

அவன் வடக்கிருந்தானுழைச்சென்ற
பிசிராந்தையாரைக்கண்டு
பொத்தியார் பாடியது.

இ - ள்.—கருதுங்காலத்து வியக்குந்தன்மையையுடைத்து, எத்துணை யும் பெரியதலைமையுடனே கூடியும் இவ்விடத்தே இவன் சிறப்புக்களைக் கைவிட்டுவரத் துணிதல்; இவன் இவ்வாறு துணிந்த அதனினும் வியக்குந் தன்மையையுடைத்து, வேற்றுவேந்தனது நாட்டின்கண் விளக்கமமைந்த

௪ - ௬. "இடரொருவ ருற்றக்கா லீர்குன்ற நாட, தொடர்புடையே மென்பார் சிலர்" (நாலடி. ௧௬௨) ; "கட்டலர்தார் மார்ப கலியுழிக் காலத், துக், கெட்டார்க்கு நட்டாரோ வில்" பழ. ௫௬.

## ௬௬௬ புறநானூறு மூலமும் உரையும்.

சான்றோன் பாதுகாத்துப் புகழ்மேம்பாடாக நட்பே பற்றுக்கோடாக இத் தன்மைத்தாகிய ஓர் இன்னாக்காலத்து இவ்விடத்துவருதல்; இவ்வாறு வருவ னென்று துணிந்துசொல்லிய வேந்தனது மிகுதியும் அவன் சொலலியசொற் பழுதின்றாகவந்தவனது அறிவும் வியக்குந்தோறும்வியக்குந்தோறும் வியப் புக் கைமிக்கது ; ஆதலால், தன்செங்கோல்செல்லாத தேயத்துறைபவும் அமைந்தோனதுநெஞ்சைத் தன்னிடத்தேயுரித்தாகப்பெற்ற பழைய புகழை யுடைய அட்பெற்றிப்பட்ட பெரியோனையிழந்த இத்தேயம் என்ன இடும்பை யுறுங்கொல்லோ ? * இதுதான் இரங்கத்தக்கது.—எ - று.

இதுவென்பது, அரசினைக்கைவிட்டு
இறந்துபடத்துணிதலென்று மாம்.
(௨௧எ)

* 'கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும்போல உணர் ச்சியொப்பின் அதுவே உடனுயிர்நீக்கும் உரிமைத்தாயகட்பினைப்பயக்கும்' (திருக்குறள், எ௮௫ - பரிமேல்) ; "இதற்குக் கோப்பெருஞ்சோழன் துறந்துழிப் பிசிராந்தையாரும் பொத்தியாரும் போல்வார்துறந்தாரென்று கூறும் புறச்செய்யுட்கள் உதாரணம்" தொல். களவியல், சூ. ௫௨ - ந.

---

(௨௧௮.)பொன்னுந் துகிரு முத்து மன்னிய

மாமலை பயந்த காமரு மணியு
மிடைபடச் சேய வாயினுந் தொடைபுணர்ந்
தருவிலை நன்கல மமைக்குங் காலை
ரு யொருவழித் தோன்றியாங் கென்றுஞ் சான்றோர்
சான்றோர் பால ராப
சாலார் சாலார் [1] பாலரா குபவே.

திணையும் துறையும் அவை.

[2] பிசிராந்தையார் வடக்கிருந்தாரைக் கண்ட கண்ணகனார்பாடியது.

இ - ள்.—பொன்னும் பவளமும் முத்தும் நிலைபெற்ற பெரியமலை தரப்பட்ட விரும்பத்தக்கமணியும் ஒன்றற்கொன்று இடைநிலம்படச் சேய

---

க. "தன்னின் முடித்தலென்பதனால், 'பொன்னுந் துகிருமுத்து...... மணியும்' என எண்ணுங்காலும் இனமாயபொருளே எண்ணப்படுமென்பது கொள்க" தொல். களவி. சூ. கக - இளம்; சே; கல்.

உ. "கல்லிற் பிறக்குங் கதிர்மணி" (நான்மணி. எ); "மலையிடைப் பிறவா மணியே யென்கோ" சிலப். உ: எஎ.

க - உ. தொல். களவி. சூ. சரு - பேர்; மேற்

ரு - சு. "பண்காணுந் தமிழ்ப்புலவீ ரினத்தோடே யினஞ்சேரும் பரிசே-போல" (தனிப்பாடல்); "கற்று மரைக்கயத்தி னல்லன்னஞ் சேர்ந்தாற் போற், கற்றாரைக் கற்றாரே காமுறுவர்" மூதுரை. உச.

(பி - ம்.)—1 'பாலராகுகவே' 2 'பிசிராந்தையாரைக்கண்டகத்தத் . தனர் பாடியது'

திலத்தினவாயினும் கோவைபொருந்தி அரியவிலையினையுடைய நல்ல அணி கலன்களைச் செய்யுங்காலத்து ஓரிடத்துத்தோன்றினாற்போல எக்காலும் அமைந்தோர் அமைந்தோர்பக்கத்தராவார்; அமைதியிலலார் அமைதியில் லார் பக்கத்தராவார்.—எ - று.

சான்றோர்குழுவினைப்புகழுங்கருத்தாகலின், அவர்க்கேற்ற உவமம் கூறினார்; சாலாதார்க்கும் ஏற்றவுவமம் வருவித்துக்கொள்க.

தொடைபுணர்ந்து தோன்றியாங்கென இயையும்.
(உகஅ)

---

(உகக) உள்ளாற்றுக் கவலைப் புள்ளி நீழன்
முழூஉ வள்ளூர முணக்கு மள்ள
புலவுதி மாதோ நீயே
பலரா லத்தைநின் குறியிருந் தோரே.

திணையும் துறையும் அவை.

அவன் வடக்கிருந்தானைக்
கருவூர்ப்பெருஞ்சதுக்கத்துப்பூதநாதனார் பாடியது.

இ - ள்.—யாற்றிடைக்குறையுட் புள்ளிப்பட்ட மரநிழற்கணிருந்து உடம்பாகிய முழுத்தசையைவாட்டும் வீர, நின்கருத்திற்கேற்ப நின்னோடு வடக்கிருந்தார் பலராதலான், யான் இதற்கு உதவாது பிற்படவந்ததற்கு என்னை அவரோடுசொல்லி வெறுத்தி நீ.—எ - று.

யான் பிற்படவந்ததற்கு என்னைப்புலந்து என்னோடு சொல்லாடாதிருந்தாய் நீயென்றும், இவனுடனே வடக்கிருந்தோர்களும் எதிரேற்றுக்கொள்ளாமைநோக்கி நின்குறிப்பிற்கேற்பப் புலந்தார்பலரென்றுமுரைப்பினுமமையும்.

'உள்ளாற்றுக்கவலை' என்பதற்கு வழிக்குள்ளாகிய நாற்சந்தியுங்கூடிய இடமென்றுமாம்; கவர்த்தவழிக்குள்ளென்றுரைப்பாருமுளர்.

* அரசுதுறந்து வடக்கிருந்து உயிர்நீத்த வென்றூர்.

உள்ளமிகுதியான் மன்ன
(உ௬௧)

---

௧. "செல்லாற்றுக்கவலை" (குறுந். உ௬௭ : உ); "கனையெரி நிகழ்ந்த விலையி லங்காட், டுழைப்புறத் தன்ன புள்ளிநீழல்" அகநா. ௩௭௧.

உ. புறநா. ௩௨0 : ௩௩.

* "திறைமன்ன ருய்ப்பத் திருநிற்பச் செங்கோ னடப்பக்,குறைவின்றிக் கொற்ற முயரத் தெவ்வர் தேர்பணிய, வுறைகின்றகாலத் தரங்கேட் டுருமுற்ற பாம்பி, னறிவன் னடிக்கீ ழரசஞ்சித் துறந்தவாறும்" சீவக. ௨௭.

பெருஞ்சோறு பயந்து பல்யாண்டு புரந்த
பெருங்களி றிழந்த பைதற் பாக
னதுசேர்ந் தல்கிய வழுங்க லாலை
வெளில்பா ழாகக் கண்டுகலுழ்ந் தாங்குக்
கலங்கினே னல்லனோ யானே பொலந்தார்த்
தேர்வண் கிள்ளி போகிய
பேரிசை மூதூர் மன்றங் கண்டே.

திணையும் துறையும் அவை.

அவன் வடக்கிருந்தானுழைச்சென்று மீண்டுவந்து உறையூர்கண்ட பொத்தியார் அழுது பாடியது.

இ - ள்.—பெரியசோற்றையுண்டாக்கிப் பல்யாண்டுபாதுகாத்த பெரிய களிற்றையிழந்த வருத்தத்தினையுடையபாகன் அவ்வியானைசேர்ந்து தங்கிய இரக்கத்தையுடையகூடத்தின்கட் கம்பம்வறிதேநிற்கப் பார்த்துக் கலங்கின தன்மைபோல யான் இறந்துபடுதலின்றிக் கலங்கினேனல்லனோ, பொன்னா னியன்றமாலையையுடைய தேர்வண்மையைச்செய்யும் கிள்ளிபோகப்பட்ட பெரியபுகழினையுடைய பழைய உறையூரின்மன்றத்தைப்பார்த்து.—எ - று.

மூதூர்மன்றங்கண்டு கலங்கினேனல்லனோவெனக்கூட்டுக.

மன்றம் - ஈண்டுச் செண்டுவெளி.

அழுங்கல் - முன்புள்ள ஆரவாரமுமாம்.

இறந்தவென்று சொல்லுதல் இன்னாமையால், போகியவென்றார். (௨௨௦)

௧. பெருஞ்சோறு : புறநா. ௨ : ௧௬ ; ௨௩௫ : ௫.
௫. பொலந்தார் : புறநா. ௨ : ௧௪ ; ௨௨௬ : ௪.
௬. 'தேர்வண் கிள்ளி' புறநா. ௪௩ : ௰.

---

(௨௨௧.) பாடுநர்க் கீத்த பல்புக ழன்னே
யாடுநர்க் கீத்த பேரன் பினனே
யறவோர் புகழ்ந்த வாய்கோ லன்னே
திறவோர் புகழ்ந்த திண்ணன் பினனே
மகளிர் சாயன் மைந்தர்க்கு மைந்து
துகளறு கேள்வி யுயர்ந்தோர் புக்கி
லனைய னென்னு தத்தக் கோனை

---

௩ - ௪. சிறுபாண். ௨௦௭ - ௧௮.
௫. "மறவர் மறவ" பெரும்பாண். ௪௫௫.
௧ - ௬. புறநா. ௨௩௧ ; ௧ - ௧௮.

னினையாக் கூற்ற மின்னுயி ருய்த்தன்று
பைத லொக்கற் றழீஇ யதனை
வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்
நனந்தலை யுலக மரந்தை தூங்கக்
கெடுவி னல்லிசை சூடி
நடுக லாயினன் புரவல னெனவே.*

திணையும் துறையும் அவை.

அவன் நடுகற்கண்டு அவர் பாடியது.

இ - ள்.—பாடுநர்க்குக்கொடுத்த பலபுகழினையுமுடையன் ; கூத்தர்க்குக் கொடுக்கப்பட்ட மிக்க அன்பினையுமுடையன் ; அறத்திறமுடையோர் புகழப்பட்ட நீதிநூற்குத்தக ஆராய்ந்துநடத்திய செங்கோலையுடையன் ; சான்றோர்புகழப்பட்ட திண்ணியநட்பினையுடையன்; மகளிரிடத்து மென்மையையுடையன்; வலியோரிடத்து மிக்கவலியையுடையன்; குற்றமற்ற கேள்வியையுடைய அந்தணர்க்குப்புகலிடம் ; அத்தன்மையையுடையோனென்று கருதாது அத்தகுதியையுடையோனை அவ்வாறுகருதாத கூற்றம் அவனது இனிய உயிர் கொடுபோயிற்று; அதனால், பையாப்புற்ற எம்முடையசுற்றத்தை அணைத்துக்கொண்டு அக்கூற்றத்தை வைவேமாக வாரீர், மெய்யுரையையுடையபுலவீர், நல்ல இடத்தினையுடைய உலகம் துன்பமிகக் கேடில்லாத நல்லபுகழ்ச்சிமாலையைச்சூடி நடப்பட்ட கல்லாயினன் எம்மைப் பாதுகாப்போனெனச்சொல்லி.—எ - று.

ஈத்தபுகழ் ஈதலாலுளதாகியபுகழெனவும், ஈத்தவன்பு ஈத்தற்கு ஏதுவாகிய அன்பெனவுங்கொள்க.

வாய்மொழிப்புலவீர், அத்தக்கோனைக் கூற்றம் இன்னுயிருய்த்தது ; அதனால் புரவலன் கல்லாயினனென ஒக்கல் தழீஇ அதனை வைகம் வம்மோ வெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

சாயல் மைந்து புக்கிலென்பன ஆகுபெயர். புக்கில் வினைத்தொகை.

கேடென்பது கெடுவெனக் குறைந்துநின்றது. (உ உக)

---

அ. புறநா. ௩; கஉ; சஉ; உஉ.

எ-அ. " தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ்செல்வ, ரீற்றிளம் பெண்டிராற்றுப் பாலகர், முதியோ ரென்னு னிளையோ ரென்னான், கொடுந்தொழிலாளன் கொன்றனன் குவிப்ப" மணி. ௬ : ௬௭ - ௧00.

கஉ. "கெடுவாக வையா துலகம்" திருக்குறள், ககஎ.

கஉ - ௩. புறநா. உ௬ச: க - ச ; "ஆடவர், பெயரும் பீடு மெழுதி, யதர்தொறும், பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல" (அகநா. கரு௧) ; "செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட, கல்லேசு கவலை யெண்ணுமிகப் பலவே" மலைபடு. ௩அஅ - ௯.

* மு. காஞ்சித்திணைத்துறைகளுள், மன் அடாது வந்த மன்னைக்காஞ்சிக்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. உச - ந.

௩௬0 புறநானூற்று மூலமும் உரையும்.

(உ௨ உ.) அழலவிர் வயங்கிழைப் பொலிந்த மேனி

கிழவினும் போகாநின் வெய்யோள் பயந்த
புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வாவென
வென்னிவ ணொழித்த வன்பி லாள
ரு வெண்ணு திருக்குவை யல்லே
யென்னிடம் யாதுமற் றிசைவெய் யோயே.

திணையும் துறையும் அவை.

அவனைத் தன்மகன் பிறந்தபின் பெயர்த்துச்சென்று போத்தியார் எனக்கு இடந்தாவென்று சொற்றது.

இ - ள்.— நியாலவிளங்கிய ஒளியையுடைய ஆபரணத்தாற் சிறந்த வடிவினையுடையளாய் நின்கிழவினும் ஒருபொழுதுநீங்காத நீ விரும்பத்தக்க மனைவி பெறப்பட்ட புகழமைந்த பிள்ளையாளவன் பிறந்தபின் வாவெனச் சொலலி என்னை இவ்விடத்துநின்றும்போக்கிய என்னொடு உறவிலலாதவனே, உன்னொடு என்னிடை. நட்பைக் கருதாதிருப்பையலலே; புகழைவிரும்புவோய், நீ எனக்குக் குறித்தவிடம் யாது? சொல்லுவாயாக.—எ - று.

மற்று அசை.

அழல்போலப் பாடஞ்செய்யுமேனியெனினுமமையும்.

(உஉஉ)

---

ந. "வீறுசால புதலவர்ப் பெற்றனை" பதிற். எச.

---

(உஉ௩) பலர்க்குநிழ லாகி யுலகமீக் கூறித்
தலைப்போ கன்மையிற் சிறுவழி மடங்கி
நிலைபெறு நடுக லாகியக் கண்ணு

மிடங்கொடுத் தளிப்ப மன்ற வுடம்போ
டின்னுயிர் விரும்புங் கிழமைத்
தொன்னட் புடையார் தம்முழைச் செலினே.

திணையும் துறையும் அவை.

கல்லாகியும் இடங்கொடுத்த கோப்பெருஞ்சோழனை வடக்கிருந்த பொத்தியார் பாடியது.

இ - ள்.—பலர்க்கும் அருளுடைமையான் நிழலையொத்து
உலகத்தார்
மிகுத்துச்சொல்ல * உலகத்தையாளுந்தன்மை முடியச்செலுத்துதற்கு மறுமையை நினைத்தால முடிவுபோகாமையின் வடக்கிருத்தற்கு வரைந்த சிறிய இடத்தின்கணிருந்து உயிர்நீத்தலின் நிலைபெற நட்டப்பட்ட கல்லானவிடத்

---

கூ. நடுகல : புறநா. உஉக : கரு.

* "தருமன் கைதர, மன்னுயிர்க் குறுவதே செய்து வைகினேன், [illegible]யிர்க் குறுவதுஞ் செய்ய வெண்ணினேன்" கம்ப. மந்திர. கரு. [illegible]
னென்



தம் இடங்கொடுத்தளிப்பர் நிச்சயமாக ; உடம்போடு இனியவுயிர்விரும்புமாறுபோல விரும்புமுரிமையையுடைய பழையதாகிய நட்பையுடையோர் தம்மிடத்தே செல்லின்.—எ - று.

மீக்கூறியென்பது, மீக்கூறவெனத் திரிக்கப்பட்டது ; ஆணைகூறி யென்றவாறாம்.

தொன்னட்புடையோர் தம்முறைச்செலின், இடங்கொடுத்தளிப்பவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

அவன் நட்பினை வியந்துகூறியது.
(உஉ௩)

---

(உஉச) அருப்பம் பேணா தமர்கடந் ததூஉந்
துணைபுண ராயமொடு தசம்புடன் றொலைச்சி
யிரும்பா ணொக்கற் கடும்பு புரந்ததூஉ
மறமறக் கண்ட நெறிமா ணவையத்து
முறைநற் கறியுநர் முன்னுறப் புகழ்ந்த
தூவியற் கொள்கைத் துகளறு மகளிரொடு
பருதி யுருவிற் பல்படைப் புரிசை
யெருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்
வேத வேள்வித் தொழின்முடித் ததூஉ
மறிந்தோன் மன்ற வறிவுடை யாள
னிறந்தோன் றானே யளித்திவ் வுலக
மருவி மாறி யஞ்சுவரக் கடுகிப்

பெருவறங் கூர்ந்த வேனிற் காலைப்
பசித்த வாயத்துப் பயனிரை தருமார்
பூவாட் கோவலர் பூவுடை யுதிரக்
கொய்துகட் டழித்த வேங்கையின்
மெல்லியன் மகளிரு மிழைகளைந் தனரே.

திணையும் துறையும் அவை.

சோழன் கரிகாற்பெருவளத்தானைக் கருங்குழலாதனார் பாடியது.

---

௭. "படையார் புரிசைப்பட்டினம்", "படையுடை நெடுமதில்" தேவாரம்.

௧௨ - ௩. "அருவி மாமலை நிழத்தவு மற்றக், கருவி வானங் கடற்கோண் மறப்பவும், பெருவற னாகிய பண்பில் காலையும்" பொருந. ௨௩௫-௭.

௧௫. பூ—கூர்மை; "பூவின்ற வேன்மன்னன்" (இறை. சூ. ௧௭ - மேற்); "அடைவாம்வை நிசிதம் பூவள் ளயிலவசி யாறுங் கூர்மை" சூடாமணி. ௭: ௧௬.



இ-ள்.—அரிய அரண்களைப் பாதுகாவாத போரைச்செய்தழித்தவும் துணையாய்க்கூடிய இனத்துடனேயுங்கூட மதக்குடங்களைச் சேரவுகர்ந்து தொலைத்துப் பெரிய பாண்சுற்றமாகிய

சுற்றத்தைப் பாதுகாத்ததுவும்

அறத்தைத் தெளியவுணர்ந்த ஒழுக்கம் மாட்சிமைப்பட்ட அந்தணரது அவைக்களத்தின்கண் வேள்விக்குரிய முறைமையை நன்குஅறியுஞ் * சடங்கவிகள் அம்முறைமையை முன்னின்று காட்டப் பலராலும் புகழப்பட்ட தூய இயல்பையுடைத்தாகிய கற்பொழுக்கமாகிய கொள்கையையுடைய குற்றந்தீர்ந்த குலமகளிரோடு வட்டமாகிய வடிவினையுடைத்தாகிய பலபடையாகச்செய்யப்பட்ட மதிலாற் சூழப்பட்ட வேள்விச்சாலையுட் † பருந்துவிழுங்குவதாகச் செய்யப்பட்டவிடத்து நாட்டிய யூபமாகிய நெடிய கம்பத்து வேதத்தாற் சொல்லப்பட்ட வேள்வியினைச் செய்துமுடித்ததுவுமாகிய இவற்றுடைய பயனை நிச்சயமாகவறிந்த அறிவினையுடையோன்; அவன்றான் துஞ்சினன்; ஆதலால், இனி இவ்வுலகம் இரங்கத்தக்கது; அருவிநீர்மறந்துப் உலகத்தாரஞ்சும்பரிசு வெம்மையுற்றுப் பெரிய வற்கடமிக்கவேனிற்காலத்து பசித்த ஆயமாகிய பயன்படும் ஆனிரையை இரக்கித்தல்செய்வாராகக் கூர்மை பொருந்திய கோடுவாளரற் கோவலரானவர்கள் பூக்களுடனேயுதிரக் கொம்புகளைக்கழித்து அதன் தழைச்செறிவையழித்த வேங்கையினையொப்ப மெலிய இயல்பினையுடைய உரிமைமகளிரும் அருங்கலவணிமுதலவாகிய அணிகளையொழித்தார்.—எ - று.

முறைநற்கறியுநர் முன்னுற
வேள்வித்தொழின்முடித்ததூஉமென இயையும்.

எருவையென்றது, பருந்தாகச்செய்யப்பட்ட வடிவினை.

அறிவுடையாளனிறந்தான்; மகளிரும் இழை களைந்தனர்; இவனையிழந்த உலகம் அளித்தெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

'எருவைநுவற்சி' என்று பாடமோதுவாருமுளர்.

'ஆயத்துப்பயனிரை' என்பதற்கு ஆயத்திற்குப்பயனாகிய இரையெனினு மமையும்.

(உஉச)

* சடங்கவிகள் - ஷடங்கவித்துக்கள்; ஆறங்கங்களையுமறிந்தோரென்றபடி; "புத்தூர்ச் சடங்கவி மறையோன்" (பெரிய. தடுத்தாட்கொண்ட. எ); முறையைக் காட்டுவோர்க்கு உபதிருஷ்டாக்கள் என்பது பெயர்.

† பருந்துவடிவமாகச்செய்ததற்குக் கருடசயனமென்று பெயர்.

---

(உஉரு.) தலையோர் நுங்கின் றீஞ்சேறு மிசைய
விடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்
கடையோர், விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர
நிலமலர் வையத்து வலமுறை வளைஇ
வேந்துபீ டழித்த வேந்துவேற் றனையோ
டாற்ற லென்பதன் றோற்றங் கேளினிக்

## புறநானூறு மூலமும் உரையும்.

௯௮௩

கன்னி போகிய களரியம் பறந்தலை
முன்னுடை வியன்காட் டதுவே நன்றுஞ்
சேட்சென்னி நலங்கிள்ளி கேட்குவன் கொல்லென
வின்னிசைப் பறையொடு வென்றி நுவலத்

தூக்கணங் குரீஇத் தூங்குகூ டேய்ப்ப
வொருசிறைக் கொளீஇய திரிவாய் வலம்புரி
ஞாலங் காவலர் கடைத்தலைக்
காலைத் தோன்றினு நோகோ யானே.

திணையும் துறையும் அவை.

சோழன் நலங்கிள்ளியை ஆலத்தூர்கிழார் பாடியது.

இ - ள்.—முன்செல்லும் * தூசிப்படையோர் பனையின் கனுவாதாகிய நுங்கினது இனியசெறிவை அயில, இடைச்செல்வோர் பழத்தினது செவ்வி க்கனியை நுகர, பின்செல்வோர் நீக்கியவரையையுடைய பிசிருடனே சுடப் பட்ட கிழங்கினை நுகர இப்படியொழுக்குடைத்தாகி இடமகன்ற உலகத்து வலமுறையாகச் சூழ்ந்து மன்னரை வலிகெடுத்த மேம்பட்ட வேலையுடைய சேனையுடனேகூடிய வலியென்றுசொல்லப்பட்ட தன் வினைவை இனிக் கேட் பாயாக; கள்ளியோங்கிய களர்நிலமாகிய பாழ்பட்டவிடத்து முள்ளுடைத் தாகிய பெரிய புறங்காட்டின்கண்ணதாயிற்று; பெரிதும் சேட்சென்னிநலங் கிள்ளி கேட்பான்கொல்லோவென அஞ்சி இனிய ஓசையையுடைய முரசுடனே வெற்றியைச்சொல்லாநிற்க முன்பு தூக்கணங்குருவியினது தூங்கப் பட்ட கூட்டையொப்ப ஒருபக்கத்தே தூங்கப்பட்ட வலத்திலேபுரிந்த திரிந்த வாயையுடைய சங்கம் இப்பொழுது உலகங்காக்கும் அரசரது வாயிலிடத்தே பள்ளியெழுச்சிக்காலத்தே தோன்றினும் அதனைக்கேட்டு இறந்துபடாது நோமனவினேனாயினேன்.—எ - று.

முன்பு நலங்கிள்ளிசேட்சென்னி கேட்குவன்கொல்லென ஒருசிறைக் கொளீஇய வலம்புரி இன்று வென்றி நுவலாநிற்கப் பறையொடு காலைத் தோன்றினும் யானோவேனெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

கேளினியென்றது கெஞ்சினே.

'வென்றிநுவலா'என்றும், 'காலைதோன்றின'என்றும் பாடமோதுவாருமுளர். (உஉரு)

---

எ. ।p. புறநா. உசரு : ௩ ; உ௩எ : க௩.

௯. சேட்சென்னிகலங்கிள்ளி : புறநா. உஎ : ௧௦.

* தூசிப்படை - முன்படை ; சேனையின் முதலிற்செல்வோர் பனைநுங்கின் தீஞ்சேறுமிசையவென்றதும், இடையிற்செல்வோர் பனங்கனிமாந்தவென்றதும், கடையிற்செல்வோர் பனம்பிசிரையும் சுட்டபனங்கிழங்கையும் நுகாவென்றதும் சேனையின் மிகுதியையும் அது செல்லுதற்குரிய காலநீட்சியையுமுணர்த்தி நின்றன.

---



(உஉ௬.) செற்றன் ருயினுஞ் செயிர்த்தன் ருயினு
முற்றன் ருயினு முய்வின்று மாதோ
பாடுநர் போலக் கைதொழு தேத்தி
யிரந்தன் ருகல் வேண்டும் பொலந்தார்
ரு மண்டமர் கடக்குந் தானைத்
1 திண்டேர் வளவற் கொண்ட கூற்றே.*

திணையும் துறையும் அவை,

சோழன்குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவனை மாறோக்கத்து நப் பசலையார் பாடியது.

இ - ள்.—தன்மனத்துள்ளே கறுவுகொண்டதாயினும் வெளிப்படநின்று வெகுண்டதாயினும் உற்றுநின்று கைபோடுமெய்தீண்டி வருத்திற்றாயினும் அதற்குப் பிழைத்தலுண்டாகாது; பாடுவாரைப்போலத் தோன்றிநின்ற கையாற்றொழுது வாழ்த்தி இரந்து உயிர்கொண்டதாகலவேண்டும்; பொன்னு ளியன்றமாலையினையும் மண்டியபோரின்கண் எதிர்நின்றுவெல்லும் படையினையும் திண்ணியதேரினையுமுடைய வளவனைக்கொண்ட கூற்று.—எ - று.

தொலைந்தார்வளவனென்ற வினையும்.

கூற்றமிரந்ததாகல்வேண்டும்; இம்மூன்றினுள் ஒன்றுசெய்யினும் பிழைப்பின்றெனக்கூட்டுக.

இஃது அவனுண்மைமிகுதியினையும் வண்மையினையும் வியந்து இரங்கிக் கூறியவாறு.

(உஉகூ)

---

ந. "கைதொழுஉட் பரவி" முருகு. உருஉ.

ச. புறநா. உஉ0: ரு.
ரு. புறநா. உகூ : க.

* மு. காஞ்சித்திணைத்துறைகளுள், "கழிந்தோர் தேத்துக்கழிபடருறீஇ, யொழிந்தோர் புலம்பிய கையறுநிலை" என்பதற்கும் (தொல். புறத்திணை. சூ. கக -இளம்), மன் அடாது வந்தமன்னைக்காஞ்சிக்கும் (ஷை ஷை சூ. உச - ந) மேற்கோள்.

(பி -ம்.)—1 'திண்டோள்'

---

(உஉஎ.)நனிபேதையே நயனில் கூற்றம்

| விரகின் மையின் வித்தட் டுண்டனை

௧. உரிச்சொற்றொடருக்கும் (நன் - மயிலை. சூ. ௧௫௧, ௨௫௧, ௩௭௩; நன் - வி. சூ. ௧௫௨, ௩௭௪; இ-வி. சூ. ௫௪ - உரை), உரிச்சொல் பெயரை யடுத்துவந்ததற்கும் (நன் - மயிலை. சூ. ௪௪௧), கனியென்னு முரிச்சொல் மிகுதியென்னும் பண்பை விளக்கியதற்கும் (ஷை ஷை ௪௫௫; நன் - வி. சூ. ௪௫௧) மேற்கோள்.

௨. புறநா. ௨௩௦ : ௧௩.

# புறநானூறு மூலமும் உரையும்.

௩௪௫

யின்னுங் காண்குவை நன்வா யாகுத
லொளிறுவாண் மறவருங் களிறு மாவுங்
குருதியங் குரூஉப்புனற் பொருகளத் தொழிய
நாளு மானான் கடந்தட் டென்றுநின்
வாடுபசி [1] யருத்திய பழிதீ ராற்ற
னின்னோ ரன்ன பொன்னியற் பெரும்பூண்
வளவ னென்னும் வண்டுமூசு கண்ணி
யினையோற் கொண்டனை யாயி
னினியார் மற்றுநின் பசிதீர்ப் போரே.

திணையும் துறையும் அவை.

அவனை ஆடுதுறைமாசாத்தனார் பாடியது.

இ - ள்.—மிகவும் அறிவுடையையல்லை, ஈரமில்லாத கூற்றமே;

நினக்

குப் போவதொருவிரகில்லாமையினுன் மேல்விளைந்து பயன்படும்விதையைக் குற்றியுண்டாய்; ஆயின் நினக்கு இவ்வாறுசொல்லிய வார்த்தை நல்லமெய் யாதல் இன்னமுங்காண்பை; ஒளிவிளங்கிய வாட்போரைவல்ல வீரரும் யானையும் குதிரையும் உதிரமாகிய நிறமுடைய அழகியநீர்மிக்க போர்க்களத் தின்கண் மாய நாடோறும் அமையாளுய் எதிர்நின்று கொன்று நாடோறும் நினதுமெய் வருந்தற்கேதுவாகிய பசிதீர்த்தற்கு ஊட்டிய வசையற்ற வலியையுடைய கொலைத்தொழிலுக்கு நின்னையொத்த பொன்னுணியன்ற போரணிகலத்தையுடைய வளவனென்றுசொல்லப்படும் வண்டுகள்மொய்க்கப் படுங்கண்ணியையுடைய இத்தன்மையினையுடையோனை நீகொண்டாயாயின், இனி நின்பசியைக்கெடுப்போர் யார்? சொல்லுவாயாக.—எ - று.

கூற்றமே, இத்தன்மையோனைக் கொண்டாயாயின், நின் பசியைத் தீர்ப்போர் இனி யார்? விரகின்மையின் வித்தட்டுண்டனை; நன்வாயாகுதல் இன்னுங்காண்குவையெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

நயனா - நியாயமுமாம்.

(உஉஎ)

---

ச. "ஒளிறுவாண ஞறவரும தேரு மாவும், களிறுஞ் சூழ்தர" மணி. க: அ - க.

(பி - ம்.)—[1] 'அருக்கிய'

---

(உஉஅ.) கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே
யிருடிணிந் தன்ன குருஉத்திரட் பருஉப்புகை
யகலிரு விசும்பி னூன்றுஞ் சூளை
நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே
நு யளியை நீயே யாங்கா குவைகொ

விலவரை சூட்டிய நீணெடுந் தானைப்
புலவர் புகழ்ந்த பொய்யா நல்லிசை
விரிகதிர் ஞாயிறு விசும்பிவர்ந் தன்ன
சேண்விளங்கு சிறப்பிற் செம்பியர் மருகன்
கொடிநுடங்கு யானை நெடுமா வளவன்
றேவ ருலக மெய்தின னாதலி
னன்னோற் கவிக்குங் கண்ணகன் றாழி
வனைதல் வேட்டனை யாயி னெனையதூஉ
மிருநிலந் திகிரியாப் பெருமலை
மண்ணா வனைத லொல்லுமோ நினக்கே.

திணை - அது ; துறை - ஆனந்தப்பையுள்.

அவனை [1] ஐயூர்முடவனார் பாடியது.

ஆனந்தப்பையுளாவது:—

* "விழுமங் கூர வேய்த்தோ ளரிவை

கொழுநன் வீயக் குழைந்தியக் கின்று."

இ - ள்.—அடுகலம்வனையும் வேட்கோவே! அடுகலம்வனையும் வேட்கோவே! இருள் நீங்கி ஒரிடத்தேசெறிந்து நின்றாற்போன்ற நிறமுடைத்தாய்த் திரண்ட மிக்கபுகை அகலிய பெரிய ஆகாயத்தின்கட் சென்றுதங்கும் சூளையையுடைய அகலிய இடத்தினையுடைய பழையவூரின்கட் கலம்வனையும் வேட்கோவே! இரங்கத்தகுவை, நீ என்ன வருத்தமுறுவைதான், நிலவெல்லையின்கண் பரப்பிய மிக்கபெரியசேனையினையுடைய அறிவுடையோர்புகழ்ந்த பொய்யாத நல்லபுகழினையும் பரந்தசுடரினையுமுடைய ஆதித்தன் வானத்தின்கண் பரந்தாலொத்த செய்ம்மைக்கண்ணே விளங்கும் தலைமையையுடைய செம்பியர்மரபினுள்ளான், கொடிகள் நுடங்காநின்ற யானையினையுடைய மிகப்பெரிய வளவன், அவன் தேவருடைய விண்ணுலகத்தையடைந்தானாகலான், அப்பெற்றிப்பட்டோனைக் கவிக்கும் இடமகன்ற தாழியை வனைதல் நீ விரும்பினாயாயின் எப்படியும் பெரியநிலவட்டம் உருளியாகப் பெரியமேருமலை மண்ணாக வனைய இயலுமோ? இயலாதன்றே நினக்கு,—எ - று.

அடுக்கு விரைவின்கண் வந்தது.

கலஞ்செய்கோவே! வளவன் தேவருலகமெய்தினனாதலால், அன்னோற் கவிக்கும் தாழி வனைதல் வேட்டனையாயின் இருநிலம் திகிரியாக மாமேரு

---

கக - உ. புறநா. உ௫அ, உ௫௬, ௩௬௪; "தாழ்வயி னடைப்போர் தாழியிற் கவிப்போர்" மணி. ௬ : ௬எ.

கஉ - ௪. "மாயிருந் தாழி கவிப்பத், தாவின்று கழிகவெற் கொள்ளாக் கூற்றே" நற். உஎக.

* புறப்பொருள்வெண்பாமாலை, சிறப்பிற்பொதுவியற்படலம், க௩.

(பி - ம்.)—1 'உறையூர்முடவனார்'

மண்ணாக வினை தலைவல்லுமோ? ஒல்லாமையின் யாங்கர்குவை; நீ இரங்கத் தக்காயெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இது சுற்றத்தார் இரங்கிக்கூறுதலின், ஆனந்தப்பையுளாயிற்று. (உஉஅ)

---

(உஉகூ.) ஆடிய லழற்குட்டத்
தாரிரு ளரையிரவின்
முடப்பனையத்து வேர்முதலாக்
கடைக்குளத்துக் கயங்காயப்
பங்குனி யுயரழுவத்துத்
தலைநாண்மீ னிலைதிரிய
நிலைநாண்மீ னதனெதிரேர்தரத்
தொன்னாண்மீன் றுறைபடியப்
பாசிச் செல்லா தூசி முன்னா
தளக்கர்த்திணை விளக்காகக்
கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி
யொருமீன் விழுந்தன்றால் விசும்பி னானே
அதுகண், டியாமும் பிறரும் பல்வே றிரவலர்
பறையிசை யருவி நன்னாட்டுப் பொருந

க. அழற்குட்டம் : "அழல்சேர் குட்டத் தட்டமி" (சிலப். உரு : கருச) ; ஆடு - மேடராசி ; அக்கினியை அதிதேவதையாகவுடைமையின் கார்த்திகைக்கு அழலென்பது பெயராயிற்று. அசுவதியின் நான்குகால்களும் பரணியின் நான்குகால்களும், கார்த்திகையின்முதற்காலும் மேடராசிக்குரியன. பங்குனி மாதத்திற் கார்த்திகை நட்சத்திரமுள்ளதினம் பூர்வபக்ஷ அஷ்டமி அல்லது ஸப்தமியென்பது கணிதநூற்றுணிபாதலால், அத்தினத்தின்பாதியிரவு நிறைந்த இருளையுடைத்தாயிற்று.

உ. அனுடத்தின்வடிவமாகிய ஆறுநட்சத்திரங்களின் தொகுதி வளைந்த பனைமரம்போன்ற தோற்றமுடைமையின் அது முடப்பனையெனப்பட்டது ; 'அனுட மாறு முடப்பனை போலும்' என்பர்.

ந. பாசி, ஊசியென்பன முறையே பிராசி, உதீசியென்னும் வடமொழிச்சிதைவுகள் ; உச்சிமீனுக்கு முன் எட்டாவதுமீன் அத்தமித்தலும் பின் எட்டாவது மீன் உதித்தலும் இயல்பு; 'உச்சிமீனுக் கெட்டாமீ னுதயமீன்' என்பர்.

ரு - கஉ. புறநா. உச : உச - ரு ; பங்குனிமாதத்தில நட்சத்திரம் வீழின், இராசபீடை என்பர் ; "ஆடு கயறே டனுச்சிங்கத் தெழுமீன் விழுமே லரசழிவாம்" என்பது சோதிடநூல்.

கச. புறநா. கஉ௬; அ - ஆம் அடியின் குறிப்பைப்பார்க்க.

## ௩சஅ 'புறநானூறு மூலமும் உரையும்.

கடு ஞாயில ஞாயி னன்றுமற் றில்லென
வழிந்த நெஞ்ச மடியுளம் பரப்ப
வஞ்சின மெழுநாள் வந்தன் றின்றே
மைந்துடை யானை கைவைத் துறங்கவுந்

திண்பிணி முரசங் கண்கிழிந் துருளவும்
காவல் வெண்குடை கால்பரிந் துலறவுங்
காலியற் கலிமாக் கதியின்றி வைகவு
மேலோ ருலக மெய்தின னாகலி
னொண்டொடி மகளிர்க் குறுதுணை யாகித்
தன்றுணை யாய மறந்தனன் கொல்லோ
பகைவர்ப் பிணிக்கு மாற்ற னசைவர்க்
களந்துகொடை யறியா வீகை
மணிவரை யன்ன மாஅ யோனே.†

திணையும் துறையும் அவை.

† கோச்சேரமான்யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறை இன்னநாளிற்றுஞ்சுமெனே அஞ்சி, அவன் துஞ்சியவிடத்துக் கூடலூர் கிழார் பாடியது.

இ-ள்.—மேடவிராசிபொருந்திய கார்த்திகைநாளின் முதற்காலின்கண்

நிறைந்த இருளையுடைய பாதியிரவின்கண் முடப்பனையைபோலும் வடிவையுடைய அனுடநாளின் ‡ அடியின்வெள்ளிமுதலாகக் கயமாகிய § குளவடிவுபோலும்வடிவையுடைய புனர்பூசத்துக் கடையின்வெள்ளி எல்லையாக விளங்கப் பங்குனிமாதத்தினது முதற்பதினைந்தின்கண் உச்சமாகிய உத்தரம் அவ்வுச்சியினின்றுஞ்சாய அதற்கு எட்டாமீனாகியமூலம் அதற்கெதிரே எழாநிற்க அந்த உத்தரத்திற்கு முன்செல்லப்பட்ட எட்டாமீனாகிய மிருகசீரிடமாகிய நக்கத்திரம் தலையிடத்தேதாழக கீழ்த்திசையிற்போகாது

௧௯. புறநா. ௯௨ : ௧.

௨௨. புறநா. ௨௧௫ : ௧௦ ; ௨௨௮ : ௧௧ ; ௨௪௯ : ௧௧.

* மு. பாடாண்டிணைத்துறைகளுள், 'அச்சமுமுவகையு மெச்சமின்றி, நாளும் புள்ளும் பிறவற்றினிமித்தமுங், காலங்கண்ணிய ஓம்படை' என்ப தற்கு மேற்கோள் (தோல். புறத்திணை. சூ. ௩0 - இளம்) ; "ஆடிய லழற்குட்டத்து....மாஅயோனே: இதனுள், பாடாண்டலைவனது நாண்மீனை வீழ்மீன் நலிந்தமைபற்றிக் கூறியது" தொ. தொ. சூ. ௩௯ - ந.

† புறநா. ௨௨ : கருத்தின் அடிக்குறிப்பு.

‡ அடியின் வெள்ளி - முதல் நட்சத்திரம்.

§ புனர்பூசம் கயமாகிய குளவடிவமுடையது ; அதனால், அது கய மென்றும், குளமென்றும், ஏரியென்றும் பெயர்பெறும்; "அதிதிநாள் கழை யாவண மேரி புனர்தங் கரும்பிவை புனர்பூச மாகும்" பிங்கலந்தை.

# புறநானூறு மூலமும் உரையும்.

௩௨௯

வடதிசையிற்போகாது கடலாற்சூழப்பட்டபூமிக்கு விளக்காக முழங்கா நின்ற தீப்பரக்கக் காற்றுற்பிதிர்ந்துகிளர்ந்து ஒருமீன் வீழ்ந்தது வானத்தி னின்றும்; அதனைப்பார்த்து யாமும் பிறருமாகிய பல்வேறுவகைப்பட்ட இரவலர் எம்முடைய பறையொலிபோலும் ஒலியையுடைய அருவியையுடைய நல்ல மலைநாட்டுக்குவேந்தனாகியவன் நோயையுடையனல்லனாகப்பெறின் அழ கிதென இரங்கிய நெஞ்சத்துடனே மடிந்தவுள்ளம் பரப்ப யாம் அஞ்சி னேம் ; அஞ்சினபடியே ஏழாநாள் வந்ததாகலின் இன்று, வலியையுடைய யானை கையை நிலத்தேயிட்டுவைத்துத் துஞ்சவும் திண்ணிய வாராற்பிணிக்க

ப்பட்ட முரசம் கண்கிழிந்தருளவும் உலகிற்குக் காவலாகிய வெண்கொற்ற க்குடை கால்துணிந்து உலறவுங் காற்றைப்போலுமியலையுடைய மனஞ் செருக்கிய குதிரைகள் கதியின்றிக் கிடக்கவும் இப்படிக்கிடக்கத் தேவருல கத்தையடைந்தான்; ஆகையாலே, ஒள்ளியவளையையுடைய மகளிர்க்கு மேவப்பட்டதுணையாகித் தனக்குத்துணையாகிய மகளிரையும் மறந்தான் கொல்லோ? பகைவரைப்பிணித்துக்கொள்ளும் வலியையும் நசியோர்க்கு அளந்துகொடுத்தலறியாத வண்மையையுமுடைய நீலமலைபோலும் மா யோன்.—எ - று.

மன்னும், தில்லும் அசை.

கயத்துக்குளக்கடையென்க.

நற்றிசையாகிய கிழக்கும் வடக்குஞ்செல்லாது நீத்திசையாகிய தெற்கும்

மேற்குமாகிய இரண்டனுள் ஒருதிசைக்கண் வீழ்ந்ததென்று ஆம்; அன்றி வடக்குக்கிழக்குஞ்செலலாதெனவே வடகிழக்கே வீழ்ந்ததென்றுமாம்.

படவென்றல் இன்மையிற் கைவைத்துறங்கவும் கண்கிழிந்தருளவும் கால்பரிந்துலறவும் கதியின்றிவைகவுமெனத் தகுதிபற்றிக்கூறப்பட்டன.

மாயோன் மகளிர்க்குறுதுணையாகித் தன்றுணையாயம் மறந்தனனோ? இல்லையோ? யாம் மறவாதிலைமையமாயினமென இரங்கிக்கூறியவாறு.

'அஞ்சினை மெழுநாள் வந்தன் றின்றெனா' என்பதூஉம் பாடம். (உ உகூ)

---

(உ௩0.) கன்றமர் ஆயங் கானத் தல்கவும்
வெங்கால் வம்பலர் வேண்டுபுலத் துறையவுங்

களமலி குப்பை காப்பில வைகவும்
விலங்குபகை கடிந்த கலங்காச் செங்கோல்
வையகம் புகழ்ந்த வயங்குவினை யொள்வாட்
பொய்யா வெழினி பொருதுகளஞ் சேர
வீன்றோ ணீத்த குழவி போலத்
தன்னமர் சுற்றந் தலைத்தலை யினையக்
கடும்பசி கலக்கிய விடும்பைகூர் நெஞ்சமொடு

---

சு. 'எழினி': புறநா. கருஅ: அ-சு; அகநா. ஙசு, க0ரு, ககஎ, உகக,

எ. புறநா. ச: கஅ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.



நோயுழந்து வைகிய வுலகினு மிகநனி
நீயிழந் தனையே யறனில் கூற்றம்
வாழ்தலின் வரூஉம் வயல்வள னறியான்
வீழ்குடி யுழவன் வித்துண் டாஅங்
கொருவ னுருயி ருண்ணு யாயி
னேரார் பல்லுயிர் பருகி
யார்குவை மன்னோவவ னமரடு களத்தே.
திணை - அது ; துறை - கையறுநிலை.

அதியமான்தகடூர்

பொருதுவீழ்ந்தஎழினியை அரிசில்கிழார் பாடியது.

இ - ள்.—கன்றைமேவிய ஆனிரை மேய்த்காட்டிடத்தே பிறிதொன்றால் ஏதமின்றிக்கிடப்பவும் சுரத்தின் நடத்தலால் வெம்மையுற்ற காலினையுடைய வழிபோவார் தாம்வேண்டியவிடத்தே தங்கவும் களத்தின்கண் நிறைத்த நெற்பொலி காவலின்றியே கிடப்பவும் எதிரில்லின்று தடுக்கும் பகையைத்தூரத நிலைகலங்காத செவ்விய ஆட்சியினையும் உலகத்தார்புகழ்ந்த விளங்கியபோரைச்செய்யும் ஒள்ளிய வாளினையும் தப்பாதமொழியினையுமுடைய எழினி பொருது போர்க்களத்தின்கண்ணே வீழப் பெற்ற தாயாற் கைவிடப்பட்ட உண்ணுதகுழவியையொப்பத் தன்னைமேவியகிளை இடந்தோறுமிடந்தோறும் வருந்த மிக்கபசிவருத்திய கலக்கமுற்ற துன்பமிக்க நெஞ்சமோடு அவனையிழந்து வருத்தமுற்றுக்கிடந்த உலகத்து விதனத்தினும் மிகப் பெரிதாக நீயிழந்தாய், அறமிலலாதகூற்றமே! வாழ்தலேதுவாகவரும் வயவிடத்து விளையும் வருவாயையறியானுப் தளர்ந்தகுடியையுடைய உழவன் விதையையுண்டாற்போல இந்த ஒருவனது பெறுதற்கரிய உயிரையுண்டிலையாயிற் பகைவருடைய பலவுயிரையும் பருகிநிறைவை, அவன் போரிற் பகைவரைக் கொல்லும் களத்தின்கண்.—எ - று.

மன் கழிவின்கண் வந்தது.

உயிர் உண்ணவும் பருகவும் படுவதன்றாயினும் அவ்வாறுகூறுதல், * "அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப், பகல்கான் றெழுதரும் பலகதிர்ப் பருதி" என்றாற்போல † ஓரணிகுறித்துநின்றது.

எழினி களஞ்சேர ஒருவனுயிருண்ணாயாயின், அவன் அமரகளத்துப் பல்லுயிரும் பருகி யார்குவை; அதுகழிந்ததேயெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

'கடும்பசி கலங்கிய' என்றும் பாடம்.

கக. புறநா. உ௯0 : அ.

கஉ. புறநா. உஉஎ : உ.

* பெரும்பாணாற்றுப்படை, க - உ.

† ஓரணியென்றது, சமாதியென்னுமலங்காரத்தை.

---

# புறநானூறு மூலமும் உரையும்.

௯௫க

(உ௬௧.) எறிபுனக் குறவன் குறைய லன்ன
கரிபுற விறகி னீம வொள்ளழற்
குறுகினுங் குறுகுக குறுகாது சென்று
விசும்புற நீளினு நீள்க பசுங்கதிர்த்
௫ திங்க ளன்ன வெண்குடை
யொண்ணுதி றன்னோன் புகழ்மா யலவே.

1 திணையும் துறையும் அவை.

2 அதியமானெடுமானஞ்சியை ஔவையார் பாடியது.

இ - ள்.—வெட்டிச்சுட்டகொல்லைநிலத்துக் குறவனால் தறிக்கப்பட்ட துண்டம்போன்ற கரிந்தபுறத்தையுடையவிறகால் அடுக்கப்பட்ட ஈமத்தின் கண் எரிகின்ற ஒள்ளிய அழலின்கண் உடல் சுடச் சென்றணுகினும் அணுகுக, அவ்வாறணுகாதுபோய் வறிதே ஆகாயத்தையுற ஓங்கினுமோங்குக, குளிர்ந்தசுடரையுடைய மதிபோலும் வெண்கொற்றக்குடையையுடைய ஒள்

ளிய ஞாயிற்றையொப்போனது புகழ் மாயா.—எ - று.

ஈமமென்பது பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு.

இனி, ஈமவொள்ளழல் இவனுடல்சிதையாமற் சிறகினுஞ்சிறுகுக; அன்றிச் சிதையும்படி சென்றுநீளினுநீளுக; இவன் புகழ் மாயாவெனினு மமையும்.

'எரிபுனக்குறவன்' என்று பாட்மோதுவாருமுளர்.

(உரு௧)

---

ரு. புறநா. ௩ : ௧; ௨௨ : ௭௧ - ௨; ௭௬௨ : ௧.

௨ - ௪. புறநா. ௨௩௧ : ௨௦ - ௨௧.

(பி - ம்.)—1 'திணை - பொதுவியல; துறை-கையறுநிலை' 2 'அவனை அவர்பாடியது'

---

(௨௩௨.) இல்லா கியரோ காலை மாலை
யல்லா கியர்யான் வாழு நாளே
நடுகற் பீலி சூட்டி நாரரி
சிறுகலத் துகுப்பவுங் கொள்வன் கொல்லோ
ரு கோடுயர் பிறங்குமலை கெழீஇய
நாடுடன் கொடுப்பவுங் கொள்ளா தோனே.

1 திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—அவனையின்றிக் கழிகின்ற காலையும் மாலையும் இனி இல்லை யாகுக; யான் உயிர்வாழுநாளும் எனக்கு ஒருபயன்படாமையின் அவையல்ல

---

௨. 'இலலாகியர்' : புறநா. ௧௭௦ : ரு.

௩. புறநா. ௨௬௪ : ௩ - ௪.

வாக; கடப்பட்ட கல்லின்கட் பீலியைச்சூட்டி*காராலரிக்கப்பட்ட தேறலைச் சிறியகலத்தானுகுப்பவும் அதனைக்கொள்வனே? கொள்ளானே? சிகரமோக இய உயர்ந்தமலைபொருந்திய நாடுமுழுவதுங்கொடுப்பவும் கொள்ளாதவன்,—எ - று.

நாடுடன்கொடுப்பவும் கொள்ளாதோன் காரரி சிறுகலத்துகுப்பவும் கொள்வன் கொல்லோவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க. (உருஉ)

* புறநானூறு, உகஎ : ரு - சு.

---

(உருந.) பொய்யா கியரோ பொய்யா கியரோ
பாவடி யானை பரிசிலர்க் கருகாச்
சீர்கெழு நோன்றா ளகுதைகட் டோன்றிய
பொன்புனை திகிரியிற் பொய்யா கியரோ
ரு இரும்பா ணொக்கற் றலைவன் பெரும்பூட்
போரடு தானை யெவ்வி மார்பி
னெஃகுறு விழுப்புண் பலவென
வைகுறு விடிய லியம்பிய குரலே.

திணையும் துறையும் அவை.

வேள் எவ்வியை வெள்ளெருக்கிலையார் பாடியது.

இ - ள்.—பொய்யாகுக ; பொய்யாகுக ;
யானையைப் பரிசிலர்க்குக் குறைவறக்கொடுக்கும்
பரந்த அடியினையுடைய
சீர்மைபொருந்திய வலிய

முயற்சியையுடைய அகுதையிடத்து உளதாகிய பொன்னாற்செய்யப்பட்ட ஆழிபோலப் பொய்யாகுக ; பெரியபாண்சுற்றத்திற்குமுதல்வன், போரணி கலத்தினையுடைய|போரின்கட் கொல்லும் படையினையுடைய எவ்வியதுமார் பின்கண் வேல்தைத்த சிறந்தபுண் பலவென வைகுதலுற்ற விடியற்காலத்துச்சொல்லிய வார்த்தை.—எ - று.

---

ரு. 'அகுதை' : (புறநா. ௩௪௭ : ௫) ; "இன்கடுங் கள்ளி னகுதை" (குறுந். ௨௯௮ ; அகநா. ௭௬); "அங்கலுழ் மாமை யகுதை", "கன்மா வீசும் வண்மகி ழகுதை", "வயங்குபெருந் தானை யகுதை" அகநா. ௬௬, ௧௧௨, ௨௦௮.

௬. 'எவ்வி': (புறநா. ௨௪ : ௧௮ ; ௨௦௨: ௧௪); "எவ்வி யிழந்த வறுமையாழ்ப் பாணர்" (குறுந். ௧௯); "வாய்வா, ளெவ்வி வீழ்ந்த செருவிற் பாணர், கைதொழு மரபி னமுதித்திடேப் பழிச்சிய", "பயங்கெழு வைப்பிற் பல்வே லெவ்வி", "நீடூர் கிழவோன், வாய்வா ளெவ்வி யேவன் மேவார், நெடுமிடல் சாய்த்த பசும்பூட் பொருந்தில்.........கள்ளுடைப் பெருஞ்சோற் றெல்லியி முன்ன, கவ்வையா கின்றாற் பெரிதே", "வரைமுதாளர் கைபிணி விடுத்து, நனைமுதிர் தேற லூனொயர்க் கீயும், பொலம்பூ ணெவ்வி" அகநா. ௧௧௫, ௧௨௬, ௨௬௬, ௩௬௬.

எ. "விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள், வைக்குந்தன் னாளை யெடுத்து" குறள். ௭௭௬.

பெரும்பூண்மார்பென இயையும்.
திகிரியென்றது, திகிரி தைத்ததென்றுபிறந்த வார்த்தையை.
பொன் : ஈண்டு இரும்பு.
அடுக்கு விரைவின்கண்வந்தது.
இயம்பியகுரல்பொய்யாகியரெனக்கூட்டுக.
(உகூகூ)

---

(உ௱சு.) ரோகோ யானே தேய்கமா காலே
பிடியடி யன்ன சிறுவழி மெழுகித்
தன்னமர் காதலி புன்மேல் வைத்த
வின்சிறு பிண்டம் யாங்குண் டனன்கொ
லுலகுபுகத் திறந்த வாயிற்
பலரோ டுண்டன் மரீஇ யோனே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ-ள்.—ரோவக்கடவேனோ யான்? என்றுவாழக்கடவ மிக்ககாள் மாய்வதாக; பிடியினது அடிபோன்ற சிறிய இடத்தினைமெழுகித் தன்னைமேவப்பட்ட காதலி புன்மேலவைக்கப்பட்ட இனியசிறிய பிண்டத்தை எவ்வாறுண்

டான்கொலலோ ? * உலகத்தார் யாவரும் புகும்பரிசு
திறந்தவாயிலையுடைய பலரோடுங்கூடி உண்டலைமருவியோன்.—எ - று.

இன்சிறுபிண்டமென்றது இகழச்சிக்குறிப்பு.

பலரோடுண்டலை மரீஇயோன்
கூட்டுக.
பிண்டம் யாக்குண்டனல்கொலெனக்
(உ௫௪)

---

க. "செய்கென்பது, கோகோயானேயெனப் பெயரொடு முடிந்தா
லெனின் அவ்வாறுவருவனவுளவேனும் சிறுபான்மை ; வினைகோடலே பெரும்பான்மையெனவுணர்க" (தொல். வினை. சூ. எ - கல், ந); "செய்கென்பது, கோகோயானேயெனச் சிறுபான்மை பெயர்கோடல் உரையிற் கொள்க" இ - வி. சூ. உ௩எ - உரை.

* "உலகவிடைகழி" சிலப். க0: உஎ.

---

(உ௫௫.) சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே

---

க. 'மன்' என்னும் இடைச்சொல் கழிவின்கண் வந்ததற்கு மேற்கோள் (தொல். இடை. சூ. ச - இளம், சே, பேர், கல், ந; நன் - மயிலை. சூ. ச௩க; நன் - வி. சூ. ச௩உ ; இ - வி. சூ. உ௬௩ - உரை) ;

பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே
யென்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே
யம்பொடு வேனுழை வழியெல்லாந் தானிற்கு மன்னே
நரந்த நாறுந் தன்கையாற்

---

"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னேயென்புழி மன்னைச்சொல் இனி அது
கழிந்ததென்னும்பொருள்குறித்து நின்றதுகாணென்றற்பொருளுணராதாரை அரிதாகப்பெற்ற கள்ளை எக்காலமும் எமக்குத் தருகின்றவன் துறக்கத்துச் சேறலின் எமக்குக் கள்ளுண்டல் போயிற்றென்றல இதன் பொருளெனத் தொடர்மொழிகூறிப் பொருளுணர்த்துக" (தொல். உரி. சூ. கூச - ந); "சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே யென்றது உளப்பாட்டுத்தன்மையும் படர்க்கையும் பற்றிவந்தது" (ஷை எச்ச. சூ. சுகூ - ந); ஒருஉவண்ணத்திற்கும் (தொல். செய். சூ. உஉஅ - பேர்), ஆசிரியடிக்கும் (ஷை ஷை ஷை கூஅ - ந) மேற்கோள்.

உ. "பெரியகட்பெறினே : எ. ர இருசீரடி வந்தாலெனின், அதனைச் சொற்சீரடியென்றுகளைக", "பெரியகட் பெறினே: என்பது சொற்சீராகி அகவலுட்பயிலாது வந்தது" தொல். செய். சூ. கூகூ, உக(ரு) - பேர்.

க - உ. ஒருஉவண்ணத்திற்கு மேற்கோள்; தோல். செய். ரு. உஉஎ -ந.

க - ரு. "சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே : என்பதன்கண் முத
லடி நாற்சீரான் வந்தது; இரண்டாமடி ஆசிரியத்தளையொடு
அறுசீரடியாகி வந்தது" தோல். செய். ரு. சு0 - இளம்.
பொருகதி

ச. நெடிலடிக்கு மேற்கோள்; தோல். செய். ரு. ருஅ - ந.

ச - ரு. "சிறுசோற்றானும்......கலத்தன்மன்னே : என்பன ஐஞ்சீரான் வந்த ஆசிரியவடி" தோல். செய். ,, சுரு - பேர்.

சு - எ. ஆசிரியத்துள் ஐஞ்சீரடி அருகிவந்ததற்கு மேற்கோள்; யா-வி. ஒழிபு. சூ. உ.

ச -'எ. "சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே: என்பது முதலாக
நான்கடி ஆசிரியத்து ள் ஐஞ்சீரடிகேவந்தவை" தோல். செய். சூ. சுரு - ந ; யா - வி. ஒழிபு. சூ. உ.

அ-சு. "நரந்தநாறும்...தைவருமன்னே :என முச்சீரடி இடையும் ஒன்று வந்ததாலெனின், தோற்றமென்றதனன் எருத்தடி முச்சீராய காலத்துக் குட்டம் பட்டும் இனிதுவிளக்கும்", "நரந்தநாறும்....மன்னே : என்றவழி எண்சீராதலான் இரணடோற்சீரடி வந்தனவென்று கோடுமன்றே நாக்கின்றுயினென்பது" தோல். செய். சூ. சுசு, அஎ - பேர்.

க - சு. "இது பலவற்றின் நிலையாமைகூறி இரங்குதலின் 'மன்னைக் காஞ்சி' என வேறுபெயர் கொடுத்தார்; இது பெரும்பான்மை மன் என்னும் இடைச்சொற்பற்றியே வருமென்றற்கு மன்கூறினர். . ..
..'சிறியகட்பெறினே

கெடிலடி யாகவும் தூக்குத்துணிந்தவாறு காணக; இங்ஙனம் தூகின்றென 'காந்த

காறுந தன்கையாற புலவு, காறு மெனதலை தைவரு மனனே' என்றதனை இரண்டொறசீரடியாக அலகிட அகவலோசை பிறவாமை யுணர்க" தொல். செய். சூ. அஎ/ ந.

கசு. மு. புறநா. ௰எ : க; குறுந். கஎச : ௫, ௩உ௫ : ௪; 'கொல' என்னும் இடைசசொல இரககககுறிதது வநததறகு மேறகோ ர; நன் - மயிலை. சூ. சஉ0.

கஅ. 'டகல லைற' : (புறநா. கசு : கச); "பெயயாது வைகிய கோதை போல, மெய்சா யினை" நற். கக.

உ0. 'தவ' என்னும் உரிசசொல மிகுதியாகிய குறிப்பையுணர்தது வதற்கு மேறகோள ; தொல். உரி. சூ. ௬௩-சே; இ - வி. சூ. உஅக, உஅஎ - உரை.

* மு. காஞ்சித்திணைத்துறைகளுள 'இன்னனொன் றிரங்கிய மனனை' என்பதற்குமேறகோள (தொல். புறத்திணை. சூ. கக - இளம்); "சிறிய கட்பெறினே.........தவபபலவே : இப்பதினோமடி ஆசிரியததுள ஏழாமடியும் பன்னிரணடாமடியும் மூசசீரானவநதன; மூன்றும் அடிமுதலாக ஆறும் அடியீறுக நான்கடியும் பதினாலாம் அடியும் ஐஞ்சீரான வநதன; இரண டாம்அடியும் பதினொன்றும் அடியும் அறுசீரான் வநதன ;ஏனைய நான்குசீரான்

(பி - ம்.)—1 'அருங்கலை' 2 'துனையிரப்போர்' 3 'பார்வை' 4 'திரு நிறத்திலங்கிய' 5 'பாடேருககொன்றீயுகரும்'

திணையும் துறையும் அவை.

அதியமான் நெடுமானஞ்சியை ஔவையார் பாடியது.

இ - ள்.—சிறிய அளவினையுடைய மதுவைப்பெறின் எங்களுக்குத் தரு வன்; அதுகழிந்தது! பெரிய அளவினையுடைய மதுவைப்பெற்றானாயின் அதனை யாமுண்டுபாட எஞ்சியமதுவைத் தான்விரும்பி நுகர்வான்; அது கழிந்தது! சோறு எலலார்க்கும் பொதுவாதலாற் சிற்றளவினையுடைய சோற்றின்கண்ணும் மிகப்பல கலத்தோடுங்கூட உண்பன்; அதுகழிந்தது! மிக்க அளவினையுடைய சோற்றின்கண்ணும் மிகப்பலகலத்தோடுங்கூட உண் பன்; அதுகழிந்தது! என்போடுகூடிய ஊன்றடியுளதாகிய இடமுழுதும் எங்களுக்கு அளிப்பன்; அதுகழிந்தது! அம்போடு வேல்தைத்த உருவு மிடமாகிய போர்க்களமுழுதும் தான் சென்றுநிற்பன்; அதுகழிந்ததே! தான் காதலிப்பார்க்கு மாலே சூட்டுதலான் நரந்தப்பூநாறும் தன்னுடைய கையால தான் அருளுடைமையிற் புலால்நாறும் எம்முடையதலையைத் தடவு வன்; அதுகழிந்ததே! அரியதலைமையையுடைய பெரியபாணரது அகலியமண் டையின்கண் துளையையுருவி இரப்பவர்கையுளும் தைத்துருவித் தன்னாற்புரக் கப்படும் சுற்றத்தாரது புலவியகண்ணிற் பாவை ஒளிமழுங்க அழகியசொல்லை ஆராயும் நுண்ணிய ஆராய்ச்சியையுடைய அறிவினையுடையோர் நாவின் கண்ணேபோய் வீழ்ந்தது, அவனது அரியமார்பத்தின்கண் தைத்தவேல்; எமக்குப் பற்றாகிய எம்மிறைவன் எவ்விடத்துள்ளான்கொல்லோ? இனிப் பாடுவாருமில்லை; பாடுவார்க்கு ஒன்றீவாருமில்லை; குளிர்ச்சியையுடைய நீரை யுடைய துறையின்கட் பகன்றையினது தேனைப்பொருந்திய பெரியமலர் பிற ராற்சூடப்படாது கழிந்தாற்போலப் பிறர்க்கு ஒருபொருளைக் கொடுக்காது மாய்ந்துபோமுயிர் மிகப்பல.—எ - று.

அவன்சிறந்து உருவியவேல அவனுக்கு இறந்துபாட்டைச்செய்தலோ டே பாணர்முதலாயினார்க்கும் இறந்துபாட்டினைச்செய்தலான் ஒருகாலத்தே யாவரிடத்தும் தைத்ததென்றாராகக்கொள்க.

மன் கழிவின்கண்வந்தது.

(உகூ)

வந்தன ; இவ்வாறு வருதலின் அடிமயங்காசிரியமாயிற்று” (ஷை செய்.சூ. ககஉ-இளம்); “சிறியகட் பெறினே....பலவே: இதனுள், ‘நரந்த நாறுந் தன்கையால்’ எனவும், ‘அருநிறத் தியங்கிய வேலே’ எனவும் தனித்து வந்தன; ‘பெரியகட் பெறினே’ என்பது சொற்சீரடி; இதனைக் குறளடியாக்கிக் குறளடியும் வருமென்பர் பின்பு நூல்செய்த ஆசிரியர்” (ஷை ஷை ஷை சுசு - ந); “சிறியகட் பெறினே......பலவே : இதனுள் இருசீரும் முச்சீரும் இடையிடையே வந்தன” (யா-வி. செய். சூ. கங; யா-கா. செய். சூ. ந); “சிறியகட்பெறினேயென்னும் இணைக்குறளாசிரியப்பாவினுள் ஐஞ்சீரடியும் அருகிவந்தனவெனக்கொள்க” (யா - வி. செய். சூ. ௪0); “இருசீரடியும் முச்சீரடியும் இடையிடை வந்தவிணைக்குறளாசிரியப்பாவிற்குச்செய்யுள்:— சிறியகட்பெறினே......பலவே” (இ - வி. சூ. எநச - உரை) இளம்பூரணர் கொண்ட பாடப்பகுதி அகப்படாமையால, இச்செய்யுளை அவர் கருத்தின்படி கஎ - அடியாகப் பிரித்தற்கு இயலவில்லை.

---

# புறநானூறு மூலமும் உரையும்.

கூருள

(உ௩௬.) கலையுணக் கிழிந்த முழவுமருள் பெரும்பழஞ்
சிலைகெழு குறவர்க் கல்குமிசை வாகு
மலைகெழு நாட மாவண் பாரி
கலந்த கேண்மைக் கொவ்வாய் நீயெற்
புலந்தனை யாகுவை புரந்த யாண்டே
பெருந்தகு சிறப்பி னட்பிற் கொல்லா

தொருங்கு வரல்விடாஅ தொழிகெனக் கூறி
யினையை யாகலி னினக்கு மற்றியான்
மேயினே னன்மை யானே யாயினு
மிம்மை போலக் காட்டி யும்மை
யிடையில் காட்சி நின்னோ
டுடனுறை வாக்குக வுயர்ந்த பாலே.

திணை - அது; துறை - கையறுநிலை.

வேள்பாரி துஞ்சியவழி அவன் மகளிரைப்
பார்ப்பார்ப்படுத்து வடக்கிருந்தகபிலர் பாடியது.

இ - ள்.—முசுக்கலைகிழித்துண்டலாற்பீறிய முழவுபோலும் பெரிய பலாப்பழம் வில்லையுடைய குறவர்க்கு அதன்பெருமையாற் சிலநாளைக்கு இட்டுவைத்துண்ணுமுணவாம் மலையையுடையநாட்டையுடையோய், பெரிய வண்மையையுடையபாரி, நீயும்யானுங்கலந்தநட்பிற்குப்பொருந்த ஒழுகாயாய் நீ என்னை வெறுத்தாயாகக் கடவை, நீ எனக்கு உதவிசெய்த யாண்டுகளும்; பெருமைதக்க தலைமையினையுடைய நட்பிற்குப்பொருந்தாமல் யானும் நின்னோடு கூடப்போதுதற்கு இயையாது நீ ஈண்டுத்தவிர்கவெனச்சொல்லி இப்படி வேறுபட்டதன்மையையுடையையாதலின், நினக்கு யான் பொருந்தினேனல்லாமையான்; இங்ஙனம்பொருந்திற்றிலேனாயினும் இப்பிறப்பின்கண் நீயும்யானுங்கூடி இருந்தவாறுபோலக் காட்டி மறுபிறப்பினும் இடைவிடாத காட்சியினையுடைய நின்னோடு கூடிவாழ்தலை உயர்ந்தவிதி கூட்டுவதாக.—எ - று.

'உலந்தயாண்டு' என்றுபாடமாயின், கழிந்தயாண்டென்க.
மற்று அசைநிலை.

க. "முழவன பலவின் றீங்கனி" சீவக. அஉரு.
உ. "அரிப்பறை வினைஞ ரலகுமிசைக் கூட்டும்" ஐங்குறு. அக.

---



(உ௱எ.) நீடுவாழ் கென்றியா னெடுங்கடை குறுகிப்
பாடி நின்ற பசிநாட் கண்ணே
கோடைக் காலத்துக் கொழுநிழ லாகிப்
பொய்த்த லறியா வுரவோன் செவிமுதல்
வித்திய பனுவல் விளைந்தன்று நன்றென
நச்சி யிருந்த நசைபழு தாக
வட்ட குழிசி யழற்பயந் தாஅங்
களியர் தாமே யார்க வென்று
வறனில் கூற்றந் திறனின்று துணிய
ஞூழி ஞருப்ப வெருக்கிய மகளிர்
வாழைப் பூவின் வளைமுறி சிதற
முதுவா யொக்கற் பரிசில ரிரங்கக்
கள்ளி போகிய களரியம் பறந்தலை

வெள்வேல் விடலை சென்றுமாய்ந் தனனே
யாங்கது நோயின் றாக வீங்குவரைப்
புலிபார்த் தொற்றிய களிற்றிரை பிழைப்பி
னெலிபார்த் தொற்றா தாகு மலிதிரைக்
கடன்மண்டு புனலி னிழுமெனச் சென்று
நனியுடைப் பரிசிற் றருக
மெழுமதி நெஞ்சே துணிபுமுந் துறுத்தே.

திணையும் துறையும் அவை.

வெளிமானுழைச்சென்றார்க்கு அவன்றுஞ்ச இளவெளிமான்சிறிது கொடுப்பக் கொள்ளாது பெருஞ்சித்திரனார் பாடியது.

இ - ள்.—நெடுங்காலம்வாழ்வாயாகவென்று யான் நெடிய வாயிலை யணுகிப் பாடிநின்ற பசியையுடையகாலத்தின்கண்ணே, கோடையாள்வெம்மையுற்றபொழுதின்கண் அடைகதார்க்குக் கொழுவியநிழலையொத்து யார் கண்ணும் பொய்கூறுதலறியாத அறிவையுடையோனது செவிபிடத்து நல்லோர்விதைத்த கேள்வியாகியபயிர் நன்றாகவிளைந்தநெல்லினைத்துப் பரிசிலை விரும்பியிருந்த அவ்விருப்பம் பயனில்லையாக அடப்பட்டபானையினின்றும் சோறின்றி எரி புறப்பட்டாற்போல அளிக்கத்தக்கார் உண்பாராகவென்று

ரு - சு. "இசைநுவல் வித்தி னசைவே ருழவர்" மலைபடு. சுO.

கO. புறநா. உரு : கO - கஉ.

கரு. மு. புறநா. உஉரு : எ ; உசரு : ரு.

கஎ. புறநா. ககO : சு - கO.

# புறநானூறு மூலமும் உரையும்.

௨௱௩௰௭

கருதாத அறிவில்லாதகூற்றம் கூறுபாடின்றாகி அவனுயிரைக்கொள்ளத் துணிய முறையான் வெய்தாக மார்பின்கண் அறைந்துகொண்டமகளிர் கையிலணிந்த வளைகளின்முறிகள் வாழைப்பூப்போலச் சிதற முதியவர்க்கிலை யுடைய சுற்றத்தொடுகூடிய பரிசிலரிரங்கக் கள்ளியோங்கிய களர் நிலமாகிய பாழ்பட்ட புறங்காட்டின்கண் வெளியவேலையுடையவீரன் போய் இறந்து பட்டான்; கூற்றம் கோயின்றியிருப்பதாக; உயர்ந்தமலையிடத்துப் புலி பார்த்துவீழ்த்த களிறாகிய இரைதப்பின் தனக்கு இரையாதற்குப்போதாத எலியைப் பார்த்துவீழ்த்தாதாகும்; மிகக திரையையுடைய கடலின்கண் மண்டிய ஆற்றுநீர்போல விரையப்போய் மிகுதியையுடைத்தாகிய பரிசிலைக் கொடுவருவேமாக, எழுக்கிராய்நெஞ்சே, தெளிவை முன்னிட்டுக்கொண்டு.— எ - று.

நசைபழுதாக அழற்பயந்தாங்குக் கூற்றந்துணிய

விடலைமாய்ந்தன

னெனவும், மகளிர்வளைமுறி வாழைப்பூவிற்சிதறவெனவும், துயர்த்த நெஞ்சமே எழுவெனவுங் கூட்டுக.

கோயின்றாகவென்றது குறிப்பிற்றேன்றல்.

துணிபுமுக்

'ஆங்கதுகோயின்றாக' என்றது இளவெளிமான் சிறிதுகொடுப்ப அதனை இகழ்ந்துகூறியதென்பாருமுளர்,

'புலிபார்த் தொற்றிய களிற்றிரை பிழைப்பி, னெலிபார்த் தொற்று தாகும்' என்பதூஉம் இவன்பின்கொடுத்தபரிசிலின் சிறுமைநோக்கியின் றது.

'ஊழை புருப்ப வெருக்கிய மகளிர்' என்றோதி விதியைவெறுப்ப எருக்கியமகளிரென்றுரைப்பினுமமையும். (உ௩௭)

---

(உ௩௮.) கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் [1]சேவலும் பொகுவலும் வெருவா
வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடிப்

---

க. புறநா. உஉஅ : கஉ-ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

உ. "செஞ்செவியெருவை" புறநா. ௩௭0: உ௯, ௩௭௩ : ௩அ; அகநா. ௭௭.

க - உ. "கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த, செவிசெஞ் சேவலும்:என முறைமயங்கிவந்ததாலெனின், ஆண்டுச செஞ்செவியென்பது நின்றது" தொல். கிளவி. சூ. உ௫ - பேர். மொழிமாறி

௩. மு. புறநா. ௩௬உ : ௧௭.

க . ௩. செய்யுட்கண் வண்ணச்சினைச்சொல் அடை சினை முதலெனு

மூன்றும் முறைமயங்கி வந்ததற்கு மேற்கோள் (தொல். எளவி. சூ. உகூ - சே, ந ; இ - வி. சூ. ௩கச - உரை) ; "கலிசெந்தாழிக்......கூகையுங் கூடி ; என வருவன 'கொம்புகூர்மாடு', 'மடல்விரிதாழை' என்றாற்போல வருதலின், 'உயர்திணைதொடர்ந்த பொருண்முதலாறும்' என்னுஞ் சூத்திரத்துள் அஃறிணையொடுசார்த்தினஃறிணைமுடிபினவாமென அமைத்ததன்பாற்படு மென்க" நன் - வி. சூ. ௩0௩.

## கூகூ0 புறநானூறு மூலமும் உரையும்.

பேஎ யாயமொடு பெட்டாங்கு வழங்குங்
காடுமுன் னினனே கட்கா முறுநன்
றொடிகழி மகளிரிற் றொல்கவின் வாடிப்
பாடுநர் கடும்பும் பையென் றனவே
தோடுகொண் முரசுங் கிழிந்தன கண்ணே
ஆளில், வரைபோல் யானையு மருப்பிழந் தனவே
வெந்திறற் கூற்றம் பெரும்பே துறப்ப
வெந்தை [1] யாகுல வதற்பட லறியே
னந்தோ வளியேன் வந்தனென் மன்ற
வென்னா குவர்கொலெற் றுன்னி யோரே
மாரி யிரவின் மரங்கவிழ் பொழுதி
னாரு குற்ற நெஞ்சமொ டொராங்குக்
கண்ணி லூமன் கடற்பட் டாங்கு
வரையளந் தறியாத் திரையரு நீத்தத்

தவல மறுசுழி மறுகலிற்

றவலே நன்றுமற் றகுதியு மதலே.

திணையும் துறையும் அவை.

வெளிமான் துஞ்சியபின் அவர் பாடியது.

இ - ள்.—பிணமிட்டுப்புதைக்கப்பட்ட கவிக்கப்பட்ட செய்ய

தாழி

யின்று குவிந்தபுறத்தேயிருந்த செவிசிவந்த கழுகின்சேவலும் பொகுவ

லெலன்னும்புள்ளும் அஞ்சாவாய் வாய்வலிய காக்கையும்கோட்டானும் கூடிப்

பேயினத்துடனே தாம் விரும்பியவழியேயியங்கும் சுடுகாட்டைத்

தலைப்பட்டான், வீரபானத்தைக்காமுறுவான் ; அவனுடைய

வளைகழிக்கப்பட்ட உரிமை மகளிரைப்போலப் பழைய அழகு தொலைந்து

பாடுவாரதுசுற்றமும்

ஒளிமழுங்கின ; தொகுதிகொண்டமுரசங்களும் கணகிழிந்தன ; பாகர்முத

லாயின ஆளிலலாத மலைபோன்ற யானைகளும் மருப்பிழந்துவிட்டன ; இவ்

வாறு வெவ்வியதிறலையுடையகூற்றம் பெரிய இறந்தபாட்டை

எய்துவிப்ப எண்ணாறவன் ........ அவ்விறந்துபாட்டிலேபடுதலை

அறியேனுய் ஐயோ !

---

சு. புறநா. உசுக : கஅ - கூ, உஅ௦ : கஎ.

அ. முரசங்கண்கிழிதல்: புறநா. உஉகூ: கூ.

க௦ - கஉ. "வெந்திறற் கூற்றம்...அந்தோவளியேன்

வந்தனென்மன்ற: என்றவழி அந்தோவென்பது கேடுகுறித்து நின்றது"

நகூ - பேர்.

தொல். இடை. கூ.

கஅ - க. "சங்கடத்திற் சாவதே நன்று" தனிப்பாடல்.
(பி - ம்.)—1 'ஆகுதலதப்பட'

# புறநானூறு மூலமும் உரையும்.

ரு.அக

அளித்தலையுடையேன் வந்தேன்; நிச்சயமாக என்ன தயாமுறுவர்கொல்லோ என்னையடைந்தசுற்றத்தார்? மழையையுடைய இரவின்கண் மரக்கலம் கவிழ்ந்தகாலத்துப் பொறுத்தற்கரியதுன்பமுற்றநெஞ்சுடனே ஒருபெற்றிப் படக் கண்ணில்லாத ஊமன் கடலின்கண் அழுந்தினாற்போல எல்லையளந்தறி யப்படாத திரையரிதாகிய வெள்ளத்தின்கண் துன்பமாகிய மறுசுழியின் கட்பட்டுச் சுழலுமதனில் இறந்துபடுதலே நன்று; நமக்குத் தக்கசெய்கையும் அதுவே.—எ - று.

யான் அது செய்யப்பெற்றிலேனென்னும் நினைவிற்று.

மன் கழிவின்கண் வந்தது.

வெருவா வழக்குமென இயையும்.

'முரசும் கண்கிழிந்தன', 'யானையும் மருப்பிழந்தன' என்ற கருத்து: அவற்றால்தொழில்கொள்வாரின்மையின், அவை பயனிழந்தனவென்பதாம்.()

---

(௨௱௬.) தொடியுடைய தோண்மணந்தனன்
கடிகாவிற் பூச்சூடினன்
[1] நண்கமழுஞ் சாந்துநீவினன்
செற்றோரை [2] வழிதபுத்தன
னட்டோரை யுயர்புகூறினன்
வலியரென [3] வழிமொழியலன்
மெலியரென [4] மீக்கூறலன்
பிறரைத்தா னிரப்பறியல
னிரந்தோர்க்கு மறுப்பறியலன்
வேந்துடை யவையத் தோங்குபுகழ் தோற்றினன்
வருபடை யெதிர் [5] தாங்கினன்
பெயர்படை புறங்கண்டனன்
கடும்பரிய மாக்கடவின

---

௩. புறநா. ௧௬௧ : ௨௬ - ௭.

௪ - ௫. புறநா. ௩௮ : ௫-௬ ; பழ. ௩௬௮; "கட்டவர்குடி யுயர்க்குவை, செற்றவரரசுபெயர்க்குவை" மதுரை. ௧௩௧ - ௨.

௬. "பகைவர்க் கஞ்சிப் பணிந்தொழு கலையே" மதுரை. ௨0௧.

௬-௭. "வலியரென...மீக்கூறலன்: எனத் தன்கண்ணும் பிறன்கண்ணுந் தோன்றியமென்மைபற்றி இளிவரல் பிறந்தன" தொல். மெய்ப்பா. ௫. ௬ - பேர் ; இ - வி. ௫. ௫௭௮ - உரை.

(பி-ம்.)—1 'நறைகமழ்சாந்த நீவினன்' 2 'வழிதேய்த்தனன்' 3 'வாய்மொழியலன்' 4 'மேற்செல்லலன்பிறரையொன்றிரப்பு' 5 'கழறினன்'

46



னெடுந்தெருவிற் [1] றேர்வழங்கினன்
[2] றோங்கியல களிறூர்ந்தனன்
[3] தீஞ்செறி தசும்புதொலைச்சினன்
பாணுவப்பப் பசிதீர்த்தனன்
மயக்குடைய மொழிவிடுத்தனன், ஆங்குச்
செய்ப வெல்லாஞ் செய்தன னாகலி
னிடுக வொன்றோ சுடுக வொன்றோ
[4] படுவழிப் படுகவிப் புகழ்வெய்யோன் றலையே.

திணையும் துறையும் அவை.

நம்பிநெடுஞ்செழியனைப் பேரெயின்முறுவலார் பாடியது.

இ - ள்.—இளையமகளிரது வளையணிந்த தோளைமுயங்கினான்; காவலையுடைய இளமரக்காக்களிற் பூவைச்சூடினான்; குளிர்ந்த மணநாறும் சாந்தைப் பூசினான்; பகைத்தோரைக் கிளையொடுங்கெடுத்தான்; நட்டோரை மிகுத்துக்கூறினான்; இவர் நம்மில் வலியவரென்று கருதி அவர்க்கு வழிபாடு கூறியறியான்; இவர் நம்மில் எளியரென்று கருதி அவரின் மிகுத்துச்சொல்லியறியான்; பிறரைத் தாவென்றியெனச்சொல்லி இரந்தறியான்; சூழ்ந்துநின்று இரந்தோர்க்கு யாதும் இல்லையென்று மறுத்தலை அறியான்; அரசருடைய அவைக்களத்தின்கண் தனது உயர்ந்த புகழை வெளிப்படுத்தினான்; தன்மேல வரும் படையைத் தன் எல்லையுட் புகுதாமல் எதிர்நின்று தடுத்தான்; புறக்கொடுத்துப் பெயரப்பட்ட படையினது புறக்கொடைகண்டு அதன்பின் செல்லாது நின்றான்; விரைந்த செலவையுடைய குதிரையைத் தன் மனத்தினும் விரையச் செலுத்தினான்; நெடிய வீதியின்கண் தேரைச்சூழ வியங்கினான்; உயர்ந்த இயல்பையுடையவாகிய களிற்றைச்செலுத்தினான்; இனிய தேறலையுடைத்தாகிய மதுவையுடைய குடங்களைப் பலர்க்கும் வழங்கித் தொலைவித்தான்; பாணருவப்ப அவர் பசியை மாற்றினான்; நடுவுநிலைமையின் மயக்குதலையுடைய சொற்களை அந்நடுவுநிலைமையிற் பிழையாதபடி மயக்கந்தீரக் கூறினான்; அப்படிச்செய்யத்தகுவனவெல்லாம் செய்தானாதலான், இப்புகழை விரும்புவோனது தலையை வாளான்

அறுத்துப்போகடினும் போகடுக; அன்றிச்சுடினும் சுடுக;

பட்டபடிபடுக.— எ - று.

---

௧௬ - ௨௧. "கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார், துரும்பெழுந்து வேங்காற் றுயராண் டுழவார், வருந்தியுடம்பின் பயன்கொண்டார் கூற்றம், வருங்காற் பரிவ திலர்" நாலடி. ௩௫.

* மு. எற்றயலடி ஈாற்சீராங் வந்த வஞ்சிப்பாவிற்கும் (தொல். செய். சூ. கஎ - இளம்), பிரிந்திசைத்தூங்கற்குறளடிவஞ்சிப்பாவிற்கும் (யா-வி. செய். சூ. ௩.எ) மேற்கோள்.

(பி - ம்.)—1 'தேர்மறுக்கினன்', 'தேரோட்டினன்' 2 'உடல்சினத்த களிறு' 3 'நிஞ்சொற்றசும்பு' 4 'படுகுழி'

# புறநானூறு மூலமும் உரையும்.

௩௯௩.

' நட்டோரையுயர்புகூறினன் ' என்றது, * தான் உயர்த்துக்கூறவே யாவரும் உயர்த்துக்கூறுவரென்பதாம்.

' மயக்குடைய மொழிவிடுத்தனன் ' என்பதற்கு உலகவொழுக்கத்தில் மயக்கமுடைய சொற்கள் தன்னிடைப் புகுதாமல விடுத்தானென்றும், பொருண்மயங்கிய சொற்களைத் தன்னிடத்துப்புகுதாமல் விடுத்தானென்றுமுரைப்பினுமமையும்.

ஒன்றேயென்பது எண்ணிடைச்சொல. (உ௩௯)

---

* "மாகஞ் சிறகக் குவிதது நிதிக்குவை, ீகையி னேக்கமுத்த மிக்குடைய - மாகொல், பகைமுகத்த வெவ்வேலாங் பார்வையிற் நீட்டு, கஙகைமுகத்த கன்கு மதிப்பு" நீதிநெறி. ௩௯.

---

(உ௪௦.) ஆடுநடைப் புரவியுங் களிறுந் தேரும்
வாடா யாணர் நாடு மூரும்

பாடுநர்க் கருகா வாஅ யண்டிரன்
கோடேந் தல்குற் குறுந்தொடி மகளிரொடு
கால னென்னுங் கண்ணிலி யுய்ப்ப
மேலோ ருலக மெய்தின னெனாஅப்
பொத்த வறையுட் போழ்வாய்க் கூகை
சுட்டுக் குவியெனச் செத்தோர்ப் பயிரும்
கள்ளியம் பறந்தலை யொருசிறை யல்கி
யொள்ளெரி நைப்ப வுடம்பு மாய்ந்தது
புல்லென் கண்ணர் புரவலர்க் காணாது
கல்லென் சுற்றமொடு கையழிந்து புலவர்
வாடிய பசிய ராகிப்பிறர்
நாடுபடு செலவின ராயின ரினியே.

திணையும் துறையும் அவை.

ஆயைக் குட்டுவன்கீரனுர் பாடியது.

இ - ள்.—களத்திற்கேற்பநடக்கும் அசைந்த நடையையுடைய குதிரைகளும்யானைகளும்தேர்களும் அழியாதபுதுவருவாயையுடையகாடும்ஊர்களும் பாடுவார்க்குக்குறையநக்கொடுக்கும் ஆயாகிய அண்டிரன், கோடேந்திய அல்குலினையும் குறியகைவளைகளையுமுடைய உரிமைமகளிரோடுகாலனென்று சொல்லப்படாநின்ற கண்ணோட்டமில்லாதவன் கொண்டுபோகத் தேவருலகத்தையடைந்தானுகக் கொண்டு பொந்தாகிய தனை வாழுமிடத்துப் போழ்ந்தவாயலகையுடைய பேராந்தை சுட்டுக்குவியென்று செத்தார்போலும் கள்ளியையுடையபாழிடமாகிய புறங்காட்டோரை அழைப்பதுபோலக்கூவும்

ஏ - அ. "சாவோர்ப் பயிருங் கூகையின் குரலும்" மணி. ௬ : எரு.
க. 'பறந்தலை' : புறநா. உஉரு, உசரு; மணி. கஅ: ௬உ.

டன் ஒருபுடையிலேதங்கி ஒள்ளியதீச்சுட உடம்பு மாய்ந்துவிட்டது; பொலிவழிந்தகண்ணினையுடையராய்த் தம்மைப்பாதுகாப்போரைக் காணாது ஆரவாரிக்கும் கிளையுடனே செயலற்று அறிவுடையோர் தம்மெய்யுணங்கிய பசியையுடையராய்ப் பிறருடைய நாட்டின்கண் தலைப்படும் போக்கையுடையராயினர் இப்பொழுது; இஃதொருசிலை இருந்தவாறென்னை?—எ - று.

'மேலோ ருலக மெய்தின னெனவே' எனவும், 'ஒள்ளெரி நைப்ப வுடம்பு மாய்ந்தனனென' எனவும் பாடமோதுவாருமுளர். (உ௪௦)

---

(உ௪௧.) திண்டே ரிரவலர்க் கீத்த தண்டா
ரண்டிரன் வரூஉ மென்ன வொண்டொடி
வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுட்
போர்ப்புறு முரசங் கறங்க
வார்ப்பெழுந் தன்றால் விசும்பி னானே.

திணையும் துறையும் அவை.
* அவனை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது.

இ - ள்.—திண்ணியதேரை இரவலர்க்கீந்த குளிர்ந்தமாலையையுடைய ஆய்வருகின்றானென்று ஒள்ளிய தொடியினையும் வச்சிராயுதத்தையுமுடைய விசாலமாகிய கையையுடைய இந்திரனதுகோயிலுள்ளே போர்த்தலுற்றமுரச முழங்க வானத்தின்கண் ஓசைதோன்றிற்று.—எ - று.

இப்பெற்றிப்பட்டவள்ளியோனை வானோர் எதிர்கோடல் தப்பாதென்றவாறு.

இது தற்குறிப்பேற்றமென்பதோரணிப்பொருட்டாய்நின்றது.

(உசக) * "மோசிபாடியவாயும்" புறநா. கருஅ: கஈ.

---

(உசஉ.) இளையோர் சூடார் வளையோர் கொய்யார்
நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
பாணன் சூடான் பாடினி யணியா
ளாண்மை தோன்ற வாடவர்க் கடந்த
ரு வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ வொல்லையூர் நாட்டே.

திணையும் துறையும் அவை.

* ஒல்லையூர்கிழான்மகன் பெருஞ்சாத்தனைக் 1 குடவாயிற் கீரத்த னர் பாடியது.

---

க. புறநா. கூச: உ.

ச. ஆண்மை, ஆளுந்தன்மையெனப்பொருளுரைத்து இவ்வடியை மேற்கோள் காட்டினர் நச்சினார்க்கினியர்; தொல். ஒளவி. சூ. ருஎ.

* சிங்கங்காட்டுக்குச் சமீபத்தில் ஒல்லனூரென்று ஒருருள்ளது.

(பி - ம்.)—1 'குடவாயினல்லாதனர்'

இ - ள்.—இளையவீரர் சூடார், * வளையணிந்த இளையமகளிர் பறியார், நல்லயாழ்க்கோட்டின் மெல்லவளைத்துப் பாணன் பறித்துச் சூடிக்கொள்ளான், [1] பாடினி சூடாள், தன்னுடைய ஆண்மைப்பாடு யாவர்க்கும் வெளிப்பட வீரரை எதிர்நின்றுகொன்றுவென்ற வலியவேலையுடையசாத்தன் இறந்துபட்டபின்பு முல்லையாயநீயும்பூக்கக்கடவையோ, அவனது ஒல்லையூர் நாட்டின்கண்?—எ - று.

அவனையிழந்து கொடியேனுய்வாழ்கின்ற யானேயன்றி நீயும் கொடியையாய்ப் பூக்கின்றாயோவென எச்சவும்மையாய்நின்றது; என்றது, பூச்சூடுநர்வாரின்மையிற் பயனில்லையென்றவாம். (உ௪உ)

* "சில்வளை விறலியென்றது, பல்வளையிடுவது பெதும்பைப் பருவத்தாகலின், அஃதன்றிச் சில்வளையிடும் பருவத்தாளென அவள் ஆடல்முதலிய துறைக்குரியளாதல் கூறப்பட்டது" பதிற். ௫௰: ௬ - உரை.

(பி - ம்.)—[1] 'பாணிச்சி'

---

(உ௪௩.) இனிநினைந் திரக்க மாகின்று திணிமணற்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் [1] தூங்குவழித் தூங்கி
மறையென லறியா மாயமி லாயமொ
[2] டுயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோ டேறிச் சீர்மிகக்

கரையவர் மருளத் திரையகம் பிதிர
[3]நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்துமணற் கொண்ட [4]கல்லா விளமை

௧. "இனியென்றது, 'இனிநினைந்திரக்கமாகின்று' என்றாற்போல இப்பொழுது என்னும் பொருள் தந்தது" (கலி. ௧: ௩); 'இரங்கல்' என்னும் உரிச்சொல் இரக்கமென்றாகி ஒருபொருளது கழிவாற்பிறந்த வருத்தமாகிய குறிப்புணர்த்திற்குமென்பதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. ௬௧ - ௩.

௧ - ௬. புறநா. ௧௧: ௧ - ௪.

௬. "நெடுநீர்த் தண்கயந் துடுமெனப் பாய்ந்து" (நற். ௩௬௦); "நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து என்பதும் இசை" (தொல். இடை. சூ. ௧௦ - ௩; நன் - வி. சூ. ௪௨௪); 'துடும்' என்னும் சொல் ஓசைப்பொருண் மேல்வந்ததற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. ௪௨௦.

(பி - ம்.)—1 'தக்குவழித்தங்கி' 2 'பாசினமருத......தாழ்ந்த நீர்க் கணிப்படிந்த' 3 'நிலையருங்குட்டம்' 4 'கள்ளாமையளிதோ'.



யளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்
றிருமிடை மிடைந்த சிலசொற்
பெருமூ தாளரே மாகிய வெமக்கே.*

திணையும் துறையும் அவை.

அவனைத் தொடித்தலைவிழுத்தண்டினூர் பாடியது.

இ - ள்.—இப்பொழுதுங்களைந்து இரக்கமாகாநின்றது, செம்மந்தமண லிடத்துச்செய்யப்பட்டவண்டற்பாவைக்குப் பறிக்கப்பட்டபூவைப்பறித்துச் சூடிக் குளிர்ந்த பொய்கையின்கண் விளையாடும் மகளிரோடு கைகோத்து அவர்தழுவினவிடத்தேதழுவி அசைந்தவிடத்தேயசைந்து ஒளித்துச்செய்யுமஃ தறியாத வஞ்சனையில்லாத இளமைந்தருடனேகூட உயர்ந்தகோடுகளையுடைய மருதினது துறையிலேவந்து உறத்தாழ்ந்து நீர்க்கு அண்ணிதாகப்படிந்த கொம்பிலேயேறி அழகுமிகக் கரையிடத்து நிற்போர் வியப்பத் திரையிடத் துத் திவலையெழ ஆழத்தானெடியநீரையுடைய மடுவின்கண் துடுமென்றொலி ப்பக்குதித்து மூழ்கி மணலைமுகந்துகாட்டிய கல்வியில்லாத இளமை இரங்கத் தக்கது ; அவ்விளமை எவ்விடத்துண்டுகொல்லோ பூண்செறிந்த தலையை யுடைய பரியதண்டுக்கோலையூன்றித் தளர்ந்து இருமல இடையேகெருங்கின சிலவார்த்தையையுடைய பெரியமுதுமையையுடையேமாகிய எங்களுக்கு?— எ - று.

எமக்கு இளமை யாண்டுண்டுகொல்லோ ? அதுதான் இரங்கத்தக்க தெனக் கூட்டுக.

இளமைகழிந்து இரங்கிக்கூறுதலான் இதுவும் கையறுநிலையாயிற்று.

'மறையெனவறியார்' என்று பாடமோதுவாருமுளர். (உசங)

---

கச. "பெருமு தாளரேமஞ் சூழ" முல்லை, ருச.

கஉ - ச. "தொடித்தலை......எமக்கே: என்பது தன்கட்டோன்றிய

மூப்புப் பொருளாக இளிவரல் பிறந்தது ; என்னை ? இளமைக்காலத்துச் செய்தலை செய்யமாட்டாது இளிவந்தனம் இக்காலத்து என்றமையின்" தொல். மெய்ப்பாடு. சூ. ௬ - பேர் ; இ - வி. சூ. ருஎஅ - உரை.

* மு. காஞ்சித்திணைத்துறைகளுள், 'கழிந்தோரொழிந்தோர்க்குக் காட்டிய முதுமை' என்பதற்கு மேற்கோள் ; தொல் புறத்திணை. சூ. ௨௪ - ந.

---

(உசச.) பாணர் சென்னியும் வண்டுசென் றாதா

விறலியர் முன்கையுந் தொடியிற் பொலியா
விரவன் மாக்களு....................

---

௧. புறநா. ௬எ௬ ; ௬ ; "கண்டோர் மருளும் வண்டுசூழ் நிலையும்" பொருந. ௬எ.

# புறநானூறு மூலமும் உரையும்.

௬௬எ

இ - ள்.—.......................... ...............................
...............முசுக்கலையினிக்குதற்கு இரலையென விசேடித்தனர்......
.........சாதலென்பது இன்னாதாதலிற் பெரும்பிறிதாயின்றேவென்றான்.

. தானுறுகின்ற துன்பத்தைக் கலைமேல்வைத்துக்கூறியவாறு.

(உசச)

---

(உசரு.) யாங்குப் பெரிதாயினு நோயள வெனைத்தே
யுயிர்செகுக் கல்லா மதுகைத் தன்மையிற்
கள்ளி போகிய களரியம் பறந்தலை
வெள்ளிடைப் பொத்திய விளைவிற கீமத்
தொள்ளழற் பள்ளிப் பாயல் சேர்த்தி
ஞாங்கர் மாய்ந்தனண் மடந்தை
யின்னும் வாழ்வ லென்னிதன் பண்பே.*

திணையும் துறையும் அவை.

சேரமான் கோட்டம்பலத்துத்துஞ்சியமாக்கோதை தன் பெருங் கோப்பெண்டு துஞ்சியகாலைச் சொல்லியபாட்டு.

இ - ள்.—எப்படிப்பெரிதாயினும் யானுற்றநோயினது எல்லை எவ்வள வாயிற்று, என்னுயிரைப்போக்கமாட்டாத வலியையுடைத்தல்லாமையால்? கள்ளிவளரப்பட்ட புறங்காட்டின் வெள்ளிடையின்மூட்டிய தீயைவிளைக்கும் சிறியவிறகையுடைய படுக்கையின்கண் ஒள்ளிய அழலாகியபாயலின்கண்ணே பொருந்தப் பண்ணி, மேலுலகத்தேபோயினள், மடவாள்; அவளமாயவும் இன்னமும் உயிரிருந்துவாழ்வேன்; இவ்வுலகியற்கையிருந்தவாறு என்னோ?— எ - று.

எனைத்தென்றது, உயிரைப்போக்கமாட்டாமையின் நோயை இகழ்ந்து கூறியவாறு.

'பாவைசேர்த்தி' என்றோதி அவளுடம்பை அழகுபடப் பள்ளியுட் கிடத்தியென்றுரைப்பாருமுளர்.

உயிர்செகுக்கலாமைக்குக்காரணம் மதுகையுடைத்தல்லாமையென

வுணர்க.

பாயல்சேர்த்தி இன்னும்வாழ்வலெனவினையும்.

சேர்தலெனத்திரிப்பினுமமையும்.

'ஞாங்கர்மாய்ந்தனள்' என்பதற்கு என்னைநீத்து முன்னே இறந்தாளென்றுமாம். (௨௪௫)

---

௩. மு. புறநா. ௨௨௫: ௭, ௨௩௭: ௧௨.

* மு. காஞ்சித்திணைத்துறைகளுள், 'காதலியிழந்த தபுதாரநிலை'என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௧௯ - இளம்; ஷை. ஷை. ஷை. ௨௪ - ந.



பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே
அணில்வரிக் கொடுங்காய் [1] வாள்போழ்ந் திட்ட
காழ்போ னல்விளர் நறுநெய் தீண்டா
[2] தடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியு
முயவற் பெண்டிரே மல்லே மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீம

நுமக்கரி தாகுக தில்ல வெமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளித ழவிழ்ந்த தாமரை
கரு நள்ளிரும் பொய்கையுந் தியுமோ ரற்றே.*

திணை - அது ; துறை - ஆனந்தப்பையுள்.

பூதபாண்டியன்றேவி பெருங்கோப்பெண்டு தீப்பாய்வாள் சொல் லியது.

---

க. நன் - மயிலை. ரு. கசுக - மேற்.

ச. "அணில்வரிக் கொடுங்காய் எனப் புறத்தினுங் காட்டினாராதலின், கொடுங்காயென்பது பெயர் ; வரி - அடை" (சிலப். கசு : உஉ - அ : அடி யார்) ; குறில் செறியா ளகரம் வேற்றுமையில் வலிமுன் திரியாதியல் பானதற்கு மேற்கோள்; நன் - மயிலை. ரு. உஉஅ; நன் - வி. ரு. உ௨க ; இ - வி. ரு. கருக - உரை.

எ - க. "தன்புறவன என்றார், 'வெள்ளெட் சாந்தொடு............ வதியும்' என்பதனை : இது புறம்" சிலப். கஅ : ருச - சு : அடியார்.

கக - ரு. தொல். இடை. ரு. ரு - பேர். மேற்.

எ - கரு. "காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி,பூதலக் குருகி னுயிர்த் தகத் தடங்கா, தின்னுயி ரீவ ரீயா ராயி, னன்னீர்ப் பொய்கையி னளியெரி புகுவர், நளியெரி புகாஅ ராயி னன்பரோ, டுடனுறை வாழ்க்கைக்கு நோற்று டம் படுவர்" மணி ௫ : சஉ - எ.

* ௫. காஞ்சித்திணைத்துறைகளுள், 'நல்லோள் கணவனொடு நளியழல் புகீஇச், சொல்லிடை யிட்டமாலையில்' என்பதற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. ரு. கக - இளம் ; ஷெ ஷெ ஷெ உச - ந.

'ff:ஈ(மூ.ம்.)—1 'வாள்போர்தட்ட' 2'அடகிடைமிடைந்த', 'அடைகிடந்த'

# புறநானூறு மூலமும் உரையும்.

கூசுகூ

ஆனந்தப்பையுளாவது,—
* "விழுமவ் கூர வேய்த்தோ ளரிவை
கொழுநன் வியக் குழைந்தயக் கின்று."

இ - ள்.—பலசான்றவிரே, பலசான்றவிரே, நின் தலைவனொடு நப்ப நீபோவென்றுகூறாது அதனைத் தவிர்கவென்றுசொல்லிவிலக்கும் பொல்லாத விசாரத்தையுடைய பலசான்றவிரே, அணிலினது வரிபோலும்வரியையுடைய வளைந்த வெள்ளரிக்காயை அரிவாளால் அரிந்திடப்பட்ட விதைபோன்றநல்ல வெள்ளிய நறிய நெய்தீண்டாமல இலை இடையேபபின்ற கையாற்பிழிந்து கொள்ளப்பட்ட நீர்ச்சோற்றுத்திரளுடனே வெள்ளியஎள்ளரைத்த விழுதுடனே புளிகூட்டி அடப்பட்ட வேளையிலைவெந்த வேவையுமாகிய இவை உண

வாகக்கொண்டு பருக்கைகளாற்படுக்கப்பட்ட படுக்கையின்கண் பாயுமின்றிக் கிடக்கும் கைம்மைநோன்பால் வருந்தும் பெண்டிருள்ளேமலலேம் யாம்; புறங்காட்டின்கண் உண்டாக்கப்பட்ட கரிய முருட்டால் அடுக்கப்பட்ட பிணப்படுக்கை உங்களுக்கு அரிதாவதாகுக; எமக்கு எம்முடைய பெரிய தோளையுடையனாகிய கொழுநன் இறந்துபட்டானாக, முகையில்லையாக வளவிய இதழ்மலர்ந்த தாமரையையுடையநீர்செறிந்த பெரியபொய்கையும் தீயும் ஒருதன்மைத்து.—எ - று.

தில் விழைவின் கண்வந்தது.

எமக்குப் பொய்கையும் தீயும் ஒருதன்மைத்து ; நமக்கு வெனக்கூட்டுக.

அரிதாகுக

(உசசு)

---

* புறப்பொருள்வெண்பாமாலை, சிறப்பிற்பொதுவியற்படலம், கரு.

---

(உசஎ.) யானை தந்த முளிமர விறகிற்
கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து
மடமான் பெருநிரை வைகுதுயி லெடுப்பி
மந்தி சீக்கு மணங்குடை முன்றில்
னீர்வார் கூந்த லிரும்புறந் தாழப்
[1]பேரஞர்க் கண்ணள் பெருங்காடு நோக்கித்
தெருமரு மம்ம தானேதன் கொழுநன்
முழவுகண் டுயிலாக் கடியுடை வியனகர்ச்
சிறுநனி தமிய ளாயினு
மின்னுயிர் [2]நடுங்குந்த னிளமைபுறங் கொடுத்தே.

---

க - உ. புறநா. உ௫௪ : ௫ - ௬.

௩. வைகுதல் - தயிலல் ; சிலப்: ௧௦: ௧.
௪. "மந்தி சிக்கு மாதுஞ்சு முன்றில்" பெரும்பாண். ௪௬௭,
(பி - ம்.)—1 'பேரமர்க்', 2 'நீக்கும்'
47



திணையும் துறையும் அவை.
அவள் தீப்பாய்வாளைக்கண்டு மதுரைப்பேராலவாயார் சொல்லியது.

இ - ள்.—யானைகொண்டுவரப்பட்ட உலர்ந்தமரத்துவிறகால் வேடர் மூட்டப்பட்ட கடைந்துகொள்ளப்பட்ட எரியாகியவிளக்கினது ஒளியை யுடைத்தாகிய மடவியமானுகிய பெரியநிரை வைகிய உறக்கத்தையெழுப்பி மந்தி தூக்கும் அணங்குடைத்தேவியையுடையமுற்றத்து நீர்வடிந்த மயிர் மிக்கபுறத்தில் வீழப் பெரிய துன்பமேவிய கண்ணையுடையளாய்ப் புறங்காட் டைப்பார்த்துத் தான்சுழலும், தன் தலைவன் முழவினதுகண் மார்ச்சனை புலராதகாவலையுடைய அகலியகோயிலுள் மிகச் சிறிதுபொழுது தனித் திருப்பினும் இனியவுயிர்தளரும் தன் இளமைபுறங்கொடுத்து.—எ - று.

..................யானவர்க்கு அஞ்சிநடுக்குதல்..........................
இளமைபுறங்கொடுத்துப் பெருங்காடுநோக்கித் தான் தெருமருமெனக் கூட்டுக.

அம்ம அசை.
(௨௪௭)

---

(௨௪௮.) அளிய தாமே சிறுவெள் ளாம்பல்
இளைய மாகத் தழையா யினவே
இனியே, பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப்

பொழுதுமறைத்

தின்னு வைக லுண்ணு
ரு மல்லிப் படூஉம் புல்லா யினவே.*

திணை - அது; துறை - தாபதநிலை.

.........[1] ஒக்கூர்மாசாத்தனூர் பாடியது,

தாபதநிலையாவது.—

† "குருந்தலர் கண்ணிக் கொழுநன் மாய்ந்தெனக
கருந்தடங் கண்ணி ...கம்மைகூ றின்று."

இ - ள்.—இரங்கத்தக்கன, சிறிய வெளிய ஆம்பல்; அவைதாம், யாம் இளையேமாயிருக்க முற்காலத்துத் தழையாயுதவின; இக்காலத்துப் பெரியசெல்வத்தையுடைய தலைவன் இறந்தானாக உண்ணுங்காலமாறி இன்னாத வைகும்பொழுதின்கண் உண்ணும் தம் அல்லியிடத்துண்டாம் புல்லரிசி யாயுதவின.—எ - று.

---

க - உ. "வயன்மல ராம்பற் கயிலமை நுடங்கு தழை" ஐங்குறு. எஉ.

ச - ரு. புறநா. உருo : ச - ரு.

க - ரு. புறநா. உசo: கஉ - ச.

* மு. காஞ்சித்திணைத்துறைகளுள், 'காதலனிழந்த தாபதநிலை' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. கக - இளம்; ஷை ஷை ஷை உச - ந.

† புறப்பொருள்வெண்பாமாலை, சிறப்பிற்பொதுவியற்படலம், ச.

(பி - ம்.)—[1] 'எக்கூர்'

தாமின்புறுங்காலத்தும் துன்புறுங்காலத்தும் துணையாயுதவினவாதலான், அளியவாயினவென ஆம்பலைநோக்கிக்கூறியவாறாயிற்று.

செல்லாவுணவெல்லாம் புல்லென்றல் மரபு.

(உசஅ)

---

(உசகூ.) கதிர்மூக் காரல் கீழ்ச்சேற் றொளிப்பக்
கணைக்கோட்டு வாளை மீநீர்ப் பிறழ
வெரிப்பூம் பழன நெரித்துடன் வலைஞ
ரரிக்குரற் றடாரியின் யாமை மிளிரப்
பனைநுகும் பன்ன சினைமுதிர் வராலோ
டுறழ்வே லன்ன வொண்கயன் முகக்கு
மகனாட் டண்ணல் புகாவே நெருநைப்
பகலிடங் கண்ணிப் பலரொடுங் கூடி
யொருவழிப் பட்டன்று மன்னே யின்றே
யடங்கிய கற்பி னாய்நுதன் மடந்தை
யுயர்நிலை யுலக மவன்புக வரிநீ
றுடு சுளகிற் சீறிட நீக்கி
யழுத லானாக் கண்ணண்
மெழுகு மாப்பிசின் கலுழ்நீ ரானே.*

சீவக. உ984.

திணையும் துறையும் அவை.

.................. 1 தும்பிசோகினனூர் பாடியது.

உ. "கணைகோட்டு வாளைக் கமஞ்சூல் மடநாகு" குறுந். கசஎ.

ச. புறநா. எ0 : உ - ங ; ஙசுக : உக.

ரு. தொல். மரபு. சூ. அக - பேர். மேற்; "நாகும்பெண்பது பனை வாழை மரல் புல என்பவற்றிற்குரித்து" நன் - மயிலை. சூ. ஙஅஎ.

அ. புறநா. உஅஎ : ச.

கக. புறநா. உஉக : உஉ.

கஉ. புறநா. உஙச : உ.

கச. தொல். எச்ச. சூ. சஎ - ந; இ - வி. சூ. கசுஅ - உரை. மேற்; "மெழுகு மாப்பிகன் கலுழ்நீ ராணே : என்புழிக் கணவனையிழந்தாள் அவற்குப் பலிக்கொடை கொடுத்தற்கு மெழுகுகின்றாளைக் கண்ணீரே நீராக மெழுகுகின்றாளென்றமையின் இது தன்கட்டோன்றிய இழவு பற்றிப்பிறந்த அவலச்சுவையாயிற்று" தொல். மெய்ப்பாடு. சூ. ரு - பேர் ; இ - வி. சூ. ருஎஅ - உரை.

* பு. காஞ்சித்திணைத்துறைகளுள், 'தாமே யேங்கிய தாங்கரும் பையுள்' என்பதற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. உச - ந.

(பி - ம்.)—1 'தும்பிசேர் கீரனூர்'

இ - ள்.—கதிர்நுனைபோலும் மூக்கையுடைய ஆரன்மீன் சேற்றின் கீழேசெருகத் திரண்ட (மிசையாகிய) கோட்டையுடையவாளைமீன் நீர்மேலே பிறழ எரிபோலுநிறத்த பூவையுடைய பொய்கைகளைநெருங்கி உடனே வலை ஞாலவர், ஒலி நரம்பால ஓசையுடைய கிணையினது முகமேபோலும் யாமைபிறழப் பனையினது நுகும்பையொத்த சினைமுற்றிய வராலோடு மாறுபடும் வேல்போன்ற ஒள்ளியகயலை முகந்துகொள்ளும் முன்னகன்ற காட்டையுடையகுருசிலது உணவு நெருங்கிலாளாற் பகுத்த இடத்தைக்கருதிப் பலருடனே இயைந்து ஒருவழிப்பட்டது ; அது கழிந்தது ; இன்று, தன் கண்ணேயடங்கியகற்பினையும் சிறியநுதலினையுமுடைய மடந்தை உயர்ந்த நிலைமையையுடைய விண்ணுலகத்தே அவன்சென்றுபுக அவனுக்கு உணவு கொடுத்தல்வேண்டிச் சுளகுபோலச் சிறியவிடத்தைத் துடைத்து அழுதலமையாதகண்ணையுடையளாய்த் தன்கண்கலுழ்கின்றநீராலே சாணகத்தைக் கொண்டு மெழுகுமளவிலேபட்டது.—எ - று.

மெழுகுமளவாயிற்றென்றது பொருளளவுரைக்க.

மன் கழிவின்கண்வந்தது.

இது கண்டார் நிலையாமைகூறி இரங்கியவாறு.

(உசகூ)

---

(உருo.) குய்குரன் மலிந்த கொழுந்துவை யடிசி
லிரவலர்த் தடுத்த வாயிற் புரவலர்
கண்ணீர்த் தடுத்த தண்ணறும் பந்தர்க்
கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி
யல்லி யுணவின் மனைவியோ டினியே
புல்லென் றனையால் வளங்கெழு திருநகர்
வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்

முனித்தலைப் புதல்வர் தந்தை
தனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னே.

திணையும் துறையும் அவை.

.........தாயங்கண்ணியார் பாடியது.

இ - ள்.—தாளிப்போசைமிக்க கொழுவிய துவையோடுகூடிய அடிசில் இரவலரைத் தன்கண்ணே தகைத்தவாயிலினையும் தன்னுற்புரக்கப்படுவோர் கண்ணீரை மாற்றிய குளிர்ந்த நறிய பந்தரினையுமுடையமனையிடத்து மயிரைக்குறைத்துக் குறியவளையைக்களைந்த அல்லியரிசியாகிய உணவையுடைய மனையாளுடனே இப்பொழுது பொலிவழிந்தாய், செல்வம்பொருந்திய அழகாகியநகரே, வான்சோற்றைக்கொண்டு இனியபாலைவேண்டும் வெறுப்பைத்

---

௪. புறநா. ௨௫௩, ௨௫௪, ௨௬௧, ௨௮௦.

௫. புறநா. ௨௪௮ : ௪-௫; தொல். குற்றியலுகரப். ௫. எ௬-ந. மேற்.

௬. புறநா. ௨௬௧ : ௧௧.



தம்மிடத்தேயுடைய புதல்வர் தந்தை தனியிடத்தையுடைய புறங்காட்டை அடைந்தபின்.—எ - று.

கொய்து நீக்கியென்னும்வினையெச்சங்களை உணவினையுடையவென்னும் குறிப்புவினையோடுமுடிக்க.

நகரே, நீ புதல்வர்தந்தை காடுமுன்னியபின் புலம்பெனத்தலையெனக் கூட்டுக.

முனித்தலை - குடுமித்தலையெனினுமமையும்.

(௨௫௦)

(உருக.) ஓவத் தன்ன விடனுடை வரைப்பிற்
பாவை யன்ன குறுந்தொடி மகளி
ரிழைநிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிகுங்
கழைக்க ணெடுவரை யருவி யாடிக்
கான யானை தந்த விறகிற்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே.

திணை - வாகை ; துறை - தாபதவாகை.
.........மாற்பித்தியார் பாடியது.

இ-ள்.-ஓவியம்போலும் அழகினையுடைத்தாகிய இடமுடைய இலலின் கண் †கொலலிப்பாவைபோன்ற வடிவினையுடைய சிறியவளையணிந்தமகளிரு டைய அணிகலங்களை அவைநிற்குநிலையினின்றும்கழலும்வகை ஆதரஞ்செய் தவனைக்கண்டேம் ; மூங்கிலிடத்தையுடைய நெடியமலையிடத்து அருவிநீரை யாடிக் காட்டியானைகொண்டுவரப்பட்டவிற... .. மமெ ம்மையையுடைய

---

க. ழ. நற். க௮உ : உ; "ஓவுக்கண் டன்ன வில்" (௸, உ௬௮), "ஓவத் தன்ன வினைபுனை நல்லில்", "ஓவத் தன்ன வுருகெழு நெடுநகர்" (பதிற். ௬௧: ௩; ௬௮: உ௮); "ஓவத் தன்ன வினைபுனை நல்லில்" (அகநா. ௬௮); "ஓவத் தன்ன விடனுடை வரைப்பின் என்புழி அகநகரினது செயற் கைநலம் தோன்றக் கூறினமையின் அதற்கு நிலைக்களன் கலஞ்யிற்று" தொல். உவம. ரு. ச - இளம்; பேர் ; இ - வி. ரு. ௬௩௬; மாறன். ௬உ - உரை.

ரு - க. புறநா. உசஎ : க - உ, தவஞ்செய்வோர்க்கு யானைகள் விறகுதருமென்டது, "செந்தீப் பேணிய முனிவர் வெணகோடுக், களிறு தரு விறகின் வேட்கு, மொளிதிகழ் கருவிய மலைகிழ வோனே" (பெரும்பாண். சகஅ - ருOO) என்பதனுலுமறிக.

* மு. வாகைத்திணைத் துறைகளு ள், 'காலிருவழக்கிறருபத பக்கம்' என் பதற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. கள் - இளம், டிடி டைடி டைடி உO - ந.

† கொல்லிப்பாவை : நற். கஅரு, ககூஉ, உOக; குறுந். அகூ, கOO ; அகநா. கூஉ, உOகூ.

# கஎச புறநானூறு மூலமும் உரையும்.

செந்தியை வேட்டு முதகின்கண்ணே தாழ்ந்த புரிந்தசடையைப் புலர்த்து வோன்.—எ - று.

ஆடி வேட்டுப்புலர்த்துவோனெனை இயையும்.

முன்பு இளமைகெகிழ்த்தமன்னற்கண்டேம், அவன் இப்பொழுது புறந் தாழ் புரிசடை புலர்த்தாகின்றேனென அவனைக்கண்டு வியந்துகூறியவாறு.

பாவையென்றது, பிறிது எவ்வுணர்வுமின்றிக் காமவேட்கையாகிய ஒரு குறிப்பினை.

கானயானைதந்த விறகென்றது, இவன் தவமிகுதியான் அதுவும் ஏவல் செய்தல்.

(உருக)

(உருஉ.) கறங்குவெள் ளருவி யேற்றலி னிறம்பெயர்ந்து
தில்லை யன்ன புல்லென் சடையோ
டள்ளிலைத் தாளி கொய்யு மோனே
யில்வழங்கு மடமயில் பிணிக்குஞ்
ரு சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே.*

---

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—ஒலிக்கும்வெள்ளிய அருவிநீரை ஏற்றலாற் பழையநிறம் மாறித் தில்லைதளிர்போன்ற புற்கென்றசடையோடு கூடிநின்று செறிந்த இலையையுடைய தாளியைப் பறிப்போன், மனையின்கண் இயங்கும் மடப்பத்தை யுடையமயிலை அகப்படுத்திக்கொள்ளும் சொல்லாகிய வலையையுடைய வேட்டைக்காரனாயினன்முன்பு.—எ - று.

இதுவும் அவன் நிலைமையைகண்டு வியந்துகூறியது.
(உருஉ)

---

ச - ரு. பிறன் கட்டோன்றிய அ. சவுபற்றிய அவலச்சுவைக்கு மேற்கோள்; தொல். மெய்ப்பாடு. ,, ரு - பேர்; இ - வி. சூ. ருஎஅ - உரை.

* மு. வாகைத்திணைத் துறைகளுள், 'காலிரு வழக்கிற் றாபத' என்பதற்குமேற்கோள்; தொல். புறத்திணை. சூ. கக - இளம். பக்கம்

---

(உருஙு.) என்றிறத் தவலங் கொள்ள லினியே
வல்வார் கண்ணி யிளையர் திளைப்ப

[1] நகாஅலென வந்த மாறே யெழாநெற்
பைங்கழை பொதிகளைந் தன்ன விளர்ப்பின்

க. சீவக. கசருஉ - ந. மேற்கோள்.

(பி - ம்.)—1 'நகாரென'

# புறநானூறு மூலமும் உரையும்.

கூஎரு

ரு வளையில் வறுங்கை யோச்சிக்
கிளையு ளொய்வலோ கூறுநின் னுரையே.

திணை - பொதுவியல் ; துறை - முதுபாலை.

.........[1] துளம்பாதாயனுர் பாடியது.

முதுபாலைபாவது.—

* "காம்புயர் கடத்திடைக் கணவனை யிழந்த
பூங்கொடி யரிவை புலம்புரைத் தன்று."

இ - ள்.—நின்னைப்பிரிந்து ஆற்றேனாகின்றேன்; என்னுடைய
திறத்து

வருத்தங்கொள்ளாதொழிவாயாக, இப்பொழுது ; சுற்றப்பட்ட கண்ணியை
யுடைய நின்னோடுகூடி விளையாடப்போகாத இளையோர் விளையாடாநிற்ப
அவரோடு கருதின்றிலேனென்று கருதவந்த நின் இறந்தபாட்டை கெல்

எழாத் பசியமுங்கில பட்டையொழித்தாற்போன்ற வெளுத்திருந்த வளை யில்லாத வறியகையைத் தலைமேலே ஏற்றிக்கொண்டு நின் சுற்றத்திடத்தே செலுத்தச் செல்லுவேனோ இன்னும், இறந்துபடுவனல்லது ?
நின்வார்த்தை யை எனக்குச்சொல்லுவாயாக.—எ - று.

அவலமென்றது, பிரிந்தவழி ஆற்றேனென்றுவருந்தும் அவலத்தை.

கூறுநின்னுரையென அவன்சொற்கேட்டல் விருப்பினாற் கூறுவார் போன்று மயக்கிக்கூறியவாறு.

(உருரு)

---

ரு. புறநா. உருச : ௪.

சு. ஒய்தல் : பதிற். எரு, அஎ.

* புறப்பொருள்வெண்பாமாலை, சிறப்பிற்பொதுவியற்படலம், க.

(பி - ம்.)—1 'குளம்பாதயானுர்'

---

(உருச.) இளையரு முதியரும் வேறுபுலம் படர
எடுப்ப வெழாஅய் மார்பமண் புல்ல
விடைச்சுரந் திறுத்த மள்ள விளர்த்த
வளையில் வறுங்கை யோச்சிக் கிளையு
ரு ளின்ன னாயின னிளையோ னென்று
நின்னுரை [1] செல்லு மாயின் மற்று
[2] முன்னூர்ப் பழுனிய கோளி யாலத்துப்
புள்ளார் யாணர்த் தற்றே யென்மகன்

௪. புறநா. உருங : ரு - சு.

௮. 'கோளியாலம்': புறநா. ருஅ : ௨- ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

எ-கூ. "பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ, நயனுடை யான்கட் படின்" குறள். உகசு.

(பி - ம்.)—1 'சொல்லுமாயின்' 2 'முள்ளூர்'



வளனுஞ் செம்மலு மெமக்கென நாளு
மாறாது புகழு மன்னை
யாங்கா குவள்கொ லளிய டாளே.*

திணையும் துறையும் அவை.

.........கயமனார் பாடியது.

இ - ள்.—இளையோரும் முதியோரும் வேற்றுநிலத்தே விலங்கிப்போக யான் எடுப்பவும் நீ எழுந்திராயாய் நினதுமார்பம் நிலத்தைப்பொருந்தச் சுரத்திடை மேம்படவீழ்ந்த இளையோய், வெறுத்தவளையில்லாத வறியகையைத் தலைமேலே வைத்துச் சுற்றத்தின்கண் இத்தன்மையனாயினான் இளையனென்று யான்சொல்ல நின் இறந்துபாடுகூடிய வார்த்தைசெல்லுமாயின், ஊர் முன்னர்ப்பழுத்த கோளியாகிய ஆலமரத்தின்கட் புள்ளுக்கள்மிகும் புதுவருவாயையுடைய அத்தன்மைத்து, எம்முடையமகனது செல்வமும் தலைமையும் எமக்கென்று நாடோறும் அமையாது புகழும் நின்னுடையமாதா எவ்வாறுவார்கொல்! அவள் இரங்கத்தக்கவள் தான்.—எ - று.

வளனும் செம்மலும் புள்ளார்யாணர்த்தற்றென்றது, †

புள்ளெல்லாஞ்

சென்றணுக. ஆலமரம் பயன்பட்டு நின்றாற்போல இவனும் தன்சுற்றத்தாரும் பிறரும் நாட்டாரும் நுகரும்படி நின்றமை தோன்றநின்றது.

'நின்னுரைசெல்லுமாயின் யாய்காகுவள்கொல்' என்றகருத்து : யான் இறந்துபட்டவாறு சொல்லின் அன்றே அவள் வருத்தமுறுவள்; அது யான் மாட்டேனென்பதாம்.

முன்னார் முன்மொழிநிலையல. மற்று அசைநிலை. (உருச)

* மு. காஞ்சித்திணைத்துறைகளுள், 'நனிமிகுசுரத்திடைக் கணவனை யிழந்து, தனிமகள் புலம்பிய முதுபாலை' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. உச - ந.

† நாலடியார், உ0.

---

(உருரு.) ஐயோ வெனின்யான் புலியஞ் சுவலே
1 யணைத்தனன் கொளினே யகன்மார் பெடுக்க வல்லே
னென்போற் பெருவிதிர்ப் புறுக நின்னை
யின்னா துற்ற வறனில் கூற்றே
ரு நிரைவளை முன்கை பற்றி

---

க. புறநா. உகக: ரு.

க - ச. "என்போற் பெருவிதிர்ப்புறுக நின்னை,யின்னா துற்ற வறனில் கூற்றே: என்புழிப் போலவென்பது குறிப்புவினையெச்சமாய் நின்றது" தொல். எச்ச. சூ. கஅ - சே.

(பி - ம்.)—1 'எடுத்தனன்கொளின்' 'உய்த்தனென் கோனே மார்பெடுக்கல்லேன்'

௨௫௫

வரைநிழற் 1 சேர்க நடத்திசிற் சிறிதே.*

திணையும் துறையும் அவை.

.................வன்பரணர் பாடியது.

இ - ள்.—ஐயோவென்று ஆற்றவேனெனின் அவ்வுரைவழியேவந்துநின் உடம்பாயினும் யான்காணப்பெறுமல ஏதஞ்செய்யுமோவென்று புலியை யஞ்சுவேன்; இவ்விடத்தினின்றும் எடுத்துக்கொண்டு போவேனென்று நினைப்பின் நினது அகலியமார்பை எடுக்கமாட்டேன்; என்னை யொப்பப் பெரிய நடுக்கத்தை உறுவதாக,உன்னை இறாதுபடும்பரிசு வந்தாக்கிய அறமில்லாத கூற்றே; யாம் மலையினது நிழற்கண்ணே அடைவேமாக; எனது நிரைத்த வளையையுடைய முன்கையைப் பிடித்து மெல்லநடப்பாயாக.— எ - று.

நடவாயென்னும் முன்னிலைவினைச்சொல் சின்னென்னும் சொல்லான் அசைக்கப்பட்டு நின்றது.

இடைச்

(௨௫௫)

---

* ம். காஞ்சித்திணைத்துறைகளுள், ஈனிமிகு சுரத்திடைக் கணவனை யிழந்து, தனிமகள் புலம்பிய முதுபாலைக்கும் (தொல். புறத்திணை. சூ. ௧௯ - இளம்), இழவுபற்றிவந்த அழுகைக்கும் (ஷ மெய்ப்பாடு. சூ. ௫ - இளம்), தன்கட்டோன்றிய இழவுபற்றிப்பிறந்த அவலச்சுவைக்கும் (ஷ ஷ ஷ ஷ பேர்) மேற்கோள்; "ஐயோ......சிறிதே : இதனுள் அழுகையாகிய மெய்ப்பாடு புலப்பட வந்தவாறு காண்க" ஷ செய். சூ. ௧௬௪ - இளம்.

(பி - ம்.)—1 'சேரகடத்தி'

---

(உருசு.) கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே
அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய
சிறுவெண் பல்லி போலத் [1] தன்னொடு
சுரம்பல வந்த வெமக்கு மருளி
௫ வியன்மல ரகன்பொழி லீமத் தாழி
யகலி தாக வனைமோ
நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே.*
திணையும் துறையும் அவை.

........ ........ ........ ........

இ - ள்.—கலம்வனையும் வேட்கோவே! கலம்வனையும் வேட்கோவே! சகடஞ்செலுத்தும் உருளின்கண் ஆரத்தைப்பொருந்தி வந்த சிறிய வெளிய பல்லிபோல் நெருங்கொளாற் பலசுரமும் தன்னொடு கழிந்துவந்த எமக்கும் அருள்பண்ணி (யாமும் அவனொடு கூடியிருக்கும்படி) பெரிய பரப்பினை

---

௧. ௱. புறநா. உஉஅ : ௧.
௩ - ௪. "பொருந்தலாற் பல்லிபோன்றும்" சீவக. ௧அ௯௫.
௫. புறநா. உஉஅ : ௬உ-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.
(பி - ம்.)—1 'தம்மொடு'





யுடைய அகலியபூமியிடத்துக்காட்டின்கண் முதுமக்கட்டாழியை இடமுடைத்தாக வனைவாயாக, பெரியஇடத்தினையுடைய பழையவூரின்கட் கலம்வனை

யும்வேட்கோவே!—எ - று.

'எமக்கும்' என்றது, பன்மையும் தலைமையுங்கருதாது மயக்கக்கூறி நின்றது.

கோவே! கோவே! மூதூர்க்கலஞ்செய்கோவே! எமக்கும் அருளி அகலி தாக வனைகவெனக்கூட்டுக.

அடுக்கு விரைவின்கண் வந்தது.

(உருசு)

---

(உருஎ.) செருப்பிடைச் [1] சிறுபர லன்னன் கணைக்கா
லவ்வயிற் றகன்ற மார்பிற் பைங்கட்
[2] குச்சி னிரைத்த குரூஉமயிர் மோவாய்ச்
செவியிறந்து தாழ்தருங் கவுளன் வில்லோ
டியார்கொலோ வளியன் றானே தேறி
னூர்பெரி திகந்தன்று மிலனே யரணெனக்
காடுகைக் கொண்டன்று மிலனே காலைப்
புல்லா ரினநிரை செல்புற நோக்கிக்
கையிற் சுட்டிப் பையென வெண்ணிச்
சிலையின் மாற்றி யோனே யவைதா
மிகப்பல வாயினு மென்னு மெனைத்தும்
வெண்கோ டோன்றாக் குழிசியொடு
நாளுறை மத்தொலி கேளா தோனே.*

திணை - வெட்சி ; துறை - உண்டாட்டு.

.......... .......... ..........

உண்டாட்டாவது.—

† "தொட்டிமிழுங் கழன்மறவர்
மட்டுண்டு மகிழ்துங்கின்று."

இ - ள்.—.......... .......... திரண்டகாலையும் அழகியவயிற்றினையும் பரந்த மார்பினையும் பசியகண்ணினையும் குச்சுப்புல்நிரைத்தாற்போன்ற நிறம் பொருந்திய மயிரினையுடையதாடியினையும் செவியிறந்து முன்னே தாழ்ந்த கதுப்பினையுமுடையனாய் வில்லுடனே யார்தான் இவ்வளிக்கத்தக்கான்றான்?

* மு. வெட்சித்திணைத்துறைகளுள், 'கோயின்முய்த்தல்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. ரு. ந - இளம்.

† புறப்பொருள்வெண்பாமாலை, வெட்சிப்படலம், கரு.

(பி - ம்.)— 1 'செறுபரல்' 2 'குச்சினிரை.....மேவாய்'



ஆராயின் வரைப் பெரிதும் 1 நீங்கினதுமிலன்; தனக்கு அரணெனக்கருதிக் காட்டைக் கைக்கொண்டதுமிலன்; இற்றைநாட்காலையே பொருந்தாதாரது இனமாகியநிரைபோகின்ற இடத்தைப்பார்த்துத் தன்கையாற்குறித்து மெல்ல எண்ணிக் கரந்தையார்செய்யும்பூசலைமாற்றி வில்லாலேகொடுபோந்தனன்; அந்நிரைதாம் மிகப்பலவேயாயினும் என்னபயன் படும் எத்தன்மைத்தும், பால்முதலியன பெய்யப்படாமையிற் சிறிதும் வெள்ளிய முகந்தோன்றாத பானையைக்கண்டவுடனே நாட்காலத்து உறைதெறிப்பக்கடையும் மத்தி னொலியைக் கேளாதபடி 2 பிறருக்கு நேராகக்கொடுத்தல் வல்லனாயினன், அவனுக்கு?—எ - று.

* பகைவர் மேல்நடக்கவொட்டாது

எதிரினின்றுவிலக்குதலின், 'செருப் பிடைச் சிறுபர லன்னன்' எனப்பட்டான்.

'அன்ன' என்று பாடமோதி, செருப்பிடைச்சிறுபரலோசைபோல கெடிய ஓசையையுடைய காலென்றுரைப்பாருமுளர்.

யார்கொலென்றது அறியான்வினாதலன்றி வியப்பின்கண்வந்தது.

'ஊர்பெரிதிகந்தன்றுமிலனே' என்பது நிரைகோட்கடுமை.

சிறுபரலன்னன் கவுளனாகிய அரியனானவன்றான் யார்கொல்லோ ?

தே

ரின் வில்லோடு ஊர்பெரிது இகந்தன்றுமிலனாய்க் காடு கைக்கொண்டதுமில

னாய் நோக்கி எண்ணி மாற்றினான் ; மாற்றிக் குழிசிகாண்டலோடு மத் தொலி கேளாதோனாயினான் அவனுக்கு அவைதாம் மிகப்பலவாயினும் என்று மொனக்கூட்டுக.

கேளாதோற்கென உருபுவிரித்துரைப்பினுமமையும். (உருள)

* "தருக்கி யொழுகித் தகவலல செய்தும், பெருக்க மதித்தபிற் பே ணாத செய்தும், கரப்புடை யுள்ளங் கனற்று பவரே, செருப்பிடைப் பட்ட பரல்" பழ. உஉச.

(பி - ம்.)—1 'நீங்கின்றுமலன்' 2 'பிறர்க்குநோக்கிக்கொடுத்தல்'

(உருஅ.) முட்காற் காரை [1] முதுபழ னேய்ப்பத்
தெறிப்ப விளைந்த [2] தீங்கந் தார
நிறுத்த வாயர் தலைச்சென் றுண்டு
[3] பச்சூன் றின்று பைந்நிணம் பெருத்த
ரு வெச்சி லீங்கை விற்புறந் திமிரிப்

புலம்புக் கனனே புல்லணற் காளே

ங. புறநா. கஎஎ : கசு.

ரு. ஏழாம்வேற்றுமை வினையொடு முடியும்வழி, திரிந்ததற்கும் (தொல். தொகை. சூ. கரு - இளம், ந), வேற்றுமைக்கண் மகரவொற்றுப் பகரம்வரதழிக்கெடாது நின்றதற்கும் (ஷை புள்ளிமயங்கு. சூ. கஎ - இளம், ந; இ - வி. சூ. கஉக - உரை) மேற்கோள்.

(பி - ம்.)—1 'முதகனியேய்ப்ப' 2 'தீங்கட்டாரம்' 3 'பைச்சுன்'



யொருமுறை யுண்ணு [1] வளவைப் பெருநிரை
யூர்ப்புற நிறையத் தருகுவன் யார்க்குந்
தொடுத லோம்புமதி முதுகட் சாடி
[2] யாதரக் கழுமிய துகளன்
காய்தலு முண்டக் கள்வெய் யோனே.

திணையும் துறையும் அவை.

......... உலோச்சனார் பாடியது.

உண்டாட்டாவது,—

† "தொட்டிமிழுங் கழன்மறவர்
மட்டுண்டு மகிழ்தூங்கின்று."

இ - ள்.—முட்டாளையுடைய காஞ்சியினது முதிர்ந்தபழத்தையொப்ப முற்றவில்லாத இனிய கந்தாரமென்னும் பெயரையுடைய மதுவையுடைய வேற்றுப்புலத்துத் தான்கொணர்ந்தோனது நிறுத்தினநிரையைக் கள்விலைக்கு நேராகக்கொடுத்து உண்டு செவ்வித் தசையைத்தின்று செவ்வி நிணமிக்க எச்சிலாகிய ஈரமுடைய கையை வில்லினதுபுறத்தே திமிர்ந்து வேற்றுநாட்டின்கட் புக்கானே, புலியதாடியையுடைய காளை; இவ்விருந்தமறவர் ஒருகாலுண்பதன்முன்னே பெரிய ஆனிரையை இவ்ஊரிப்புறமெல்லாம் நிறைப்பக் கொடுதருகுவன்; யாவர்க்கும்வராது அதற்பொருட்டுத் தொடுத்தலைப் பாதுகாத்துவைப்பாயாக, முதிர்ந்தமதுவையுடையசாடியை; ஆவைக்கொண்டுவரக் கலந்தநிலையுடையனாய் அம்மதுவை விரும்புவோனை விடாய்த் தலுமுண்டாம்.—எ - று.

தலைச்சென்றென்பது, தலைச்செலவெனத்திரிக்கப்பட்டது. இதற்குக் கள்விலையாட்டியிடத்தேசெல்லவென்றுமாம்.

'திங்கட்டாரம்'என்றேதிக் கள்ளாகிய இனியபண்டமெனினுமமையும்

'காய்தலுமுண்டு' எனபதற்குக் காவெயயோனுகலின்,பின்னை வெகுளவுங்கூடுமென்பாருமுளர்.

இவன் நிரைகொள்ளச கூறியது.

செல்கின்றமை கண்டார் கள்விலையாட்டிக்கு.

(உருஅ

---

'௧௦. "கழுமிய துன்பமொடு கண்ணீ ருகுத்து" மணி. ௧௩ : ௧௮.

* மூ. "முட்கார்க்காரை......வெய்யோயே : இது வெட்சித்திணை பெயர்கொள்ளாது வந்தது' தொல். அகத்திணை. சூ. ருச - ந.

† புறப்பொருள்வெண்பாமாலை, வெட்சிப்படலம், கரு.

(பி - ம்.)—[1] அளவைபெருநிரை' [2] 'ஆர்தர'

---

# புறநானூறு மூலமும் உரையும

(கூ.) ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயரா
இலைபுதை பெருங்காட்டுத் தலைகரந் திருந்த
வல்வின் மறவ ரொடுக்கங் காணாய்
செல்லல் செல்லல் சிறக்கநின் னுள்ள
முருகுமெய்ப் பட்ட புலைத்தி போலத்
தாவுபு தெறிக்கு மான்மேற்
புடையிலங் கொள்வாட் புனைகழ லோயே.*

திணை-கரந்தை; துறை - செருமலைதல்; பிள்ளைப்பெயர்ச்சியுமாம்.

.........கோடைபாடியபெரும்பூதனார் பாடியது.

செருமலைதலாவது.—

† "வெட்சியாரைக் கண்ணுற்று வளைஇ
யுட்குவரத்தாக்கி யுளர்செருப்புரிந்தன்று"

இ-ள்.—தாம்கொள்ளப்பட்ட ஏற்றையுடைய பெரிய ஆனிரை முன்னே போக மீட்கவருவாரைக்குறித்து அந்நிரையோடு தாமபோகாது தழையால முடிய பெரியகாட்டினகண தலைகாந்திருந்த வலியவில்லையுடைய மறவ ரது ஒடுங்கியநிலையைக்கருதாய்; போகாதொழி போகாதொழி, நினது மேற்கோள சிறப்பதாக; தெய்வம மெய்யின்கணேறிய புலைமகளையொப்பத் தாவித துள்ளும ஆனிரைமேல; மருங்கிலேவிளங்காநின்ற ஒளிய வாளினை யும் வீரக்கழலினையுமுடையோய.—எ - று.

புனைகழலோய! காணாய்; ஆனமேறசெல்லல, செல்லல; நின்னுள்ளம் சிறப்பதாகவெனக கூட்டுக.

செல்லலெனறது அவரைககண்டு பொருது கொன்றமீட்ச் செல்ல லெனபதாம. (உருக)

---

* மு. வெட்சிததிணைததலைநகளுள், 'ஆபெயாததுததருதல்' எனப தறகு மேற்கோள; தொல். புறததிணை. சூ. ரு - இளம், ந.

† புறப்பொருளவெண்பாமாலை, கரந்தைப்படலம், ச.

---

(உகூO.) வளரத் தொடினும் வெளவுபு திரிந்து
விளரி யுறுதரூஉந் தீந்தொடை நினையாத்
தளரு நெஞ்சந் தலைஇ மனையோ
ளுளரும் கூந்த னோக்கிக் களர
ரு கள்ளி நீழற் கடவுள் வாழ்த்திப்
பசிபடு மருங்குலை கசிபுகை தொழாஅக்
காணலென் கொல்லென வினவினை வருஉம்
பாண கேண்மதி யாணரது நிலையே

புரவுத்தொடுத் துண்குவை யாயினு மிரவெழுந்
தெவ்வங் கொள்குவை யாயினு மிரண்டுங்
கையுள போலுங் கடிதண் மையவே

முன்னூர்ப் பூசலிற் றோன்றித் தன்னூர்
[1] நெடுநிரை தழீஇய மீளி யாளர்
விடுகணை நீத்தந் துடிபுணை யாக
வென்றி தந்து கொன்றுகோள் விடுத்து
வையகம் புலம்ப வளைஇய பாம்பின்
வையெயிற் றுய்ந்த மதியின் மறவர்
கையகத் துய்ந்த கன்றுடைப் பல்லா
னிரையொடு வந்த வுரைய னாகி
யுரிகளை யரவ மானத் தானே
யரிதுசெல் லுலகிற் சென்றன னுடம்பே
கானச் சிற்றியாற் றருங்கரைக் [2] காலுற்றுக்
கம்பமொடு துளங்கிய [3] விலக்கம் போல
வம்பொடு துளங்கி யாண்டொழிந் தன்றே
யுயரிசை வெறுப்பத் தோன்றி பெயரே
மடஞ்சான் மஞ்ஞை யணிமயிர் சூட்டி
யிடம்பிறர் கொள்ளாச் சிறுவழிப்
படஞ்செய் பந்தர்க் கன்மிசை யதுவே'

திணை - 4 அது ; துறை - கையறுநிலை ; 5 பாண்பாட்டுமாம்.

.......... ...... .. ......... † வடமோதங்கிழார் பாடியது.

---

கடு-க. "வாள்வாயு மின்றி வடிவெங் கணைவாயு மின்றிக், கோள்வாய் மதிய நெடியான் விடுத்தாங்கு மைந்தன், றேள்வாய் சிலைபி னொலியாற் றொறு மீட்டு மீள்வா, னுள்வாய் நிறைந்த நகைவெண் மதிசெல்வ னொத்தான்" சீவக. சுருச.

உ0 - உக. "படநாகத் தோலுரித்தாற் போற்றுறந்து", "பாம்புரி போன் முற்றத் துறந்து" சீவக. கருசஅ, ௩0௩க.

உ௩. புறநா. ச : வ ; கள்ள : க0 - கக.

உ௫ - அ. புறநா. உசக : கஉ - ச ; உசுச : க - ச.

* ழ. ஆபெயர்த்தந்தருதலென்னுந்துறைக்கு மேற்கோள் காட்டி, "இதனுள் தன்னூரென் றலிற் குறுநிலமன்னன் நிரைமீட்டுப்பட்ட நிலையைப் பாணர் கையற்றுக் கூறியது" என்பர்; தொல். புறத்திணை. ரு. ௫ - ந.

† அகநானூறு, ௩கஎ.

(பி - ம்.)—1 'நெடுவெறி' 2 'காலுறக்' 3 'விலக்கு' 4 'பாடாண்டிணை ; துறை செருவிடைவீழ்தல் ; கையறுநிலையுமாம்' 5 'பாடாண்பாட்டுமாம்'

# புறநானூறு மூலமும் உரையும்.

௩அக

இ - ள்.—ஓசைமிகவேண்டுமென்று 1 எதிபினும் ஓசையை

உள்வாங்கி
வறுபட்டு இரங்கற்பண்ணுகிய விளரியைச்சென்றுறுகின்ற இனிய நரப்புத் தாடையினது நீங்கைநிணர்ந்து நடுங்குநெஞ்சத்தைத்தலைப்பட்டுப் புறப் ட்டவளவின் நிமித்தவழியாக ஒருமனைவி விரித்துவருகின்ற மயிரைப்பார்த் த் களர்நிலத்துள்ள கள்ளிமரத்தின் நிழற்கணுண்டாகிய தெய்வத்தை

பத்திப் பசிதங்கிய வயிற்றையுடையையாய் இரங்கிக் கையாற்றொழுது நம் ருசிலைக் காணமாட்டேன் கொல்லோவென்று எதிர்வருவாரைப் பார்த்துக் கட்டுவருகின்ற பாண! கேட்பாயாக,நமது செல்வம்பட்டவிலைமை; இனி நீ வன் நமக்குவிட்ட விளைநிலங்களைக் கைப்பற்றி உண்பாயாயினும் அன்றி வனோடுகூடி இன்புற்றிருந்தவிடத்து அவனையின்றி உயிர்வாழ்தற்பொரு டு இரக்கக்கடவோமென்றெழுந்திருந்து வருத்தங்கொள்வாயாயினும் இர ரடும் நினது கையகத்துள்ளன; மிக்க அணுமையையுடைய ஊர்முன்னுகச்

சய்யப்பட்ட பூசலின்கட்டோன்றித் தன்னுடைய ஊரின்கண் மிக்க நிரை யக்கொண்ட மறத்தினையுடையவீரர் எய்யப்பட்ட அப்புவெள்ளத்தைத் ன் தடியே புணையாகவென்று பகைவரைக்கொன்று அவர்கொண்ட நிரை ய மீட்டு உலகம்தனிப்பச் சூழ்ந்துகொண்ட பாம்பினது கூரியபல்லினின் ம் பிழைத்துப்போந்த திங்களைப்போல மறவருடைய கையினின்றும் பிழை துப்போந்த கன்றையுடைய பலவாகிய ஆனிரையுடனேவந்த சொல்லை

டையனுய்த் தோலுரித்த பாம்புபோலத் தானொருவனுமேயாக அரிதாகச் சல்லப்படும் தேவருலகத்தின்கட்போயினன் ; அவனதுடம்பு, காட்டேட் ற்றியாற்றினது அரியகரையிடத்துக் காலுற நின்று நடுக்கத்தோடுசாய்ந்த லக்கத்தையொப்ப அம்பாற்சலித்து அவ்விடத்துவீழ்ந்தது ; உயர்ந்த ர்த்தி மிகவுந்தோன்றியமறவன் பெயர் மென்மையமைந்த மயிலினது அழ யமயிராகிய பீலியைச்சூட்டப் பிறர் இடங்கொள்ளப்படாதசிறியவிடத்துப் டைவையாற்செய்யப்பட்ட பந்தர்க்கீழ் நட்ட கன்மேலது.—எ - று.

சூட்டியென்பது, சூட்டவெனத் திரிக்கப்பட்டது;

குட்டப்பட்டெனினு மமையும்.

'மனையோள்கூந்தலேக்கி' என்பதற்குப் பாண என்மனைவியது சரியும் யிரைநோக்கியெனவும், 'புரவுத்தொடுத்து' என்பதற்கு அன்று உம்மைப் ரந்தபரிசைப்பாடியெனவுமுரைப்பாருமுளர். (உகo)

(பி - ம்.)—1 'அறையினும்'

---

உகூக.) அந்தோ வெந்தை யடையாப் பேரில்
வண்டுபடு நறவிற் றண்டா மண்டையொடு
வரையாப் பெருஞ்சோற்று [1] முரிவாய் முற்றம்
வெற்றியாற் றம்பியி னெற்றற் றாகக்
௫ கண்டனென் மன்ற சோர்கவென் கண்ணே

க. அந்தோ ஓ இரக்கக்குறிப்பு உணர்த்திநிற்றற்கு

மேற்கோள் ; தொல். இடை. சூ. ௩௪ - ந.

(பி - ம்.)—1 'முரவுவாய்முற்றம் பெற்றியாற்று'

## ௩௭௪ புறநானூறு மூலமும் உரையும்.

வையங் காவலர் வளங்கெழு திருநகர்
மையல் [1] யானை யயாவுயிர்த் தன்ன
[2] நெய்யுலை சொரிந்த மையூ னோசை

புறக்கண் மாக்கள் செறுக்க ணரைப்
பயந்தனை மன்னன் முன்னே யினியே
[3] பல்லா தழீஇய் கல்லா வல்சி
லுழைக்குரற் கூகை யழைப்ப [4] வாட்டி
நாகுமுலை யன்ன நறும்பூங் கரந்தை
விரகறி யாளர் மரபிற் சூட்ட
நிரையிவட் டந்து நடுக லாகிய
வென்வேல் விடலை யின்மையிற் புலம்பக்
கொய்ம்மழித் தலையொடு [5] கைம்மையுறக் கலங்கிய
கழிகல மகடூஉப் போலப்
புல்லென் றனையாற் பல்லணி யிழந்தே.

[6] திணையும் துறையும் அவை.

.................. ஆவூர்மூலங்கிழார் பாடியது.

இ - ள் —[7] அகதோ ! என்னில் , ாது அடைய்ாத பெரிய இலலே, வணகேள்படியும் மதவிஞல் ஒழிய தமண்டையுடனே யாவர்கரும் வரையா மல்வழங்கும் மிக்கசோற்றையுடைய முரிந்த குறட்டையுடை தாஇடமுற்றம் நீரற்றயாற்றிஞெடம் எத்தமைமெந்த அத்ா மைத்தாககல டேன், நிச்சய மாக ; என்கண்மணி சோர்ந்தவீழனைவாக ; உலகத்ய தக் ாக்கும் வேந்த ருடைய செலவமிக்க திருநகரின்கண மதததான் மயங்கிய ானே உயங்கு

தலான் கெட்டுயொட்புககொணடாரபோன்ற ஓசை காயகின் உலையின்கண் சொரியப்பட்ட ஆட்டிறைசசியினது ஓசைை டையை பொரி ஸைப் புதமாந் தருடைய ஒளிமழுங்கினகணகாகிடையவனா க்கிஞய் மு ; அதுகழிந் தது ; இப்பொழுது பல ஆனினைய கக்கொண்ட கவேணடாத

[3]. வளைகெழுதிருநகர்: புறநா. உ௫0: ௩

'அம்பியினர்ற்க' என்று பாடமோதுவாருமுளர்.

கண் அசை. மன் கழிவின்கண்வந்தது.

எந்தைபேரில்லே, செதுக்கணரப்பயந்தனே முன் ; இனி மகடூஉப் பாலப் பல அணியுமிழந்து புல்லென்றனையாய் அம்பியற்றுகக்கண்டேன்; ஈட என்கண் சோர்கவெனக்கூட்டுக.

. ஓசையென்றது, ஆகுபெயரான் ஓசையையுடையகறியை ; இஃது

ந திசைச்சொல்.

'செதுக்கணர' என்பதற்குச் செதுக்கின

கம்மிஞ்சவென்றுமாம்.

குடர்சிறையவென்றுமாம் ;

(உசுக)

---

(பி - ம்.)—1 'மட்டை'

---

உசுஉ.)றவுந் தொடுமின் விடையும் வீழ்மின்

பாசவ விட்ட [1] புன்காற் பந்தர்ப்

புனறரு மிளமண னிறையப் பெய்ம்மி

னொன்னார் முன்னிலை முருக்கிப் பின்னின்று

ரு கிரையொடு வருஉ மென்னைக்

குழையோர் தன்னினும் பெருஞ்சா யலரே.*

திணை - வெட்சி ; துறை - உண்டாட்டு ; தலைத்தோற்றமுமாம்.

......... ......... மதுரைப்போாலவாயார் பாடியது.

க. "மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடை" (முருகு. உ௩உ); மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி" (பெரும்பாண். க௪௩) ; "செங்கண் மழவிடை கெண்டிச் சிலைமறவர், வெங்கண் மகிழ்ந்து" (பெரும்பொருள் விளக்கம்) விடை - ஆட்டுக்கிடாய்.

உ. "உவலிடுபதுக்கை" (அகநா. க0௯) ; உவல், உவலையெனவும் வழங்கும் ; "உவலைக் கூரை யொழுகிய தெருவில்" முல்லை. உ௯ - ௩0.

௩. உழையோர், ஏழுவாய்.

* ௫. வெட்சித்திணைத்துறைகளுள் 'நுவல்வழித் தோற்றம்' என்பதற்கும் (தொல். புறத்திணை. ௬. ௩ - இளம்), 'உண்டாட்டு' என்பதற்கும் (ஷை ஷை ஷை ௩ - ௩) மேற்கோள்.

(பி - ம்.)—1 'பைங்கால்'

49



தலைத்தோற்றமாவது,—

*" உரவெய்யோ னினந்தழீஇ
வரவுணர்ந்து இனைமகிழ்ந்தன்று."

இ - ள்.—மதவையும் அலைத்துண்ணும்படி பிழிமின் ; ஆட்டுவிடையையும் படுமின் ; பசிய தழையாலேவேயப்பட்ட புல்லிய காலையுடைய பந்தரின்கண் நீர் 1 கொழித்துக் கொடுவரப்பட்ட இளையமணலை நிரம்பப் பரப்புமின் ; பகைவரது தூசிப்படையை முறித்துப் பெயர்த்துபோதுகிற தனது படைக்குப்பின்னேநின்று நிரையுடனேவருகின்ற என்னிறைவனுக்குப் பக்கமறவராய் நிரைகொண்டுவருவோர் அவன்றன்னினும் பெரிய இளைப்பை

புடை யா.—எ - று.

சாயல் - விடாயாலுண்டானமென்மை.

என்னைக்கு உமையோர் தன்னினும் பெருஞ்சாயலர் ; அவர்க்கு கற வும்தொடுமின் ; விடையும்வீழ்மின்; பெயம்மினைக்கூட்டுக. (உசுஉ)

* புறப்பொருள்வெண்பாமாலை, வெட்சிப்படலம், கஉ.
(பி - ம்.)—1 'கழித்து'

(உ சுரு.)*பெருங்களிற் றடியிற் றோன்று மொருக
ணிரும்பறை யிரவல சேறி யாயிற்
றொழாதனை கழித லோம்புமதி வழாது
வண்டுமேம் படூஉமிவ் வறநிலை யாறே
ரு பல்லாத் திரணிரை பெயர்தரப் பெயர்தந்து
கல்லா விளையர் நீங்க நீங்கான்
வில்லுமிழ் கடுங்கணை மூழ்கக்
கொல்புனற் சிறையின் விலங்கியோன் கல்லே. †

திணை - கரந்தை ; துறை - கையறுநிலை.

........ ........ ......... ........ .........

இ - ள்.—பெரியகளிற்றின் அடிபோலத்தோன்றும் ஒருகண்ணினை யுடைத்தாகிய பெரிய பறையினையுடைய இரவலனே ! நீபோகின்றாயாயின் தொழாயாய்ப் போதலைப்பரிகரிப்பாயாக ; தவறாதே.........யிடைவிடாது

க - உ. புறநா. ௩௪அ: கச - ரு; ௩௧உ: ச - ரு.

அ. புறநா. க௬௧: ச - ரு ஆம் அடிகளின் மேற்குறிப்பைப்பார்க்க,

* இதுமுதலிய மூன்றுபாட்டுக்களின் உரையும், உகசு-ஆம் பாட்டும் அதனுரையும் மிதிலைப்பட்டி அழகியசிற்றம்பலக்கவிராயரவர்கள் வீட்டுப் பிரதியில்மட்டுமிருந்தன.

† மு. கண்டோர் கையற்றுக்கூறியதற்கும், நடப்பட்ட கல்லினைத் தெய்வமாக்கி வாழ்த்தியதற்கும் மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ரு-ந.

# புறநானூறு மூலமும் உரையும்.

௩௮௭

வண்டுகள் மேம்பட்டுவாழும், இக்கொடியவழி ; பல ஆக்களாகிய திரண்ட நிரை மீண்டு தன்னொடு போதரப்போந்து இயல்பாகிய போர்த்தொழிலையுடையவீரர் இரிந்தோடத் தான்போகானாய் வில்லுமிழப்பட்ட விரைந்த அம்பு குளிப்பக் கரையைக்கொல்லும் புனலின்கண் அணைபோல எதிர்நின்று விலக்கியவனது கல்லே, — எ - று.

புனற்சிறையின் விலக்கியோன்கல்லைத் தொழாதீர் கழிதலை ஓம்பு ; தொழவே அவ்வழிசெல்லையாறுவண்டுமேம்படுமெனக்கூட்டுக.

தொழுதுபோகவே கொடுங்கானம் மழைபெய்தலாற்குளிருமென்பான், காரியமாகியவண்டு மேம்படுதலைக் கூறினான்.

வண்டென்பது, மறவருள்ளொருசாதியென்பாருமுளர்.

ஆறு வண்டுமேம்படூஉமெனா

இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்து மேலேறிநின்றது.

(உசுஅ)

---

(உசச.) பரலுடை மருங்கிற் பதுக்கை [1] சேர்த்தி
மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொ
டணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்
தினிநட் டனரே கல்லுங் கன்றொடு
கறவை தந்து பகைவ ரோட்டிய
நெடுந்தகை கழிந்தமை [2] யறியா
தின்றும் வருங்கொல் பாணரது கடும்பே.*

திணையும் துறையும் அவை.

.........[3] உறையூர் இளம்பொன்வாணிகனார் பாடியது.

இ - ள்.—பருக்கைகளையுடைய [4] இடத்துத் திட்டையைச் சேர்த்தி ஆண்டுள்ள மரலைக்கீறித்தொடுக்கப்பட்ட சிவந்த பூவையுடைய கண்ணியுடனே அழகிய மயிலினது பீலியைச்சூட்டிப் பெயரையெழுதி இப்

---

உ. "தளிரொடு மிடைந்த காமர் கண்ணி, திரங்குமர னாரிற் பொலியச் சூடி" மலைபடு. சநo - நக.

ந - ச. புறநா. உசo: உரு - அ; "கல்லமர்க் கடந்த காளையொடு மறவர், பெயரும் பீடு மெழுதி யதர் தொறும், பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்", "பெயரும் பீடு மெழுதி யதர் தொறும், பீலிசூட்டிய பிறங்குநிலை நடுகல்" அகநா. சுஎ, கநக.

* மு. "இனிப், பரலுடை மருங்கிற் பதுக்கையென்னும் புறப்பாட்டினுள், 'அணிமயில.....கல்லும்' எனக் கன்னட்டுதல் பெரும்படைக்குப் பின்னாகக் கூறிற்றெனின் நீர்ப்படுத்த பின்னர்க் கற்படுத்துப் பெயர்பொறித்து நாட்டுதல் காட்டோட்டோர் முறைமையெனபது 'சீர்த்தகுசிறப்பின்' என்பதனாற் கொள்க" தொல். புறத்திணை சூ. ரு - ந.

(பி - ம்.)—1 'சேர்த்து' 2 'அறியாயின்றுமிவருங்கொல்' 3 '.........ன் சாத்தன் கொற்றனார்' 4 'பதுக்கைக்கல்லை'

பொழுது கட்டார், கல்லையும் ; கன்றுடனே கறவையையுமீட்டுக் கொண்டு வந்த மறவரையோட்டிநோக்கிய நெடுந்தகை பட்டமையறியாது இன்றும் வருங்கொல்லோ பாணரது சுற்றம் ?—எ - று.

பட்டமையறிந்துவாராதொழியுமோ அறியாதுவருமோவென ஐயமாக்குக.

பதுக்கைசேர்த்ததேயன்றிக் கல்லும் நட்டனரென உம்மை எஞ்சிநின்றது. (உ௬௪)

---

(உ௬௫.) ஊர்நனி யிறந்த பார்முதிர் பறந்தலை
யோங்குநிலை வேங்கை யொள்ளிணர் நறுவீப்
போந்தையந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்துப்
பல்லான் கோவலர் படலை சூட்டக்
௫ கல்லா யினையே கடுமான் றோன்றல்
வானேறு புரையுநின் றாணிழல் வாழ்க்கைப்
பரிசிலர் செல்வ மன்றியும் விரிதார்க்
கடும்பகட் டியானை வேந்த
ரொடுங்கா வென்றியு நின்னொடு செலவே.*

திணையும் துறையும் அவை.

........சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியார் பாடியது.

இ - ள்.—ஊரைமிகவுங்கடவாத முரம்புநிலமாகிய முதிர்ந்த பறந்தலை யிடத்து உயர்ந்தநிலையையுடைய வேங்கையினது ஒள்ளியகொத்தாகிய நறிய பூவைப்
பனையோலையாலலங்கரித்துத்தொடுத்து.....................(உசுரு)

---

உ - ங. வேங்கைப்பூமாலை : புறநா. உக : ௬ ; கசுஅ : கரு.
* ம. "ஊர்கனி.....செலவே; இது 'கோவலர் படலைசூட்ட' என்றலித் கடவுளாகியபின் கண்டது" தொல். புறத்திணை. ௫. ரு - ந.

---

(உசுசு.)பயங்கெழு மாமழை பெய்யா து மாறிச்
கயங்களி முளியுங் கோடை யாயினும்
புழற்கா லாம்ப லகலடை.நீழற்
கதிர்க்கோடு நந்தின் சுரிமுக வேற்றை
ரு நாகிள வளையொடு பகன்மணம் புகூஉ

---

க. 'கெழு' என்னுஞ் சாரியை, லகர ளகரவீற்றுச்சொற்கள் ஒழிந்த பிறசொற்களிடத்து நிலைமொழி ஈற்றெழுத்துத் திரியவந்ததற்கு மேற்கோள் ; தொல். குற்றியலுகரப்புணரியல், ௬. எசு - ந.
ங. தனிக்குறிலை யொழித்த லகரம் வலலினம்வர அல்வழியில் திரிந்து வந்ததற்கு மேற்கோள் ; நன் - மயிலை. ௬. உஉஅ.
௪. நந்து - பொற்கொல்லர்களின் கருவி விசேடம்; புறநா. உ௪க: க.
ரு. 'நாகு' என்பது நந்தின் பெண்பாற்கு வருதல் மரபென்பதற்கு மேற்கோள் ;தொல். மாபு. ௬. சுங - பேர்.

# புறநானூறு மூலமும் உரையும்.

கூஅக

நீர்திகழ் கழனி நாடுகெழு பெருவிறல்
வான்றோய் நீள்குடை வயமான் சென்னி
சான்றோ ரிருந்த வவையத் துற்றோ
னாசா கென்னும் பூசல் போல
வல்லே களைமதி யத்தை யுள்ளிய
விருந்துகண் டொளிக்குந் திருந்தா வாழ்க்கைப்
1 பொறிப்புண ருடம்பிற் றோன்றியென்
னறிவுகெட நின்ற நல்கூர் மையே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.

சோழன் உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னியைப் பெருங்குன்றூர் கிழார் பாடியது.

இ - ள்.—பயன்பொருந்திய பெரியமுகில் பெய்யாதொழிதலால் நீர் நிலைகள் கலியாய்முளியும் கோடைக்காலமாயினும் தலைபொருந்திய தாளையுடைய ஆம்பலினது அகலிய இலையினிழற்கண் கதிர்போலுங்கோட்டையு

டைய நத்தையினது சுரிமுகத்தையுடைய ஏற்றை நாகாகிய இளையசங்கு டனே பகற்காலத்தே மணங்கூடும் நீர்விளங்கும் வயலையுடைத்தாகிய நாட்டையுடைய பெரிய வென்றியையுடையோய்!
ஆகாயத்தைப்பொருந்தும் நெடியகுடையினையும் வலியகுதிரையினையுமுடைய சென்னி! அறிவானமைந்

தோர் தொக்கிருந்த அவையின்கண் சென்றுபொருந்தினொருவன் யானுற்ற துன்பத்திற்குத் துணையாய் எனக்கு நீர் பற்றுகவேண்டுமென்னும் ஆரவாரத்தை அவர் விரையத்தீர்க்குமாறுபோல விரையத் தீர்ப்பாயாக, என்னைக் கருதிவரப்பட்ட விருந்தினரைக்கண்டுவைத்து அவர்க்கு விருந்தாற்றமாட்டாமல் ஒளிக்கும் தன்மையில்லாத இல்வாழ்க்கையையுடைய ஐம்பொறியும் குறைவின்றிப்பொருந்திய எனதியாக்கையில் கட்டோவறி அவற்றாலாயபயன் கொள்ளாதபடி எனது அறிவுகெட நிலைபெற்ற வறுமையை.—எ - று.

மதியும் அத்தையும், அசைநிலை.

பெருவிறல், சென்னி, சான்றோரிருந்த அவையத்துற்றோன் பூசலை அவர் விரையக்களைந்தாற்போல எனது நல்கூர்மையை வல்லே களையெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

---

௧௫. "அழிபசி வருத்தம் வீட" (சிறுபாண். ௧௪௦) என்பதும், 'அறிவு முதலியன அழிதற்குக் காரணமான பசியாலுளதாகிய வருத்தங்கள் விட்டுப் போம்படி' என்னும் அதன் உரையும், "அற்றாரழிபசி தீர்த்தல்", "தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக, நல்குர வென்னு நசை" (குறள். ௨௨௬, ௧௦௪௩), "குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும், பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉ, நாணணி களையு மாணெழில சிதைக்கும் ......பசிப்பிணி யென்னும் பாவி" (மணி. ௧௧: ௭௬-௮௦); "மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை, தானந் தவமுயர்ச்சி தாளாண்மை -தேனின், கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும், பசிவந் திடப்பறந்து போம்" (நல்வழி, ௨௬) என்பனவும் ஈண்டுணரத்தக்கன.

(பி - ம்.)—1 'பொறிபுணர்'

கந்து வலியோடு பகன்மணம்புகூஉமென் கருத்து : அவை தம் செருக்கினால் சாதியறியாது மயங்கிப்புணருமென்று நாட்டின்மிகுதி கூறிய தினால் அவன் செல்வமிகுதிகூறியவாறு.

'காளைத் தவலியொடு பகன்மணம் புகூஉம்' என்று பாடமோதி, கந்தி னேற்றை காளைத் தவலையுடனே தத்தம் இனத்தோடு மணம்புகூஉமென் றுரைப்பினுமமையும்.

'ஆசாகு' என்பதனை இரக்கக்குறிப்புப்படுமொழியென்பாருமுளர்.

பெருவிறல்வுடைய வயமான்சென்னியெனினுமாம்.

'பொறிப்புணருடம்பிற் றோன்றி' என்பதற்குப் பாவைபோலும் வடிவு மாத்திரையேதோன்றித் தோன்றிய பயன்கொள்ளாமையால் என் அறிவுகெட வின்றலைகூர்மையென்றும், 'விருந்துகண் டொளிக்கும்' என்பதற்கு வறுமை கண்டு, வந்தவிருந்து தாம் அது காணமாட்டாது ஒளிக்குமென்றும் உரைப்பாருமுளர்.

மாறியென்பது மாறவெனத்திரிக்கப்பட்டது.

(உசுசு)

---

*(உசுஎ.)......... ......... ......... .........

*(உசுஅ.)......... ......... ......... .........

(உசுகூ.) †குயில்வா யன்ன கூர்முகை [1] யதிரல்
பயிலா தல்கிய பல்காழ் மாலை
மையிரும் பித்தை பொலியச் சூட்டிப்
புத்தகற் கொண்ட புலிக்கண் வெப்ப
நு ரொன்றிரு முறையிருந் துண்ட பின்றை

புலைக் கண்ணித் துடியன் வந்தெனப்

பிழிமகிழ் வல்சி வேண்ட மற்றிது

---

* இவ்வெண்களுக்குரியபாட்டுக்கள், கிடைத்த கையெழுத்துப்பிரதிகளுள் ஒன்றிலும் காணப்படவில்லை.

† இதுமுதலிய எல்லாப்பாடல்களுக்கும் உரை அகப்படவில்லை; சில பாடல்களும் இடையிடையே சிதைந்தும் பொருளினுண்மைகாணக்கூடாத வண்ணம் பிறழ்ந்தும் போயிருக்கின்றன.

க. அதிரல்—புனலிக்கொடி ; (முல்லை. ருக; குறிஞ்சி. மல்லிகை, காட்டுமல்லிகை ; சிலப். கூ: கருகூ. எரு); மோசி

க-ரு. "கொய்குழையதிரல வைகுபுல ரலரி, சுரியிரும் பித்தை சுரும்பு படச் சூடி" அகநா. உகரு.

ச. புதிய அகலிடத்திற்கொண்ட புலியினது கண்போன்ற நிறத்தையுடைய சூடான உணவு ; வெப்பர், வெவ்வர் - வெம்மை ; பதிற். சக.

ரு. புறநா. உகூஉ: உ; உலைக்கண்ணி-தழைவிரவித்தொடுத்தமாலை.

எ. பிழி மகிழ் வல்சி-பிழிந்தெடுத்த மதுவாகிய உணவு.

(பி - ம்.)—1 'அதரல்'



1 கொள்ளா வென்ப கள்ளின் வாழ்த்திக்

. கார்நெ றீடிய வறிந்துமாறு செருவிற்

பல்லா னினநிரை தழீஇய வில்லோர்க்
கொடுஞ்சிறைக் குரூஉப்பருந் தார்ப்பத்
தடிந்துமாறு [2] பெயர்த்ததிக் கருங்கை வாளே.

திணை - வெட்சி ; துறை - * உண்டாட்டு.

ஔவையார் (உ௯௰)

அ. என்ப, அசைநிலை. கள்ளின் வாழ்த்தி : புறநா. ௩௬௬ : ௯.

௬. காந்தை - ஒருவகைப் புதர்ப்பூ ; இப்பூவாற் றொடுத்த மாலையை சிரைமீட்போர் சூடுவதுமரபு.

வாள்கொள்ளாவென முடிக்க.

* உண்டாட்டு - கள்ளுண்டு களித்தாடல.

(பி - ம்.)—1 'கொள்ளானென்ப' 2 'பெயர்த்தவிக்'

(உ௭௦.) பன்மீ னிமைக்கு மாக விசும்பி
னிரங்கு [1] முரசி னினஞ்சால் யானை
நிலந்தவ வுருட்டிய நோமி யோருஞ்
சமங்கண் கூடித் தாம்வேட் பவ்வே
நறுவிரை துறந்த நாறா நரைத்தலைச்
சிறுவர் தாயே பேரிற் பெண்டே
நோகோ யானே நோக்குமதி நீயே
மறப்படை நுவலு மரிக்குரற் றண்ணுமை
யின்னிசை கேட்ட துன்னரு மறவர்
வென்றிதரு வேட்கையர் மன்றங் கொண்மார்
பேரம ருழந்த வெருவரு பறந்தலை

க. மாகவிசம்பு: புறநா.கூ௫:க௮ ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

௨-௩.ஒலிக்கு முரசினையும் இனமிக்கயானைகளையும் நிலத்தில் மிகச் செலுத்திய ஆஞ்ஞாசக்கரத்தையுமுடைய அரசர்களும்.

௪. வேட்ப - விரும்புவார்.

௫. கல்மணமுடையபொருள்களை நீக்கியதனால் மணமில்லாத வெளுத்த தலைமயிரையுடைய (௯) தாயெனக்கூட்டுக ; புறநா. ௨௭௬: க பார்க்க.

௮. அரிக்குரற்றண்ணுமை : புறநா. ௨௪௯ : ௪ ; ௩௬௯ : ௨௧ ; ௩௯௬ : ௪.

(பி - ம்.)—1 'ஒலிவினனஞ்சால்'

௩௯௨ புறநானூறு மூலம்.

விழுநவி பாய்ந்த மரத்தின்
வாண்மிசைக் கிடந்த வாண்மையோன் றிறத்தே.

திணை - கரந்தை ; துறை - கையறுநிலை.

கழாத்தலையார்.

கண்டார் தாய்க்குச்சொல்லியது.

(௨௭0)

---

௧௨. கவி - கோடாலி.

௧௩. "கணையும் வேலும் துணையுற மொய்த்தலிற், சென்ற வுயிரி னின்ற யாக்கை, யிருநிலந் தீண்டா வகை" (தொல். புறத்திணை. சூ. ௧௪); "அப்பணைக் கிடந்த காளை" தகடூர்யாத்திரை.

(கஙு) ஆண்மையோன்றிறத்தை (ங) கேமியோரும் (ச)
வென்க ; பு - வே. ச : கசு - ஆம் பாடலைப்பார்க்க.
வேட்ப

---

(உஎக.) 1 நீரற வறியா நிலமுதற் கலந்த
2 கருங்குர னொச்சிக் கண்ணார் குரூஉத்தழை
3 மெல்லிறை மகளி ரைதக லல்குற்
றொடலை யாகவுங் கண்டன மினியே
ரு வெருவரு குருதியொடு மயங்கி யுருவுகரந்
4 தொறுவாய்ப் பட்ட தெரிய 5 லூன் செத்துப்
பருந்துகொண் டுகப்பயாங் கண்டன
மறம்புகன் மைந்தன் மலைந்த மாறே.*
திணை - நொச்சி ; துறை - செருவிடைவீழ்தல்.
6 வெறிபாடிய காமக்கண்ணியார்.

(உஎக)

---

க. நீரறவறியா: புறநா. க: கஉ.

உ. புறநா. உஎஉ: க; "மாக்குரனொச்சி" (நற். ஙo௫; அகநா. கஎ); "கருங்குரனொச்சி" தகடூர்யாத்திரை.

க - ச. புறநா. உஎஉ: க - ௫; "ஐதக லல்குற் றழையணிக் கூட்டுமென், கூழை கொச்சி". அகநா. உஎ௫.

* ழ. உழிஞைத்திணைத்துறைகளுள், 'அகத்தோன் வீழ்ந்த நொச்சி' என்பதற்கு மேற்கோள; தொல். புறத்திணை. சூ. கக - இளம்.

(பி - ம்.)—1 'நினற வறியா நில முதற்காத்த' 2 'கருங்காஞெச்சிக் கண்ணூர்குவவுத்தழை' 3 'மெல்லிமகளிர்க்கல்குற்' 4 'தெற்றுவாய்' 5 'உரன் செத்துப் பருந்துகண்வெப்பவும்' 6 'வெறியாடிய'

---

## புறநானூறு மூலம். ௩௬௩.

(உஎஉ.) மணிதுணர்ந் தன்ன மாக்குர னொச்சி
போதுவிரி பன்மர னுள்ளுஞ் சிறந்த
காத லன்[1]மர நீமற் றிசினே
கடியுடை வியனகர்க் காண்வரப் பொலிந்த
[2] தொடியுடை மகளி ரல்குலுங் கிடத்தி
காப்புடைப் புரிசை புக்குமா றழித்தலி
னூர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை
பீடுகெழு சென்னிக் கிழமையு நினதே.*
திணையும் துறையும் அவை.
மோசிசாத்தனர்.
(உஎஉ)

---

க. "மணியேர் நொச்சி", "மணிக்குரனொச்சி" நற். கஅச, உகரு.
க - ரு. நொச்சியே, நீ காதல் நன்மரமென்க.
ச. கடியுடை வியனகர்: புறநா. ௬ரு: ரு.

(பி - ம்.)—1 'மருங்கின்', 'மருங்கிறையவமது வேளாசன்'2 'சொல்லியது சொல்லோ'

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

சஉ.ரு

ரு யேணியுஞ் சீப்பு மாற்றி
மாண்வினை யானையு மணி [1] களைந் தனவே.*

திணை - வாகை ; துறை - பார்ப்பனவாகை.
மதுரைவேளாசான்.

(கூ0ரு)

---

ரு. சீப்பு - கதவுக்கு வலியாக உள்வாயிற்படியிலே நிலத்தேவீழ இடும் மரம் (சிலப். கரு: உகரு - அடியார்.) இஃது ஒருவகைத்தாழ்.

சு. மாண்வினையானை - மாட்சிமைப்பட்ட தொழிலையுடையயானை ; மாட்சிமையாவது - போரிலே எதிர்த்தாலன்றி மற்றஇடத்து ஒருயிரையும் துன்புறுத்தாமை; "வினைநவில் யானை", "தொழினவில் யானை" (பதிற். அஉ, அச.) மணி - யானையின் இருபக்கத்தும் அணியப்படும் மணி ; "மணிநிலைக் குஞ் சரம் வேந்தூர்த லின்று" (இன்னா. கச.

* மு. அந்தணன்தூது சென்றதற்கும் (தொல். அகத்திணை. சூ. உஅ - இளம்; ஷை ஷை ஷை உகூ-ந; நம்பி. சூ. எரு ; இ-வி. சசாட-உசா), தூதுரைகேட்ட அகத்துழிஞையோன் நிறம் கண்டோர் கூறியதற்கும் (தொல். புறத்திணை. சூ. கஉ - ந) மேற்கோள்.

(பி - ம்.)—1 'களைந்தனனே', 'களைந்தனனே'

(௩0௬) களிறுபொரக் [1] கலங்கு [2] கழன்முள் வேலி
யரிதுன் கூவ லங்குடிச் சீறூ
ரொலிமென் கூந்த லொண்ணுத லரிவை
நடுகற் கைதொழுது பரவு மொடியாது
௫ விருந்தெதிர் பெறுகதில் யானே யென்னையு

௧. கழல - கழற்கொடி: "கழன்முள்வேலி"

பெரும்பாண் : ௧௫௪,
௧௮௪ - ௫; முல்லை. ௨௭.

௨. கூவல் - கிணறு.

௧-௨. யானை உழக்குதலாற் கலங்கிய கூவல்; முள்ளையுடைய கழற்கொடி யாலாகிய வேலியையுடைய சீறூர்.

௩. தழைத்த மெல்லியகூந்தலையும் ஒள்ளியநெற்றியையுமுடைய அரிவை; "ஒலிமென்கூந்தல்" புறநா. ௧௪௬: ௩; குறுந். ௨௨௫.

௪. நடுகல்லைத் தொழுதல் மரபென்பதை, "அம்புகழ் பாடி யழுதழுது நோனா, திடும்பையுள் வைகிற் றிருந்த - கடும்பொடு, கைவண் குருசிற்கற் கை தொழூஉச் செல்பாண, தெய்வமாய் நின்றான் றிசைக்கு" (பு - வெ. ௧௦: ௧௩) என்பதனாலுணர்க. பரவும் - துதிப்பாள். ஒடியாது - ஒழியாது; தவிராது.

௫. யான் விருந்தைப் பெறுவேனாக; தில், விழைவின்கண்வந்தது.
என்
ஐயும் - என் கணவனும்.

(பி - ம்.)—1 'கலங்கி' 2 'கன்முள்'

மொ.............................வேந்தனொடு
நாடுதரு விழுப்பகை யெய்துக வெனவே.*

திணை - அது ; துறை - மூதின்முல்லை.
அள்ளூர்நன்முல்லையார்.
(௩௦௬)

---

எ. பகை எய்துக வென்று வேண்டியது, தன்கணவன் நிச்சயமாக வெல்லுவானென்று துணிந்து.
(எ) எனப் (௪) பரவுமெனக.
* இது கண்டோர் கூற்று.

---

(௩௦௭) ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
குன்றத் தன்ன களிற்றொடு பட்டோன்
[1] வம்பலன் போலத் தோன்று முதுக்காண்
வேனல் வரியணில் வாலத் தன்ன
௫ கான வூகின் கழன்றுகு முதுவீ
யரியல் வான்குழற் சுரியற் றங்க
நீரும் புல்லு [2] மீயா துமணர்
யாருமி லொருசிறை முடத்தொடு துறந்த
வாழா வான்பகு டேய்ப்பத் [3] தெறுவர்

க0 [4] பேருயிர் கொள்ளு [5] மாதோ வதுகண்டு

க. மு. புறநா. உகடு: கள; துறுந். களசு; பற்றுக்கோடாகிய என் தலைவன் எங்கே உள்ளானோ?

உ. பட்டோனென்பது சுட்டிப்பொருளாது.

ங. வம்பலன் - அயலான். உதுக்காண் - அவ்விடத்தே பார்; "எவன் விரைந்து சேறி யுதுக்காஸ்" கலி. க0அ.

ச. வேனல் - வேனிற்காலம். வரியணில் - முதுகில் மூன்று வரிகளை யுடைய அணிற்பிள்ளை; "மூவரியணில்" (தொல். மரபு. சூ. சு.) வாலம்-வால்.

ரு. ஊகு - ஊகம்புல். வீ - பூ; எழுவாய்.

ச - ரு. அணில்வால் ஊகம்புல்லிற்குவமை.

எ. உமணர் - உப்புவாணிகர்.

அ. யாருமில் ஒருசிறை - ஒருவருமில்லாத ஒருபக்கத்தில்.

கு. பகடு - எருது. தெறுவர் - பகைவர்.

க0. பெரிய உயிர்களைக் கவருகின்றான்.

(உ) பட்டோன் (க0) பேருயிர் கொள்ளும்.

(பி - ம்.)—1 'வம்பலபோலத்'2 'ஈயாதுமன்ற'3'தெறுவவர்', 'தெறுவா' 4 'பேருயிர்க்கொ' 5 'மாதோவ......கெகள'

## புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

வெஞ்சின யானை வேந்தனு மிக்களத்
தெஞ்சலிற் சிறந்தது பிறிதொன் றில்லெனப்
பண்கொளற் கருமை நோக்கி
நெஞ்சற வீழ்ந்த புரைமை யோனே.*

**திணை - தும்பை ; துறை** - களிற்றுடனிலை.

..................

(௩0எ)

---

* மு. தும்பைத்திணைத் துறைகளுள், 'களிறெறிந் தெதிர்ந்தோர்பாடு' என்றதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௧௪ - இளம்.

---

(௩0அ) பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
மின்னேர் பச்சை மிஞிற்றுக்குரற் சீறியாழ்
நன்மை நிறைந்த நயவரு பாண
சீறூர் மன்னன் சிறியிலை யெஃகம்
வேந்தூர் யானை யேந்துமுகத் ததுவே
வேந்துடன் றெறிந்த [1] வேலே யென்னை
சாந்தா ரகல முளங்கழிந் தன்றே

க - உ. "பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பி, னின்குரற் சீறியாழ்" (சிறுபாண். உச-ரு); "பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பிற், றொடைய மை கேள்வி" (பெரும்பாண். கரு-சு); "பொன் வார்ந் தனையாழ் னரம்பு வார்ந்து" பாகவதம், கo: கோவத்தன. உடு.

க - ங. பொற்கம்பியினை ஒத்த முறுக்கு அடங்கின நரம்பினையும், மின்னலை ஒத்த தோலினையும் மிழற்றென்னும் வண்டுச்சாதியின் குரல்போன்ற ஓசையையுமுடைய சிறிய யாழக் கல்வியின் நன்மை நிறைந்த விருப்பம் வந்தபாண!

ச. சீறூர் மன்னன் - குறுநிலமன்னன். எஃகம் - வேல்; எழுவாய்.

ரு. வேந்தன் ஊருகின்ற. ஏந்துமுகம் - எடுத்தமுகம்.

ச - ரு. எஃகம் முகத்தது: "வேந்தூர் யானைக் கல்ல, போலான்ற னிலங்கிலை வேலே" புறநா. உ0க: கரு - சு.

தேந்துவன்

சு - எ. அரசன் கோபித்தெறிந்த வேல என் தலைவனது சந்தனம் பூசிய

மார்பின் உள்ளே சென்றது.

அ - க. நம்பெருவிறல், தன் மார்பின் உட்சென்ற அவ்வொளிபொருந்திய வேற்படையைப் பறித்து எடுத்துச் செலுத்தி ஓட்டிய காலத்து; பெருவிறல் - மிக்க வலியை யுடையவன்.

(பி - ம்.)—1 'வேலேயன்னை' 2 'பெருவ...வாபுள்றலைமடப்பிழ'

லோச்சினன் றுரந்த காலை [1] மற்றவன்
புன்றலை மடப்பிடி நாணக்
குஞ்சர மெல்லாம் புறக்கொடுத் தனவே.*

திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.

கோவூர்கிழார்.

(௩௦அ)

௯ - ௧௧. பிடி- பெண்யானை; அது வேந்தனூர்தி.

அவ்விடத்துட் புல்லிய தலையை யுடைய பிடிநாணக் களிறுகளெல்லாம் புறங்கொடுத்தோடின.

*ந. ஆரமரோட்டலென்னுந் துறைக்கு மேற்கோள் காட்டி, 'இது சேரார் மன்னன் வேந்தனைப் புறங் கண்டது' என்பர்; தொல். புறத்திணை. ௫, ௫-ந.

(பி - ம்.)—1 'மற்றவர்'

---

(௩௦௯.) இரும்பு[1]முகஞ் சிதைய நூறி யொன்னா
ரருஞ்சமங் கடத்த லேனோர்க்கு மெளிதே
நல்லரா வுறையும் புற்றம் போலவுங்
கொல்லேறு திரிதரு மன்றம் போலவு
மாற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை
[2] யுளனென வெரூஉ மோரொளி

க - உ. பகைவருடைய படைக்கலங்களின் முகஞ்சிதையும்படி தங்கள் படைக்கலங்களால் அவருடையபோரை வெல்லுதல மற்றவர்க்கும் எளிதாகிய காரியம். இரும்பு, படைக்கலத்துக்கு ஆகுபெயர். 'ஏனோர், ஏனையோ ரென் பதன் விகாரம்.

௩. நல்லரா - நாகம் ; "நாமநல்லரா" (அகநா. எஉ) எனச் செய்யுளி னும், 'நல்ல பாம்பு' என வழக்கிலும் உண்மை அறிக. இஃது உரையுமிடத்

தைப் பிறர் அஞ்சி யணுகாரென்பது, "வரி மி ற், நாவுறை புற்றத் தற்றே நாளும், புரவலர் புன்க ணோக்கா திரவலர்க், கருகாதியும் வண்மை, யுரைசா னெடுந்தகை யோம்பு மூரே" (புறநா. ௩உ௬ : ௫ - ௬) என்பதனாலும் விளங்கும்.

௪. கொல்லுகின்ற இடபம் திரிகின்ற மன்றம் - பசுக்கள் தங்கும் பொது விடம் ; "கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும், புல்லாளே யாய மகள்" கலி. ௧0௩.

௫ - ௬. குணமடியாகத் தோன்றிய வினைக்குறிப்புச்சொற்கள் பலவிகற்

பப்பட்டு வருமென்று கூறி,"மாற்றருந்தப்பின் மாற்றோர் பாசறையுளன்" என்பதை ஒருவகைக்கு மேற்கோளாகக் காட்டினர்; நன் - வி. சூ. ௩உ௧.

௬. ஒளி - பிறர்க்கு அச்சமுண்டாதற்குக் காரணமான நன்மதிப்பு ; ஒளியென்பதற்குப் பரிமேலழகர் (குறள், ௬௬௮) எழுதிய விசேடக்குறிப்பும், "உறங்குமாயினு மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்கு மால்" (சீவக. உ௪௮) என்பதும் இங்கே அறியற்பாலன.

(பி-ம்.)—1 'முகளு...யோன்' 2 'உளனேவரூஉம்', 'உளனெனவெரூஉம்'

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

௯உ௯

வலனுயர் நெடுவே [1] லென்னைகண் ணதுவே.*

திணை - தும்பை ; துறை - நூழிலாட்டு.

மதுரையிளங்கண்ணிக்கௌசிகனர்.

(ஙoக)

---

எ. வென்றோர் வேலையுயர்த்தல் மரபு; "வென்று......உயாகதும வேலே" (புறநா. ருஅ), "வெங்களத்துவேலுயர்த்த வேந்து" பு - வெ. கூ: கக.

ரு - எ. மாற்றுதற்கரிய வலியொடு பகைவர் பாசறைக்கண்ணே இவன் இருக்கிறுனென்று வெருவதற்குக் காரணமாகிய ஒப்பற்ற ஒளி வெற்றியால் உயர்த்தும் நெடிய வேற்படையையுடைய என் தலைவனிடத்தேயுள்ளது.

கூ - எ. ஒளி என்னைகண்ணது.

* ıρ. "பெரும்பகைதாங்கும் வேலினனும்' என்பதனுரையில, சான்றோர் பெரும்பாலும் வேற்படையையே சிறப்பித்துக் கூறுவரென்றுகூறி, இதனை மேற்கோள் காட்டினர் ; தொல். புறத்திணை. சூ. உக - ந.

(பி - ம்.)—1 'என்னைக்கண', 'என்னைக்கண்ணதுவே'

---

(ஙகo.) பால்கொண்டு மடுப்பவு முண்ணு தகலிற்
செருஅ தோச்சிய சிறுகோ லஞ்சியொ
டுயவொடு வருந்து மன்னே யினியே
புகர்நிறங் கொண்ட களிறட் டானன்

ரு முன்னாள் வீழ்ந்த வுரவோர் மகனே
யுன்னில னென்னும் புண்ணொன் றம்பு
மானுளை யன்ன குடுமித்
தோன்றிசைக் கிடந்த [1] புலலைனா லோனே.

திணையும் துறையும் அவை.

பொன்முடியார்.

(௩௧0)

---

க. மடுப்ப - உண்பிக்க. உ. அஞ்சி - ஒருகுறுநிலமன்னன். ஒடு - ஆல்.

௩. உயவு - கவலை. இனி - இப்பொழுது.

௪. ஆனன் - அமையானுகி. ரு. முன்னாள் - முதல்நாள்.

௬. புண்ணில் ஒன்றிய அம்பை யான் உன்னிலனென்பான்.

எ. புலலுளைக்குடுமிப்புதல்வன்; புறநா. உஎ௩ ;௩. ஐங்குறு. உ0உ பார்க்க.

அ. தோல் - யானை ; கேடகமுமாம். அணல் - தாடி ; "மையணற் காளை" புறநா. அ௩.

(பி - ம்.)—1 'புலலனலோனே'

---

(௬௧௧.) களர்ப்படு கூவற் றோண்டி நாளும்
புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை
தாதெரு [1] மறுகின் மாசுண விருந்து
பலர்குறை செய்த மலர்தா ரண்ணற்
௫ கொருவரு மில்லை மாதோ செருவத்துச்
சிறப்புடைச் செங்கண் புகையவோர்
தோல்கொண்டு மறைக்குஞ் [2] சால்புடை யோனே.*

திணை - அது ; துறை - பாண்பாட்டு.

ஔவையார்.

(௬௧௧)

---

௧. களர் - உவர்நிலம். கூவல் - கிணறு ; "பூவற்படுவிற் கூவற்றோண் டிய" புறநா. ௬௧௯.

௨. புலைத்தி - வண்ணாத்தி ; "உடையோர் பான்மையிற் பெருங்கை தூவா, வறனில் புலைத்தி" (நற். ௯0), "நலத்தகைப் புலைத்தி பசைதோய்த் தெடுத்துத், தலைப்புடை போக்கித்தண்கயத்திட்டநீரிற் பிரியா" (குறுந்.௩௩0), "ஆடைகொண்டொலிக்கு நின்புலைத்தி காட்டென்றாளோ" (கலி. எ௨.) தூவெள் ளறுவை - மிக வெள்ளிய ஆடை ; "தூவெள் ளறுவை போர்ப்பித்திலதே" புறநா. ௨௮௬: ௫.

௩. தாதெருமறுகு - எருப்பொடிகளையுடைய வீதி ; "தாதெருமறுகிற் பாசவற்" புறநா. ௩௩ : ௧௧.

௨ - ௩. அறுவை அழுக்குண்ணும்படியிருந்து. ௪. குறை - காரியம்.

௫. உதவி செய்தற்கு ஒருவருமில்லை. ௭. தோல் - கேடகம்.

* தலைவனது ஆற்றல் கூறியதனாற் பாண்பாட்டாயிற்று.

(பி - ம்.)—[1] 'மறுகிறவ' [2] 'சாலபுடையோரே'

---

(நகஉ.) ஈன்று புறந்தருத லென்றலைக் கடனே
சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே

---

க. பெற்றுப்பாதுகாத்தல் என்னிடத்திலுள்ள கடமையாம்; "ஈன்று புறந்தந்தவெம்முமுள்ளான்" (அகநா. ருடு.) தலைக்கடன் - முதன்மையான கடனுமாம்.

உ. தன் குலத்துக்குரிய படைக்கலப்பயிற்சியாகிய கல்வி அதற்குரிய அறிவு அதற்குரிய செய்கைகள் ஆகிய இவற்றால் நிறைந்தவனாகச் செய்தல் தகப் பனுக்குக் கடமையாம்; "உயர்மிக்க தந்தை" என்பதற்கு, 'பிள்ளை உயர்ச்சிமிகு தற்குக் காரணமான தந்தை' என்று பொருள்கூறி இவ்வடியை மேற்கோள்காட் டினர்; சீவக. சஎரு - ந.

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

ருகஉ

[1] வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
[2] நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
ரு யொளிறு [3] வா ளருஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.*

திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.

௩. படைக்கலத்தைத் திருத்தமாகச் செய்துகொடுத்தல் கொல்லனுக்குக் கடமையாகும்; வடித்தல் - கூரிதாக்கலுமாம். 'கொல்லன்' என்பதற்கு வேல் வடிக்குங் கொல்லனென இவ்வடியை உட்கொண்டு அடியார்க்குநல்லார் பொருளெழுதியிருத்தல் ஈண்டு அறியற்பாலது; சிலப். ௧௨: "இளமாவெயிற்றி".

௫ - ௬. "செல்சமமுருக்கி" (புறநா. ௧௧), "பொருந்தா மன்னரருஞ் சமமுருக்கி, யக்களத் தொழிதல் செல்லாய் மிக்க, புகர்முகக் குஞ்சர மெறிந்த வெஃகம், அதன்முகத் தொழிய நீபோந் தனையே" (தகடூர்யாத்திரை, "வாது வல்") என்பவை இங்கே அறியற்பாலன.

* மு. தொல். புறத்திணை. சூ. உ௪ - ந. மேற்கோள்.

(பி - ம்.)—1 'வேலுழத்து' 2 'தன்னணை', 'த...னணை' 3 'வாள் வஞ்சமமுருக்கி'

---

(௩௧௩.) அத்த நண்ணிய நாடுகெழு பெருவிறல்
கைப்பொருள் யாதொன்று மிலனே நச்சிக்
காணிய சென்ற விரவன் மாக்கள்
1 களிறொடு நெடுந்தேர் வேண்டினுங் 2 கடவ
௫ வுப்பொய் சாகாட் டுமணர் காட்ட

ஒருவற் : : வாக அவன் படையாளரும் பிறரும்கூறல் என்று பொருள்கூறி, இதற் மேற்கோள்காட்டி, இது படையாளர் கூற்றென்றும், இதற்கு முடிவேந்த சிறப்பெடுத்துரைத்தலென்ற கூறின் அடிய பொதுவியலிற் கூறலாகாதெட ருணர்க வென்றும் கூறுவர்.

---

(௩௧௪.) மனைக்குவிளக் காகிய வாணுதல் கணவன்
முனைக்குவரம் பாகிய வென்வே னெடுந்தகை
நடுகற் பிறங்கிய வுவலிடு பறந்தலைப்
புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்
௫ குடியு மன்னுந் தானே கொடியெடுத்து
[1] நிறையழிந் தெழுதரு தானைக்குச்
சிறையுந் தானேதன் னிறைவிழு முறினே.

திணையும் துறையும் அவை.

ஐயூர்முடவனர்.

(௩௧௫

---

க. "மனைக்கு விளக்க மடவாள்" நான்மணி. ௧௦௪.

உ. முனை - போர். வென் - வெற்றி.

௩. நடுகல் மிகுந்த பறந்தலை, உவலிடுபறந்தலையெனக் கூட்டுக. உவலிடு தழைகளைப்பெய்த. பறந்தலை - பாழ்பட்ட இடம்.

௪. புல்லியகொட்டையையுடையநெல்லி.

வன்புலம்-குறிஞ்சியுமுல்லையு

௫. குடிமக்களுளொருவனும் தானே; மன், உம், அசைநிலை.

௬. நிறை - நிறுத்தப்படுதல்; "நிறையருந்தானை" சிலப். உரு :

௧௭௮.

௭. சிறை - காவல். இறைவிழுமமுறின் - அரசன் துன்பமுற்றால்; "வே தவிழுமுறவே" புறநா. ௩௧௬:௧௨.

(பி - ம்.)—1 'நிறையறிந் தெழுந்தரும்', 'நிறையறிந்தெழுதரு'

---



(௩௧௫.) உடைய னாயி னுண்ணவும் வல்லன்
கடவர் மீது மிரப்போர்க் கீயு
மடவர் மகிழ்துணை நெடுமா னஞ்சி
யில்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்
தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன்
கான்றுபடு கனையெரி போலத்
தோன்றவும் வல்லன்றான் றோன்றுங் காலே.

திணையும் துறையும் அவை.

நெடுமானஞ்சியை 1 ஔவையார்.

(௩௧௫)

---

௩. மடவர்-அறிவில்லார் (புறநா.௧௦௬:௪.) நெடுமானஞ்சி-ஒரு தலைவன்.

௨ - ௩. கடவர் - படைவீரர் முதலியோர். மீதும்-மேற்பட்டும். ஈயுமஞ்சி. 'மடவர் மகிழ்துணை' என்பது, "பாணரொக்கல" (திருச்சிற். ௪௦௦) என்பது போல்வது.

௪ - ரு. அவன் வீட்டின் இறப்பிற் செருகப்பட்ட தீக்கடைகோலைப்
போலத்தன்வலி வெளிப்பட வேண்டாத காலத்து அடங்கியிருக்கவும் வல்லன்.
ரு - எ. ஞெலிகோலாலே கக்கப்பட்டுத் தோன்றுகின்ற காட்டுத்தீயைப்போல வெளிப்படத்தோன்ற வேண்டிய காலத்துத்தோன்றவும் வல்லன்.

(மு - ம்.)—1 'ஔவையாரால்'

---

(௩௧௬.) கள்ளின் வாழ்த்திக் கள்ளின் 1 வாழ்த்திக்
காட்டொடு மிடைந்த சீயா முன்றி
ணட்செருக் 2 கனந்தர்த் துஞ்சுவோனே
யவனெம் 3 மிறைவன் யாமவன் பாணர்
ரு நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்த
னிரும்புடைப் பழவாள் வைத்தன னின்றிக்

க. கள்ளினைவாழ்த்தி: புறநா. ௨௬௭: ௬.

௨. சீத்தல்- தூத்தல்; பெருக்கல; "மந்தி சீக்கு மணங்குடை. முன்றில்" (புறநா. ௨௪௭: ௪); "மந்தி சீக்கு மாதுஞ்சு முன்றில" பெரும்பாண்.௪௧௭.
௩. நாட்செருக்குஅனந்தர்-விடியற்காலத்துக் கள்ளைக்குடித்த மயக்கத்தால்.
௧ - ௪. காட்டு-செத்தை; "துடைப்பந்துகட்காட்டுப்புலலிதழ்", "காட்டுக் களைந்து" (ஆசாா. ௪௫, ௪௬.) ஒடு, அசை. தூவாதமுன்வாயிலினிடத்தே தானுண்டகள்ளைவாழ்த்தி நாட்கால அனந்தரால் துயிலவோன்; "முன்றிற்கிடந் தபெருங்களியாளர்"(புறநா. ௩௭௭:௨.)தூங்குவோனாகிய அவனே எம்தலைவன்.
ரு - ௬. நேற்றுவந்த விருந்தினரை உபசரித்தற்காகத் தன்பழைய வாட்

படையை ஈடாகவைத்தான். இன்று - இன்றைத்தினம்.

(பி - ம்.)—1 'வாழ்த்திகள்ளின்...தசியா' 2 'களந்தாத்துஞ்சு' 3 'இறையவன்'

55

# ௬௧௪ புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

கருங்கோட்டுச் சீறியாழ் பணைய மிதுகொண்
1 டீவதி லாள னென்னாது நீயும்
2 வள்ளி மருங்குல் வயங்கிழை யணியக்
௧0 கள்ளுடைக் கலத்தேம் யாமகிழ் தூங்கச்
3 சென்றுவாய் சிவந்துமேல் வருக
சிறுகண் யானை வேந்துவிழு முறவே.*

திணையும் துறையும் அவை.

மதுரைக்கள்ளிற் 4கடையத்தன்வெண்ணாகனார். (௩௧௬)

---

எ. பணையம் - ஈடு. அ. ஈயாதவனென்று கருதாமல் நீயும்.

௯. பூங்கொடிபோன்ற இடையையுடைய நின்விறலி விளங்கிய அணி கலத்தை அணியவும்; வள்ளி - பூங்கொடி.

* ழ "மறவன் ஆரமரோட்டல் கூறியது" என்பர்; தொல். புறத்திணை. ௫. ௫-ந.

(பி - ம்.)—1 'ஈதலிலாளன்' 2 'வள்ளியலகு விளங்கிழை' 3 'சென்று நாசிவந்து மேவருசிறுகண்', 'செறுவர்சிவந்து' 'செறுநர்சிவந்து' 4 'கடையத்தனூர் வெண்ணைகனூர்'

---

(௩௧எ.) வெண்வேல்...............ந்து
முன்றிற் கிடந்த பெருங்களி யாளற்
கதனுண்டாயினும் பாயுண் டாயினும்
யாதுண் டாயினுங் கொடுமின் வல்லே
௫ வேட்கை மீளப... ...................
.........................கு மெமக்கும் பிறர்க்கும்
யார்க்கு மீய்ந்து 1 துயிலேற் பினனே.

திணையும் துறையும் அவை.

2 வேம்பற்றூர்க்குமரனூர்.

(௩௧எ)

௨. முன்வாயிலிற் படுத்துக்கிடந்த மிக்க களிப்பினையுடையானுக்கு.

௩. அதள் - தோல். இதிற் சிலசாதியார் படுத்தல இயல்பு; அது, "மான் றோற் பள்ளி மகவொடு முடங்கி" (பெரும்பாண். ௮௯), "உழையதட்பள்ளி, புலவேக்கண்ணி வன்சொ லிளைஞர்" (மதுரை. ௩௪0 - ௪௧) என்பவற்றாலும் அறியலாகும்.

௪. வல்லே - விரைவாக.

எ. துயிலேற்பினன் - துயிலேற்றலையுடையான். ஆதலால் அக்களியாள னுக்கு யாதுண்டாயினும் வல்லே கொடுமினென்க.

(பி - ம்.)—1 'துயலேற்பினனே' 2 'வேப்பத்தூர்க்குமரன்'

---

# புறநானூற மூலமும் குறிப்புரையும்.



(௩௧௮.) கொய்யடகு வாடத் தருவிற குணங்க
மயிலஞ் சாயன் மாஅ யோளொடு
பசித்தன் றம்ம பெருந்தகை யூரே
மனையுறை குரீஇக் கறை [1] யணற் சேவல்
௫ பாணர் [2] நரம்பின் சுகிரொடு வயமான்
[3] குரற்செய் பீலியி னிழைத்த குடம்பைப்
பெருஞ்[4] செய் நெல்லி னரிசி யார்ந்துதன்
புன்புறப் பெடையொடு வதியும்
யாணர்த் தாகும் வேந்துவிழு முறினே.

திணையும் துறையும் அவை.

பெருங்குன்றூர்கிழார்.

(௩௧௮)

---

௧. கொய்த இலைக்கறிகள் வாடவும் கொண்டுவந்த விறகு உணங்கவும்.

௨. மாஅயோள் - மாமை நிறத்தினை யுடையவள்; மனைவி. மாமை - அழகிய நிறம்; "மாமைக்கவினே" ஐங்குறு. ௩௫, ௧௦௩, ௧௩௪.

௩. பசித்தன்று - பசித்தது; ஊர்பசித்தது.

௪. கழுத்திற் கறுப்பினையுடைய ஆண்குருவி; "உள்ளிறைக் குரீஇக் காரணற் சேவல்" நற். ௧௮௧.

ரு. வயமான் - சிங்கம். சு. செய்குடம்பை - கூடு.

எ. நெல்லினரிசி - நெல்லொடு கூடிய அரிசி. ஆர்ந்து -:உண்டு.

அ. வாடிய ஆம்பற்பூப்போன்ற சிறகுடைமையாற் புன்புறப் பெடை யென்றார்; "புன்புறப் புறவின் கணநிரை" பதிற். ருக: கக.

ச - அ. "ஆம்பற் பூவின் சாம்ப லன்ன, கூம்பிய சிறகர் மனைபுறை

குரீஇ, முன்றி லுணங்கல் மாந்தி மன்றத்,தெருவி னுண்டாது குடைவன வாடி, யில்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்" குறுந். சசு.

கூ. யாணர்த்து - புதுவருவாயினையுடையது. வேந்து - பகை வேந்தன். விழுமுறின்=விழுமமுறின் - துன்பமுற்றால்; "தன் னிறைவிழுமுறினே"

புறநா. ருகச: எ.

(பி - ம்.)—1 'பணற செலலப், பாண' 2 'நரம்பிசைநீரொடு' 3 'குரசை பிலியினிளமை மூத்தகுடம்பை', 'குரசெய்பீலியினிமைமூத்த', 'பூத்த' 4 'செய் செல்லின்'

---

# சுகூக புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

(௩௧௯.) பூவற் படுவிற் கூவற் [1] றோண்டிய
செங்கட் சின்னீர் பெய்த சீறின்
முன்றி லிருந்த முதுவாய்ச் சாடி
[2] யாங்கஃ் டெண்டென வறிது மாகினறு
படலை முன்றிற் சிறுதினை யுணங்கல்
[3] புறவு மிதலு மறவு முண்கெனப்
பெய்தற் கெல்லின்று பொழுதே யதனான்
முயல்சுட்ட வாயினுந் தருகுவேம் [4] புகுதந்
[5] தீங்கிருந் தீமோ முதுவாய்ப் பாண
கொடுங்கோட் டாமா னடுங்குதலைக் குழவி
புன்றலைச் சிறூஅ கன்றெனப் பூட்டுஞ்
சீறூர் மன்ன னெருநை ஞாங்கர்
வேந்துவிடு தொழிலொடு சென்றனன் வந்துநின்
பாடினி மாலை யணிய
வாடாத் தாமரை சூட்டுவ னினக்கே.

திணையும் துறையும் அவை.

ஆலங்குடி வங்கனார்.

(௩௧௯)

௧. பூவல் - செம்மண். படு - மடு. தோண்டிய - தோண்டுதலாலுண்டாகிய; "களர்ப்படு கூவற் றோண்டி" (புறநா. ௩௧௧: ௧); "பூவல்-செம்மண்; பூவற் படுவிற் கூவற் றோண்டிய வெள்ளூர் புறத்திலும்" சிலப். ௧௯: ௩ - ௯, அடியார்.
௨ - ௩. பெய்த சாடி. ௪. அந்நீர் மாசிலலாதது.

௫. படலை - தழை ; படலுமாம். உணங்கல தினை - உலர்ந்த தினை.

௬. இதல் - ஒருவகைப் பறவை ; "இதல்கவர்ந்துண்டென" (புறநா.

௩௨0: கக); "இதன்முட்சென்னை, நெருஞ்குகுலைப்பிடவம்" (அகநா. ௨௩:
௩.) அறவும் - மிகவும்.

எ. பொழுது எல்லின்று - சூரியன் ஒளிமழுங்கியது ; "ஏகுதிமடந்தை யெல்லின்று பொழுதே" நற். ௨௬௪.

௯. இருந்தீமோ - இரு. முது - பேரறிவு ;
௪௮, க௮0 ; பதிற். ௬௬.

"முதுவாயிரவல" புறநா.

க0. ஆமான்கன்றை. கக. புன்றலை - சிவந்த தலை.

க௨. மன்னன், எழுவாய். நெருநை ஞாங்கர் - நேற்று.

க௩. பகைமேற்சென்றனன். க௪. பாடினி - பாணிச்சி.

க௫. வாடாத்தாமரை - பொற்றாமரைப்பூ ; "எரியகைந் தன்ன வேடி றாமரை, சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி" (பொருந. க௫௯ - ௬0); "பைம் பொற் றாமரை பாணர்ச் சூட்டி" பதிற். ௪௮.

க௪ - ௫. புறநா. கக: கக - எ ஆம்அடிகளின்குறிப்பைப் பார்க்க.

(பி-ம்.)—1 'றெடிய' 2 'யாகஃடுண்டென', 'யாறுஃடுண' 3 'மறவுமுண டெனப்', 'புறவுமீதலு' 4 'புகுரீங்கிரு' 5 'ஈங்கிருந்தீமே', 'இருந்தீரேமுது'

---

## புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

௬௩எ

(௩௨௦.) முன்றின் முஞ்ஞையொடு முசுண்டை பம்பிப்
பந்தர் வேண்டாப் பலர்தூங்கு நீழற்
கைம்மான் வேட்டுவன் கனைதுயின் மடிந்தெனப்
பார்வை மடப்பிணை தழீஇப் பிறிதோர்
தீர்தொழிற் றனிக்கலை [1] திளைத்துவிளை யாட
வின்புறு [2] புணர்நிலை கண்ட மனையோள்
கணவ னெழுதலு மஞ்சிக் கலையே
பிணைவயிற் றீர்தலு மஞ்சி யாவது
மில்வழுங் காமையிற் கல்லென வொலித்து
மானதட் பெய்த வுணங்குதினை வல்சி
கானக் கோழியோ டிதல்கவர்ந் துண்டென
வார நெருப்பி னார னாறத்
தடிவார்ந் திட்ட முழுவள் ளூர
மிரும்பே ரொக்கலொ டொருங்கினி தருந்தித்
தங்கினை சென்மோ பாண தங்காது
வேந்துதரு விழுக்கூழ் பரிசிலர்க் கென்று

---

௧. முஞ்ஞை - முன்னை. முசுண்டை - முசுட்டைக்கொடி. பம்பி - பரவி.

௩. கைம்மான் வேட்டுவன் - யானைவேட்டையாடுபவன்; "ஆனைவேட்டுவ னானையும் பெறுமே" (புறநா. ௨௧௪: ௪.) கனை - மிகுதி. துயின் மடிந்தென - தூங்க.

௪. பார்வை - பார்வை மிருகம்;

மிருகங்களைவேட்டையிலகப்படுத்துவதற் காக
வளர்த்துப்பழக்கஞ்செய்யப்படுவது (பெரிய.கண்ணப்ப. ௬.) பிணையை.

௫. தொழில் தீர்ந்த ஆண்மான்.௯. மான்களின் சேர்க்கையை.

௯ - ௬. கணவனெழுதற்கும் கலை பிணையினின்றும் தீர்தற்குமஞ்சி மனையோள் புடைபெயர்ந்து நடவாமையால், ஒலித்தல், கானக்கோழிமுதலியவற்றின் றொழில்.

க0. மான்றோலிலுலர்த்திய தினையாகிய உணவை.

கக. இதல் - ஒருவகைப்பறவை; புறநா. ௩கக:
௯-ஆம்அடிக்குறிப்பைப் பார்க்க.

கஉ. ஆரம் . சந்தனம். ஆரல் - ஒருவகைமீன்.

க௩. தடிவு - தடிதல்; அறுத்தல். தடி - துண்டமுமாம்.
வள்ளூரம் - இறைச்சி ; "முழூஉவள்ளூரம்" புறநா. உ௩௯: உ.

க௪. கரியபெரிய சுற்றத்தாருடன் ஒருங்குண்டு.

க௫. தங்கிச்செல.

க௬. சூழ் - பொருள்; "படைகுடி கூழமைச்சு" குறள், ௩௮க.

(பி - ம்.)—1 'தினைத்து விளையாட' 2 'புணரா நிலை'

## ௩௯அ புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

மருகா றியும் வன்மை
1 புரைசா லெனபெர்தகை யோம்பு மூரே.
திணையும் துறையும் அவை.
வீரைவெளியனார்.

(௩௨௦

௧௮. உரை - புகழ். (௧௮) ஊர்க்குச் (௧௫) செல்.

(பி - ம்.)—1 'உரை சொல்'

---

(௩௨௧.) பொரிப்புறப் பூழின் போர்வல் [1] சேவன்
மேந்தோல் களைந்த தீங்கொள் வெள்ளெட்
[2] சுளகிடை யுணங்கற் செவ்வி [3] கொண்டுடன்
வேனிற் [4] கோங்கின் பூம்பொகுட் டன்ன
குடந்தையஞ் செவிய கோட்டெலி யாட்டக்
கலியார் வரகின் பிறங்குபீ ளொளிக்கும்
வன்புல வைப்பி னதுவே சென்று
தின்பழம் பசீஇ.............னஞே பாண
வாள்வடு விளங்கிய சென்னிச்
செருவெங் குருசி லோம்பு மூரே.

திணையும் துறையும் அவை.

உறையூர் மருத்துவன் தாமோதரனார்.

(௩௨௧

---

௧. பொரி - புள்ளி. பூழ் - குறும்பூழ்ப்பறவை.

௨. மேக்தோல - மேலேயுள்ளதோல். வெள்ளெள் - வெள்ளைநிறமுள்ள ஒருவகை எள்.

௩. உணங்கல் - உலருகின்ற வெள்ளெள்ளை; செவ்வியுணங்கலை.

கொண்டு உடன்.

௪. செய்யுளிடத்து, காலத்தை அடையாக அடுத்துவருமொழி இன, தைக்காட்டாததற்கு மேற்கோள்; நன்-மயிலை. சூ. ௪௱: நன்-வி. சூ. ௪௦௪ இ - வி. சூ. ௬௪௨ - உரை.

௫. குடந்தை - வளைவு; "குடந்தையஞ் செவிய கோட்பவ ரொடுங்கி" அகநா. ௨௮௪. கோடு - கரை. ஆட்ட - அலைத்தற்கு. சேவல் எலியை அலைக்க

௬. பீர் - கரு. வரகின் பீளிற் சேவல் ஒளிக்கும்; பீளென்றது கதிர்ப் போரை.

௧௦. செருவெங் குருசில் - போரை விரும்புதலையுடைய தலைவன்.

(பி - ம்.)—1 'செலவன' 2'களகிடை' 3'கொண்டெண'4 'வெளிதகொண் டெண'

---

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

சஅ௯

(௬௨௨.) 1 உழுதூர் காளை யூழ்கோ டன்ன
கவைமுட் கள்ளிப் பொரியரைப் பொருந்திப்
புதுவா கரிகாற் கருப்பை பார்க்கும்
புன்றலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பிற்
பெருங்கட் குறுமுயல் கருங்கல னுடைய
2 மன்றிற் பாயும் வன்புலத் ததுவே
கரும்பி னெந்திரஞ் சிலைப்பி 3 னயல
திருஞ்சுவல் வாளை பிறழு மாங்கண்

டண்பணை யாளும் வேந்தர்க்குக்

௧௦ கண்படை யீயா வேலோ னூரே.

திணையும் துறையும் அவை.

ஆலூர்கிழார்.

(௩௨௨)

---

௧. காளையின் செவ்வியழிந்த கொம்பையொத்த.

௨. பொருந்தியவர் சிறார்.

௧-௨. கள்ளியின் முள்ளுக்குக் கோடு உவமை; "குன்றைக் கோட்ட குறு முட் கள்ளி" அகநா. ௧௮௪: அ.

௩. வரகு அரிகால் - வரகம்பயிரின் அரிந்த தாள். கருப்பை - எலியை; "வேலிக்கருப்பை பார்க்கும்" புறநா. ௩௨௪: எ.

௩ - ௪. எய்தசிறார் முழங்குவாராயின்.

௫. முயல், எழுவாய். கருங்கலன் - மண்ணாற் செய்யப்பட்ட அழிசிற் பாண்டம்.

௪- ௬. "தாமயிர்க் குறுந்தா ணெடுஞ் செவிக் குறுமுயல், புன்றலைச் சிறு அர்மன்றத் தார்ப்பிற், படப்பொடுங் கும்மே" புறநா. ௩௩௪ : ௨ - ௪.

எ. எந்திரம் - ஆலை, "கரும்பி னெந்திரம்" ஐங்குறு. ௫௫.

அ. சுவல் - பிடர். ௯. தண்பணை - மருதநிலத்தைச்சார்ந்த ஊர்கள்.

(௧௦) ஊர் (௬) வன்புலத்ததுவே.

(பி - ம்.)—1 'உழுதூர்க்காளை' 2 'முனறினறபாயும்' 3 'அயலினிருஞ்சு வலி...யானை பிறழுமாங்கட்'

---

(௩௨௩.) புலிப்பாற் 1 பட்ட வாமான் குழவிக்குச்

சினங்கழி மூதாக் கன்றுமடுத் தூட்டுங்

கா..........................................க்

க, புலியினிடத்தே அகப்பட்ட ஆமானினது கன்றிறுக்கு.

உ. மூதா - முதியபசு. மடுத்து - சேர்த்து.

(பி - ம்.)—1 'பட்ட விரமான்'

## சச0 புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

குள்ளியது சுரக்கு மோம்பா வீகை
ரு வெள்வே 1 லாவ மாயி னொள்வாள்
கறையடி யானைக் கல்ல
துறைகழிப் பறியா வேலோ னூரே.

.......................................................

...............................டார்கிழார்.

(கூ உ0

ச. சுரக்கும் - இடைவிடாமலளிக்கும்.

ரு - எ. 'பெயர்நிலைக் கிளவியி னாஅ குநவும்' என்பதற்குத் தத்தம்பொருணர்த்தாது பெயர்ந்த நிலைமையையுடைய சொல்லான் வருஞ்செய்யுமெனப் பொருள்கூறி, "ஒள்வாட்......வேலோனூரே" என்புழி, வேலோனெ பது வேலையுடையோனென்னும் பொருள் பெயர்ந்து ஒருபெயர்த்தன்மையா நின்றது" என்பர்; தொல். எச்ச. சூ. ருரு - ந; இ - வி. சூ. கூஎ0-உரை.

(பி - ம்.)— 1' ஆப

(௩௨௪.) வெருக்குவிடை யன்ன [1] வெகுளோக்குக் கயந்தலைப்

புள்ளூன் றின்ற புலவுநாறு கயவாய்
வெள்வாய் [2] வேட்டுவர் வீழ்துணை மகாஅர்
சிறியிலை [3] யுடையின் சுரையுடை வான்மு
௫ ளூக நுண்கோற் செறித்த வம்பின்
வலாஅர் வல்விற் [4] குலாவரக் கோலிப்
பருத்தி [5] வேலிக் கருப்பை பார்க்கும்

---

க. வெருக்குவிடை - காட்டுப்பூனையின் ஆண். கயந்தலை - மெலியதலை வெருகினை விடையென்று கூறுவதற்கு இவ்வடிமேற்கோள்; தொல். மரபு. ௬௮. பேர்.

உ. கயவாய் - மெலியவாய். உ - ௩. கயவாய்மகார்.

௪. சிறியஇலைகளையுடைய உடைமரத்தின் உட்டுளையுடைய வெள்ளி முள்ளை; "உடையிலை நடுவண திடைபிறக் கின்றித், தாமேயாண்ட" புறநா. ௩௬௩: உ - ௩.

௫. ஊகநுண்கோல - ஊகம்புல்லின் ஈர்க்கில.

௪ - ௫. உடைமுள்ளை ஊகங்கோலிற் கோத்த அம்பினை உடையராய்.

௬. வலார் - வளார்; மலாரெனவழங்கும். குலாவர - வளைய.

எ. தொல். எச்ச. ௬. கஎ - ந. மேற்.

௩ - எ. "ஆர்காரின் திண்கயிற்று லமைச்சிறுகோல் வளைத்தவில்லுங், கூ

வாய்முண் ணுனிபதித்த கோற்கோலுங் கைக்கொண்டு, கார்மேனி மைந்தரொ( கான்புகுந்து கொடுவிலங்கி, னேர்வாய்மென் 'குருளைபல வெய்தல் செய்தாக

(பி - ம்.)—1 'வெருந்ணைக்குக்' 2 'வேட்டுவன்'3 'உடையினை சுரையடை வானஞ்சுறுண்கோற்' 4 'குலா புறக்' 5 'வேலி கரு பலிப்பார்க்கும்'



புன்புலர் தழீஇய வங்குடிச் சீறூர்க்
குமிழுண் வெள்ளை [1] பகுவாய் பெயர்த்த
[2] வெண்காழ் [3] தாய [4] வண்காற் பந்த
ரிடையன் பொத்திய சிறுதீ விளக்கத்துப்
பாணரொ டிருந்த நாணுடை நெடுந்தகை
வலம்படு தானை வேந்தற்
குலந்துழி யுலக்கு நெஞ்சறி துணையே.*

திணையும் துறையும் அவை.

ஆலத்தூர்கிழார்.

(௩௨௪)

---

விளையாட்டால்" (சீகாளத்திப். கண்ணப்ப. உக) என்பது இவ்வடிகளின் பொருளை ஒருவாறு தழுவிவந்திருத்தல காண்க.

எ - அ. "பருத்திவேலிச் சீறூர்" புறநா. உகக: க.

க. குமிழுண் வெள்ளை - குமிழம்பழத்தை உண்ணும் வெள்ளாடு.

௧0. காழ் - கொட்டை. தாய - பரந்த. பந்தரின்கீழ்.

கக. இடையன்:(புறநா. ௩௩க: ச - ரு.) பொத்திய - மூட்டிய.

கஉ. நாண் - மானம். கச. உலக்கும் - இறக்கும்.

(கஉ) நெடுந்தகை (கச) துணை.

* மு. வேந்தர்க்குத் துணையாகச் செல்வோரைக் கூறியதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ரு - ந.

(பி - ம்.)—1 'மதுவாய்', 'மருகுவாய்','மறுவாய்' 2 'வெண்காழ்ப்பத்தரிடை' 3 'காய' 4 'வன்காழ்ப்பந்தர்'

---

(௩௨௫.) களிறுநீ றாடிய விடுநில மருங்கின்
வம்பப் பெரும்பெயல் வரைந்துசொரிந் திறந்தெனக்
குழிகொள் சின்னீர் குராஅ லுண்டலிற்
சேறு கிளைத்திட்ட கலுழ்கண் ணூறன்
முறையி னுண்ணு நிறையா வாழ்க்கை

---

க. நீறு - புழுதி ; "நீறடங்கு தெரு" (சிறுபாண். உ0க); "கரம்பைப் படுநீறாடி" பெரும்பாண். கூரு.

உ. வம்பப்பெரும் பெயல்-புதியமழை; "வம்ப மாரியைக் காரென மதித் தே" (குறுந். கசுசு.) இறந்தென - போக.

ந. குரால் - ஒருவகைப்பசு; கோட்டானுமாம்.

ச. சேற்றைத் தோண்டுதலாலுண்டாகிய கலங்கியவூறல்நீரை ; "மணற் கிளைக்க நீரூறும்" திருவள்ளுவமாலை, நக.

ரு. "வண்முறையூட்டும்" புறநா : நநக : அ.

1 முளவுமாத் தொலைச்சிய முழுச்சொ லாடவ
ருடும்பிழு தறுத்த 2 வொடுங்காழ்ப் படலைச்
சீறின் முன்றிற் கூறுசெய் திடுமோர்
கொள்ளி வைத்த கொழுநிண நாற்ற
மறுகுடன் கமழு மதுகை மன்றத்
தலந்தலை யிரத்தி 3 யலங்குபடு நீழற்
கயந்தலைச் சிறாஅர் கணைவிளை யாடு
4 மருமிளை யிருக்கை யதுவே வெண்வேல்
வேந்துதலை வரினுந் தாங்குந்
தாங்கா வீகை நெடுந்தகை யூரே.

திணையும் துறையும் அவை.

உறையூர் முதுகண்ணன்சாத்தனார்.

(கஉரு

---

க. முளவுமா - முள்ளம்பன்றியை; தொலைச்சிய - கொன்ற; "முளவுமா வல்சி" (ஐங்குறு: கஙச), "முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை' மலைபடு. கஎக.

ச - க. "கல்லறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல், வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவலி" புறநா. கஙக: க - உ.

எ. உடும்பிழுது - உடும்பினது நிணத்தை; "உடும்பின் விழுக்கு நிணம்"

(புறநா. ௩௨௬: ௯ - ௧௦.) அறுத்த உடும்பிழுதையென்க ; ஒடுங்காழ்ப்படலை-

ஒடுமரத்தின் கழிகளாலாகிய கட்டுக்கதவு ; படலுமாம். மரம் ; "ஒடுமரக்கிளவி" தொல். உயிர். ரு. ௬௦.

ஒடு - ஒருவகை

அ. முன்றிலில். கூறுசெய்திடுமார்-பிறர்க்குப் பகுத்துக் கொடுப்பாராய்.

௧௦. மன்றத்து - பொதுவிடத்துள்ள.

௯-௧௦. "நெய்க்கறைக் கொளீஇய, மங்குன் மாப்புகை,மறுகுடன் கமழும்" புறநா. ௩௨௧: ௩ - ௪.

௧௧. அலந்தலை: "அலந்தலைமராமும்" (சிலப். ௧௧: எரு.) இரத்தி- இத்தி மரம் ; இலந்தையுமாம் ; அலங்குதல - அசைதல். நீழலில்.

௧௦ - ௧௧. "இரத்தி நீடியவகன்றலை மன்றம்" புறநா. ௩௪: ௧௨.

௧௨. வேட்டுவர்: புறநா. ௩௨௪: ௧ - எ.

௧௩. பிணா - காவற்காடு ; புறநா. ௩௨௬: எ.

௧௪. அரசன் தன்னிடத்தே வந்தாலும் தாங்குதற்குரிய.

௧௪ - ரு. "வரகுகடனிரக்கு நெடுந்தகை, யரசவரிற்றுங்கும் வல்லாளன் னே" புறநா. ௩௨எ: எ - அ.

(௧ரு) ஊர் (௧௩) இருக்கையது.

(பி - ம்.)—1 முழவுமா தொலைச்சிய' 2 'கொடுங்காழ்', 'தொடுங்காழ்' 3 'இலங்குபடு' 4 'அருமுனை'

(௩௨௬.) ஊர்முது வேலிப் பார்நடை வெருகி
னிருட்பகை வெரீஇய நாகிளம் பேடை
யுயிர்நடுக் குற்றுப் [1] புலாவிட் டரற்றச்
சிறையுஞ் செற்றையும் புடையுந ளெழுந்த
பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்துக்
[2] கவிர்ப்பூ நெற்றிச் சேவலிற் [3] றணியு
[4] மருமிளை யிருக்கை யதுவே மனைவியும்
வேட்டச் சிறாஅர் சேட்புலம் படராது
[5] படமடைக் கொண்ட குறுந்தா ளுடும்பின்
விழுக்குநிணம் பெய்த தயிர்க்கண் விதவை
யாணர் நல்லவை பாணரொ டோராங்கு
வருவிருந் தயரும் விருப்பினள் கிழவனு

---

க. வேலியைச் சார்ந்துள்ள காட்டுப்பூனையால; பார் நடை வெருகு-தான் கவர்ந்துகொள்ளுதற்குரிய கோழிமுதலியவற்றைப் பார்த்து மெல்ல நடத்தலையுடையவெருகு; "வெவ்வாய் வெருகினைப்பூசை யென்றலும்" (தொல். மரபு. சூ. சுஅ) என்பதையும், 'படப்பை வேலியும் புதலும்பற்றி விடக்கிற்கு வேற்றுயிர்கொள்ளும் வெருகு' என்னும் அதன் பேராசிரியருரையையும் பார்க்க.

க - உ. வெருகாகிய பகைக்கு அஞ்சிய கோழிப்பேடை, எழுவாய்.

௩. புலா - புலாவை ; வாயிலுள்ள தசையை அகிநா. எக: கச.

௪. சிறை - பக்கம். செற்றை - சிறுதூறு ; "செற்றைவாயில்" (பெரும் பாண். கசசு.) புடையுநள் - அடித்துத் தாக்கலையுடையளாய்.

௫. பருத்திப்பெண்டின்-பருத்திநூற்கும் மங்கையின்; "பருத்திப் பெண்டின்பனுவலன்ன" (புறநா. கஉ௫: க.) விளக்கத்தாற்காணப்பட்ட.

௬. கவிர்ப்பூ - முள்ளுமுருங்கைப்பூ. சேவலின் - ஆண்கோழிபோல; "கவிரலர் பூத்தசென்னி வாரணம்" (கல். பாயிரம். உ.) தணியும்-நீங்கும்.

(உ) கோழிப்பேடை (௬) அங்கடுக்கந்தணியும்.

எ. "அருமிளையிருக்கையதுவே" புறநா. ௩உ௫: ௩.

அ. சேட்புலம் - நெடுந் தூரமாகிய இடம்.

௧௦. விழுக்காகியபிணம்; விழுங்குதற்குரியபிணமுமாம்; "விழுக்கொடு வெண்ணஞ்சு" (சீவக. க௫அச.) விதவை - கூழ்.

௬ - ௧௦ : பெரும்பாண். க௩உ - ௩.

கக. யாணர்-புதிது. கல்லவை - கலல உணவுகளை. ஒராங்கு-ஒருபடியாக.

௧உ. கிழவன் - தலைவன்.

௬-கக. "உடும் பிழுதறுத்தவொடுங்காழ்ப்படலைச், சீறின் முன்றிற் கூறு செய்திடுமார், கொள்ளிவைத்த கொழுநிணநாற்றம்" புறநா. ௩உ௫: எ - ௬.

(எ) மனைவியும் (௧உ) விருப்பினள்.

(பி - ம்.)—1 'புலா விட்டியாற்றச் முனை' 5 'படபடைக்கொண்ட' 2 'கதிர்ப்பூ' 3 'தணிவும்' 4 'அரு

மருஞ்சமங் ததையத் தாக்கிப் பெருஞ்சமத்

தண்ணல் யானை யணிந்த

கரு பொன்செ யோடைப் பெரும்பரி சிலனே.

**திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.**

**1 தண்காற் பூட்கொல்லனார்.** (௩௨௬

௩. ததைய - சிதைய; "அருஞ்சமஞ்சிதையத்தாக்கி (புறநா. ௭௨: ௮) "ததைந்த காஞ்சியொடு" பதிற். ௨௩: ௧௧.

௫. ஓடை - நெற்றிப்பட்டம். ௧௪ - ௫. புறநா. ௩௩௪: ௮ - ௧௦.

(பி - ம்.)—1 'தண் காற்......பொற கொலலனார், 'முடக்கொல்லனார்' 'தங்கான்முட கோலலரை', 'தங்கால தாட கோவலனார்'

---

(௩௨௭.) எருது காலுறாஅ திளைஞர் கொன்ற

1 சில்வினை வரகின் புல்லென் குப்பை

தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்

பசித்த பாண 2 ருண்டுகடை தப்பலி

௫ னொக்க லொற்கஞ் சொலியத் தன்னூர்ச்

சிறுபுல் லாளர் முகத்தவை கூறி

3 வரகுகட னிரக்கு நெடுந்தகை

யரசுவரிற் றுங்கும் வல்லா ளன்னே.*

**திணையும் துறையும் அவை.**

.......................................

(௩௨௭)

க. கடாவிடுதலின்றி இளைஞரடித்த; "எருதுகாலுறாஅது" என்பது தொல். மொழி. சூ. அ - இளம். மேற்கோள்.

உ. சில்வினை - சிலவாகவிளைந்த. குப்பை - பொலி.

ந. தொடுத்தகடவர்க்கு-தன்னைவளைத்துக்கொண்ட கடன்காரர்களுக்கு; "தொடுத்துணக்கிடப்பினுங் கிடக்கும்" (புறநா. கருசு:ச.) கொடுத்த மிச்சில-கொடுத்து மிஞ்சியவரகை.

ச. கடை - வாயில்.

ரு. ஒக்கல ஒற்கம் சொலிய - சுற்றத்தாருடைய வறுமையை ஒழித் தற்கு ; 'ஒற்கம்' என்னு முரிச்சொல வறுமையாகிய குறிப்புணர்த்துவதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. சுச - சே ; ஷை ஷை சுஉ - ந ; இ - வ். சூ. உஅக - உரை.

எ - அ. "வேர்துதலை வரினுக் தாங்குந், தாங்கா வீகை நெடுந்தகை"

புறநா. ருஉரு: கச - ரு.

* மு. வாகைத்திணைத்துறைகளுள், 'புல்லாவாழ்க்கை வல்லாண் பக்கம்' (தொல் புறத்திணை. சூ. கஎ - இளம்) என்பதற்கும், 'அரும்பகை தாங்கு மாற்றல' (ஷை ஷை ஷை உக - ந) என்பதற்கும் மேற்கோள்.

(பி - ம்.)—1 'சில்வினை' 2'உண்டுகண...தலொற்கஞ்' 3'வரகுகடனிர்க்கு'



(ருஉஅ.) ......டைமுதற் புறவு 1 சேர்ந்திருந்த
புன்புலச் சீறூர் செல்வினை யாதே

வரகுந் தினையு முள்ளவை யெல்லா
மிரவன் மாக்களுக் [2] கீயத் தொலைந்தன
.........................டமைந் தனனே
யன்ன ருயினும் [3] பாண நன்றும்
[4] வெள்ளத் திடும்பா லுள்ளுறை தொட......
களவுப் புளியன்ன விளை.....................
...........................வா டேன்கொழுங்குறை
கொய்குர லரிசி யொடு நெய்பெய் தட்டுத்
துடுப்பொடு சிவணிய களிக்கொள் வெண்சோ
றுண்டினி திருந்த பின்.........................
...........................தருகுவன் மாதோ
[5] தாளிமுத னீடிய சிறுநறு முஞ்ஞை
முயல்வந்து கறிக்கு முன்றிற்
சீறூர் மன்னனைப் பாடினை செலினே.

[6] திணையும் துறையும் அவை.

பங்கு.................................. (௩௨அ)

---

க. புறவு - முல்லைநிலம். உ. புன்புலம் - புன்செய்.

௩ - ௪. "வரகுந் தினையு முள்ளவை யெலலா, மிரவன் மாக்க ளுணக் கொளத் தீர்ந்தென" புறநா. ௩௩௩: ௯ - ௧0.

எ. "குடப்பாற் சிலவுறை" புறநா. உ௭௬: ரு.

அ. களவுப்புளி - களாப்பழத்தின் புளிப்பு. ௧0. குரல - கதிர்.

௧௪. தாளி - ஒருவகைக் கொடி. (௧௬) செலின் (௧௩) தருகுவன்.

(பி - ம்.)—1 'சோர்ந்திந்த' 2 'ஈயாதரா...டமைந்த' 3 'மன்ன' 4 'வெள் ளத்திடும்' 5 'தா ழ் முதல' 'இதுவுமது'

(௬௨௯.) இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்
புடைநடு கல்லி னாட்[1] பலி யூட்டி
[2] நன்னீ ராட்டி நெய்ந்நறைக் கொளீஇய

௧. வீட்டிலட்ட கள்ளையுடைய; "இல்லடுகள்ளின்றோப்பி பருகி" பெரும் பாண். ௧௪௨.

௨. நடுகலலிற்கு விடியற்காலப் பலியையூட்டி.

௩. நறை - தூபம்; "நறையும் விரையும்" (குறிஞ்சி. ௭). கொளீஇ - கொளுத்துதலால்; சேர்த்தலால.

(பி - ம்.)—1 'பலியூட்டி நெய்ந்நறை' 2 'நன்னராட்டி'

# ௬௩௦. புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

மங்குன் மாப்புகை மறுகுடன் கமழு
மருமுனை யிருக்கைத் தாயினும் வரிமிடற்
றரவுறை புற்றத் தற்றே நாளும்
புரவலர் புன்க ணோக்கா திரவலர்க்
கருகா தீயும் வண்மை
யுரைசா னெடுந்தகை யோம்பு மூரே.*

திணையும் துறையும் அவை.

மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார்.

(௩௨௯)

௪. மங்குல் - மேகம். உடன் - ஒருங்கு.

௫. முனை - முதன்மை. ஊர் இருக்கையை யுடையதாயினும்.

௬. அரவுறையும் புற்றைப்போலவது ஊர்; "நல்லாரவுறையும் புற்றம் போல" (புறநா. ௩0௯: ௩.) ஊர் அணுகுதற்கரியதென்றபடி.

௭ - ௯. 1௦. புறநா. ௩௨0: ௧௬ - அ; ௩௭௭: அ.

* 1௦. கல்நட்டுக் காலகொண்டதற்கு மேற்கோள்; தொல்.

புறத்திணை. ௬. ௫ - ௩.

(௩௩0) வேந்துடைத் தானை முனைகெட நெரிதர
வேந்து[1] வாள் வலத்த னொருவ னாகித்
தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற்
காழி யனையன் மாதோ வென்றும்
௫ பாடிச் சென்றோர்க் கன்றியும் வாரிப்
புரவிற் காற்றாச் சீறூர்த்
தொன்மை [2]சுட்டிய வண்மை யோனே.*

திணையும் துறையும் அவை.

மதுரைக்கணக்காயனார்.

(௩௩0)

---

௧. முனை - சண்டை. நெரிதர - நெரிய.

௩. அப்பகைவர் சேனையானது தன்னைக் கடந்துவாராதபடி தடுத்தலால்.

௪. ஆழி - கரை. ௩ - ௪. குறள், ௬௮௬, பரிமேல். மேற்.

௫. வாரி - வருவாய்.

௬. புரவு - இறையிலிநிலம்; புறநா. ௨௬: ௬; ௩௭௬: ௬.

* ழ. வஞ்சித் திணைத்துறைகளுள், "வருவிசைப்புனலைக் கற்சிறைபோல ஒருவன்றாங்கிய பெருமை' என்பதற்கு எ - இளம்; ஷை ஷை ஷை அ - ந. மேற்கோள்; தொல். புறத்திணை. ரு

(பி - ம்.)—1 'வாள் வல்லத்தன்', 'வல்லத்தன்' 2 'குடியவன்மை'

---

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.



(௩௩௧.) கல்லறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல்
வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவலி
நனிநல் கூர்ந்தன னாயினும் பனிமிகப்
புல்லென் மாலைச் சிறுதீ ஞெலியுங்
கல்லா விடையன் போலக் குறிப்பி
னில்லது படைக்கவும் வல்ல னுள்ளது
தவச்சிறி தாயினும் மிகப்பல ரென்னா
[1] னிணெடும் பந்த ரூண்முறை யூட்டு
மிற்பொலி மகடூஉப் போலச் சிற்சில
வரிசையி னளிக்கவும் வல்ல னுரிதினிற்

காவன் மன்னர் கடைமுகத் துகுக்கும்
போகுபலி வெண்சோறு போலத்
2 தூவவும் வல்லனவன் றூவுங் காலே.

திணையும் துறையும் அவை.

3 உறையூர் முதுகூத்தனுர்.

(௩௩௧)

---

க. இயற்றியவல்லுவர்க்கூவல் - கிணறு ; "வல்லூற் றுவரி தோண்டி" (பெரும்பாண். ௬௭ - அ) ; "குடம்புகாக் கூவற் கொடுங்கானம்" சிலப். உக: காவற்பெண்டுசொல்.

உ. விற்போராகிய உழவுத் தொழிலால் வாழும் வாழ்க்கையையுடைய தலைவன்; "வில்லுழுதுண்மார்" (புறநா. ௧௭0.) மதவென்பது வலியை யுணர்த் துவதோ ருரிச்சொல; மதவலி - மிக்க வன்மையையுடைய தலைவன்; "மதவலி விடுப்பவேகி" சீவக. உ0௪.

௩. மிகவறுமையையுற்றுனாயினும். ௪. ஞெலியும் - கடையும்.

௪-௫. "இடையன் பொத்திய சிறுதீவிளக்கத்து". (புறநா. ௩உ௪: கக.) "இடையன்......ஞெலிகோற்கொண்ட பெருவிறல் ஞெகிழிச் செந்தீ" பெரும் பாண். ௬௫ - அ.

அ. பற்றில. முறை - வரிசை ; "முறையினுண்ணு நிறையாவாழ்க்கை" புறநா. ௩உ௫: ௬.

௬. மகடூஉ - மனைவி ; புறநா. ௩௩௩: அ.

௬-௯. "குடநீ ரட்டுண்ணு மிடுக்கட் பொழுதும்,கடனீர றவுண்ணுங் கேளிர் வரினும், கடனீர்மை கையாறுக் கொள்ளு மடமொழி, மாதர் மனைமாட்சி யாள்" நாலடி. ௩௮உ.

கூ - கங. புறநா. ஙஙச: எ - கக.

(பி - ம்.)—1 'நீணெடுபெர்தருண்' 2 'தாடவும்' 3 'உறையூர்முதுகூத்தன்'

---



(ஙஙஉ.) பிறர்வேல் போலா தாகி யிவ்வூர்
மறவன் வேலோ பெருந்தகை யுடைத்தே
[1] யிரும்புற நீறு மாடிக் கலந்திடைக்
[2] குரம்பைக் கூரைக் கிடக்கினுங் கிடக்கு
மங்கல மகளிரொடு மாலை [3] சூட்டி
யின்குர [4] லிரும்பை யாழொடு ததும்பத்
தெண்ணீர்ப் படிவினுந் தெருவினுந் திரிந்து
மண்முழு தழுங்கச் [5] செல்லினுஞ் [6] செல்லுமாங்
கிருங்கடற் றானை வேந்தர்
பெருங்களிற்று முகத்தினுஞ் செலவா னதே.*

திணையும் துறையும் அவை.

[7] விரியூர் நக்கனர்.

(ஙஙஉ.)

---

க. நீறு - புழுதி. உ. குரம்பை - சிறுகுடிலின்.

௬. குரல் - மகளிர்இசை. இரும்பை - பெரியபை; யாழுறை. ததும்ப - ஒலிக்க.

எ. படு - மடு. க0. செலவுஆனாது - செல்லுதல்தவிராது.

* ரு. பாடாண்டிணைத் துறைகளுள், 'மாணார்ச்சுட்டியவாண்மங்கலம்' என்பதற்கு இதனைமேற்கோள்காட்டினர் இளம்பூரணர் (தொல். புறத்திணை கூ-௩0); உழிஞைத்திணைத்துறைகளுள் 'வென்றவாளின்மண்ணல்' என்பதற்கு "ஒன்றெனமுடித்தலான் இருவர்வேற்குஞ் சிறப்பான்மை மண்ணுதல கொள்க" என விசேடவுரைகூறி இதனை மேற்கோள் காட்டினர் நச்சினார்க்கினியர்; ஷை ஷை கூ. க௩.

(பி - ம்.)—1 'இரும்புக நீருமாடிக் கலத்திடை' 2 'குரம்பைக் கூனராக் கினுங் கிடக்கு' 3'குடி' 4'இகும்பை யாமெடுத்தியம்ப', 'இரும்பெயர்' 5'சொல் லினுஞ்' 6'செல்லுங்கண்ணுமின்', செலவுமமர்க்குகடற்றனே' 7'விரியூகநக்கனார்'

---

(௩௩௩.) நீருட் பட்ட மாரிப் பேருறை
மொக்கு ளன்ன பொகுட்டுவிழிக் கண்ண
கரும்பிடர்த் தலைய பெருஞ்செவிக் குறுமுய
லுள்ளூர்க் குறும்புதற் றுள்ளுவன வுகளுந்

---

க. உறை - துளி. உ. மொக்குள் - சேற்றிலெழுந்த கொப்புளம்.

௩. "நெடுஞ்செவிக் குறுமுயல்" புறநா. ௩௩௪: உ; ௩௩௯: ௪.

க - ௩. "சிறியிலை நெல்லிக் காழ்கண் டன்ன, குருவிழிக்கண்ண கூரலங் குறுமுயல்" அகநா. உ௮௪: க-உ.

௪. புதல் - புதரில்.

தொள்ளை மன்றத் தாங்கட் படரி
னுண்கென வுணரா வுயவிற் றுயினுந்
[1] தங்கினிர் சென்மோ புலவிர் நன்றுஞ்
சென்றதற் கொண்டு மனையோள் விரும்பி
வாருந் தினையு முள்ளவை யெல்லா
மிரவன் மாக்க ளுணக்கொளத் தீர்ந்தெனக்
குறித்துமா றெதிர்ப்பை பெறாஅ மையிற்
குரலுணங்கு விதைத்தினை யுரல்வாய்ப் பெய்து
சிறிது [2] புறப்பட்டன் றோவில டன்னூர்
வேட்டக் குடிதொறுங் கூட்டு...............
............................... [3] உடும்புசெய்
பாணி நெடுந்தேர் [4] வல்லரோ ரோ
வம்பணி யானை வேந்துதலை வரினு

---

ரு. தொள்ளை - துவாரம்; மன்றம் - இரவலர் தங்குதற்குரியது.

சு. உயவு - வருத்தம்.

எ. சென்மோ - செல்லும்; செல்லுமென்னுமேவற்பன்மை உயிர்கெட்டு ஓகாரம்பெற்றுவந்தது; "வருங்குலங் கேண்மோ" (மணி. கங: கங) என்றாற் போல.

அ. மனையோள் - தலைவி (புறநா. ஙஙக: அ; ஙஙச: ரு.)

சென்றதற் கொண்டு - வந்ததனால்.

கo. தீர்ந்தென - தீர்ந்தனவாக. குறித்துமாறெதிர்ப்பை - குறியெதிர்ப்பை: "குறியெதிர்ப்பையாவது அளவுகுறித்து வாங்கி அவ்வாங்கியவாறே எதிர்கொடுப்பது" என்பர் (குறள், உஉக - பரிமேல்); "கூற்றுங், குறியெதிர்ப்பை கொள்ளுந் தகைமைத்தே......களிறு" முத்தொள்ளாயிரம்.

கூ - கo. "வரகுந் தினையு முள்ளவை யெல்லா, மிரவன்மாக்களுக் கீயத் தொலைந்தன" புறநா. ௩உஅ: ௩ - ௪.

அ - க௩. "இலைது படைக்கவும் வல்ல னுள்ளது, தவச்சிறி தாயினு மிகப்பல ரென்னு, ணீநெடும் பந்த ரூண்முறை யூட்டு, மிற்பொலி மகடேப் போலச் சிற் சில,வரிசையி னளிக்கவும் வல்லன்", "மனையோள், பாணரார்த்தவும் பரிசில ரோம்பவு, மூனொலி யரவமொடு கைதூவாளே" புறநா. ௩௩க: ௬ - கo; ௩௩௪: ௫ - எ.

க௪. வேட்டக்குடி - வேட்டுவர் வீடு.

க௫ - ௬. உடும்புசெய்பாணி - உடும்புத்தோலாற் செய்த கைச்சரடு.

கஎ. வம்பு - கச்சு.

(பி - ம்.)—1 'தங்கி நீர்' 2 'புறப்படனறோவிலனே' 3 'உழு மைபு செய்' 4 'வலவரோரே'

57

# ௪௫o புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

முன்பது மன்னு மதுவே
பரிசில் மன்னுங் குரிசில்கொண் டதுவே.

திணையும் துறையும் அவை.

(௩௩௩)

......................................

கக. கொண்டது பரிசில் - பகைவரோடு போர்செய்ததற்காக அரசரிடம் பெற்றபொருளே பாணர்முதலியோர்க்கு அவன் கொடுக்கும் பரிசிலாகும்.

---

(௩௩௪.) காமரு பழனக் கண்பி னன்ன
'தூம்பிர்க் குறுந்தா ணெடுஞ்செவிக் குறுமுயல்
புன்றலைச் சிறூஅர் மன்றத் தார்ப்பிற்
படப்பொடுங் கும்மே.........பின்பு.........
.........................னூரே [1]மனையோள்
பாண ரார்த்தவும் பரிசில [2]ரோம்பவு
மூணொலி யரவமொடு [3]கைதூ வாளே
யுயர்மருப் பியானைப் புகர்முகத் தணிந்த
பொலம்.................... ............ப்
[4] பரிசில் பரிசிலர்க் கீய
வுரவுவேற் காளையுங் கைதூ வானே.

திணையும் துறையும் அவை.

மதுரைத் தமிழக்கூத்தனார். (௩௩௪)

---

க. கண்பு-ஒருவகைக் கோரை; "கண்பின், புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்" (பெரும்பாண். ௨௨௦-௨௧), "களிறுமாய் செருந்தியொடு கண்பமன் றூர்தர" (மதுரை. ௧௭௨), "கண்பமல் பழனங் கமழ" (மலைபடு. ௪௫௪), "கண்பகத்தின் வாரணமே" தே. திருஞா. தோணிபுரம், "வண்டரங்க" ௩.

உ. புறநா. ௩௩௩: ௩.

௪. படப்பு - படப்பை; வைக்கோற்போர்.

௩ - ௪. "புன்றலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பிற்......மன்றிற் பாயும் வன்புலத் ததுவே" புறநா. ௩௨௨ : ௪ - ௬.

௬. ஆர்த்த-நிறைய உண்பிக்க; "எதிலா ராரத் தமர்பசிப்பர்" குறள், ௮௩௭.

௭. ஊழெலியரவம்-ஊறுலுண்டாகிய ஆரவாரம்; "புள்ளிமிழ்ந் தன்ன வூழெலியரவம்" (புறநா. ௧௭௩ :௩-௪.) கைதூவாள் - கையொழியாள்; "கள் ளுண வாட்டியும் கைதூவாளே" புறத்திரட்டிற்கண்டது இது.

(௫) மனையோள் (௭) கைதூவாள். ௧௧. காளை - தலைவன்.

௮ - ௧௧. "அண்ணல்யானை யணிந்த, பொன்செ யோடைப் பெரும்பரி சிலனே" புறநா. ௩௨௧: ௧௪- ௫.

(பி - ம்.)—1 'மனையோர்' 2 'ஓம்பும்' 3 'கைத்தூஉவாளே' 4 'பரிசிலர்'

## புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

௩௨௫

(௩௩௫.) அடலருந் துப்பின்.....................

........................குருந்தே முல்லையென்

றிங்கான் கல்லது பூவு மில்லை
கருங்கால் வரகே யிருங்கதிர்த் தினையே
ரு சிறுகொடிக் கொள்ளே பொறிகிள ரவரையொ
டிங்கான் கல்ல துணவு மில்லை
1 துடியன் பாணன் பறையன் கடம்பனென்
றிங்கான் கல்லது குடியு மில்லை

---

க. துப்பு-வலி. ௨. "வன்பாலாற் கருங்கால் வரகின்" புறநா. ௩௮௪: ௨.
எ - அ. "இனிப் பலவயினானும்......முடிபின செய்யுளுளெனவே, சில
வயினான் அஃறிணைவிரவாது உயர்திணையானெண்ணி அஃறிணை முடிபிற்றாகலு
முண்டு, செய்யுளகத்து ; உ - ம் : 'பாணன்......குடியுமில்லை' எனவரும்"
(தொல். கிளவி. சூ. ருக - இளம்); "பலவயினானு மென்றதனாற் சிலவயினாற்
றிணைவிரவாது உயர்திணையானெண்ணி அஃறிணையான் முடிவனகொள்கவென்
பது; உ-ம்: 'பாணன்பறையன்......குடியுமில்லை' எனவரும்" (ஷை ஷை ஷை
ருக - கல்.) "பாணன்......குடியுமில்லை' என......உரையாசிரியர் கூறினார
லெனின், பாணன் முதலாயினாரைக் குடியென்று சுட்டியவழிக் குடிக்கு
ஏற்ற தொகைகொடுத்தல் வழுவன்மையான், அவ்வுரை போலியுரை
யென்க ; குடியென்று சுட்டாதவழிப் பாணன்பறையன்றுடியன் கடம்ப
னென்று அந்நாலவருமல்லது குடியிலலையென்றேயாம்" (ஷை ஷை ஷைருக-
சே); "பாணன்பறையன்......குடியுமில்லையென்றது பாண்குடி பறைக்குடி
யெனக் குடியைச்சுட்டிநிலலாதுபாணன்பறையன் எனப்பால்காட்டி நிற்றலான்
உயர்திணைப்பொருள் நின்று அஃறிணை முடிபு கொண்டனவேயாம்" (ஷை ஷை
ஷை ருக - ந); "பாணன் பறையன்......குடியுமில்லை: என்பது உயர்திணை
அஃறிணையான்முடிந்தது ; இவ்வழு யாண்டு அமைக்கப்படுமோவெனின், அது
வழுவாயினன்றே அமைக்கவேண்டுவது; குடியென்பதனை எல்லாவற்றோடுங்கூட்
டியுரைக்கப்படுதலின் வழாநிலையாமென்க" (நன்.மயிலை. சூ. ௩௭௭); "பாணன்
...குடியுமில்லை: என உயர்திணையெண்ணி அஃறிணை முடிபாயினவாய வழு
யாண்டமைக்கப்படுமெனிற் குடியென்பதனைப் பாணன்முதலானோடும் கூட்டி
யுரைக்கப்படுதலின் வழாநிலையாமென்க" (நன் - வி. சூ. ௩௭௮); "பாணன்...
குடியுமில்லை: எனத் திணை விரவாது உயர்திணையானெண்ணி அஃறிணையான்
முடிந்த இவ்வழு யாண்டமைக்கப்படுமோ வெனின், பாணன் முதலாயினாரைக்
[illegible] தொகைகொடுத்தல் வழுவன்மையான்

குடியென்று சுட்டியவழிக்குடிக்குரிய ... (இ - வி. சூ. உகூஅ - உரை); "மக்கட்சுட் அமைத்தல் யாண்டையதெனக" ... பாணன்......குடியுமில்லை : என் டென்புழி......அங்ஙனமுணர்த்திற்றேல், புழிப்பாணன்முதலியனபோல மக்களென்பது ஆண்டு அஃறிணைச்சொல்லாதல வேண்டும் ; வேண்டவே, 'அஃதலபிறவே' என அஃறிணைச்சுட்டுப்பெயராற் கூறுதி, 'அவரலபிற' என்றல திணைவழுவாய் முடியுமாதலின் அஃதாசிரியர் கருத்தன்றென்றொழிக" தொல். சூத்திரவிருத்தி.

(பி - ம்.)—1 'பாணன் பறையன் றுடியன் கடம்பனென்று'

## சருஉ புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

யொன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
யொளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவி னல்லது
நெல்லுகுத்துப் பரவுங் கடவுளு மிலவே.

திணையும் துறையும் அவை.

1 மாங்குடிகிழார்.

(ஙஙரு)

---

கo. புறநா. ஙoக: கூ-ஆம்அடிக்குறிப்பைப்பார்க்க.

கக - உ. 'பரவுதல்' என்னுமுரிச்சொல் வழுத்துதலாகிய குறிப்புணர்த்தி யதற்குமேற்கோள்; தொல். உரி. சூ. அகூ - சே ; ஷை ஷை அசா - ந; இ - வி. சூ. உஅக - உரை.

(பி - ம்.)—1 'மாறு குடிகிழார்'

(௩௩௬.) வேட்ட வேந்தனும் [1]வெஞ்சினத் தினனே
[2]கடவன கழிப்பிவ டந்தையுஞ் செய்யா
னொளிறுமுகத் தேந்திய வீங்குதொடி மருப்பிற்
களிறு கடிமரஞ் சேரா சேர்ந்த
வொளிறுவேன் மறவரும் [3]வாய்மூழ்த் தனரே
யியவரு மறியாப் பல்லியங் கறங்க
வன்னோ, பெரும்பே துற்றன் [4]றிவ் வருங்கடி மூதூ
ரறனிலள் மன்ற தானே விறன்மலை
வேங்கை வெற்பின் விரிந்த கோங்கின்
முகைவனப் பேந்திய முற்றா விளமுலைத்
தகைவளர்த் தெடுத்த நகையொடு
பகைவளர்த் திருந்தவிப் [5]பண்பி றாயே.

**திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.**

**பரணர்.**

(௩௩௬)

---

௧. வேட்ட - மணஞ்செய்ய விரும்பிய. ௨. கழிப்பு - கழித்தலை.

௧ - ௨. புறநா. ௩௪௬ : ௧ - ௩.

௪. கடிமரம் - காவல்மரம். ௫. மூழ்த்தனர் - மூடினர் ; முகிழ்த்தனர்.

௬. இயவர் - வாச்சியக்காரர்.

௭. பெரும் பேதுற்றன்று - பெரிய மயக்கத்தையடைந்தது.

௮. மன்ற - நிச்சயமாக. ௧௦. முகை - அரும்பு.

௧௧. நகை - மகிழ்ச்சி. (௧௨) தாய் (அ) அறனிலள்.

(பி - ம்.)—1 'பெருஞ்சினத்தனனே' 2 'கெடவனகறிபவிவள்' 3 'வாயு மூழ்த்தனரே' 4 'இலலங் கடிமூதூரறனிலமனற' 'பண்பிற்றுமே'

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

சுடு

(௩௩௭.) 1 ஆர்கலி யினனே சோணுட் டண்ணல்
கவிகை மண்ணுள் செல்வ ராயினும்
வாள்வலத் தொழியப் 2பாடிச் சென்றுஅர்
வாளு கமலர.............................
வீத லாறு விலங்குதொடித் தடக்கைப்
பாரி பறம்பிற் பனிச்சுனை போலக்
காண்டற் கரிய ளாகி மாண்ட
பெண்மை நிறைந்த பொலிவொடு மண்ணிய
துகில்விரி கடுப்ப நுடங்கித் தண்ணென
வகிலார் நறும்புகை யைதுசென் றடங்கிய
கபில 3நெடுநகர்க் கமழு நாற்றமொடு
மனைச்செறிந் தனளே வாணுத லினியே
யற்றன் றாகலிற் றெற்றெனப் போற்றிக்
காய்நெற் கவளந் தீற்றிக் காவுதொறுங்
கடுங்கண் யானை காப்பன ரன்றி
வருத லானுர் வேந்தர் 4தன்னையர்

பொருசமங் கடந்த வுருகெழு நெடுவேற்
குருதி பற்றிய வெருவரு [5]தலையர்
மற்றிவர் மறனு மிற்றாற் றெற்றென
யாரா குவர்கொ ருமே நேரிழை

௧. அண்ணல் - தலைவன். ௫. ஈதல் ஆனு - கொடுத்தல் தவிராத.

௬. "பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்" (௧எ௬) என முன்னும் இச்சுனை பாராட்டப்பட்டுள்ளது.

௨ - ௬. அரசராக இருந்தாலும் போர்செய்தலை யொழித்துப் புகழ்ந்து பாடிக்கொண்டுவருவாராயின், அவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுக்குமியல்பினனென்று பாரியின்கொடைச்சிறப்புக்கூறினர்; புறநா. ௧0௯ - ஆம்பாட்டானும் விளங்கும்.

௬ - எ "பொன்னணி திகிரியஞ் செல்வன்பொற்புடைக், கன்னியமகளிரிற் காண்டற் கரியன, நன்மணி புரிதந்த வாவி நான்குள" சீவக. ௧௨0௩.

அ. பெண்மை - அமைதித்தன்மை; சீவக. ௩௫௬ - ந.

௯ - ௧0. விரிந்ததுகில புகைக்குவமம்.

௧௧. பாடினோர்பெயர் இதிற்குறிப்பிக்கப்பெற்றுள்ளது.

௧௨. வாணுதல - கன்னி. ௧௪. தீற்றி - உணபித்து; சீவக. ௩௧0௫.

௧௬. வேந்தர் - மணம் பேசவந்த அரசர். தன்னையர் - தமையன்மார்.

(பி - ம்.)— 1 'ஆர்கலிவினனே சேணாட்டண்ணல்' 2 'பாடிச்சேரார்' 3 'நெடுநககா' 4 'தன்னையலர்' 5 'தலைய'

யுரித்தல் பல்சுணங் கனிந்த
மருப்பிள வனமுலை ஞெமுக்கு வோரே.

திணையும் துறையும் அவை.
கபிலர். (௩௩எ)

---

உக. உரித்துஅல் - உரியதல்லாத.

உஉ. ஞெமுக்குவோர் - அழுத்துவோர்; சீவக. உ௫௫உ.

---

(௩௩அ.) ஏர்பரந்தவய னீர்பரந்தசெறுவி
னென்மலிந்தமனைப் பொன்மலிந்தமறுகிற்
படுவண் [1] டார்க்கும் பன்மலர்க் காவி
னெடுவே ளாதன் போந்தை யன்ன
௫ பெருஞ்சீ ரருங்கொண் டியளே கருஞ்சினை
வேம்பு மாரும் போந்தையு மூன்று
மலைந்த [2] சென்னிய ரணிந்த வில்லர்
கொற்ற வேந்தர் வரினுந் தற்றக
வணங்கார்க் கீகுவ னல்லன்வண் டோட்டுப்
க0 பிணங்குகதிர்க் கழனி நாப்ப ணேமுற்
[3] றுணங்குகல னாழியிற் றோன்று
மோரெயின் மன்ன னொருமட மகளே.

---

ச. போகதை - ஓரூர்.

ரு. கொண்டிச்சீரள் - மிகுதியான சீரையுடையள்; "அன்பதாய்க், கொண்டி யாயின வாரென்றன் கோதையே" தே. திருநா. திருவாரூர், 'கொக் கரை' எ.

சு. ஆர் - ஆத்தி. போந்தை - பனை.

ரு - சு. கருஞ்சினைவேம்பு: "கருஞ்சினை, யரவாய்வேம்பு" பொருந. சசா - ச.

அ. கொற்றம் - அரசுரிமை. தற்க - தனக்குத்தக.

சு - கூ விரும்புவோர் பாண்டியன்முதலிய முடிமன்னர் மூவராயிருப்பி னும் தன்னைவணங்கார்க்குத் தன்மகளை ஈவானல்லன் இவன்.

கO. கதிர் - நெற்கதிர்.

கக. உணங்குதல் - உலர்தல். கலன் - கப்பல்; ஆழி - கடல்.

கஉ. எயில - மதில், ஓரெயின்மன்னன்: அகநா. நளந: கஅ.

கO - கஉ. சூழ்ந்தகழனிக்குக் கடலும் எயிலுக்குப் புறமுலர்ந்த கப்பலும் உவமம். "மருதநிலத்து மதிலாதல்,....அககாடுபுக்கவாருப்பம் வெளவி எனப்

(பி - ம்.)—1 'ஆர்க்குங்காவிர்ப்பலினி, நெடுவேலாதன்' 2 'சென்னியா ரணிந்த' 3 'உணங்குக ழுழியிற', 'உணங்குகாழியித்'

## புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

சுO

திணையும் துறையும் அவை.

குன்றூர்கிழார்மகனார்.

(நகஅ)

பாட்டிற் கூறியவாற்றானும், பிணங்குகதிர்க் கழனி...மன்னனென்றமையானும் ...உணர்க" தொல். புறத்திணை. ரு. க. ந.

---

(நூகூ.) வியன்புலம் படர்ந்த பல்லா [1] நெடுவேறு
மடலை மாணிழ லசைவிடக் கோவலர்
வீததை முல்லைப் பூப்பறிக் குந்து
குறுங்கோ லெறிந்த நெடுஞ்செவிக் குறுமுய
னெடுநீர்ப் பரப்பின் வாளையொ டுகளுந்து
தொடலை யல்குற் றொடித்தோண் மகளிர்
கடலாடிக் கயம்பாய்ந்து
கழிநெய்தற் பூக்குறூஉந்து
பைந்தழை துயல்வருஞ் செறுவிறற......
.............................லத்தி
வளர வேண்டு மவளே யென்று
[2] மாரம ருழப்பது மமரிய ளாகி
முறஞ்செவி யானை வேந்தர்
மறங்கெழு நெஞ்சங் கொண்டொளித் தோளே.

திணையும் துறையும் அவை.

.........................................

(நூக)

---

க. புலம் - மேய்தற்குரிய நிலம். உ. அசைவிட - அசையிட.

க - உ. ஏறு அசைவிட.

ங. பூப்பறிக்குநது - பூக்களைப்பறிக்கும் ; "புதன்முல்லைப் பூப்பறிக் குந்து" புறநா. ஙுஉ: ச.

ச. கோலாலெறிநத. ரு. உகளுநது - தள்ளும்.

சு. தொடலை - மணிக்கோவைகளால் தொடுககப்பட்ட மேகலை.

அ. பூக்குறாஉநது - பூக்களைபபறிக்கும் ; குறுதல் - பறித்தல்.

கஉ. அமரியளாகி - விரும்பியவளாய்.

கங. முறம்போலும் காதுகளையுடையயானை; "முறஞ்செவி வாரணம்" (கலி : சஉ, சிலப். கo: உசஅ) ; "முறஞ்செவி யானையுந் தேரு மாவும்" மணி. கக: கஉக.

(பி - ம்.)—1 'வெறறி, மடலை' 2 'ஆரமரொழிப்பதுவுமமரிய'

## சருக புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

(ஙசo.) அணித் 1 தழை நுடங்க வோடி 2 மணிப்பொறிக்
3 குரலங் குன்றி கொள்ளு மிளையோள்
மாமகள்...............................
.....................லெண வினவுதி கேணீ
ரு 4 வெடுப்பவெ.........................

.........................மைந்தர் தந்தை
5 யிரும்பனை யன்ன பெருங்கை யானை
கரந்தையஞ் செறுவிற் பெயர்க்கும்
பெருந்தகை மன்னர்க்கு வரைந்திருந் தனனே.

திணையும் துறையும் அவை.

அ...........................

(கூசo)

---

க. தழை - தளிர்களாலும் பலவகைப்பூக்களாலும் அமைக்கப்பட்ட ஒரு வகை ஆடை ; "அம்பூந் தொடலை யணித்தழை" புறநா. கூசக: உ.

உ. குரலங்குன்றி - குன்றிமணிக் கொத்தினை.

எ. "பனைக்கை மும்மத வேழ முரித்தவன்" தே. திருநா. கோயில். 'பனைக்கை' க.

அ. கரந்தை - ஒருவகைப்பூடு. செறு - வயல்.

எ - அ. "காய்த்த கரந்தை மாக்கொடி விளைவயல், வந்திறை கொண் டன்று தானை" பதிற். சo: ரு - சு.

(பி - ம்.)—1 'தழைத்துடங்க' 2 'பணிப்பொரி' 3 'கூறலங்குன்றி' 4 'யெடுப்ப' 5 'மிருபனை', 'இருபனை'

---

(கூசக.) வேந்து குறையுறவுங் கொடாஅ னேந்துகோட்
டம்பூந் தொடலை 1 யணித்தழை யல்குற்
செம்பொறிச் சிலம்பி 2 னிளையோ டந்தை
யெழுவிட் டமைத்த திண்ணிலைக் கதவி

---

க. வேந்து - அரசன். குறையுறவும் - கேட்பவும். கோடு - பக்கம்.

உ. தொடலை - மாலை ; "தொடலைக்குறுந்தொடி" (குறள், ககஙரு. பரிமேல்.) தழை: "அணிர்தழை நுடங்கவோடி" புறநா. ஙசO: க.

(ங) தந்தை (க) கொடாஅன்.

ச. 'எழு' இன்னதென்பது "எழுவுஞ்சீப்பும்" (சிலப். கரு: உகரு) என்பதனுரைகளால் அறியப்படும்; "சீப்புள் ளுறுத்துத் திண்ணெழுப் போக்கிக், காப்புள் ளுறுத்த கடிமதில வாயில்" பெருங். க: சங, கரு௩-ச.

(பி - ம்.)—1 'அணிந்ததழை' 2 'இளையோடாதை'



னரைம ணிஞ்சி நாட்கொடி [1] நுடங்கும்

......................................

புலிக்கணத் தன்ன கடுங்கட் சுற்றமொடு
மாற்ற மாறான் மறலிய சினத்தன்
[2] பூக்கோ ளெனவேஎய்க் கயம்புக் கனனே
[3] விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்
சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
மணம்புகு [4] வைக லாகுத லொன்றோ
வாரம ருழக்கிய மறங்கிளர் முன்பி
[5] னீளிலை யெஃகு மறுத்த வுடம்பொடு
[6] வாரா வுலகம் புகுத லொன்றெனப்
படைதொட் டனனே குருசி லாயிடைக்
[7] களிறுபொரக் கலங்கிய தண்கயம் போலப்

8 பெருங்கவி னிழப்பது கொல்லோ
9 மென்புனல் வைப்பினித் தண்10பணை யூரே.*

திணையும் துறையும் அவை.

பாணர்.

(௩௪௧)

---

௫. அரைமண் இஞ்சி - அரைத்த மண்ணால் அமைக்கப்பட்டமதில். நாட்கொடி - நல்லநாளிலே கட்டினகொடி ; நாடோறுஞ்செய்த வெற்றிக்குக்கட்டினகொடியுமாம் ; "நாட்கொடி நுடங்கும் வாயில" (சிலப். ௧௫: ௨௧௭ - ௮) ; "நாடோ றெடுத்த நலம்பெறு புனைகொடி" மதுரை. ௩௬௮.

௭. கடுங்கட்சுற்றம் - வீரச்சுற்றம் ; "வயப்புலி போலத், துஞ்சாக் கண்ணர்" (மதுரை. ௬௪௩-௪) ; "கொடுவரி கூடிக் குழூக்கொண் டனைத்தால்... ...திணைநிரை வேலார் நிலை" (பு - வே. ௧: ௯), "மைதோய்வரையி னிழியும் புலி போல மைந்தன், பெய்தாம மாலைப் பிடியினிழிந் தேகி" (சீவக. ௨௧௩௫) என்பவற்றிலும் வீரர்க்குப் புலி உவமிக்கப் பட்டிருத்தலகாண்க. [கெழுந்த.

௮. மாற்றம் - மாறுபட்டுச் சொல்லுஞ்சொல். மறலிய - போர்செய்தற்

௯. போர்க்குரிய பூவை அணிந்துகொண்டு போருக்குப் புறப்படுகவென்று தன்வீரரை ஏவிவிட்டுத் தான்நீராடுதற்குப் பொய்கையின்கட்புகுந்தான்; போர்செய்தற்குப் புறப்படுமுன் அரசர் நீராடல் மரபு; புறநா. ௭௯: ௧-ஆம் அடியின் குறிப்பைப்பார்க்க.

௧௦. வேளா - மணஞ்செய்யப்படாத.

௧௪. எஃகம் - வேல. ௧௫. வாராவுலகம் - வீரசுவர்க்கம்.

௧௨, ௫. ஒன்றோ, ஒன்று: எண்ணிடைச்சொல்; புறநா. ௩௪௪: ௪ - ௬.

(௧௯) ஊர் (௧௮) கவினிழப்பது கொல்லோ.

* இச்செய்யுளின் பொருள், கொச்சித்திணைக்கண்ணதாகிய மகண்மறுத்து

(௯௭௧.) உருமிசை முரச [1] முழக்கென விசைப்பச்
செருநவில் வேழங் கொண்மூ வாகத்
தேர்மா வழிதுளி தலைஇ நாமுறக்
கணைக்காற் றெடுத்த கண்ணகன் பாசறை
யிழிதரு குருதியொ டேந்திய வொள்வாட்
பிழிவது போலப் [2] பிட்டையூ றுவப்ப
மைந்த ராடிய மயங்குபெருந் தானைக்
கொங்கு புறம்பெற்ற கொற்ற வேந்தே
.....................தண்ட மாப்பொறி
மடக்கண் மயிலியன் மறலி யாங்கு
நெடுஞ்சுவர் நல்லில் புலம்பக் கடைகழிந்து
மென்றோண் மகளிர் மன்றம் பேணார்
புண்ணுவ..............................
............யணிப் புரவி வாழ்கெனச்
சொன்னிழ லின்மையி னன்னிழற் சேர
நுண்பூண் மார்பிற் புன்றலைச் சிறாஅ

க. உருமிசை - மேகமுழக்கு ; மேககர்ச்சனை முரச ஒலிக்குஉவமை ; "படுமழை யுருமி னிரங்கு முரசு" (புறநா. ௩௫௦ : ௪); "தாழிரு டூமிய மின்னித் தண்ணென, வீழுறை யினியசிதறி யூழியிற், கடிப்பிடு முரசின் முழங்கி" (குறுந். ௨௭௦ : க - ௩); "முரசதிர் பவைபோன் முழங்கிடிபயிற்றி" (பரி. ௨௨: ௪); "கொண்மூ, விருண்டுயர் விசும்பின் வலனேர்பு வளைஇப், போர்ப்புறு முரசினிரங்கி", "இடியுமிழ் முரசம் பொருகளத் தியம்ப" (அகநா. க௮௮: க - ௩, ௩௫௪: ௨); "உருமிடி முரசமொடு" (முருகு. க௨க); "முரிவான முழங்கிவாய் விட்டதொப்ப, வதிகுரன் முரசம்", "இடியுமிழ் முரசம்" (சீவக. ௫௪௩, ௨௯௦௦); "உருமினிடி முரசார்ப்ப" (முத்); "இடியாா பணை துவைப்ப" பு - வெ. ௬ : ௨௭.

௨. "கருங்கையானை கொண்மூவாக" புறநா. ௩௬௯ : ௨.

௩ - ௪. "மால்வரைத் தொடுத்துவீழ்ந்த மணிநிற மாரிதன்னைக், காலி

ரைத் தெழுந்து பாறக் கல்லெனப் புடைத்த தேபோல், மேனிரைத் தெழுந்த வேடர் வெந்நுனையப்புமாரி, கோனிரைத் துமிழும் விலலாற் கோமகன் விலக்கினனே" (சீவக. ௪௫௧ - ௩) என்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்.

௭. ஆடிய - வென்ற. ௮. கொங்கு - கொங்கநாட்டு வீரர்களை.

கக. புலம்ப - தனித்து வருந்த.

க௨. மன்றம் - பொதுவிடம். க௬. புன்றலை - சிவந்த தலை.

க௬-௭. "புன்றலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி" புறநா. ௪௬: ௬.

(பி - ம்.)—1 'முழககெயிசைய' 2 'பிட்டயூறுவபய'

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

௪௧௩

[1] ரம்பழி பொழுதிற் றமர்முகங் காணு
...............................ற் றொக்கான
வேந்து புறங்கொடுத்த வீய்ந்துகு பறந்தலே
மாட மயங்கெரி மண்டிக் கோடிறு
புருமெறி மலேயி னிருநிலஞ் சேரச்
சென்றோன் மன்ற சொ..................
............ண்ணெறிநர் கன்டுகெண் ணலேப்ப
வஞ்சி முற்றம் வயக்கள ஞக
வஞ்சா மறவ ராட்போர் பழித்துக்
கொண்டனே பெரும குடபுலத் ததரி
பொலிக வத்தைநின் பணிதனற......ளம்
விளங்குதினே வேந்தர் களந்தொறுஞ் சென்று
புகர்முக முகவை பொலிகென் றேத்திக்
[2] கொண்டன ரென்ப பெரியோர் யானு
மங்கண் மாக்கிணே யதிர வொற்ற
..............லெனுயினுங் காதலி னேத்தி
நின்னோ ரன்னோர் [3] பிறரிவ ணின்மையின்
[4] மன்னெயின் முகவைக்கு வந்திசிற் பெரும
பகைவர் புகழ்ந்த வாண்மை [5] நகைவர்க்குத்

---

உ0. இறுபு - ஒடிந்து. [உரு :

க.

உச. வஞ்சி - கருவூர் ; " வஞ்சிமுற்ற நீங்கிச் செல்வோன் " சிலப்.

உரு. ஆள் போர்பு அழித்து - வீரர்களுடைய பிணங்களாலாகிய போரை அழித்து ; " படுபிணனெதிரப் போர்பழித்து " புறநா. ௩எக : கச.

உசு. குடபுலம் - குடநாடு. அதரிகொண்டனே - கடாவிட்டனே.

உஅ. திணை - குலம்.

உகூ. புகர்முக முகவை - யானைப்பரிசில் ; " புகர்முக முகவைக்கு வந்தி சிற்பெரும " புறநா. ௩எக : உ௦.

௩க. இணை - தடாரிப்பறை.

௩௩. நின்னோர் அன்னோர் - உன்னைப்போன்றோர்.

௩ச. சீவக. ௩உ௩ - ந. மேற்.

௩௩ - ச. தொல். உவம. சூ. உச - இளம். மேற்.

௩டு. நகைவர்க்கு - நட்பினர்க்கு ; "நகைவர்க்கரணமாகிப் பகைவர்க்குச் சூர்நிகழ்ந்தற்று நின்றனே" (பதிற்.௩க: ௩௩-ச);"நகைவராரநன்கலஞ் சிதறி" ஷை ௩எ: ச, ச௩: உ௦.

(பி - ம்.)—1 'அமபாழிலொழிதிறமமா' 2 'தொண்டரெனப்' 3 'பிறரிவர்' 4 'மின்னெயில்' 5 'நகை வாக்கு'

## சகூச புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

தாவின் றுதவும் பண்பிற் பேயொடு
கணநரி I திரிதரு மாங்க ணிணைருந்து
செஞ்செவி யெருவை குழீஇ

யஞ்சுவரு கிடைக்கைய களங்கிழ வோயே.

**திணை-அது. துறை - மறக்களவழி; ஏர்க்கள உருவகமுமாம்.**

**சோழன் குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன் கருவூ ரெறிந்தானைக் கோவூர்கிழார்.** (௩௭௩)

---

௩அ - ௯. "செஞ்செவி பெருவை திரிதரு, மஞ்சுவரு கிடைக்கைய களங்கிழ வோயே" புறநா. ௩௭0: உ௬ - ௭.

(பி - ம்.)— 1 'திரிதருஉமாங்கண'

---

(௩௭௪) கானன் மேய்ந்து வியன்புலத் தல்கும்
புல்வா யிரலை நெற்றி யன்ன
பொலமிலங்கு சென்னிய பாறுமயி [1] ரவியத்
தண்பனி [2] யுறைக்கும் புலரா ஞாங்கர்
மன்றப் பலவின் மால்வரை பொருந்தியென்
றெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
யிருங்கலை யோர்ப்ப விசைஇக் காண்வரக்

---

க. கானல் - மலைப்பக்கம். அல்கும் - தங்கும்.

உ. புல்வாய் - ஒருவகைமான்; 'இரலை' என்னும் ஆண்பாற்பெயர் புல்வாய்ச்சாதிக்குரியதென்பதற்கு (தொல். மரபு. சூ. ௪௪ - பேர்) இவ்வடி மேற்கோள்.

௩. பொலம் - பொன்; பொற்றாமரைப்பூ; அவிய - சிதறிய மயிர்அடங்கும்படி.

ஆகுபெயர். பாறுமயிர்

ச. உறைக்கும் - துளிக்கும். (ழ. புறநா. ௩௭௭: ௨.

௩-ச. "பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி", "பனிபழுநிய பல்யாமத்துப் பாறுதலைமயிர் நனைய" புறநா. ௨௭௯: ௯; ௩௭௭: ௧ - ௨.

௫. மன்றப்பலவு - பொதுவிடத்திலுள்ள பலா; பொருநர்முதலிய இரவலர் பொதுவிடத்திலவந்துதங்குதலும் அங்குள்ளமரத்தில தம் வாச்சியங்களைத்தொங்கக்கட்டுதலும் மரபு; புறநா. ௧௨௮: ௧; ஐந்திணை யெழுபது, ச.

௬. (ழ. புறநா. ௩௯௭: ௧௦; "தடாரி......தெண்கணெறிந்து" ௩௮௧: ௧௨ - ௩.
புறநா.

எ. ஓர்ப்ப - செவிசாய்த்துக் கேட்கும்படி. இசைஇ - முழக்கி; "இரும் புலிப் புகர்ப்போத்தோர்க்கும்" (புறநா. ௧௭௫: ௧௨); "பாடலோர்த்து நாடக நயந்தும்" பட்டின. ௧௧௩.

(பி - ம்.)—1 'அவியடபத' 2 'இறைக்கும்'

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

௪௬௫

கருங்கோற் குறிஞ்சி யடுக்கம் பாடப்
புலிப்பற் றாலிப் புன்றலைச் சிறாஅர்
மான்கண் மகளிர்க் கான்றே ரகன்றுவா
சிலைப்பாற் பட்ட முளவுமான் கொழுங்குறை
விடர்முகை யடுக்கத்துச் சினைமுதிர் [1] சாந்தம்
புகர்முக வேழத்து மருப்பொடு மூன்று
மிருங்கேழ் வயப்புலி வரியதட் குவைஇ
விருந்திறை நல்கு நாட னெங்கோன்
கழறொடி யாஅ யண்டிரன் போல

அ. கருங்கோல் - பெரியதண்டு; "கருங்கோற் குறிஞ்சி மதனில்வான்பூ", "பெருங்கோற் குறிஞ்சி" (நற். உசுஅ: ௩, ௩0க: க); "கருங்கோற்குறிஞ்சிப்பூ" (குறுந். ௩: ௪); "கருங்கோற் குறிஞ்சி" (அகநா. ௩0அ: கரு.) அடுக்கம்-மலைப் பக்கம்; குறிஞ்சியையுடைய அடுக்கம்; தலைவனையும் அவனுடைய மலைமுதலியவற்றையும் பாடுதல் மரபு; "நின்னை நின்மலையும்பாட" (புறநா. க௪௩: கஉ); "நெடுவரைவளனும் பாடி" சிறுபாண். கஉஅ.

௯. புலிப்பல் தாலி - புலியின் பல்லைக் கோத்துச்செய்த கழுத்தணி; "புலிப்பற்றாலிப்புதல்வர்" (குறுந். ௧௬௧: ௩); "புலிப்பற் கோத்தபுலம்பு மணித் தாலி" (அகநா. எ: கஅ); "மறங்கொள் வயப்புலி வாய்பிளந்து

பெற்ற, மாலை

வெண்பசுந்தலி" சிலப். கஉ: உஎ - அ.

கக. முளவுமான் கொழுங்குறை - முள்ளம் பன்றியின் கொழுவிய தசை;

"முளவுமாத் தொலைச்சிய" (புறநா.௩உ௫: ௬); "முளவுமாவல்சி" (ஐங்குறு. ௩௬௪:க); "முளவுமாத் தொலைச்சுங்குன்றம்" (அகநா. கஅஉ:அ); "முளவு மாத்தொலைச்சிய பைந்நிணப்பிளவை" மலைபடு. கஎ௬.

கஉ. விடர்முகை - வெடிப்பையுடைய குகை; "விடர்முகை முழங்கும்"

(ஐங்குறு. ௩௬௫:உ); "விடர்முகையடுக்கம் பாய்தலின்", "விடர்முகை முழங்கும்", "அஞ்சுவரு விடர்முகை" அகநா. ௪எ: ௬; க௪௩: எ; உஎஉ: ௪.

க௩. புகர்முகவேழம்: புறநா. ௩எ௩: உ௬. மூன்று - குறை, சாந்தம், மருப்பு என்பன.

க௪. புலித்தோலில் மேற்கூறிய மூன்றையும் குவித்து.

க௫. இரைநல்கும் - இறுக்கும்; கொடுக்கும்.

க௬. ஆயாகிய அண்டிரன்; "கழறொடி யாஅய் மழைதவழ் பொதியில்" (புறநா. கஉஅ: ௫; குறுந். அ௪:௩); "ஆஅயண்டிர னாடுபோ ரண்ணல்", "வழைப்பூங்கண்ணி வாய்வா ளண்டிரன்", "தண்டாரண்டிரன்" புறநா. கஉ௬:௫, க௩க:உ, உ௪க:க-உ.

(பி - ம்.)—1 'சாந்தப்'

வண்மையு முடையையோ ஞாயிறு
கொன்விளங் குதியால் விசும்பி னானே.

திணை - பாடாண்டிணை ; துறை - பூவைநிலை.

ஆய் அண்டிரனை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்.

(௱௭௪)

௧௭. ஞாயிறு - விளி. ௧௮. கொன் - பயனின்மை.

௪௯ - அ. புறநா. அ - ஆம் பாடலின் கருத்து இவ்வடிகளுடன் ஒப்பிடற்பாலது.

(௱௭௫) அலங்குகதிர் சுமந்த கலங்கற் சூழி
நிலைதளர்வு தொலைந்த வொல்குநிலைப் பல்காற்
பொதியி லொருசிறை பள்ளி யாக
முழாஅரைப் போந்தை யரவாய் மாமட
னாரும் [1]போழுங் கிணையொடு சுருக்கி
யேரின் வாழ்நர் குடிமுறை புகாஅ
வூழிரந் துண்ணு முயவல் வாழ்வைப்
புரவெதிர்ந்து கொள்ளுஞ் சான்றோர் யாரெனப்
பிரசந் தூங்கு மறாஅ [2] யாணர்
வரையணி படப்பை நன்னாட்டுப் பொருந
பொய்யா வீகைக் கழறொடி யாஅய்
யாவரு மின்மையிற் [3] கிணைப்பத் தாவது
பெருமழை கடற்பரந் தாஅங் கியானு
மொருநின் னுள்ளி வந்தனெ னதனாற்

க. கதிர் - வெயில். சூழி - நீர் நிலை.

ங. பொதியில ஒருசிறை - மன்றத்தி னொருபக்கம்.

ச. மத்தளத்தைப் போன்ற அரையை யுடைய பனையின் அரம்போன்ற வாயினையுடைய மடல்; "முழாவரைப்போந்தைப் பொரூந்தி", "மடலவன் போந்தை" புறநா. அரு: எ ; உகஎ:க0.

ரு. "நாரும்போழுஞ் செய்துண்டு" புறநா. ௩எ0: உ.

சு. புகாஅ - புகுந்து. எ. ஊழ் - முறையே. உயவல் - வருத்தம்.

அ. புரவு எதிர்ந்துகொள்ளும் - பாதுகாத்தலை ஏற்றுக்கொள்ளும்.

க. பிரசம்-தேன்கூடு; "பிரசந்தூங்கு சேட்சிமை" (அகநா.உசஉ:உக.) அறாஅயாணர் - இடையறாத செல்வ வருவாயையுடைய; பொருந. க ந.

க0. படப்பை - தோட்டம். கக. ஆஅய் - விளி.

கங. மழை - மேகம். கச. நின்னுள்ளி - உன்னைநினைத்து.

(பி - ம்.) 1 'போரும்' 2 'யானாவரையணிப்' 3 'இனபப'

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

சகள

கடு புலவர் புக்கி லாகி நிலவரை
நிலீஇய ரத்தை நீயே யொன்றே
நின்னின்று வறுவி தாகிய வுலகத்து
நிலவன் மாரோ புரவலர் துன்னிப்
1 பெரிய வோதினுஞ் சிறிய வுணராப்

உ0 பீடின்று பெருகிய திருவிற்
 [2] பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே.

திணை - பாடாண்டிணை; துறை - வாழ்த்தியல்.

அவனை அவர்.

(௱எ௫)

---

கரு. புக்கில் - எப்பொழுதும் இருத்தற்குரியவீடு; "புக்கி லமைந்தின்று கொல்லோ" குறள், ௩௪0.

கசு. நிலீஇயர் - நிற்பாயாக; அத்தை, அசை.

கஅ - கூ. "துன்னி.........உணராவென்புழிப் பெரிய சிறியவென்பன பெருமை சிறுமைப்பண்படியாக வர்தமையின், இவ்வெச்சத்தின் குறிப்பென் றலு மொன்று; இவ்வெச்சப் பொருள்படு முரிச்சொலென்றலு மொன்று" (தொல். வினை. சூ. ௩0-கல்); "துன்னி...உணராவென அகரம் வினைக்குறிப்புப் பற்றிவருவனவும்" (ஷை ஷை ஷை ௩க - ந); "பெரியவோதிலு மென்பதற்குச் சிறிய வோதினுமெனக்குறிப்பும் மறைவிகற்பமும்அறிக" ஷை ஷை ஷை ௩அ - கல்.

உக. பாடன்மார் - பாடுதலைத் தவிர்வாராக; தொல். வினை. சூ. க0-கல்; ந. மேற்.

உ0 - உக. தொல். வினை. சூ. க0 - சே ; இ - வி. சூ. உ௩உ, உ௩௯-உரை. மேற்.

கக - உக. தொல். இடை. சூ. அ - கல். நன் - மயிலை. சூ. ௩உ௬ ; நன் - வி. சூ. ௩உஎ - மேற்.

(பி - ம்.)— 1 'பெரியவோத்தினுஞ்' 2 'பாடிமன்னரை'

(௩௭௬) 1 விசும்பு நீத்த மிறந்த ஞாயிற்றுப்
பசுங்கதிர் 2 மழுகிய சிவந்துவாங் 3 கந்தி
சிறுநனி பிறந்த பின்றைச் செறிபிணிச்

க. விசும்பு நீத்தம் - விசும்பாகியநீத்தத்தை ; 'நீத்தம்' என்றார் கடத்தற்கருமையின். இறந்த - கடந்த.

உ. மழுகிய - ஒளி குறைந்த. அந்தி - மாலைக்காலம்.

க - உ. "சுடர்கெழு மண்டில மழுக ஞாயிறு, குடகடல் சேரும் படர்கூர்மாலை" அகநா. ௩௭௮: கச - ரு.

(பி - ம்.)—1 'விசுமபினீததமிறந்த', 'விசும்பிணியத்தமிறக்த' 2 'மழுங்கிய', 'பழுனிய', 'மழகிய' 3 'அந்திச் சிறுநனியிறந்த'





1 தொஅர் வள்பினென் பொடாரி தழீஇப்
பாண ராரு மளவை யான்றன்
2 யாணர் நன்மனைக் கூட்டுமுத னின்றனெ
னிமைத்தோர் விழித்த மாத்திரை ஞெரேரெனக்
குணக்கெழு திங்கள் 3 கனையிரு ளகற்றப்
பண்டறி வாரா வுருவோ டென்னரைத்
தொன்றுபடு துளையொடு பருவிழை 4 போகி
நைந்துகரை பறைந்தவென் னுடையு நோக்கி

விருந்தின னளிய னிவனெனப் பெருந்தகை
நின்ற [5] முரற்கை நீக்கி நன்று
மாவுவெகுன் டன்ன தேறலொடு சூடுதருபு
கரு நிரயத் தன்னவென் [6] வறன்களைந் தன்றே
யிரவி னானே யீத்தோ னெந்தை

ச. "தொஅர் வள்பிற் றொடர்ப்புறத் தடாரி" புறநா. ௩அக : கஉ.

ரு. ஆரும் - உண்ணும்.

௬. யாணர் நன்மனை - புதுவருவாயை யுடைய நல்லவீடு ; கூட்டுமுத தானியக் கூட்டினடியில் ; புறநா. ௩௬௬ : கஅ.

எ. இமைத்தோர் - இமைகொட்டுவோர். மாத்திரை - அளவு. ரென - விரைவாக.
னெ(

அ. குணக்கு - கிழக்கு; கனை - செறிவு.
௯. "மாலையன்னதோர் புன்மையுங் காலைக், சூழ் நிலையும்" பொருந. ௬௯ - எ.
கண்டோர் மருளும் வண்

க0. பருஇழை - பரிய நூலிழை.
கக. பறைந்த - தேய்ந்த ; புறநா. ௩௫௯: க.

௯ - கக. "அரையது, வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅ, ரோம் புடுத்த வுயவற் பாண", "கூருகிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன, பாறிய சித ரேன்" (புறநா. ௬௯: உ - ச, க௫0: க - உ.), "ஈரும் பேனு மிருந்திறை, கூடி, வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த, துன்னற் சிதாஅர்", "பாசி வேரின் மாசொடு குறைந்த துன்னற், சிதாஅர்" பொருந. எ௯-அக, க௫௩ - ச

கஈ. மூரற்கை - தாளம்; எங்களைப் பாடாதபடி செய்தென்றபடி.

கச. "தேட்கடுப் பன்ன நாட்டு தேறல்" (புறநா. ருகஉ: கரு); "பாட புக் கடுப்பன்ன தோப்பி" (அகநா. ருசஅ: எ); "பாம்பு வெகுண்டன்ன தேறல்" (சிறுபாண். உருஎ.) சூடு - குட்டிறைச்சி; புறநா. ருச, ருகசு ருகரு, ருகஎ.

கரு. நிரயத் தன்னவறன் - நரகவேதனைபோன்ற துன்பத்தைச் செய்விக்கும வறுமை.

(பி - ம்.)—1 'சிதாஅவளபின்' 2 'பாணர்நன்......நின்றென' யிருள்' 4 'போக்கி' 5 'மூரற்கை மிக்குநன்று' 6 'வறக்' 8 'மறை

## புறநானூற் மூலமும் குறிப்புரையும்:

சினை

யன்றை 1 ஞான்றினே டின்றி ஞாங்கு
மிரப்பச் சிந்தியே னிரப்படு புனையி

னுளத்தி னளக்கு மிளிர்ந்த தகையே
௨௦ னிறைக்குளப் புதவின் மகிழ்ந்தனெ னுகி
ஒருநாள், இரவலர் வரையா வள்ளியோர் கடைத்தலை
ஞாங்கர் நெடுமொழி பயிற்றித்
தோன்றல் செல்லாதென் சிறுகிணைக் குரலே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

2 ஓய்மான் நல்லியக்கோடனைப் புறத்திணை நன்னுகனுர். (௩௭௬)

---

௧௭ - அ. "இலனென்னு மெவ்வ முரையாமை யீதல், குலனுடையான் கண்ணேயுள" (குறள், ௨௨௩) என்பதையும் அதற்குப் பரிமேலழகர் எழுதிய விசேடவுரையையும், விநாயக புராணம், அரசியற்கைப்படலம், ௩௮ - ஆம் பாடல் முதலியவற்றையும் பார்க்க. நிரப்படுபுணை - வறுமையைக் கடத்தற் குரியதெப்பம்.

௨௦. நிறைக்குளப்புதவு - நீர்நிறைந்திருத்தலையுடைய குளத்தின் வாய்த்தலை ; "புனலம் புதவின் மிழலை" புறநா. ௨௪: ௧௯.

௨௧. இரவலர் வரையா - யாசகரை நீக்காத. வள்ளியோர் - வரையாது கொடுப்போர். கடைத்தலை - தலைவாயில.

௨௨. ஞாங்கர் - பக்கம். நெடுமொழி-தனது மேம்பாட்டைக் கூறுமொழி.

௧௮ - ௨௩. இவ்வடிகளின் பொருள், "செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம், பெருமான் முகம்பார்த்த பின்ன - ரொருநாளும், பூதலத்தோர் தம்மைப் பொருணசையாற் பாராவாங், காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்" (தண்டி. உரை, மேற்) என்னும் வெண்பாவை நினைப்பிக்கின்றது.

(பி - ம்.)—1 'நான்றிறெடு' 2 'ஆய்மானல்', 'ஓய்மான் வில்லியாதனைப்'

(௩எஎ.) பனிபழுனிய பல்யாமத்துப்
பாறுதலை மயிர்நனைய
வினிது துஞ்சுந் திருநகர் வரைப்பி
னினைய லகற்றவென் கிணை [1] தொடாக் குறுகி

க. பழுனிய - முதிர்ந்த. உ. பாறுமயிர் - பரந்து மேனோக்கியமயிர்.
க - உ. "பாறுமயி ரவியத் தண்பனி யுறைக்கும், புலரா ஞாங்கர்"
புறநா. ௩எச : ௩ - ௪.
௪. இனையல் - வருந்தல்.
கிணைதொடா - தடாரிப்பறையை வாசித்து.

(பி - ம்)—1 'தாடகுறுகி'

# ௩௦௦. புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

ரு யவியுணவினோர் புறங்காப்ப
வற [1] நெஞ்சத்தோன் வாழநாளொன்
றதற்கொண்டு வரலேத்திக்
கரவில்லாக் கவிவண்கையான்

வாழ்கவெனப் பெயர்பெற்றோர்
பிறர்க்குவமந் தானல்லது
தனக்குவமம் பிறரில்லென
வதுநினைந்து மதி [2] மழுகி
யாங்குநின்ற வெற்காணூடச்
சேய்நாட்டுச் செல்கிணைஞனை
நீபுரவலை யெமக்கென்ன
[3] மலைபயந்த மணியுங் கடறுபயந்த பொன்னுங்
கடல்பயந்த கதிர்முத்தமும்
வேறுபட்ட வுடையுஞ் சேறுபட்ட தசும்புங்
கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப
நனவி [4] னல்கியோ னசைசா ன்றோன்றல்
நாடென மொழிவோரவ னூடென மொழிவோர்
வேந்தென மொழிவோரவன் [5] வேந்தென
மொழிவோ

---

ரு. அவியுணவினோர் - தேவர்; "அவியுணவி னன்றூர்" (குறள், சகரு
தேவர் புறங்காப்ப.

ரு - ச. வாழும்படி நாடோறும் புறங்காப்பவென்று.

அ. கவிவண்கையான் - கொடையாற் கவிந்த கையோடு.

கூ - கO. பெற்றோராகிய பிறர்க்கு.

கO - கக. "பிறர்க்குநீ வாயி னல்லது நினக்குப், பிறருவம மாகா வொ
பெரு வேந்தே" (பதிற். எரு), "பொருநனென்றது தான் பிறர்க்கு உவமி
கப் படுவானென்னும் பொருட்டு" (மதுரை. சஉ - ந) என்பவை இங்கே அ

யற்பாலன.

கஉ. அது - உவமமின்மையை. கங.
எற்கர்ஹாஉ - என்னைக்கண்டு.

கச. இணைஞனை - இணைஞனாகிய நீ; ஐ, முன்னிலையை விளக்கி
நின்றது

கரு. புரவலை - எம்மாற் பாதுகாத்தற்குரியாய்.
என்ன-என்றுசொல்லி

கசு. கடறு - காடு. கஎ. சேறுபட்டதசும்பு - கட்குடம்.

கக. "கனவென மருண்டவென் னெஞ்சே மாப்ப" பொருந. கஅ.

கக - உ0. "கனவென மருள வல்லே நனவில், னல்கி யோனே நசைச
ஜேன்றல்" புறநா. கஅஎ : உரு - சு.

(பி - ம்.)—1 'நெஞ்சத்தோறுனென்று' 2'பழகி' 3'மலைபெயர்த்த பொ
னும்...பவத்தமணியும்' 4 'நல்கியோனென்கை' 5 'வேந்தன'



..............பொற்கோட் டியானையர்
கவர்பரிக் கச்சைநன்மான்
வடிமணி வாம்புரவி
.........நற்றேர்க்குழுவினர்
கதழிசை வன்கணினர்
வாளின் வாழ்ந ரார்வமொ டீண்டிக்
கடலொலி கொண்ட தானை
யடல்வெங் குருசின் மன்னிய நெடிதே.

திணை - அது; துறை - வாழ்த்தியல்.
சோழன் இராசசூயம் வேட்டபெருநற்கிள்ளியை உலோச்சனார். ()

உரு. பொன் - இம்புரி ; ஆகுபெயர்.
உச. கவர்பரி - பகுத்து விரையும் செலவு; "கவர்பரிப் புரவியர்" சிலப்.
ரு : கருக. மான் - குதிரை.
உஎ. கதழிசை - விரைதல் பொருந்திய. உஅ. வாளின் வாழ்நர் - வாள் [வீரர்.
௩0. மன்னிய நெடிது - நெடுங்காலம் வாழ்வாயாக.

(௩எஅ) தென்பரதவர் மிடல்சாய
வடவடுகர் வாளோட்டிய
1 தொடையமை கண்ணித் திருந்துவேற் றடக்கைக்
கடுமா [2]கடைஇய விடுபரி [3]வடிம்பி

க. மிடல் - வலி.
உ. வடுகர் - வடுகவீரர் ; இவர் வடநாட்டினருள் ஒருவகையார் ; "கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர்" (நற். உகஉ : ரு), "குல்லைக் கண்ணி வடுகர்" (குறுந். கக : ரு), "கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர்", "வாளிணைப் புகவின் வடுகர்", "முரண்மிகு வடுகர்", "தொடையமை பகழித் துவன்றுநிலை வடுகர்", "வம்ப வடுகர் பைந்தலை சவட்டி", "கதநாய் வடுகர்" (அகநா. கoஎ: கக, உகரு: அ, உஅக: அ, உகரு: கரு, ௩எரு: கச, ௩அக: எ.) ஓட்டிய - ஓட்ட.
க - உ. "பரதவர் - தென்றிசைக்கட் குறுநில மன்னர்; அது,'தென்பரதவர்.........வாளோட்டிய' என்னும் புறப்பாட்டானு முணர்க" மதுரை.

கசச - நீ.

ந. தொடையமை கண்ணி - கட்டுதலமைந்த தலைமாலை. வேலுக்கு மாலை சூட்டல் மரபு ; புறநா. நகஉ: க - அ.

ச. கடை இய - செலுத்திய. வடிம்பு - இங்கே காலின் விளிம்பு ; "மாவுடற்றிய வடிம்பு" பதிற். எ0: உ.

(பி - ம்.)—1 'தொடையமைக்கண்ணி' 2 'குடைஇய' 3 'வடிம்பின தழைகளிளிசொழர்'



னற்றூர்க் கள்ளின் சோழன் கோயிற்
புதுப்பிறை யன்ன சுதைசெய் மாடத்துப்
பனிக்கயத் தன்ன நீணகர் நின்றென்
னரிக்கூடு மாக்கிணை யிரிய வொற்றி
யெஞ்சா மரபின் வஞ்சி பாட
வெமக்கென 1 வகுத்த வல்ல மிகப்பல
மேம்படு சிறப்பி 2 னருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே யதுகண்
டிலம்பா டுழந்தவெ னிரும்பே ரொக்கல்
விரற்செறி மரபின செவித்தொடக் குநரும்
செவித்தொடர் மரபின 3 விரற்செறிக் குநரு
4 மரைக்கமை மரபின மிடற்றியாக் குநரு

ரு. கோயில் - அரண்மனே.

சு. சுதை - சுண்ணச்சாந்து; "வெள்ளி வெண்சுதை யிழுகிய மாடத்து" (மணி. சு: சரு); "மறுவிகந்தவெண் மதியென வயங்கிய பித்தி, செறியு மாடங்கள்" நைடத. நகர. ச.

எ. பனிக்கயம்-குளிர்ந்த நீரையுடைய குளம் ; நகருக்குக் குளம்உவமை;

"கிழக்கயத் தன்ன நீணகர்" அகநா. க௦ரு: எ.

அ. அரிக்கூடுமாக்கிணே - அரித்தெழும் ஓசையையுடைய பெரியதடாரிப் பறை; "அரிக் கூடின்னியம்" மதுரை. சுகஉ.

கூ. வஞ்சி - பகைமேற் செலவு; "பாடினி பாடும் வஞ்சிக்கு", "பாடுநர் வஞ்சி பாட" புறநா. கரு: உச; ருரு: க௦.

கக. அருங்கல வெறுக்கை - பெறுதற்கரிய ஆபரணமும் செல்வமும் ;

புறநா. கசகூ; க.

கரு. இலம்பாடு - இல்லாமை உண்டாதலால்; ஒக்கல் - சுற்றம்; "இலம் படு காலை யாயினும், புலம்பல் போயின்று பூத்தவென் கடும்பே", "இரும் பே ரொக்கல் பெரும்புலம் பகற்ற", "இரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினும்" புறநா. ருஅ௦: கரு - சு, ருகூ௦: கக, ருகூச: கசு.

கச - ரு. விரலிற் செறித்தற்குரிய மோதிரமுதலியவற்றைக் காதிலும் காதிற் செறித்தற்குரிய குழை முதலியவற்றை விரலிலும் செறித்துக் கொண் டா ரென்றபடி.

கசு. அரை - இடை. யாக்குநர் - கட்டுகின்றவர். மிடறு - கழுத்து.

(பி - ம்.)—1 'வகுதகுவல்ல' 2 'அழுங்கலவெறுக்கை' 3 'விரறசெறிகு கருஞ' 4 'மனக்கமைமரபினமிடறு'



1 கடுந்தே றிராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய 2ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை 3யிழைப்பொலிந் தாஅங்
கறாஅ 4 வருநகை யினிதுபெற் றிகுமே
யிருங் 5கிளைத் தலைமை யெய்தி
யரும்பட ரெவ்வ முழந்ததன் றலையே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னியை ஊன்பொதி பசுங்குடையார். (நஎஅ)

---

கஅ. வடசொற் சிதைந்துபொருந்த முடையனவாகச் சான்றோர் செய்யுளில் வந்ததற்கு இவ்வடிமேற்கோள் ; தொல். எச்ச. சூ. சு - ந ; இ - வி. சூ. கஎடு - உரை.

கக. அரக்கன் - இராவணன். ஞான்றை - சமயம் ; ஐ, சாரியை.

உ0. மதாணி - கதிர்த்த

உ0 - உக. குரங்கின் செம்முகப் பெருங்கிளை - செவ்விய முகத்தையுடைய பெரிய குரங்கின்குழு ; சுக்கிரீவனைச்சேர்ந்த குரங்குகள் ; "செம்முக மந்தி" (நற். கடுக: அ) ; "துய்த்தலைச் செம்முக மந்தியாடும்" (அகநா, உசஉ: கச - ரு.) இழை - ஆபரணம் ; இழைக்கப்படுதலான் வந்தபெயர்.

உஉ. அறாஅ - நீங்காத. பெற்றிகும் - பெற்றேம்.

உச. அரும்படரெவ்வம் - நினைவாலுண்டாகும் நோயின் வருத்தம் ; புறநா. கசரு: க0.

* மு. பாடாண்டிணைத் துறைகளுள், 'பெற்றபின்னரும் பெருவளனேத்தி, நடைவயிற் றோன்றிய விருவகைவிடை' (தொல். புறத்திணை சூ. ங0- இளம். ஷை ஷை ஷை ஙசு - ந) என்பதற்கு இது மேற்கோள்.

(பி - ம்.)—1 'கடுந்தெறல்' 2 'ஞான்றுநிலந்' 3 'மிழைப்பொலிந்' 4 'அருகதை' 5 'இணைத்தலைமை' 6 'மொழி...திபசுங்குடையார்'

---

(ஙஎசு) யானே பெறுகவன் றாணிழல் வாழ்க்கை
யவனே பெறுகவென் னாவிசை நுவறல்
னெல்லரி தொழுவர் கூர்வாண் மழுங்கிற்

---

க. "இருந்துகழ னேன்றாட் டண்ணிழ லேமே" (புறநா. ஙகஎ: உஎ.) வாழ்க்கையை யான்பெறுக.

உ. இசை - கீர்த்தி. நுவறலை அவன்பெறுக.

ங. தொழுவர் - தொழிலைச் செய்வோர்; "நெல்லரியு மிருந்தொழுவர்", "நெல்லரி தொழுவர்" (புறநா. உச: க, உ0க: உ); "நெல்லரி தொழுவர்" (நற். ககரு: சு.) வாள்-அரிவாள்; இவ்வடி தொல். எச்ச. சூ. கக - ந. மேற்.

[1] பின்னை மறத்தோ டரியக் கல்செத்
தள்ளல் யாமைக் கூன்புறத் துரிஞ்ச
[2] நெல்லமல் புரவி யிலங்கை கிழவோன்
வில்லி யாதன் கிணையேம் பெரும
குறுந்தா ளேற்றைக் கொழுங்க ணவ்விளர்
நறுநெய் யுருக்கி நாட்சோ றீயா
வல்ல னெந்தை பசிதீர்த் தல்லெனக்
[3] கொன்வரல் வாழ்க்கைநின் கிணைவன் கூறக்
கேட்டதற் கொண்டும் வேட்கை தண்டாது
விட்டோய் தலைய குன்றம் பின்பட
...............ரவந்தனென் யானே தாயி
ழாவாக் குழவி போல வாங்கத்
திருவுடைத் திருமனை யைதுதோன்று கமழ்புகை

---

ச. அரிய - அரிதற்கு. கல் செத்து - தீட்டுங்கல்லாக அறிந்து.

ரு. அள்ளல் - சேறு. புறம் - முதுகு. உரிஞ்சும் - தீட்டும்.

சு. அமலுதல - நெருங்குதல்; "கண்பமல் பழனம்" (மலைபடு. சடுச.) புரவு - விளைநிலம்; "புரவுத் தொடுத்துண்குவையாயினும்" (புறநா. உசுo: க.) இலங்கை - மாவிலங்கை யென்னுமூர் (புறநா. களசு: சு); "தொன் மா விலங்கைக் கருவொடு பெயரிய, நன்மா விலங்கை மன்ன ருள்ளு, மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வா, ளுறுபுலித்துப்பி னோவியர் பெருமகன்" சிறுபாண். கககூ - உஉ.

௫ - ௬. "அன்னந் துயிலெழுப்ப வந்தா மரைவயலிற், செங்கெ லரிவார் சினையாமை - வன்முதுகிற், கூனிரும்பு தீட்டுங் குலக்கோ சலநாடன்" நள. சுயம்வர. ௧௪௩.

அ. குறுந்தாளேற்றை - ஆண்பன்றி. விளர் - வெண்மை; "விளருன்" புறநா. ௩௯௯: ௫.

௯. நாட்சோறீயா - காலையுணவைஅளித்து.

௯ - ௧௦. ஈயாப் பசிதீர்த்தல்வலலன்.

௧௧. கொன்வரல் வாழ்க்கை - விடியற்காலத்தில் வந்து யாசித்தலாலுண் டாகியசெல்வம்; கொன் - விடியற்காலம் (சீவக. ௧௭௩.) விடியற்காலத்துக் கிணைப்பறைகொட்டித் தலைவன்புகழைப்பாடுதல பொருநர்க்கியல்பு.

௧௨. தண்டாது - அமையாமல்.

௧௩. விட்டோய் - ஆகாயத்தை அளாவிய. ௧௫. துவா - உண்ணுத.

௧௪ - ௫. "தாயி றூவாக்குழவி போல" (புறநா. ௪: ௧௭) என்பதையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

௧௬. ஐது - மெல்லிது.

(பி - ம்.)—1 'பிள்ளைமறத்தோடு' 2 'கெலைமல்' 3 'கொளவல்'

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

மேடு

வருமழை மங்குலின் மறுகுடன் மறைக்கும்
1 குறும்படு குண்டகழ் நீண்மதி லூரே.

திணை - அது ; துறை - பரிசித்துறை.
ஓய்மான் வில்லியாதனைப் புறத்திணை 2நன்னாகனார். (கஎக)

---

கஎ. மங்குலின் - மேகம்போல. உடன் - ஒருங்கு.
(கஅ) ஊர் (கச) வந்தனென்.
(பி - ம்.)—1 'குறுமபடுநதொடகழிநீண்' 2 'நன்னுதன்'

---

(கஎ௦.) தென்பவ் வத்து முத்துப்பூண்டு
வடகுன்றத்துச் சாந்த முரீஇ
.....................ங்கடற் றானை
யின்னிசைய விறல்வென்றித்
தென்னவர் 1 வயமறவன்
மிசைப்பெய்தநீர் கடற்பரந்து முத்தாகுந்து
நாறிதழ்க் குளவியொடு 2 கூதளங் குழைய
வேறுபெ..............................த்துந்து
தீஞ்சுளைப் பலவி னாஞ்சிற் பொருநன்

---

க. பவ்வம்-கடல்; "தென்கடன்முத்தும்" (பட்டினப். கஅக); "தென் கடன் முத்தும்" (சிலப். அ. கக); "வெண்டிரைத் தென்கடன் முத்தும்" தஞ்சை. கரு.

உ. வடகுன்றம் - இமயம். சாந்தம்-சந்தனம். உரீஇ - உரிஞ்சி; "வடவர் தந்த வான் கேழ் சந்தம்" அகநா. ருச௦: கசு.

ச. விறல் வென்றி - வென்றிவகை பலவற்றுட் போர்வீரத்தாலுண் டாகிய வெற்றி.

ரு. தென்னவர் வயமறவன்: "திருவீழ் மார்பிற்றென்னவன் மறவன்"

அகநா. கரு.

சு. முத்தாகுந்து - முத்தாகும்; இஃது உம்மீற்றுப் பெயரெச்சம்; உம், உந்தாயிற்று.

எ. குளவி-மலைமல்லிகை. கூதளம்-கூதாளி ; இந்த இரண்டும் சேர்த்து வழங்கப்படும் ; "கூதளங் கவினிய குளவி முன்றில்" (புறநா. கசுஅ: கஉ) என்பதையும் அதன்குறிப்பையும் பார்க்க.

க. தீஞ்சுளைப் பலவு: "தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க் கும்மே", "தீஞ் சுளைப் பலவின் மாமலைக் கிழவன்" (புறநா. க0க: ரு; கஉக: ச); "மன்றப் பலவின் தீஞ்சுளை" (ஐந். எழு. ச.) காஞ்சில் - ஒருமலை; "காஞ்சிற் பொரு கன்" புறநா. கநஎ, கநக, கச0.

ரு - க. காஞ்சில்வள்ளுவன் மறச்சாதியினனென்றும் பாண்டியர்களுக் குரிய படைவீரனென்றும் தெரிகிறது.

(பி - ம்.)—1 'வயன்மறவர்' 2 'கூதளங்'

64



றுப்பெதிர் தோர்க்கே யுள்ளாச் சேய்மைய
னட்பெதிர் தோர்க்கே [1] யங்கை நண்மையன்
வல்வேற் கந்த னல்லிசை யல்ல
......................த்தார்ப் பிள்ளையஞ் சிறுஅ
[2] ரன்ன ளைகன் மாறே யிங்கில
[3] மிலம்படு காலை யாயினும்
புலம்பல்போ யின்று பூத்தவென் கடும்பே.

திணை - அது; துறை - இயன்மொழி.

நாஞ்சில்வள்ளுவனைக் கருவூர்க் கதப்பிள்ளை.
(௩௮௦)

---

௧௦. துப்பெதிர்ந்தோர்க்கு - வலியோடு எதிர்த்த பகைவர்க்கு; "வெப் புடைய வரண்கடந்து, துப்புறுவர் புறம்பெற்றிசினே", "கடுமான்கோதை துப் பெதிர்ந் தெழுந்த, நெடுமொழி மன்னர்" (புறநா. ௧௧: ௮ - ௯; ௫௪: ௮-௯.) உள்ளாச் சேய்மையன்-நினைத்தற்குமெட்டாத மிக்க தூரத்துள்ளான்.

௧௧. நட்பு எதிர்ந்தோர்க்கு - அன்பால் அடைந்தவர்க்கு.

௧௦ - ௧௧. "துப்புப் பகையுமாதல், 'துப்பெதிர்ந்தோர்க்கே......நண்மை யன்' என்பதனானும் அறிக" குறள், ௧௧௬௫ - பரிமேல்.

௧௨. கந்தனென்பது, நாஞ்சின்மலைத்தலைவர் பரம்பரையில் உள்ளானும் இப்பாட்டுடைத் தலைவனுமாகிய ஒருவன்பெயர்.

௧௪. ஆகன்மாறு - ஆதலால்; "அனையையாகன்மாறே" புறநா. ௪: ௧௭, ௨௮: ௨௦; பதிற். ௮௦: ௧௨.

௧௫. வற்கடக் காலம் வரினும்.

௧௬. போயின்று-நீக்கப்பெற்றது. பூத்த-பலவாற்றாலும் பொலிவுபெற்ற.

௧௫ - ௧௬. புறநா. ௩௭௮: ௧௨ - ஆம் அடியின் குறிப்பைப்பார்க்க.

(பி - ம்.)—1 'அங்கையநன்மையன்', 'அங்கையண்மையன்,' 'யாங்கனி நன்மையை' 2 'அள்ளனைகன்' 3 'இளம்படுகாளையாயினும்'

---

(௩௮௧.) ஊனுமூனு [1]முனையி னினிதெனப்
[2]பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்
மளவுபு கலந்து மெல்லிது பருகி

க. ஊன் - இறைச்சி; ஊண் - அடிசில். முனையின் - வெறுத்தால்.

உ. பாகு - வெல்லப்பாகு; "காரகற் கூவியன் பாகொடு பிடித்த, விழைசூழ் வட்டம்" பெரும்பாண். ௬எஎ - அ.

௬. அளவுபுகலந்து - நன்றாகக்கலந்து.

க-௬. "சுவைய,வேறுபல் லுருவின் விரகுதர் திரீஇ" பொருந. ௧0எ-அ.

(பி - ம்.)—1 'முனை இயவினிதென' 2 'பாஅறபெய்தவும்'

## புறநானூறு மூலமும் குறிப்புரையும்

இல்

விருந்துறுத் தாற்றி யிருந்தனெ மாகச்
சென்மோ பெருமவெம் விழவுடை நாட்டென
யாந்தன் னறியுந மாகத் தான்பெரி
தன்புடை மைமயி னெம்பிரி வஞ்சித்
[1] துணரியது கொளாஅ வாகிப் பழமூழ்த்துப்
[2] பயம்பகர் வறியா மயங்கரின் [3]முதுபாழ்ப்
பெயல்பெய் தன்ன செல்வத் [4]தாங்க
ணியா மன்னர் [5]புறங்கடைத் தோன்றிச்

6 சிதாஅர் வள்பிற் சிதர்ப்புறத் தடாரி
7 யூன்சுகிர் வலந்த தெண்கண் ஞெற்றி
விரல்விசை தவிர்க்கு மரலையில் பாணியி
கடு ணிலம்பா டகற்றல் யாவது புலம்பொடு
தெருமா லுயக்கமுந் தீர்க்குவோ மதனு
லிருநிலங் கூலம் பாறக் கோடை
வருமழை முழக்கிசைக் கோடிய மின்றைச்
சேயை யாயினு மிவணை யாயினு

---

ச. விருந்து - புதுமை. ஆற்றி - பசியைத் தணித்துக்கொண்டு.

ரு. சென்மோ - வருவாயாக.

க - ரு. "ஊனு மூனு முனையினென்னும் புறப்பாட்டினுள், 'சென்மோ பெருமவெம் விழவுடைநாட்டெனா' என்பதனையும் தன்மைக்கண் 'மோ' வரு மென இவ்வாறு அமைத்தலுமொன்று ; அன்றிப் பெரும, எம் விழவுடை நாட் டே நீ செல்லென்று சுற்றத்தார் தலைவனைநோக்கிக்கூற அப்பொருநனும் பாட்டு டைத் தலைவனை நோக்கிப்பின்னும் கூறினனாகப் பொருள்கூறுதலுமொன்று" தொல். இடை. சூ. உஎ - ந.

சு. அறியுநமாக - அறிவேமாக.

சு - எ. "நயந்தனிர் சென்ற நும்மினுந் தான்பெரி, துவந்த வுள்ளமோ டமர்ந்தினிது நோக்கி" மலைபடு. ருருக - சுo.

அ. துணரியது - குலைகொண்டது; "பைம்பாகற் பழந்துணரிய, சுளைய கனி" (பொருந. கசுக - உ.) ஊழ்த்து - செவ்வியழிந்து.

செஞ்

கூ. பகர்வு - கொடுத்தல். அரில் - சிறுதூறுகள். முதுபாழில்.

கஉ. சிதாஅர் வள்பு - துண்டித்தவார்; "சிதாஅர் வள்பினென் றெடாரி"

புறநா. ூஎசு: ச.

கச. அரலை - குற்றம். பாணியின் - பாட்டால். கஎ. கூலம் - பலபண்டம்.

கக. இவணை - இவ்விடத்துள்ளாய்.

(பி - ம்.)— 1 'துணரியதுளவாகி' 2 'பயம்பகர்பறியா' 3 'முதுபாட்' 4 'ஆங்கினிதியா' 5 'புறங்கடைக்கொன்றி' 6 'சிதாஅரளமபிற......தடாரிடை' 7 'ஊனைசிர்வலக்கதென்கண்'

## ௩0அ புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

உ0 மிதற்கொண் [1] டறிகை வாழியோ இவணை
சிறுகனி, ஒருவழிப் படர்கென் றோனே யெந்தை
யொலிவெள் ளருவி வேங்கட நாட
னுறுவருஞ் சிறுவரு மூழ்மா றுய்க்கு
மறத்துறை யம்பியின் மான [2] மறப்பின்
உரு றிருங்கோ ளீராப் பூட்கைக்
கரும்ப னூரன் காதன் மகனே.*

திணையும் துறையும் அவை.

கரும்பனூர் கிழானை நன்னுகனூர்.

(ங்அக)

---

உகூ. உறுவர் - பெரியோர். உச. அறத்துறையம்பி - தருமவோடம்.

உசு. மகன் (உக) படர் கென்றோனே.

* மு. தொல். புறத்திணை. சூ. ௩௦ - இளம்; ஷை ஷை சூ. ௩௬-ந. மேற்.

(பி - ம்.)—1 'அறிகைவாழியோ' 2 'பிறபபின திருககொளளாப'

---

(௩௮௨.) கடற்படை யடற்கொண்டி
[1] மண்டுற்ற மலிர்நோன்றாட்
டண்சோழ நாட்டுப் [2]பொருந
னலங்குளை யணியிவுளி
நலங்கிள்ளி நசைப்பொருநரேம்
பிறர்ப்பாடிப் பெறல் [3]வேண்டே
மவற்பாடுது மவன்றாள் வாழியவென
நெய்குய்ய வூனவின்ற
பலசோற்றா [4]னின்சுவைய
நல்குரவின் பசித்துன்பினின்
முன்னாள் விட்ட மூதறி சிறாஅரும்

---

௧. கொண்டி-பொருளின்மிகுதி ; "கொண்டி பெருகென்றோ" புறநா. ௩௧௦: ௨௩.

௨. மலிர் - நீருற்று ; "மணலாடு மலிர்நிறை" ஐங்குறு. ௧௫.

௩. பொருநன்-உவமிக்கப்படுபவன்; "போர்மிகுபொருந" (பொருந.௨௭௬); "வரைத்தா முருவிப் பொருப்பிற் பொருந" (மதுரை. ௪௨); அரசனுமாம்.

௫. பொருநரேம் - பொருநராக உள்ளேம். ௬. பிறைப்பாடி.

௭. வாழியவென அவனைப்பாடுவேம். ௯. சோற்றன் - சோற்றோடு.

(பி - ம்.)—1 'மண்டறற மறனொருட', 'மண்டறற மலிறகொன' 2'பொருகன வலகைருளே' 3 வேண்டேமயறபாடுதும்' 4'இனஞுசுவையால்குரவின பசித்துன்பவென்பகின்'

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

## ருO௲

[1] யானும், ஏழ்மணியம் கேழணியுத்திக்
கட்கேள்விக் கவை [2]நாவி
னிறனுற்ற வராஅப்போலும்
வறனொரீஇ [3]வழங்குவாய்ப்ப
விடுமதி யத்தை கடுமான் றோன்ற
னினதே, முந்நீ ருடுத்த [4]விவ் வியனுல கறிய
வெனதே, [5]கிடைக்கா ழன்ன தெண்கண் மாக்கிணை
கண்ணகத் தியாத்த நுண்ணரிச் சிறுகோ
லெறிதொறு நுடங்கி யாங்குநின் பகைஞர்
கேட்டொறு நடுங்க [6] வேத்துவென்
வென்ற தேர்பிறர் வேத்தவை யானே.

திணை - அது; துறை - கடைநிலை.

சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார்.

(ந-அஉ)

கஉ. ஏழ்மணி - எழுச்சியையுடையமணி. உத்தி - படப்பொறி.

கஙு. கட்கேள்வி - கண்ணுற் கேட்டல். கவைநா - பிளவுபட்ட நாக்கு.

கரு. வறன் - வறுமை. வழங்குவாய்ப்ப - பிறர்க்கு யாம்கொடுத்தல் கைகூடும்படி.

கச - கரு. வறுமைக்கு அராவின் விடம் உவமம்.

கசு. மதியும் அத்தையும் அசைநிலைகள். தோன்றல், விளி.

கஎ. கினதாகிய உலகறிய.

கஅ. இடைக்காழ் - கெட்டியின் காம்பு. எனதாகிய இணையென்க.

கஅ - கூ. இணையினிடத்து அதனையடிக்கும் சிறுகோல் கட்டப்பட்டிருக்கும்; "நுண்கோற் சிறுகிணை" புறநா. ருஅரு - ரு.

உக. கேட்டொறும் - கேட்குந்தோறும்.

உஉ. வென்றதேர் - ஏனையோரை வென்ற தேரையுடைய. பிறர் - அயலரசர். வேத்தவையான் - இராசசபைக்கண்.

(கஎ) அறிய (உக) ஏத்தவென்.

(பி - ம்.)—1 'யாறுமெமணி' 2 'காவிறறுாகிறத்தவராஅப்', 'காவிறறுாகிற த்தவராஅப்' 3 'வயங்குவாயபப', 'வமஙகுவாயபப' 4 'விலவயினுலகு' 5 'இடை காழனனவென்றெண்கண்' 6 'வெகது', 'ஒதவென்'

---

# ௩௯. புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

(க.அக.) ஒண்பொறிச் சேவ லெடுப்பவேற் றெழுந்து
தண்பனி யுறைக்கும் புலரா ஞாங்கர்
நுண்கோற் சிறுகிணை சிலம்ப வொற்றி
நெடுங்கடை நின்று பகுபெல வாழ்த்தித்
[1] தன்புக ழேத்தினெ னாக வூன்புலர்
தருங்கடி வியனகர்க் [2]குறுகல் வேண்டிக்
கூம்புவிடு மென்பிணி யவிழ்த்த வாம்பற்
றேம்பா யுள்ள தங்கமழ் மடருளப்
[3] பாம்புரி யன்ன வடிவின காம்பின்
கழைபடு சொலியி னிழையணி வாரா
வொண்பூங் கலிங்க முடீஇ நுண்பூண்
வசிந்துவாங்கு நுசுப்பி னவ்வாங் குந்திக்
கற்புடை மடந்தை தற்புறம் புல்ல
வெற்பெயர்ந்த நோக்கி.........................
......................................கற்கொண்
[4] டழித்துப் பிறந்தனெ னாகி யவ்வழிப்
பிறர், பாடுபுகழ் பாடிப் [5]படர்பறி யேனே

---

க. சேவல்-ஆண்கோழி. எடுப்ப - எழுப்ப. எற்றெழுந்து - துயிலுணர்ந் தெழுந்து ; "தாமலர்க்க ணேற்க துயில்" (பு - வெ. க : கூ - துயிலெடை நிலை); "துயிலிடைக் கண்ட துணைநலத் தேவியை, யியல்புடை யங்க ணேற்ற பிற் காணது" பெருங்: ௪. ௭: ௬௪ - ௨.

உ. மு. புறநா. நஎச - ச. உறைக்கும் - துளிக்கும்.

ந. நுண்கோற் சிறுகிளை : புறநா. நஅஉ: கஅ - க.
சிலம்பகுற்றி - முழகைக அடித்து.

ச. பகடு - உழும் எருது; எருமைக்கடாவுமாம்.

க - ச. புறநா. நஅரு: க - உ. சு. குறுகல் - அடைதல்.

(சு) குறுகல்வேண்டி (ரு) ஏத்தினெனுக.

கக. கலிங்கம் - ஒருவகை நல்லாடை.

கூ - கக. காம்பின் கழை படு சொலியின் - மூங்கிலாகிய கோலின் உட்புறத்தே பெயர்த்தெடுக்கப்படும் வெள்ளிய தோல்போல. இழையணி வாரா - செய்யப்பட்டுள்ள இழைகளின் வரிசை கண்ணுக்குப் புலப்படாத. சொலி, கலிங்கத்திற்கு உவமை.

கஉ. வசித்து - தலைவனை வயமாக்கி. உந்தி - கொப்பூழ்.

கரு. அழித்து - மீட்டும்.

கஎ. படர்பு - செல்லுதல்.

(பி - ம்.)—1 'தான் புகழ்ந்து' 2 'குறங்கல்வேண்டி' 3 'பாம்பு பயனக தனைவடிவின சாமபின' 4 'அளித்துப்' 5 'படர்பதிவோனே'

## புறநானூறு மூலமும் குறிப்புரையும்:

### ௱கக

குறுமுலைக் கலமரும் பாலார் வெண்மறி
நரைமுக வூகமொடு கடுசென..............
..................[1] கன்றுபல கெழீஇய
கான்கெழு நாடன் கடுந்தே ரவியனென
வொருவனை யுடையேன் மன்னே யானே
யறுனெவன் [2]பரிகோ வெள்ளியது நிலையே.

திணையும் துறையும் அவை.

...............மாறேக்கத்து [3] நப்பசலையார்.

(௩அ௩)

---

௧அ. மறி - ஆட்டுக்குட்டி. ௨0. ஊகம் - ஒருவகைக் குரங்கு.

௨௧. அவியன் - ஒருபகாரி ; "களிமலி கள்ளி னற்தே ரவிய, னொடிய விளா மழை குடித் தோன்றும், பழந்தூங்கு விடாகம்" அகநா. ௨எக: ௧௨ - ௪.

௨௩. அறுன் - மேற்கூறியதலைவன் தன துநிலைமைகுன்றுன். வெள்ளியது நிலை எவன்பரிகோ - சுக்கிரனுடைய நிலைமைக்குச் சிறிதும் வருந்தேன் ; புறநா. ௩அ௪: ௨0 ; ௩அ௫: ௨௪.

(பி - ம்.)— 1 'தன்று பலகெழீஇப காழகெழு'

2 'பரி சொவேள்ளி'

3 'நபபாலையார்'

---

(௩அ௪.) மென்பாலா னுடனணை இ
வஞ்சிக்கோட் [1]டுறங்குநாரை
[2] யறைக்கரும்பின் பூவருந்தும்
[3] வன்பாலாற் கருங்கால்வரகி
௫ ..................................
ணங்கட் குறுமுயல் வெருவ வயல
கருங்கோட் டிருப்பைப் பூவுறைக் குந்து
விழவின் [4]றுயினு முழவர் மண்டை
யிருங்கெடிற்று மிசையொடு பூங்கள் வைகுந்து

---

௧. மென்பால் - மருதம். ௨. வஞ்சிக்கோடு - வஞ்சிமரத்தின்கிளை.

௪. வன்பால் - முல்லை.

எ. இருப்பைப்பூ உறைக்குந்து - இருப்பைப்பூ உதிரும்; " முள்ளரை யிலவத் தொள்ளிணர் வான்பூ,...இருநிலத் துறைகரும் " ஐங்குறு. ௩௨௦.

அ. மண்டை - ஒருவகை உண்கலம்.

௯. கெடிற்றுமிசை - கெடிற்றுமீனாகியஉணவு; " அரிப்பறை வினைஞ ரல்குமிசைக் கூட்டும் " (ஐங்குறு. அக); மிசை, மிசைவெனவும் வழங்கும்; "குறவர்க் கல்குமிசை வாகும்" புறநா. ௨௩௬: ௨.

(பி - ம்.)—1 'உறவன்குளாரை' 2 'வாடைக்கரும்பின', 'அடைக்கரும்பின' 3 'வனபாலாற்குக் கருங்' 4 'ஆயுனுழவா'

# ௩௯௨. புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

௩௦ ..................துணையும் பெரும
செல்வென்றும் பொன்னென்றும்
1 கனற்றக்கொண்ட நறவென்று
............மினபின்று வலைவலவும்
2 யான்றண்டவர் தான்றண்டா
௩௫ விளம்பெருத்த கொழுஞ்சோற்றிடை
மண்ணுணப் புகழ்வேட்டு
நீர்நாண நெய்வழங்கிப்
3 புரந்தோ னெந்தை யாமலந்தொலே......

யன்னோனே யுடையே மென்ப......வறட்
கியாண்டு நிற்க வெள்ளி மாணட
வுண்ட நன்கலம் பெய்து நுடக்கவுந்
தின்ற [4]நண்ப லூன்றோண்டவும்
வந்த வைக லல்லது
சென்ற வெல்லைச் செலவறி யேனே.

திணையும் துறையும் அவை.

கரும்பனூர்கிழானைப் புறத்திணை நன்னாகனார்.

(௩௮௪)

---

௧௨. கனற்ற - வெதுப்ப.

௧௪. யான்தண்டவும் - யான் நீங்கவும்; "தண்டாக் களிப்பி னாடும் கூத்து" மணி. ௬ : ௧௨௬.

௧௭. "நீர்நாண நெய்வழங்கியும்" புறநா. ௧௬௬ : ௨௧.

௧௯. என்ப, அசை. வறட்கு - வற்கடக்காலத்தைத் தரும்பொருட்டு.

௨௦. வெள்ளி யாண்டு நிற்க - மழைக்கோளாகிய சுக்கிரன் எங்கேநின்றாலென்? புறநா. ௩௮௫ : ௨௪; ௩௮௬ : ௨௦ - ௨௪.

௨௨. நண்பல் - பல்லின்நடு.

(பி - ம்.)— 1 'கன்னற்கொண்ட' 2 'யானறண்டவும தானறண்டா' 3 'புகதெனெர்தை' 4 'நன்பலூண்டோண்டவும்'

(௩அ௫.) வெள்ளி தோன்றப் புள்ளுக்குர லியம்பப்
புலரி விடியற் பகடுபல வாழ்த்தித்
தன்கடைத் தோன்றினு மிலனே பிறன்கடை

---

க. புள் - கோழிச்சேவல்; பறவைப்பொதுவுமாம்; "வெள்ளியு மிருவிசும் பேர்தரும் புள்ளு, முயர்சினைக் குடம்பைக் குரற்றோற் றினவே" புறநா. ௩௯எ: க-உ.

## புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

௫௧௩.

யகன்கட் டடாரிப் பாடுகேட் டருளி
௫ வறனியா னீங்கல் வேண்டி யென்னரை
[1] நீனிறச் சிதாஅர்களைந்து
[2] வெளிய துடீஇயென் பசிகளைந் தோனே
[3] காவிரி யணையுந் தாழ்நீர்ப் படப்பை
நெல்விளை கழனி [4] யம்பர் கிழவோ
௧0 னல்லரு வந்தை வாழியர் புல்லிய
வேங்கட விறல்வரைப் பட்ட
வோங்கல் வானத் துறையினும் பலவே.

திணை - அது ; துறை - வாழ்த்தியல்.

[5] அம்பர்கிழான் அருவந்தையைக் கல்லாடனர்.

(௩அ௫)

---

ச. பாடு ஓசை. ௫. வறன் - வறுமை.

சு. நீலநிறமுள்ள கந்தையைநீக்கி. எ. வெளியது - வெள்ளாடையை.

அ. காவிரியென்றது இங்கே அரிசிலாற்றை. படப்பை - தோட்டம்.

கூ - கO. அம்பர் - சோழநாட்டிலுள்ளதோர் ஊர். அருவந்தை - ஓர் உபகாரி; "கற்ற நாவினன் கேட்ட செவியினன், முற்ற வுணர்ந்த மூதறிவாளன்,
நாகரிக நாட்டத் தாரிய னருவந்தை", "நாடே பிறர்நாட்டிற் குவமை யாறே, காலமறிந் துதவுங் காவிரி தானே, யாடவர் திலக னம்பர் மன்ன, னிடிசைத் தலைவ னருவந்தை", "வருநற் கங்கை வடதிசைப் பெருமையுந், தென்றிசைச் சிறுமையு நீக்கிய குறுமுனி, குண்டிகைப் பழம்புனற் காவிரிப் பெரும்பதி, யம்பர்க் கதிபதி" (திவாகரம்) என்பவற்றிற் காவிரியும் அம்பரும் அருவந்தையும் பாராட்டப்பெற்றிருத்தல் காண்க.

(பி - ம்.)—1 'நீலநினைக குறைந்தசிதாஅர்', 'நீலநினைசிதாஅர்' 2'வெளிதுடீஇக்களைந்தோனேபசி' 3 'காவிரியகளையுந்', 'காவிரிகளையுந' 4'அம்பல்' 5'அம்பல கிழான வெநதையை'

---

(ரு அசு.) நெடுநீர 1 நிறைகயத்துப்
படுமாரித் துளிபோல
நெய்துள்ளிய வறைமுகக்கவுஞ்
சூடு கிழித்து வாடூன் மிசையவு

---

க. கயம் - பள்ளமான நீர்நிலை.

ரு. வறை - வறையல் ; ஒருவகை உணவு. முகக்க - முகந்துகொள்ள.

க-ந. சுட்டநெய்யில்வேகும் வறையின்முழக்கதிற்குக் கயத்தில்வீழும் மாரித்துளியின் முழக்கம் உவமம்.

ச. சூடு - சுடப்பட்ட இறைச்சி.

(பி - ம்.)—1 'நிறையககயத்துப'





மூன்கொண்ட வெண்மண்டை
யான்பயத்தான் முற்றழிப்பவும்
வெய்துண்ட வியர்ப்பல்லது
செய்தொழிலான் வியர்ப்பறியாமை
யீத்தோ னெந்தை யிசைதனதாக
வயலே, [1]நெல்லின் வேலி நீடிய கரும்பின்
பாத்திப் பன்மலர்ப் [2]பூத்த தும்பின
புறவே, புல்லருந்து பல்லாயத்தான்
வில்லிருந்த வெங்குறும்பின்று
கடலே, காறந்த கலனெண்ணுவோர்
கானற் புன்னைச் சினை [3]நிலைக் குந்து
கழியே, சிறுவெள் ளுப்பின் [4]கொள்ளை சாற்றிப்
[5] பெருங்கனன்றட் டுமனொலிக்குந்து
அன்னநன் னாட்டுப் பொருநம் யாமே
பொராஅப் பொருநரேம்
[6] குணதிசை நின்று குடமுதற் செலினுங்

குடதிசை நின்று குணமுதற் செலினும்
வடதிசை நின்று தென்வயிற் செலினுந்
தென்றிசை நின்று குறுகாது நீடினும்

---

ரு. புறநா. ௩௮௪ : அ - ௯. ௬. ஆன்பயம் - பசுப்பால்.

எ. உண்டமையாலுண்டான வேர்வையல்லாமல். அ. அறியாதபடி.

௧௧. ததும்பின - நிறைந்தன.

௧௦ - ௧௧. கரும்பின்பாத்தி : "கரும்பு நடுபாத்தியிற் கலித்த வாம்பல்" ஐங்குறு. ௬௫.

௧௨. புறவு-முல்லைநிலம். ஆயத்தான் - ஆயத்தொடு கூடி. ௧௩. குறும்பு-சிற்றரண்கள்.

௧௪. கால் தந்த - காற்றாற்கொண்டுவரப்பட்ட.

௧௫. சினை - கிளை. நிலைக்குந்து - நிலைக்கும்.

௧௭. உமண் - உப்புவிற்குஞ்சாதி.

௧௬ - எ. "சில்பதவுணவின் கொள்ளை சாற்றிப், பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி" பெரும்பாண். ௬௪ - ரு.

௧௯. பொரா - ஒப்பில்லாத. ௨௦. செலினும் - சுக்கிரன்சென்றாலும்.

(பி-ம்.)—1 'நெலலி வேலி னீடிய' 2 'பூத்ததுமபினாலுறவேபுலலருந்து' 3 'நிலகருந்து' 4 'கொளளைச்சாறறி' 5 பெருங்கனாட்டு' 6 'குடதிசை... செலினும் வடதிசை'

யாண்டு [1] நிற்க வெள்ளியாம்
வேண்டிய துணர்ந்தோன் றாள்வா ழியவே.

திணையும் துறையும் அவை.

சோழன்குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனைக் கோவூர்கிழார். ()

---

௨௪. வெள்ளி - சுக்கிரன். ௨௫. வேண்டியது - யாம் வேண்டியதை.

(பி - ம்.)— [1] 'நிற்கவெள்ளியாம்'

---

(௩௮௭.) வள்ளுகிர வயவாளை
[1] வெள்ளகடு கண்டன்ன
வீங்குவிசிப் புதுப்போர்வைத்
[2] தெண்கண் மாக்கிணை யியக்கி யென்று
மாறுகொண்டோர் மதிலிடறி
நீறாடிய நறுங்கவுள
பூம்பொறிப் பணையெருத்தின
வேறுவேறு [3]பரந்தியங்கி
[4] வேந்துடைமிளை யயல்பரக்கு
மேந்துகோட் டிரும்பிணர்த்தடக்கைத்

திருந்துதொழிற் பலபகடு
பகைப்புல மன்னர் பணிதிறை தந்துநின்
[5] னகைப்புல வாணர் நல்குர வகற்றி
மிகப்பொலியர்தன் சேவடியத்தையென்
றியானிசைப்பி னனிநன்றெனப்
பலபிற வாழ்த்த விருந்தோ [6]ரென்கோ......

---

க. வள் - கூர்மை; "வள்ளணி வளைநாஞ்சிலவை" பரி. கரு: ருஎ.

உ. அகடு - வயிறு.

க - ச. கிணைப்பறை ஆமையின் அகடுபோல்வது; " ஆமை, கம்பு ளியவ ஹக விசிபிணித், தெண்கட் கிணையிற் பிறழும்" அகநா. நஙுசு.

எ. எருத்து - பிடரி. கூ. மிளை - காவற்காடு

கக. பகடு - யானை. கஉ. நகைப்புலவாணர் - புலவர்.

கஉ - ந. பகைவர் அளித்ததிறையைத் தம்மைச்சார்ந்த இரவலர்க்குக் கொடுத்தல் அரசர்க்கியல்பு.

கச. தன் சேவடி மிகப்பொலிக. கரு. என்கோ - என்பேனோ.

(பி - ம்.)—1 'வெளகொணடனை' 2 'தென்கண்' 3 'பாகதியயங்கி' 4 'வெகுதலடப்பின' 5 'ஈனசடடல காழ்கர்...மிபபொலியாத செவடிபொலியா தைதயென்றனியானிசப பினனினனினனறனிற டலபிறன்' 6 'எலகொ'



1 மருவவினக ரகன்.........
திருந்துகழற் சேவடி குறுகல் வேண்டி.

[2] வென்றிரங்கும் விறன்முரசினோ
[3] னென்சிறுமைபி னிழித்துநோக்கான்
றன்பெருமையின் றகவுநோக்கிக்
[4] குன்றுறழ்ந்த களிறென்கோ
கொய்யுளைய மாவென்கோ
மன்றுநிறையு நிரையென்கோ
[5] மனைக்களமரொடு களமென்கோ
ஆங்கவை, கனவென மருள வல்லே நனவி
[6] னல்கி யோனே நசைசா ரோன்ற
ஓாழி வாழி பூழியர் பெருமகன்
பிணர்மருப் பியானைச் செருமிகு நோன்றாட்
செல்வக் கடுங்கோ வாழி யாத
[7] னென்னைத் தெவ்வ ருயர்குடை [8] பணித்திவண்
விடுவர் மாதோ நெடிதே நி......

---

கள. மருவுதற்கு இனிய நகரம்.

ககூ. வென்று -போர்க்களத்தில் வஞ்சியாது பகைவர்க்கு முன்னேநின்று.

உ0. என்னை இழித்து நோக்கானாகி.

உக. தன்னுடைய மேம்பாட்டையறிந்து. உ௩. மா - குதிரை.

உஉ - ௩. ஓகாரம் எண்ணுப்பொருளில் வந்ததற்கும் அதன்பின் வல்லினம் இயல்பாயதற்கும் இவ்வடிகள் மேற்கோள்; தொல். உயிர்மயங்கு. ௬.

அஅ - இளம்; ந.

உச. நிரை - பசுக்கூட்டம்.

உசு. "கனவென மருண்டவென் னெஞ்சே மாப்ப; பொருந. ௬அ.

௨௦ - ௨௧. "சிரப்பான் மணிமவுலிச் சேரமான் றன்னைச் சுரப்பாடி யான் கேட்கப் பொன்னுடொன் றீந்தான், இரப்பவ ரென்பெறினுங் கொள்வர் கொடுப்பவர், தாமறிவார் தங்கொடையின் சீர்" (ஔவைபாடல்) என்னும் வெண்பா வில் இவ்வடிகளின் பொருள் அமைந்திருத்தல் அறியற்பாலது.

உசு - ௭. "கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப, நனவி னல்கியோ னசைசா றோன்றல்" புறநா. ௩௭௭ : ௧௯ - ௨௦.

௩௦. இப்பாட்டுடைத்தலைவன் பெயர் இவ்வடியில் அமைந்துள்ளது.

௩௧. என்று - என்று கூறுத. பணித்து - தாழ்த்தி.

(பி - ம்.)—1 'மிருவ' 2 'வெனநிரககு முரசிலுனெனச சிலமபினிழித்து' 3 'எனசசிறுமை' 4 'குன நகமுகளிறு' 5 'மகனேசகளமொரொடுகலமென' 6 'கலகி போனெகதை ககைசானறோன் றல்' 7 'ஒனறுதெதவர்' 8 'பணிதநிவணிவிடு வர்'

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

௫௧௭

புல்லிலை வஞ்சிப் புறமதி லலைக்குங்
கல்லென் பொருநை 1 மணலினு மாங்கட்
௩௫ பல்லூர் சுற்றிய கழனி
யெல்லாம் விளையு நெல்லினும் பலவே.

திணையும் துறையும் அவை.

சேரமான்சிக்கற்பள்ளித்துஞ்சிய

செல்வக்கடுங்கோவாழியாதனைக் நண்டுகட்பாலியாதன்.
(௩௮௭)

௩௩. வஞ்சியென்னும் மரவிசேடத்திற்கு உரிய 'புல்லிலை' என்னும்அடை அதன் பெயரையுடையதாகிய நகருக்கும் ஆயிற்று.

௩௩ - ௪. "ஒளிதிக முத்தி யுருகெழு நாகம்" (பரி. ௧௨: ௪ - பரிமேல்.) என்பதற்கு இவ்வடிகள் மேற்கோள். பொருநை - ஓராறு. இஃது ஆன் பொருநை யென்றும் வழங்கும்.

௩௪ - ௬. "மண்ணுள் வேந்தே நின்வா ளுட்க, டண்ணான் பொருநை மணலினுஞ் சிறக்க" சிலப்: ௨௮: ௧௨௫ - ௬.

(பி - ம்.)—1 'மணலினுமாக்கட்'

---

(௩௮௮.) வெள்ளி தென்புலத் துறைய விளைவயற்
பள்ளம் வாடிய பயனில் காலை
[1] யிரும்பறைக் கிணைமகன் சென்றவன் பெரும்பெயர்
................................ பொருந்தித்
தன்னிலை [2]யறியுந னாக வந்நிலை

௧. வெள்ளிக்கோள் தென்றிசையிலெழுதல தீயநிமித்தம். இங்கிகழ்ச்சி

மழைபெய்யாமைக்கும் வற்கடம் உண்டாவதற்கும் காரணமென்பர்; "மைம் மீன் புகையினுந் தூமந் தோன்றினுந், தென்றிசை மருங்கின் வெள்ளி யோடினும்" (புறநா. ககஎ: க - உ), "வசையில்புகழ வயங்குவெண்மீன், றிசை திரிந்து தெற்கேகினுந், தற்பாடிய தளியுணவிற், புட்டேம்பப் புயன்மாறி,வான் பொய்ப்பினுந் தான்பொய்யா, மலைத்தலைய கடற்காவிரி" (பட்டின. க - சு), "வறிது வடக்கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி, பயங்கெழு பொழுதோ டாநிய நிற்ப", "இலம்படு புலவ ரேற்றகை நிறையப், பயங்கெழு வெள்ளி யாநிய நிற்ப" (பதிற்.உச, சுக), "கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும், விரிகதிர்வெள்ளி தென்புலம் படரினும்,......காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த் தலை" (சிலப். க0: க0உ - அ) என்பனவற்றால் அறியலாகும்.

௩. இணைமகன் - இணைப்பறை வாசிப்பவன்; இணையன். பெரும்பெயர் - பெரும்புகழ்.

௫. தன்னிலை - தன்னுடைய மேம்பட்டநிலை.

(பி- ம்.)—1 'இரும்பிறை இணைமகன்' 2 'அறிவினனுக'

## ௩௪௯ புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

மிடுக்க ணிரியல் [1]போக வுடைய
கொடுத்தோ னெந்தை கொடைமேந் தோன்ற
............................ மமருப்பாக
வெல்லும் வாய்மொழிப் புல்லுடைவி......
க0 [2]பெயர்க்கும் பண்ணற் கெடஉரோமகவிரோன

[3] வினைப்பக டேற்ற மேழி திணைத்தொடா
நாடொறும் [4]பாடே ஞமி ஞறை
[5] மணிகிளர் முன்றிற் றென்னவன் மருகன்
பிணிமுர சிரங்கும் பீடுகெழு தானை
கடு யண்ணல் [6]யானை வழுதி
கண்மா றிலியரென் பெருங்கிளைப் புரவே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

சிறுகுடிகிழான்பண்ணனை மதுரை அளக்கர்ஞாழார்மகனர் மள்ள னர்.

(நஅஅ)

---

அ. இரியல்போக - கெட. உடைய - தன்பால் உள்ளனவற்றை.

க0. பண்ணன் - இப்பாட்டுடைத்தலைவன்.

கக. வினைப்பகடு - உழவுத்தொழிற்குரிய எருது ; கடா. ஏற்றம் - நீர் இறைத்தற்குரியது; இப்பெயர் ஏத்தமெனவும் வழங்கும்.

கஉ. மணி - ஆராய்ச்சிமணி; "வாயிற் கடைமணி நடுநா நடுங்க, வாவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத், தான்ற, னரும்பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன்" (சிலப். உ0 : ருந - ரு) மருகன் - வழித்தோன்றல்.

கச. பிணித்தல் - கட்டுதல்.

கரு. கண்மாறிலியர் - கண்ணோட்டம் ஒழிவாளுக. புரவு - காத்தல்.

(பி - ம்.)—1 'போத' 2 'பெயாகலும டணை ந கெடாடரோ மககிரென' 3 'வினைப்பகடெ த தமேனிதினை தொடர்', 'வினைப்பகடெ த தமெந திணை நதொ டா' 4 'பாடெ ஞமிஞெஞைகாண' 5 'மணிகிளாமுகதிநதெனனவன' 6 'யானை வழுகண மா றிலியா'

(௩அகூ.) நீர்நுங்கின் [1] கண்வலிப்பக்
கானவேம்பின் காய்திரங்கக்
கயங்களியுங் கோடையாயினு

---

௧. நீர்நுங்கு - நீரையுடைய பனைநுங்கு. வலிப்ப - நீரின்றிவற்ற.

௨. திரங்க - உலர ; "திரங்குமரனாரிற் பொலியச் சூடி" மலைபடு: ௪௩௧.

௩. கயம் - ஆழமான நீர்நிலை. களியும் - நீர்வற்றிக்களிமயமாதற்குரிய.

(பி - ம்.)—1 'கவைவிரிபக'



மேலா வெண்பொன் [1] போருறு காலை
யெம்மு முள்ளுமோ பின்னையம் [2]பொருந
னென்றீத் தனனே யிசைசா னெடுந்தகை
யின்றுசென் றெய்தும் வழியனு மல்லன்
செலினே காணு வழியனு மல்லன்
புன்றலை மடப்பிடி யினைபக் கன்றுதந்து
குன்றக நல்லூர் மன்றத்துப் பிணிக்குந்

கல்விழி யருவி வேங்கடங் கிழவோன்
செல்வுழி யெழாஅ நல்லேர் முதிய
[3] ளுதனுங்கன் போல நீயும்
[4] பசித்த வொக்கற் பழங்கண் வீட
கரு வீறுசா னன்கல நல்குமதி [5]பெரும
வைதக லல்குன் மகளிர்
நெய்தல்கே ளன்மார் நெடுங்கடை யானே.

திணையும் துறையும் அவை.

ஆதனுங்கனைக் கள்ளிலாத்திரையனார்.

(௩அ௯)

---

௪. வெண்பொன் - வெள்ளிக்கோள். போர் - மற்றைக் கோள்களோடு அதுசெய்யும்யுத்தம். இது கிரகயுத்தமென்று சொல்லப்படும்; "தோளோடு தோடேய்த் தலிற்றென்னிலஞ் தாங்க லாற்றுத், தாளோடு தாடேய்த் தலித்தந்த தழற்பிறங்கல, வாளோடு மின்னே டுவபோனெடு வானிளேடும், கோளோடு கோளுற் றனவொத்தடர்ந் தார்கொதித்தார்" (கம்ப. வாலிவதை. ௩அ) என்பது இங்கே அறியற்பாலது.

௫. எம்மும் உள்ளுமோ - எம்மையும் நினைப்பானே.

௭. காட்சிக்கு எளியனுமல்லன்.

௮. காணுதற்கு அரியனுமல்லன்.

௯. புன்றலை - சிவந்ததலை; "புன்றலை மகாரோடு" (மலைபடு. உ௫௩.) இனைய - வருத்த.

௧௩. ஆதனுங்கன் - இப்பாட்டுடைத்தலைவன்.

௧௪. ஒக்கல் - சுற்றம். பழங்கண் - துன்பம்.

௧௭. நெய்தல் - நெய்தற்பறை; சாப்பறை.

(பி - ம்.)—1 'போகுது....பொருநவென் று' 2 'பொருநவென் று' 3 'ஆறு றுநகன்', 'ஆகுறுநக்கன' 4 'பசிதது வொஙகநபழங' 5 'பெருமவைததல'

---



(௩௯௦.) அறவை நெஞ்சத் தாயர் வளரு
மறவை நெஞ்சத் [1]தாயி வாள
ரரும்பலர் [2]செருந்தி நெடுங்கான் மலர்கமழ்
..............................மன்னமுற்றத்
[3] தார்வலர் குறுகி னல்லது காவலர்
கனவினுங் குறுகாக் கடியுடை வியனகர்
[4] மலைக்கணத் தன்ன மாடஞ் சிலம்பவென்
னரிக்குரற் றடாரி யிரிய வொற்றிப்
பாடி நின்ற [5]பன்னா ளன்றியுஞ்
சென்ற ஞான்றைச் சென்றுபடு கிரவின்
வந்ததற் கொண்டு நெடுங்கடை நின்ற
புன்றலைப் பொருந னளியன் றானெனத்
தன்னுழைக் குறுகல் வேண்டி யென்னரை
முதுநீர்ப் பாசி யன்ன [6]வுடைகளைந்து
திருமல ரன்ன புதுமடிக் கொளீஇ
மகிழ்தரன் மரபின் மட்டே யன்றியு

7 மமிழ்தன மரபி னூன்றுவை யடிசில்
வெள்ளி வெண்கலத் தூட்ட வன்றி

---

க. அறவைநெஞ்சம் - அறத்தையுடைய நெஞ்சம்; "அறவை யாய ரகன் றெரு வடைந்தன" (சிலப். உஉ: ககசு); 'அறவை நெஞ்சத் தாயர்' என்பதை,

'ஆகாத் தோம்பி யாப்பய னளிக்குங் கோவலர் வாழக்கையோர் கொடும்பா டில்லை" (சிலப். கரு : க௨௦ - உக) என்பது விளக்குகின்றது.

ச - உ. புறநா. சச: கக - ௩. ௩. செருந்தி - ஒருபூமரம்.

ரு. ஆர்வலர் - பரிசிலர். காவலர் - அரசர். சு. கடி - காவல்.

ரு - சு. 'புலிதுஞ்சு வியன்புலத் தற்றே, வலிதுஞ்சு தடக்கை யவனுடை நாடே' புறநா. ருச : க௩ - ச.

எ. சிலம்ப - முழங்க; முழக்கம் இங்கே எதிரொலி.

க௦. சென்றநான்று - முதல்நாள். கஉ. அளியன் - அளிக்கத்தக்கான்.

கச. "ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசி, வேர்புரை சிதாஅர் நீக்கி" (புறநா. ௩கஉ: க௩ - ச); "பாசிவேரின் மாசொடு குறைந்த, துன்னற் சிதாஅர் நீக்கி" பொருந. கரு௩ - ச.

கரு. மலரென்றது, பகன்றைப்பூவை; புறநா. ௩கரு: கஎ-அ.

கஎ. துவை - துவையல்.

(பி - ம்.)—1 'ஆயிவிளா' 2 'செநதிநெடுகாாலாதமமு' 3 'ஆவலா' 4 'மழைககள த' 5 'பனஞுளறையும்' 6 'உடைகணாநதிருமவானனன' 7 'அமிர தானமரபின'

முன்னூர்ப் பொதியிற் சேர்ந்த மென்னடை
யிரும்பே ரொக்கல் [1] பெரும்புலம் பகற்ற
[2] வகடுநனை வேங்கை வீகண் டன்ன
[3] பகடுதரு செந்நெல் போரொடு நல்கிக்
கொண்டி பெறுகென் றோனே யுண்டுறை
மலையல ரணியுந் தலைநீர் நாடன்
[4] கண்டாற் கொண்டுமனை திருந்தடி வாழ்த்தி

..............................
வானறி யலவென் பாடுபசி போக்க
லண்ணல் யானை வேந்த
ருண்மையோ வறியல் காண்பறி யலரே.

திணையும் துறையும் அவை.

அதியமானெடுமானஞ்சியை ஔவையார். (௩௯௦)

௧௯. முன்னூர் - ஊர்முன். பொதியில் - அம்பலம்.

௨௦. "இரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினும்" புறநா. ௩௯௪: ௧௯.

௨௧. அகடுநனை - உள்ளிடம் நனைந்த. வேங்கைவீ - வேங்கைமரத்துப்பூ.

௨௨. பகடுதரு செந்நெல் - எருது முதலியவைகள் உழுதுண்டாக்கிய செவ்வியநெல்; "பகடுதரு பெருவளம் வாழ்த்தி" (புறநா. ௩௯௩: ௭); "பகடு

கடந்தகூழ் பல்லாரோ டுண்க" நாலடி. ௨.

௨௩. கொண்டி - பொருளின்மிகுதி; புறநா. ௩௮௨: ௧.

௨௭. வான் - மேகம். ௨௯. அறியல் - அறியேன்.

(பி - ம்.)—1 'பொருமபுகறறததடுயகண்வேங்கை' 2 'தகடுகளைவேங்கை' 3 'படுதருசெஙநெற்' 4 'கணடாாகொணடுமெவன திருநதடி'

---

(௩௯௧.) தண்டுளி பலபொழிந் தெழிலி யிசைக்கும்
விண்டு வனைய 1 விண்டோய் பிறங்கல்
முகடுற வுயர்ந்த 2 நெல்லின் மகிழ்வரப்
பகடுதரு பெருவளம் வாழ்த்திப் பெற்ற
௫ திருந்தா மூரி பரந்துபடக் கெண்டி
யரிய லார்கைய ருண்டினி துவக்கும்

௨. விண்டு - மலை; பிறங்கல் - திரள்; இங்கே தானியப்போர்.

௩. முகடு - உச்சி.

௪. புறநா. ௩௯௦: ௨௨ - ஆம் அடியின் குறிப்பைப் பார்க்க.

௫. கெண்டி - கிண்டி. ௬. அரியல் - கள்.

(பி - ம்.)—1 'விணடெறபயபிறஙகண' 2 'நெலலினகீழவர்'

வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தெனு
ஈங்குவர் திருத்தவென் னிரும்பே ரொக்க
நீர்கை விடுக்கும் [1]பண்பில முதுகுடி
நனை........................வினவலின்
முன்னும் வந்தோன் மருங்கில னின்னு
மளிய னாகலிற் பொருந னிவனென
நின்னுணர்ந் தறியுந ரென்னுணர்ந்து கூறக்
காண்கு வந்திசிற் பெரும.........
............பெருங்கழி [2]நுழைமீ னருந்துந்
துதைந்த தூவியம் புதாஅஞ் சேக்குந்
[3] ததைந்த புனனின் செழுநகர்வரைப்பி
னெஞ்சமர் [4]காத னின்வெய் யோளொ
டின்றுயி...............................ஞ்சா
துளிபத னறிந்து பொழிய
வேலி யாயிரம் விளைகநின் வயலே.

திணை - அது; துறை - கடைநிலை.
பொறையாற்றுகிழானைக் [5] கல்லாடனார்.

(௩௯௧)

---

ஏ. பசித்தெனு - பசித்ததாக.

அ. இரும்பேரொக்கல் - வறுமையாற்கரிந்த பெரியசுற்றங்கள்.

கூ. பண்பில - பண்பில்லாதன.

கக. மருங்கு - சுற்றம். கஉ. ஆகலின் இவன் அளியன்.

கஉ - கூ. முருகு. உஅஉ - ரு.
கரு. நுழைமீன் - ஒருவகை மீன்; நுழைந்து செல்லுகின்ற மீனுமாம்.

கசு. புதா - ஒருவகைகாரை ; இப்பெயர் போதாவெனவும் வழங்கும் ;

"உள்ளு ரூரலும் புள்ளும் புதாவும்" சிலப். க0: கஎ.

கஅ. நின்வெய் யோளொடு - நின்னால் விரும்பப்பட்ட மனைவியொடு.

உ0. பதனறிந்து - காலமறிந்து.

உக. ஆயிரம்விளைக - ஆயிரக்கலம் விளைக; " வேலி, யாயிரம் விளையுட் டாகக், காவிரி புரக்கு நாடு" பொருந. உசசு - அ.

(பி - ம்.)—1 'பண்பின' 2 'துழைபீன' 3 'தநதைதநத புனயானின செழுககாவலாபடயின்' 4 'காதனிவெயயொடு' 5 'காலலனூர்'

---

(௩௯உ.) மதிமயர் வெண்குடை [1] யதியர் கோமான்
கொடும்பூ ணெழினி நெடுங்கடை நின்றியான்

க.

---

ஏர்-ஒப்பு; "இலவம் போதே ரெழிற்றகைய சீறடிகள்" சீவக.கறுஅஅ.

உ. கொடும்பூண் - வளைந்தஆபரணம் ; "விளங்குமணிக் கொடும்பூ ணாஅய் நின்னாட்டு" [?] ... யிச்சிக் கோவே" புறநா. உ00: அ.

கொடும்பூண்

(பி - ம்.)—1 'உதியர்'

புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

௫உ௩

பசலை நிலவின் பனிபடு விடியற்
பொருகளிற் றடிவழி யன்ன வென்கை
யொருகண் மாக்கிணை யொற்றுபு கொடாஅ
வுருகெழு மன்ன ராரெயில் [1] கடந்து
நிணம்படு [2] குருதிப் பெரும்பாட் டீரத்
தணங்குடை [3] மரபி னிருங்களந் தோறும்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் [4] பூட்டி
வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்
வைக லுழவ [5] வாழிய பெரிதெனச்
சென்றியா [6] னின்றனெ னாக வன்றே

---

ங. பசலைநிலவு - இளநிலவு. ரு. கொடா - திறைகொடாத.

ச - ரு. "பெருங்களிற் றடியிற் றோன்று மொருகண், ணிரும்பறை யிரவல" புறநா. உசுங: க - உ.

ங -ரு. "இருணிலாக் கழிந்த பகல்செய் வைகறை, யொருகண் மாக் கிணை தெளிர்ப்ப வொற்றி" புறநா. ஙகூச: கூ - எ.

எ. குருதிப்பெரும்பாட்டீரத்து - இரத்தப் பெருக்காலுளதாகிய ஈரத்தையுடைய.

அ. களம் - தானியக்கதிரை அடிக்குங்களமும் யுத்தகளமும்.

கo. வெள்ளைவரகு - கவடி. கொள் - குடைவேல்.

கூ - கo. பகைவருடைய அரண்களையழித்துக் கழுதையேரால் உழுது அந் நிலத்தில் வெள்ளைவரகும் கொள்ளும்வித்துதல அரசர்க்கியல்பு.

கூ - கக. "வெள்வாய்க் கழுதைப் புல்லினம்பூட்டிப், பாழ்செய்

தனே

யவர் நனந்தலை நல்லெயில்" (புறநா. கரு: உ - ௩), "வடதிசை மன்னர் மன்னெயின் முருக்கிக், கவடி வித்திய கழுதையே ருழவன்" (சிலப்.உஎ: உஉரு-கூ), "எழுதெழின் மாடத் திடனெலா றூறிக், கழுதைபோ் கையொளிர்வேல் கோலா-வுழுததற்பின், வெள்வரகு கொள்வித் திடினும் விளியாதாற, கள்விரவு தாரான் கதம்" (பு. வெ. கூ: உகூ), "இடித்துவெளி செய்தூக ரெக்கனுறழைந்தாங், கடுத்தமட வார்வயி றலைத்தன ரிரக்கக், கொடுத்திடு வளங்கள் பல கொள்ளைகொடு மண்ணி,னெடுத்தவரு வெள்வரகு கொள்ளுட னிறைத்து" (காஞ்சிப். நாட்டு. உ௮) என்பவைகள் இவ்வடிகளோடு ஒப்பிடற்பாலன.

கO-கஉ. "இன்னும் துறையென்றதனுனே புறத்தோன் கவடிவித்துதலும் தொகைக்கேட்பாற்பட்டுழி அகத்தோர்க்குச் செல்லாமைகொள்க. அது, 'மதிபோர் வெண்குடை' என்னும் புறப்பாட்டினுள், 'வெள்ளை வரகும் கொள்ளும் வித்தும், வைக லுழவ வாழிய பெரிதெனச், சென்றியா னின்றனெ'னுக என வரும்" தொல். புறத்திணை. ரு கூ - ௩.

(பி - ம்.)—1 'கடந்த' 2'குருதிபெரும்' 3'மாபின' 4'பூட்டி...வெள்ளை' 5 'வாழியபலவென' 6 'நின்றனெனுதக'

/ருஉச புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

பூருன் கேணிப் பகட்டிலைப் பாசி "1
வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை
கடு நுண்ணூற் கலிங்க முடீஇ 1புண்மெனத்
தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்

கோண்மீ னன்ன [2] பொலங்கலத் தளைஇ
[3] யூண்முறை யீத்த லன்றியுங் கோண்முறை
விருந்திறை நல்கி யோனே யந்தரத்
தரும்பெற லமிழ்த மன்ன
கரும்பிவட் டந்தோன் பெரும்பிறங் கடையே.*

திணையும் துறையும் அவை.

அதியமான்மகன் பொகுட்டெழினியை ஔவையார். (ஙகஉ)

---

கங. பகட்டில்ல - பெரியஇல்ல. கச. சிதாஅர் - கந்தைத்துணி.

கங - ச. புறநா. ஙகo: கங; "பாசி வேரின்மாசொடு குறைந்த, துன்னற் சிதாஅர் நீக்கி" பொருந. கருங - ச.

கசு. புறநா. ஙஎசு: கச - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க; இவ்வடி, பொருந. கருஎ - அ - ஆம் அடிகளின் உரையில் மேற்கோளாக வந்துள்ளது.

கஎ. கோண்மீன் - கோட்களாகிய மீன்களை.

கஅ. கோள்முறை-கொள்ளும்முறை. உக. பிறங்கடை- வழித்தோன்றல்; "படிகாத்தவர், பிறங்கடைப்பெரியோய்" கம்ப. தாடகைவதை. கங.

உo - உக. "அரும்பெறன் மரபிற் கரும்பிவட் டந்தும்" என்றூர் லும் ; புறநா. கக: உ.

முன் * மு. இச்செய்யுள், கடைநிலையென்னுந்துறைக்கு மேற்கோளாகக் காட்டப் பட்டுள்ளது; தொல். புறத்திணை. சூ. ஙசு - ந.

(பி - ம்.)—1 'உண்ணென' 2 'பொலங்கலத்தருள...விடுத்தல்' 3 'ஊண முறை', 'ஊழமுறை'

(கூகூக.) பதிமுதற் பழகாப் பழங்கணி வாழ்க்கைக்
குறுநெடுந் துணையொடு கூமை வீதலிற்
குடிமுறை பாடி யொய்யென வருந்தி
யடனசை மறந்தவெங் குழிசி மலர்க்குங்
கடனறி யாளர் பிறநாட் டின்மையின்
[1] வள்ளன் மையினெம் வரைவோர் யாரென

க. பழங்கண் - துன்பம். உ. துணை - மனைவி.
ச. குழிசி-சமைத்தற்குரிய கலம் ; மலர்க்கும் - நிமிரச்செய்யும்.
கூ. எம்வரைவோர் - எம்மை ஏற்றுக்கொள்வோர்.
ச - கூ. குழிசி மலர்க்குங் கடனறியாளர் - அரிசி முதலியன இல்லாமை
(பி - ம்.)—1 'வள்ளைமெனவரை'



வள்ளிய வுள்ளமொ [1] டுலைசை துணையா
...கவக மெல்லா மொருபாற் பட்டென
மலர்தா ரண்ணனி னல்லிசை யுள்ளி
யீர்ங்கை [2] மறந்தவெ னிரும்பே ரொக்கல்
[3] கூர்ந்த வெவ்வம்விடக் கொழுநிணங் கிழிப்பக்
கோடைப் பருத்தி [4] வீடுநிறை பெய்த
மூடைப் பண்ட மிடைநிறைந் தன்ன
வெண்ணிண மூரி யருள நாளுற
[5] வீன்ற வரவி னுவருக் கடுக்குமென்

